# சுதந்திர வேட்கை

தமிழீழ விடுதலைப் போராட்டம்
உள்ளிருந்து ஒரு நோக்கு

அடேல் பாலசிங்கம்

# சுதந்திர வேட்கை

## தமிழீழ விடுதலைப் போராட்டம் உள்ளிருந்து ஒரு நோக்கு

அடேல் பாலசிங்கம்

# நன்றியுரை

இருபது ஆண்டு கால வரலாற்று விரிப்பில் நிகழ்ந்த பல சம்பவங்கள், திருப்பங்கள், திகதிகள் பெயர்கள் போன்றன எனது நினைவின் பசுமையிலிருந்து தேய்வுற்று வருவதால் இந் நூலை நான் தனியாக எழுதியிருக்க முடியாது. இந்த நினைவிழப்புகளை நீங்காத நினைவுகளாக்கி, எனது ஞாபகத்திற்கு புத்துயிருட்டி, இறந்த கால அனுபவங்களை என்னோடு பகிர்ந்து, இந் நூலின் உருவாக்கத்திற்கு எனக்கு உதவியவர், எனது கணவரும் விடுதலைப் புலிகள் அமைப்பின் ஆலோசகருமான அன்ரன் பாலசிங்கம் அவர்களாகும். வரலாற்று நிகழ்வுகளை உண்மை வழுவாது பதிவுசெய்யவேண்டும் என்பதில் அவருக்கு உள்ள அக்கறையானது, இந் நூலின் ஆழத்திற்கும் புலமைக்கும் உரமேற்றியுள்ளது என்பேன். இந் நூலை திருத்தி, தொகுக்க அவர் உழைத்தது மட்டுமன்றி, என்னை ஊக்கப்படுத்தி, நம்பிக்கையூட்டி, எனது உள்ளாற்றலை வெளிப்படுத்தவும் அவர் ஏதுவாக இருந்தார். அடுத்ததாக, இந் நூலைப் படைப்பதற்கு எனக்கு ஊக்கமளித்தவர் எனது தாயாரான திருமதி. பெற்றி வில்பி. எனது வாழ்க்கை விசித்திரமானது என்றும், தனித்துவமானது என்றும் எனது தாயார் கூறிவந்ததோடு, அது ஒரு சுயசரிதமாக எழுதப்பட்டு, மற்றவர்களும் வாசித்து அறியவேண்டும் என வேண்டிவந்தார். இந் நூலை எழுதி எனது தாயாரின் நீண்ட நாள் ஆவலைப் பூர்த்தி செய்துள்ளதில் எனக்கு மகிழ்ச்சி.

பிரபல நாடகாசிரியரும், ஊடகவியலாளருமான திரு. ஏ.சீ.தாசீசியஸ் அவர்கள் எனது ஆங்கில நூலை தமிழாக்கம் செய்து தந்தமைக்காக நான் அவருக்கு நன்றியையும் பாராட்டையும் தெரிவிக்க விரும்புகின்றேன். இந் நூலின் முதலாவதிலிருந்து ஆறு அத்தியாயங்கள் வரை அவர் மொழிபெயர்த்துள்ளார். எத்தனையோ அலுவல்கள், வேலைப் பளுக்கள் மத்தியிலும், பல மணிநேரத்தை செலவு செய்து, மிகவும் அற்புதமான தமிழில், எளிய நடையில் அவர் இம் மொழிபெயர்ப்புப் பணியைப் புரிந்தார். அதற்காக அவருக்கு நான் என்றும் நன்றி உடையவளாக இருப்பேன். இந் நூலின் முகவுரையையும், ஏழாவது, எட்டாவது அத்தியாயங்களையும் தமிழில் மொழிபெயர்த்து, முழு நூலையும் திருத்தி, செப்பனிட்டுத் தந்தமைக்காக மீண்டும் எனது அன்புக் கணவர் அன்ரன் பாலசிங்கம் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவிக்க விரும்புகின்றேன்.

இந் நூலை கணிணியில் அச்சடித்து, பக்கங்களை கணிணியில் வடிவமைத்து தந்தவர் ரஞ்சித் என்ற இளைஞர். தனது வேலைப் பளுக்களோடு, பல மணிநேரத்தை ஒதுக்கி, மிகவும் பொறுமையுடன் நேர்த்தியாக அவர் ஆற்றிய பணிக்கு எனது நன்றியும் பாராட்டுக்களும். நீண்ட நேரம் ஒதுக்கி, பொறுமையோடு, நூலின் பக்கங்களை வாசித்து, எழுத்துப் பிழைகளை திருத்தித் தந்தமைக்காக திரு. சிவகுமார் (தாஸ்) அவர்களுக்கும் நன்றி தெரிவிக்க விரும்புகின்றேன். அடுத்து, இந் நூலின் உருவாக்கத்திற்காக உழைத்த வாசன் அச்சக உரிமையாளருக்கும், ஊழியர்களுக்கும் எனது நன்றியும் பாராட்டுகளும்.

## பதிப்பு விபரம்

தலைப்பு : சுதந்திர வேட்கை
பதிப்பு : ஓகஸ்ட் 2002
பதிப்புரிமை : அடேல் பாலசிங்கம்
வெளியீடு : பெயர்மக்ஸ் பதிப்பகம்
அச்சுப்பதிப்பு : வாசன் அச்சகம்
கணணி வடிவமைப்பு : ரஞ்சித்

Title : WILL TO FREEDOM
Author : Adele Balasingham
Publishers : Fairmax Publishing Ltd
P.O.BOX 2454
Mitcham
Surrey CR4 1WB
England

Printed by : THE PRINT
45C Crusoe Road
Mitcham
Surrey CR4 3LJ
U.K

**ISBN NR : 1 903679-02-8**



தமிழீழ மக்களுக்கு
இந் நூல் அர்ப்பணிப்பு

# உள்ளடக்கம்


**வரைபடம்** V

**முகவுரை** 1

**அத்தியாயம் I :புதிய தரிசனங்கள்** 12

- பாலசிங்கத்தைச் சந்தித்தேன் 23
- அவுஸ்திரேலியாவில் எனது மூல வேர்கள் 31
- போராட்ட அரசியல் 42

**அத்தியாயம் II :புலிகளின் குகைக்குள்** 47

- திரு. பிரபாகரனை சந்தித்தோம் 52
- இந்தியா பற்றிய எனது முதல் மனப்பதிவுகள் 59
- அமைப்புக்குள் பிரச்சினைகள் 65
- புதிய அனுபவங்கள் 68
- இறுதி முடிவுகள் 80
- காத்திருந்த காலம் 84
- திருப்புமுனை: கறுப்பு யூலை 88

**அத்தியாயம் III :இந்தியாவில் சந்தித்த நெருக்கடிகள்** 93

- ஆரம்ப காலம்: போராட்டத்தின் பரிமாணங்கள் 99
- சோதனை மிகுந்த காலம் 113
- வாழ்க்கை முறையில் நிகழ்ந்த மாற்றங்கள் 117
- புதுடில்லியில் புதிய நிர்வாகம் 121

| | |
|---|---|
| தமிழ் நாட்டு அகதிகள் | 124 |
| ஒற்றுமையும் பிரிவும் | 128 |
| பாலா நாடு கடத்தப்பட்டார் | 134 |
| படுகொலை முயற்சி | 141 |
| இந்தியாவில் வீட்டு ஊழியம் | 147 |
| உறவில் நிகழ்ந்த பாதிப்புகள் | 152 |
| **அத்தியாயம் IV : இந்திய–புலிகள் யுத்தம்** | **161** |
| சிங்கள இராணுவப் படையெடுப்பு | 165 |
| இந்திய–இலங்கை உடன்பாடு | 169 |
| திலீபனின் சாகும்வரை உண்ணாவிரதம் | 174 |
| மூத்த தளபதிகளுக்கு ஏற்பட்ட அவலம் | 180 |
| பவான் இராணுவ நடவடிக்கை | 192 |
| கொடூரமான படுகொலைகள் | 197 |
| **அத்தியாயம் V : இந்திய இராணுவத்தின் வேட்டை** | **204** |
| கரவெட்டிக்குள் நகர்ந்தோம் | 207 |
| வீடு மாறும் படலம் | 212 |
| எமது வீடு மீது தாக்குதல் | 219 |
| யாழ்ப்பாண சொத்துடமை முறை | 225 |
| ஒரு பண்பான பெண் | 230 |
| கள் இறக்கும் தொழிலாளர் | 234 |
| நெருக்கடி நிறைந்த நாட்கள் | 239 |
| நெருக்கமான சுற்றிவளைப்புகள் | 243 |
| மரணத்தை எதிர்கொண்டோம் | 247 |





| | |
|---|---|
| சுற்றிவளைப்பிலிருந்து தப்பியோட்டம் | 252 |
| இறுதியான சவால் | 257 |
| இந்தியாவில் தலைமறைவு வாழ்க்கை | 266 |
| **அத்தியாயம் VI : பிரேமதாசா – விடுதலைப் புலிகள் பேச்சு** | **270** |
| வடக்கிலும் தெற்கிலும் கொந்தளிப்பு | 274 |
| பேச்சுவார்த்தைக்கு அழைப்பு | 279 |
| பிரேமதாசாவுடன் சந்திப்பு | 283 |
| ஆக்கிரமிப்பு இராணுவம் | 288 |
| திரு. ஹமீதின் பங்கு | 293 |
| பேச்சுக்களுக்கு இந்தியா கண்டனம் | 298 |
| காட்டில் பிரபாகரனுடன் சந்திப்பு | 301 |
| இந்திய–இலங்கை முரண்பாடு | 311 |
| முரண்பாடு முற்றிச் சென்றது | 317 |
| ஆயுத உதவிக்கான வேண்டுகோள் | 322 |
| விடுதலைப் புலிகளின் அரசியற் கட்சி | 326 |
| கலைஞர் கருணாநிதியுடன் சந்திப்பு | 333 |
| புலிகளின் இரு கோரிக்கைகள் | 335 |
| வாகரையில் மாநாடு | 338 |
| பிரேமதாசாவின் இரகசியத் திட்டம் | 340 |
| **அத்தியாயம் VII : யாழ்ப்பாணத்தில் போருக்குள் வாழ்க்கை** | **347** |
| யாழ்ப்பாணக் கோட்டைச் சமர் | 350 |
| வடமராட்சியில் எமது வாழ்க்கை | 352 |
| பெண் போராளிகள் பற்றிய புதிய பார்வை | 355 |

யாழ்ப்பாணத்தில் புலிகளின் நிர்வாகம் 362

பெண் போராளிகள் 365

கண்டன ஆய்வாளருக்கு ஒரு பதில் 368

இனக் கொலைக்கு எதிரான போராட்டம் 373

பெண்களும் தேசியப் போராட்டமும் 378

பெண்களுக்கு அதிகாரமளித்தல் 384

பெண்களும் புரட்சியும் 387

மாத்தையாவும் மக்கள் முன்னணியும் 392

சீதன முறைமை 396

பெண்களுக்கு எதிரான வன்முறை 403

யாழ்ப்பாணத்தில் போர் வெடித்தது 407

யாழ்ப்பாணம் மீதான படையெடுப்பு 413

பேரவலமான இடம்பெயர்வு 417

வன்னிக்கு இடம்பெயர்வு 421

**அத்தியாயம் VIII :வன்னியில் அனுபவித்த இன்னல்கள் 426**

வன்னியில் எமது வாழ்க்கை 430

ஜெயசிக்குறு படையெடுப்பு 436

எனது பார்வையில் திரு. பிரபாகரன் 441

புலிகளின் திருமண வைபவங்கள் 449

விடுதலைப் போரின் நாயகர்கள் 454

தொடரும் போர் 463

பாலா கடுமையாக நோயுற்றார் 466

சந்திரிகாவின் நிபந்தனைகள் 473

**பின்னுரை 477**






# முகவுரை

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கமானது, இலங்கையில் தமிழரின் சுயநிர்ணய உரிமைப் போராட்டத்தை தலைமை தாங்கி முன்னெடுத்து வரும் ஒரு விடுதலை இயக்கம் என்பது உலகம் நன்கறிந்த விடயம். ஆயினும் இவ்வியக்கத்தின் உண்மையான தன்மை பற்றியோ, கட்டமைப்புப் பற்றியோ, அதன் தலைமைத்துவத்தின் சிறப்பியல்புகள் பற்றியோ உலகத்தாருக்கு அதிகம் தெரியாது. அது போன்றே தமிழ் மக்கள் அனுபவித்து வரும் துன்ப துயரங்கள் பற்றியும் அனைத்துலகம் அறியாது. இறுக்கமான பத்திரிகைத் தணிக்கை, யுத்தப் பிரதேசங்களுக்கு வெளியார் செல்வதற்கு விதிக்கப்பட்ட தடை, உலக அரசுகளினதும் சர்வதேச ஊடகங்களினதும் பாராமுகம் ஆகியன இந்நிலைமைக்குக் காரணம் எனலாம். இந்த இருட்டடிப்பானது, அரசியல் ஆய்வாளர்கள், இராணுவ நிபுணர்கள், எதிர்ப்புரட்சி விற்பன்னர்கள் எனக் கூறிக் கொள்வோருக்குத், தாம் எண்ணியதை எழுத கட்டுப்பாடுகள் அற்ற பரந்த இடைவெளியைத் திறந்து விட்டது. இதனால் விடுதலைப் புலிகள் அமைப்புப் பற்றியும், தமிழர்களது போராட்டம் பற்றியும் உண்மையைத் திரிவுபடுத்தி பொய்யும் புரட்டுமாக எழுதுவதற்கு இவர்களுக்கு வாய்ப்புக் கிடைத்தது. வேண்டுமென்றே இவர்களால் உருவகிக்கப்பட்ட கோரமான, அசிங்கமான படிமங்கள், பதிவுகள், சித்தரிப்புகள் காரணமாக தமிழரின் இன நெருக்கடிக்குப் பின்னாலுள்ள உண்மைகள் மூடி மறைக்கப்பட்டன. தமிழரின் விடுதலைப் போராட்டத்தை மூடிமறைத்து நிற்கும் மர்மத் திரையை நீக்கி, ஒரு மக்கள் சமூகத்திற்கு இழைக்கப்பட்ட கொடூரமான அடக்குமுறை பற்றியும் அதற்கு எதிராக வெடித்த எதிர்ப்பு முறை பற்றியுமான உண்மைக் கதையை, உள்ளார்ந்த கதையை எடுத்துக் கூறுவதே இந்த நூலின் நோக்கமாகும்.

இரண்டு தசாப்தங்களுக்கு மேலாக நான் எனது வாழ்க்கையை தமிழ்ப் புலிகளுடன் செலவிட்டிருக்கின்றேன். தமிழீழ சுதந்திரப் போராட்டத்தில் நான் பங்காற்றிய எனது வரலாற்றுப் பயணமும், அந்தக் காலகட்டத்தில் எனக்கு ஏற்பட்ட அபூர்வமான அனுபவங்களும் இந்த நூலில் விபரிக்கப்படுகின்றன. தமிழரின் ஆயுதப் போராட்டத்தின் படிநிலை வரலாற்று வளர்ச்சியில், காலவரிசைப்படி கட்டவிழும் நிகழ்வுகள், சம்பவங்கள், வாழ்வனுபவங்களை சரித்திர ரீதியாகவும், சுயசரித விபரணையாகவும் இங்கு எடுத்துக் கூறியிருக்கின்றேன்.

அவுஸ்திரேலியாவிலுள்ள ஓர் சிறிய, அறியப்படாத கிராமத்தைச் சேர்ந்த ஒரு இளம் பெண், புதிய அனுபவம் தேடி, தனது சொந்த நாட்டை விட்டு ஐரோப்பாவிற்கு பயணித்தபோது தனது வாழ்க்கையிலே ஒரு புரட்சிகரமான மாற்றத்துக்கு எவ்வாறு ஆளாகிறாள் என்ற கதைபற்றி இந்த நூலின் ஆரம்ப பகுதிகளில் விளக்கப்படுகின்றது. முப்பது ஆண்டுகளுக்கு முன்னர், ஐரோப்பிய பயணத்தை மேற்கொண்டு அவுஸ்திரேலியாவிலிருந்து நான் விமானம் ஏறிய பொழுது எனது வாழ்க்கையில் ஒரு அடிப்படையான மாற்றம் நிகழப் போகிறது என்பதை அப்பொழுது நான் சிறிதளவும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் எவரும் கற்பனை செய்து பார்க்க முடியாத அளவிற்கு அது நடந்தேறியது உண்மைதான். வெளியுலகப் பயணங்கள் அன்றி இங்கிலாந்தில் பெற்ற உயர் கல்வி போன்றவற்றிற்கு அப்பால் அது நிகழ்ந்திருக்கின்றது. எனது உலகப் பார்வை அடிப்படையாகவே மாற்றம் கண்டது. எனது வாழ்நிலை மாற்றத்தை தீர்மானிக்கும் சக்தியாக பெரும்பங்காற்றியவர் எனது கணவர் அன்ரன் பாலசிங்கம் அவர்களே. 1978ம் ஆண்டு எமது திருமணம் நிகழ்ந்தது. இத் திருமணமானது கருத்தியல் ரீதியான, கண்ணோட்ட ரீதியான, விழுமிய ரீதியான ஒரு பிணைப்பு என்றே சொல்வேன். அன்றுதொட்டு, எவரும் நினைத்துப் பார்க்க முடியாத வகையில், நாம் எல்லா சவால்களுக்கும், சூழ்நிலைகளுக்கும் முகம்கொடுத்து, ஒரு புரட்சிகரமான பாதையில் ஒன்றாகக் கைகோர்த்து நடந்திருக்கின்றோம். இவ்வாறு, தமிழரின் சுதந்திரப் போராட்டத்தில் எமது ஈடுபாடு ஒரு அபூர்வமான வாழ்க்கை வரலாறாக கட்டவிழ்கிறது.

1978ம் ஆண்டு, லண்டனில் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு நாம் அறிமுகமானதைத் தொடர்ந்து, இந்தியா சென்று புலிகள் அமைப்பின் தலைவர்களையும் போராளிகளையும் சந்திப்பதென ஒரு தீர்க்கமான முடிவை எடுத்தோம். இந்தியாவில், தமிழ் நாட்டின் தலைநகரான சென்னையில், புலிகள் இயக்கத்தின் நிறுவன கர்த்தாவான வேலுப்பிள்ளை பிரபாகரன் என்ற இளைஞரைச் சந்தித்தோம். இவர், கடந்த இரு தசாப்தத்திற்கு மேலான காலத்தில் ஒரு காவிய நாயகனாக போற்றப்படுவது மட்டுமன்றி, தனது ஒடுக்கப்பட்ட மக்களின் தேசியத் தலைவன் என்ற பாத்திரத்தையும் பெற்றிருக்கின்றார். திரு பிரபாகரனுக்கும், அவரது தோழர்களுக்கும் நாம் அறிமுகமான விபரங்களை இரண்டாவது அத்தியாயத்தில் விபரிக்கின்றேன். அத்தோடு அங்கு விடுதலைப் புலிகளின் உள்ளார்ந்த செயற்பாட்டுச் சிக்கல்களையும் விளக்குகின்றேன். ஒரு தலைமறைவான கெரில்லா இயக்கத்தை, சிங்கள அரசின் படைபலத்திற்கு ஈடுகொடுக்கும் வல்லமை





படைத்த ஒரு தேசிய விடுதலை இராணுவமாக மாற்றுவதில் புலிகள் எதிர்கொண்ட இடர்களையும், சிக்கல்களையும் அவர்களது ஆரம்ப வரலாறு தெளிவாக புலப்படுத்துகிறது. உள்ளீடான முரண்பாடுகளும் செயற்பாட்டுச் சிக்கல்களும் இயக்கத்தின் கட்டமைப்பில் மாற்றத்தை ஏற்படுத்தவே செய்தது. அத்தோடு, அரச ஒடுக்குமுறை போன்ற யதார்த்தப் புறநிலைகளும் இயக்கத்தின் வளர்ச்சியிலும் விரிவாக்கத்திலும் தாக்கத்தை விளைவிக்கத் தவறவில்லை. 1983ல் வெடித்த இனவாதக் கலவரங்கள் தமிழ், சிங்கள தேசங்கள் மத்தியிலான உறவில் பெரும் திருப்பத்தை ஏற்படுத்தியது எனலாம். அது, தமிழ்ப் பாராளுமன்ற அரசியலுக்கு சாவுமணி அடித்ததுடன், ஆயுதப் போராட்டத்தை தோற்றுவித்து அதனை அரசியற் போராட்ட வடிவமாக முதன்மைப்படுத்தியது. இனக் கலவரங்களை அடுத்து, சிறீலங்காவின் சக்திவாய்ந்த அயல் நாடான இந்தியா, இனப் பிரச்சினையில் தலையிட்டமை பாரிய விளைவுகளை ஏற்படுத்தியது.

தமிழரின் இனப்பிரச்சினையில் இந்திய மத்திய அரசும் தமிழ் நாட்டு முதலமைச்சர் திரு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களும் எவ்வாறு தலையீடு செய்தனர் என்பதனை மூன்றாவது அத்தியாயத்தில் நான் விபரமாக விளக்குகின்றேன். தமிழ்ப் போராளிகளுக்கு இந்தியா வழங்கிய இராணுவப் பயிற்சியும், எண்பதுகளின் நடுப்பகுதியில் தமிழ்நாட்டு முதல்வர் புலிகளுக்கு வழங்கிய நிதியுதவியும் விடுதலைப் புலிகள் அமைப்பினதும் ஆயுதப் போராட்டத்தினதும் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் என்றுமில்லாத உந்துதலைக் கொடுத்தன. இந்தியாவின் நலன்களுக்கும், தமிழ்ப் போராட்ட அமைப்புகளின் அபிலாசைகளுக்கும் மத்தியில் எழுந்த முரண்பாடுகள் ஈற்றில் இரு தரப்பினரையும் ஏமாற்றத்திற்குள் தள்ளியது. இனப்பிரச்சினையில் இந்தியாவின் தலையீடானது அதன் புவிசார் - அரசியல், கேந்திர நலன்களையே மையமாகக் கொண்டது என்பது காலப்போக்கில் தெளிவாகப் புலனாகியது. இலங்கையை தனது வல்லாதிக்க வியூகத்தினுள் கொண்டுவந்து, தமிழ்ப் போராளி அமைப்புகளுடன் பேச்சுக்களை நடத்தத் தூண்டும் நோக்குடனேயே இந்தியா தமிழ்ப் போராளிகளுக்கு இராணுவ உதவிகளை வழங்கியது. இந்தியா கடைப்பிடித்த வலிந்த இராஜதந்திரத்தின் விளைவாகவே 1985ல் பூட்டான் தலைநகரான திம்புவில் தமிழ்ப் பிரதிநிதிகளுக்கும் சிறீலங்கா அரச தூதுக்குழுவினருக்கும் மத்தியில் பேச்சுகள் நிகழ்ந்தன. திம்புப் பேச்சுக்கள் இடைநடுவில் முறிந்ததால் சீற்றமடைந்த இந்திய அரசு பாலா -வை நாடு கடத்தியது. ஆயினும் தமிழ் விடுதலை அமைப்புகளுக்கும்

இந்திய அரசுக்கும் மத்தியில் பேச்சுகள் மீண்டும் தொடர்ந்த போது இந்தியாவுக்குத் திரும்பி வருமாறு பாலாவுக்கு அழைப்பு விடுக்கப்பட்டது. அவர் சென்னைக்கு திரும்பி வந்து மூன்று மாதங்களுக்குப் பின்னர் அவரைக் கொலை செய்யும் நோக்கத்தோடு எமது வீடு குண்டு வைத்துத் தகர்க்கப்பட்டது. ஆயினும் இந்தக் கொலை முயற்சி தோல்வியில் முடிந்தது. இந்த சம்பவத்திற்கு காரணமான குற்றவாளி கைது செய்யப்பட்டார். அவரது வாக்கு மூலத்தின்படி ஜே.ஆர். ஜெயவர்த்தனாவின் அமைச்சர் ஒருவரே இந்தக் கொலை முயற்சியின் சூத்திரதாரியெனத் தெரியவந்தது. இந்திய மத்திய அரசும், தமிழக அரசும் விடுதலைப் புலிகளுக்குக் கொடுத்த தொல்லைகள், நெருக்குதல்கள் பற்றியும் இந்த அத்தியாயத்தில் நான் குறிப்பிடுகின்றேன். இந்தச் சம்பவங்கள் இந்தியாவுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் படிப்படியாக விரிசலை ஏற்படுத்தியது.

1987ம் ஆண்டு ஆரம்பப் பகுதியில் சிங்கள ஆயுதப்படைகளுக்கும் தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் இராணுவ மோதல்கள் தீவிரமடைந்தன. இறுதியில், சிங்கள ஆயுதப் படைகள் யாழ்ப்பாணக் குடாநாடு மீது பாரிய படையெடுப்பை மேற்கொண்டன. இதனால் பொது சனங்கள் மத்தியில் பெருமளவில் உயிரிழப்புகள் ஏற்பட்டன. இந்நிலையில், தீவிரமடைந்த மோதல்களை நிறுத்தும் நோக்கத்துடன் இந்தியா தலையிட்டது. இதனையடுத்து இரு அரசுகளுக்கும் மத்தியிலான இந்திய-இலங்கை ஒப்பந்தம் கைச்சாத்தாகியது. இந்த ஒப்பந்த வரைவிலிருந்து புலிகள் புறக்கணிக்கப்பட்டனர். இந்திய-இலங்கை ஒப்பந்தத்தின் விதிகளுக்கு அமைய, அமைதி காக்கும் படை என்ற போர்வையில், இந்தியத் துருப்புகள் வடகிழக்கிற்கு அனுப்பி வைக்கப்பட்டனர். விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள ஆயுதப் படைகளுக்கும் மத்தியில் போர்நிறுத்தத்தைக் கண்காணித்தல், புலிகளிடமிருந்து ஆயுதங்களைக் களைதல் போன்ற பணிகள் இந்திய அமைதிப் படைக்கு வழங்கப்பட்டன. இந்த நிகழ்வுகளின் பின்னணியை நான்காவது அத்தி யாயத்தில் நான் விபரித்துக் கூறுகிறேன். விடுதலைப் புலி வீரர்களுக்கும் இந்திய இராணுவத்திற்கும் மத்தியில் ஆயுத மோதல்கள் வெடித்து, இந்திய - புலிகள் யுத்தமாக (1987 - 1990) பரிணமித்த வரலாற்று நிகழ்விற்கு காரணமாக அமைந்த சோகமான, அவலமான சம்பவங்களையும் நான் இந்த அத்தியாயத்தில் விபரிக்கின்றேன்.

பல்லாண்டு காலமாக தமிழ் மக்கள் அனுபவித்து வந்த அரச ஒடுக்குமுறையின் ஆழமான பரிமாணங்களை உலகத்திற்கு எடுத்துக்





கூறுவதுடன் எதிர்காலச் சந்ததிக்கும் அவை வரலாற்றுப் பதிவேடாக இருக்க வேண்டும் என்பதுதான் இந்நூலை எழுதுவதன் பிரதான நோக்கங்களில் ஒன்று. பேரவலமான சூழ்நிலைகளுக்குள் வாழவேண்டிய அரிய சந்தர்ப்பங்கள் எனக்குக் கிட்டியதால், யாழ்ப்பாண மக்கள் மீது இந்திய இராணுவம் ஏவிவிட்ட பயங்கரக் கொடுமைகளையும் வன்முறைகளையும் தனிப்பட்ட அனுபவம் மூலமாகவும், மற்றைய சாட்சிகள் மூலமாகவும் பதிவு செய்ய என்னால் முடிந்தது. கூட்டாகக் கைது செய்தல், சட்டத்திற்கு மீறி கொலை செய்தல், தமிழ்ப் பெண்களை பாலியல் வல்லுறவிற்கு உட்படுத்தல் போன்ற இந்திய அமைதிப் படையின் அட்டூழியங்களுக்கு சாட்சியாக இருந்தது மட்டுமன்றி, நானும் பாலாவும் இந்திய இராணுவத்தின் தேடி அழித்தல் வேட்டைக்கும் இலக்காகினோம். யாழ்ப்பாணக் குடாநாட்டின் ஒரு பகுதியான வடமராட்சியில் நாமிருவரும், இந்திய இராணுவத்தால் வேட்டையாடப்பட்ட கதை ஐந்தாவது அத்தியாயத்தில் விபரமாகத் தரப்படுகின்றது. நாம் அனுபவித்த துன்பங்களைவிட எமது அவல நிலைக்காக மக்கள் காட்டிய அனுதாபமே எனக்கு முக்கியமாகத் தென்பட்டது. இந்திய துருப்புகளால் வேட்டையாடப்பட்டு நாம் தலைமறைவு வாழ்க்கையை மேற்கொண்ட அந்த மாதங்களில் தமிழ் மக்கள் தமது உயிரைப் பணயம் வைத்து எமக்குப் பாதுகாப்பைத் தேடித்தந்தார்கள். அந்த ஆபத்தான காலகட்டத்தில் யாழ்ப்பாண மக்கள் எம்மீது காட்டிய அன்பையும், பரிவையும், பெருந்தன்மையையும் நான் நன்றியுடன் என்றும் எனது நினைவில் வைத்திருப்பேன். தமிழ் மக்களது ஆதரவும், இயல்பான, தன்னலமற்ற உதவிகளும் இல்லாதிருந்தால் நாம் உயிரோடு பிழைத்திருக்க முடியாது. இறுதியில் நாம் பாக்கு நீரிணையைக் கடந்து தமிழ்நாட்டுக் கரைக்குத் தப்பிச் சென்ற சம்பவமும், இடரைத் தாங்கும் ஆன்ம பலத்திற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. பெரிய இடர்களை எதிர்கொண்டு ஒரு சின்னம் சிறிய படகில் அந்தப் பெருங்கடலைத் தாண்டிய பயங்கரச் சம்பவமும் இந்த அத்தியாயத்தில் சித்தரிக்கப்படுகிறது.

பிரேமதாசா - விடுதலைப் புலிகள் பேச்சுக்கள் பற்றிய ஒரு விரிவான ஆய்வாக அமையப் பெறுகிறது, ஆறாவது அத்தியாயம். இலங்கையிலிருந்து இந்திய இராணுவத்தை வெளியேற்றும் நோக்கோடு பேச்சுக்களில் கலந்து கொள்ள பிரேமதாசா ஆட்சிப் பீடமும் விடுதலைப் புலிகளின் தலைமையும் முடிவெடுத்தமைக்கு இரு சாரருக்கும் சொந்த நிர்ப்பந்தங்கள் இருந்தன. தமிழர் தாயகத்தை இந்தியப் படைகள் ஆக்கிரமித்து நின்றதால், வடகிழக்கில் இந்திய இராணுவத்திற்கும்

தமிழ்ப் புலிகளுக்கும் மத்தியிலான போர் உக்கிரமடைந்தது. இந்திய இராணுவம் இலங்கைத் தீவில் கால்பதித்து நிற்கின்றது என்ற காரணத்தைக் காட்டி ஜனதா விமுக்தி பெரமுனை (ஜே.வி.பி) தென்னிலங்கையில் ஆயுதக் கிளர்ச்சியை ஏவிவிட்டது. என்றுமில்லாத பரிமாணத்தில் முழுத் தீவிலும் வன்முறையும், கிளர்ச்சியும் தலைவிரித்தாடின. தமது மக்களின் விசேட நலன்கருதி, தமிழ், சிங்கள தலைவர்களான திரு பிரபாகரனும், திரு பிரேமதாசாவும் இந்திய இராணுவத்தை வெளியேற்ற விரும்பினர். இந்தப் பரஸ்பர நோக்கம் தான் விடுதலைப் புலிகளையும் பிரேமதாசா அரசாங்கத்தையும் கொழும்பில் பேச்சுவார்த்தையில் கலந்து கொள்ளச் செய்தது. பேச்சுக்களுக்கு அதிகாரபூர்வமான பொறுப்பாளர் என்ற ரீதியில், அரச தூதுக்குழுவுடனான பேச்சுவார்த்தையின்போது பாலா ஒரு முக்கிய பங்காற்றினார். விடுதலைப் புலிகளின் தூதுக் குழுவினருக்கு செயலாளராகப் பணிபுரியும் பாக்கியம் எனக்குக் கிட்டியது. இந்தப் பொறுப்பைப் பெற்றதால், அந்த வரலாற்றுக் கட்டத்தில் அரசியல் அதிகார பீடத்தில் அமர்ந்திருந்த ஜனாதிபதி பிரேமதாசா, திரு ஏ.சீ.எஸ். ஹமீட், வெளிவிவகார அமைச்சர் திரு ரஞ்சன் விஜயரட்ணா மற்றும் முக்கிய பிரபலமான அரசியற் பிரமுகர்களை அறிந்து கொள்ள முடிந்தது. பேச்சுக்கள் சினேகபூர்வமாகவும், ஆக்கபூர்வமாகவும் அமைந்தன. இந்திய இராணுவத்தை வெளியேற்ற வேண்டும் என்ற பொதுவான இலட்சியத்தை அடைவதில் பேச்சுக்கள் வெற்றியடைந்தன. இந்திய அமைதிப்படையின் வெளியேற்றத்தை அடுத்து, இனப் பிரச்சனைக்கு தீர்வு காணும் முயற்சிகளில் சிக்கல் எழுந்தது. அரசியல் நீரோட்டத்தில் இறங்கி, தேர்தலை எதிர்கொள்ள புலிகள் முன்வைத்த கோரிக்கைகளை நிறைவுசெய்ய திரு பிரேமதாசா பின்னடித்தார். ஜனாதிபதி பிரேமதாசாவுடனும், திரு ஹமீட்டுடனும் நடத்திய தனிப்பட்ட கலந்துரையாடல்கள் பற்றியும், அமைச்சர்களுடன் நிகழ்த்திய பலகட்ட சுற்றுப் பேச்சுக்கள் பற்றியும் இவ்வத்தியாயத்தில் நான் விபரமாகக் கூறியுள்ளேன். மிகவும் அரிதான சம்பவங்களைக் கொண்ட இந்த வரலாற்றுக் கட்டத்தை நான் இந்நூலில் விபரமாகவும் ஆழமாகவும் பதிவு செய்துள்ளேன். இந்த சமாதானப் பேச்சுக்கள் முறிவடைந்து, இரண்டாம் ஈழப்போர் என்ற வடிவத்தில் மீண்டும் மோதல்கள் ஆரம்பமாகிய காரணங்களையும் நான் இங்கு விளக்கியிருக்கின்றேன்.

வடகிழக்கிலிருந்து இந்திய இராணுவம் வெளியேறியதை அடுத்து, நானும் பாலாவும் யாழ்ப்பாணம் சென்று அங்கு வசித்து வந்தோம். தொண்ணூறுகளின் முதல் அரைவாசிப் பகுதியை,





யாழ்ப்பாணக் குடாநாட்டில், கொடிய யுத்தத்தின் மத்தியில், தமிழ் மக்களோடு எப்படி வாழ்ந்தோம் என்ற எமது வாழ்வனுபவத்தை ஏழாவது அத்தியாயம் விபரித்துக் கூறுகின்றது. யாழ்ப்பாண குடாநாட்டின் நிலப்பரப்பு மீது தமது கட்டுப்பாட்டை நிலைநிறுத்தும் நோக்குடன் தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள ஆயுதப் படைகளுக்கும் மத்தியில் இக் காலகட்டத்தில் உக்கிரமான சமர்கள் நிகழ்ந்தன. ஆயினும் சிங்கள ஆயுதப் படைகள் இச்சமர்களை போர் அரங்குகளில் மட்டும் நிகழ்த்தவில்லை. வெகுசனங்கள் மத்தியில் உயிரிழப்பை ஏற்படுத்தி பீதியை உண்டுபண்ணும் நோக்கில் குடியிருப்புப் பகுதிகளில் போர் விஸ்தரிக்கப்பட்டது. வெகுசனங்கள் நிறைந்து வாழும் குடியிருப்புப் பகுதிகளில் கண்மூடித்தனமாக நடத்தப்பட்ட விமானக் குண்டுவீச்சுகளும், பீரங்கித் தாக்குதல்களும் பேரழிவை உண்டுபண்ணின. இந்த ஆபத்தான காலகட்டத்தில் யாழ்ப்பாண மக்கள் எதிர்கொண்ட ஒடுக்குமுறையின் ஆழத்தையும், அவர்கள் அனுபவித்த பயங்கர அவலங்களையும் எனது நூலின் இப் பகுதியில் விபரித்துக் கூறியுள்ளேன். ஒருபுறம், கொடிய யுத்தம் தீவிரமாக நடந்துகொண்டிருந்தபோதும் மறுபுறத்தில் தமது கட்டுப்பாட்டிலுள்ள குடாநாட்டிலும் ஏனைய பகுதிகளிலும் விடுதலைப் புலிகள் இயக்கம் சிறப்பான நிர்வாகத்தை நடத்திவந்தனர். இது பற்றியும் இவ்வத்தியாயத்தில் குறிப்பிட்டிருக்கின்றேன்.

நான் ஒரு சமூகவியலாளர் என்ற ரீதியில், யாழ்ப்பாணச் சமுதாயமானது ஆய்வு செய்து ஆவணப்படுத்த வேண்டிய ஒரு புதிய, திறந்த ஆய்வுகூடம் போல எனக்குத் தென்பட்டது. ஒவ்வொரு சமூக அலகும் ஆய்வு செய்யப்பட வேண்டிய விடயமாகத் தோன்றியது. விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள் தமிழ் சமுதாயத்தில் ஒரு புதிய பரிமாணத்தைப் புகுத்தியிருந்தார்கள். தமிழ்ப் பெண்களின் வாழ்வியக்கத்தில் பெண் போராளிகளின் வரலாற்று ரீதியான தலையீட்டை பதிவுசெய்வதோடு, முழுச் சமுதாயத்திலும் இதன் தாக்கத்தைக் கவனமாக பதிவு செய்ய வேண்டுமென எண்ணினேன். இதன் அடிப்படையில், **விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள்** என்ற நூலை எழுதி, அதில் பெண்போராளிகளின் ஆரம்ப கால வரலாற்றை ஆவணப்படுத்தினேன். பெண்களுக்கு சீதனம் வழங்கும் பண்பாட்டு மரபு, தமிழ்ப் பெண்களின் வாழ்வில் பெரும் தாக்கத்தை விளைவிக்கும் பாரிய சமூகப் பிரச்சனையாக விஸ்வரூபப் பரிமாணம் பெற்றிருந்தது. ஆயுதப் போராட்டத்தில் பெண்கள் பங்குபற்றும் நவீன போக்கிற்கும், பெண்களுக்கு சீதனம் வழங்கித் திருமணம் செய்யும்

பண்டைய வழக்கிற்கும் மத்தியிலான முரண்பாடு களையப்பட வேண்டிய தேவையும் இருந்தது. சீதன நடைமுறை ஒழிக்கப்பட வேண்டுமென உறுதிபூண்டு நின்ற பெண் போராளிகள் தமது கொள்கைத் திட்டத்தை நடைமுறைப்படுத்துமாறு புலிகளின் தலைமைப் பீடத்தை வற்புறுத்தினர். சீதனப் பிரச்சினைக்குத் தீர்வு காண்பது சம்பந்தமாக வெகுசனம் மத்தியில் எழுந்த சர்ச்சைகள், மிகவும் சுவாரசியமான கருத்துகளை வெளிக் கொணர்ந்தன. இதன் அடிப்படையிற் பார்த்தால், சீதன வழக்குமுறை நினைத்ததை விட மிகவும் சிக்கலானதாகத் தோன்றியது. பொதுமக்களிடமிருந்து வெளிவந்த கருத்துகளே, இப்பிரச்சனையில் எனக்கிருந்த ஈடுபாட்டை மேலும் ஆழமாக்கியது. சீதன வழக்கு சம்பந்தமாக யாழ்ப்பாணப் பல்கலைக் கழக நூலகத்தில் நான் மேற்கொண்ட ஆய்வின்போது, யாழ்ப்பாண சமூகக் கட்டமைப்பானது, ஒரு பண்டையை தாய்வழிச் சொத்துடமை உறவுமுறைமையுடன் தொடர்புடையது என அறிந்துகொண்டேன். இதனையடுத்து, **உடையாத விலங்குகள்** என்ற தலைப்பில், யாழ்ப்பாணத் தமிழர்களின் சீதன வழக்குமுறை பற்றி ஒரு நூலை எழுதிப் பிரசுரித்தேன்.

1994ம் ஆண்டு சந்திரிகா குமாரதுங்கா நாட்டின் ஜனாதிபதியாகப் பதவியேற்று, அவரது அரசிற்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் பேச்சுக்கள் நிகழ்ந்தபோது போர் நெருக்கடியிலிருந்து விடிவு பிறக்கப்போகின்றது என தமிழ் மக்கள் ஆவலோடு எதிர்பார்த்தனர். 1995ம் ஆண்டு ஆரம்பப் பகுதியில் ஒரு சில சுற்றுப் பேச்சுகள் நடைபெற்றதையடுத்து பேச்சுவார்த்தை முறிவடைய போர் மூண்டது. அதனைத் தொடர்ந்து சிறீலங்கா அரச படைகள் யாழ் குடாநாடு மீது படையெடுத்தனர். மூன்றாவது ஈழப்போர் வெடித்தபோது நாம் யாழ்ப்பாணத்தில் வசித்து வந்தோம். எனினும், நாம் அந்தப் போர் அனர்த்தத்திலிருந்து தப்பிப் பிழைத்தோம். குடாநாட்டைக் கைப்பற்றுவதற்காக சிங்கள ஆயுதப் படைகள் வகுத்த போர் வியூகம் பற்றியும், அப்போரை முன்னெடுத்து தமிழ் மக்களுக்கு விளைவித்த சாவும் அழிவும் பற்றியும் நூலின் ஏழாவது அத்தியாயத்தில் விபரிக்கின்றேன். இப்போரில் பயன்படுத்தப்பட்ட ஆயுதங்களின் அழிவு சக்தியைப் பார்க்கும்போது, தனது போர் இலக்குகளை எட்டுவதற்கு சிங்கள இராணுவம் எத்தகைய கொடூரமான, ஈவிரக்கமற்ற முறையில் செயற்படத்தக்கது என்பதனைப் புரிந்து கொள்ள முடிந்தது. யாழ்ப்பாண நகரை ஆக்கிரமிப்புப் படைகள் அண்மித்தபோது, வலிகாமத்திலிருந்து பொதுமக்கள் அனைவரையும் வெளியேற்றுவதென விடுதலைப் புலிகளின் தலைமை முடிவெடுத்தது. முன்னேறி வந்துகொண்டிருந்த





சிங்கள இராணுவத்தின் படையணிகளிடம் சிக்குப்படாமல் தப்புவதற்காக, பீதியும் பதட்டமும் கொண்ட ஐந்து லட்சம் மக்கள் மூச்சுத் திணறும்படி யாழ்ப்பாண வீதிகளை மொய்த்தனர். வலிகாமத்தின் ஒட்டுமொத்தமான குடிசனங்களும் வெளியேறிய பிரமாண்டமான புலப்பெயர்வு, மற்றும் சாவகச்சேரியில் இடம்பெயர்ந்த மக்களின் துயரமான வாழ்க்கை, போன்ற பேரவலங்களையும் இந்த அத்தியாயத்தில் எடுத்துக் காட்டுகின்றேன். வலிகாமத்திலிருந்து வெளியேறிய ஐந்து லட்சம் மக்களில் நானும் ஒருத்தி. சனநெருக்கடிக்குள் சிக்காமல் ஒரு நாள் முன்பாக வெளியேறியதுதான் வேறுபாடு.

சிங்கள இராணுவம் முன்னேறி ஆக்கிரமிப்பை விஸ்தரிக்க, நாம் குடாநாட்டிலிருந்து வெளியேறி வன்னியில் தஞ்சம் புகுந்தோம். வன்னியில், இடம்பெயர்ந்த மக்களதும் எங்களதும் வாழ்வனுபவங்களை கடைசி அத்தியாயத்தில் எடுத்துக் கூறுகின்றேன். இவ் வரலாற்றுக் காலகட்டம், விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள இராணுவத்திற்கும் மத்தியில் நிகழ்ந்த கொடிய சமர்களைக் கொண்டதாக அமைந்தது. வன்னிப் பெருநிலத்தை நடுவாக ஊடறுத்துச் செல்லும் கண்டி-யாழ்ப்பாண பெருவீதியைக் கைப்பற்றும் நோக்குடன் 'ஜெயசுக்குறு' என்ற பெயருடன், சிங்கள இராணுவத்தினர் பெரும்படைநகர்வை மேற்கொண்டனர். எனினும், விடுதலைப் புலிகளின் வலுவான எதிர்த் தாக்குதல் காரணமாக அரசாங்கத் துருப்புகளின் இப்படை நகர்வு, தென்னாசிய இராணுவ வரலாற்றிலேயே மிகவும் நீண்டதும் கொடியதுமான சமர்களைக் கொண்ட போராக உருவெடுத்தது.

ஒரு அரசின் அதிகாரபீடத்திற்கு சவால் விடுத்து நின்ற விடுதலை அமைப்பு என்ற ரீதியில், பல்வேறு திறனாய்வாளர்கள் பல்வேறு விடயங்களில் விடுதலைப் புலிகளை கண்டன விமர்சனத்திற்கு இலக்காக்கினர். விடுதலைப் புலிகளின் வளர்ச்சிப் போக்கில், பெண்களை ஆயுதப் போராட்டத்தில் ஈடுபடுத்தியமையே பலரது புருவங்களை உயர்த்தியது. இந்த விமர்சகர்களில் ஒருவர்தான் ராதிகா குமாரசாமி. பெண்களுக்கு எதிரான வன்முறை என்ற விடயத்தில் ஐ.நாவின் விசேட பிரதிநிதியாக பணிபுரிபவர். இவர் கொழும்புப் பத்திரிகை ஒன்றிற்கு எழுதிய கட்டுரையில், விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள் பற்றி மிகவும் மோசமாக, உண்மைகளைத் திரித்து விமர்சித்து எழுதினார். வன்முறைக்கு எதிரான தனது நிலைப்பாட்டை வலியுறுத்தி, புலிகளின் தலைமைத்துவத்தை கடுமையாகச் சாடினார். பெண்களை ஆயுதப் போராட்டத்தில் ஈடுபடுத்திய காரணத்தினால் தமிழ்ச்

சமுதாயம் இராணுவ மயமாகிவிட்டது எனப் புலிகள் மீது குற்றம் சுமத்தினார். பெண் போராளிகளை வன்முறையாளர்கள் எனவும் சீண்டினார். பெண் புலிகளை ஆயுதம் தரித்த கன்னிகள் எனக் கிண்டல் செய்த ராதிகா குமாரசாமி பெண்கள் ஆயுதப் போராட்டத்திற் பங்குபற்றுவது தமிழ்ப் பாரம்பரியத்துக்கும் பண்பாட்டுக்கும் முற்றிலும் முரணானது எனவும் கண்டித்தார். ஏழாவது அத்தியாயத்தில் ராதிகாவின் கருத்துக்களை அலசி ஆராய்ந்து ஒரு நீண்ட விபரமான விமர்சனத்தை நான் முன்வைத்திருக்கிறேன். தமிழ்த் தேசிய இனக் கட்டமைப்பில் இணைபிரியாத அங்கமாக பெண்கள் இருக்கிறார்கள். ஆகவே தமிழினத்தை முழுமையாக அழிக்கும் நோக்கில் ஏவப்பட்ட இனப்படுகொலையை எதிர்கொள்ளும்போது தம்மைப் பாதுகாக்கும் உரிமை பெண்களுக்கு உண்டு என்பதுதான் எனது வாதத்தின் சாராம்சம். தமிழ் மக்கள் எதிர்கொண்ட அரச ஒடுக்குமுறையானது ஒரு நுட்பமான, சூட்சுமமான இன அழிப்பு வடிவம் என்ற வாதத்தை முன்வைக்கும் நான், தமிழ் மக்களுக்கு எதிரான அரச ஒடுக்குமுறையின் உண்மையான வரலாற்றையும், அந்த ஒடுக்குமுறைக்கு எதிராக அவர்கள் நிகழ்த்திவரும் வீரம்செறிந்த ஆயுதப் போராட்டத்தையும் ராதிகா குமாரசாமி உதாசீனம் செய்திருப்பதைக் கண்டித்துள்ளேன். அத்தோடு, பெண்ணியம் சம்பந்தமாக அவர் முன்வைத்த விமர்சனங்களுக்கும் நான் பதிலளித்துள்ளேன்.

முல்லைத்தீவில், புதுக்குடியிருப்பிலுள்ள எமது வீட்டிற்கு அடிக்கடி வந்து செல்லும் புலிகள் இயக்கத் தலைவர்கள், குறிப்பாக திரு. பிரபாகரன், மூத்த உறுப்பினர்கள் மற்றும் களத் தளபதிகள் ஆகியோர் பற்றிய எனது பார்வையையும் கருத்துகளையும் கடைசி அத்தியாயத்தில் எடுத்துக் கூறுகின்றேன். இருபது ஆண்டுகளுக்கு மேலாக நெருங்கிப் பழகிய அனுபவத்தின் அடிப்படையில் திரு. பிரபாகரனது அற்புதமான ஆளுமை பற்றி எடுத்துச் சொல்ல முயன்றுள்ளேன். தமிழரின் ஆயுதப் போராட்டத்தில் புகழ்மிகு வீரர்களாகக் கௌரவிக்கப்படும் மூத்த களத்தளபதிகள் பற்றியும் எனது கருத்துக்களையும் இங்கு வெளிப்படுத்தியிருக்கின்றேன். சிறுநீரக செயலிழப்பால் கடுமையாக நோய்வாய்ப்பட்ட பாலாவை, சர்வதேச செஞ்சிலுவைச் சங்கத்தினதும் நோர்வே அரசினதும் உதவியுடன் வன்னியிலிருந்து வெளியே அனுப்புவதற்கு எடுக்கப்பட்ட முயற்சிகள் பற்றியும் நூலின் இப்பகுதியில் விபரிக்கின்றேன். பாலாவின் வாழ்க்கைக்கு விலை கூறி, ஜனாதிபதி சந்திரிகா குமாரதுங்கா முன்வைத்த ஏற்றுக் கொள்ளமுடியாத நிபந்தனைகள் பற்றியும் இங்கு குறிப்பிடுகின்றேன்.





பல்வேறு சம்பவங்கள், நிகழ்வுகள் பற்றிய எனது தனிப்பட்ட அனுபவங்களையும், அவதானிப்புகளையும் நினைவுகளையும் ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டபோதும், சாராம்சத்தில் இந்நூல், தமிழரின் சுதந்திரப் போராட்டத்தின் வரலாற்று இயக்கத்தையே விளக்குகிறது. எனவே இந்நூலை, ஒரு வரலாற்றுப் பதிவேடாகவே கருதவேண்டும். தமிழரின் ஆயுதப் போராட்டத்தின் மிகவும் கொந்தளிப்பான ஒரு காலகட்டத்தில் நிகழ்ந்த சம்பவங்களை இந்நூல் பதிவு செய்துள்ளது. தமிழரின் விடுதலைப் போராட்டத்தை ஆழமாகப் புரிந்து கொள்வதற்கு ஏதுவான பல்வகைப்பட்ட சிறப்பம்சங்கள், விளக்கவுரைகள், புதிய தகவல்களைக் கொண்டிருப்பதால் இந்நூல் வாசகர்களை வெகுவாகக் கவரும் என்பதில் எனக்கு உறுதியான நம்பிக்கை உண்டு. இலங்கையில் தமிழ் மக்கள் எதிர்கொண்ட அரச ஒடுக்குமுறையின் ஆழத்தையும் பரப்பையும் மெய்யுண்மையான சித்தரிப்பாக வெளிக்காட்டுவதே இந் நூலின் பிரதான நோக்கங்களில் ஒன்று. அரச ஒடுக்குமுறையின் பரிமாணங்களைப் பார்க்கும்போது, அவை இன அழிப்பையே நோக்காகக் கொண்டவை என்பதை நான் வலியுறுத்த விரும்புகின்றேன். ஆயினும் இந்த விளக்கத்தை உலக அரசுகளும் அன்றி அனைத்துலக மனிதாபிமான நிறுவனங்களும் முழுமையாகப் புரிந்து கொள்ளவோ அன்றி அக்கறையுடன் பரிசீலிக்கவோ மறுத்து வருகின்றன. இனவாத அரசு இழைத்துவரும் கொடுமைகளையும், தமிழர் தாயகத்தில் சிங்கள இராணுவம் நிகழ்த்திவரும் அட்டூழியங்களையும், மனித உரிமை மீறல்களையும் இந்தியாவும், மேற்குலக வல்லரசுகளும் உதாசீனம் செய்து வருவதுடன், அரசியல் சுதந்திரம் வேண்டும் தமிழ் மக்களின் அபிலாசைகளையும் ஏற்றுக் கொள்ள தொடர்ந்து மறுத்து வருகின்றனர்.

சுயநிர்ணயம் என்ற தமது நியாயபூர்வமான உரிமைப் போராட்டத்திற்கு எதிர்ப்புகள் கிளர்ந்தபோதும், எத்தகைய பாரிய இடையூறுகளையும் எதிர்கொண்டு தமது அரசியல் இலட்சியத்தை அடைவதில் தமிழீழ மக்கள் உறுதிபூண்டு நிற்கின்றார்கள். இத்தகைய தளர்வுறா மனவுறுதியை, சுதந்திர வேட்கையை தமிழீழத்தில் போராளிகள் மத்தியிலும் பொதுமக்கள் மத்தியிலும் நான் காணக்கூடியதாக இருந்தது. இச் சுதந்திர வேட்கையானது இறுதியில் வெற்றிபெறும் என்பது எனது அசைக்க முடியாத நம்பிக்கை.

# அத்தியாயம் I

# புதிய தரிசனங்கள்

நாம் பிரியவேண்டிய வேளை வந்துவிட்டதை உணர்ந்தேன். படகின் வெளியிணை இயந்திரத்தின் விசிறிகள் சுழன்று, சுழன்று, கடலைக் கடைய கடல்நீர் வெண்நுரையாக வழிந்து கொண்டிருந்தது. பதினேழு ஆண்டுகளாக நாம் வாழ்ந்த மண்ணை, நாம் நேசித்த மண்ணை, நாம் கூடிவாழ்ந்த மக்களை விட்டுப்பிரிந்து செல்லும் நேரம் நெருங்கிவிட்டது. கரையிலே எம்மோடு கூடிப் பழகிய விடுதலைப் புலிப் போராளிகள். இளம்பெண்களும், ஆண்களும், பழைய நண்பர்களுமாக எல்லோருமே "போய்வாருங்கள்" என்று கைஅசைத்தபடியே கரைநீளம் நின்றார்கள். நீலம் பாரித்த கரையோர நீர்ப்பரப்பிலிருந்து இந்து மா கடலின் மங்கலான ஆழப் பகுதிக்குள் படகு மெதுவாக எம்மை உந்திச் சென்றபோது, கரையிற் தென்பட்ட மனித உருவங்களும் நீள்கரையோர இயற்கைக் காட்சியும் மெல்ல மெல்ல மறையத் தொடங்கின. குளமாகிவிட்ட எனது கண்களில், கடலோர நிலப்பரப்பு ஒரு மெல்லிய கறுப்புக் கீறாக மறைந்து கொண்டிருந்தது. என்னில் ஒரு பகுதியை பின்னால் விட்டுவிட்டு நான் போய்க்கொண்டிருந்தேன்.

எம்மை எதிர்கொண்டு ஓடி வந்தது இந்துமாகடல். நாம் பிசகான வேளையில் வந்திருக்கின்றோம் என்பதையும், அடுத்துவரும் பலமணிநேரம் வாழ்க்கையே வெறுக்கும் அளவிற்கு நிலைமை மோசமானதாக இருக்கப்போகின்றது என்பதையும் அது தயங்காமல் எமக்கு உணர்த்தியது. வேண்டாத விருந்தாளிகளாக நாம் அந்தப் பரந்த நீர்ப்பரப்பில் நின்றோம். மேலெழுந்து சுழற்றியடித்த அலைகள் வெளிப்படையாகவே தமது சீற்றத்தைக் காட்டின. விடுதலைப் புலிகளின் கடற்படைத் தளபதி சூசை, படகின் அணியத்தில் கட்டளை நிலையெடுத்துநின்று, படகைப் பொறுப்போடு நேர்த்தியாகச் செலுத்திக்கொண்டிருந்தார். கொந்தளிக்கும் கடலிலே, சீறியெழும் அலைகளினூடாக சூசையும் அவரது அணியினரும் இலகுவாக படகோட்டும் இலாவகம் கண்டு நான் மரியாதை கலந்த வியப்போடு நின்றேன். வெறியாடும் கடல்மீது தடுமாறிச் செல்லும் படகில் உறுதி தளராது அவர்கள் கால்பதித்து நின்றார்கள். குளிர்நீர் படகு மீது சவுக்கடியாக விழுந்து அவர்களைத் தெப்பமாக நனைத்தபோதும் கடமையில் கண்ணாக நின்று செல்லும் திசையின் இலக்கைக்





குறிவைத்து, படகினை நுட்பமாக இயக்கிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் இளம் போராளிகள்தான். ஆயினும் வயதிற்கு மிஞ்சிய சாமர்த்தியமும் தன்நம்பிக்கையும் அவர்களிடம் இருந்தது. சினந்து எழும் அலைகளின் மிரட்டல்களுக்குக் கிறங்காது, கடலும் படகும் ஆட, தாமும் இலாவகமாக அந்த ஆட்டத்திற்கு ஒத்திசைவாக அசைந்தவாறு அவர்கள் படகோட்டினார்கள். தளபதி சூசை காட்டிய திசையிற் பார்த்தோம். எமக்குப் பின்னால், தூரத்திலே, மங்கலாக இரண்டு கரும்புள்ளிகள் தெரிந்தன. இரண்டும் படகுகள். எமது வேகத்திற்கு அனுசரணையாக வந்துகொண்டிருந்தன. நாம் சென்று கொண்டிருந்தது போன்ற அதே மாதிரியான படகுகள். ஆனால் தூரத்தில் சிறிய உருவத்தில் தெரிந்தன. துள்ளிப் பாய்ந்து, முல்லைத்தீவுக் கடற்பரப்பை உழுதபடி வந்து கொண்டிருந்தன. எமது காவற் கவசங்கள் இவை. துணிச்சல், தியாகம், அர்ப்பணிப்பு - அவற்றோடு வெடிமருந்துகளும் நிரம்பிய படகுகள். இவர்கள் கடற்கரும்புலிகள். எமது பாதுகாப்பிற்காக அனுப்பப்பட்டவர்கள்.

நாம் உயிர்வாழவேண்டும் என்பதற்காக, தமது உயிரையும் கொடுக்கத் தயாராக வந்தவர்கள். எமது பயணத்துக்கு அச்சுறுத்தலாக சிறீலங்கா கடற்படைப் படகுகள் வருமேயானால் அவற்றோடு மோதி அவற்றை அழித்தொழிக்கும் முடிவோடு வந்து கொண்டிருந்த ஆண்களும் பெண்களும் இவர்கள். எமது உயிர்களைப் பாதுகாக்க வேண்டும் என்பதற்காக எத்தகைய தியாகத்தையும் புரிய மக்கள் தயாராக இருக்கின்றார்கள் என்பதைப் பார்க்கும் போது, இந்த அன்பிற்கும், மதிப்புக்கும் தகுதியுடையவள் அல்ல என நான் உணர்ந்து கொண்டது இதுதான் முதற்தடவையல்ல. தளபதி சூசையை எனக்கு நீண்ட காலமாகத் தெரியும். சிங்களக் கடற்படையால் எழக்கூடிய ஆபத்துகள்பற்றி அவர் நன்கறிவார் என்பதும், அப்படியான ஆபத்தான சூழ்நிலை எழுந்தால் அதனை சமாளித்து வெற்றிகொள்ளும் திறனாற்றல் அவரிடமுண்டு என்பதிலும் எமக்கு அசையாத நம்பிக்கை இருக்கிறது. ஆனால் எனது கணவர் பாலாவைப் பொறுத்தவரை அவருக்கு மேலதிகமாக ஒரு ஆபத்து இருந்தது. அது அவருக்கு உள்ளே, அவருடைய உடலில் இருந்தது.

பாலாவுக்கு சிறுநீரக நோய். சிறுநீரகச் செயற்பாடு பாதிக்கப்பட்டு நாட்பட்டிருந்த வியாதி திடீரென சமீபத்தில்தான் கடுமையாக்கி அவர் தப்பிப் பிழைத்திருந்தார். அவர் பிழைத்தது அதிசயம்தான். அவரைப் பராமரித்துவந்த மருத்துவர்களின் கருத்து அதுதான். இருபத்தைந்து ஆண்டுகளாக நீடித்த நீரிழிவு நோய் அவரை

நன்றாகப் பதம் பார்த்து விட்டது. அவரது நோயின் நிலைமையைச் சோதித்துப் பார்க்கக்கூடிய மருத்துவக் கருவிகள் எதுவும் முல்லைத்தீவில் இருக்கவில்லை. இதனால் அவரைச் சோதிக்கவோ, அவரது நோய் எத்தகையை கடுமைநிலை கண்டிருக்கின்றது என்ற விளக்கம் பெறவோ முடியவில்லை. அறுவைசிகிச்சை செய்தபின்னர் தான் சிறுநீரகம் பெருமளவு இயங்கவில்லை என்பதும், சிறுநீரக முடக்கம் மிக மோசமாக இருந்தது என்பதும் எமக்கு முழுமையாகத் தெரியவந்தது. அவருடைய இடது சிறுநீரகம் ஒரு தேங்காய் அளவிற்கு உப்பி இருந்தது என்பதும், எந்நேரமும் வெடித்துப் பிளக்கும் நிலையில் இருந்தது என்பதும் எமக்கு முன்னரே தெரிந்திருந்தால், மருத்துவப் பராமரிப்பும், சிகிச்சைக் கருவிகளும் இல்லாமல் ஆபத்து நிறைந்த கடற்பயணத்தை மேற்கொள்ள எமக்குத் துணிவு வந்திருக்குமோ தெரியாது.

முல்லைத்தீவில் பாலாவின் சிறுநீரகம் கடுமையாகப் பாதிப்படைந்து, அதனால் உயிராபத்து ஏற்பட்டு அதிலிருந்து அவர் தப்பிப் பிழைத்தபோதும் அவரது உடல்நிலை மிக மோசமாகவே இருந்தது. அதிர்ஷ்ட தேவதை அவர் பக்கம் இருந்ததால்தான் அவர் தப்பிப் பிழைத்ததோடு, மிகவும் நீண்ட, ஆபத்தான வங்காள விரிகுடாக் கடற் பயணத்தையும் சமாளித்தார் என்று கூறவேண்டும். வன்னி என்றால் அங்கே மலேரியா, நெருப்புக்காய்ச்சல், மஞ்சள் காமாலை, விஷக்காய்ச்சல்; இனி எந்த நாளும் வரக்கூடிய வெவ்வேறு நோய்கள்! இவைகளால் சுகதேகிகளுக்கே அங்கு ஆபத்து ஏற்பட்டு விடுகின்றது. சிறுநீரக நோயால் உயிர் ஆபத்து நிலையில் இருந்த பாலாவுக்கு இவை நிச்சயமாகச் சாவைக் கொண்டுவந்திருக்க வேண்டும். ஆனபடியால், ஒருபக்கம் அவருடைய சிறுநீரக, நீரிழிவு வியாதிகள். மறுபக்கம் வன்னி வெப்ப சூழலில் எழக்கூடிய நோயாபத்துக்கள். பாலாவின் உடல்நலம் வேகமாக மோசம் அடைவதை அவதானித்த இயக்க உறுப்பினர்களும் சரி, பொதுமக்களும் சரி, அவர் பயணம் செய்யக்கூடிய நிலையில் இருக்கும்போதே, எவ்வளவு சீக்கிரமாக முடியுமோ அவ்வளவு விரைவாக அவரை வெளியேற்றிவிட வேண்டும் என்று ஒரே குரலில் அபிப்பிராயம் தெரிவித்தார்கள்.

இதனால் ஒருபுறம் பிரிவுக் கலக்கம்; மறுபுறம் நோய் அச்சம். இவற்றுக்கு மத்தியில்தான் தமிழீழத்தைவிட்டு நாம் கடல்மார்க்கமாக வெளியேறுவதற்கு பிரபாகரன் அவர்கள் ஏற்பாடு செய்தார்கள். இப்படியான பயணத்தில் ஆபத்து இருப்பது எமக்குத் தெரியும். ஆனால் வேறு வழி இருக்கவில்லை. ஒன்றில் முல்லைத்தீவில் தங்கிநின்று





சாவைச் சந்திக்க வேண்டும். அல்லது, ஆபத்தான பயணத்தை மேற்கொள்ளவேண்டும். சிலசமயம் வெளிநாட்டில் சரியான மருத்துவப் பராமரிப்புப் பெற்று, அவர் மேலும் சிறிது காலம் உயிர்வாழ இயலுமாய் இருக்கும் என்பதையும் சிந்தித்தோம். ஆனால் சமுத்திரத்தில் இறங்கியதும் இரக்கமற்ற கடுமையான கடற்சூழல் பாலாவை அடுத்த ஆபத்தான கட்டத்துக்கு தள்ளிவிட அதிகநேரம் பிடிக்கவில்லை. ஆர்ப்பரித்துக் குமுறும் அந்தப் பென்னம் பெரிய கடலில், எமது சின்னஞ்சிறிய படகு, முக்கி முக்கித் தத்தளித்தபடி முன்னேறிக் கொண்டிருந்தது. அடிவானத்தில் ஒளி மங்கிக்கொண்டிருந்தது. அந்த நேரம் பாலாவின் முகம் வெளிறத் தொடங்கியது. இயலாமை அதிகரிப்பது தெரிந்தது. அவர் வயிற்றை எக்கி, எக்கி வாந்தி எடுத்துக்கொண்டிருந்தார். அதனைக் கடற்புலி வீரர்கள் பாத்திரங்களில் ஏந்திக் கொட்டினார்கள். அவருடைய நெற்றியையும் தாங்கிப் பிடித்தார்கள். எனக்கும் கடல் குமட்டல் குணம். ஆற்றாமை என்னையும் தொற்றிக்கொண்டது. கடற்பயணக் கனதி என்னையும் தாக்கியது. இந்தப் பயணம் பற்றி நான்கொண்ட அச்சங்கள் இப்பொழுது மெய்யாகி விட்டதை உணர்ந்தேன். நாம் புறப்படுவதற்கு முன்னரே, அனேகமாக மூன்றுவகை உடல்நல ஆபத்துகள் பாலாவுக்கு வரலாமென அறிந்து கொண்டேன். அவருடைய இரத்த அழுத்த மாத்திரைகள் தாழ்ந்த குருதி அழுத்தத்தை ஏற்படுத்தலாம். அடுத்தது கடல்வாந்தியால், உடலில் நீர்வற்றி, சிறுநீரக வியாதியைக் கடுமையாக்கிவிடலாம். இனி, அளவுக்கு மிஞ்சி வாந்தி எடுத்தால் குருதியோட்டத்தில் 'குளுக்கோஸ்' குறைந்து மயக்க நிலை ஏற்படலாம். எனக்கும் குமட்டல். தியங்கிப் போனேன். இடையில் விழித்து அவரை நிமிர்ந்து பார்த்தேன். அவரது நெற்றியில் வியர்வைத் துளிகள். இது எந்தவகையான உடல்நல ஆபத்து? அனுமானிக்க முடியவில்லை. சூசையின் பார்வை ஏதாவது செய்யும்படி என்னைக் கெஞ்சியது. பாலா கையை நீட்டினார். 'குளுக்கோஸ்' குறைவு ஏற்பட்டிருப்பதை சைகையால் காட்டினார். தமக்கு சீனி வேண்டும் என்பதையும் உணர்த்தினார். மிகத் தேவையான மருந்து அது. நான் ஆயத்தமாகக் கொண்டு சென்ற பொதியில் இருந்து சீனி எடுத்துக் கொடுத்தேன். அதை நக்கிய சில நிமிடங்களில் அவருடைய நெற்றி வியர்வை உலர்ந்தது. அந்த நேரம் என்னால் இயன்றது அவ்வளவுதான். படகு ஆடிய ஆட்டத்தில் மிக எளிமையான மருத்துவ உதவியைக் கூட வழங்க முடியவில்லை. படகின் பக்கவாட்டில் பாலா சரிந்து படுத்தார். ஆனால் வெகுவாக நைந்து போயிருந்தார். தமது நெற்றிக்கு முன்னே அவர் தமது கையைச் சோர்வாக சுழற்றியபோது, அவருக்குத் தலை

கிறுகிறுக்கிறது என்பதும், இரத்த அழுத்தம் வடிந்திருக்க வேண்டும் என்பதும் எனக்குப் புரிந்தது. சில நிமிடங்கள் வயிற்றை மீண்டும் எக்கப் போகிறார் என்பதும் அதன் பின் களைத்து விழப்போகிறார் என்பதும் தெரிந்தது. அவருடைய உடலும் சோர்ந்து, துவண்டுபோய் இருந்தது.

எமது பயணம் தொடர்ந்தது. பாலாவின் நிலை ஒன்றில் நேரம் போகப் போகத் தேறி, சமாளிக்கும் நிலைக்கு வந்துவிடும். அப்படியானால், தொடர்ந்து செல்லலாம் என்ற நம்பிக்கை. அல்லது அவரால் இயலாமல் போய்விடும். அந்த நிலையில், திரும்பிவிட வேண்டும் என்ற முடிவு. எனக்கு இருதலைக் கொள்ளி எறும்பு நிலை. ஆனால் நாம் போக வேண்டிய தூரத்தைவிட, ஓடி வந்து விட்ட தூரம் அதிகம் என்பது தெரிந்தது. ஆகவே திரும்பப்போவதில்லை. பயணம் தொடர வேண்டியதுதான். வேறு வழியில்லை என்பது அவருக்கும் தெரியும். சூசை என்னைப் பார்த்தார். கடற்போராளிகள் ஒருவரை ஒருவர் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். எதையாவது செய்ய வேண்டும் என்று சூசை தவித்தார். படகின் வேகத்தைக் குறைக்குமாறு ஓட்டியிடம் உரத்துக் கூறினார். "கடற்படைப் பீரங்கிப் படகுகள் திருகோணமலையிலிருந்து புறப்பட்டு விட்டன," என்று பதில் வந்தது எட்டத்திலிருந்து வரப்போகும் ஆபத்தை உதாசீனப்படுத்தியவராக, "கொஞ்ச நேரம் மெதுவாக ஓட்டு," என்று சூசை திரும்பவும் கத்தினார். ஆழக்கடலின் ஊடாகவும், அதிகரிக்கும் இருட்டின் ஊடாகவும், கடலின் நிலைமைக்கு ஏற்றவாறும், பாலாவின் உடல் உபாதைக்கு ஏற்றவாறும் படகின் வேகத்தை மாற்றியபடி சென்று கொண்டிருந்தோம். சூசை தான் குந்தியிருந்த அணியத்தின் விளிம்பிலிருந்து ஒரு கணமும் நகரவில்லை. கடல் மீது, தமது கூர்மையான பார்வையைத் தூரத்தில் பரத்தியபடி இருந்தார்; அவ்வப்போது பாலாவின் மீது ஒரு கண்ணோட்டம். இனித் தமது தோழர்களுக்கு திசை பற்றியும் வேகம் பற்றியும் குறிப்புகள். சூசையும் அவருடைய வீரர்களும் இப்படிப்பட்ட பயங்கரச் சூழலில் வாழப் பழகியவர்கள். களைப்பின் சுவடோ, ஆபத்தின் கலக்கமோ அவர்களில் தெரியவில்லை. தற்கொடைத் தியாகத்தின் முதிர்ச்சியில் முகிழ்ந்த அமைதி வடிவமாக, ஓர் ஒத்திசைவோடு இயங்கும் உடலின் வெவ்வேறு உறுப்புகள் போல சூசையும் அவருடைய வீரர்களும் செயற்பட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது நாம் அனுபவித்துக் கொண்டிருந்த உபத்திரவத்திற்கு முடிவே இல்லையா என்று நான் அயர்ந்து கொண்டிருந்தபோது, "அங்கை பாருங்கோ அன்ரி" என்று இயந்திரங்களின் இரைச்சலுக்கு மேலாக, சூசை என்னை நோக்கிக் குனிந்து கத்தியபடியே, தூரத்தில் மினுங்கிய ஒளியைச் சுட்டிக்





காட்டினார். "வந்து சேர்ந்திட்டம்," என்று சொல்லியவாறு இருட்டில் ஒரு கப்பல் நிற்பதை உணர்த்தினார். சிறிது நேரத்தில், உலாஞ்சிக் கொண்டிருக்கும் எமது படகை ஒரு கப்பலோடு அணைத்துப் பிடிக்க, வீரர்கள் முயன்றுகொண்டிருந்தார்கள். இரவின் கனதி இளகியது. அவ்வளவு நேரமும் ஒரே சுருதியில் கடல் அலைச் சத்தத்தையும் இயந்திர இரைச்சலையும் மீறி, பரபரப்புடன் பழகிய குரல்கள் களை கட்டின. "வாருங்கோ அன்ரி, வாருங்கோ". என்னைத் தூக்கிக் கப்பலில் ஏற்றுவதற்காக கரங்கள் நீணடன. பாலா ஏற்கனவே ஏறிவிட்டார். வாக்கி ரோக்கியால் தகவல் கொடுக்கப்பட்டதால் கப்பலில் இருந்து வீரர்கள் அணி ஒன்று படகுக்குள் இறங்கி, அவரைப் பத்திரமாகக் கொண்டுபோய் கழுவித் துடைத்து, கதகதப்பான அறை ஒன்றில் படுக்க வைத்திருந்தார்கள். பலசாலி இளைஞர்கள்! என்னையும் கப்பலில் ஏற்றி, ஒரு சிற்றறைக்குள் பத்திரமாகச் சேர்த்து விட்டார்கள். இரவுக் குளிரிலும், மழையிலும் தெப்பமாக நனைந்த பின், கதகதப்பான ஒரு வீட்டுக்குள்ளே நுழைவது போல இருந்தது. ஆனால் வாந்தி எடுத்ததால் துவண்டு போயிருந்தேன். தூங்க முடியவில்லை. ஒரு படியில் அமர்ந்து, முழங்காலில் முகத்தைப் புதைத்தபடியிருந்தேன். பாலா எப்படி இருக்கிறாரோ என்ற கவலை. இனி, எனது தலைச்சுற்றலால் ஏற்பட்ட ஆயாசம். ஒரு குரல் காதில் விழுந்தது. சிந்தனை கலைந்தது. "அன்ரி நான் போயிட்டு வாறன்". குரல் வந்த திசையில் நிமிர்ந்து பார்த்தேன். சூசை! மேலே நின்று ஒரு கையை ஊன்றியபடி, கீழே குனிந்து என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். கடந்த சில ஆண்டுகளாக எங்களோடு வெகு நெருக்கமாகப் பழகியவர்; தாராள குணத்தோடு நடந்தவர். மூன்றாவது தடவையாக எங்கள் உயிரைக் காப்பாற்றியவர். அந்த இளைஞரிடம், அந்தத் தருணத்தில் என்னால் கூற முடிந்ததெல்லாம், "சரி, தம்பி!" என்பது மட்டும்தான். வேறு எதுவும் கூற வேண்டாம் என்று அவருடைய முகம் வேண்டியது. திரும்பிச் செல்வதற்காகத் தமது வீரர்களை அழைத்தபடி அவர் திரும்பி நடந்தார். பெடியள் ஒவ்வொருவராக வந்து விடை பெற்றார்கள். எம்மோடு நன்றாகப் பழகியவர்கள். இந்தப் பயணத்தில் கூடி வந்து எம்மைக் காப்பாற்றியவர்கள். விடைபெற்றதும் வேகமாகத் திரும்பி நடந்தார்கள். காரிருளில், கொந்தளிக்கும் கடலில், சிறீலங்கா பீரங்கிப் படகுகளிடம் அகப்படாமல், முல்லைத்தீவுக்கு, ஆபத்து நிறைந்த பயணம் மேற்கொள்ளும் ஆயத்தங்களில் பிள்ளைகள் துரிதமாக ஈடுபட்டார்கள்.

சூசையும் அவருடைய வீரர்களும் எமது கப்பலில் இருந்து சிறிது அப்பால் பாதுகாப்பாகச் சென்றபின் நாமும், மென்மையாக அசைவதை

உணர்ந்தேன். எமது கப்பல் நகர்ந்து கொண்டு இருந்தது. இயந்திரத்தின் இரைச்சல் அனுக்கமாகவேதான் கேட்டது. தொட்டிலில் மெதுவாக ஆடும் குழந்தை போன்ற உணர்வு, இல்லையென்றால் கப்பல் புறப்பட்டதே தெரிந்திருக்காது. இந்தக் கடலையும் சரி, இந்தப் பெரிய படகின் கனதியையும் சரி, சமாளிக்கக் கூடிய இயந்திரம் இது என்பது தெளிவாகத் தெரிந்தது. எமது பயணத்தின் இந்த இரண்டாவது கட்டத்தில் எம்மைக் கொண்டு செல்லும் அலுவல்களில் கப்பல் வீரர்கள் ஈடுபட்டுக்கொண்டிருந்தார்கள். கடற் பயணத்தில் எம்மைப் பாதுகாக்கும் பொறுப்பு மூத்த கடற்புலி உறுப்பினர்களில் ஒருவரான சுடரொளியிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. "பாலா எங்கே? என்ன நடக்கிறது," என்று சுடரொளியிடம் விசாரித்தேன். "அவர் நல்லாய் இருக்கிறார். யோசியாதேயுங்கோ," என்று நம்பிக்கை தரும் பதில் வந்தது. "அவர் நல்ல நித்திரை!" என்றார். அந்த வார்த்தை நிம்மதி தந்தது. பயணக்களை, பிரியாவிடை, மனப்பளு எல்லாம், அந்தப் பெரிய கப்பல் தந்த கதகதப்புக்குள் புதைய அப்படியே உறங்கிவிட்டேன்.

எவ்வளவு நேரம் துயிலின் அணைப்பில் இருந்தேனோ தெரியாது. ஒரு தீனமான குரல், "அடேல் தேத்தண்ணி தாறீரோ?" என்று கேட்டு என்னை எழுப்பியது. இந்தத் தொந்தரவு எரிச்சலாகவும் இருந்தது; அதே நேரம் மன ஆறுதலாகவும் இருந்தது. கடற் குமட்டலையும், பாலாவைப் பற்றிய கவலையையும் தற்காலிகமாகவாவது மறந்திருந்த என்னைக் குழப்பியதால் எரிச்சல்! அதே சமயம், அவர் எழுந்து உண்ணவும் பருகவும் எதையாவது தேடுமளவுக்குத் தேறி வெளியில் வந்தது மகிழ்ச்சி! எப்படியோ, சூடாக தேனீர் அருந்திவிட்டு, உற்சாகமாக இருந்தார். பெரிய கப்பலின் கதகதப்பும், அது ஆட்டமில்லாமல் ஓடியதும் அவருக்குத் தெம்பைத் தந்திருக்க வேண்டும். நான் பருகிய தேனீர் வயிற்றுக்குள் அங்கும் இங்கும் ஓடிவிட்டு குமட்டலாக வெளியே சீறிக்கொண்டு வந்து தரையில் சிந்தியது. அடுத்த சிலமணி நேரமாவது நான் சாப்பிடவோ குடிக்கவோ கூடாது என்று எனக்கு அது எச்சரிக்கையாகவும் அமைந்தது. கடற் பயணத்தின் இந்தத் தொடக்கக் கட்டத்தில் அந்தப் பயங்கரக் குமட்டல் என்னை அலைத்திருந்தது. இப்போது நான்தான் ஏலாவாளி. ஆடி அசைவதே பாடாக இருந்தது. ஆனால் பாலா, பெரிய கப்பலில் விரைவாகச் சுதாரித்துக் கொண்டார். அதன்பின் நாமும் வழமையான பராமரிப்பையும், கண்காணிப்பையும் அவருக்கு வழங்க முடிந்தது.

வங்காள விரிகுடா. அந்தப் பெரும் கடற்பரப்பில் காலைக் கதிரவனின் ஒளிபடரத் தொடங்கியது. வானமும் வெளுத்தது. கடலின் நீலமும்





துல்லியமாகப் பளிச்சிட்டது. இந்து மாகடலின் ஆழப்பகுதியில் எங்கள் வருகைக்காக ஒரு மாதத்திற்கு மேலாக நங்கூரமிட்டுக் காத்திருந்த வேறொரு கப்பலை நோக்கி நாம் போய்க்கொண்டிருந்தோம். முல்லைத்தீவில் இருந்து நாம் புறப்படுவது தாமதமாகி இருந்தது. காலநிலைச் சீரின்மையும், கடற் கொந்தளிப்புமே அதற்குக் காரணம். இந்தக் கப்பலை வந்தடையத் தாமதமானதற்கும் அதுவே காரணம். நாம் கப்பலுக்கு அண்மையிலே சென்றோம். அந்தக் கப்பலில் பணிபுரிபவர்கள் எமது வருகைக்காகத் தவிப்போடு காத்திருந்தார்கள். அந்த வீரர்கள் மட்டில் கவலையாகவும் இருந்தது, பெருமையாகவும் இருந்தது. ஏனென்றால், வங்காள விரிகுடாவின் கொந்தளிக்கும் கடலில் ஒரு மாதத்திற்கு மேலாக, பொறுமையோடு சமாளித்துக் கொண்டிருந்தார்கள். உணவுப் பண்டங்களும், குடிநீரும் வெகுவாகக் குறைந்திருந்தன. எம்மை மீட்கும் பயணத்தின் இறுதிக் கட்டத்தில் இந்தப் பண்டங்கள் வெகுவாக அருந்தலாகிவிட்டிருந்தன. இன்னும் தாமதித்திருந்தால் உணவும் நீரும் கப்பற் பணியாளருக்கே பிரச்சினையாகிவிட்டிருக்கும். ஆகவே, நாம் போய்க் கப்பலை அடைந்தபோது அவர்களுக்குப் பெரும் நிம்மதி. உலகச் சமுத்திரம் ஒன்றின் நடுவே மிதந்து கொண்டும், அங்குமிங்கும் அடித்துச்செல்லப்பட்டும், எங்கும் போக முடியாமலும் எதையும் செய்ய முடியாமலும் திடீர் திடீரெனப் புயல் சீறும் அந்தக் கடலில் தரித்து நிற்பது விளையாட்டு அல்ல. ஆனாலும் அவர்களுடைய பெரிய கப்பலை நாம் அண்மித்தபோது அவர்கள், வீரர்களுக்கே உரிய பூரிமத்தோடும், உற்சாகத்தோடும் கையசைத்து எமக்கு முகமன் கூறினார்கள். அந்தப் பரந்த நீர்ப்பரப்பைச் சுற்றிப் பார்வையைப் படரவிட்டேன். எல்லையற்ற இந்தப்பேரண்டத்தில் எந்தவித முக்கியத்துவமும் இல்லாத துரும்புகள் நாம் என்ற ஒடுங்கிய உணர்வே அந்த வேளை இதயத்தில் வியாபித்தது.

எமது கப்பலில் இருந்து இன்னுமொரு சரக்குக் கப்பலில் நாம் ஏற வேண்டும். அருகருகாக அணுகியபோது எதிர்பாராத ஒரு பிரச்சனை தோன்றியது. அமைதியாக நிற்கமாட்டேன் என்று கடல் பிடிவாதமாக இருந்தது. கடும் கடலடி! எத்திக் கொண்டிருக்கும் இரண்டு கப்பல்களின் பக்கத் தடையணைகள் ஒன்றோடு ஒன்று மோதுவதும், மோதிய அதிர்ச்சியில் விலகி வழிவதும், அப்படி விலகும்போது இரண்டுக்கும் இடையே பென்னம்பெரிய இடைவெளி கிழிவதும், இவையெல்லாம், ஒரு கப்பலில் இருந்து அடுத்த கப்பலுக்குச் செல்வது முடியவே முடியாது என்று உணர்த்தியது. கப்பலின் தளத்தில் நாம் எல்லோரும் நின்றுகொண்டிருந்தோம். என்ன செய்வது என்ற சிந்தனை! ஐம்பது அடி

கீழே, கடலின் பயமும் பயங்கரமும் தெரிந்தன. அதில் இரும்புக் கலங்கள் இரண்டும் முட்டி மோதிக் கொண்டிருந்தன. இரண்டுக்கும் குறுக்காக நடைப் பலகையைத் தொடுத்து அதில் நடப்பது என்பது அசாத்தியம். கப்பல்களின் ஆட்டத்தில் பலகை பொறிந்து விடும். ஒரு கப்பலில் இருந்து அடுத்த கப்பலுக்குக் கம்பான் வடத்தில் கப்பல் வீரர்கள் ஏறியதுபோல எம்மாற் போக முடியாது. பாலா எப்படித் தமது பலத்தையெல்லாம் திரட்டி எகிறிப்பாயப் போகிறாரோ என்ற சிந்தனை வந்ததும், மனம் எதையெதையோ எல்லாம் கற்பனை செய்யத் தொடங்கியது. இரண்டு கப்பல்களுக்கும் இடையே அடித்து ஆர்க்கும் அலைகளில் அவர் விழுவதுபோன்ற பிரமை. அப்படியான சந்தர்ப்பத்தில் அவர் காயமடைய, வேறு பிரச்சனைகள் தோன்றப்போகின்றன என்றும் பிரமை. கப்பல்களின் பக்கத் தடையணைகள் ஒன்றோடொன்று மோதிப், பிரிந்து, தள்ளாடி உருள்வதைப் பார்க்கும் போது, சாகும்வரை பொருதும் இரண்டு கலைமான்களின் மோதல் போலப் பட்டது. இந்தப் பிரச்சனையில் எப்படித் தீர்வு காணப்போகிறோம் என்ற வினா எம்மைத் தாக்கியது. நாம் பாய வேண்டி இருக்கும், ஆனால் எப்போது என்பதே கேள்வி. காத்திருப்பதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. கடலில் சீர் ஏற்பட்டு கப்பல்கள் ஆடாமல் நிற்கும் ஒருநிலை வருமளவும் "வாடி இருக்கத்" தீர்மானித்தோம். "பாலா அண்ணாவை எறியுங்கோ, நாங்கள் பிடிப்பம்!" என்று விரித்த கரங்களோடும், கரிசனையோடும் சரக்குக் கப்பலில் நின்ற வீரர்கள் கூறினார்கள். "பாயுங்கோ நாங்கள் ஏந்திறம்!" என்று, உரக்கக் கூறினார்கள். ஆனால் இரண்டு கப்பல்களுக்கும் இடையே உருளும் நீரைப் பார்க்கும்போது, கரணம் தப்பினால் மரணம் என்பது நன்றாகப் புரிந்தது. இவ்வளவு தூரம் வந்த நாம் அவசரப்பட விரும்பவில்லை. கப்பல்களுக்கும், கடலுக்கும் இடையே ஒரு கண அமைதி வரும்வரை காத்திருந்து, அந்தக் கணம் வந்ததும், உதவிப் பலசாலிக் கரங்கள் பல இங்கிருந்து உந்தித்தள்ள, ஓர்மப் பாய்ச்சலோடு, அங்கு நீண்டு காத்திருந்த வீரர்களின் கரங்களில் பாலா பத்திரமாகப் போய்ச் சேர்ந்தார். அவர்களுக்குப் பெரும் நிம்மதி.

பாலா பத்திரமாக "எல்லையைக் கடந்ததும்" இரண்டு பக்கத்திலுமுள்ள வீரர்களுக்கு ஏற்பட்ட நிம்மதி வெளிவெளியாகத் தெரிந்தது. இனி, நானும் எம்மோடு வழித்துணை வருபவர்களும் பக்கம் மாறவேண்டியதுதான். கப்பல்கள் மோதின; உரசின; மேலும் கீழும் ஆடின, கீழே உள்ள ஆழம் தெரியாத ஆழியின் தயவிலே கிடந்தன. "வாருங்கோ அன்றி பாயுங்கோ!" என்னால் இயலும் என்ற நம்பிக்கை அவர்களுடைய குரல்களில் தெரிந்தது. உண்மைதான். சரியான





தருணம் வந்ததும், காற்றிலே எகிறிப் பாய்ந்து, காத்திருந்த கடற்புலி வீரர்களின் நம்பிக்கையான கரங்களில் போய் விழுந்தேன்.

இந்தப் பெரிய இரும்புக் கலத்திற் போய்ச் சேர்ந்தவுடன் நாம் தங்க வேண்டிய பகுதிக்கு இட்டுச் செல்லப்பட்டோம். கப்பலின் பருமனோடு ஒப்பிடும்போது, கப்பல் ஓட்டிகளின் ஒதுக்கிடம் மிகச் சிறியது. ஆனால் சிறிய பயணம் புரிபவர்களுக்கு இப்படியான ஒதுக்கிடத்தில் வசிப்பது, அப்படியொன்றும் கடினமானதல்ல. ஆனால் மாதக்கணக்கில் தரையையே தொடாமல், இந்தப் புறாக்கூண்டுகளுக்குள் அடைபட்டுக் கிடக்கும் வீரர்களை நினைக்க அனுதாபம் பெருகியது. இன்னமும் உற்சாகம் குன்றாமல் அவர்கள் இருப்பது வியப்பாக இருந்தது. சமைப்பது போன்ற ஒரு சாதாரண அலுவல்கூட, கப்பலின் அசைவோடு ஒத்திசைவாக இருக்க வேண்டும். கோரமான அலைஅடிக்கும் வேளையில், ஒரு மலைபோன்ற அலைமேல் கப்பலை நேராக ஏற்றி, அடுத்த நீர்ப்பள்ளத்தில் அது பொத்தென்று விழும்போது அந்த ஆட்டத்தில் சமைக்கவே முடியாமல் போய்விடும். சில தடவைகளில் சமைத்த, சூடான உணவு நாவிலே பட, பலநாட்கள் பிடிப்பதுண்டு என்று கப்பல் வீரர்கள் எனக்கு விளக்கினார்கள். மலைபோன்ற அலைகள் கப்பலின் முன் அணியத்தில் அடித்துத் தெளிக்கும்போது அந்தக் காட்சி எவ்வளவு பயங்கரமாக இருக்கும் என்ற எண்ணமே உள்ளூர நடுங்க வைத்தது. அப்படியான ஒரு அனுபவம் எனக்கு ஏற்பட வேண்டாமே என்று ஆசைப்பட்டேன். கப்பற் தளத்திலே மணித்தியாலக் கணக்கில் சிந்தனை வயப்பட்டு நின்று, கரைகாணாக் கடலின் அந்தமில்லா அதைப்பைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது, அதே நீரின் அசாத்திய வலுவும், அதன் குணாம்சமும் என்னை மலைக்க வைத்தன. பறவை மீன் நீர்மீது சுறுக்காகக் கெந்திக் கெந்தி நீரில் அமுங்குவதையும் நட்பான ஓங்கில்கள் எம் கப்பலுக்கு வழிகாட்டிச் செல்வதையும் பார்க்கும்போது, இந்தப் பூமிக் கிரகத்தில் ஒரு பிரத்தியேகமானதும் மிக ரம்மியமானதுமான உயிரின வாழ்க்கை முறை, கடல்வடிவில் நிலவுவதையும் அதில் மனிதன் தற்காலிக யாத்திரீகனாகவும் சிலவேளைகளில் உரிமையின்றித் தலையிட்டுத் தொந்தரவு புரிபவனாகவும் வந்து போவதையும் என்னால் அனுமானிக்க முடிந்தது.

நாட்கள் உருண்டோடின. கப்பலும் உழுதோடியது. கடலைப் பார்த்தபடி நிற்பதிலேயே எனது பொழுது பெரும்பாலும் கழியும். அப்படிச் செய்வது என்னை ஈர்த்தது, மகிழ்வூட்டியது. பாலாவுக்கும் குமட்டல் குணம் நின்றுவிட்டது. கப்பல் ஓட்டிகளுடன் நன்றாக ஒட்டிக்கொண்டார். கப்பல் முதல்வரின் சிற்றறைச் சீட்டாட்டத்தில் பாலாவும் ஒரு கை. எமது

பயணத்தின் இந்தக் கட்டத்தில் அவர் நோய்வாய்ப்பட்டிருந்தது தெரிந்தது. ஆனால் அச்சத்தைத் தரும் மருத்துவச் சிக்கல் எதுவும் எழவில்லை. பயணம் முழுவதிலும் மருத்துவ ஆலோசனை துண்டிக்கப்பட்டதால் தவிப்பு நிலை. இப்படியான நிலையில், கடல் நீரில் ஃபோம் பெட்டித்துண்டங்கள், பிளாஸ்டிக் பைகள், மிதக்கும் போத்தல்கள் - இவற்றைக் கண்டபோது ஆழமான நிம்மதி மூச்சு! அந்தக் கஞ்சல் கிழிஞ்சல்களைப் பார்த்தபோது என்னுடைய அச்சமும், பொறுப்பும் ஒரு முடிவுக்கு வரப்போவதை உணர்ந்தேன். முடிந்த பயணமோ பெரிது! மீதிப் பயணம் சிறிதே!

கடலில் அங்கும் இங்கும் மிதந்துகொண்டிருந்த கஞ்சல்களின் தொகை அதிகரித்து, நிர்மலமான அழகு கெடத் தொடங்க, மனித சமுதாயம் வாழும் தரைக்கு அருகே திரும்பவும் வரத்தொடங்கிவிட்டோம் என்பது புரிந்தது. நுகர்வுப் பொருட்கள் அருந்தலாகவும், தேவை அதிகமாகவும் உள்ளதும், பல ஆண்டுகளாகப் போரினாற் சீரழிக்கப்பட்டதுமான வடக்குக் கிழக்கு இலங்கையில் வாழ்ந்த எனக்கு, அளவுக்கு மிஞ்சிய நுகர்ச்சியினாலும், பொருளாதார வளர்ச்சியினாலும் உருவாகும் புறச்சூழற் பிரச்சினைகள் பற்றிய நேரடி அனுபவம் இருக்கவில்லை. இனி, வடக்கில் நிலவும் வீட்டுப் பொருளாதாரத்தில் பொருள் சிக்கனம் இருந்தது. இயற்கை உற்பத்திப் பொருட்களும் கட்டுப்பாடான அளவு பயன்படுத்தப்பட்டன. ஆகவே, வீணாக்கப்படுதல் அங்கு மிகக் குறைவு. சொல்லப்போனால், எங்கும் பசி. எங்கேனும் பணம் இல்லை. இதனால் மூக்கு முட்ட உணவு புசிக்க முடியாது. சுரண்டிக் கொட்டும் மீதமும் இயற்கைத் துப்புரவாளரான காகத்திற்கு உணவாகிவிடும். வடக்குக்கான மின் விநியோகம், 1990 இல் போர் மூண்டதிலிருந்து துண்டிக்கப்பட்டிருந்தது. ஆகவே, புதிய மின் கருவிகளை வாங்கிக் கொண்டிருக்க வேண்டிய தேவை மக்களுக்கு இருக்கவில்லை. ஆகவே பிளாஸ்டிக் கழிவுக் குவியலை ஒழித்துக் கட்டும் பிரச்சினையும் இல்லை. ஏனைய உலகத்தோடு ஆண்டுக் கணக்கில் தொடர்பு துண்டிக்கப்பட்டு, யாழ்ப்பாணத் தீபகற்பத்திலும், வடபாகக் காடுகளிலும் வாழ்ந்த பிறகு, இப்பொழுது புலிப் பொருளாதாரம் எனப்படும் வளரும் நாடு ஒன்றின் பிரதேசக் கடல் எல்லைக்கு அருகாக வந்திருந்தோம். அந்தக் கடலில் அதிகம் அதிகமாக இறைந்து மிதந்த கிழிஞ்சல், கஞ்சல்களின் படுமன், அந்த நாட்டின் உளப்பாங்கோடு பின்னிப்பிணைந்த சுகபோக நுகர்வுப் போக்கையே பிரதிபலித்தது. இயற்கை உலகின் வளத்திற்கு இது கேடானது என்ற உணர்வு இப்போக்கில் காணப்படவில்லை.





கடற்பயண இறுதிக் கட்டத்துக்குத் தயாராகக் காத்திருந்தோம். அனைத்துலகக் கடலிலேயே எமது கப்பல் தரித்திருந்தது. நீரில் சலனம் இல்லாமல், கண்ணாடி போல அது பளபளத்தது. இதுவரை எமது பயணம் சுமூகமாகவே இருந்ததால் எமக்கும் ஒரு நிறைவும் மகிழ்ச்சியும். ஆனால், பயணம் இன்னமும் முடியவில்லை. நியாயப்படி பார்த்தால், பயணத்தின் ஆபத்து இனிமேற்தான். சிலநாள் கழித்து எம்மைக் கரைக்குக் கொண்டு போவதற்காக, ஒரு சிறிய இழுவைக்கப்பல் அருகே வந்து ஓட்டியபடி நின்றது. அதில் ஏறி, எமது இறுதித் தளத்துக்குப் புறப்பட்டோம். பல மணிநேரப் பயணம். பாலா படுத்தபடியே பயணம் செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. ஆனால் அவர் ஓட்டியருகே படகுக்காரரோடு அமர்ந்து வெளியே பார்த்தபடியே வந்தார். எல்லோரும் விழிப்போடு சுற்றுமுற்றும் பார்த்தபடியே சென்றோம். வெளிநாடு ஒன்றின் கரைக்கடல் பகுதிக்குள் சட்டவிரோதமாகச் சென்று கொண்டிருந்தோமாதலால் அகப்படக்கூடாது என்பதற்காக, கரைக் காவலரும் கடற்படையினரும் வருகின்றார்களா எனப் பார்த்தபடியே சென்றோம். கரையை நோக்கி நீண்ட நேரம் பயணம் செய்த பின், நாம் ஒரு விரை படகுக்கு மாற்றப்பட்டோம். ஒரு சிறிய இறங்கு துறைக்கு அது எம்மை வேகமாகக் கொண்டு சென்றது. நாம் நள்ளிரவில் கரைக்கு அருகே சென்றபோது, "வற்று" நேரம், கரைக்குச் செல்ல முடியவில்லை. நாம் அடைய வேண்டிய இடத்திற்குச் சென்ற பின்னரும், காத்திருக்க நேர்ந்ததால், அயர்வே ஏற்பட்டது. நீர் அமைதியாக இருந்தது. ஆனால் சூழ்நிலை அமைதியாக இல்லை. சில நூறுயார் தூரத்தில் எமது படகு மிதந்து கொண்டிருந்தது. கரைக் காவலரோ, கடற்படையினரோ இடையில் வந்து விசாரிக்க முற்பட்டால், காட்டுவதற்குச் சட்டமுறையான பத்திரம் எதுவும் எம்மிடம் இல்லை. திடீரென எமது வீரர்களில் ஒருவர் மெதுவாகச் சரிந்து, கடலுக்குள் இறங்கி, காணாமற் போய்விட்டார். எமது சிறிய படகும் நீரோட்டத்தோடு வழியத் தொடங்கியது. போனவர், ஒரு டிங்கியை வலித்தபடியே, பின்னர் எம் அருகே வந்தார். வளைந்து, நெளிந்து டிங்கியிலேறி, தரை தட்டக்கூடிய கரை பார்த்து, டிங்கியில் தரை நோக்கிச் சென்றோம். நள்ளிரவு தாண்டிச் சிறிது நேரத்தில், முன்பின் அறிமுகம் இல்லாத நிலத்தில் நாம் நின்றோம். ஒரு நான்கு சக்கரவண்டி எம் அருகே வந்து நின்றது. பாதுகாப்பான ஓர் இடத்திற்கு அது எம்மை விரைவாகக் கொண்டு சென்றது.

## பாலசிங்கத்தை சந்தித்தேன்

1978 இல், இலங்கைத் தீவைச்சேர்ந்த அன்ரன் பாலசிங்கம் என்ற தமிழர்

ஒருவரை நான் திருமணம் செய்தபோதுதான் எல்லாமே ஆரம்பமாகியது. அந்த இணைப்பின்போது, ஒரு இனத்தின் கூட்டுப் பிரக்ஞையையும் அதன் வரலாற்றறையும் மணந்து கொண்டேன். தனது இனத்தின் பலங்களையும், பலவீனங்களையும், பெருமைகளையும் குறைபாடுகளையும் தன்னுள் அடக்கிய அந்தத் தமிழனின் ஆன்மாவைப் புணர்ந்து கொண்டேன். உலகின் மிகப்பழைமை வாய்ந்த கீழைத்தேய நாகரீகங்களில் ஒன்றினது சமூகத்திலும், கலாச்சாரத்திலும் வாழ்வதற்கு அந்த வரலாறு என்னை ஈர்த்தது. எனது கணவருடைய பண்டைய வரலாற்றுத் தோற்றுவாய் நிலமான இந்திய தென்திராவிட தமிழ் நாட்டுக்குக் கவர்ந்து இழுக்கப்பட்டேன். தமிழீழம் எனப்படும் இலங்கையின் வடகிழக்குப் பகுதியில் தமிழ் மக்களின் கலாச்சாரத் தலைநகரான யாழ்ப்பாணம் என்ற எனது கணவரின் பிறந்த மண்ணில் பல ஆண்டுகள் வாழ்ந்தேன். கூர்மதியோடு நடத்தப்பட்ட இனப்படுகொலை முயற்சியை எதிர்த்து, உயிர்த்துவப் போராட்டத்தை நடத்தும் ஒரு மக்கள் இனத்தின் துன்ப துயரங்களில், மகிழ்ச்சியில், கொண்டாட்டங்களில் நானும் மூழ்கி எழுந்தேன். இதன் விளைவாக எனது வாழ்விலே கடந்த இருபத்திமூன்று ஆண்டுகளாக, நினைத்துப் பார்க்கமுடியாத புதுவகை அனுபவங்களைப் பெற்றேன். முதலில் ஒன்றைக் குறிப்பிடவேண்டும். அரச ஒடுக்குமுறையினதும், அரசின் கருவறுப்பு முயற்சியினதும் தாக்குதலின் பயங்கரத்தை நேரடியாக அனுபவித்துக் கொண்டிருந்த மக்களோடு கூடி வாழ்ந்து, அவற்றில் பங்கெடுத்த ஒரே வெளிநாட்டவர் நானேதான். மன ஓர்மத்தை உடைக்க வல்ல அடக்குமுறைகளை வியக்கத்தகு முறையில், தனித்துவ வழிகளால் எதிர்கொண்டு, அவற்றைத் தாங்கி முறியடித்த இம் மக்களது வீரத்தின் பல சிறப்பு வெளிப்பாடுகளையும் நேர்நேராகத் தரிசித்த ஒரே வெளிநாட்டவரும் நானேதான். இருபது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் மக்களிடையே நான் வாழ்ந்த வாழ்க்கை எனக்குப் பெருமை தருவது. அதற்கு இரண்டு காரணங்கள். முதலாவது, ஓர் இனத்தின் விடுதலைப் போராட்டத்தை முன்னெடுத்து நடத்தும் அமைப்பான தமிழீழ விடுதலைப் புலிகளின் வளர்ச்சியையும் முதிர்ச்சியையும் அருகேயிருந்து நேரடியாகப் பார்க்கவும், அந்த அமைப்பின் வீரர்கள் புரியும் மகத்தான வரலாற்றுப் போராட்டத்துக்கும் வியக்கத்தகு தியாகத்துக்கும் நேரடிச் சாட்சி பகரவும் எனக்குக் கிடைத்த வாய்ப்பு. இரண்டாவது, எனக்கு முக்கியமானது. இந்த விடுதலை அமைப்பும், அந்த இன மக்களும் என்னை நம்பினார்கள். எனக்கு மரியாதை செலுத்தினார்கள். ஒரு வெளி ஆளுக்கு தங்கள் உள் ஆத்மாவையே திறந்து காட்டினார்கள். தமிழ் மக்களுடனான எனது



சுதந்திர வேட்கை

அனுபவம் எவ்வளவு ஆழமானது என்பதை ஒரு தமிழ்ச் சிநேகிதி, வன்னி விசுவமடுவில், தனது தோட்டத்திற்குள் நின்ற செழுமையான மாமரத்தின் குளிர்மையான நிழலில் உரையாடிக் கொண்டிருந்தபோது என்னை "வெள்ளைக்காரத் தமிழ்ப்பெண்" என்று எடுத்த எடுப்பில் கூறியதிலிருந்து உணரலாம்.

இருபது ஆண்டுகளுக்கு முன் நான் பாலசிங்கத்தை சந்தித்து நேசிக்கத் தொடங்கியபோது, எனது வாழ்க்கை இத்தகைய திருப்பங்களைச் சந்திக்கும் என்று நான் நினைத்தே பார்க்கவில்லை. எனது சமூகக் கலாச்சார சூழலில் இருந்து முற்றிலும் முரண்பாடான சூழலைச்சேர்ந்த ஒருவரைத் திருமணம் செய்கின்றேன் என்ற அந்த ஒன்றே, எமது திருமணம் மறக்கமுடியாதபடி ஒரு வித்தியாசமான திருமணமாக அமைந்தது. அதெப்படி இரண்டு வெவ்வேறு கலாச்சாரங்களில் இருந்து வரும் இரண்டு பேர், திருமணம் என்ற பொதுத்தளத்தில் சந்திக்கக் கூடுமாக இருக்கின்றது? அது வெறும் உடற் கவர்ச்சியாக இருந்திருக்க முடியாது. கவர்ச்சியேதான் என்றால் எமது அந்த உறவு அவ்வளவு ஆழமாகவும், நெஞ்சார்ந்தமாகவும் இருந்திருக்க முடியாது. அப்படியென்றால் எம்மைப் பிணைத்தது எது? இத்தகைய ஒரு அசாதாரண பாதையில் என்னை அவரோடு இட்டுச் சென்றது எது?

பல ஆண்டுகளுக்கு முன்னதாக நான் மணம் புரிந்த பாலசிங்கம் இப்போதும் சாராம்சத்தில் அதே மனிதராகவே இருக்கின்றார். ஆனால் காலமும் சூழலும் அவரை இன்றைய நிலையிலுள்ள சிந்தனையாளராகவும், ஆளுமையாளராகவும் ஆக்கியிருக்கிறது. கால்நூற்றாண்டுக்கு முன் நான் மணம்புரிந்த மனிதரை ஒரு ஆன்மீகவாதி என்றுதான் கூறுவேன். ஆன்மீகவாதி என்று கூறும்போது, நிறுவனமாகிவிட்ட சமயங்களையும், நிலைபெற்ற சடங்குகளையும், சம்பிரதாயங்களையும் கடைப்பிடிப்பவராக நான் அவரைக் குறிப்பிடவில்லை. மாறாக நேர்மை, நற்சீலம், மனிதநேயம் ஆகியவை பொதிந்த மனிதராக அவர் இருந்தார் என்றே கூறுவேன்.

நாம் முதலில் சந்தித்தபோது பாலாவுக்கு வயது முப்பத்தியாறு. அப்போது கீழைத்தேய தத்துவ சிந்தனைகளை, குறிப்பாக, இந்திய வேதாந்த தத்துவங்களை அவர் நிறையவே படித்திருந்தார். புத்தரின் போதனைகளில் அவருக்குத் தனியான நாட்டம் இருந்தது. உண்மையில் இளவயதிலேயே பௌத்த தத்துவம் அவரை வெகுவாகக் கவர்ந்ததால் இலங்கையில் பௌத்த கல்விமான்களைத் தரிசித்து விளக்கங்களையும், தத்துவத்தெளிவையும் பெற்றிருக்கிறார். பொது மேடைகளில் பௌத்த உரைகளைக் கூட நிகழ்த்தியிருக்கிறார்.

உண்மையான பௌத்த தத்துவத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்ததால் சிறீலங்காவில் நிலவிய பௌத்தத்தில் அவர் நம்பிக்கை இழந்தார். இனவாத மற்றும் குறுகிய தேசியவாதக் கோட்பாடுகளால் அது களங்கப்பட்டுவிட்டதாக அவர் கருதினார். ஆயினும் தனிப்பட்ட முறையில் அவருக்கு ஏற்பட்ட பேரிழப்பே அவருக்குள் அளப்பரிய சிந்தனா சோதனையை ஏற்படுத்தியது. தம்மையும், தாம் தீவிரமாகக் கடைப்பிடித்த தத்துவங்களையும் தாமே தமக்குள் கேள்விக்குரியவை•ஆக்கினார். அவருடைய முதல் மனைவி கடும் சிறுநீரக நோயால் பீடிக்கப்பட்டு உயிரைத் தக்க வைக்க வெளி இணைப்புக் குருதிச் சுத்திகரிப்பு இயந்திரத்தில் தங்கியிருக்க வேண்டிய அறுதிநிலை எற்பட்டபோது, தர்மம் பற்றியும், அறநெறிபற்றியும் பாலா கொண்டிருந்த நிலைப்பாடு சோதனைக்கு உள்ளாகியது. கடும் நோயினால் பீடிக்கப்பட்டு, மரணத்தின் விளிம்பில் ஊசலாடிக் கொண்டிருந்த தமது அழகிய இளம் மனைவியைக் கண்காணித்துப் பராமரிக்கும்போது மனோரீதியாகவும், உணர்வு ரீதியாகவும் அவருக்கு ஏற்பட்ட அழுத்தங்கள் மனிதம் பற்றியும், மானுட உலகம்பற்றியும் அவருடைய உள்ளார்ந்த தத்துவ சுயதேடலை மேலும் ஆழமாக்கியது. உடல் நோயின் விளைவாக மானுட சரீரத்தில் ஏற்படும் சீரழிவும் மாற்றமும், அத்தோடு நித்தமும் மரணத்தை எதிர்கொள்ளவேண்டிய நிலையும் மானுட இருப்பின் அர்த்தம் பற்றி அவரை ஆழமாகச் சிந்திக்க வைத்தன. தனித்துவம் வாய்ந்த அனுபவங்களையும் அவர் பெற்றார். அவை தந்த சிந்தனைத் தெளிவு அவரை ஒரு மதியூகியாக்கின. யதார்த்த உலகிலே அவர் ஒரு பகுத்தறிவுவாதியாகக் காலூன்றவும் வழிகோலின.

ஒருபுறம் கடுமையான பொருளாதாரப் பிரச்சினை. மறுபுறம் மரணத்தின் பிடியில் சிக்கியிருக்கும் அவருடைய துணைவியின் மன உளைச்சலுக்கும், உடல்பராமரிப்புத் தேவைக்கும், ஈடுகொடுக்கும் பொறுப்பு. இவற்றுடன் போராடிய இந்தக் கட்டம், பாலாவின் வாழ்வில் ஒரு தார்மீகச் சவாலாக அமைந்த காலம்; அவருடைய ஆளுமையின் திண்மையே சோதனைக்கு உள்ளான காலம் இது. அவருடைய வாழ்க்கையின் இந்த அத்தியாயத்தில் அவர் முகம்கொடுத்த சமூக, பொருளாதாரப் பிரச்சனைகள் அவருடையை சகிப்புத் தன்மையின் எல்லைக்கு, அவரை இழுத்துச் சென்றிருந்தன. தர்மம், நல்லறம் ஆகியவை, வெறும் நூல்களிலிருந்து அகழ்ந்து எடுக்கப்படும் வார்த்தைகள் அல்ல. அன்றி வலிந்து ஊட்டப்படுபவனவும் அல்ல. மாறாக, அவை எமது உயிர்வாழ்வின் மூலாதாரமாக எழுபவை.





எண்ணமும், செயலும் ஒத்திசைவு கண்ட திறனாற்றல் அவை என்பதை அவர் பட்டறிந்து, உணர்ந்து தேறினார். அவருடைய மனைவி, ஐந்து ஆண்டு காலம் உயிரைத் தக்க வைக்கும் வெளியிணைக் குருதிச் சுத்திகரிப்பு இயந்திரத்தில், கூடுதலான காலம் வீட்டிலேயே அமுந்திய பின், காலமானார். தாங்கொணா மன நெருக்குவாரத்திற்கு பாலா உள்ளான இந்தக் காலகட்டத்திலேதான், தமது ஆயுட் கண்டமும் இதுவே என்ற கொடுமை அவர் முகத்தில் உறைத்தது. நீரிழிவு நோய் பாலாவுக்கு இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. இதன் பின்னர், சுய தேடல்களின் விளைவாகவும், உள்ளார்ந்த புலன்களின் கூர்மைப்படுத்தப்படுத்தப்பட்ட ஒரு பிரதிபலிப்பாகவும் முகிழ்ந்து, புடமிட்ட ஒரு புதுமைப் பிறவியாக அவர் தேறினார். இதன் விளைவாக ஆன்மீகர் என்று வர்ணிக்கக்கூடியவராக அவர் மாறினார். இத்தகைய ஓர் ஆன்மீகரையே எனது துணைவராகப் பெற வேண்டும் என்ற தேடலில் நான் ஈடுபட்டுக் கொண்டிருந்தேன். ஆனாலும் நான் சந்தித்த அந்த மனிதரை, என் கணவராகிவிட்ட அந்த மனிதரை வெறும் வார்த்தைகளால் வர்ணிக்க விரும்பும் நான் அவரை ஒரு "உண்மையான மனிதப் பிறவி" என்பேன். நான் மணக்க இருப்பவரிடம் என்னென்ன குணாம்சங்கள் இருக்க வேண்டும் என்று காத்திருந்தேனோ, அவை எல்லாம் பாலாவிடம் பொதிந்து இருந்தன. முதிர்ச்சி; விவேகம்; மனோ பலம்; இனி, இவற்றிலும் மோலாய் பரிவு. விவேகம் எனும் போது ஒரு புத்திஜீவியை நான் எதிர்பார்க்கவில்லை. மனோபலம் எனும் போது ஒரு பயில்வானாகவோ, சண்டியனாகவோ இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கவில்லை. நான் எதிர்பார்த்த சீலங்களோடு உள்ள அந்த அசாதாரண மனிதரைச் சந்திக்க நம்பிக்கையோடு காத்திருந்தேன். அவர் அடக்கமுள்ளவராக இருக்கவேண்டும்; ஆனால் கோழையாக இருக்கக் கூடாது. சாதாரணமானவராக இருக்க வேண்டும்; ஆனால் அவரில் ஆழம் இருக்க வேண்டும். உறுதியான கொள்கைப் பிடிப்பு இருக்க வேண்டும்; ஆனால் மமதை இருக்கக்கூடாது. தயாள குணமும், பெருமையும் இருக்க வேண்டும்; ஆனால் அகங்காரம் கூடாது. இனி சுயநலவாதியாகவோ, முன்யோசனையற்றவராகவோ இருக்கக்கூடாது. இந்தப் புருஷ லட்சணங்கள் பொருந்தியவரைத்தான் பல ஆண்டுகளுக்கு முன் சந்தித்தேன். அவரை முதலில் சந்தித்த ஓரிரு வாரங்களிலேயே பாலாதான் என்னுடையவர் என்பதைப் புரிந்து கொண்டேன். சாதாரண அன்றாட முறைகள் தொடர்பாக, இனி பணம் சேமிப்பது தொடர்பாக, சாதாரண ஆட்கள் பொதுவாகப் புரியும் காரியங்களில் அவர் அக்கறை இல்லாமல் இருந்ததற்கு - அவருடைய ஆன்மீகப் பண்புகளே காரணமாக

இருந்திருக்க வேண்டும். பொருளிய பாதுகாப்பு மட்டில் அவர் பற்று இல்லாமல் இருந்ததால், கையில் காசு இல்லாக் கையறு நிலைக்கு, இயல்பாகவே நாம் தள்ளப்படவும் நேர்ந்தது. ஆனால் எம்மிடமிருந்த சொற்பப் பணத்தோடு பாலா எப்படியோ சமாளித்தார். இல்லை! நிலைமையைச் சமாளித்தோம் எனலாம். அன்றாடச் சமாளிப்பேதான். ஆனால் ஒருவரை ஒருவர் நேசித்த நிலையில் மகிழ்ச்சியோடு வாழ்ந்தோம்.

வாழ்வு, சத்தியம் ஆகியவை தமது மனதிலே தோற்றுவித்த கேள்விகளுக்கு விடைதேடும் முயற்சியில், மேற்குலக தத்துவ மரபுகள் பொதிந்த பெருந்தொகை நூல்களை பாலா படித்தார். அவருடைய ஆன்மீக ஈடுபாட்டைச் சமநிலைப்படுத்திய ஒரு முக்கிய செல்வாக்காக மாக்சியமும், நவமாக்சியமும் அமைந்தன. பாலா நன்கு கற்றுத் தேர்ந்த துறைகளே அவை. ஆனால், இவை தொடர்பாக பிரத்தியேகக் கருத்துகளையும், விமர்சனங்களையும் அவர் கொண்டிருந்தார். தந்தக் கோபுர அறிவுஜீவிகளின் தத்துவங்களை அவர் நிராகரித்தார். அவ்வாறே, புரிந்துகொள்ள முடியாத பூடகமான கருத்துருவங்களையும் மனித ஆற்றல்களால் சாதிக்க இயலாத விடயங்கள் பற்றிக் கூறும் சிந்தனை வடிவங்களையும் அவர் நிராகரித்தார். மாறாக தத்துவம் உலகை மாற்றியமைக்க வேண்டும் என்ற மாக்சிய தத்துவ சிந்தனைக் கீற்று, அவருக்குப் பிடித்திருந்தது.

மானுட சமுதாயத்தை ஓர் உயர் நிலைக்கு முன்னெடுத்துச் செல்ல வேண்டும் என்று கூறும் இந்த எதிரும், புதிருமான தத்துவ எண்ணக் கருக்களின் இடைப்பட்ட ஒரு நுண்ணிய பாதையை பாலா கடைப்பிடித்தார் என்றே கூறுவேன். ஒரு புறம் மானுட சமுதாயத்தின் அவசிய தேவையான தனியாளின் அகநிலை மாற்றத்தை முதன்மைப்படுத்தும் கீழைத்தேய தத்துவ ஞானம். மறுபுறம் சோசலிச சிந்தனை; கூட்டுமுயற்சி மூலம் அரசியற் செயற்பாட்டை இது வலியுறுத்துவது, மனித வாழ்க்கையில் உண்மையான நிலைமாற்றத்திற்கு வழிசமைத்துக் கொடுக்கும் மூலபலத்தைக் கொண்டது இது. புரட்சிகர அரசியலில் நாம் ஈடுபடுவதற்கு முந்திய ஓர் காலகட்டத்தில், மானுட மேம்பாட்டை வலியுறுத்தும் அகநிலை, புறநிலை சார்ந்த தத்துவ தரிசனங்களைப் புணர்த்திப் பார்க்க பாலா முயன்றார். இதன் வெளிப்பாடே அவருடைய கலாநிதி ஆய்வு முயற்சி. இதில் மாக்சின் சமூக தத்துவத்தையும் சிக்மண்ட் பிராய்டின் உளவியல் தரிசனத்தையும் இணைத்து இழைக்க முயன்றார். ஆனால் அவருடைய இனத்தின் தேசிய விடுதலைப் போராட்டத்தின் தேவைகள் அவருடைய





ஆய்விலும் கற்பித்தலிலும் அடிக்கடி தலையிட்டுக் கொண்டிருந்தன. அந்தத் தருணத்திலேயே, ஒன்றில் அறிவியல் ஆய்வு வாழ்க்கையை அல்லது புரட்சிப்போக்கு அரசியலை அவர் தேர்ந்து எடுக்க வேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏற்பட்டது. தமது மக்களின் போராட்டம் நியாயமானது என்றும் அதற்கு ஊழியம் புரிவதே தர்மம் என்றும் அவர் கருதியதால், புரட்சிப் போக்கு அரசியலையே அவர் தேர்ந்தெடுத்தார்.

முற்போக்கும், முதிர்ச்சியும் பொதிந்த இத்தகையை ஆளுமையாளரையே நான் நேசித்தேன். என்னிடமிருந்த முதிர்ச்சியின்மை, முழுமையின்மை ஆகியவற்றைக் குறை நிரப்பவும், பாலாவின் பக்குவம் எனக்கு உதவியது. பின்னோக்கிப் பார்க்கும்போது இப்போது ஒன்றைக் காண்கின்றேன். எனது நுண்ணிய உள் உணர்வுகளையும், மனோ நிலையையும் பொருத்தமான வார்த்தைகளில் வடிக்க பாலா உதவினார் என்பேன். அவருடைய ஆழ்ந்த அறிவும், நேரடி அனுபவமும், உளப் பகுப்பாய்வுத் திறனறிவும் எனக்குள்ளே தடைகளால் அமுக்கப்பட்டு, வெளிப்படாதிருந்த உணர்வுகளைச் சீண்டி, அறிவு வடிவம் பெற உதவின. காலப்போக்கில், எனது வாழ்வில் முதற்தட வையாக, எனக்குள்ளே கரைந்து உறைந்திருந்த ஒரு இருண்ட பக்கத்துக்கு வெளிச்சம்போட்டுக் காட்டவும் சமூக வாழ்வில் முழு ஈடுபாட்டோடு, ஆழமாக ஈடுபடவும் என்னால் இயலுமாயிற்று. மொழியை நுட்பமாக வெளிப்படுத்தும் ஆற்றலையும் பெற்றேன். இதனால் எனது எழுத்து, எனது உரையாடல், எனது உறவாடும் திறன் ஆகியவற்றின் பரி-மாணங்களை விரிவுபடுத்த முடிந்தது. இதன் காரணமாக பாலாவுடன் எனக்கு ஏற்பட்ட உறவு மேலும் ஆழம் அடைந்தது. எனக்குள் மகிழ்ச்சியையும், திருப்தியையும் ஏற்படுத்தியது. அவர் அருகே இருக்க வேண்டும் என்ற ஒன்றே தேவைபோல இருந்தது. முன்பெல்லாம் அமைதி யற்ற, திருப்தியற்ற ஒருவராக இருந்தேன். முன்பொருகாலம், இந்த யதார்த்த உலகின் பண்புகளான பண ஆசை, பொருள் ஆசை ஆகியவற்றில் ஊறிப்போயிருந்தேன். இப்போது இன்னொரு மனிதப் பிறவியுடன் நெருக்கமாக நீடித்த உறவு முதன்மை பெறத்தொடங்கிய போது, அவையெல்லாம் மங்கத் தொடங்கின.

எங்கள் திருமணம் 1978 செப்ரெம்பர் 1ம் திகதி இடம்பெற்றது. எளிமையான சிக்கல் இல்லாத ஐந்து நிமிடச் சடங்கு. தெற்கு இலண்டன் பிறிக்ஸ்டன் நகர திருமணப் பதிவாளர் பணிமனையில், அரச அதிகாரி ஒருவர் தலைமையில் நடந்த சடங்கு. இந்தச் சமூகக் கடப்பாடு கூட எண்ணியிருந்ததை விட ஒரு வாரம் பிந்தியே நடந்தது. திருமணம் செய்யத் தீர்மானித்து, மறுநாளே சம்பிரதாயங்களை நிறைவேற்றலாம்

என்று முடிவு செய்தபோது, இருபத்திநான்கு மணிநேர கால அவகாசத்திற்கென குறித்த பணம் எம்மிடமில்லை. ஆனபடியால் செய்யக்கூடிய சிறந்த வழி, ஒரு வார அறிவித்தல் கொடுத்து, காத்திருப்பதுதான்.

நெருங்கிய நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் தவிர, வேறு எவருக்கும் நாம் எமது திருமணம் பற்றித் தெரிவிக்கவில்லை. என்னைப் பொறுத்த வரையில் திருமணம் என்பது நம் இருவருக்கும் இடையிலான தனிப்பட்ட ஒப்பந்தம். எப்படியாயினும் இரகசியம் எதுவும் நீண்டகாலம் தாக்குப் பிடிக்காத ஒரு சமூகத்தில், விஷயம் வெளியே கசிய மாலையிலேயே கூட்டம் சேர்ந்தது. உறைப்பான ஆட்டிறைச்சிக் கறியோடு கல்யாணச் சாப்பாடு. விஸ்கியும் தண்ணீராக ஓடியது. ஆட்டமும் குதிபோட்டது. என்னுடைய கல்யாண ஆடை, ஒரு மண்ணிற கொட்றோய் பாவாடை, வண்ணச் சட்டை. சடங்குக்கு இரண்டு மணி முன்னதாக ஓடிப்போய் வாங்கியவை. எப்படியோ இந்தத் திருமணத்தில் எனது ஆன்ம பங்காளனுடன் இணைந்து கொள்ள நான் கொடுத்து வைத்தவள் என்ற திருப்தி. எமது உறவில் ஏற்படுத்திய தவிர்க்கமுடியாத உரசல்களையும், இந்த உறவுதான் சுமூகப்படுத்தியிருக்க வேண்டும்.

பாலசிங்கத்தைத் திருமணம்செய்வது என்பது ஒன்று. ஒரு புரட்சிப் போராட்டத்தில் சம்பந்தப்படுவது என்பது வேறொன்று. திருமணத்தின் பின் எனது உள்நோக்கம் வேறொன்றாக இருந்திருந்தால், பாலாவைத் திசை திருப்பி, அவரை வேறொரு பக்கம் நான் கவர்ந்து சென்றிருக்கலாம். ஆனால் நான் அப்படிச் செய்யவில்லை. அரசியற் பாதையையும், தமிழ் மக்களின் போராட்ட ஈடுபாட்டையும் நான் தேர்ந்தெடுத்ததன் காரணம் என்ன? எமது உறவின் தொடக்க நிலையில், காத்திரமான ஓர் உலகை உறுதிப்படுத்துவதில் அல்லது அதில் தளம்பாமல் இருப்பதில் பாலா உதவினார் என்பது உண்மையே. ஆனால் (பிசிறல் இல்லாமல் நிரந்தரமாகக் கருத்துகளைப் பொறிக்கக்கூடிய வெறும் எழுது பலகையாக) ஆணி அடிக்கக்கூடிய வெறும் பசுமரமாக நான் இருந்தேன் என்பதை என்றுமே ஒப்புக் கொள்ளமாட்டேன்.

அவ்வாறேதான் இலண்டனிலிருந்து இந்தியாவுக்கோ, சிறீலங்காவுக்கோ எனக்குப் புரியாத சூழ்நிலையில் நான் தாவிக் குதிக்கவும் இல்லை. காதலனது யாழின் நரம்புகளிலிருந்து சுரக்கும் இசைக்கு நடனமாடும் மடமாதாக நடக்கவுமில்லை. எடுப்பார் கைப்பிள்ளையாகவோ, இங்கும் அங்கும் அலையும் சிந்தை உடையவளாகவோ இருக்கவுமில்லை. தமிழ் மக்களின் அரசியலிலும், விடுதலைப் போராட்டத்திலும் எனது ஈடுபாடு என்பது ஒரு சிந்தனா





வளர்ச்சியாகும்; உணர்ச்சி விருத்தியாகும்; கருத்து, சிந்தனை ஆகியவற்றின் படிமாற்றமாகும். சுட்டிப்பாகக் கூறினால் ஒரு தனிப்பட்ட ஆளுமை வளர்ச்சிப் போக்கு எனலாம். அவுஸ்திரேலியக் கரைகளில் எனது பாதுகாப்பான வாழ்க்கைக் கூண்டை விட்டு, விரிந்த உலகமான இங்கிலாந்துக்கு உள்ளும், ஐரோப்பாவுக்கு உள்ளும் நான் நுழைந்த போது எனது ஆளுமையும் நிச்சயமாக முகிழ்க்கத் தொடங்கியிருக்க வேண்டும். அல்லது என்னைப்பொறுத்த வரையில் எனது குறுகிய மனப்பான்மைக் கவசம் தகர்க்கப்படத் தொடங்கியபோது அது நேர்ந்திருக்க வேண்டும். இங்கிலாந்துக்கே உரித்தான விசேட பண்பாக அனைத்துலக மானுட சமூகங்கள் அங்கு ஒன்றுகூடி வாழ்கின்றன. இந்த அகில மனித வர்க்கக் கலவையுடன் ஊடாடியபோது, சமுகமயமாக்கலினால் நான் பெற்ற எனது சுயமே சவாலுக்கு ஆளாகியது. புதிய பார்வைகள், புதிய சிந்தனைகள், புதிய வாழ்க்கை முறைகள் என்னை ஈர்த்தன. இறுதியில் உலகம் பற்றிய எனது பார்வையும் சிந்தனையும் அடிப்படையாக மாற்றம் கண்டன. இதற்கு எனது கணவரும் வடிகால் அமைத்தார். மரபுத் தகர்ப்பில் நங்கூர மனவுறுதியை அவர் தந்தார். நான் சிந்திக்கவோ, எதிர்பார்க்கவோ முடியாத அளவுக்கு, எனது வாழ்வைச் செழுமைப்படுத்திச் செல்லக்கூடிய வகையில் தளைகள் இல்லாத ஒரு உணர்ச்சிப் பாதுகாப்பை அவர் தந்தார்.

## அவுஸ்திரேலியாவில் எனது மூலவேர்கள்

1950ம் ஆண்டு, ஜனவரி 30, இரவு. அவுஸ்திரேலிய வரகல் நகரத்தின் மருத்துவமனை. எனது அன்னை, தான் பெற்றெடுத்த தனது மூத்த பெண் குழந்தையை அங்கே தொட்டிலில் இட்டு ஒரு தாயின் கனிவோடு என்னைக் குனிந்து பார்த்தார். நான் மகிழ்ச்சியாகவும் ஆரோக்கியமாகவும் அமைதியான நல்வாழ்க்கை வாழவேண்டும் என்றே அந்த நேரம் நெஞ்சார அவர் விரும்பியிருப்பார். நான் ஒரு சின்னஞ் சிறு மலரை நினைவூட்டுவதாக என் அன்னை கூறுவார். தனது சின்னஞ்சிறிய மலர் இவ்வளவு அரிய அனுபவம் நிறைந்த வாழ்வைத் தேர்ந்தெடுக்கும் என்று அவர் அன்று நினைத்தே இருக்கமாட்டார். எனது தந்தைகூட, தனது மகள், ஒரு முற்றிலும் வித்தியாசமான வாழ்வைத் தேர்ந்தெடுப்பாள் என்று எதிர்பார்த்திருக்கமாட்டார்.

விக்ரோறியா மாநிலத்தின் லத்ரோப் பள்ளத்தாக்கின் நுழைவாயிலில் மிக அழகிய மலைக் குன்றுகளால் சூழப்பட்டு

ஒய்யாரமாக அமைந்திருக்கும் ஒரு சிறிய நகரமே வரகல். 50 ஆண்டுகளுக்கு முன் என் பெற்றோர் திருமணம் புரிந்து கொண்ட தருணத்தில், என் தந்தைக்கு ரெயில்வேயில் வேலை கிடைத்தது. ஆகவே விக்ரோறியா மாநிலத் தங்க வயல் நகரமான பெண்டிகோவில் இருந்து அவர்கள் வரகலுக்கு குடிபெயர்ந்தார்கள். என்னை விட வேறு மூன்று பிள்ளைகளைப் பெற்றார்கள். அண்ணா பிறென்ற்; தம்பி டேவிட்; தங்கை லின்லி.

இரண்டாவது உலகப் போரை அடுத்து வந்த போர் மீட்சிப் பொருளாதாரம் நாட்டில் நடைமுறையில் இருந்த காலத்திலேயே எனது பெற்றோர் திருமணம் செய்திருந்தார்கள். அச் சூழலில் எனது தந்தையின் வருவாயோடு, நான்கு பிள்ளைகளை வளர்ப்பதிலும், வீட்டுச் செலவுகளைச் சமாளிப்பதிலும், திருமணமான புதிதில் எனது பெற்றோர் - அம்மா பெற்றி புளோரன்ஸ், அப்பா அல்பேட் புரூஸ் வில்பி - இரண்டு பேருமே சில ஆண்டுகள் அவதிப்பட்டார்கள். அப்பாவுக்கு இரண்டு வாரங்களுக்கு ஒரு தடவையே சம்பளம். அதில் வளர்ந்து கொண்டிருக்கும் நான்கு பிள்ளைகளின் தேவைகளை நிறைவேற்றுவதும் ஆசைப்படுவதை வாங்கிக் கொடுப்பதும் என் பெற்றோர்க்கு எளிதாக இருக்கவில்லை. ஆனாலும் விரும்பியது கிடைக்காமல் எப்போதாவது நான் இருந்ததாக எனக்கு நினைவில்லை. வெளி உதவி இல்லாமலே தங்களது பிள்ளைகளின் தேவைகளை நிறைவேற்ற வேண்டும் என்ற உயர் வைராக்கியம் என் பெற்றோர் இருவரிடமும் இருந்தது. ஆகவே தங்கள் பொறுப்பைப் பூர்த்தி செய்ய அவர்கள் கடுமையாக உழைத்தார்கள். வீட்டுப் பொருளாதாரச் சுதந்திரம் ஒரு குடும்பத்தின் அணிகலன் என்று கருதப்பட்டது. இதற்காகத் தமது அறுபது வயதில் ஓய்வு பெறும்வரை எனது தந்தை நாள்தோறும் கடுமையாக உழைத்தார். ஒரு புறம் அப்பா உழைத்து, வருவாயைக் கிரமமாகக் கொண்டு வர, மறுபுறம் அம்மா வீட்டு நிர்வாகத்தைக் கவனித்துக் கொண்டார்; சிக்கனமாகச் செலவு செய்து, கடன் இல்லாமலும் உணவுத் தட்டுப்பாடு இல்லாமலும் பார்த்துக் கொண்டார். பின்னர், பிள்ளைகள் வளர்ந்து பள்ளி செல்லத் தொடங்கிய பின்னர் தான், அம்மா நகரத்துக் கடை ஒன்றில் உதவியாளராகச் சேர்ந்து, குடும்ப வருமானத்தை அதிகரித்தார்.

தாம்பத்திய வாழ்க்கையிலும் சரி, பிள்ளைகளுக்கு நற்பண்புகளை ஊட்டுவதிலும் சரி, எனது பெற்றோரிடையே பொது இணக்கம் நிலவியது. அதே சமயம், இரண்டு பேருக்கும் தனித் தனிப் பண்புகளும் இலட்சியங்களும் கூட இருந்தன. அப்பா ரெயில்வே ஊழியராகவும் உறுதியான தொழிற்சங்க வாதியாகவும் இருந்ததால் அம்மாவைவிட அரசியல் ஈடுபாடு உடையவராக இருந்தார். ஒடுக்கப்பட்டவர் மட்டில் அப்பாவுக்கு ஆழ்ந்த அனுதாபம் இருந்தது. தொழிலாளர் உரிமைகள் தொடர்பாக அவர் கொண்டிருந்த உறுதியான ஈடுபாடு அவருடைய தொழிற்கட்சி அரசியலில் பிரதிபலித்தது. அப்பா அரசியலின் பக்கம் சாய, அம்மாவின் ஈடுபாடு சமூகம் மற்றும் வாழ்வின் தத்துவாம்சங்கள் பற்றி இருந்தது. வாழ்வின் அர்த்தத்தையும் மானுட உலகையும் அறிந்து கொள்வதிலும் அதன் தன்மைகளைப் புரிந்துகொள்வதிலும் அம்மா ஆழ்ந்த அக்கறை காட்டினார். தொழிலாளர் நலன்களிலும் அவர்களுடைய அரசியல் எதிர்காலத்திலும் அப்பா தம்மை அர்ப்பணிக்க, தனி மனித நற்பண்புகள், சீலங்கள், வாழ்க்கையின் முழுமை ஆகியவற்றில் அம்மா ஆழ்ந்தார். இந்த இரண்டு வெவ்வேறு ஆளுமைகளின் சங்கமமே என் மனதில் பதிந்து, நான் இன்று ஈடுபட்டிருக்கும் சூழலுக்கும் திசைக்கும் என்னை ஒழுக்காற்றுப் படுத்தியிருக்க வேண்டும். ஆனால் குடும்பத்தில் ஒரு பிள்ளை மட்டும் ஏனைய பிள்ளைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்ட வாழ்க்கை நெறியைக் கடைப்பிடிப்பது என்பதை விளங்குவது கூடக் கடினமானதே. அநேகமாக, எனது பெற்றோரின் வெவ்வேறு திசையிலான ஈடுபாடுகளின் புணர்ச்சியே எனது இன்றைய ஆளுமையின் உருவாக்கம், வளர்ச்சி ஆகியவற்றின் தளமாக அமைந்திருக்க வேண்டும். ஏனைய எனது குடும்ப உறுப்பினர்களின் வாழ்க்கையை விட, எனது வாழ்க்கைப் பாதை, முற்றிலும் மாறுபட்டதாகவும் பிரச்சனைக்கு உரியதாகவும் அமைந்த போதிலும், அதை ஆதரிப்பதற்கு எனது பெற்றோர் என்றுமே தயங்கிய-தில்லை. அத்துடன் தமிழ் மக்களின் போராட்டத்தில் எனது ஈடுபாட்டை அனுதாபத்தோடு அவர்கள் புரிந்துகொண்டதை வியத்தகு வகையில் உணர்த்தினார்கள்.

எனது தொடக்கப் பள்ளி, உள்ளூரிலேயே. பிரமிப்புத் தரும் தையும் நான் அங்கு சாதிக்கவில்லை. அதன் பின் நகரத்து இரண்டாம் நிலைப் பள்ளி. அங்கு ஓ லெவல் - சாதாரண தரம் வரை படிப்பு. மூன்றாம் நிலைக் கல்வி வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. அவுஸ்திரேலியாவில் நாளிலே சாமானியர்களுக்குப் பல்கலைக்கழகங்களில் வாய்ப்புக் கிடைப்பதில்லை. பல்கலைக்கழகக் கல்வி பெறுவதானால், ஒன்றில் பணக்காரராக இருக்க வேண்டும் அல்லது புலமைப் பரிசில் பெறத்தக்க திறமைசாலிகளாக இருக்க வேண்டும். இந்த இரண்டில் எதிலும் நான் தியில்லை. ஆனால் சிறுவயதில் இருந்தே நான் இலட்சியக் கனவு கண்டுகொண்டிருந்த துறை ஒன்றுக்குள் சென்று, தாகம் தணிக்கத் தீர்மானித்தேன். மருத்துவத் தாதித் தொழிலில் சேர்ந்து கொண்டேன்.

பின்னோக்கிப் பார்க்கும்போது, அதுவும் என்னை நானே நன்றாகப் புரிந்து கொள்ளக் கிடைத்த பல ஆண்டுகால அனுபவத்தோடு ஒன்றென்பதை இப்போது உணர்கின்றேன். மருத்துவத் தாதித் தொழில், என் வாழ்வு முழுவதும் என்னில் உருவாகிக் கொண்டிருந்த என் ஆளுமையின் இரண்டு கூறுகளைப் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. எந்த வடிவிலே துயரத்தைக் கண்டாலும் அதன் மட்டில் அனுதாபம் கொள்வதும் ஓடிச் சென்று என்னை அதனோடு இணைத்துக் கொள்வதும், ஒரு கூறு. மனிதாபிமான உணர்வுகள் மாறாமலேயே தொடர்ந்தும் வாழ வேண்டும் என்ற அவாவுடன் இருப்பது இரண்டாவது கூறு. மருத்துவத் தாதித் தொழிலில் ஈடுபட்டபோது, ஒரு கரிசனையான தொழில் பார்க்க வேண்டும் என்ற எனது வேணவாவும் நிறைவேறியது. அதைவிட முக்கியம், சிறிய நகர வாழ்க்கையிலிருந்து ஒரு பெரிய நகரத்துக்குள், ஒரு புதிய உலகத்துக்குள் சென்றேன். தாதியர் கல்வி என்பது, ஏதோ பெரியது என்று இல்லாவிட்டாலும், இரண்டாம் நிலைக் கல்வியால் பெற்ற அறிவோடு, இது மேலதிக அறிவாகச் சேர்ந்தது. எப்படியாயினும், எனக்கு மீண்டும் ஒரு வாய்ப்புக் கிடைத்தால், எனது இரண்டு வேணவாக்களையும் அடைய, தாதியர் தொழிலை மீள் நாடமாட்டேன். அவ்வளவு தூரம் ஏவலுக்கு பணியும் தொழில் அல்லாத வேறு தொழிலையே நாடுவேன். ஒன்றில் சட்டம் படிப்பேன், அல்லது புவி, மற்றும் அதன் உயிரினம் தொடர்பான இயற்கை அறிவியல் கற்பேன்.

மருத்துவத் தாதியருக்கான மூன்று ஆண்டுக் கடும் பயிற்சி பெற்ற பின், ஒரு தொழில் தகைமை கிடைத்தது. எனது சாதனையில் பெருமையும் மகிழ்ச்சியும் அடைந்தேன். ஓராண்டு மருத்துவிச்சி பயிற்சியும் பெற்றேன். இது எனக்கு இரண்டாவது மருத்துவத் தொண்டுத் தகைமையைத் தந்தது. அதாவது, தொழில் ரீதியாகவும் தனிப்பட்ட முறையிலும் ஏற்றம் தந்தது. இருபத்தொரு வயதில் எனக்கு இரண்டு தொழில் தகமைகள். திருமணம் புரியும் நோக்கம் அந்த வேளையில் கிடையாது. இனி, அவுஸ்திரேலியாவில் தங்கி வேறு எதுவும் செய்வதற்கு இல்லை. ஆகவே வெளிநாட்டுப் பயணம் ஒன்றுதான் தவிர்க்க முடியாததும் அன்றைய நாட்டு நடப்பும் ஆகும். எனது நண்பி ஒருவருடன் சிறிது கலந்தாலோசித்த பின், அவுஸ்திரேலியாவை விட்டு வெளியேறத் திட்டமிட்டோம். கையில் எடுத்த பையோடு நாட்டுக்குத் திரும்பாத ஒரு வழிப்பயணச் சீட்டோடு புறப்படுகின்றேன் என்று எனக்கு அன்று தெரியாது. நான் வெளியே காலடி எடுத்து வைத்தநாள் இன்னும் நல்ல ஞாபகம். பிரிவுத் துயரம் பொங்கி வழிந்தது. இன்று கூட, அந்த நினைவு வரும்போது, அன்றைய அதே விம்மல் நெஞ்சினுள்





பொருமுகிறது. அன்று கடும் வெய்யில். ஒரே அவியல். இருபத்தியிரண்டு வயதை நான் எட்டிக்கொண்டிருக்கும் பருவம். எனக்குள் ஒரு ஆற்றாமை உணர்வு. சாப்பிட முடியவில்லை. முதற் தடவையாக நாட்டைவிட்டு வெளியேறும் ஒரு பயணி. உலகின் மறு பக்கத்துக்கே செல்வது போலல்லாமல் வேறொரு உலகத்துக்கே செல்வது போன்ற உணர்வுடனான பிரியாவிடை. விமானத்திலே கூட பின்புறத்திலேயே எனக்கு இருக்கை ஒதுக்கப்பட்டிருந்தது. அதன்படி உணவோ, பானமோ பரிமாறப்படும்போது, கடைசியாகத் தான் எனக்குக் கிடைக்கும். விமானத்தில் ஏறிய மறுகணமே எனது கனத்த உணர்ச்சிகள் எல்லாம் அகன்று, பாரம் கழன்றதுபோல, தோள் இலகுவாக இருந்தது. விமானம் புறப்படு முன்னரே, அகோரப் பசி வயிற்றைப் பிறாண்டியது.

எனது வெளிநாட்டுப் பயணம் எனது வாழ்வில் ஒரு சந்திப் பிரிவாக அமைந்தது. அவுஸ்திரேலியாவை விட்டு வெளியேறிய முப்பது ஆண்டுகளில் ஒரு தடவை மட்டும் நான் அங்கு சென்றிருக்கிறேன். அவுஸ்திரேலியாவிலிருந்து எனது வெளியேற்றம் எனது வாழ்வின் ஒரு அத்தியாயத்தை மூடியது; எனது சிந்தனையிலும் எனது ஈடுபாடுகளிலும் அடிப்படை மாற்றம் ஏற்பட வழிகோலியது. வாழ்க்கை நீரோட்டத்தில் மூழ்கி, உலகின் வெவ்வேறு பாகங்களிலிருந்து வருபவர்களுடன் ஊடாடும்போது, என்னை முழுமையாக ஆட்கொள்ளப்போகும் இந்த அற்புத அனுபவ வேறுபாடுகளிலிருந்து நான் பயன் அடைவதானால், எனது கருத்து, சிந்தனை, நடத்தை ஆகியவற்றுக்கு நேரும் சவால்களுக்கு முகம் கொடுப்பதைத் தவிர வேறு வழியிருக்கவில்லை.

அவுஸ்திரேலியச் சிநேகிதிகள் இருவருடன் லண்டனையும், ஐரோப்பாவையும் சுற்றிப் பார்த்தேன். இந்தப் பயணம் முழுவதிலும் சரி, இங்கிலாந்தில் நான் சீவித்த போதும் சரி, பல ஒஸ்திரேலியர்களுடன் பழகக் கிடைக்காதது என் அதிர்ஷ்டம். இல்லையென்றால் ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு எனது அவுஸ்திரேலியக் கலாச்சாரத்தையும், உறவுகளையும் இடம் பெயர்ப்பதாக மட்டும் இருந்திருக்கும். மாறாக நான் தரிசித்த நாடுகளில் உள்ளூரவர்களோடு கூடி வாழவும் பணியாற்றவும் எனக்கு வாய்ப்புக் கிடைத்தமை பெரிதுதானே? உதாரணமாக றோம் நகரில் ஒரு மேட்டுக் கோபுர மாடிக் கட்டடத்தில் குடியிருந்து கொண்டு தனியார் இருதய மருத்துவமனை ஒன்றில் தாதித் தொழில் பார்த்தோம். பின்னர், மிகச் சொற்ப காலத்துக்கு நான்கு இத்தாலியப் பிள்ளைகளின் செவிலித் தாயாக நான் பணி புரிந்தேன். ஐரோப்பிய நாடுகளில் சீவித்து வேலை பார்த்ததால், அங்கெல்லாம் மக்களின் கலாச்சார, மற்றும் மொழி ஊடாட்ட

வாழ்க்கையில் பங்கு பற்றவும் அதைக் கூர்ந்து அவதானிக்கவும் வாய்ப்புக் கிடைத்தது. உல்லாசப் பயணப் பகுதிகளை மட்டும் தொட்டுத் தொட்டுத் தரிசித்து இந்த ஆழ்ந்த அனுபவத்தைப் பெற்றிருக்க முடியாது. கையில் உள்ள காசு கரைந்துவிட்டால் இங்கிலாந்து திரும்புவோம். அங்கே தொழில் முகவர் மூலம் வசதியான மருத்துவத் தாதிப் பணி புரிந்து கைநிறையச் சம்பாதித்துக் கொண்டு மீண்டும் ஐரோப்பாவின் மத்திய அல்லது வட பகுதிக்கு உலா புறப்பட்டுவிடுவோம். இரண்டு ஆண்டுகள் இந்த மாதிரியான வாழ்வு. அதன் பின் இரண்டு சிநேகிதிகளும் அவுஸ்திரேலியா திரும்ப, நான் எனது வாழ்வை மீளாய்வு செய்ய லண்டனில் தனியே விடப்பட்டேன்.

அந்த நாடோடி வாழ்க்கை சில ஆண்டுகளே நிலைத்தது. ஆனால் எனக்குக் கிடைத்த அந்த அனுபவமே இணையற்றது. உலகமே அதற்கு ஈடாகாது. ஆனாலும் நான் அடுத்த கட்டத்துக்கு சென்றாக வேண்டும் என்று உணரும் காலம் வந்தது. மேலே படிக்கலாமா என்றும் சிந்தித்தேன். ஆனால் எனது தன்னம்பிக்கையின்மை உணர்வு இன்னமும் என்னை விட்டு அகலவில்லை. பட்டப் படிப்பை நாடுவது என்றாலும் "ஏ" லெவல் உயர்தரச் சித்திகள் இல்லை. ஆகவே அது வீண் கனவு என்றே அஞ்சினேன். அதன் பின், ஓராண்டுகால மூலாதார உடல் நலப் பராமரிப்புக் கல்வி கற்கலாமா என்று சிந்தித்தேன். இதுவே எனது வாழ்வின் அடுத்த ஏணிப் படியாக அமைந்தது. உண்மையில் சமூதாயம் சார்ந்த இந்த உடல் நலப் பராமரிப்புப் பயிற்சி எனக்கு வெகுவாகப் பொருந்தி வந்தது. அடிப்படை மருத்துவ அறிவை மருத்துவத் தாதிப் பயிற்சி தந்திருந்தது; அதன்பின் மருத்துவிச்சிப் பயிற்சி மிகத் தேவையானதாக அமைந்தது. ஆனால் எனது ஐரோப்பிய பயணமேதான், பிற மக்கள், பிற கலாச்சாரங்கள், பிற இனங்களில் இருந்து நான் ஒதுங்கி வாழாது இருக்க உதவியது. அதுவேதான், பல இன சமுதாயம் ஒன்றில் சமுதாயப்பணி புரிய மிகத் தகுதி வாய்ந்தவளாக என்னை ஆக்கியது. ஒரு புலமைக் கல்வி கற்பதற்குத் தேவையான "ஏ லெவல்" தகமைகளுக்கு ஈடுகொடுக்கக் கூடியதாக எனக்கு ஏற்கனவே கிடைத்த பயிற்சித் தகைமைகளும் தொழில் அனுபவங்களும் ஏற்றுக் கொள்ளப்பட்டு, சவுத்பாங் பல்கலைக்கழகத்தில் மூலாதார உடல்நல பராமரிப்புக் கல்விக்காக அனுமதிக்கப்பட்டேன். உடல்நல தரிசித்தல் புலமைக்கான ஓராண்டுக் கல்வி இது. மருத்துவ நிலையங்களில் இருந்து வெளியே சென்று, சமுதாயத்துக்குள் நுழைந்து ஆரம்ப உடல் நல பராமரிப்புப் பணியாளராகக் கடமை புரிவதற்குத் தேவையான பயிற்சியையும் ஆற்றலையும் எனக்கு இது ஊட்டியது.





ஒரு பெரிய வட்டகையில் பணி நியமனம் கிடைத்தது. வெவ்வேறு சமூக மட்டங்களும் கலாச்சாரங்களும் உள்ள பகுதி இது. சிக்கலான, அதே நேரம் படிமானமாகாத பல பிரச்சனைகளை நான் எதிர்நோக்க நேர்ந்தது. ஒரு புறம் மூலாதார உடல்நலப் பராமரிப்பு ஏற்பாட்டு அமைப்பு, மறு புறம் நான் தீர்க்க வேண்டிய சமூகப் பிரச்சனைகள். இவற்றிடையே நான் ஊடாட வேண்டிய நிர்ப்பந்தம். இரண்டுமே சுவையான அனுபவங்கள். அதே நேரம் சவாலாகவும் இருந்தன. எனது மனதில் புதிய கேள்விகளையும் அவை தொடுத்தன. அரசின் நிதி தொடர்பான கொள்கைகள் சரியா? முன்னுரிமைகள் சரியா? என்று வினாத் தொடுத்தேன். அரச சேவையின் ஆற்றலின்மையைக் கண்டித்தேன். ஆட்களைப் பற்றி அறிக்கை எழுதி, வகைப்படுத்தி, பட்டியலிடுவது தொடர்பான ஒழுங்குமுறை எதுவும் எனக்குப் பிடிக்கவில்லை. அதாவது நிறுவன அமைப்பின் மீதே நான் கேள்விகள் தொடுத்தேன் எனலாம். சமூக அமைப்புத் தொடர்பான ஆழமான அறிவு பெறுவேன் என்றால், நான் கேட்கும் கேள்விகளுக்கும் சிந்தித்துக் கொண்டிருக்கும் பிரச்சினைகளுக்கும் தெளிவு கிடைக்கும். அதுவே எனக்கு நன்மை பயக்கும் என்றும் நம்பினேன். சமுதாய ஓட்டம் தொடர்பான எனது அறிவு போதாது என்று என் உள் உணர்வு கூறியது. ஆகவே, துணிச்சலைத் திரட்டி, சமூக விஞ்ஞானப் பட்டப்படிப்புக்கு விண்ணப்பிக்கத் தீர்மானித்தேன். சமூகக் கருவறை தொடர்பாக, ஒழுங்கான, நேர்த்தியான அறிவு ஆழத்துக்கு ஈடுகொடுக்கும் ஆற்றல் எனக்கு உண்டா என்ற சந்தேகம் என்னைக் குடைந்தது. ஒரு பட்டப் படிப்புக்கான சவாலை எதிர்கொள்ளும் தகைமை எனக்கு இருப்பதாக சவுத் பாங்க் பல்கலைக் கழகம் கருதி, சமூக விஞ்ஞானப் பட்டப் படிப்புக்காக என்னை ஏற்றுக் கொண்டபோது, மகிழ்ச்சி கரை புரண்டோடியது. அறிவு நிரம்பியதும், அறிவு ஆழத்தோடு நான் புழங்க வேண்டியதுமான முற்றிலும் வேறுபட்ட ஒரு சமூகச் சூழலுக்குள் நான் நுழைவது, எனது இருபத்தியேழு வயதில் எனக்கு ஒரு சவாலே. ஆனாலும் அதற்காக ஆவலோடு காத்திருந்தேன்.

சவுத்பாங்க் பல்கலைக் கழகத்தில் சமூக விஞ்ஞானப் பட்டப்படிப்புப் பாட விதானம், பெரிய பரப்பாக இருந்தது. குறிப்பாக சமூகக் கோட்பாட்டியல் அதிக அறிவு ஆழம் கொண்டிருந்தது. சமூகப் பரிமாணங்களை ஆழ, அகலக் கற்றோம். கைத் தொழில் உலகத்துக்கு முந்திய காலப் பகுதியில் இருந்து, முதலாளித்துவத்துக்குப் பிந்திய காலம் வரையுள்ள பரப்பை அலசினோம். ஆபிரிக்காவில் இருந்து ஆசியா வரையும், பின் அமெரிக்கா வரையும் உள்ள கண்டங்களையும்,

நாடுகளையும், வரலாற்று அடிப்படையில் அளவிட்டோம். தனி மனித உளப் பாங்கிலிருந்து, கிட்லர் கால யேர்மனியின் தேசியவாத பேரெழுச்சிகள் வரை சமூக அமைப்புகளின் கருத்துலகங்களை ஆராய்ந்தோம். விரிவுரையாளர்கள் பல்வேறு அரசியற் கருத்துகளைக் கொண்டவர்களாக இருந்தனர். ஆயினும் இடது சாரி அரசியற் கருத்தைக் கொண்டவர்களே ஆதிக்கம் செலுத்தினர். சுருங்கச் சொன்னால் எனது பட்டப்படிப்பு கணிசமான அளவு அரசியல் அறிவையும், மற்றும் விஞ்ஞானக் கோட்பாட்டுக் கல்வியையும் ஊட்டியது. இது, எனக்குப் பெரிதும் உதவியது. நான் பாலாவைச் சந்தித்ததும் சவுத்பாங்க் பல்கலைக் கழகத்திலேயேதான். அப்போது அவர் தமது கலாநிதி ஆய்வில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார். அத்துடன் பகுதிநேர பல்கலைக்கழக மேற்பார்வை ஆசானாகவும் பணி புரிந்துகொண்டிருந்தார். அப்போது நான் இரண்டாம் ஆண்டில் பயின்றேன். பல்கலைக் கழகத்தில் எமது பழக்கம் உளப்பூர்வக் காதலாக மலர்ந்து திருமணத்தில் கனிந்தது. எனது அறிவாற்றலைக் கூர்மைப்படுத்தவும், சிக்கலான சமூகக் கோட்பாடுகளை நான் புரிந்து கொள்ளவும் பாலா உதவினார். உலகின் வெவ்வேறு பாகங்களிலிருந்து வந்த மாணவர்கள் அங்கே இருந்தார்கள். ஏதோ ஒரு போராட்டத்தை ஆதரிப்பவர்களாக அல்லது அது பற்றி பரப்புரை புரிபவர்களாக அவர்கள் இயங்கினார்கள். இதனால் பல்கலைக் கழகம் ஒரு சுறுசுறுப்பான அரசியற் செயற்பாட்டுத் தேன்கூடாக அமைந்தது. உலகில் இடம்பெறும் வெவ்வேறு சமூக, மற்றும் தேசிய அடக்குமுறைகள் பற்றிய அறிவையும் இச் சூழல் எனக்கு ஊட்டியது. இதுவே புரட்சிகளின் காலமாகவும் திகழ்ந்தது. தீவிர இடதுசாரி அரசியலும், தொழிற்சங்கப் போராட்ட எழுச்சிகளும் பிரித்தானியாவில் தலை விரித்து ஆடிக்கொண்டிருந்தன. ஆபிரிக்காவிலும், மத்திய மற்றும் தென் அமெரிக்காவிலும் உள்ள பல மூன்றாம் உலக நாடுகள், விழுதோடிய குடியேற்றவாத அடக்குமுறைகளிலிருந்தும், பேரரசுகளின் பொருளாதார உறிஞ்சல்களிலிருந்தும், சுதந்திரம் பெறுவதற்காக தேசிய விடுதலைப் போராட்டங்களைத் தொடுத்து நின்றன. ஒடுக்கப்பட்டவர்கள் மட்டில் எமக்கு உள்ளார்ந்த அனுதாபம் இருந்தது. ஆகவே, ஆபிரிக்க தேசிய காங்கிரஸ் (ANC), சிம்பாவே ஆபிரிக்க தேசிய ஒன்றியம் (ZANU), தென்மேற்கு ஆபிரிக்க மக்கள் அமைப்பு (SWAPO), கிழக்குத் தீமோரியர், எரித்திரியர், சந்தனிஸ்தா, பாலஸ்தீன விடுதலை அமைப்பு (PLO), எல் சல்வடோரியர், சிலியர் போன்றோரின் பேரணிகளிலும் கூட்டங்களிலும் தீவிரமாகக் கலந்து கொண்டோம். பிரித்தானியாவின்





கொம்யூனிஸ்ட் கட்சியுடன் கூடிப் பணி புரிந்தோம். நெல்சன் மண்டேலாவின் விடுதலைக்காக பேரணி நடத்தினோம். அணு ஆயுத ஒழிப்பு இயக்கத்தை ஆதரித்தோம். இக் கால கட்டத்தில் பிரித்தானியாவில் தலை தூக்கிய இனவாதத்தை வெறுத்தோம். எமது வீட்டில் குழுக் கலந்துரையாடல்களுக்குப் பல தரப்பினரையும் அழைத்தோம். விடுதலை அமைப்புகளின் பிரதி நிதிகளையும் அங்கு வரச் செய்தோம். ஒடுக்குமுறை தொடர்பான எனது சொந்த உணர்வுகள் பலவற்றைப் பெண்ணியம் நிரற்படுத்தியது. உலகத்தோடு நான் தொடர்பு பேணும்போது, பெண் என்ற வகையில் எனது உணர்வுகள் என்ன, அனுபவங்கள் என்ன என்பதனை வெளிப்படுத்துவதற்கு வார்த்தைகளையும் வடிகால் அமைத்துத் தந்தது. எனது தளர்வான மனப் போக்குகள் உறுதியான சிந்தனைகளாகத் திரண்டது இந்தச் சூழலிலேதான். இந்தச் சிந்தனைகளே ஒரு மூன்றாவது உலக நாட்டின் தேசிய விடுதலை இயக்கத்தின் ஆயுதப் போராட்டத்திலே பங்கெடுக்க இறுதியாக என்னை இட்டுச் சென்றன.

எமது இந்தப் பருவத்தில் நாம் இருவரும் அரசியல் விழிப்புணர்வு கொண்டிருந்தோம்; அரசியற் செயற்பாட்டிலும் ஈடுபட்டோம். ஆனால் எமது அரசியல் உள்நாட்டுப் பிரச்சனைகள் பற்றியதாக அல்லாது அனைத்துலக விடுதலைப் போராட்டங்கள் பற்றியதாகவே இருந்தது. நாம் என்றுமே பிரித்தானியத் தொழிற் கட்சியில் சேரவில்லை. அதன் போராட்டப் போக்கோடும் எமக்குத் தொடர்பு இருக்கவில்லை. பிரித்தானிய கொம்யூனிஸ்ட் கட்சியோடு கூடி வேலை செய்வதே பிரித்தானியாவில் குறைந்த பட்ச புரட்சி அரசியலில் நாம் ஈடுபடக்கூடியதாக இருந்தது. எப்படியோ, அந்த உறவும் ஆழமானதாக இருக்கவில்லை. சொற்ப காலம் மட்டுமே நீடித்தது. இலங்கைத் தமிழ் மக்களின், சுய நிர்ணயம், மற்றும் அரசியற் சுதந்திரம் ஆகியவற்றை எதிர்த்த இலங்கைக் கொம்யூனிஸ்ட் கட்சிக்கான சோவியத் யூனியனின் ஆதரவு, இனி மாஸ்கோ எஜமானருக்கு பிரித்தானிய கொம்யூனிஸ்ட் கட்சி காட்டிய பற்றுறுதியும், பணிவும், எமது பார்வையிலே பிற்போக்கான-தாகப்பட்டது; மன விரக்தியைத் தந்தது; அரசியல் அடிப்படையில் தவறாகவும் தோன்றியது. பிரித்தானிய அரசியலில் எனக்குக் கவலையைத் தந்த முக்கிய விடயம், இங்கிலாந்தில் வளரத் தலைப்பட்ட இனவெறியும், பாசிசமும் தான். பிற மக்கள் மட்டில் குரோதத்தைத் தூண்டும் தத்துவத்துடன் அமைந்த ஓர் அரசியல் இயக்கத்தினர், தம்மிலிருந்து வேறுபட்ட மக்களைவிட ஏதோ ஒரு வகையில் தாம் உயர்ந்தவர் என்று வலியுறுத்தும் அரசியல் இயக்கமாக வளர்வதைப்

பார்த்துக் கொண்டிருக்க எனக்குக் குமட்டியது. உண்மையில் இந்த இனக் குரோதச் சூழல் நேரடியாகவே வாழ்க்கையை அமுக்க முற்பட்டது. அதை என்னால் பொறுக்க முடியவில்லை. இனக் குரோதம் பாலா மீதும் இங்கிலாந்திலுள்ள அவருடைய நண்பர்கள் மீதும் தொடுக்கப்பட, அதைப் பொறுமையோடு பார்த்துக் கொண்டு வாளாவிருக்க வேண்டி இருந்தது. ஒரு சம்பவம்; ஒரு தமிழ் இளைஞர் எம்மைப் பார்க்க வந்து கொண்டிருந்தார். வெள்ளை இன இளம் காடையர் கும்பல் ஒன்று அவரைச் சூழ்ந்து அடித்து நொருக்கியது. முகத்தில் இரத்தம் வழிய, நடுங்கியபடி எமது வீட்டு வாசலுக்கு அவர் வந்தார். பின்னர் எமது மாடி வீட்டிலிருந்து தனியே வெளியே போக அவர் அஞ்சினார். பாதாள ரெயில் நிலையத்துக்கு அவரோடு நாம் கூடிச் சென்றால் மட்டுமே புறப்பட்டுச் செல்ல அவர் இணங்கினார். இதைவிட இனக்குரோத நேரடி அச்சுறுத்தல் அனுபவமும் கிடைத்தது. ஒரு நாள் எமது உயர் மாடி வீட்டில் நண்பர் ஒருவரோடு பேசிக் கொண்டிருந்தோம். அங்கு வந்த இனக்குரோத வெள்ளையர் கும்பல் ஒன்று, வாயில் கதவை உடைத்து உள்ளே பாய முயன்றது. பாலாவும், நண்பரும், நானும் கதவைத் தள்ளிப் பிடித்தபடியே காவற்துறையினரைக் கூப்பிடுமாறு காடையர் காதில் விழும் வண்ணம் உரக்கக் கூறி, அவர்களை விரட்டினோம்.

வேறின மக்களுக்கு அநீதி இழைக்கப்படும்போது, அவர்கள் உரிமைகள் பறிக்கப்படும்போது, வேறுபட்ட கலாச்சாரம் என்பதால் அவமானப்படுத்தப்படும்போது, என்னிடமிருந்த இனவெறியெதிர்ப்புணர்வு விழித்தெழுந்தது. பிரித்தானியாவில் இனவெறி அனுபவம் என்னைக் கொதிப்படையச் செய்தது. ஆனால் பாலாவுக்கு இது வியப்பைத் தரவில்லை. அதை இயல்பானதாகவே எடுத்துக் கொண்டார். தமது நாட்டு இன வெறியோடு அதை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தார். பிரித்தானியாவில் முகிழ்ந்து வந்த இனவெறித் தத்துவம், தோலின் நிறத்தை அடிப்படையாகக் கொண்டது. இலங்கையிலே, பாலாவின் மக்களுக்கு எதிராகக் கட்டி எழுப்பப்பட்ட இனக்குரோதம், இன மேலாதிக்கம் என்ற மாயையில் கட்டி எழுப்பப்பட்டது. இலங்கையில் நிலவிய இனக் குரோதமானது சிங்கள-பௌத்த பேரினவாத சித்தாந்தத்தை அடித்தளமாகக் கொண்டது. இனத்தால் ஆரியர் என்றும், மதத்தால் பூர்வீகப் புனித மதம் என்றும் ஒரு புராணத்துக் கற்பனையில் கட்டப்பட்டது. தமிழ் மக்களுக்கு எதிரான இனவாதக் குற்றங்களைப் புரிபவர்களில் சிங்கள அரசினரே முதன்மை பெற்றிருந்தனர். இலங்கையின் இனவாதமானது இனப்படுகொலைப் பரிமாணத்தை எட்டியது. படுமோசமான மனித உரிமை மீறல்கள் அங்கே





நடந்திருக்கின்றன. எழுபதினாயிரத்துக்கும் அதிகமான தமிழ் மக்கள் அழித்தொழிக்கப்பட்டிருக்கிறார்கள். பாசிசம், பேரினவாதம், போன்ற சித்தாந்தங்கள் வரலாறு முழுவதிலும் வெளிப்பாடு கண்டு சிங்கள மக்களை ஒரு மேன்மையான இனம் என்ற மாயைக்குள் சிறைப்படுத்தியது. இந்தக் கருத்தியற் போக்கு மிகவும் ஆபத்தான, கெடுதலான நாசகார சக்தியாகும். இது மும்முரமாக எதிர்க்கப்பட வேண்டும் என்பது எனது கருத்து.

தனி ஒருவரையும் சரி, மக்கள் இனங்களையும் சரி, நெரித்து ஒடுக்கும் மேலாண்மைத் தத்துவங்களை நான் அவருவருத்து ஒதுக்குபவள். ஐரோப்பாவில் நான் மேற்கொண்ட பயணங்களாலும் இங்கிலாந்தில் பல்வேறு இன மக்களிடையே பணிபுரியும்போது கிட்டிய அனுபவங்களாலும் பெற்ற படிப்பினையோடு, எல்லாக் கலாச்சாரங்களிலும் இருந்து வரும் மக்களை ஆழமாகப் புரிந்துகொள்ளவும் அவர்களுக்கு மரியாதை காட்டவும் பயின்றிருந்தேன். எனவே, இனக்குரோத அடிப்படையில், சொல்லாலோ, செயலாலோ மக்கள் தாக்கப்படும்போது என்னால் அதைச் சிறிதும் சகித்துக் கொள்ள முடிவதில்லை. மானுட வரலாற்றின் பரப்பை நாம் அளவிடும்போது, அதில் இனவாதம் ஒரு பெரிய பங்கை வகித்திருப்பதை நாம் காணலாம். மக்களைப் பிளவுபடுத்துவதில் ஒரு முக்கிய சக்தியாகவும், மக்களிடையே மனிதாபிமானம் அற்ற செயல்களுக்கு ஓர் ஊற்றாகவும் அது செயற்படுகின்றது.

மனித சமூகத்தினர், ஒருவர் மட்டில் ஒருவர் கொண்டுள்ள தவறான, எதிர்மறையான கருத்தோட்டங்களிலிருந்தே இனவாதம் தோற்றப்பாடு காண்கிறது. உதாரணமாக, மனிதத் தோலின் நிறம் பற்றிய தவறான பார்வை; மற்றும் போலியான உயர்வு மனப்பான்மை, கலாச்சார வேறுபாடு, சமயம், வரலாறு போன்ற கருத்தியற் கண்ணோட்டங்களிலிருந்தும் இனவாதம் தோற்றம் கொள்கிறது. எனது வாழ்க்கை அனுபவம் மேலும், மேலும் ஆழம் அடைய, எனது பார்வையில், இந்தப் பூமிக் கிரகமானது அனைத்து மனித சமூகத்தினரதும் பொதுவான வாழ்விடமாகத் தோன்றுகின்றது. மனித இனம் என்ற ஒரே இனத்தினதும், ஏனைய உயிர் வடிவங்களினதும், இயற்கையான வாழ்க்கைத்தளம் இந்த உலகம். இந்த உலகத்தில் வாழ்வதற்கு என்னைப் போலவும், உங்களைப் போலவும், அனைத்து உயிர்களுக்கும் உரிமை உண்டு. பலவகைக் கலாச்சாரங்கள் மனித சமுதாயத்தைச் செழுமைப்படுத்துகின்றன. ஏனெனில் கலாச்சாரங்கள், மானுட ஆன்மீக வளர்ச்சியின் வெளிப்பாடுகளாகும். உலகமைந்த

அனைத்து கலாச்சாரங்களும் மதிக்கப்படவேண்டும். அமைதியும், ஒத்திசைவும் வாழ்க்கையில் செழுமையும் நிலவ வேண்டுமானால் கலாச்சாரங்கள் வளர்ச்சியடைய வாய்ப்பளிக்கப்பட வேண்டும். இதுவே எனது கருத்தாகும்.

## போராட்ட அரசியல்

நாடு சுதந்திரம் பெற்றதிலிருந்து சிங்கள அரசினால் தமிழ் மக்கள் கொடூரமாகவும், அநியாயமாகவும் ஒடுக்கப்பட்டதன் வரலாறு, அனைத்துலக மனித நேய அமைப்புகளினால் செம்மையாக ஆவணப்படுத்தப் பட்டிருக்கின்றது. ஆண்டாண்டாக அரசு திட்டமிட்டு நடத்தும் இந்த இன ஒடுக்குமுறை எனது கணிப்பில் இனப் படுகொலை முயற்சியே! ஆயினும், அனைத்துலக அரசுகள் இந்தத் தார்மீகக் குற்றச் சாட்டை மறுக்கலாம் (இனப்படுகொலை விவகாரத்தை பின்னர் விவாதிக்க இருக்கின்றேன்). தமிழர் தேசிய அடையாளத்தின் அடித்தளத்தையே - அதாவது அதன் மொழியை, கலாச்சாரத்தை, பொருளாதார வாழ்வை, இனி, பாரம்பரிய வாழ்நிலத்தை, இன ஒடுக்குமுறை, தாக்குகின்றது. இதற்குமேல், இனக் கலவரங்களின் போதும், போரின் விளைவாகவும், தமிழ் மக்கள் பெருந்தொகையாக பூண்டோடு அழித்தொழிக்கப்படுகின்றார்கள். இனி, தொடர்ச்சியாக அடுத்தடுத்து நிகழ்ந்த கலவரங்களால் ஏற்பட்ட இன விரட்டலாலும், புலம்பெயர்வுகளாலும் தமிழ் மக்களின் இனக் கட்டமைப்பு துண்டாடப்படுவது கூட இன்னொரு வகை இனப்படுகொலைக் கூறுதானே! விடாது தொடர்ந்த கொடிய அரச ஒடுக்குமுறைக்கு, தொடக்கத்திலிருந்தே இயல்பான எதிர்ப்புக் கிளர்ந்தது. ஆரம்பக் கட்டங்களில், வன்செயலற்ற அரசியற் போராட்டங்கள் மூலம் ஒடுக்கு முறைக்கு தங்கள் எதிர்ப்பைத் தமிழ் மக்கள் வெளிப்படுத்தினார்கள். அகிம்சை என்ற அமைதித் தத்துவத்தின் அடிப்படையில் மகாத்மா காந்தி என்ற அகிம்சா மூர்த்தியால் வகுக்கப்பட்ட வன்செயல் துறந்த போராட்ட முறை இது. அகிம்சையின் ஆன்மீக, மற்றும் ஒழுக்க சீலங்களைக் காழ்ப்புணர்வோடு சிங்கள அரசு உதாசீனப்படுத்தியது. இதனால் அகிம்சைப் போராட்டத்தின் தார்மீகப் பலமானது, சிங்களத்தின் அடாவ-டிப் பலத்தை எதிர்கொள்ள முடியாது வலுவிழந்த சக்தியாக மாறியது. தமிழ் இனத்தின் அனைத்து அமைதிப் போராட்டங்களும் கொடூரமாக நசுக்கப்பட்டன.

நீடித்துச் செல்லும் இன நெருக்கடிக்குத் தீர்வு காண, தமிழ்.





சிங்கள இனங்களின் தலைவர்கள் செய்து கொண்ட அரசியல் ஒப்பந்தங்களும், உடன்படிக்கைகளும் செயலிழந்து செத்துப்போயின. இதனால், இரண்டு இனங்களிடையேயும், பகைமையும், நம்பிக்கையின்மையும் ஆழமாகியது. கண்மூடித்தனமான கைது, கொடுமையான சித்திரவதை, காணாமல் ஆக்குதல், சட்டம் மீறிய கொலைகள் ஆகியவை அரச படைகளின் நடவடிக்கைகளில் ஓர் அங்கமாயின.

மேலும், தமிழ்ப் பகுதிகள் மீது அரச படைகள் நிகழ்த்திய ஆக்கிரமிப்பும், அடக்குமுறைகளும், அரசினால் கோலம் இடப்பட்டு, சிங்களக் காடையரால் நிறைவேற்றப்பட்ட காட்டுமிராண்டித்தனமான இனக்கலவரங்களும் ஆயிரமாயிரம் தமிழ் மக்களைக் கொன்றொழித்தன. தீவிரமடைந்த அரச ஒடுக்குமுறையும், சிங்கள இனவாத அரசியற் தலைமை மீது தமிழ் மக்களுக்கு ஏற்பட்ட நம்பிக்கையீனமும், விரக்தியும், பிரிந்து சென்று தனியான தமிழ் அரசை நிறுவுவதைத் தவிர வேறு வழியில்லை என்ற நிலைக்கு தமிழ் அரசியல்வாதிகளைத் தள்ளியது.

1977 பொதுத் தேர்தலில் போட்டியிட்டு தமிழ் மக்களின் நாடாளுமன்ற அரசியல் கட்சியாக முகிழ்த்த தமிழர் ஐக்கிய விடுலை முன்னணி (TULF), தமிழீழ மக்களின் சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில் ஒரு சுதந்திர அரசுக்காகப் போராடத் தமிழ் மக்களின் வாக்கு ஆணையைக் கோரியது. வட கிழக்கில் TULF பெருவெற்றியீட்டியது; பெரும்பாலான இருக்கைகளை வென்றது; அரசி யல் சுதந்திரத்தையும் இறைமையுள்ள அரசையும் ஈட்டும் வகையில் போராட்டத்தை நடத்த மக்களின் ஆணையைப் பெற்றது. TULF ற்கு மக்கள் ஆணை கிடைத்த போதிலும், மக்கள் ஆதரவுடனான இந்த அரசி யல் இலக்கை அடைவதற்கு, அதனிடம் ஒத்திசைவான கொள்கையோ, தந்திரோபாயமோ, அர்ப்பணிப்போ இருக்கவில்லை. அதனால் அந்தக் கட்சி செயலிழந்து, மலட்டுத் தன்மையடைந்து, இறுதியில் சிங்கள ஆளும் வர்க்கத்திற்கு உடந்தையாகச் செயற்படும் பாதையைக் கடைப்பிடிக்க முற்பட்டது. சுதந்திர அரசை உருவாக்குவதற்கான புரட்சிக வழிமுறையைக் கோரி நின்ற போராட்ட உணர்வுடனான தமிழ் இளைஞர்களுக்கு TULF ன் உடந்தை அணுகுமுறையானது கடுமையான ஏமாற்றத்தைக் கொடுத்தது. அரசின் வன்செயலுக்கும், ஒடுக்குமுறைக்கும் பெருமளவு முகம் கொடுக்கும் இளைஞர்கள் பொறுமையை இழந்தார்கள். நாடாளுமன்ற அரசியற் போராட்டத்தின் கையாலாகாத் தன்மையிலும் விரக்தி கொண்டார்கள். தமிழ் மக்களின்

இலட்சியமான தேசிய விடுதலைக்கான ஆயுதப் போராட்டத்தைத் தொடங்குவதற்கான அகவய, புறவயச் சூழல்கள் அப்போது முதிர்ந்திருந்தன. இலங்கையின் வடக்கிலும், கிழக்கிலும் தேசிய விடுதலைக்காக ஆயுதப் போராட்டத்திலே தம்மை அர்ப்பணிக்கப் பெருந்தொகை இளைஞர் அமைப்புகள் முளைவிட்டன. ஒடுக்குபவரின் வன்செயலை, ஒடுக்கப்படுபவரின் வன்செயல் முகமுகமாகத் தரிசிக்கும் வேளையும் முதிர்ந்தது.

வடக்குக் கிழக்கில் தோன்றிய விடுதலை அமைப்புகள் பலவற்றின் ஆதரவாளர்களும், பரப்புரையாளர்களும் இலண்டனில் இருந்தனர். சிறீலங்காவின் கொடிய அட்டூழியத்தில் இருந்தும், இன ஒடுக்குமுறையில் இருந்தும் தப்பியோடிய இளம் சமுதாயத்தினரிடமிருந்தே விடுதலை அமைப்புகளுக்கு ஆதரவு பெருமளவாகக் கிடைத்தது. தாம் நேரில் பட்ட துயர நினைவுகளையும், அனுபவங்களையும் மறக்காதிருந்த அவர்கள் ஒடுக்கப்பட்ட தம் மக்களோடு இறுக்கமாகத் தம்மை இனம் கண்டு கொண்டார்கள். தங்கள் தாயகம் மட்டில் நீடித்த உணர்ச்சிபூர்வமான பற்றுணர்வையும் கொண்டிருந்தார்கள்.

70 களின் பிந்திய காலகட்டத்தில் லண்டனில் எம்மோடு கூடிப்பழகிய தமிழ் நண்பர்கள் எல்லோருமே அரசியல் விழிப்புணர்வு உள்ளவர்களாக இருந்தார்கள். இவர்களில் பெரும்பாலானவர்கள் சிறீலங்கா அரசினால் ஏதோ ஒரு வடிவில் ஓரம் கட்டப்படுவதிலிருந்தும், அரச அட்டூழியத்திலிருந்தும் தப்பிப் பிழைப்பதற்காகவும் லண்டன் வந்தவர்கள். தமிழர் ஐக்கிய விடுதலைக் கூட்டணியின் அரசியல் இலட்சிய ஆணை, அவர்களுடைய வேணவாவுக்கு உரம் ஊட்டியது. 1977 ம் ஆண்டு பொதுத் தேர்தலை அடுத்து, தமிழர்க்கு எதிராகக் கலவரங்கள் தலைதூக்கியபோது, அவை லண்டனிலே தமிழ் அரசியலுக்கு விழிப்பூட்டின. எமது பல்கலைக்கழகத்தில் பயின்ற தமிழ் இளம் மாணவர்கள், தேசியப் பற்றுணர்வோடு பாலாவை நாடி வந்தார்கள். எல்லோருமே பொறிபறக்கும் உணர்வோடும் உற்சாகத்தோடும் இருந்தார்கள். இளைஞர் ஒருவரின் பெயர் ஞானசேகரன். பாலா தம்முடைய பத்திரிகை அனுபவத்தையும், எழுத்துத் துறைசார்ந்த அறிவையும், அடிப்படையாகக் கொண்டு அரசியல் ஆவணம் ஒன்றைத் தயாரிக்க வேண்டும் என்று வற்புறுத்திக் கொண்டே இருந்தார். பாலா அதற்கு இணங்கினார். அந்த ஆவணம் விரைவாகப் பரவி, இலண்டனிலுள்ள விடுதலைப் புலி வட்டத்தைச் சேர்ந்தது. 70 களின் நடுப்பகுதியில் இலண்டனில் விடுதலைப் புலிகளின் பிரதிநிதியாக இருந்த





கிருஷ்ணன் அவர்களும் அதிகாரபூர்வப் பேச்சாளரான ஆர். இராமச்சந்திரன் (அன்ரன் ராஜா) அவர்களும் எமது வீட்டுக்கு வந்து, தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார்கள். இராமச்சந்திரன் அவர்கள் (அவரை ராமாசார் என்றே அழைக்கின்றோம்) விடுதலைப் புலிகள் பற்றியும், அவர்களுடைய தலைமை பற்றியும் விரிவான உண்மையான விளக்கத்தைத் தந்தார். விடுதலைப் புலிப் போராளிகளின் துணிச்சல், மனவுறுதி, இலட்சியப் பற்று ஆகியவை எம்மை வெகுவாகக் கவர்ந்தன. விடுதலைப் புலிகளுடனான எமது வரலாறு ஆரம்பமாகியது. ராமா சார் எமது ஆயுட் கால நண்பரானார்; லண்டனில் இயக்கத்தின் குரல் வல்லாளராகவும் செயற்பட்டார். நாம் விடுதலைப் புலிகளை ஆதரித்த போதும், எமது நட்பு வட்டம் விரிவானதாக இருந்தது. ஆயுதப் போராட்டத்தில் தம்மை அர்ப்பணித்திருந்த அனைத்துத் தமிழ்க் குழுக்களின் ஆதரவாளர்களும் எமது வீட்டுக்கு கிரமமாக வந்து சென்றார்கள். அனைத்து வெவ்வேறு அமைப்புகளையும் சேர்ந்த பல இளம் தமிழ் மாணவர்களுக்கு பாலா அரசியல் வகுப்புகள் நடத்தினார். இந்த வகுப்புகளில் விரிவுரை நிகழ்த்த வெவ்வேறு நாடுகளிலுள்ள விடுதலை அமைப்புகளின் பிரதிநிதிகளையும் நாம் அழைத்தோம்.

இவர்கள் தமது விடுதலை அமைப்புகளின் நடவடிக்கைகளோடு தொடர்புடைய விவரணப் படங்கள், பரப்புரை ஆவணங்கள் ஆகியவற்றைத் தம்மோடு கொண்டுவந்தார்கள். எரித்திரியர் தங்கள் போராட்ட வரலாற்றை எடுத்து விளக்கினார்கள். கிழக்குத் தீமோர் பிர-திநிதிகள், இந்தோனேசிய இராணுவம் புரிந்த இனப்படுகொலை வடிவி லான ஒடுக்குமுறைபற்றி விரித்துரைத்தார்கள். ஆபிரிக்க தேசியக் காங்கிரஸ் வெற்றி பெறுவதற்கு இன்னும் இருபது ஆண்டுகளே உள்ள நிலையில் அவர்களுடைய பிரதிநிதிகள் இனவெறிக்கு எதிரான போராட்டம் பற்றி விரிவுரை நிகழ்த்தினார்கள். தலைமறைவாக வாழ்ந்த சிலி நாட்டுப் பிரதிநிதிகளும் எம்மை வந்து சந்தித்தார்கள்; பினோச்சியின் இராணுவ சர்வாதிகாரத்துக்கு எதிரான போராட்டம் பற்றி எம்மோடு உரையாடினார்கள். இந்த அமைப்புகளில் பெரும்பாலானவற்றிற்கு நாம் நிதி திரட்டிக் கொடுத்தோம்.

தமிழ் மக்கள் அரசியல் விழிப்போடு இருந்தது போல, சிங்கள இடதுசாரிகளும் விழிப்பாக இருந்தார்கள். தனித்தமிழ் அரசுக்கான கோரிக்கை சர்ச்சைக்குரிய விவாதத்தைத் தோற்றுவித்தது. சிங்கள இடதுசாரிகளுக்கு, இருதலைக் கொள்ளியெறும்பு நிலை. ஓர் இன மக்களின் சுயநிர்ணய உரிமை என்ற சோசலிசக் கோட்பாட்டை ஆதரித்து, புரட்சியாளராக காட்டிக்கொள்ள வேண்டுமென்ற நிலைப்பாடு,

அதே சமயம், ஒடுக்கப்படும் தமிழ் மக்களின் பிரிந்து செல்லும் உரிமையை எதிர்க்கும் நிலைப்பாடு. இடதுசாரிச் சிங்கள அரசியல்வாதிகளிடையேயும், புரட்சியாளர்களிடையேயும் ஏற்பட்ட இந்த வெளிப்படையான கோட்பாட்டுக் குழப்பம் பாலாவுக்குச் சீற்றத்தைக் கொடுத்தது. இந்தக் கோட்பாட்டுக் குழப்பத்தைத் தீர்க்கும் வகையில் ஆவணம் ஒன்றைத் தயாரிக்கத் தீர்மானித்தோம். இந்த முயற்சியில் பாலா கடினமாக உழைத்தார். கோட்பாட்டுத் தெளிவுடைய அரசியல் ஆவணம் ஒன்றைத் தயாரித்தார். அதில், தமிழ் மக்களுடைய சுயநிர்ணய உரிமைக்கான போராட்டத்தை மாக்சிய-லெனினிச சிந்தனையின் அடிப்படையில் நியாயப்படுத்தினார். அவர் எழுத, நான் தட்டச்சிலிட்டேன். இந்த ஆவணத்தை அச்சுருவாக்க எங்கள் கல்விக்கான உதவிப் பணத்தைச் செலவிட்டோம். "தமிழ்த் தேசியப் பிரச்சனை பற்றியது.." என்ற பெயரில் அது வெளியாகி, பொதுமக்களிடையே விநியோகிக்கப்பட்டது. இதையடுத்து அவர் தமது இரண்டாவது வெளியீட்டைத் தமிழில் எழுதினார்: "சோசலிசத் தமிழீழத்தை நோக்கி" என்ற தலைப்பு. இந்த வெளியீடு விடுதலைப் புலிகளின் தலைவர் வேலுப்பிள்ளை பிரபாகரன் அவர்களைச் சென்றடைந்தது. பிரபாகரன் அவர்கள் நூலைப் படித்தார். அதன் உள்ளடக்கம் அவரைக் கவர்ந்தது. அதன் பின்னர் அவர் பாலாவைச் சந்திக்கவும் விரும்பினார். தமிழ் நாடு, சென்னைக்கு வருமாறு அழைப்பும் விடுத்தார். இயக்கத்தின் தலைமையை அங்கேதான் முதற்தடவையாகச் சந்தித்தோம்.





# அத்தியாயம் II

# புலிகளின் குகைக்குள்

லண்டனில் இருந்து இந்தியாவுக்கு 1979 இல் நாம் புறப்பட்டபோது, எமது வாழ்விலே புதிய அத்தியாயம் ஒன்று தொடங்கியது. முற்றிலும் வேறுபட்ட அத்தியாயம் அது. ஒரு விடுதலை அமைப்புடனும், விடுதலைப் போராட்டத்துடனும் சம்பந்தப்படும்போது, அது அமைதியானதாக இருக்கும் என்று நாம் எதிர்பார்க்கவில்லை. ஆனால் கடைசியிலே நாம் முகம் கொடுத்த சிக்கல் இவ்வளவு ஆழமானதாக இருக்கும் என, என்றுமே நாம் சிந்தித்துப் பார்த்ததில்லை. புரட்சிகர அரசியலில் உள்ள சூட்சுமங்களும் தென்னிந்தியாவின் சமூக, கலாச்சார வாழ்க்கைச் சூழலும் எனக்குள் ஒரு புதிய விழிப்புணர்வை ஏற்படுத்தியது; எனது உணர்வில் புதிய எல்லைகளைத் தோற்றுவித்தது. புதிய சூழலில் ஏற்பட்ட விசித்திரமான, அசாதாரண சம்பவங்கள், புதிய உறவுகள், புதிய சவால்கள் ஆகியவை எனது வாழ்விலே மறக்கமுடியாத ஒரு காலகட்டமாக அமைந்தன. இவை எனது சிந்தனையிலும் உள் உணர்வுகளிலும் மாற்றத்தை ஏற்படுத்தின; எனது ஆளுமைக்கு உரமூட்டின; என்னை ஒரு பலம் மிக்க மனிதப் பிறவியாக்கின.

உண்மையிலேயே, 1979-1987 காலப் பகுதியை மீள நினைவு கூரும்போது, தனிப்பட்ட முறையிலும் அரசியல் ரீதியாகவும் நாம் எதிர்கொண்ட அத்தனை சம்பவங்களையும் இந்த நூலின் சில பக்கங்களில் பதிவு செய்வது இலகுவல்ல. அந்தக் காலகட்டத்தை மேலோட்டமாகத் தொட்டுக் காட்டவே எண்ணுகின்றேன். இவை எல்லாம் 1979 பிற்பகுதியிலேயே தொடங்கின.

உண்மையான போர்க்கள முனையில் இருந்து ஆயிரம் ஆயிரம் மைல்களுக்கு அப்பால் ஆபத்து இல்லாத பாதுகாப்பான சூழலில் இருந்து கொண்டு, புரட்சி அரசியலைப் பற்றி உரத்துப் பேசிக் கொண்டிருப்பது வேறு; ஆயுதப் புரட்சிப் போராட்டம் ஒன்றிலே தீவிரமாகப் பங்கெடுக்கும் நிலையில் ஒருவர் தனது உரிமையையும், உயிரையும் அர்ப்பணிப்பது முற்றிலும் வேறான ஒரு விடயம். ஆகவே, இந்தியாவுக்கு நாம் பயணித்ததும், அங்கே தலைமறைவாக இருந்த விடுதலைப் புலித் தலைமையையும், போராளிகளையும் சந்தித்தது, விடுதலைப் போராட்டத்தில் எமக்கிருந்த ஆழமான அர்ப்பணிப்பையும், பங்களிப்பையும் சுட்டிக் காட்டுவதாக அமைந்தது. இங்கிலாந்தின் சௌ-

கரியங்களோடு நாற்காலி அரசியல் பேசுவது அல்ல இது. மாறாக புரட்சிகர புதிய அரசியலுக்காக சிறீலங்கா அரசினால் தேடப்படும் தீவிரவாத இளம் போராளிகளை சந்திக்கும் ஒரு முயற்சியே இது. மக்களின் விடுதலைப் போராட்டத்தை, விடுதலைப் புலிப் போராளிகள் நாடாளுமன்றத்திற்குப் புறம்பான ஆயுதப் போராட்ட அரங்கிற்குள் கொண்டு சென்றிருந்தார்கள். அந்த வரலாற்றுக் கால கட்டத்தில், அரசின் பாதுகாப்பு யந்திரங்களான அரச படைகள் மீதும் காவற்துறை மீதும் சிறு சிறு கெரில்லாத் தாக்குதல்களில் விடுத்லைப் புலிப் போராளிகள் ஈடுபட்டிருந்தார்கள். ஆகவே தமிழ் மக்களையும் போராளிகளையும் எம்மையும் ஆழமாகப் பங்குகொள்ளச் செய்யப்போகும் புரட்சி அரசியலில் நாம் ஈடுபடத் தொடங்கி இருந்தோம். இது வெறும் விநோதம் அல்ல. அந்த நேரம் நாம் இருவரும் ஆயுதங்களை ஏந்தவில்லையாயினும், கெரில்லா அமைப்பின் தலைமையோடு நெருக்கமான உறவும் புரிந்துணர்வும் கொண்டிருந்தோம். இயக்கத்தின் உள்ளார்ந்த செயற்பாடுகள் பற்றிய விபரங்களை எம்மோடு பகிர்ந்து கொள்ளும் நம்பிக்கைக்கு உரியவர்களாக நாம் இருந்தோம். இதனால், போராளிகள் மட்டிலும் போராட்டம் மட்டிலும் பாரிய பொறுப்புணர்வு எம்மீது படிந்திருந்தது. இந்தப் போராளி இயக்கத்தின் அமைப்புப் பற்றியும் அதன் தலைமறைவான தலைவர்கள் யார் யார் என்பது பற்றியும் அந்தரங்க விபரங்களை நாம் அறிந்து கொண்டதால், கனதியான பொறுப்பு எம்மீது இருப்பதையும் உணர்ந்து கொண்டோம்.

மும்பையில் இருந்து விமானம் மூலம் சென்னை வந்தோம். திரு. கிருஷ்ணனும் எம்முடன் கூட வந்தார். விடுதலைப் புலிகளையும், தலைவர் பிரபாகரனையும் சென்னையில் சந்திக்க ஏற்பாடாகியிருந்தது. அன்று இரவு நாம் விமானத்தில் வருவது புலிகளுக்குத் தெரியும். ஆனால் சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் எம்மைப் பகிரங்கமாக சந்திக்க யாரும் இல்லை. தலைமறைவு அரசியலுக்குள் இப்படித்தான் நாம் பிரவேசித்தோம். அன்றிலிருந்து இரகசிய அரசியல் எம் வாழ்வில் இரண்டறக் கலந்தது.

1979ம் ஆண்டு நாம் சென்னைக்கு விஜயம் செய்தபோது, வணங்காமுடியான இந்திரா காந்தி அம்மையார் இந்தியாவின் ஆட்சிப் பீடத்தில் அமர்வதற்கு ஆயத்தமாக இருந்தார் (1980 ஜனவரியில் இந்திய பிரதம மந்திரியாக அவர் பதவிஏற்றார்). மூத்த அரசியல் வாதியான கலைஞர் கருணாநிதி தமிழ்நாட்டின் முதலமைச்சராக பதவியிலிருந்தார். அந்தக் காலகட்டத்தில் தமிழ்நாட்டு அரசியலும், இந்திய வெளிவிவகாரக் கொள்கையுமே தமிழீழ மக்களின் தேச





சுதந்திரப்போராட்டத்தின் பாதையை நிர்ணயிக்கும் சக்திகளாக விளங்கின. குறிப்பாக, இந்திய வெளிவிவகாரக் கொள்கையானது உள்நாட்டிலும், பிராந்திய ரீதியாகவும், அனைத்துலக மட்டத்திலும் தாக்கத்தை விளைவிக்கும் பரிமாணத்தைக் கொண்டதாக அமைந்தது.

பனிப்போர் காலத்து அனைத்துலக உறவுகளும், அணிசேரா இயக்கத்தின் கொள்கைகளுமே 70 களிலும் 80 களிலும் இந்தியாவின் வெளியுறவுக் கொள்கையை வடிவமைத்தன. அணிசேரா இயக்கத்தின் மூல பிதா என்ற வகையில், நடுநிலைக் கொள்கையையும், தலையிடாக் கொள்கையையும் மூன்றாவது உலக நாடுகளுக்கு இந்தியா பரிந்துரைத்து வந்தது. ஆயினும், அறுபதுகளின் ஆரம்பத்தில் இந்திய வட கிழக்கு எல்லையில் சீனா படையெடுப்பு நடத்தியதைத் தொடர்ந்து வல்லரசுகளின் அழுத்தங்களுக்கு சிக்குப்படாமல் ஒரு புதிய உலக ஒழுங்கைக் கட்டியெழுப்ப வேண்டுமென்ற இந்தியாவின் கனவு தகர்ந்து போனது.

உலகின் மிகப் பெரிய சனநாயக நாடு என்ற வகையில் உலகப் பெருநாடாகவும், பிராந்திய வல்லரசாகவும் தனது ஆதிக்கத்தைச் செலுத்த இந்தியா விரும்பியது. ஆனால் அமெரிக்கா, சீனா, பாகிஸ்தான் ஆகிய நாடுகள் ஆசியாவில் ஏற்படுத்திய உடன்பாட்டு இணைப்பின் பலம், தனக்கு அச்சுறுத்தலாக அமைவதாகவும் இந்தியா கருதியது. இந்தப் பாதுகாப்புத் தொடர்பான அச்சமே சோவியத் யூனியனுடனான ஒரு தந்திரோபாய உடன்பாட்டில் இணைந்து கொள்ள இந்தியாவை நிர்ப்பந்தித்தது. இதுவே 70 இன் முற்பகுதிகளில் அணுகுண்டு ஒன்றையும் பரீட்சித்து, அணு வல்லரசாக உயர்வதற்கு இந்தியாவை ஊக்குவித்தது. மூன்றாவது உலக நாடுகளுக்கு உகந்தது அணிசேராக் கொள்கை என்று தொடர்ந்து இந்தியா பரிந்துரை புரிந்தாலும், சோவியத் முகாமிற்குள்ளேயே இந்தியா நிலையூன்றி நின்றது. பல நூற்றண்டுகளாகக் குடியேற்றவாத சுரண்டலுக்கு உள்ளாகி, போராட்டம் மூலமே சுதந்திரத்தை வென்றெடுத்த ஒரு நாடு என்ற வகையில், விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டுவந்த பல ஒடுக்கப்பட்ட தேசிய இனங்கள் மட்டில் இந்தியா அனுதாபம் காட்டியது. அத்துடன் அப் போராட்டங்களுக்கு தார்மீக ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் இந்தியா ஆதரவு வழங்கியது. அனைத்துலக மட்டத்தில் கண்டிக்கப்பட்ட "அப்பாதைட்" இன ஒடுக்கல் முறைக்கு எதிராகப் போராடிய ஆபிரிக்க தேசிய காங்கிரசுக்கு ஆதரவு வழங்குவதில் முதல் நிலை நாடாக இந்தியா திகழ்ந்தது. அத்தோடு ஆபிரிக்காவின் ஏனைய விடுதலைப் போராட்டங்களுக்கும், முதல்நிலை ஆதரவு வழங்கியது. பலஸ்தீன

போராட்டம் "பயங்கரவாதம்" என்று கருதப்பட்ட அரசியல் ராஜதந்திர உலகில், பலஸ்தீன விடுதலை இயக்கமான PLO வுக்கு இந்தியா வலுவான ஆதரவு வழங்கியது. இது பலஸ்தீன மக்களுக்கு பெரியதொரு தார்மீக உந்துதலாக விளங்கியது.

ஏனைய கண்டங்களிலும் பிரதேசங்களிலும் நடைபெற்ற தேசிய விடுதலைப் போராட்டங்களுக்குத் தாராள மனப்பான்மையுடன் வெளிப்படையாக தார்மீக, ராஜதந்திர உதவிகளை வழங்கி வந்த இந்தியா, தனது கொல்லைப் புறத்தில் நிகழ்ந்த போராட்டங்கள் சம்பந்தப்பட்டவரை சந்தர்ப்ப வாதத்தையும் பிரதேச நலன்பேணும் சாணக்கியத்தையுமே கடைப்பிடித்தது. தமிழ் மக்களின் போராட்டத்தை உதாரணமாக இங்கு எடுத்துக் கொள்ளலாம். தமிழீழ மக்களின் அவல நிலைபற்றியும் தமிழீழ விடுதலைப் புலிகளின் ஆயுதப் போராட்டம் பற்றியும் இந்தியா நன்கு அறிந்திருந்தது. 1978 ல், விடுதலைப் போராட்டத்தை எடுத்து விளக்கி, பாலா, இந்திரா காந்தி அம்மையாருக்கு கடிதம் ஒன்றை எழுதியிருந்தார். பழ. நெடுமாறன் போன்ற தமிழ்நாட்டு அரசியல்வாதிகளும் தமிழீழ விடுதலைப் போராட்டம் தொடர்பாக இந்திரா காந்திக்கு விளக்கம் அளித்திருந்தார்கள்.

இவற்றையெல்லாம் அறிந்த பின்னரும், தமிழ் மக்களின் துன்ப நிலை தொடர்பாக, தனது மனக் கலக்கத்தை மட்டும் இந்திய அரசு அறிக்கைகளில் தெரிவித்தது. குறிப்பாக, "ஆழ்ந்த துயரம்" என்ற, யாருக்கும் பாதகம் இல்லாத ராஜதந்திர பதத்தைப் பிரயோகித்தது. இனி, தான் ஒரு பிரதேசப் பேரரசு என்ற நிலையில் இலங்கையில் நடப்பவை மீது ஒரு கண் வைத்திருப்பதாகச் சிங்களவருக்கு எச்சரிக்கை செய்ததோடு நிறுத்திக்கொண்டது.

தனது நாட்டின் எல்லைக்குள் பிரிவினைப் போக்குகளைத் தூண்டிவிடவோ உற்சாகப்படுத்தவோ கூடாது என்பதில் இந்தியா என்றுமே விழிப்பாகவும் அக்கறையாகவும் இருந்திருக்கின்றது. ஆகவே அருகே உள்ள இலங்கையில் தமிழ் மக்கள் தொடுத்திருக்கும் தனியரசுக் கோரிக்கைக்கு ஆதரவு வழங்கும் நோக்கம் இந்தியாவுக்கு அறவே கிடையாது. ஆனால் தென்னகத்தில் உள்ள ஆறு கோடி தமிழ் மக்கள் பொங்கி எழுந்தால், நாட்டில் நிலைகுலைவு ஏற்படலாம் என்ற ஆபத்தையும் குறைத்து எடைபோட்டு ஒதுக்கிவிடவும் இந்தியாவால் முடியவில்லை. தமிழ் நாட்டுத் தமிழர்கள் பாக்கு நீரிணைக்கு 22 மைல்களுக்கு அப்பால் உள்ள தங்கள் சகோதரர்களுக்காகப் பெரும் அனுதாபம் கொண்டவர்கள்.

இதைவிட, சிறீலங்கா அரசுத் தலைவர் ஜே. ஆர். ஜெயவர்த்தனா, ஒளிவு மறைவின்றி மேற்குலகத்துக்கு சார்பாக இருந்தது குறித்தும் இந்திரா காந்தி அம்மையார் பெரிதும் கலவரம் அடைந்திருந்தார். இந்து மாகடல் பிரதேசத்தில் அமெரிக்கா தனது வல்லாதிக்கத்தை நிலைநாட்டுவதற்கான புறநிலைச் சூழலை சிறீலங்கா அரச தலைவர் வேண்டுமென்றே உருவாக்கிக் கொண்டிருப்பதாக அவர் அஞ்சினார். ஆனால் இந்தப் பிரதேசத்தில் தனது செல்வாக்கையே தக்க வைக்க இந்தியா விரும்பியது. எனினும், அரசியற் சித்து விளையாட்டில் கைதேர்ந்தவரான இந்திரா காந்தி இலங்கையின் இறையாண்மையையும் ஒருமைப்பாட்டையும் தொடர்ந்து அங்கீகரித்ததோடு, புது டெல்லியின் செல்வாக்கு வீச்சுக்குள் சிங்கள அரசை மீளவும் கொண்டுவரவேண்டும் என்பதற்கான ஒரு தந்திரோபாயமாகத் தமிழ்ப் போராளிகளைச் சகித்துக் கொண்டார். மேற்குலக ஆதிக்க வலைக்குள் சிங்கள அரசைச் சிக்க விடாது, அதனை தனது ஆதிக்க வியூகத்திற்குள் கொண்டுவருவதே இத் தந்திரோபாயத்தின் ஒட்டுமொத்த நோக்கமாகும். ஆகவே, இந்த பிராந்திய அரசியல் பின்புலத்தில், இலங்கையின் வடகிழக்கில் வாழ்ந்த பெருந்தொகையான தமிழ் மக்கள் தமிழ் நாடு தமக்குப் பாதுகாப்பான இடமெனக் கருதினார்கள். விடுதலைப் புலிப் போராளிகளுக்கு தமிழகம் ஒரு பாதுகாப்பான புகலிடமாக மட்டுமல்லாது உறுதியான தளமாகவும் அமைந்தது. தாம் வசிக்கவும் அச்சமின்றித் தங்கள் திட்டங்களை வகுக்கவும் வாய்ப்பான இடம் இது என்று அவர்கள் கருதினார்கள். ஆகவேதான், புலிப்போராளிகள் சென்னையில் தங்கினார்கள். தமிழ் நாட்டு அரசியல்வாதிகள் வழங்கிய ஆதரவோடு, இலங்கையில் தலைமறைவாக வாழ்ந்த தமிழ்ப் போராளிகள், தமிழ்நாட்டில் பாதுகாப்பாக தங்கியிருந்தார்கள். ஆனாலும் உள்வீட்டு எதிரிகளால் எழுந்த பிரச்சினைகள், புலனாய்வுப் பிரிவுகளின் கூரிய கண்கள், சிறீலங்கா தூதரக அதிகாரிகளின் நாசகார நடவடிக்கைகள் ஆகியன காரணமாக தமிழ் நாட்டில் கூட, ஒரு தலைமறைவான அமைப்பாகவே விடுதலைப் புலிகள் இயங்கினர். இப்படியான பின்புலத்திலேயே மீனம்பாக்கம் விமான நிலையத்தை வந்தடைந்தோம். இச் சூழல் காரணமாகவே அங்கே எம்மை யாரும் கண்டதாகக் காட்டிக் கொள்ளவில்லை. ஆனால், இரண்டு மூன்று சோடிக் கண்கள், சனக்கும்பலுக்குள் எமது ஒவ்வொரு நடவடிக்கையையும் இரகசியமாக நோட்டமிட்டபடியே இருந்தன. கடைசியாக எமது இரகசியச் சந்திப்பு ஏற்படும் வரை, அவை எம்மைத் தொடர்ந்தன.

பழைய, ஆட்டம் கண்ட, கறுப்பு நிற வாடகைக் கார் ஒன்று விமான நிலையத்திலிருந்து எம்மை ஏற்றிக் கொண்டு, கட கடவென்ற

சத்தத்துடன் சென்னை வீதிகளூடாகச் சென்று, முன்னேற்பாடு செய்யப்பட்ட ஒரு விடுதியின் முன்னே நின்றது. அதை விடுதி என்பதை விட, தங்கிடம் என்று கூறுவதே பொருந்தும். திரு. கிருஷ்ணன் எம்மை அங்கே சேர்த்துவிட்டு, நாம் இருக்கும் இடத்தை விடுதலைப் புலிகளின் தலைவருக்குத் தெரியப்படுத்துவதற்காக, எமக்குத் தெரியாக வேறு ஒரு இடத்துக்கு சென்றுவிட்டார். நாம் சென்னை வந்த விடயம் இரகசியமாக இருக்க வேண்டும் என்பதற்காக நகரின் வறிய ஒரு பகுதியிலே இந்தத் தங்குமிடம் தேர்ந்தெடுக்கப்பட்டது என்று கருதினேன். ஆனால் விபரம் இரகசியமாக இருக்க முடியாது போய்விட்டது. இந்தியாவின் வெய்யில் வாட்டியெடுக்க யன்னல்களை இடைவிடாது திறந்து வைத்திருந்தோம். பிரதான வீதியில் யன்னலைத் திறந்து வைத்திருக்கும் போது, போவோர் வருவோருக்கு உள்ளே இருப்பவர்களை நன்கு தெரிந்தது. அறை விசாலமாகத் திறந்து இருந்ததால் - தனிமையில் நின்று ஆடை மாற்ற முடியாது. அதற்காக வசதி குறைவான குளியல் அறைக்குள்ளேயே செல்லவேண்டியிருந்தது. குளியல் அறையில் குழாய் ஒழுகிய வண்ணமே இருந்தது. இதனால், அசுத்தமான நிலம் எந்தநேரமும் ஈரமாக இருந்தது. அந்த ஈர அசுத்தம் உடுப்பில் புரளாது ஆடை மாற்றுவது கடின-மாக இருந்தது. இனி, ஒரு வெள்ளைக்காரப் பெண், தமிழன் ஒருவனைக் கொண்டு வந்து அந்த அறையை காந்தர்வபுரியாக்குகிறாளோ என்ற சந்தேகமே பலருடைய கண்ணைக் குத்தியிருக்க வேண்டும். மேலை நாட்டவர் அனைவரும் செல்வந்தர் என்பதே பெரும்பாலான இந்தியர் மட்டில் நிலவும் நம்பிக்கை. அப்படியான நிலையிலே ஒரு தமிழரும் வெள்ளைக்காரப் பெண்ணும் தவறான நோக்கத்தோடு கூடிவரவில்லை என்றால், நகரின் வறிய பகுதி ஒன்றில், ஏன் இத்தகைய வசதி குறைவான தங்கிடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள் என்பதே அவர்களுடைய கேள்வி. பிரபாகரன் அவர்களும் அவருடைய போராளிகளும் நடுச் சாமத்திலே எம்மைச் சந்திக்க வந்தபோது ஏற்கனவே சந்தேகக் கண் கொண்டிருந்த தங்கிடப் பணியாளர்களினதும், உள்ளூர் மக்களினதும் கண்கள் மேலும் விரிந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

### திரு. பிரபாகரனை சந்தித்தோம்

விடுதலைப் புலித் தலைவர்களை முதலில் சந்திக்கும்போது அவர்களிடமிருந்து எதை எதிர்பார்க்க வேண்டும் என்று நான் முன்கூட்டியே எதையும் யோசித்து வைக்கவில்லை. அவர்களுடைய புரட்சிகரப் போராட்ட நடவடிக்கைகள் பற்றி எனக்கு ஏற்கனவே தெரியும்.





அவர்களுடைய ஆயுதப் போராட்டத்தை நான் மனப்பூர்வமாக ஆதரித்தேன். லண்டனில் விடுதலைப் புலிகளுக்காக பணிபுரிபவர்கள் கூறியதன்படி, தமிழ்ப் போராட்ட இயக்கத்தின் வரலாற்று நாயகர் வேலுப்பிள்ளை பிரபாகரன் அவர்களே தான். ஒடுக்கப்பட்ட தமது மக்களின் விடுதலை என்ற அரசியல் இலக்கில் விடா முயற்சியுடன் தம்மை அவர் அர்ப்பணித்து இருந்தார். தமிழ்த் தேசியப் பிரச்சினைக்கு ஒரே இறுதியான தீர்வு, தனியான தமிழ் அரசை நிறுவுவதே என்பதில் அவர் உறுதியாக இருந்தார். இவை எல்லாம் இலண்டன் செயற்பாட்டாளர்கள் எனக்குக் கூறியவை.

ஆரம்ப காலத்தில் இருந்தே ஒழுக்கம், கட்டுப்பாடு என்பவற்றில் அவர் கண்டிப்பானவர் என்பது மிகப் பிரசித்தம். உண்மையில் கட்டுப்பாட்டை நடைமுறைப்படுத்தும் அவருடைய சீலமே அவருக்கு பெயரையும் மரியாதையையும் நிறுவியிருந்தது. அதுவேதான், சிறீலங்கா இராணுவக் கட்டமைப்போடு மோதும் வல்லமை படைத்த கெரில்லாப் படையணிகளை நிறுவப்பாடுபட்ட ஏனைய அனுபவமற்ற தலைவர்களிடமிருந்து அவரைப் பிரித்து எடுத்துக் காட்டியது. ஆனால், ஒழுக்கக் கட்டுப்பாடு என்பதற்காகவே, பிடிவாதமாக ஒழுக்கக் கட்டுப்பாட்டை அவர் வலிந்து திணிக்கவில்லை. போராளிகள் சிறப்பாக செயற்பட வேண்டும் என்றால், அவர்களுடைய உறுதிப்பாட்டுக்கும் உயர்ந்த செயற்பாட்டுக்கும், கட்டுப்பாடு அவசியம் என்று அவர் நம்பினார். அவருடைய உயர்ந்த நல்லொழுக்கம், அவரைத் தூய்மைவாதி என்று கூறும் அளவிற்கு, அவருக்கு நல்ல பெயரைப் பெற்றுக் கொடுத்தது. தலைவன் ஒருவன் தனது அதிகாரத்தைத் தங்க வைக்க வேண்டுமானால் தனிப்பட்ட அவனுடைய வாழ்க்கையில் அவன் அப்பழுக்கற்ற நடத்தையுடன் இருக்க வேண்டும் என்று அவர் கருதுகிறார். அவருடைய ஆளுமையின் இச் சிறப்பம்சங்கள் இத்தனை ஆண்டுகள் ஆகியும் சிறிது கூட மழுங்கவேயில்லை. பிரபாகரனை விமர்சித்துக் கொண்டிருப்பவர்கள் அவரது பண்பமைதியின் இலட்சணங்களை அடிப்படையாகக் கொண்டே அவரைச் சர்வாதிகாரத் தன்மை பொருந்தியவர் என்று கூறியிருக்கிறார்கள். ஆனால் ஒழுக்கம், கட்டுப்பாடு ஆகிய பண்புகள் பரந்துபட்ட தமிழ் மக்களிடையே அவர் தமது ஆதரவைத் தக்க வைத்துக் கொள்ள வழிகோலின எனலாம். பிரபாகரன் ஒரு இரும்பு மனிதன் என்ற பெயர் நிலவிய போதிலும், எமது முதற் சந்திப்பின்போது, பழகுவதற்கு இனிய, அன்பும் பண்பும் மிக்க ஒரு மனிதரையே நான் கண்டேன். அவரை விட மூத்தவர்களும் அவரோடு நெருங்கிப் பழகியவர்களும் பாசத்தோடு அழைக்கும் அந்த “தம்பி” எமது

தங்கிடத்தின் வசதிக் குறைபாடுகளை உடனே புரிந்து கொண்டார். அங்கு எத்தகைய அசௌகரியங்களை நான் எதிர் கொள்கின்றேன் என்பதையும் ஊகித்துக் கொண்டார். 'வசதியான' விடுதி ஒன்றை ஏற்பாடு செய்யுமாறு தமது போராளி ஒருவரை அனுப்பினார். மறுநாளே நாம் விடுதி மாறினோம்.

பிரபாகரன் அவர்களுடனான முதல் சந்திப்பு நள்ளிரவில் நிகழ்ந்தது. விடுதலைப் புலிகளின் ஆரம்ப கால உறுப்பினர்களில் ஒருவரான பேபி சுப்பிரமணியமும் அவரோடு கூட வந்திருந்தார். பிரபா-கரனைச் சந்திப்பதற்கு முன், நாள் முழுவதும் அந்த மோசமான அறைக்குள் வியர்வையில் தெப்பமாக நனைந்து, சென்னைக்கு உரித்தான வியர்வை ஈரக் கசிவோடு காத்திருந்தோம். தலைமறைவு வாழ்க்கையில் ஈடுபட்டவர்கள், எதற்கும் இருளும்வரை காத்திருக்க வேண்டும் என்பது, சூதுவாதற்ற கற்றுக் குட்டிகளான எமக்கு முதலில் தெரியாது. இருண்ட பின்னரும், தாமதமாகவேதான் சந்திப்புகளும் நிகழும் என்பது கூட அப்போது தெரியாது. பிரபாகரன் அவர்களைப் பொறுத்த வரையில் அவர் பாதுகாப்பைக் கூர்மையாகக் கடைப்பிடிப்பவர். இருண்ட பிறகே நடமாட வேண்டும் என்பதை தேவையைக் கருதி, பழக்கத்தில் கொண்டு வந்தார். தமது அர்ப்பணிப்பையும் இலட்சியத்தையும் அவர் எவ்வளவு தீவிரமாகக் கருதினார் என்பதை, பாதுகாப்புப் போன்ற பிரச்சனைகளிலே கூட அவர் காட்டிய அக்கறை புலப்படுத்தியது. எனக்கும் அது உடன்பாடானதே. அவருடைய பதினாறு வயதில் இருந்து கடந்த ஏழு ஆண்டுகளாகத் தேடப்பட்டு வருபவர். விடுதலைப் போராட்டத்தில் அர்ப்பணிப்போடு ஈடுபட்டவர்களை ஒழித்துக் கட்டத் தயங்காதவர்கள் நடமாடிய ஒரு சூழலிலே தமது பாதுகாப்பில் அவர் கவனமாக இருந்தது நியாயம் தானே? போராட்டம் என்பது அவரைப் பொறுத்த வரையிலே ஒரு பொறுப்பு வாய்ந்த காரியமாகும்.

இரண்டு இளைஞர்கள் நன்றாக இருட்டிய பின் ஆரவாரம் எதுவும் இல்லாமல் வாயிலில் வந்து அமைதியாக நின்றார்கள். ஒருவர் வெள்ளை வேட்டி கட்டி நாட்டு உடையில்; மற்றவர் நீளக்காற்சட்டையும் வெளிறிய நிறச் சேட்டும். இவ்வளவு இளமையான அப்பாவிகளான அந்த 'இரண்டு பயங்கரவாதிகளைப்' பார்த்தபோது நான் திகைத்துப் போனேன். அவர்களுடைய தோற்றம் அவர்களுக்குச் சூட்டப்பட்டிருந்த பெயருக்கு ஈடாகவேயில்லை. இரண்டு பேரும் உயரம் குறைந்தவர்கள். துப்பரவாக காணப்பட்டார்கள். அவர்களுடைய பெயருக்கும், புகழுக்கும் ஏற்றதாக அவர்களது தோற்றம் அமையவில்லை. மிகவும் மென்மையான இதயத்தைக் கொண்ட அப்பாவிகள் போன்ற தோற்றம்.





பேபி சுப்பிரமணியத்திடம் எப்போதும் ஒரு பை. அதில் வெவ்வேறு பத்திரங்களும் அரசியல் பிரசுரங்களும் நிரம்பி இருக்கும். பேபி சுப்பிரமணி யத்தை எப்போது நினைத்தாலும், நாட்டு உடையுடன், வெள்ளை வேட்டி, சுமக்க முடியாத சுமை கொண்ட அந்த உப்பிப்போன தூக்குப் பையோடு தோன்றும் குள்ளமான, சற்றுக் குண்டான மனிதரே நினைவுக்கு வரும். இப்படியான சுமைகளோடு பிரபாகரன் அவர்களைப் பார்க்க முடியாது. அவருடைய பாணியே வேறு. அவருடைய அணிகலன் கச்சிதமாக இருக்கும். ஆடை புனைவது பிரபாகரன் அவர்களுக்கு ஒரு நிகழ்வு. அவதி அவதியாக ஆடை அணிந்து வேகமாக வெளிக்கிட வேண்டும் என்ற அவசரத்தை அவரிடம் காணமுடியாது.

பிரபாகரனுடைய இளம் முகம் தெளிவானதாக, பிரகாசமாக இருக்கும். அவருடைய அகன்ற கண் விழிகளில் ஊடுருவும் பார்வை. உள்ளே ஊடறுத்து ஆத்மாவை உற்றுப் பார்ப்பது போன்ற உணர்வே மற்றவருக்கு ஏற்படும். அவருடைய கண்களின் ஆழமே அவரது மனதையும் சிந்தனையையும் பிரதிபலித்துக் காட்டும். மற்றவருடைய முகத்தை நுணுக்கமாக அளவையிடுவது ஒரு பொதுவான நிகழ்வு. மற்றவருடைய ஒவ்வொரு வார்த்தையையும் அவரது பார்வை ஊடறுக்கும் போது உரையாடலில் எவ்வித பொய்களோ அன்றி ஏமாற்றுகளோ நுழைவது என்பது இயலாத காரியம்.

எமது முதல் சந்திப்பு பல மணிநேரம் நள்ளிரவிலிருந்து விடியும் வரை நீண்டது. பிரபாகரன் அவர்களுடைய விசாரணை எல்லாம் பாலா வின் தனிப்பட்ட வரலாறு பற்றியும், குறிப்பாக தமிழ் மக்களின் ஆயுதப் போராட்டம் தொடர்பான பாலாவின் கருத்துப் பற்றியே இருந்ததாக பாலா பின்னர் என்னிடம் தெரிவித்தார். பாலாவின் அரசியல் எழுத்துகளையும், சேகுவேரா, மாவோ சேதுங் ஆகியோரின் கெரில்லாப் போர் முறை பற்றிய பாலாவின் மொழி பெயர்ப்புகளையும் 'தம்பி' ஏற்கனவே படித்திருந்தார். ஆனாலும் பாலாவுடையதும் என்னுடையதும் போராட்ட உறுதிப்பாடு பற்றி பிரபாகரன் நம்பிக்கை வைப்பதற்கு இவை போதுமானவையாக இருக்கவில்லை. இலண்டனில் உள்ள ஆட்கள் பற்றி, போராட்டம் மட்டில் அவர்களுடைய ஈடுபாடு உண்மையானதா, தன்னியல்பானதா, நீடித்ததா என்பது பற்றி அவர் விரிவாக அறிய விரும்பினார். ஆயுதப் புரட்சிப் போராட்டம் ஒன்றை முன் நகர்த்த அரசியல் கோட்பாடும் செயற்பாடும் எவ்வளவு அவசியம் என்பதைத் 'தம்பிக்கு' உணர்த்த பாலா முற்பட்டார். சந்திப்பு வெற்றிகரமாக நடந்தது. எடுத்த எடுப்பிலேயே ஒருவரை ஒருவருக்குப் பிடித்திருந்ததாலும் அவர்களிடையே ஓர் ஆழமான புரிந்துணர்வின் அடிப்படையில் தனித்துவமான நட்பை வளர்த்தெடுக்க

பல ஆண்டுகள் பிடித்தன. எனக்கும் பிரபாகரன் அவர்களைப் பிடித்திருந்தது. என்மீது என்றுமே அவர் சந்தேகம் கொண்டதில்லை. என்னை எப்படி அழைப்பது என்பது அவருக்குப் பிரச்சனையாகப் பட்டது. தமிழ்க் கலாச்சாரத்தில் திருவாளர் என்றோ, திருவாட்டி என்றோ பொதுவாக நேராக அழைப்பதில்லை. சமூகப் படிநிலை, சமூக உறவுகள், குடும்ப உறவுகள் ஆகியவற்றின் அடிப்படையிலேயே அவர்கள் கூப்பிடுவார்கள். எங்கள் உறவு குடும்ப உறவல்ல; பழகி வந்த உறவுமல்ல; ஆகவே என்னை அவர் 'அக்கா' என்று கூப்பிட முடியவில்லை. அதே சமயம் திருமதி பாலசிங்கம் என்றும் அழைக்க முடியவில்லை. நான் அவரை விட வயது கூடியவள் என்பதால் என்னைப் பெயர் சொல்லிக் கூப்பிடவும் முடியவில்லை. இந்தப் பிரச்சனைக்கு 'தம்பியே' ஒரு சமரசத் தீர்வு கண்டார். பாசத்தோடும், சுருக்கமாகவும் "அன்ரி" என்று கூப்பிட்டார். பாலாவையும் வேறு ஒன்றிரண்டு பேரையும் தவிர வயது வித்தியாசமின்றி ஏனைய தமிழ் மக்களுக்கு "அன்ரி" என்றே அறிமுகம் ஆனேன். அன்ரி என்றே எல்லோரும் அழைத்தார்கள். பலருக்கு எனது இயற் பெயர் தெரியாது என்றே நினைக்கின்றேன்.

முதல் நாள் சந்திப்புக்குப் பின், கூடுதலான வசதிகள் கொண்ட வேறு விடுதியிலே சேர்க்கப்பட்டோம். அதையடுத்து, தம்பி தம்முடன் ஒருவரையோ, கூடுதலான போராளிகளையோ கூட்டிக் கொண்டு கிரமமாக வந்தார். உரையாடல் விடியும் வரை நடக்கும். பாலாவிடம் பேசுவதற்கு தம்பியிடம் நிறைய இருந்தது; தம்பியோடு விவாதிக்க பாலா விடம் நிறைய இருந்தது. தமிழ் நாட்டில் இருந்த போராளிகளுக்கு அரசி யல் பாடங்களை பாலா நடத்த வேண்டும் என்றும் தீர்மானமாயிற்று. இதற்காக விடுதிக்கு இளைஞர்கள் வருவதும் போவதுமாக இருந்தால், அது கவனத்துக்கு உள்ளாவதோடு சந்தேகத்தையும் தோற்றுவிக்கும் என்பதால், வகுப்புகளை நடத்த, விடுதி ஒரு பொருத்தமான இடமாகப் படவில்லை. தமிழ் நாட்டு சட்ட மன்ற உறுப்பினர் செஞ்சி இராமச்சந்திரன் அவர்களுடைய பிரத்தியேக வாழ்மனைக் கூடத்திலே வகுப்புகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. இறுதியில், விடுதியை விட்டு, எம்.எல்.ஏ யின் தொடர் இல்லத்தில் குடியேற்றப்பட்டோம். கருணாநிதி அவர்களுடைய மாநில அரசின் சட்டமன்ற உறுப்பினரும் வேளாண் துறை அமைச்சருமான காளிமுத்து அவர்கள் விடுதலைப் புலிகளுக்கு உதவி புரியும் இன்னொருவர். அங்கே இருக்கும் போது அவரையும் சந்தித்தோம். மேலும் ஒருவர் புலமைப் பித்தன்; புகழ் பெற்றவர்; அலையலையாக சுருண்ட, நரை நிறைய ஓடிய முடி; நரை ஓடிய கொடுவாள் மீசை. இவரும் விடுதலைப் புலிகளின் பலமான ஆதரவாளர். இரண்டு தடவை





அவருடைய வீட்டுக்கு போயிருக்கிறோம்.

பாலா நடத்திய பாடங்களில் சமூக அரசியலும் உளவியல் தத்துவங்களும் அடிப்படையாக நன்கு இழையப்பட்டிருக்கும்; சமகால தேசிய விடுதலைப் போராட்டங்களின் விளக்கம் இருக்கும்; சோஷலிச தத்துவங்களும் அரசியல் எண்ணக் கருக்களும் துலக்கப்பட்டிருக்கும்; மேற்குலக சமுதாய வடிவத்தை பிரதிபலிக்கும் வர்க்க அமைப்புக்கும் இந்தியா, சிறீலங்கா போன்ற தெற்காசிய சமூகங்களின் சாதி அமைப்புக்கும் உள்ள வேறுபாடுகள் தெளிவுபடுத்தப்பட்டிருக்கும்; மேற்குலக சமுதாய சிந்தனையாளர் வரையறை செய்த "சமுதாயம்" என்பதன் வெவ்வேறு எண்ணக் கருக்கள் எடுத்துரைக்கப்பட்டிருக்கும். பாலியல் பண்புகள் பற்றிக் கூடுதலாக அறிந்து கொள்வதில் சில இளம் போராளிகள் ஆர்வம் காட்டிய போது சிக்மண்ட் பிரைட்டின் கோட்பாட்டின் அடிப்படையில் பாலா அதற்கென சில வகுப்புகள் நடத்தினார்.

சோஷலிச தத்துவம் மட்டில் பல போராளிகளுக்கு உள்ளார்ந்த பற்று இருந்தது. ஆனாலும் யாரும் மாக்சிய நிலைப்பாட்டை என்றும் தழுவியதில்லை. மாக்சிய புரட்சியாளர்கள் என்ற அந்த மாமூல் தோற்றம் கூட இவர்களில் இல்லை. இளம் புரட்சியாளர் என்ற ஈ.பி.ஆர்.எல்.எஃப் போன்ற அமைப்புகளில் இருந்தவர்களைப் போல, இவர்களில் எவரையும் வர்ணிக்க முடியாது. இவர்கள் எவரும் நீண்ட தாடியுடனோ, அழுக்கான உடைகளுடனோ அவர்களைப் போல நடமாடவில்லை. அப்படிப் பட்ட தோற்றம் பிரபாகரனுக்கு சகிக்க முடியாத ஒன்று. முன்னர் குறிப்பிட்டது போல, சுத்தம், கச்சிதமான உடை ஆகியவற்றில் அவர் கண்டிப்பானவர். தம்முடைய போராளிகளிடமும் இதே தரங்களை ஊட்டுவார். குறிப்பாக, மூத்த உறுப்பினர்கள் இதில் முன்மாதிரியாகத் திகழ வேண்டும் என்று எதிர்பார்ப்பவர். உடலையும் உடையையும் மிகவும் தூய்மையாக வைத்திருக்க வேண்டும் என்பது ராணுவ அமைப்பின் எதிர்பார்ப்பும் கூட. வெளித் தோற்றத்தில் அசட்டையாகவும் அழுக்காகவும் காட்சியளித்து தம்மை முற்போக்கான புரட்சியாளர் என பாசாங்கு செய்வதை விட சுத்தமாக இருத்தல் இயற்கைக்கு இசைவானது மட்டுமன்றி உடல் நலத்திற்கும் அவசியமானது அல்லவா?

இதையெல்லாம் விட, காலப் போக்கில் வேறொன்றை ஆழமாக உணர்ந்தோம். அதாவது, தமிழ் மக்களின் சமூக கட்டமைப்பில் மாக்சியம் பெருமளவு எடுபடவில்லை என்பதே அது. அங்கே சமயம், குறிப்பாக இந்து சமயம் தமிழ் மக்களின் சமூக கலாச்சார வாழ்க்கையின் தத்துவமாக ஆழப் பதிந்திருந்தது. ஒரு சமூக, அரசியல் கோட்பாடாகவே மாக்சியத்தை விடுதலைப் புலிப் போராளிகளுக்கு பாலா

அறிமுகப்படுத்தியிருந்தார். மாக்சிய சிந்தனைகளை பயன்படுத்தி ஆயுதப் போராட்டமானது அரசியல் போராட்டத்தின் உயர்ந்த வடிவம் என்பதை விளக்கியிருந்தார். ஆனால் மாக்சியத்தில் கூட குறைபாடுகளும் அளவெல்லைகளும் இருந்தன. அது ஐரோப்பிய சூழலைத் தழுவிய தத்துவம் ஆதலால் அடிப்படையிலேயே வித்தியாசமான, வேறு சமூக அரசியல் சூழலுக்குத் தேவையான விளக்கங்களைத் தரக்கூடிய பொருத்தமான தத்துவார்த்த வடிகாலாக அது இருக்கவில்லை. எடுத்துக் காட்டாக, மாக்சிய சிந்தனைகளைப் பயன்படுத்தி, சாதிப் பின்னலோடு அமைந்த யாழ்ப்பாண சமுதாயம் தொடர்பான சமூகக் கட்டமைப்பு ஆய்வை நடத்துவது கடினம். அதைப் போலவே முதலாளித்துவமோ, மானிய முறையோ அல்லாத ஒரு சமூக அமைப்பில் வர்க்க அடுக்குகளைப் பொருத்திப் பார்ப்பது கடினம். அச்சடித்த முதலாளித்துவ வடிவமோ அன்றி மானிய பிரபுத்துவ வடிவமோ அங்கு இல்லை. உயர் சாதி 'வேளாளர்' என அழைக்கப்படும் நடுத்தர வர்க்கமே அங்கு மேலோங்கி நிற்கின்றது. மேலும், யாழ்ப்பாணத் தமிழரைப் பொறுத்த வரையிலே அவர்களுக்கென்று நம்பிக்கை முறைகளும் அரசியல் உள்ளுணர்வுகளும் உண்டு. எவ்வளவுதான் தத்துவப் பகுப்பாய்வுகளை முன்வைத்தாலும், அல்லது வலியுறுத்திக் கூறினாலும் அவர்களுடைய சிந்தனைப் போக்கை அவை இலகுவில் மாற்றப் போவதில்லை. ஆயுதப் போராட்டமானது சுயநிர்ணய உரிமைக்கான அரசியல் போராட்டம் என்பதை நியாயப்படுத்துவதற்காகவே விடுதலைப் புலிகள் தங்களது ஆரம்ப கால வரலாற்று வளர்ச்சிக் கட்டத்தில் மாக்சிய-லெனினிச தத்துவங்களைப் பயன்படுத்தினார்கள். ஆனால் பின்னர் கொம்யூனிச ஆட்சி அமைப்புகள் தகர்ந்த போது மாக்சிய சிந்தனையை இயக்கம் கைவிட்டு, சமூக சமநிலைத் தத்துவத்தை இயக்கத்தின் சித்தாந்தமாக வரிந்து கொண்டது. தமிழ்த் தேசிய உணர்வு எழுச்சியே போராட்டத்தின் உந்து சக்தியாக விளங்கியது என்பதில் ஐயமே இல்லை.

சென்னையில் இந்தக் கலந்துரையாடல்களும் வகுப்புகளும் நடைபெறும் போதெல்லாம் நான் அடிக்கடி வெளியே சென்று விடுவேன். போராளி ஒருவரை துணைக்கு அழைத்துக் கொண்டு சென்னை நகரக் காட்சிகளைச் சுற்றிப் பார்ப்பேன். இந்தியா, எனக்கு ஒரு புது அனுபவம். முற்றிலும் நேர்மாறான உலகமாகவே அது எனக்குத் தோன்றியது. கால அடைவில், இந்தியாவில், குறிப்பாகத் தமிழ் நாட்டில் பல ஆண்டுகள் வாழ்ந்த பின், அந்த நாட்டையும் அதன் மக்களையும் நேசிக்கத் தொடங்கினேன். இலங்கை வடகிழக்குப் பகுதியில் இருந்து நான் 1999 ல்





வெளியேற நிர்ப்பந்திக்கப்பட்டபோது, அடுத்து வசிக்க விரும்பும் இடத்தை தெரிவு செய்ய சந்தர்ப்பம் வளங்கப்பட்டிருந்தால், லண்டனுக்குத் திரும்புவதற்குப் பதிலாக சென்னையையே தேர்ந்தெடுத்திருப்பேன்.

## இந்தியா பற்றிய எனது முதல் மனப்பதிவுகள்

இந்தியாவிலே நான் 1979 இல் இருந்து 1987 வரை வாழ்ந்தேன். அந்தக் காலம் முழுவதும் மேற்குலக அமைப்புக்கு நேர்முரணான வேறு ஒரு சமூக கலாசார சூழலிலேயே வாழ்ந்தேன். இரண்டுக்கும் இடையே உள்ள முரண்பாடுகள் எண்ணில் அடங்காதவை; சிக்கலானவை. அவற்றின் ஏற்ற தாழ்வுகளைப் பதிவு செய்ய முனைந்தால் அதுவே ஒரு தனி நூல் ஆகிவிடும். அங்கும் இங்குமாக ஒரு சில மனப் பதிவுகளையே இங்கு குறிப்பிடுகின்றேன். எடுத்த எடுப்பிலேயே பரந்துபட்ட பார்வையின் அடிப்படையில் ஒன்றைக் குறிப்பிடலாம். எனது மேலைத்தேய சமூகமயமாக்கலுக்கும் தமிழ் நாட்டு வாழ்க்கை முறைக்கும் இடையே காணப்பட்ட வேறுபாடாக முதலில் சமூக உறவுகளைக் கூறலாம். அந்த உறவுகளின் அடிப்படைகளே முதலில் குறிப்பிடத் தக்கவை. தனி ஆள், தனியான வாழ்க்கை, ஒடுக்கமான சிறிய குடும்பம் போன்ற அடிப்படைகள் மீதே மேற்கத்தைய சமூக வாழ்க்கை கட்டப்பட்டிருக்கிறது. ஆனால் தமிழ் நாட்டிலும் சரி, இலங்கையிலும் சரி, தனித்து ஒதுங்கி வாழ முயல்வது தோல்வியிலேயே முடியும். அப்படியான அபிலாசை இந்த சமூகங்களில் வாழும் மக்களுக்கு இல்லை. வெளியார் தலையீடு இல்லாமல், இனி முன்னறிவித்தல் கொடுத்துவிட்டே விருந்தினர் வரவேண்டும் என்ற நியதி இல்லாமல் ஒரு வீட்டின் நான்கு சுவர்களுக்குள் ஒதுங்கியிருந்து தனிப்பட்ட வாழ்க்கை நடத்துவது என்பது தெற்கு ஆசியாவில் பெரும்பாலான மக்களால் நினைத்துப் பார்க்க முடியாத ஒன்று. இந்த அடிப்படைச் சிந்தனையை நான் மனதிலே பதித்துக் கொள்ள வேண்டி இருந்தது மட்டுமன்றி யதார்த்த வாழ்க்கையிலும் அதைப் பேண வேண்டியிருந்தது. யாழ்ப்பாணத்தில் எமது வீட்டுக்கு வந்த பிரித்தானிய செய்தியாளர் ஒருவர் என்னிடம் விடுத்த கேள்வியை என்னால் என்றுமே மறக்க முடியாது. அப்பொழுது 1991ம் ஆண்டளவில் என்று நினைக்கிறேன். ஒரு திறந்த வீட்டில் எந்த நேரமும் மக்களால் சூழப்பட்ட நிலையில் வாழ்ந்து கொண்டிருந்தோம். அதுவேதான் மிக இயல்பாகவும் இருந்தது. எதைப் பற்றியுமே சிந்திக்க மறந்திருந்தேன். அப்படியான சூழலில் தனிமையின்றி உங்களால் எப்படி ஒரு கூட்டத்திற்குள் வாழ முடிகிறது என அந்த செய்தியாளர் திடீரெனக்

கேட்டதும், திகைத்துப் போனேன். வீட்டின் உள்ளும் புறமும் அத்தனை பேரும் சுறு சுறுப்பாக இயங்கிக் கொண்டிருப்பது அவரை வியக்க வைத்தது. எமது வீடு பரக்கப் பரக்க திறந்திருந்தது. எமக்குத் தெரிந்தவர்கள் எல்லோரும் இரவு பகல் என்றில்லாமல் வருவதும் போவதுமாக இருந்தார்கள். இந்தியாவில் எங்கள் வீடு எப்போதாவது பூட்டியோ யாரும் இல்லாமலோ இருந்ததில்லை. தனி ஒருவரிடம் சமுதாயம் எதிர்பார்க்கும் உறவும் இத்தகைய சமூக ஊடாட்டத்தோடேயே இணைந்து இருந்தது. சொல்லப் போனால், தாய்மை, ஒரு பெண்ணுக்கு குறித்த ஒரு சமுதாயக் கடமையையும் தகமையையும் கொடுக்கிறது. அந்தக் கடமையை அவர் நிறைவேற்ற வேண்டும் என எதிர்பார்க்கப்படுகிறார். அது அவருக்கு சமூக உறவுகளையும் அதிகாரத்தையும் ஏற்படுத்திக் கொடுக்கிறது. வீட்டில் மூத்த மகன் மீது தனியான பொறுப்பும் தகமையும் சுமத்தப்படுகின்றன; அதற்கான கடப்பாடுகளும் பொறுப்புகளும் கூட, பளு ஏற்றப்படுகின்றன. அதைப் போலவே ஒவ்வொரு தனி மனிதருக்கும் சமுதாயக் கடமையும் தகமையும் உண்டு; இவற்றில் இருந்து உறவுகள் துளிர்க்கின்றன. மக்களிடையே சமூக ஊடாட்டம் தொடர்ந்து நிகழ இது வழி ஏற்படுத்துகிறது. இந்தச் சமூக உறவுகள் பலமுகம் கொண்டவை, நிலைத்து நிற்பவை. தனியாள் தேவைகளுக்கு நேரம் கிடைப்பதே அரிது. ஒரு கணவனுக்கும் மனைவிக்கும் ஏதாவது பேசுவதற்கு நேரம் கிடைக்கிறது என்றால், அது பெரும்பாலும் இரவில் ஒரு சில மணிநேரம் தான். இந்தச் சூழலுக்குப் பொதுவான காரணம் கூட்டுக் குடும்ப முறைதான். இதுவே தான் இந்திய, இலங்கை சமுதாயங்களில் சமூக உறவுகளின் அடிப்படையாகும்.

தமிழ்ச் சமுதாய வடிவமைப்பில் குடும்பம் என்று வரும்போது கூட்டுக் குடும்ப முறையே முக்கியத்துவம் பெறுவது. பெரும்பாலான வீடுகளில் பெற்றோர் பிள்ளைகள் தவிர யாரோ ஒரு உறவினரும் அவர்களோடு வாழ்வார். வயதான பெற்றோர், குடும்பமாக வளர்ந்து விட்ட பிள்ளைகளோடு வாழ்வதும், தமையன், தமக்கை குடும்பங்களுடன் இளையவர்கள் வசிப்பதும் மிகவும் பொதுவானது. மருமக்கள் கூட, வந்து தங்குவார்கள். தமிழ் மக்களிடையே நிலவும் தாய்வழிச் சமுதாய முறைமைகளால், வீடுகளைச் சகோதரிகள் பங்கு போடுவதும் ஆங்காங்கே உண்டு. வீட்டுத் தளத்தில் ஒரு சகோதரி குடும்பமும் மேல்மாடியில் இன்னொரு சகோதரி குடும்பமும் வசிப்பது பொதுவான ஒன்று.

சாப்பாட்டு வேளையும் ஒரு பொது நிகழ்வேதான். சாப்பாட்டுக்கு





மற்றவர்கள் அழைக்கப்படுவதும் உண்டு. அப்படியான வேளைகளில் சிறப்பு ஏற்பாடுகள் நடக்கும். உயிர் வாழ குடி நீர் அடிப்படையோ உணவும் அப்படியேதான் கருதப்படுகிறது. பகிர்ந்து உண்ணல் நியதி ஆகிறது. ஆகவே இந்தச் சூழலில், தனியொரு தம்பதியர்க்குச் சமைக்கும் எனது வழக்கத்தை நான் மாற்றிச் சமூகச் சமையலாக செய்ய வேண்டியிருந்தது. பொதுவாக தமிழ்ச் சமுதாயத்தில் பெரும்பாலான பெண்கள் வீட்டாருக்குத் தேவையானதைக் காட்டிலும் கூடுதலாகவே சமைப்பார்கள். இதனால், வீட்டுக்கு விருந்தினர் எந்த நேரம் வந்தாலும் அவர்களுக்கு உணவு பரிமாறக் கூடியதாக இருக்கும். எந்த வேளை எவர் வந்தாலும் சாப்பிட அழைப்பதும் விருந்து பகிர்வதும் தமிழ் மக்களின் விருந்தோம்பலில் முக்கிய அம்சமாகும். இந்தச் சமூக கலாசார வழக்கத்தை நடைமுறைப்படுத்தும் பொறுப்பு, பொதுவாக பெண்களுடையதே. இனி, பெண்கள் அண்டை வீட்டுப் பெண்களுடன் உணவு பகிரும் வழக்கமும் உண்டு. ஒரு பெண், தான் சமைத்த உணவில் சிறு பகுதியையேனும் சுவைத்துப் பார்ப்பதற்காக ஒரு நண்பருக்கோ அண்டை வீட்டுக்கோ அனுப்பாது ஒரு நாளேனும் கழியாது எனலாம். தாம் சமைக்கும் உணவில் ஏதோ ஒன்று எமக்குப் பிடிக்கும் என்று அந்தப் பெண்ணுக்குத் தெரிந்தால், அந்த உணவில் சிறிதேனும் ஏதாவது ஒரு சாப்பாட்டு வேளைக்கு எமக்கு வந்து சேர்ந்து விடும். கிராமப் பகுதிகளில் ஒரே குடும்பத்தில் உள்ள பெண்களிடையேயும், இனி அண்டை வீட்டுப் பெண்களுடனும் சமூக உறவு நெருக்கமாக இருக்கும். தாம் எங்காவது வெளியே செல்லும் போது, தமக்காக உணவு சமைக்குமாறு சிநேகிதியையோ உறவினரையோ அண்டை வீட்டாரையோ கேட்பதற்கு, பெண்கள் தம்மிடையே தயங்குவதில்லை. எதிர்பாரா விருந்தினர் வந்து சேர்ந்து தம்மிடம் போதுமான உணவு இல்லாவிட்டால், அண்டை வீட்டு அல்லது நண்பர்களின் சமையல் அறைக்குச் சென்று அங்கு இருப்பதை உரிமையோடு பெறவும் பெண்கள் தயங்குவதில்லை.

மேற்குலக வாழ்க்கை முறையோடு இந்தியாவை ஒப்பு நோக்குகையில் இன்னுமொரு முக்கியமான வேறுபாட்டைக் கண்டுகொள்ளலாம். இந்தியாவில், தனி ஆளின் நடத்தை மீது செல்வாக்கையும் கட்டுப்பாட்டையும் பிரயோகிக்கும் பலம் பொருந்திய சமூக அழுத்த சக்தியாக விளங்குவது குடும்பமும் சமுதாயமுமாகும். சமூக அபிப்பிராயம் ஒருவருக்கு கீர்த்தியை உருவாக்கலாம். அல்லது அதை உடைக்கலாம்; அவருடைய எதிர்காலத்தையே பாதிக்கலாம். பெண்களைப் பொறுத்த வரையில், இது மிக முக்கியமானது. சமூக

அபிப்பிராயம் மட்டிலான அச்சத்தை, பெண்கள் மீதான சமுதாயக் கட்டுப்பாட்டின் காத்திரமான வடிவமாகக் கொள்ளலாம். இந்தியாவில் உள்ள மிகப் பெரிய சனத் தொகை கூட, ஐரோப்பிய வாழ்க்கைக்கு நேர் மாறான ஒரு சூழலை அங்கே வடிவமைப்பதை நாம் காணலாம். இன்னொரு மனிதப் பிறவியைப் பார்க்காமல் ஒரு நிமிடம் கூட அங்கு கழியுமா என்பது சந்தேகமே. இதற்கு நேர் மாறாக இங்கிலாந்து போன்ற ஒரு நாட்டில், ஒரு வீதியில் செல்லும் போது, ஆளரவம் இல்லாது வீதி வெறிச் சோடிக்கிடப்பது, நடக்க முடியாத ஒன்றல்ல. ஆனால் இந்தியாவில் பொலிந்து விளங்கும் நட்புறவும், இந்திய மக்களின் பண்பட்ட மனிதாபிமானமும், அநாதரவு உணர்வுடன் எவரும் கைவிடப்படாது பார்த்துக் கொள்ளும் எனலாம். இத்தகைய சமூகச் சூழல்களில் வாழும் மனித வெள்ளத்தால் சூழப்பட்ட நிலையில் எனது உள்ளார்ந்த உணர்ச்சிகளும் எப்போதும் விழிப்பாக இருந்த இடம் தமிழ்நாடு. இந்த உணர்வு, சமூக ஊடாட்டங்களினால் மட்டும் வரவில்லை. இலட்சோப லட்சம் மக்களின் சமூக, பொருளாதாரப் பரிதாபச் சூழ்நிலையை அடுத்தடுத்துப் பார்த்து அதனால் கிளர்ந்த உணர்வும் ஒரு காரணம். மக்களின் வாழ்வில் வறுமை புரிந்த கோரம் அப்பட்டமாகத் தெரிந்தது. அந்தத் துயரம் என்னை ஆழமாகப் பாதித்திருந்தது. அதைப் பற்றிக் குறிப்பிடாது இருப்பது தவறு என்றே கருதுகிறேன்.

செல்வம் கொழிக்கும் மேற்குலகில் வளர்ந்தவள் நான். கோடிக்கணக்கான மக்களின் வறிய வாழ்க்கைத் தரத்தை நான் இந்தியாவில் பார்த்தபோது திகைத்துப் போனதற்கு அதுவும் காரணமாக இருக்கலாம். வறுமை, சமூகச் சுரண்டல், அநீதி, முரண்பாடுகள் இவை எல்லாம் அப்பட்டமாகத் தெரிந்தன. இவை மட்டில் பாராமுகமாகவோ இவற்றால் மனம் நெகிழாமலோ ஒருவர் இருப்பாரேயென்றால் அவர் பார்வை அற்றவராகத் தான் இருக்க முடியும். எதிரே தெரிந்த வறுமையும் சுரண்டலும் எனக்குள் ஏற்படுத்திய கடுப்பு, காலத்தால் தணியவே இல்லை. தொடக்கத்தில், நிலைமையை நேரே பார்க்கும் போதெல்லாம் இது நிசமல்ல, மாறிவிடும் என்று கருதுவேன். ஆனால் இது மாறவில்லை; நிரந்தர பிரசன்னமாக இருந்தது; மனச் சாட்சியை உறுத்தியது; மனதையும் குடைந்தது. விமானம் மூலம் மும்பையில் போய் இறங்குவதற்கு முன், விமான யன்னலால் வெளியே எட்டிப் பார்த்தால் எல்லாமே புரிந்து விடும். விண்முட்டும் மாடங்களின் கவர்ச்சியை, நகரின் எல்லையில் கண்ணுக்கு எட்டாத் தூரத்துக்கு விரிந்து கிடக்கும் சேரிகள் மழுங்கடித்துவிடும். விமான கூடத்தை விட்டு வெளியே வந்ததும் பிச்சைக்காக நீளும் பெருந் தொகைக் கரங்களே பயணிகளை





வரவேற்கும்.

எனது மனச் சாட்சியில் சுருக்கென்று தைத்த இன்னொரு சம்பவம், சென்னையில் ஒரு சாதாரண உணவு விடுதியில் நிகழ்ந்தது. நாம் உணவைச் சுவைத்துக் கொண்டிருந்தோம். அந்த உணவு விடுதியின் வாயிலை மூன்று நான்கு பிள்ளைகள் துணிச்சலாக அகலத் திறந்தார்கள். அவர்களுடைய வாடிய முகங்கள் நாம் உண்பதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தன. நாம் தமக்காக உணவில் ஏதாவது மீதம் விடமாட்டோமா என்ற ஏக்கம் அந்த முகங்களில் தெரிந்தது.

என்னைப் பாதித்த இன்னொன்று, சென்னைப் பிச்சைக்காரரின் பரிதாப நிலை; என்றுமே மாறாத நிலை; எங்கும் வியாபித்து இருந்த சமூக ஏற்றத் தாழ்வுகளையும் சுரண்டலையும் பிரதிபலித்த நிலை; நான் ஒரு வெள்ளைக்காரி என்பதால் பிச்சைக்கார சமூதாயத்தின் இரத்தலுக்கு கூடுதலாக உள்ளானேன். ஆகவே எனக்குப் பின்னால் ஒரு பிச்சைக்கார பட்டாளமே வந்து கொண்டிருக்கும்; அதுவும் சென்னை பிரதான வீதிகளில் நான் கடைத் தெருக்களுக்கு ஏதாவது வாங்கப் போனால் நீட்டிய கரங்களோடு "அம்மா! அம்மா!" என்று கெஞ்சியபடியே வந்து கொண்டிருக்கும். மனிதராகப் பிறந்தவர்கள் என் முன்னே நின்று பிச்சைக்காக என்னிடம் கையேந்துவது எனக்குத் தர்ம சங்கடமாக இருந்தது. இதில் இருந்து மீள்வதற்கும் எனக்கு நாள் பிடித்தது; இதை எப்படித் தீர்ப்பது என்பதும் கவலையைத் தந்தது. தொடக்கத்தில் இவ்வளவு அசுத்தமான தோற்றத்தில் பிச்சைக்காரர் என்னைத் தொந்தரவு செய்வது எனக்கு ஒரு அசௌகரிய உணர்வை ஏற்படுத்தியது. இத்தகைய கொடிய வறுமையை நான் முகமுகமாக இதுவரை பார்த்ததில்லை. இனி, நான் மேற்குலகில் இருந்து வந்தவள். ஆதலால் என்னிடம் பணம் இருக்கும் என்று பெரும்பாலானவர்கள் நினைக்கிறார்கள் என்று நான் கருதினேன். இந்த நிலையில், ஒன்றிரண்டு சில்லறையைக் கொடுக்க மறுத்தால், மற்றவர்கள் கருமியாக என்னைப் பார்ப்பார்கள். அதை நான் விரும்பவில்லை. மறுபுறம் உண்மையான நிலையை உணராது இரக்கம் காட்டும் ஒருவராக மற்றவர்களால் கருதப்படுவதையும் நான் விரும்பவில்லை. பெரும்பாலான சமூகம் அங்கீகரிக்காத தொழில் இரத்தல் தொழில் என்பதை நான் அறிவேன். நாம் உதவுவதாகக் கருதிச் சில்லறை கொடுக்கும் அதே மக்களைச் சுரண்டி நசுக்கும் தொழில் இது என்பது எனக்குத் தெரியும்.

என்னைப் பொறுத்த வரையிலே பிச்சை எடுத்தலை ஒழித்துக் கட்டும் சமூகப் பணியில் ஈடுபடுவது எனது நோக்கம் அல்ல. நான் வீதியில் இறங்கி நடக்கும் போது, பிச்சைக்காரரால் மொய்க்கப்படாதிருக்க

விரும்பினேன். அதே சமயம், எதையும் கொடுக்காது அவர்களை விரட்டவும் நான் விரும்பவில்லை. தொடக்கத்தில் நான் எல்லோருக்கும் முடிந்ததைக் கொடுப்பேன். கொடுத்தால் அவர்கள் போய்விடுவார்கள் என்று கருதினேன். ஆனால் விளைவு நேர் மாறாக இருந்தது. எனது இளகிய மனதைக் கண்டு பிச்சைக்காரர் கூட்டம் பலமடங்கு பெருகியது. இந்த நிலையில், மாநில அரசு விரும்புவது போல, பிச்சை போடாது விடுவதே சிறந்தது என்று தீர்மானித்தேன். ஆனால் அதுவும் முடியாது போய்விட்டது. நான் கொடுக்கும் வரை அவர்களும் விடாது தொடர்ந்தார்கள். இந்தக் குழப்பமான சூழ்நிலையை எப்படிச் சமாளிப்பது? பிச்சைக்காரரால் சூழப்பட்டு விடுவேன் என்பதற்காக கடைத் தெருவுக்கும் போகாமல் இருக்க முடியவில்லை. அதே சமயம் அலையலையாகப் பெருகிக் கொண்டிருக்கும் அத்தனை பேருக்கும் சில்லறை கொடுத்துக் கொண்டிருக்க முடியவில்லை.

இந்த வெளிப்படையான பிரச்சினைக்கு எவ்வாறு தீர்வு காண்பது என்று ஆழமாகச் சிந்தித்தேன். என்னை மலைக்க வைத்தது என்னைச் சூழ்ந்து கொள்ளும் பிச்சைக்காரரல்ல. மாறாக அவர்களது பிரசன்னம் ஒரு உண்மையை எனக்கு எடுத்துக் காட்டியது. அதிர்ஷ்டவசமாக, சமூக சலுகையுடனும், நல்வாய்ப்புகளுடனும் எனது வாழ்க்கை அமைந்து விட்டது. அதே சமயம், எனது முகத்திற்கு முன்னே அநீதியும் சமூக சமத்துவமின்மையும் மெய்யுண்மையாக வடிவம் எடுத்து நிற்கின்றது. இந்த முரண்பாட்டை உணர்ந்து நிலைகுலைந்து போனேன். ஆகவே, இந்தப் பிள்ளைகள், பெண்கள், ஊனமுற்றோர், வயது குறைந்தவர்கள் முதியோர் அடங்கிய இச் சமூகம் எனக்கு தொந்தரவு தருகிறது என எண்ணி, அவர்களை ஒதுக்கித் தள்ளாது, பிரச்சினையை எனக்குள்ளேயே தீர்த்துவிடத் தீர்மானித்தேன். பிச்சை எடுப்பது ஒரு தொழிலாகவே மாறி விட்டிருந்தது. இதை ஊக்கப்படுத்தக் கூடாது என்று மாநில அரசு விரும்பியது. ஆனால் இதில் ஈடுபட்ட மக்களுக்கு மாற்று வழி இல்லாமல் இருக்கலாம்; இழி தொழிலே தங்களுக்கும் பொருத்தமானது என்று அவர்கள் கருதியிருக்க வேண்டும். இவர்களுக்குச் சில்லறை கொடுப்பதால் நான் குறைந்து போய்விடமாட்டேன். ஆகவே எனக்குள் ஒரு முடிவுக்கு வந்தேன். சில்லறையை அவர்களுக்குக் கொடுத்த பின், கொச்சைத் தமிழில் 'போயிடுங்க' என்று கூறுவேன். அவர்களும் மரியாதையாகப் பணத்தைப் பெற்றுக் கொண்டு, அமைதியாகப் போய்விடுவார்கள். அதன் பின் வெளியே போகும் போதெல்லாம் ஐந்து பைசா நாணயங்கள் நிறைய எடுத்துக் கொண்டு போவேன். பிச்சைக்காரர்கள் அருகே வந்ததும், சில





நாணயங்களைக் கொடுத்து, 'போயிடுங்க' என்று சொல்வேன். அவர்களும் போய்விடுவார்கள். சில ஆண்டுகளில் பிச்சைக்காரர் சமுதாயம் எனக்கு நன்கு பரிச்சயம் ஆகிவிட்டது. பிச்சைக்காரர் ஒருவர் எதிரே வந்தால் அல்லது பின்னே தொடர்ந்து வந்தால் அவரைத் தவிர்த்து ஒதுங்க முயல மாட்டேன். உப்பிய வயிற்றோடு காணப்படும் குழந்தை அல்லது பெண்பிள்ளைதான் இந்தியாவின் வறுமையையும் ஒடுக்கு முறையையும் எனக்கு எந்த நேரமும் உணர்த்திக் காட்டும் குறியீட்டுச் சின்னங்களாக விளங்கின. எலும்பும் தோலுமாக கை கால், குழி விழுந்த கண்கள், வெறித்த பார்வை, கலைந்து சிக்கேறிச் செம்பட்டை பற்றிய கருங்கூந்தல் - இப்படியான கோலம். அந்தக் குழந்தை எலும்பு துருத்திக் கொண்டிருக்கும் தாயின் இடுப்பில் ஒட்டிக் கொண்டிருக்கும் காட்சி எனது நெஞ்சைப் பதற வைக்கும். பெண்கள் பிச்சை எடுக்கலாமா இல்லையா என்பதல்ல பிரச்சினை. அந்தச் சின்னப் பெண் குழந்தையின் பரிதாப நிலையேதான் பிரச்சினை. மகப் பேற்றில் ஆண் பிள்ளையை விரும்புவதும் பெண்களுக்குச் சமூக நீதிப் புறக்கணிப்பு இழைப்பதும் இந்தியாவில் ஒரு பொது நியதி. உணவு ஊட்டும் போது கூட, ஆண் குழந்தைக்கு ஊட்டுவதற்காகப் பெண் சிசுவைப் புறக்கணிப்பதும், இனி, ஊட்டச் சத்தில்லாத பெண் குழந்தையைப் பிச்சை எடுக்கும் வேளையில் வைத்திருப்பதால் அனுதாபத்தைப் பெற முடியும் என்ற எதிர்பார்ப்பில் அதை மேலும் வாட்டுவதைக் கூட காண முடிகின்றது.

## அமைப்புக்குள் பிரச்சினைகள்

பாலாவும் நானும் விடுதலைப் புலித் தலைவர்களுடனும் போராளிகளுடனும் ஒரு நல்ல புரிந்துணர்வை ஏற்படுத்திக் கொண்டோம். அமைப்பின் உயர் மட்டத்தில் நிலவிய மிக அந்தரங்கப் பிரச்சினைகளை எமக்குத் தெரிவிக்கும் அளவுக்கு அவர்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரம் ஆனோம். இந்த வரலாற்றுக் காலகட்டத்தில் தமிழ் சுதந்திர இயக்கத்தின் ஆரம்ப உறுப்பினர்கள் மத்தியில் அதிகாரப் போட்டிகளும் ஆளுமை மோதல்களும் எழுந்ததால் இயக்கத்தில் பிளவு தோன்றி மாற்றங்கள் நிகழ்ந்து, இறுதியில் உறுதியான வளர்ச்சி ஏற்பட்டது. மூத்த தலைவர்களுக்கும் மத்திய குழுத் தலைவர் உமா மகேஸ்வரனுக்கும் இடையே பாரதூரமான ஒரு முரண்பாடு எழுந்தது. அமைப்பிலே ஒரு தவிர்க்க முடியாத பிளவு ஏற்படும் நிலை தோன்றியது. அறிவுரை ஆலோசனைக்காக பாலா சென்னைக்கு அழைக்கப்பட்டார். நெருக்கடியின் அப்பட்டமான காரணம், அமைப்பின் ஒழுக்கக்

கோவையை மீறும் ஒரு பாலியல் விவகாரமாக இருந்தது. ஒடுக்கப்பட்ட தமது மக்களுக்கு விடுதலை பெறவேண்டும் என்ற உயரிய சீலத்தைச் சாதிக்கும் நோக்கத்தை ஏற்று, அதற்காக தம்மை அர்ப்பணித்த உறுப்பினர்களைக் கொண்ட அமைப்பின் கட்டுப்பாட்டுக்கும் கண்ணியத்துக்கும் ஒழுக்கக் கோவை இன்றியமையாதது. இந்த ஒழுக்கக் கோவையை மீறுபவர்கள் ஒழுங்கு நடவடிக்கைக்கு உள்ளாக்கப்பட்டார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில், திருமணமாகாத மனிதரான உமா மகேஸ்வரன், விவாக ரத்துப் பெற்றவரும் விடுதலைப் புலி அமைப்பின் ஆரம்ப கால உறுப்பினருமான ஊர்மிளாவுடன் பாலியல் உறவு வைத்திருந்ததாக குற்றம் சாட்டப்பட்டார்.

உமாவும் ஊர்மிளாவும், தொடக்கத்திலே, தமிழர் ஐக்கிய விடுதலைக் கூட்டணி (TULF) இன் இளைஞர் அணித் தலைவர்களாக இருந்தவர்கள். தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் அனைத்துலக பரப்புரையை விரிவுபடுத்துவதற்காக, பிரபாகரன் அவர்களால் சேர்க்கப்பட்டவர்கள். அவர்கள் இருவரும், ஏனைய போராளிகளுடன் சென்னையில் ஒரு வீட்டிலே வசித்து வந்தார்கள். உமாவையும், ஊர்மிளாவையும் பாலியல் உறவு நிலையில் நேரே கண்ட போராளிகள் விடயத்தைத் தலைமைப் பீடத்திற்கு அறிவித்திருக்கிறார்கள். இதற்காகத்தான் பிரபாகரன் அவர்களும் ஏனைய தலைவர்களும் யாழ்ப்பாணத்தில் இருந்து வந்து விடயத்தை விசாரிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அமைப்பின் ஒழுக்கக் கோவையின் படி, திருமணத்துக்கு புறம்பாகவோ, திருமணத்துக்கு முன்னதாகவோ பாலி யல் உடல் உறவுகள் தடை செய்யப்பட்டிருந்தன. ஒரு விரிவான விசாரணை நடைபெற்றது. ஊர்மிளாவைத் திருமணம் செய்ய வேண்டும்; அல்லது மத்திய குழுத் தலைமையில் இருந்து விலக வேண்டும் என்று உமாவிடம் தெரிவிக்கப்பட்டது. ஏனைய போராளிகளை விட, உமா உலக நடைமுறைகள் தெரிந்த ஒரு மனிதர். தங்களிடையே தகாத உறவு இருப்பதை வன்மையாக மறுத்தார். பதவியில் இருந்து விலகவும் மறுத்தார். இது அமைப்புக்குள் ஒரு பெரிய நெருக்கடியைத் தோற்றுவித்தது. ஊர்மிளாவும் அதேயளவு பிடிவாதமாக இருந்தார். உறவை ஒப்புக் கொள்ள மறுத்தார். இது தொடர்பாக ஆலோசனை கூற பாலா அழைக்கப்பட்டார். உமாவுடனும் ஊர்மிளாவுடனும் பாலா பேசினார். அவர்கள் இருவரும் தமது உறவை ஒப்புக் கொண்டு பின்னொரு நாளிலேனும் திருமணம் செய்யச் சம்மதித்தால், பிரச்சனை தீர்க்கப்பட்டு விடும் என்று பாலா கருதினார். ஆனால் அவர்கள் இருவரும் தாம் சுற்றவாளிகள் என்றே தொடர்ந்து வாதிட்டார்கள். ஆனால் சம்பவம்





நடந்ததாகக் கண்டவர்களும் தங்கள் கூற்றில் உறுதியாக நின்றார்கள். இறுதியாக, பெரும்பான்மையான தீர்ப்பு அந்தச் சோடிக்கு எதிராகவே அமைந்தது. மகேஸ்வரன் தமது பதவியிலிருந்து இறங்கி, இயக்கத்தில் இருந்தும் விலக வேண்டும் என்று தீர்மானம் ஆயிற்று. தீர்ப்பை மகேஸ்வரன் திட்டவட்டமாக நிராகரித்தார். இதன் விளைவாக, இயக்கத்திலிருந்து விலக்கப்பட்டார். உமா மகேஸ்வரனும் ஊர்மிளாவும் வவுனியாவுக்குத் திரும்பிச் சென்றார்கள் என்றும், அங்கு ஊர்மிளா மஞ்சள் காமாலையால் பீடிக்கப்பட்டு, கடுஞ்சுகவீனம் அடைந்து மருத்துவக் கலாநிதி ராஜசுந்தரம் நடத்திய மனித காருண்ய அமைப்பான காந்தி இல்லத்தில் காலமானார் என்றும் பின்னர் அறிந்தோம்.

இயக்கப் பிரச்சினைகள் பாரதூரமாக இருந்தபோதும், எமது இந்திய முதல் பயணம் தொடர்பான இனிய நினைவுகளோடு லண்டன் திரும்பினோம். விடுதலைப் புலி இயக்கத் தலைமையுடன் எமக்கு நல்ல புரிந்துணர்வு இருந்தது. அவர்கள் மட்டில் அனுதாபமும் இருந்தது. ஆயினும் அமைப்பை ஒரு தேசிய விடுதலை இயக்கமாக வளர்த்து எடுப்பதானால், அதற்கான அரசியல் பணி நிறையப் புரியப்பட வேண்டும் என்பதை நாம் உணர்ந்து இருந்தோம். இது ஆரம்ப காலம். சிறு விதை யில் இருந்துதான் பெருவிருட்சம் முளைக்க வேண்டும். ஆகவே நாம் தளர்வு அடையவில்லை. போராட்டத்துக்காகக் கஷ்டப்பட நாம் தயாராக இருந்தோம். எம்மைப் பொறுத்த வரையிலே விடுதலைப் புலிகளே தமிழ் மக்களுக்குக் கிடைத்த சிறந்த வாய்ப்பு என்றும் உணர்ந்து கொண்டோம்.

லண்டனில் இருந்த வேளையில் தலைமையோடு தொடர்பைப் பேணியபடியே அமைப்புக்காகத் தீவிரமாக உழைத்தோம். இரண்டு ஆண்டுகள் கழிய, 1981 இலே இரண்டாவது தடவையாகச் சென்னைக்குச் சென்றோம். திரும்பவும் அமைப்புக்குள் பாரதூரமான பிரச்சினைகள் காணப்பட்டன. இந்தக் காலகட்டத்திலேயே பிரபாகரன் அவர்கள் தமிழீழ விடுதலை அமைப்புடன் (TELO) கூட்டு ஒன்றை நிறுவினார். அவ்வேளை சிறீசபாரத்தினம் ரெலோவின் தற்காலிகத் தலைவராக இருந்தார். ரெலோவைத் தோற்றுவித்த தலைவர்கள், தங்கத்துரையும், குட்டிமணியும் சிறீலங்கா அரச படைகளால் கைது செய்யப்பட்டு, பயங்கரவாதச் சட்டத்துக்கு அமைவாக சிறீலங்காச் சிறை யில் அடைக்கப்பட்டு இருந்தார்கள். பின்னர் விடுதலைப் புலிகளையும் ரெலோவையும் ஒரே அணிக்குள் கொண்டு வந்து, ஆயுதப் போராட்டத்தை பலப்படுத்தி விரிவுபடுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், விடுதலைப் புலிகளின் தலைவர் தாமே என்று உமா மகேஸ்வரன்

வஞ்சகமாக உரிமை பாராட்டத் தொடங்கியிருந்ததால், இணைப்பு தடைப்பட்டது. ஆயுதப் போராட்ட வரலாறு விடுதலைப் புலிகளின் கொடியின் கீழேயே பதியப்பட வேண்டும் என்பதில் பிரபாகரனும் அவருடைய போராளிகளும் அக்கறையாக இருந்தார்கள்; விடுதலைப் புலிகளின் தலைமை தமதே என்று உமா மகேஸ்வரன் விடுத்த உரிமைப் பாத்தியதையை எதிர்த்தார்கள். விடுதலைப் புலிகளும் ரெலோவும் அந்தச் சந்தர்ப்பத்திலே இணைந்த ஒரு அமைப்பாக வடிவெடுத்தால், விடுதலைப் புலிப் பெயரையும் தலைமையையும் தமதாக்கிக் கொள்ள அது மகேஸ்வரனுக்கு வாய்ப்பாக இருந்திருக்கும். ஆகவே, மகேஸ்வரனின் பிரச்சனையைத் தீர்க்கும் வரை, தங்கள் அமைப்பைக் குலைத்துவிட புலிகளின் மூத்த தலைவர்கள் விரும்பவில்லை. எனவே, மகேஸ்வரனுடைய உரிமைப் பாத்தியதையை நிர்மூலமாக்கும் வரை ஒன்றிணைந்த அமைப்பை உருவாக்குவதைத் தாமதப்படுத்த வேண்டும் என்றும் அதே சமயம் புலிகளையும் ரெலோவையும் தனித்தனியே பலப்படுத்திக் கொண்டு இருக்க வேண்டும் என்றும் இணக்கம் காணப்பட்டது. இந்த இணைப்பை ஒத்திப் போடுவதை சிறீசபாரத்தினம் விரும்பவில்லை. ஆனாலும் அந்தத் தீர்மானத்தின் பின்னே இருந்த நியாயத்தை அவர் புரிந்து கொண்டார். இதற்குப் பின்னர் பாலாவும் பேபி சுப்பிரமணியமும் ஒரு பலமான ஊடகப் பரப்புரையைச் சென்னையிலே தொடக்கினார்கள். உமா மகேஸ்வரனின் தவறான உரிமைக் கோரிக்கையை நிராகரித்தார்கள். அதே சமயம் உலகம் பூராவும் உள்ள விடுதலைப் புலி ஆதரவாளர்களுக்குக் கடிதங்கள் அனுப்பப்பட்டன. உமா பதவி இறக்கப்பட்ட காரணம் கடிதங்களில் விளக்கப்பட்டது. இறுதியில், விடுதலைப் புலிகளின் தலைமைக்கான கோரிக்கையை உமா மகேஸ்வரன் கைவிட்டார். தனியான போராளி இயக்கம் ஒன்றைத் தோற்றுவித்தார். தமிழீழ மக்கள் விடுதலைக் கழகம் (PLOTE) என்று அதற்கு பெயர் சூட்டப்பட்டது. ஆனால் இதே கால கட்டத்தில் வெவ்வேறு வளர்ச்சிகள் இடம்பெற்றன. விடுதலைப் புலிகள்-ரெலோ இணைப்பு கைகூடவில்லை.

## புதிய அனுபவங்கள்

எமது 1981ம் ஆண்டு இந்தியப் பயணத்தின் போது தலைமைகளுக்கு இடையே அரசியல் இழுபறி நாடகம் ஒருபுறம் நடந்து கொண்டிருக்க, ஏனைய போராளிகளுடன் கூடிப் பழகுவதில் நான் ஈடுபட்டேன். இந்தத் தடவை, சென்னை நகரப் புறத்திலுள்ள வரசலவாக்கத்தில் வீடு ஒன்றைப்





போராளிகள் அமர்த்தி இருந்தார்கள். அரசியல் சூட்சுமங்கள் நடந்து கொண்டிருந்தபோதும், அந்த வீட்டில் தோழமை உணர்வே நிலவியது. எம்மோடு அங்கே தரித்திருந்தவர்கள் ஏதோ ஒரு வகையில் வரலாற்று முக்கியத்துவம் பெற்றவர்கள்; முக்கிய புலிப் போராளிகள். ஒருவர் பேபி சுப்பிரமணியம். இளங்குமரன் என்றும் அவர் அழைக்கப்பட்டார். இவர் பிரபாகரனின் ஆயுட் தோழர். இளம் போராளியாக இருந்தபோதே இவர் வெடி மருந்திலும் நேரக் குண்டிலும் விற்பன்னர். ஆனாலும் மிகவும் சாதுவானவர். மற்றவர்களுக்கு என்றுமே கெடுதி விளைக்காதவர். அதிகாரப் போட்டியில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளாதவர். அற்பத்தனமான வதந்திகளைப் பரப்பாதவர். அவரிடம் தற்பெருமை கிடையாது. போராட்ட வரலாறோ, அதில் புலிகளின் பங்கோ அத்தனையும் அவருக்கு மனப்பாடம். அவர் ஒரு நடமாடும் அறிவுக் களஞ்சியம். உணவில் சுத்த சைவம். பச்சை மிளகாயைத் தாமே பொரித்து, ஐந்து, ஆறு ஈர வெங்காயத்தோடு சோறு சாப்பிடுவார். அதுதான் அவருடைய பிரதான உணவு. போக்கு விசித்திரம் என்றாலும் விடுதலைப் புலிகளின் இலட்சியத்தில் உறுதியுடையவர். நம்பிக்கைக்குப் பாத்திரமானவர். எமது நீண்ட கால நண்பர்.

விடுதலைப் புலிகள் இயக்கத்தில் இருந்து விலகிய பின்னரும் நெருங்கிய நண்பராகத் தொடர்ந்து திகழ்ந்தவர் நேசன்-ரவீந்திரதாஸ். இப்போது வெளிநாடு ஒன்றில் வாழ்கிறார். பிரபாகரனுடன் போராட்டத்தில் சேர்வதற்காக மருத்துவக் கல்லூரிப் படிப்பை இடையில் முறித்துக் கொண்டு வந்தவர். முன்பு பிரபாகரனின் பெரும் நம்பிக்கைக்கு பாத்திரராய் இருந்தவர். அவர்களுக்கு இடையே மனமுறிவு ஏற்பட்டதும் இயக்கத்தின் உள்விவகார இழுபறிகளுக்கு முகம் கொடுக்க இயலாமலும் ஆன்மீகத்தில் நாட்டம் பெருகியதாலும், அமைதியான வேறு வாழ்க்கையை அவர் நாடினார்.

அந்த நாட்களில் சங்கர் எம்மோடுதான் இருந்தார். விடுதலைப் புலிப் போராளிகளில் முதல் உயிர்ப் பலியானவர் இவரே. இவர் மரணம் அடைந்த நவம்பர் 27ம் திகதியே மாவீரர் நாளாக வீரச்சாவைத் தழுவிய போராளிகளுக்கு வீரவணக்கம் செய்யும் நாளாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. 1982 இலே சங்கர் தரித்திருந்த வீட்டைச் சுற்றி வளைத்த சிறீலங்கா அரச படையினர் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய, ரவை இவர் வயிற்றிலே பாய்ந்தது. சிகிச்சைக்காகப் போராளிகள் இவரை இந்தியா கொண்டு சென்றார்கள். உடனடியாக உரிய சிகிச்சை வழங்கப்படாததால், உள் வயிற்று நீர்ப்பை சேதமாகி, குருதியிலும் நஞ்சூறத் தொடங்கியிருந்ததால், அவர் மரணமானார். 1981 இலே அவர்

எம்மோடு சென்னையில் இருந்த நாட்களில், உடற் பயிற்சிக்காக ஒவ்வொரு நாளும் ஓடிவிட்டுத் திரும்பும்போது, ஒரு திடாத்காரமான இளைஞனாக அவரைப் பார்த்த எனக்கு, அந்த இளைஞனின் மரணத்தை ஏற்றுக் கொள்வது மிகக் கடினமாக இருந்தது. ஆயுதப் போராட்டம் எனும் போது, அதில் இளைஞர்கள் மரணம் அடையப் போகிறார்கள் என்பது எனது மனதில் உறைத்தது.

ரகு, பல ஆண்டுகளாக பிரபாகரனின் மெய்க்காவலராகவும் நம்பிக்கைக்கு உரிய மூத்த உறுப்பினராகவும் திகழ்ந்தவர். அந்த நாட்களில் சென்னையில் பிரபாகரனின் பாதுகாப்புக்குப் பொறுப்பாக சங்கரோடு இருந்தவர்களில் அவருடைய பாலிய நண்பர் ரகுவும் ஒருவர். பல ஆண்டுகளுக்குப் பின், விதிகளை மீறயதால், இயக்கத்தில் இருந்து ரகு விலக்கப்பட்டார். பிரபாகரனின் பாதுகாப்புக்குப் பொறுப்பான மூன்றாவது ஆளும் ஒரே ஊரில் இருந்து வந்த அவர்களுடைய பாலிய வயது நண்பரேதான். அவரது பெயர் பண்டிதர்.

நான் சென்னைக்கு சென்றபோது எனக்குத் தமிழில் ஒரு வார்த்தையும் பேச வராது. பண்டிதருக்கு ஆங்கிலம் அறவே தெரியாது. ஆனாலும் கை சமிக்ஞைகளாலும் கலகலத்த சிரிப்பாலும் போதுமான அளவு புரிந்துணர்வை இனிமையாக ஏற்படுத்திக் கொண்டோம். பண்டிதரின் நினைவு வரும் போதெல்லாம் தொய்வு நோயுடன் போராடும் ஒரு இளைஞரின் நினைவுதான் வரும். எந்த நாளாவது, இந்தியத் தூசியோ, சமையலில் மிளகாயின் காரமோ பண்டிதருக்கு மூச்சுத் திணறலை ஏற்படுத்தாமல் விட்டது கிடையாது. ஆனால் இந்த உடல் அசௌகரியம் அவரைத் தளர்வடையச் செய்ததில்லை. தமது அரசியல் பணிகளை தமது நோய் கட்டுப்படுத்த அவர் இடமளித்ததும் இல்லை. யாழ்ப்பாணத்தில் அவரை நான் போய் சந்திப்பதற்கு முன்னதாகவே அவர் இறந்து போனார். ஆனாலும், விடுதலைப் புலிகளின் யாழ்ப்பாண மாவட்ட அரசியல் பிரிவுத் தலைவர் என்பதற்காக அவர் தேடப்பட்டுக் கொண்டிருந்த அந்த ஆபத்தான நாட்களில் கூட மூச்சுத் திணறும் தொய்வோடு அங்கும் இங்கும் அவர் சைக்கிளில் ஓடித் திரிவதை என்னால் நினைத்துப் பார்க்க முடிகிறது. யாழ்ப்பாணம் அச்சுவேலியிலே 1985 ஜனவரியில் அவர் மரணம் அடைந்தது பற்றிக் கேள்விப்பட்ட அந்த நாள் எனக்கு ஒரு துயர நாள். பண்டிதரின் மரணம் பற்றி எனக்கு விபரம் தெரிவிக்க, பிரபாகரனுக்கு பல நாள் பிடித்தது. அந்தத் துயரச் செய்தி என்னை வெகுவாக வாட்டிவிடும் என்று அவர் கருதியிருக்க வேண்டும். பண்டிதருடைய அணியினுள் ஊடுருவி இருந்த உளவாளி ஒருவன் காட்டிக் கொடுத்ததை அடுத்து அவருடைய இரகசிய வதிவிடம் சுற்றி





வளைக்கப்பட்டதாக என்னிடம் தெரிவித்து இருந்தார்கள். அந்தச் சுற்றி வளைப்பில் ஒருவரோ இருவரோதான் உயிர் தப்பிச் சென்றனர் என்றும் பண்டிதர் பற்றிய தகவலுக்காகக் காத்திருந்தார்கள் என்றும் அறிந்தேன். பிரபாகரனின் சங்கடமும் பண்டிதர் பற்றிய தெளிவின்மையான தகவலும் எனக்குச் சந்தேகத்தையே தந்தது. சுற்றி வளைப்பில் பண்டிதர் தப்பியிருப்பாரா என்று ஐயப்பட்டேன். விடுதலைப் புலித் தாக்குதல் குழு ஒன்றின் தலைவராகவும் பிரபாகரனுக்குப் பிடித்தமான தோழராகவும் இருந்த பண்டிதர் எங்கே இருக்கிறார் என்பது தலைமைப் பீடத்திற்கு உடனடியாக தெரிந்திருக்க வேண்டும். சில நாள் கழித்து பேபி சுப்பிரமணியம் எமது மாடி வீட்டுக்கு வந்து பண்டிதர் கொல்லப்பட்டு விட்டார் என்று கூறியபோது எனது சந்தேகம் உறுதிப்படுத்தப்பட்டது. காட்டிக்கொடுத்த அந்த இராணுவ உளவாளி தப்பியோடி, பின்னர் சிறீலங்காப் படையில் ஒரு நல்ல பதவியில் அமர்ந்து விட்டதாகக் கேள்விப்பட்டேன். விடுதலைப் புலிப் போராளிகளில் தொடக்கத்தில் இறந்தவர்களில் பண்டிதரும் ஒருவர். தமது மரணத்துக்குச் சில மாதங்கள் முன்னதாக எம்மைப் பார்க்க அவர் சென்னைக்கு வந்தது எம் பாக்கியம். வல்வெட்டியில் உள்ள அவருடைய வீட்டுக்கு 1987 இலே நான் சென்றபோது அவருடைய தாயார் மனதுக்குள் அடக்கி வைத்திருந்த உணர்ச்சித் துயரத்தை நேரிலேயே கொட்டியபோது அதிர்ந்து போனேன். அவருடைய தாயார், அவர் வாழ்ந்த அவருடைய அறையில் மாற்றம் எதுவும் செய்யாது அதையே ஒரு கல்லறையாக்கி, அப்படியே பூட்டி வைத்திருந்தார். அந்த எளிமையான அறை வாயிலில் அவருடைய நிழற்படம் மாட்டப்பட்டு இருந்தது. அந்த வீட்டில் எம் எல்லோருடைய கண்களும் குளமாகி இருந்தன.

எம்மோடு தங்கியிருந்த ரெலோ போராளிகளில் சிறீசபாரத்தினமும் ஒருவர். பின்னர் இவரே அந்த அமைப்பின் தலைவரானார். அவர் அமைதியானவர். நன்கு பிரபலமான வல்வெட்டித்துறைப் போராளிகள் தங்கத் துரையையும் குட்டிமணியையும் தமது அரசியல் தலைவர்களாக அவர் வரித்திருந்தார். வடமராட்சி கிழக்கு கரையோரமாக அவர்கள் கைதானதையடுத்து, அவர்களை வெலிக்கடைச் சிறையில் இருந்து மீட்பதற்காக திட்டம் இட்டுக் கொண்டிருந்தார். ராணுவப் போர்த்திறனில் சிறீ பிரமாதமான-வரல்ல; போராட்ட அனுபவமும் அவருக்கு குறைவே. ஆனால் சிறை உடைக்கும் ராணுவ முயற்சிக்கு வேண்டிய ஆற்றல் திறன்களை எங்கிருந்து பெறலாம் என்பதை அவர் அறிந்திருந்தார். பிரபாகரனுடைய ராணுவத் திட்டமிடல் ஆற்றலும், எந்தத் திட்டத்தையும்

செயற்படுத்தக்கூடிய புலிப் போராளிகளின் களம் கண்ட துணிச்சலும் அவருக்கு மிகத் தேவையாக இருந்தன. தற்கொலைக்கு ஒப்பான ஒரு கடின ஆபத்தான இராணுவ நடவடிக்கையில் பிரபாகரன் ஈடுபட இருந்தார். பாலாவின் தலையீடு பிரபாகரனைக் கட்டிப் போட்டது. இதனால் அந்தத் திட்டம் நடைமுறைப்படுத்தப்படவில்லை. அரசியலையும் போர்த் தந்திரோபாயத்தையும் ஒருபுறம் ஒதுக்கி விட்டால், சிறீ எம் மட்டில் மிகவும் கருணையுடனேயே நடந்து கொண்டார். ஒரு சம்பவத்தைக் குறிப்பிடலாம். ஒரு முறை பாலாவுக்கு நெருப்புக் காய்ச்சலும் வயிற்றோட்டமும் ஏற்பட்டு கடும் சுகவீனமுற்றார். பாலாவால் எழுந்து நடக்க முடியவில்லை. சிறீ அவரைத் தூக்கிச் சென்று வண்டியில் ஏற்றினார். பின்னர், வண்டியில் இருந்து இறக்கி, மருத்துவமனையில் மருத்துவரின் அறைக்கும் தாமே தூக்கிக் கொண்டு போனார். துரதிர்ஷ்டவசமாக ஆளுமைரீதியாகவும், அரசியல் ரீதியாகவும் சிக்கலான முரண்பாடுகள் உருவானதால், ஒரு நெருக்கமான உறவு எம்மிடையே வளரவில்லை. ஆனால், அதேவேளை தனிப்பட்ட குரோதமும் இருக்கவில்லை. ஆகவேதான் பின்னர் பாலாவுடன் அரசியல் சந்திப்பு ஒன்றுக்காக சென்னையில் உள்ள விடுதலைப் புலிகளின் பணிமனைக்கு 1985 இலே சிறீ வந்தபோது அவரைச் சந்திப்பதில் மகிழ்ச்சியாக இருந்தது. பின்னர், விடுதலைப் புலிகளுக்கும் ரெலோவுக்கும் இடையே கொடூரமான மோதல் வெடித்து ஏற்பட்ட துப்பாக்கிச் சண்டையில் சிறீ கொல்லப்பட்டார்.

விடுதலைப் புலிப் போராளிகள் என்று கூறக் கூடிய இளைஞர்களின் எண்ணிக்கை 1981 இலே மிகக் குறைவே. ஆனாலும் அந்தச் சிறிய தொகையினரிடையே கூட, வழிநடத்தல், ஒன்று படுத்தல், ஒழுக்கத்தை வலியுறுத்தல் ஆகியவற்றால், தமது தலைமைச் சிறப்பை திரு. பிரபாகரன் நன்கு வெளிப்படுத்தினார். ஆண்டுக் கணக்கான அனுபவம் அப்போது இல்லாததாலும் நாம் ஒரு சிறிய குழுவாக இருந்ததாலும் எமக்கு நல்ல பெயரே நிலவியது. ஆகவே எவர் எவருக்கு என்ன என்ன பதவி, பொறுப்பு, கடமை என்று இருந்தாலும், ஒரு சமத்துவம், உண்மையான உறவு, பாசம் ஆகியவை வரசலவாக்கத்தில் வசித்த எம்மிடையே இழையோடி இருந்தது. பெரும்பாலான வீடுகளில் இருப்பதுபோல சமையல் அறையே நாம் கூடும் இடம். கூடி உண்ணும் போது நாம் பெற்ற மகிழ்ச்சியே தனியானது. பாலா, பண்டிதர், சங்கர், ரகு, பேபி, நேசன் நான் எல்லோரும் கூட்டுச் சமையலில் ஈடுபடும்போது ஒரே சிரிப்பும், பகிடியும் கும்மாளமுமாக இருக்கும். பாலா மீன் வெட்டிக் கொடுப்பார். அதன் பின் சமையலறை மூலையில் அரிசி மூடை மீது





அமர்ந்தபடியே பகிடி விடுவார். போராளிகளின் வெடிச் சிரிப்பில் இருந்து பாலியல் ரீதியான பகிடிகள் என்று புரிந்து கொள்வேன். நான் ஈர வெங்காயம் உரிப்பேன். நேசன், தரையில் அமர்ந்து தேங்காய் துருவுவார். தலைமைச் சமையல்காரர் என்ற தோரணையில் பண்டிதர் மண்ணெண்ணய் அடுப்புடன் போராடுவார். பண்டிதர் குறிப்பிடும் அளவுகளில் ரகுவும் சங்கரும் காய்கறி நறுக்கிக் கொடுப்பார்கள். சில சமயம் சிறீ இறைச்சி காய்ச்சும் பொறுப்பைத் தாமே ஏற்பார். அவருடைய கறி, தனிச் சுவையாக இருக்கும். பிரபாகரனும் அடிக்கடி இந்தக் கும்மாளத்தில் கலந்து கொள்வார். அவருடைய கோழிக்கறி தனிச் சுவையானது. இவை எல்லாம் ஒரு சாதாரண நடைமுறை போலப் பட்டாலும், பிரபாகரன் தமது போராளிகளுக்கு வழங்கிய பயிற்சியின் வெளிப்பாடே இது. சமையற் தகைமை உடையவர்களாக இருப்பது கெரில்லாப் போராளிகளின் அடிப்படைத் தேவைகளில் ஒன்று என்பதை பிரபாகரன் அவர்களுக்கு புகட்டியிருந்தார். சமையல் முடிந்து சமையல் அறை துப்புரவாக்கப்பட்ட பின், எல்லோரும் போய்க் கழுவிக் குளித்துவிட்டு வருவோம். தரையிலே பாய் விரிக்கப்படும். வட்டமாக சப்பணம் கட்டி உட்காருவோம். சமைத்ததைப் பகிர்ந்து புசிப்போம். பிரபாகரனும் சுவைத்து உண்பார். அவரும் அவருடைய போராளிகள் அனைவரும் தரமான சமையலாளர்களே. ஆனாலும் பண்டிதரே அனைவரிலும் சிறந்த சமையற்காரர் என்பது எல்லோராலும் ஏற்கப்பட்ட உண்மை.

சாப்பிட வேண்டுமானால் சமைக்க வேண்டும். அதற்கு முன் சந்தைக்குப் போக வேண்டும். மேற்குலகில் என்றால், உணவை மொத்தமாக வாங்கிக் குளிர் சாதனப் பெட்டியில் சேமித்து வைக்கலாம். இந்தியாவில் அப்படி அல்ல. உடன் மீன், இறைச்சி, காய்கறி ஆகியவற்றை அன்றாடம் வாங்க வேண்டியது தேவையாகும். ஆனபடியால், திரு. திருமதி பாலசிங்கமும் பண்டிதரும் தினமும் சந்தைக்குப் புறப்படுவோம். மற்றவர்களில் யாராவது விரும்பினால், அவர்களும் கூடி வருவார்கள். முற்பகல் வெய்யிலில் சந்தைக்குப் புறப்படுவோம். ஒரு கிலோ மீட்டர் நடந்து, பேரூந்துத் தரிப்பை அடைவோம். இடக்கு முடக்கான பெரிய சாம்பல்-பச்சை நிறப் பேரூந்தைக் கண்டதும் எம்மில் ஒருவர் குறுக்கே நின்று மறிப்போம். பாலாவும் நானும் பேரூந்தில் திறந்த யன்னல் பக்கமாக அமர்வோம். பேரூந்து நாட்டுப் புறத்துக்குள் நின்று நின்று போகும். கடைசியில் பேரூர் சந்தையில் நிற்கும். அங்கே பெரிய சனக் கூட்டம். எமது செலவுத் திட்டத்தின்படி ஆளுக்கு பத்து ரூபா. நியாயமான விலையில் புத்தம் புது

மீனை பாலா வாங்கிவிடுவார். இதனால் பண்டிதருடைய பொறுப்பு சுமை இறங்கி விடும்.

தமிழ் நாட்டில் நண்பகலுக்கு மேல் பொழுது நன்றாகச் சாயும் வரை, வெய்யிலில் வெளியே வராமல் வீட்டுக்கு உள்ளே இருப்பது புத்திசாலித்தனமானது. கட்டாயத் தேவை இருந்தாலன்றி, பெரும்பாலான மக்கள் நிழலில் ஒதுங்கி விடுவார்கள். பொதுவாக ஒரு குட்டித் தூக்கம் போடுவார்கள். நாமும் தூங்கி விடுவோம். ஆனால் பண்டிதர், அதிகம் கணிதம் தெரியாவிட்டாலும், காசுக் கணக்கைத் திரும்பத் திரும்ப சரிபார்த்துக் கொண்டிருப்பார். இயக்கத்தின் நிதிக் கணக்கைக் கூட்டுவதும், கழிப்பதும் சரி பார்ப்பதும் புத்தகத்தில் குறிப்பதுமாக அதிக நேரம் மூழ்கிப் போய் இருப்பார்.

பகல் வெய்யில் கொதி அடங்கி, கதிரவன் செந்நிறம் பாரித்து அடங்கத் தொடங்க மாலை வேளையின் மென் குளிரை அனுபவிக்க வேண்டும் என்ற புது உற்சாகம் எமக்குள் ஊறும். எல்லோரும் கூட்டாக வாரம் ஒரு தடவை சினிமாவுக்குப் போவோம். பிரபாகரனும் கூட வருவார். தமிழ் நாட்டில் பொதுவான பொழுது போக்கு, தமிழ் சினிமாதான். சனக் கூட்டம் அங்கேதான் போய்க் கொண்டிருக்கும். சினிமாவின் உள்ளடக்கத்தில் அல்ல. அதன் கற்பனைக் காட்சியிலே தான் மக்களுக்குக் கவர்ச்சி. அழகான சினிமா நட்சத்திரங்கள், மறைமுகமான பாலியல் சேட்டைகள் புரிவார்கள். வெளி வெளியான பாலியல் வெளிப்பாடு அடக்கப்பட்ட சமூகத்தில், அந்த அதீத கற்பனை உணர்ச்சிக் கிளுகிளுப்பேற்றும். மக்கள் மயங்கிப் போவார்கள். இதுவே லட்சக் கணக்கில் மக்களை சினிமாவுக்கு சுண்டியிழுக்கும். ஆனால் பிரபாகரனுக்கு அவருடைய போராளிகளுக்கும் ஆங்கிலப் படங்கள் தான் பிடிக்கும். குறிப்பாகப் போர்ப் படங்கள்.

நாம் சினிமாவுக்குப் போகாவிட்டால், இந்திய வீடுகளுக்கே தனிச் சிறப்பான மொட்டை மாடியில் கூடுவோம். அங்கே முகில் இல்லாத வானத்தையும் முடிவற்ற பிரபஞ்ச வெளியையும் பார்த்தபடியிருப்போம். எண்ணுக்கணக்கற்ற அத்தனை நட்சத்திரங்களுக்குள் எவ்வளவு சின்னஞ்சிறியவர்கள் நாம் என்ற எண்ணம் பொறிக்கும். இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றி நாம் அறிந்தது கை மண்ணளவே என்பதையும் உணர்வோம். தத்துவ மெஞ்ஞான சஞ்சரிப்பில் ஈடுபாடு இல்லாத போராளிகளுக்கு, வாழ்வின் புதிர்கள் பற்றிய அவர்களுடைய வினாக்களுக்கு பாலா சுவையாகப் பதிலளிப்பார்.

தமிழ் ஆடவர்களிடையே பிரபலமான இன்னொரு பொழுது போக்கு சீட்டு ஆடுவது. பிரபாகரன் இதைத் தடை செய்திருந்தார்.





ஆனால் பாலா இளவயதில் தீவிரமாகச் சீட்டு ஆடியவர். பிரபாகரன் வீட்டில் இல்லாத தருணங்களில், போராளிகளை பாலா வலிந்து இழுத்துவிட்டு இரகசியமாக “கடதாசி விளையாடுவார்” எதிர்பாராமல் பிரபாகரன் திரும்பி வந்தால், தம்பி உரக்கச் சிரித்து விட்டு, பெடியளைத் தவறான பாதையில் இட்டுச் செல்வதற்காக விளையாட்டு விளையாட்டாக பாலாவைக் கண்டிப்பார்.

ஏற்கனவே நான் குறிப்பிட்டது போல இயக்கத்தின் நிதி நிலை இக்கட்டானதாகவே இருந்தது. உணவுக்காக ஆளுக்குப் பத்து ரூபாய் மட்டுமே செலவிடலாம். போராளிகள் ஒவ்வொருவரும் இரண்டு மாற்றுடைகள் மட்டுமே வைத்திருக்கலாம். ஆண்டுக்கு இரண்டு தடவையே புதுத்துணி. வாரம் ஒரு தடவை சினிமா பார்க்க ஒவ்வொருவருக்கும் கைச் செலவுக்குப் பணம் தரப்படும். மதுவிலும் புகைத்தலிலும் மட்டும் செலவே இராது. ஏனென்றால் இயக்கப் போராளிகளுக்கு அவை முற்றாகத் தடை செய்யப்பட்டு இருந்தன.

இருந்த போதிலும் என்மட்டில் தாராளமாகவே நடந்து கொண்டார்கள். நான் அவர்களுடைய ‘செல்லப் பிள்ளை’. கடைத் தெருவிலும் சேலை வாங்கித் தருவார்கள். கேட்டது எல்லாம் கிடைத்தது. பாலாவுக்குப் புதிய கண்ணாடி கிடைத்தது. பாலாவுடைய நரை முடியைப் பார்த்துக் கவலைப் பட்டார்கள். சாயம் பூசுமாறு அவரை நச்சரித்து இசைய வைத்து விட்டார்கள். உணவுக்கான மேலதிகச் செலவில் மிகச் சிக்கனமாகவே இருந்தார்கள். ஆனாலும் என்மீதுள்ள பரிவினால், அவ்வப்போது வெளியே சாப்பிடப் போவாம். பிரபாகரனும் அதற்கு இணங்குவார். வெவ்வேறு வகை உணவுகளைச் சுவை பார்ப்பதில் அவருக்கு ஆர்வம். அதிலும் வெளிநாட்டு உணவு வகைகளில் தனி ஈடுபாடு உண்டு.

இந்தப் பயணத்தின் போதுதான் உண்மையன போர் ஆயுதங்களுடன் எனக்குப் பரிச்சயம் ஏற்பட்டது. விடுதலைப் புலிகளோடும் தேசிய விடுதலைக்கான ஆயுதப் போராட்டத்தோடும் நான் சம்பந்தப்பட்டபோது, எனக்கு உயிர் ஆபத்தைத் தேடிக் கொள்கிறேன் என்பதையும் நன்கு அறிந்திருந்தேன். ஒருவர் தமது உயிரை இழக்க நேரலாம் என்பதற்கு அவர் தயார் இல்லை என்றால் ஆயுதப் போராட்டத்தில் அவர் தம்மை முழுமையாக அர்ப்பணிக்க முடியாது. நான் ஆயுதங்களைத் தொட்டுத் தூக்கியபோது, போராட்டத்தில் அது ஒரு தேவையான பங்கு என்றாலும், தற்காப்புக்கும், விடுதலைக்குமான ஊடகமாகவே நான் ஆயுதத்தை மதித்தேன். தமிழ் மக்களின் போராட்டத்தில் ஆயுதம் மிகவும் முக்கியமானது. பிரபாகரன், ரகு,

பண்டிதர், பேபி, எல்லோருமே பாதுகாப்பு நோக்கத்திற்காக றிவோல்வர் பிஸ்ரல் தரித்திருந்தார்கள். அவர்களிடம் கனரகத் துப்பாக்கிகளும் இருந்தன.

அன்ரிக்கும் இலக்குப் பயிற்சி தரத் தீர்மானித்தார்கள். அதற்கு, முதலில் மறைவிடங்களில் இருந்து துப்பாக்கிகளை மீட்டு வர வேண்டும். இதற்காக ரகுவும் பண்டிதரும் போனார்கள். நாம் சந்திக்க வேண்டிய இடத்துக்கு அவர்கள் வந்தபோது இரண்டு அப்பாவி இளைஞர்களையே அவர்களில் கண்டேன். புதினத் தாளிலே சுற்றிய இரண்டு பொதிகள் கையிலே தொங்க, எதிலுமே அக்கறை இல்லாதவர்கள் போல, அமைதி யாக வந்தார்கள். நன்கு மறைக்கப்பட் ஆயுதங்களே அந்தப் பொதிகள். நான் எனக்குள்ளேயே சிரித்துக் கொண்டேன். தேடப்பட்ட "இரண்டு பயங்கரவாதிகள்" சென்னைக்கு சில மைல் வெளியே, தானியங்கித் துப்பாக்கிகளோடு தங்கள் இலக்குப் பயிற்சிக்காக சென்று கொண்டிருப்பதை பொதுமக்கள் பார்த்திருந்தால் அவர்கள் என்ன செய்திருப்பார்கள் என்று ஒரு கணம் சிந்தித்தேன்.

சென்னைக்குத் தெற்கே கரையோரமாக, சில மைல் தூரம் பயணம் செய்தோம். அங்கே ஒரு சவுக்குத் தோப்பு. அங்கேயே துப்பாக்கிச் சூட்டுப் பயிற்சிக் களம் அமைக்கப்பட்டது. சுடும் கலைப் பயிற்சி எனக்கு அங்கேயே வழங்கப்பட்டது. பிரபாகரன் முதலில் விளக்கம் அளித்தார்; அதன் பின் கைத் துப்பாக்கியை எப்படிக் கையாள்வது என்று செய்து காட்டினார். அதன் பின்னர் ஆயுதத்தை என்னிடம் தந்தார். சரியாகக் குறிபார்க்க என்னால் இயலவில்லை. ஆனாலும் போராட்டத்தில் நான் பங்கெடுப்பதானால், அதைக் கற்றாக வேண்டும் என்பதை உணர்ந்தேன். இலக்கைக் குறி வைத்தேன். ஆறுக்கு ஒன்றாவது இலக்குத் தைத்தது. அதன் பின் தானியங்கித் துப்பாக்கிப் பயிற்சி. அது ஒரு அச்சம் தரும் அனுபவம். அது வேகமாக எகிறும்போது ஆயுதத்தை கீழே விழுத்தப் பார்த்தேன். ஆயுதத்தைப் பயன்படுத்துவதில் எனக்கு சிரமம் இல்லை. ஆனால் ஒரு தானியங்கித் துப்பாக்கியைக் கையாண்டவர்களுக்கு அது ஏற்படுத்தக்கூடிய சேதத்தின் விளைவு புரியும். ஆயுதம் சிறிதோ, பெரிதோ, அதன் விளைவு உயிர் அழிவே. இந்தப் பயிற்சியின் போது ஆயுதத்துக்கு மதிப்பு அளிக்கக் கற்றுக் கொண்டேன். அதே சமயம் சில நிமிடப் பயிற்சிக்கே எவ்வளவு செலவாகிறது என்பதையும் புரிந்து கொண்டேன். இவற்றுக்கெல்லாம் நான் அருகதை உடையவள் ஆனேன் என்பதை உணரும்போது உள்ளூரப் பெருமையாக இருந்தது. நான் எடுத்த எடுப்பில் சுட்டுப் பயின்ற ஆறு சுற்றிலும், அதற்குப் பயன்படுத்தப்பட்ட அந்த





ஒவ்வொரு ரவையின் பெறுமதியும் ரூ. 25 ஆகும். இனித் தொடக்க நாட்களில் துப்பாக்கி ரவை வாங்குவதே மிகக் கடினம். இயக்கம் வளரத் தொடங்கிய காலத்தில் விடுதலைப் போராளிகளுக்குத் துப்பாக்கிப் பயிற்சி வாரத்தில் ஒரு சுற்று அல்லது இரண்டு சுற்று மட்டுமே கிடைக்கும். ஒரு சாதாரண கைத்துப்பாக்கி புதிதாகக் கிடைத்தால் அதுவே கொண்டாட்டம் ஆகிவிடும். நாள் ஏற, ஏற இந்தப் பயிற்சியிலும் அதிகம் கட்டுப்பாடுகள் வந்தன. ரவைகள் அருந்தலாகவே கிடைக்கும். ஆகவே இலக்குப் பயிற்சியின்போது, ஒவ்வொரு தடவையும் கூடிய கவனம் எடுத்து இலக்குத் தைப்பதில், போராளிகள் குறியாக இருந்தார்கள். துப்பாக்கி ரவைத் தட்டுப்பாடு அடிக்கடி தொடர்ந்தும் ஏற்பட்டது. ஆயுதங்களையும் துப்பாக்கி ரவைகளையும் பெறுவதில் இடர்பாடு அதி-கரித்தது. இதன் விளைவாக அவற்றின் அருமையைப் புரிந்து கொண்டவர்களாக, போராளிகள் பொறுப்புணர்வோடு நடந்து கொண்டார்கள். ஆயுதங்களின் பெறுமதி உணர்ந்த பொறுப்புணர்வு, விடுதலைப் புலிப் போராளிகளின் மனதில் இன்றும் அவர்களுடைய மரபா-கச் செதுக்கப்பட்டிருக்கின்றது. ஆண்டுகள் செல்லச் செல்ல ஆயுதங்கள் மட்டில் போராளிகள் கொண்ட மதிப்பும் பற்றுதலும் அதிகரித்து வந்திருக்கிறது. தங்கள் போராட்டத்தை விரிவு படுத்துவதற்காக, போர்க்களத்தில் ஆயுதங்களைச் சேகரிக்கும் பணியில் பல போராளிகள் தங்கள் உயிர்களை அர்ப்பணித்திருப்பதும், ஆயுதங்கள் மட்டில் அவர்கள் கொண்டிருக்கும் மதிப்பை உறுதிப்படுத்துகின்றது. அன்றும் சரி, இன்றும் சரி, போராட்டம், மக்களின் விடுதலை ஆகியவற்றுடன் ஆயுதம் பின்னிப் பிணைந்திருக்கின்றது. பிரபாகரனைப் பொறுத்த வரையில் துப்பாக்கிகளில் அவருக்கு நாட்டம் உண்டு; குறி வைப்பதிலும் அவர் ஒரு புலி; ஆயுதங்களின் உயிர் போக்கும் ஆற்றலை முழுமையாக உணர்ந்தவர்; ஆகவே அவற்றைக் கையாளும் போது ஒழுங்கு முறையும் கட்டுப்பாடும் கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்பதை போராளிகள் மனதில் ஆழமாகப் பதித்திருக்கிறார். கைபிழைபாடாக போராளி ஒருவர் உயிரிழக்க நேர்ந்தால் ஆயுதங்களைக் கையாளும்போது அதிக கவனமும், ஒழுங்குக் கட்டுப்பாடும், மீண்டும் புதுப்பிக்கப்படும். இதனால் ஆயுதங்களோடு சீவிப்பது எனது வாழ்வில் இணைந்து கொண்டது. 1983 இலே சென்னைக்கு நான் திரும்பிய பின்னர் ஆயுதம் தரிக்கத் தொடங்கிய முதற் பெண் நானே. பாலாவுக்கும் எனக்கும் தற்காப்புக்காக எஸ்.ஐ.ஜீ சோர் பிஸ்ரல் ஒன்றை பிரபாகரன் எனக்கு வழங்கியிருந்தார். நான் எங்கு சென்றாலும் அதை எனது கைப் பையில் கொண்டு திரிந்தேன். கடைசி யில் தானியங்கி றைபிள் ஒன்றுடன் நடமாடுவதும் எனது அறையில் அதை

வைத்துக் கொண்டு தூங்குவதும் சாதாரண நடைமுறையாகியது. நன்றியுணர்வுடனேயே நான் அந்த ஆயுதத்தை வைத்திருந்தேன்.

தமிழ் நாட்டிலே நாம் 1981 இலே சென்றபோது, வேறும் பல வரலாற்றுப் போராளிகள் அங்கே இருந்தார்கள். ஒருவர் மாத்தையா (மகேந்திரராஜா); துயரமான முடிவுக்கு ஆளான விடுதலைப் புலிகளின் பிரதித் தலைவர் இவர். இனத் துரோகத்துக்காக 1994 இலே மரண தண்டனைக்கு ஆளானார். இவரும் சில நாட்கள் எம்மோடு தங்கியிருந்தார். பாராட்டுதற்குரிய ஒரு நிகழ்வே அவரை அங்கு வரவழைத்தது. விடுதலைப் புலிகளுக்கு உதவியவர்களில் ஒருவருடைய குடும்பத்தினரை சிறீலங்கா ராணுவம் வீட்டுக் காவலில் வைத்திருந்தது. காவலிலிடப்பட்டிருந்த பெண்ணையும் நான்கு பிள்ளைகளையும் ராணுவக் கடுங்காவலுக்கிடையே மாத்தையா துணிச்சலோடு மீட்டு, கடல் கடந்து கூட்டி வந்து சென்னையில் உள்ள கணவனிடம் ஒப்படைத்திருந்தார். மாத்தையா அதிக நாள் தங்கவில்லை. ஆகவே அவரை ஆழமாகப் புரிந்து கொள்ளக் கூடிய அளவுக்கு அவரோடு பழகக் கிடைக்கவில்லை. மாத்தையா மென்மையாகப் பேசுவார்; கலகலப்பாகப் பழக மாட்டார்; பிரபாகரனுடன் நீண்ட உரையாடல்களில் ஈடுபட்டிருப்பார். அநேகமாக தமிழீழப் பிரச்சினைகள் தொடர்பானதாகவே அவை இருந்திருக்கும். பின்னைய ஆண்டுகளில் கூட ஏனைய தலைவர்களுடனும் பழகியது போல மாத்தையாவுடன் நான் என்றுமே நெருங்கிப் பழகியதில்லை. வாய்ப்புக் கிடைக்காததுதான் காரணமின்றி அரசியற் கருத்து வேறுபாடோ தனிப்பட்ட விருப்பு வெறுப்போ அல்ல. ஆனால் பாலாவைப் பார்ப்பதற்காக எமது வீட்டுக்கு வரும்போதெல்லாம் மிகவும் கண்ணியமாகவே என்னோடு பழகுவார்.

ஆரம்ப காலத்தில் இருந்தே இன்னொரு வரலாற்று நாயகன் என்றால் அவர்தான், என்றுமே கலகலப்பாக உற்சாகம் மிகுந்து காணப்படும் கிட்டு. நாம் இந்தியாவுக்கு 1981 இலே சென்ற போது அவரை விடுதலைப் புலிகளின் மதுரை முகாமில் முதற் தடவையாக சந்தித்தோம். இளமைப்பருவத்தில் குறும்புக்காரராக விளங்கிய கிட்டு, தமிழ் நாட்டு உள்ளூர்வாசிகளின் பழமைக் கொள்கைகளைக் கிண்டல் செய்து சவால் விட்டு மகிழ்வார். ஒரு தடவை வேதியர்க்கு உரிய புனிதப் பூணூல் தரித்து உணவு விடுதி ஒன்றுக்குள் நுழைந்து ஆட்டிறைச்சிக் கறியும், கோழிப் பொரியலும் தருவித்து, அங்கிருந்த சைவ உணவினர் வியப்போடும் வெறுப்போடும் பார்த்துக் கொண்டிருக்க, கிட்டு தனது அசைவ உணவை நன்கு சுவைத்து உண்டார். தலைமைப் பண்புகள்





அபரிதமாக நிறைந்த ஒரு இளைஞரே கிட்டு என்பதில் சந்தேகமே இல்லை.

1983 ற்கும், 1987 ற்கும் இடைப்பட்ட காலத்தில், யாழ்ப்பாணத்தில் அவர் விடுதலைப் புலிகளின் ஆயுத எதிர்ப்பு இயக்கத்திற்கு தலைமை தாங்கி பல இராணுவ நடவடிக்கைகளை முன்னெடுத்தார். இதனால் ஒரு துணிகரமான கெரில்லாப் போராளியாகவும், போர்த் தந்திரோபாயத்தில் ஒரு விற்பன்னராகவும் மக்களிடையே அவர் புகழீட்டினார். கட்டிறுக்கமான ஒழுக்கக் கட்டுப்பாட்டுடன் கலகலப்பான அவரது சுபாவமும் ஒத்திசைந்து அவருக்கு ஒரு கவர்ச்சிகரமான ஆளுமையைக் கொடுத்தது எனலாம்.

ஆனால் கிட்டுவைப் பற்றி எண்ணும் பொழுதெல்லாம் போராளிகள் மீதும், மக்கள் மீதும், தமிழரின் தாயகம் மீதும் உணர்ச்சிபூர்வமாக அவர் கொண்டிருந்த அளவு கடந்த நேசம்தான் நினைவுக்கு வருகிறது. 1985 இலே எம்மைச் சந்திக்க கிட்டு சென்னைக்கு வந்தபோது பாலாவையும் என்னையும் தம்மோடு கூட்டிக்கொண்டு யாழ்ப்பாணம் திரும்ப அவர் திட்டமிட்டு வந்தார். அங்கே எம்மை பாதுகாப்பாக வைத்திருக்க முடியும் என்பதுடன் தாம் நேசித்த யாழ்ப்பாணத்தை எனக்கு சுற்றிக் காட்டவும் கருதியிருந்தார்.

இந்தியக் கடற்படையினரின் கரங்களில் சிக்கி 1993 இலே, துயர் தரும் வகையில் அவர் மரணம் அடைந்தார். அதையடுத்து அவருடைய சொந்த ஊரான வல்வெட்டித்துறையில் பிரமாண்டமான அளவில் துயராஞ்சலி ஒன்று நடைபெற்றது. ஒரு இலட்சத்திற்கு மேலான மக்கள் அந்த வைபவத்தில் திரண்டிருந்தார்கள். வெறுமே அஞ்சலி செலுத்த அல்ல. அந்த மண்ணின் மைந்தன் மீது இருந்த ஆழமான அன்பையும் மதிப்பையும் வெளிக்காட்டவே பெரும் திரளாக மக்கள் அங்கு அணிதிரண்டனர். இன்னுமொரு சரித்திர நாயகனாக திகழ்ந்தவர் பொன்னம்மான். பிரபாகரனின் நம்பிக்கைக்குரிய மூத்த தலைவர்களில் ஒருவர். கிட்டுவோடு 1981 இலே மதுரையில் இவர் தங்கியிருந்தார். அமைதியான போக்குடையவர்; போராளிகளால் பெரிதும் மதிக்கப்பட்டவர். இந்தியாவிடம் இருந்து 1983 இலே ராணுவப் பயிற்சி பெற்ற முதற்தொகுதிப் போராளிகளில் இவரும் ஒருவர். தமிழ் நாட்டில் புலிகளின் இராணுவப் பயிற்சி முகாம்களை நிறுவிச் செயற்படுத்தும் பொறுப்பு பொன்னம்மானிடமே ஒப்படைக்கப்பட்டது. யாழ்ப்பாணத்தில் தற்செயலாக நிகழ்ந்த வெடிகுண்டு விபத்தில் சிக்கி இவர் வீரச்சாவைத் தழுவிக் கொண்டார்.

## இறுதி முடிவுகள்

வரலாற்று நாயகனான பிரபாகரன் அவர்களையும் விடுதலைப் புலிப் போராளிகளையும் நேர்நேராக சந்தித்து, அவர்களுடன் கூடி வாழக்கிடைத்த அரிய பெருமையுடன் இலண்டன் திரும்பினோம். லண்டனில் இருக்கும் போது, சென்னைக்கோ யாழ்ப்பாணத்துக்கோ திரும்பிச் செல்லும் அந்த நாளுக்காகக் காத்து இருந்தோம். இந்தியப் பயணத்தின் பின் அரசியல் ரீதியில் முழுமையாக எம்மை அர்ப்பணித்தது போலவே, உளரீதியிலும் எம்மை அர்ப்பணித்திருந்தோம். போராட்ட களத்திலிருந்து ஆயிரம் ஆயிரம் மைல்களுக்கு அப்பால் நாற்காலியில் உட்கார்ந்தபடி கற்பனாவாத அரசியல் பற்றி பேசுவதை விட்டுவிட்டு களத்துக்கு நேரே சென்று பங்கெடுக்க விரும்பினோம். இயக்கத்தோடு தொடர்ந்தும் தொடர்பைப் பேணினோம். இலண்டனில் எமது அரசியல் பணியையும் புரிந்தோம். அதே சமயம் பாலா அரை மனதோடு தனது கலாநிதி ஆய்வைத் தொடர்ந்தார். வெற்றுக் கருத்தியல் தத்துவார்த்தங்களால் யாருக்கு என்ன பயன் என்பதே அவர் கொண்டிருந்த கருத்தாக இருந்தது. வருமானம் தேவை என்பதால் இலண்டனில் உள்ள பெரிய மருத்துவமனை ஒன்றில் இரவு வேளையில் பணிபுரியும் மருத்துவத் தாதியாக வேலையில் சேர்ந்தேன். விரைவிலே இந்தியாவுக்கோ இலங்கைக்கோ திரும்பிச் செல்வோம் என்ற எதிர்பார்ப்போடு நாட்களை ஓட்டினேன். ஏனென்றால், உடல் ரீதியாகவும் உளரீதியாகவும் தாதித் தொழிலில் சலிப்பு அடைந்து இருந்தேன். மருத்துவத் தாதித் தொழில் எனது அடிப்படைத் தொழில். அதைவிட எனக்கு வேறு தொழில் தகைமைகளும் கல்வித்துறைத் தகமைகளும் இருந்தன. ஆகவே அவற்றை ஏன் பயன்படுத்தக்கூடாது அல்லது அவற்றை மேலும் ஏன் வளர்த்துக் கொள்ளக்கூடாது என்று கேட்கத் தோன்றியது. தாதித் தொழிலில் இருந்த ஒரே வாய்ப்பு என்னவென்றால், எனது தொழில் நேரத்தை நானே தெரிவு செய்யலாம் என்பதே. அதை விட தாதித்தொழில் ஆயாசம் தருவதாகவே இருந்தது.

பார்க்கும் தொழிலால் ஏற்பட்ட சலிப்பை ஒருபுறம் ஒதுக்கிவிட்டாலும், குடும்பத்தைப் பற்றியும் நான் சிந்திக்க வேண்டியிருந்தது. பல ஆண்டுகளாக பிள்ளைகளைப் பெறுவதைப் பற்றி சிந்திக்காமலே விட்டிருந்தேன். எனது வாலிப வயதிலும் இளம் பெண்ணாக இருக்கும் போதும் குழந்தைகள் பெற வேண்டும் என்று பேசுவதும் சிந்திப்பதுமாக இருந்தேன். ஆனால் வளர வளர அதைப் பற்றிப் பேசுவதோ சிந்திப்பதோ குறைந்தது. தாய்மை எய்த வேண்டும்





என்ற நினைவே அற்றுப் போயிற்று. இப்போது திருமணமாகி மூன்று ஆண்டு கழிய, முப்பத்தியொரு வயதில் எல்லாவற்றையும் தூக்கி எறிந்து விட்டு ஆயுதப் போராட்டத்தில் பங்கு கொள்ள வேண்டும் என்று விரும்பிக் கொண்டு இருக்கும் வேளையில் தாய்மை எய்துதல் உட்பட நான் தெரிவு செய்யக்கூடிய அனைத்து வழிகளையும் ஆராய்ந்து பார்க்க வேண்டும் என்று நினைத்தேன். நான் ஏன் கர்ப்பமாகவில்லை என்பது சென்னையில் உள்ள போராளிகளுக்கு புதிராகவே இருந்தது. ஆனால் அதில் தவறு ஏதும் இல்லை. தமிழக் கலாச்சாரத்தில், திருமணமான உடனே கர்ப்பம் தரிப்பதும் தாய்மை எய்துவதும் ஒன்றன் பின் ஒன்றாக நிகழ்வது இயல்பு. திருமணமாகி முதல் இரண்டு ஆண்டுகளுக்குள்ளேயே ஒரு குழந்தையைப் பெற்றுவிட வேண்டும் என்று எந்தப் பெண்ணும் எதிர்பார்க்கப்படுவாள். பெரும்பாலான பெண்கள் முதல் ஆண்டிலேயே பிள்ளையைப் பெற்று விடுவார்கள். பேசிக் கட்டும் திருமணத்தில் மகப்பேறு, உறவைப் பலப்படுத்தி குடும்பச் சூழலை உருவாக்கிவிடும். இது ஒவ்வொருவர் மீதும் பரஸ்பரம் சில பொறுப்புகளைச் சுமத்தும். இதன் பின் கணவன் மனைவியிடையே சுமுக நிலை நிலவாவிட்டாலும், குடும்பத்திலிருந்து உறவை முறித்துக் கொள்வது சுலபமாகிவிடாது. திருமணம் புரியும்போது எனது நோக்கம் பிள்ளைகளைப் பெறுவது அல்ல. நான் விரும்பிய மனிதரை மணந்து அவரோடு வாழ்வது சமூகத்தில் ஏற்கப்படவேண்டும் என்பதற்காகவே திருமணம் புரிந்து கொண்டேன். பிள்ளைகளைப் பெற்று ஒரே குடும்ப வாழ்க்கை தொடங்க வேண்டும் என்பதற்காக நான் திருமணம் செய்யவில்லை. வேரோடிப் போன வாழ்க்கை முறைகளோடு மக்கள் எவ்வளவிற்கு ஆழ்ந்து போயிருந்தார்கள் என்பது என்னை மலைக்க வைத்தது. வெவ்வேறு விதமான வாழ்க்கைப் பாங்குகளை உலகம் ஏற்றுக் கொள்ளும் அளவிற்கு முன்னேறியிருப்பதாக நான் நினைத்திருந்தேன். ஆனால் சமூக வரம்புகளுக்கு வெளியே வரும்போதுதான் சமுதாயக் கண்ணோட்டங்கள் எவ்வளவு வேரூன்றி இருக்கின்றன என்பது தெரியும். நாம் சென்னையில் இருந்தபோது பிள்ளை பெறுவது பற்றிப் போராளிகள் விசாரிக்கும்போது நான் அதைப் பொறுத்துக் கொண்டேன். திருமணம், தாய்மை ஆகியவை தொடர்பான அவர்களுடைய கலாச்சார கருத்துகளே அவர்களது கேள்விகளில் பிரதிபலித்தன. மலட்டுத் தன்மை உடைய ஒருவர், அதை மூடி மறைப்பதற்காக, பிள்ளை வேண்டாம் என்று கூறுவதாகக் கருதுவார்கள். இங்கிலாந்திலே வேலைத் தளத்திலே என்னோடு வேலை செய்பவர்கள் கூட, திருமணமான ஒரு பெண்ணுக்கு தாய்மையே பிரதானமானது என்று நேருக்கு நேர் வாதிடுவதைப் பல தடவை

கேட்டிருக்கிறேன். தாய்மையைத் தேர்ந்தெடுக்காது விட்டமைக்காக என்னில் ஏதோ குறைபாடு இருப்பதாகவும் சில பெண்கள் கருதினார்கள். சிலர் எடுத்த எடுப்பிலேயே பகைமை பாராட்டினார்கள். ஒரு சந்தர்ப்பம் நினைவுக்கு வருகின்றது. அப்போது மகப்பேறு தொடர்பாக நான் இறுதி முடிவுக்கு வந்திருக்கவில்லை. நாலோ ஐந்து பேர் ஒன்றாக இருந்து குழந்தைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். எனக்குக் குழந்தை இல்லை என்று கூறினேன். உடனடியாக ஒருவர் குதித்து எழுந்தார். குழந்தை பெறுவதை விட வேலை செய்து பணம் சம்பாதிக்க முயலும் பேராசை கொண்ட ஒரு சுயநலவாதி என்று என்னைத் திட்டினார். வேறு சிலரும் அவரை ஆதரித்தார்கள். நாம் ஒட்டாண்டிகள் என்பதும், கையிலே பணம் புழங்கினால் நான் இரவு வேலைக்குச் சென்றிருக்க மாட்டேன் என்பதும் அவர்களுக்குத் தெரியாது. இத்தகைய ஈவிரக்கமற்ற கண்டனங்கள் என்னைத் திகைக்க வைத்தன; மற்றவர்கள் என்னைப்பற்றி கொண்டிருந்த கருத்துப் பற்றிச் சிந்திக்க வைத்தன; அவர்களுடைய கண்டனம் சரிதானா என்று என்னையே நான் கேட்டுக் கொண்டேன். ஆனாலும் எனது முடிவை அவர்களுடைய கண்டனங்கள் பாதிக்கவில்லை. எனது தொழில் அனுபவம் காரணமாக தாய்மை, நோக்காடு, பிரசவம் ஆகியவை தொடர்பாக நீண்ட நாட்களாக நான் உயர்ந்த எண்ணம் கொண்டிருக்கவில்லை. இருபத்தியொரு வயதில் மகிழ்ச்சியுடனேயே இளம் மருத்துவிச்சியாகப் பணிபுரிந்து கொண்டிருந்தேன். தாய்மையோ, நோக்காடோ, பிரசவமோ என்னைப் பெரிதாக அப்போது ஈர்க்கவில்லை. இனி உடல் நலன் பராமரிப்பாளராக நான் பணியாற்றியபோதெல்லாம் பிள்ளைகளை வளர்ப்பதிலேயே தமது முழு நேரத்தையும் பெண்கள் செலுத்திக் கொண்டிருப்பது என்னை அவ்வளவாகக் கவரவில்லை. இதற்கு மேலாக வாழ்க்கையில் அர்த்தங்கள் உள்ளன எனக் கருதினேன். நான் இருபத்தி இரண்டு அல்லது இருபத்தி மூன்று வயதில் மணம் புரிந்திருந்தால் நிலைமை வேறாக இருந்திருக்கலாம். ஆனால் நான் திருமணம் செய்தபோது எனது வாழ்வு நகரத் தொடங்கிவிட்டது. இருபத்தியேழு வயதில் பல்கலைக் கழகத்தில் சேர்ந்தேன். இந்தக் காலத்தில் குழந்தைகளைப் பற்றி சிந்திக்கவேயில்லை. அதன் பின் அரசியலுக்குள் புகுந்ததும் அது முற்றிலும் வேறு உலகமாக இருந்தது. பச்சையாகக் கூறுவதானால் நான் எனது கணவருடன் மகிழ்ச்சியாகவே இருந்தேன். என்னைப் பற்றிய தெளிவான உணர்வே எனக்கு இருந்தது; சுதந்திரமான உணர்வே எனக்குள் மேலோங்கி நின்றது. உலகம் முழுவதும் என் முன்னே விரிந்து கிடக்க, ஒன்றிரண்டு குழந்தைகளோடு என்னையே நான்





கட்டிப்போடுவதை நினைத்துப் பார்க்க முடியவில்லை. இந்தக் கால கட்டத்தில் எனது சிந்தனை பல இலட்சம் மைலுக்கு அப்பால் சென்றிருந்தது. தனிப்பட்ட குடும்ப வாழ்க்கைக்கு அப்பால் ஒரு இலட்சிய வாழ்க்கைக்காக மனம் ஏங்கியது. ஒடுக்கப்பட்ட மக்கள் மட்டிலும் வறியவர்கள் மட்டிலும் எனது கரிசனை திரும்பியிருந்தது; அவர்களுக்குத் தொண்டு செய்யவே உண்மையில் விரும்பினேன். தேசிய விடுதலைப் போராட்டங்களில் ஈடுபட்ட பெண்கள் பற்றி ஆழமாகவும் சுதந்திரப் போராட்டங்களில் ஈடுபட்ட பெண்கள் பற்றிப் பொதுவாக நிறையப் படித்திருந்தேன். கணிசமான அளவு அரசியல் மயப்படுத்தப்பட்டும் இருந்தேன். என்னைக் காட்டிலும் தாழ்நிலையில் உள்ள மக்களுக்கு அதாவது ஒடுக்கப்பட்டவர்களுக்கு, வறியவர்களுக்கு, உதவி தேவைப்பட்டவர்களுக்குப் பணி புரிவதே சிறந்தது என்று உணர்ந்தேன்.

எனது கருத்துகளைப் பகிர்ந்து கொள்ளும் ஒரு மனிதரைச் சந்தித்தது நான் பெற்ற பேறே. எமது அபிலாஷைகளை அடையக் கூடிய ஒரு சூழலிலேயே இருவரும் இருந்தோம். குடும்ப விருத்தி பற்றி அவரும் அலட்டிக் கொள்ளவில்லை. ஆனால் பிள்ளைகள் பெறுவது பற்றிய இறுதி முடிவு எனதாகவே இருந்தது. அதற்காக நான் என்றுமே வருந்தியதில்லை. ஒரு சுதந்திரமான பெண்ணாக நான் இருக்க வேண்டும் என்பதில் வாழ்வில் எப்போதும் குறியாக இருந்திருக்கிறேன். வளர வளர, வயது முதிர நான் விடுதலை பெற்றுவருவதாகவே உணர்கிறேன். சுதந்திரத்தை நோக்கிய பாதையில், பற்று அறுக்க வேண்டிய பாச பந்தங்களில் இருந்து விடுபட வேண்டிய தேவை இருக்கிறது. எனக்கு அந்தப் பாசப் பற்றறுப்பு எளிதாகக் கிடைத்திருக்கிறது என்றே கூறுவேன். இதற்காக எனது இந்தக் கருத்துகளையோ எனது வாழ்க்கை முறையையோ மற்றவர்களுக்குப் பரிந்துரைப்பேன் என்பது அர்த்தமல்ல; இதை எவர் மீதும் சுமத்தவும் மாட்டேன். என்னைப் பொறுத்த வரையிலே பிள்ளை பெறுவதைத் தெரிவு செய்வதும் கட்டுப்படுத்துவதும் முற்றுமுழுதாக ஒரு பெண்ணின் அடிப்படை உரிமையாகும். தமது வாழ்வு எப்படி அமைய வேண்டும் என்று தீர்மானம் எடுப்பதும் பெண்ணிடமே விடப்பட வேண்டும். அதே சமயம் தாய்மையைத் தெரிவு செய்யும் ஒரு பெண்ணை என்றுமே குறைவாக மதிப்பிட மாட்டேன். அப்படிச் செய்தால் 99 விகிதமான பெண்களுடன் நான் கருத்து மோதல் கொள்ள வேண்டியிருக்கும். அதை நான் விரும்பவில்லை. இனி எனது தனிப்பட்ட கருத்துப்பற்றிய தப்பபிப்பிராயத்தையும் அது தோற்றுவிக்கும். பிள்ளை இல்லாமல் இருப்பதே பெண்களுக்கு நல்லது என்று நான் கூறவில்லை.

அப்படிக் கூறினால் மக்களின் வாழ்வில் இனி சமுதாயத்துக்கும் குழந்தைகள் தரும் மகிழ்ச்சி, பாசம் எல்லாவற்றையும் புறக்கணிப்பதாகவும் இழப்பதாகவும் அமைந்துவிடும். படைப்பு மட்டில் நான் கொண்டிருக்கும் அளவற்ற மரியாதையையும் அது தகர்த்து விடும். பிள்ளைகளைப் பெறுவதென்பது மானிடம் தழைப்பதற்கு அடிப்படையானது; சமூக வாழ்வுக்கும் தேவையானது. ஆகவே பெண்கள் பிள்ளைகளைப் பெற்றுத்தான் ஆகவேண்டும். குடும்ப வாழ்க்கையை அவர்கள் விரும்பினால் அது அவர்களுடைய உரிமை. ஆனால் என்னைப் பொறுத்த வரையில் நான் அதைத் தேர்ந்தெடுக்கவில்லை. பிள்ளை பெறும் அவர்களுடைய விருப்பத்திற்கு நான் மதிப்பளிப்பதுபோல, மற்றவர்கள் என்னோடு மூர்க்கமாக கருத்து வேறுபட்டாலும், எனது தெரிவை மதிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கின்றேன்.

## காத்திருந்த காலம்

தமிழரின் விடுதலைப் போராட்டத்தில் நாம் ஈடுபட்டிருந்தோம். அது தவிர, விடுதலைப் புலிகளின் தலைவர்களையும் சந்திக்க இந்தியாவுக்கு பயணங்களையும் மேற்கொண்டோம். இதனால், இலண்டனில் உள்ள வெவ்வேறு தமிழ்க் குழுக்களுடன் எமக்குத் தொடர்பு ஏற்பட்டது. அநேகமாக அனைத்து இளம் தலைமுறையினரும் தமிழீழத் தனியரசு என்ற இலட்சியத்தையே ஆதரிக்கிறார்கள் என்பது எமக்குத் தெரியும். இவற்றில் ஈழமக்கள் புரட்சிகர விடுதலை முன்னணி (EPRLF), தமிழீழ மக்கள் விடுதலைக் கழகம் (PLOTE), தமிழீழ விடுதலை இயக்கம் (TELO), ஆகியவற்றின் இலண்டன் பிரதிநிதிகள் அங்கேயே இருந்தார்கள். ஈழப் புரட்சி இயக்கம் (EROS) இலண்டனில் இயங்கி வந்ததும் எமக்குத் தெரியும். இப்போது போலவே அன்றும் அவர்களிடையே வேறுபட்ட கோட்பாடுகள். இனி, ஆயுதப் போராட்டத்தை எவ்வாறு நடத்துவது என்பதில் வேறுபட்ட சிந்தனைகள். ஏதோ ஒரு காரணத்துக்காக விடுதலைப் புலிகளை அவர்கள் கண்டித்துக் கொண்டிருந்தார்கள். அரசியலைப் புறக்கணித்த ஆயுதப் போராட்டம் ஒன்றிலேயே புலிகள் முழுமையான அர்ப்பணிப்போடு இருக்கிறார்கள் என்பது தான் அவர்கள் முன்வைத்த முக்கிய கண்டனம். ஆனால், இப்பொழுது காலம் ஒன்றை நிரூபித்திருக்கிறது. இப்படிப் பேசிக் கொண்டிருந்தவர்கள் எல்லோருமே வெறும் வாய் வீச்சாளர்களாகவே இருந்தார்கள். தேசிய விடுதலைக்கான வலுவான தேசிய இயக்கத்தை





இவர்களால் கட்டியெழுப்ப முடியவில்லை. சிங்கள அரசுடன் கூட்டுச் சேர்வதில் பயனில்லை என்பதை அண்மையிலேயே சில போராளி அமைப்புகள் உணர்ந்திருப்பதோடு விடுதலைப் புலிகளின் இலட்சியம் மட்டில் கூடுதலான அனுதாபத்துடன் இருக்கிறார்கள்.

இந்த நாற்காலிப் புரட்சியாளர் மட்டில் எனக்குத் தனிப்பட்ட வெறுப்பு எதுவும் கிடையாது. ஆனால், தார்மீக ரீதியாகவும் உணர்வு ரீதியாகவும் ஏதோ ஒரு மட்டத்தில் சீரழிந்து போய் லண்டனில் உழன்று கொண்டிருக்கும் இந்த வெற்றுப் பாண்டங்களோடு ஏன்தான் வீணாகப் பேசி, நேரத்தை வீணடிக்க வேண்டுமென்றே எனக்குப் பட்டது. அளவுக்கு மீறிய அகம்பாவம் உடைய கபட புரட்சியாளர்கள் மட்டும் விடுதலைப் போராட்டத்தில் பங்குகொள்ள எத்தனிக்கவில்லை. அர்ப்பணிப்போடும் இலட்சிய உறுதியோடும் செயற்பட்ட பல கண்ணியமான இளைஞர்களையும் யுவதிகளையும் கவர்ந்து இழுக்கும் ஆற்றல் விடுதலைப் புலிகளிடம் இருப்பதை எனது அனுபவ அடிப்படையில் கண்டிருந்தேன். சென்னையிலும் சரி, இலண்டனிலும் சரி, தமிழீழத்திலும் சரி இதை நான் நேரிலே பார்த்திருக்கிறேன்.

இலண்டனில் இளைஞர்கள் இரண்டு பேரைக் குறிப்பிடலாம். இவர்கள் எமது வீட்டுக்கு கிரமமாக வந்தார்கள். பின்னர் இலங்கைக்குத் திரும்பிய இவர்கள் விடுதலைப் புலிகளின் வரலாற்றில் மிக முக்கியமான புகழ் பெற்ற பாத்திரங்களாக மாறினார்கள். ஒருவர் ரத்னா; பின்னர் முரளி என்று அழைக்கப்பட்டார். வளமான வாழ்வு தேடி வெளிநாடு வந்த இவர், பாதுகாப்பான வெளிநாட்டுச் சூழலில் பணம் சம்பாதித்து, ஊரிலே உள்ள தமது குடும்பத்தின் வறுமையைப் போக்க எண்ணியிருந்தார். ஆனால் ஊர் திரும்ப வேண்டும் என்பதே அவருடைய தாகமாக இருந்தது. இலண்டனில் மன ஈடுபாட்டோடு காலூன்ற அவரால் முடியவில்லை. எனவேதான் அவர் ஊர் திரும்பினார். 1983 இலே தமிழ் மக்களுக்கு எதிரான கலவரம் சிறீலங்காவில் இடம்பெற்ற சில மாதங்களில் எம்மைத் தொடர்ந்து ரத்னா சென்னைக்கு வந்தார். அங்கேயே 1983 ஆகஸ்டில் இருந்து எம்முடன் தங்கினார். யாழ்ப்பாணம் திரும்பியவர் அங்கு விடுதலைப் புலிகள் மாணவர் பேரணியை முதலில் நிறுவியவராவார். பலரது நட்பையும் பரந்துபட்ட மக்களின் அன்பையும் வென்றெடுத்தவர்களில் இவரும் ஒருவர். யாழ்ப்பாணத்தில் மாணவர்களை போராட்டத்தின் பால் கவர்ந்து இழுப்பதிலும் அவர் வெற்றி பெற்றார். இந்திய இராணுவத்திற்கு எதிரான விடுதலைப் புலிகளின் போரில் முதலில் உயிரிழந்தவர்களில் ரத்னாவும் ஒருவர். யாழ்ப்பாண நகரை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்த இந்திய ராணுவத்தை

கோப்பாயிலே தடுத்து நிறுத்த முற்பட்ட விடுதலைப் புலிகளின் பாதுகாப்பு முன்னணி வரிசையில் நின்று போராடிய அவர் வீரச்சாவைத் தழுவிக் கொண்டார்.

போராட்டத்தில் பங்கெடுப்பதற்காக இலண்டனில் இருந்து யாழ்ப்பாணம் திரும்பிய இன்னொரு போராளி பகீன் ஆவார். இலங்கையில் தமிழ் மக்களுக்கு எதிரான கலவரம் வெடித்து மிகப் பெரிய வன்முறையாகக் கிளர்ந்த வேளையில் நாம் சென்னைக்கு பயணமானபோது பகீனும் எம்முடன் கூடவந்தார். இனக் கலவரம் பகீனை நிலைகுலையச் செய்திருந்தது. எமது இலண்டன் மாடி வீட்டில், ரத்னாவுக்கு அருகே தரையில் அமர்ந்து அவர் கதறி அழுதது, இப்பொழுதும் என் கண் முன் நிழலாடுகிறது. அடுத்த சில நாட்களில் நாம் சென்னைக்கு திரும்ப எண்ணியபோது, தம்மையும் கூட்டிச் செல்லுமாறு அவர் எம்மிடம் கெஞ்சினார். முடியாது என்ற சொல்லை அவர் ஏற்பதற்குத் தயாராக இல்லை. அவரைத் தேற்றவும் முடியவில்லை; தொடர்ந்து கெஞ்சிக் கொண்டே இருந்தார். இறுதியில் நாமும் இணங்க வேண்டியிருந்தது. ஆனாலும் அவரைக் கூட்டிச் செல்வதில் எமக்கு ஒரு சிக்கல் இருந்தது. இங்கிலாந்தில் தரித்திருக்க அனுமதிக்கப்பட்ட நாட்களை விட, கூடுதலான நாட்கள் தரித்திருந்து விட்டார். அது தவிர அவரது கடவுச் சீட்டும் காலாவதியாகியிருந்தது. இதிலிருந்து தப்புவதற்காக இவருடைய நண்பர்கள் இவருடைய கடவுச் சீட்டில் முடிவடையும் திகதியை மாற்றி எழுதியிருந்தார்கள். ஆனால் அவர்கள் கவனமெடுத்து மாற்றம் செய்யவில்லை என்பது கடவுச் சீட்டைப் பார்த்தவுடன் புரிந்தது. பயணத் தொடக்கத்தில் ஹீத்ரோ விமான நிலைய குடிவரவுக் கடவையைக் கடந்து பாலாவும் நானும் முதலில் சென்று, பகீனுக்காக உள்ளே காத்திருந்தோம். முகத்திலே கனிவு இல்லாத குடிவரவு அதிகாரி ஒருவரிடம் பகீன் தனது கடவுச் சீட்டைக் கையளிப்பதைப் பதற்றத்தோடு உள்ளேயிருந்து நாம் நோட்டம் விட்டோம். அவர் அதைப் பக்கம் பக்கமாகத் துருவித் துருவிப் பார்த்தார்; அடிக்கடி பகீனின் முகத்தையும் பார்த்தார். தமது பயணம் தடைபடக் கூடாது என்பதற்காக, பகீன் தமது முகத்திலே சலனம் எதுவுமே இல்லாமல் அப்பாவி போல நின்றார். கூர்மையான கண்ணுடைய எந்தக் குடிவரவு அதிகாரிக்கும் கடவுச் சீட்டில் புரியப்பட்டிருக்கும் மாற்றம் தெரிந்திருக்கும். ஆனால் நாட்டை விட்டு வெளியேற விடாமல் பகீனைப் பிடித்து உள்ளே அடைத்து வைப்பது தமது நாட்டுக்கு கூடுதலான செலவாகும் என்று எண்ணினாரோ என்னவோ அவர் பகீனைப் போக அனுமதித்தார். நிம்மதியாக மூச்சுவிட்டோம். மகிழ்ச்சியாக ஆனால்





சிறிது அசட்டுத்தனத்தோடு பகீனும் சென்னைக்கு விமானம் ஏறினார். சென்னையை அடைந்த மறுகணமே உடற்பயிற்சிகளில் ஈடுபட்டு உடல் நலத்தைப் பேணியதோடு தம்மை யாழ்ப்பாணம் அனுப்புமாறு ஒவ்வொருவரையும் நச்சரிக்கத் தொடங்கினார். இறுதியில் தமது கிராமமான வல்வெட்டித்துறையைச் சென்றடைந்தார். ஆனால், விரைவிலேயே உலகை விட்டே அவர் செல்ல நேர்ந்தது. வல்வெட்டித்துறையில் இடம் பெற்ற சுற்றிவளைப்பிலே கைதான இளைஞர்களில் பகீனும் ஒருவர். தப்பி ஓட முடியாத நிலை ஏற்பட்டதும் பகீன் தமது சயனைட் குப்பியைக் கடித்தார். விடுதலைப் புலிப் போராளிகளிடையே தற்கொலை செய்து வீரச்சாவைத் தழுவிய முதல் வீரர் பகீனேதான்.

1983 இற்கு முன், நாம் காத்திருந்த காலத்தில் நிறையப் படிக்கக் கிடைத்தது. புத்தகக் கடைகளில் நூல்களைத் தேடி வாங்குவதில் நேரத்தைப் போக்காட்டுவது எமது ஆகப் பெரிய மகிழ்ச்சியான பொழுதுபோக்குகளில் ஒன்றாக இருந்தது. என்னை அறியாமலேயே பெண்கள் எழுதிய நூல்களைத் தேர்ந்தெடுத்தேன். அல்லது பெண் எழுத்தாளர்களின் நூல்களையே தேடிக் கொண்டிருந்தேன். பெண் எழுத்தாளரான டொறிஸ் லெசிங் அவர்களின் படைப்புகள் என்னைக் கவர்ந்தன; அவரது ஆளுமையும் என்னைக் கவர்ந்தது. தவறுகளை இனம் காண்பதில் அவருக்கு இருந்த ஆற்றலும், தமது வாழ்க்கையை மாற்றுவதற்கு வேண்டிய முடிவுகளை எடுக்கும்போது உணர்ச்சி பூர்வமாகத் தாம் எவ்வளவு பாதிக்கப்படுவார் என்றோ மற்றவர்கள் எத்தகைய வேதனை அடைவார்கள் என்றோ மனத்தளம்பல் இல்லாமல் அவர் முடிவுகளுக்கு வரும் உறுதி எனக்குப் பிடித்திருந்தது. இன்னொருவர் எலிசபெத் குரோல். சீனப் பெண்களைப் பற்றி இவர் நிறைய எழுதியிருக்கிறார். குறிப்பாக “சீனாவில் பெண்ணியமும் சோஷலிசமும்” என்ற அவருடைய நூல் என்னைக் கவர்ந்தது. சீனாவில் பெண்கள் இயக்கம் பற்றிய சுவையான விபரம் அதில் உள்ளது. பெண்ணியப் போராட்டத்துக்கும் சமுதாயப் போராட்டத்துக்கும் இடையிலான நலன்களின் முரண்பாடுகள் பற்றி அவர் அதில் விபரிக்கிறார். அதே போல சோஷலிச சமுதாயத்தில் பெண்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் பற்றியும் அவர் கூறுகிறார். அடுத்து அலனோ ஹெயற்லிங்கர் எழுதிய “பெண்களும் அரச சோஷலிசமும்; சோவியத் யூனியனிலும் செக்கோஸ்லாவாக்கியாவிலும் சமத்துவம் இன்மை” என்ற எழுத்தாக்கத்தின் தலைப்பே கருவை உணர்த்துவது. அதில் நிறைய விபரங்கள் உண்டு. சிந்தனையைக் கிளறுவதாகவும் அது

அமைந்திருக்கிறது. சூசன் பிறவுண் மில்லர் என்பவர் பாலியல் வன்முறைக்கு எதிராக "எமது விருப்பத்திற்கு மாறாக" என்ற மிகச் சிறந்த நூலை எழுதியிருக்கிறார். ஆன் ஒக்லியின் பெண்கள் தொடர்பான சமூக ஆய்வுகளும் எப்போதுமே கருத்துப் பொதிந்தவை. "சாண்டினோவின் புதல்விகள்", "மூன்றாம் உலகு இரண்டாம் பால்" ஆகியவையும் இன்னும் பல நூல்களும் போராட்டத்தில் ஈடுபட்ட பெண்களின் வெற்றிகளையும் அவர்கள் முகம் கொடுத்த இடர்களையும் விளக்குவன; அவற்றோடு எம்மையும் இணைத்துக் கொள்ளத் தூண்டுவன; உற்சாகம் தருவன. இவை எல்லாம் எப்போதோ நடந்தது போன்ற பிரமையைத் தருவன. இவை எல்லாம் நேற்றைய நூல்கள். ஆனாலும் அவை போராட்டத்தில் ஒரு வேறுபட்ட மெய்யுண்மையை விளக்குகின்றன.

ஒரு ஆய்வு முயற்சிக்கான அறிவைத் தரவல்ல ஒரு நீண்ட பட்டியல் நூல்களை வாசித்திருந்தேன். எழுதத் தொடங்கலாமா என்ற சிந்தனை கூட வந்து போயிற்று. இளவயதில் இருந்ததை விட இப்போது தன்னம்பிக்கை அதிகரித்து இருந்தது. போராட்டத்தில் ஈடுபடவிருக்கும் தமிழ்ப் பெண்களுக்கு உதவியாக, வேறு உலக விடுதலைப் போராட்டங்களில் ஈடுபட்ட பெண்களின் அனுபவங்களை சிறிய நூல் வடிவில் கொண்டுவர முற்பட்டேன். உலகம் பூராவும் பெண்கள் எதிர்நோக்கும் பிரச்சனைகளில் எவ்வளவோ பொதுத் தன்மைகள் இருக்கின்றன. ஆகவே போராட்டங்களில் ஈடுபடும் ஏனைய பெண்களின் அனுபவங்களைத் தமிழ்ப் பெண்களுக்கு பகிர்ந்து கொள்ள என்றும், அவர்களுடன் இதய பூர்வமாக ஒன்றித்து நிற்க வேண்டும் என்றும் விரும்பினேன். நான் எனது நூலை எழுதத் தொடங்குமுன்னரே தமிழ் மக்களுக்கு எதிரான இனக்கலவரம் தோன்றியதால், 1983 ஓகஸ்டில் நாம் சென்னைக்குத் திரும்பினோம். எனது ஆய்வுத் தரவுகள் அனைத்தையும் இலண்டனில் விட்டுவிட்டு ஒரு சில குறிப்புகளுடனேயே புறப்பட்டேன். இறுதியில் இவையே "பெண்களும் புரட்சியும்" என்ற சிறுநூலாக வடிவெடுத்தது.

## திருப்புமுனை: கறுப்பு யூலை

தமிழ் மக்களுக்கு எதிரான இனக்கலவரம் என்ற வடிவில், 1983 யூலையில் இலங்கையிலே வெடித்த வன்செயல் சம்பவங்கள், தமிழ் மக்களின் அரசியல் போராட்டத்தில் தலைகீழான மாற்றத்தைக் கொண்டு வந்தது. தமிழ் மக்களுக்கு எதிரான கலவரங்கள் 1958 ல் இருந்தே காலத்துக்குக் காலம் தலைதூக்கியபோதும், 1983 ல் இடம்பெற்ற இனப்





பூகம்பமே இலங்கை வரலாற்றில் மிகக் கறை படிந்ததாகும். குரூரமும், காடைத்தனமும், காட்டுமிராண்டித்தனமும் ஒன்றையொன்று விஞ்சி நின்றன. தமிழ் மக்களுக்கு எதிரான கலவரம் நாடு முழுவதையும் உலுக்கியது. சிங்கள மக்களிடம் உறைந்து கிடந்த வரலாற்றுக் குரோதமானது வன்செயல் எரிமலையாய் வெடித்துச் சிதறி, முன்னெப்போதும் காணாத அளவுக்கு மரணத்தையும் அழிவையும் ஏற்படுத்தியது. இரத்த வெறி கொண்டு அட்டகாசம் புரிந்த சிங்களக் காடையர்களால் அனாதரவான பல்லாயிரம் தமிழ் மக்கள் கண்ட துண்டமாக வெட்டிச் சரிக்கப்பட்டார்கள். சிங்களவரின் மனிதத்துவம் மறைந்த நிலையும் இனக் கலவரத்தில் காணப்பட்ட இனக் கருவறுப்பு நோக்கமும், இனக் காழ்ப்புடனான வன்செயல் பிரீடலும் நாகரீக உலகின் மனச் சாட்சியை ஒரு கணம் உலுக்கியது. இந்த இனவெறி தெற்காசியாவின் நோயாளியாக, சிங்கள இனம் மீது கறை பூசியது.

வடபுல நகரமான யாழ்ப்பாணத்தில் நடந்த ஒரு கெரில்லாத் தாக்குதலுக்குச் சிங்கள மக்களின் பதிலடியாகவே இந்த இனக் கலவரம் பொங்கி வழிந்ததாகக் கூறப்பட்டது. விடுதலைப் புலிகளின் கெரில்லா அதிரடிப் பிரிவு ஒன்று, பிரபாகரன் அவர்களின் நேரடித் தலைமையில் யாழ்ப்பாணம் திருநெல்வேலியிலே, இராணுவ வண்டித் தொடர்மீது பதுங்கித் தாக்குதல் ஒன்றை நடத்தியது. இது 1983 யூலையில் நடந்தது. பதின்மூன்று இராணுவத்தினர் அதே இடத்தில் கொல்லப்பட்டார்கள். விடுதலைப் புலிகளைப் பொறுத்த வரையில் இது ஒரு வெற்றிகரமான அதிரடித் தாக்குதலாகும். ஆனால் சிங்கள அரசைப் பொறுத்த வரையிலே இது மானத்தை வாங்கும் படுதோல்வியாகும். சிறீலங்கா இராணுவத்தில் இத்தனை படையினர் கொல்லப்பட்டது இதுவே முதற்தடவை. ஜெயவர்த்தனா அரசு குமுறியது. சிங்கள ஊடகங்களும் இந்தச் சம்பவத்தை பூதாகாரப்படுத்தின; உணர்ச்சியைக் கிளறும் அறிக்கைகளால் தீ மூட்டின. சிங்கள மக்களிடையே இன வெறி கனன்றது. கொல்லப்பட்ட அரச படையினர்க்கு, சம்பவம் நடந்த மறுநாள் தேசிய கௌரவத்துடன் இறுதிச் சடங்கு நடத்தப் போவதாக அரசு அறிவித்தது. தேசிய துக்க தினமாக அந்த நாள் வடிவமைக்கப்பட்டது. ஆனால் சிங்கள அரசியல் வாதிகள், பௌத்த தேரர்கள், காவற்துறையினர், அரச படையினர் ஆகியோரிடையே வேறொரு இரகசியத் திட்டம் இருந்தது. இறந்து போன அரச படையினர்க்காக பழிக்குப் பழி வாங்கும் நாளாகவே அந்த நாளை அவர்கள் இலக்குக் குறித்தார்கள்.

"வீழ்ந்து பட்ட வீரர்க்கான" அரச இறுதிச் சடங்கானது தமிழ் மக்களுக்கு எதிரான அரச பயங்கரக் கலவரமாக வடிவெடுத்தது. இக்

கலவரத்துக்கு அரசின் ஆசீர்வாதமும் இருந்தது. அரசியல்வாதிகளும் பௌத்த தேரர்களும் வழிநடத்த, காவற்துறையினரும், ஆயுதப் படையினரும் உதவியாக முண்டுகொடுக்க தறிகெட்ட சிங்களக் காடையர், தமிழ் மக்களின் வீடுகள், கடைகள், கட்டடங்கள், வர்த்தக நிலையங்கள் ஆகியவற்றினுள் அடாத்தாகப் புகுந்து சொத்துக்களை சூறையாடினர். அத்தோடு பாதுகாப்பற்ற நிலையிலிருந்த தமிழ் மக்களை ஈவிரக்கமின்றி படுகொலை செய்தனர். தறிகெட்ட காடையர்களை வழிநடத்தியவர்கள், தமிழ் மக்களின் வதிவிடங்கள் எவை, சொத்துக்கள் எவை என்ற அச்சொட்டான விபரம் வைத்திருந்தார்கள். தமிழ் மக்களின் வீடுகளை அடையாளம் காட்ட, பெரும்பாலானவர்களிடம் வாக்காளர் பட்டியல்கள் இருந்தன. கொழும்பிலும், தெற்கிலும் சிங்கள மக்கள் மத்தியில் வாழ்ந்தவர்களே இந்தத் தமிழ் மக்கள். ஆகவே, அடையாளம் காணப்படுவதிலிருந்து அவர்களால் தப்ப முடியவில்லை. வாய்விட்டுக் கூறமுடியாத கோரங்கள் நிகழ்ந்தன. தவறு இழைக்காத தமிழ் மக்கள் அடித்து நொருக்கப்பட்டார்கள்; வெட்டிச் சரிக்கப்பட்டார்கள்; நூற்றுக்கணக்கானோர் உயிருடன் எரிமூட்டப்பட்டார்கள். தாக்கப்படும் தமிழ் மக்கள் வேதனையில் ஓலமிட, தாக்கும் சிங்களக் காடையர்கள் எக்காளமிட்டுக் கொக்கரித்தார்கள். கொழும்புச் சம்பவம் ஒன்றிலே வாயடைத்து மலைத்து நின்ற வெளிநாட்டு உல்லாசப் பயணிகளின் கண்முன்னே, தமிழ் மக்கள் பயணம் புரிந்து கொண்டிருந்த வாகனத்தில் அவர்கள் உயிரோடு தீயிடப்பட, சிங்களக் காடையர் உன்மத்த உருவேறி நடனம் ஆடிக் கொண்டிருந்தார்கள். அரச படையினர் கொல்லப்பட்டமைக்குப் பழிவாங்கும் முகமாக காடையர் கும்பல்களுக்கு வசதியளித்த அரசு, நாற்பத்தியெட்டு மணிநேரத்திற்கு வேண்டுமென்றே மௌனம் சாதித்தது. இந்தப் பேரழிவுக்கு வித்திட்ட அந்தப் பிரபல அரசியல்வாதிகள், பெருந்தொகைத் தமிழ் மக்கள் கொல்லப்படுவதை மட்டுமல்லாது தமிழ் மக்களின் சொத்துக்கள் பரவலாக அழிக்கப்படுவதையும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். கொழும்பிலே வேரோடியிருந்த உயர்நிலைத் தமிழ் வர்த்தகர்களின் பொருளாதாரத் தளம் முற்றாக அழித்தொழிக்கப்பட்டது. அரசுத் தலைவர் ஜெயவர்த்தனா இறுதியாக ஊரடங்கு பிரகடனம் செய்தபோது, தமிழ் மக்களின் உயிருக்கும், சொத்துக்கும் அளப்பரிய சேதம் ஏற்கனவே விளைக்கப்பட்டிருந்தது. வெலிக்கடைச் சிறையில் தடுப்புக் காவலில் வைக்கப்பட்டிருந்த அரசியல் கைதிகள் கூட மிருகத்தனமாகத் தாக்கப்பட்டார்கள். அவர்களில் முப்பத்தைந்து பேர் ஜூலை 25ம் திகதி பலியானார்கள். சிறைச்சாலை அதிகாரிகளின் ஒத்துழைப்போடு இந்த





மிருகத்தனமான கூட்டுக் கொலை நிகழ்த்தப்பட்டது.

தமிழ் மக்களின் ஆன்மா மீது 1983 கறுப்பு ஜூலை ஆழமான வடுவொன்றை ஏற்படுத்தியது. இரண்டு இனங்களும் இனி ஒன்றுகூடி வாழ்வது முடியவே முடியாது என்று தமிழ் மக்கள் உணர்ந்தார்கள். இந் நிகழ்வானது சுயநிர்ணய உரிமை, அரசியல் விடுதலை ஆகியவை தொடர்பான தமிழ் மக்களின் போராட்டத்துக்கு புதிய உத்வேகம் அளித்தது. தமிழ் மக்களுக்கு எதிராக அரசியல் யாப்பில் ஆறாவது திருத்தம் கொண்டுவரப்பட்டது. இதன் விளைவாக மிதவாத தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியினர், பாராளுமன்ற அரசியலைக் கைவிட்டு தமிழ் நாட்டில் தஞ்சம் புகுந்தனர். யாப்புக்கு அமைந்த அரசியலுக்கான கதவுகள் தமிழர்க்கு அடைக்கப்பட்டன. சுயநிர்ணய உரிமைக்கான போராட்டமே அவர்களுக்குக் கிடைத்த ஒரு மாற்று வழியாகியது. 1983ல் இடம்பெற்ற அருவருப்பான நிகழ்வுகள், தமிழ் மக்களின் அரசியல் போராட்ட வரலாற்றில் ஒரு திருப்புமுனையாக அமைந்தன. அவை ஜனநாயக நாடாளுமன்ற அரசியல் முறையில் இருந்து புரட்சிகர ஆயுதப் போராட்டமாக முகிழ்த்தது. கொழும்பிலும் தென்னிலங்கையிலும் இடம்பெற்ற கலவரங்கள் தொடர்பான அதிர்ச்சியளிக்கும் செய்திகள் லண்டனை எட்டியபோது, தமிழ்ச் சமுதாயம் முழுவதுமே ஆத்திரமும் கலக்கமும் அடைந்தது. என்ன நடந்தது என்பதை அறிய ஒவ்வொருவரும் துடித்தனர். பதைபதைத்த மக்கள் இலங்கையில் தங்கள் உறவினருடன் தொடர்பு கொள்ளத் துடித்தனர். பெரும்பாலான மக்கள் வெகுண்டெழுந்து சீற்றம் அடைந்தனர். தங்கள் உரிமைகளுக்காக் குரல்கொடுத்துக் கொண்டிருந்த தமிழ் மக்களை மண்டியிட வைத்து அவர்களுக்குப் பாடம் புகட்டுவதையே நோக்கமாகக் கொண்டு முடுக்கிவிடப்பட்ட ஒரு பயங்கரமான இனக்கலவரம், எதிர்விளைவையே ஏற்படுத்தியது. இனவேரறுப்பு முயற்சியானது, தமிழ் மக்களின் சுயகௌரவத்தையும் இனப் பெருமையையும் தூண்டியது. சிங்கள அரசியல்வாதிகள், தமிழ் மக்களின் எந்த ஒற்றுமை உணர்வைச் சிதறடித்து நசுக்க முனைந்தார்களோ, அதே ஒற்றுமை உணர்வே, தமிழ் மக்களின் பொது எதிரிக்கு எதிரான ஒரு தேசிய ஒருமைப்பாட்டு எழுச்சியாக உருவெடுத்தது. திட்டமிட்ட இனப்படுகொலை, இரண்டு இனங்களிடையேயும் இணைய முடியாத ஆழமான பிளவை ஏற்படுத்தியது. மீட்கப்பட்ட தமிழ் மண்ணிலே தங்கள் அரசியல் சுதந்திரத்தை நிறுவ வேண்டும் என்ற தமிழ் மக்களின் போராட்ட உணர்வை விரிவடையச் செய்தது.

உணர்ச்சி பீறிட்டு எழுந்த அந்த இனக்கலவர நாட்களின்போது,

நண்பர்களும், கூட்டாளிகளும் எமது மாடிக்கு வருவதும் போவதுமாக இருந்தார்கள். ஐரோப்பாவில் உள்ள விடுதலைப் புலிச் செயற்பாட்டாளர்கள், அடுத்து என்ன செய்யலாம் என்று கூடி ஆராய லண்டனுக்கு விரைந்தார்கள். ஆயுதப் போராட்டத்துக்காக நிதி திரட்டும் பணி தீவிரப்படுத்தப்பட்டது. விடுதலைப் புலி ஆதரவாளர்களும் புதிதாக ஈழக் கொள்கையை ஏற்கத் தொடங்கியவர்களும் தாராளமாகக் கொடை புரிந்தார்கள். சில ஆண்டுகளாக மதில்மேல் ஊசலாடிய புலத்துத் தமிழர்கள் பலர், இப்போது ஏதோ ஒரு பக்கத்தை அறுதியாகத் தேர்ந்தெடுத்தார்கள். சிங்கள மக்கள் மத்தியில் தமிழ் மக்கள் பாதுகாப்பாக வாழமுடியாது என்று பலர் தீர்க்கமாக முடிவுக்கு வர, இனக் கலவரம் வடிகால் அமைத்தது. சென்னைக்கு உடன் திரும்புமாறு பிரபா-கரன் அவர்களிடமிருந்து எமக்குச் செய்தி வந்தது. லண்டனுக்கு நாம் இனிமேல் திரும்பி வரமாட்டோம் என்று கருதிக்கொண்டு அதற்கேற்ற ஏற்பாடுகளைச் செய்தோம். எமது தனிப்பட்ட பிரச்சினைகளைத் தீர்த்தோம். பெட்டியை அடுக்கினோம். சென்னைக்குப் புறப்பட்டோம். ஏறத்தாள பன்னிரெண்டு மணிப் பயணத்தின் பின் சென்னையை சென்றடைந்தோம். இலங்கைத் தமிழருக்கு ஆதரவு தெரிவித்து வீதியில் ஆர்ப்பரித்த இலட்சோபலட்சம் தமிழ் மக்களை அங்கே காணக்கூடியதாக இருந்தது. எமது கடந்த கால வாழ்க்கைக்கு முற்றிலும் புறம்பான ஒரு புதிய வாழ்க்கைப் பாதையில் நாம் காலடி வைத்தோம்.





# அத்தியாயம் III

# இந்தியாவில் சந்தித்த நெருக்கடிகள்

சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் எம்மை வரவேற்க பேபி சுப்பிரமணியம் வந்திருந்தார். இது நடந்தது 1983 ஓகஸ்ட் மாதம். கசங்கிய வெள்ளை வேட்டி; ஒரு பழுப்பு நிற சேட்; முகத்திலே கவலைக் கோடு. இதுதான் பேபி சுப்ரமணியத்தின் அன்றைய தோற்றம். இந்தத் தடவை அவருடைய கலைந்த கோலத்துக்குக் காரணம் அவருடைய வழமையான அசட்டையல்ல. நாம் சென்றடைவதற்கு முந்திய சில வாரங்களாக மும்முரமாக அரசியல் நடவடிக்கைகளில் அவர் ஈடுபட்டிருந்தார் என்பதும், சகிக்க முடியாத வேதனைகளை அவர் தாங்கிக் கொண்டிருந்தார் என்பதும் தெரிந்தது. சிறீலங்காவில் தமிழ் மக்களுக்கு எதிரான கலவரத்தை ஒட்டி, தமிழ்நாடே கொந்தளித்துக் கொண்டிருந்தது. அனைத்து அரசியல் தலைவர்களும் சிங்கள அரசுக்கு எதிராக எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களையும் பேரணிகளையும் நடத்திக் கொண்டிருந்தார்கள். சென்னை வீதிகளை ஆர்ப்பாட்டச் சனத்திரள்கள் திணறடித்தன. கட்டடங்களிலும் சிற்றுந்துகளிலும் கறுப்புக் கொடிகள் பறந்து கொண்டிருந்தன. திராவிட இயக்க ஆதரவாளர்கள் தமக்கே உரித்தான கறுப்புச் சட்டைகளில் பெருந்திரளாக நடமாடிக் கொண்டிருந்தார்கள்.

நாம் சென்னையை சென்று அடைந்த போது 'வூட்லண்ட்ஸ்' விடுதியிலே தங்க ஏற்பாடாகியிருந்தது. இதைப் பார்த்ததும், தமிழ் நாட்டில் விடுதலைப் புலிகள் பலமாக காலூன்றாது விட்டார்களோ என்று உடனே ஐயம் அடைந்தோம். எமது ஐயத்தை உறுதிப்படுத்துவதுபோல, ஓர் அரசியல் அலுவலகம் கூட நிறுவப்படவில்லை என்று அறிந்தோம். நேசன் போன்ற பழைய நண்பர்கள் எம்மைச் சந்திக்க வந்தபோது, எமது சந்தேகம் சரியே என்று உறுதிப்படுத்தப்பட்டது. தமிழ்நாடு முழுவதிலும் ஒரு சில விடுதலைப் புலிப் போராளிகளே ஆங்காங்கு தரித்திருந்து ஆரவாரம் இல்லாத அரசியற் பணிகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். உண்மையில் மிகக் குறைவான எமது போராளிகளே தமிழ்நாட்டில் தரித்திருந்தார்கள். பெரும்பாலான போராளிகளை, பிரபாகரன் அவர்கள் தம்மோடு யாழ்ப்பாணத்துக்குக் கூட்டிச் சென்றிருந்தார்.

இலங்கையில் தமிழ் மக்களுக்கு எதிரான கலகங்கள் காரணமாக, தமிழ் நாட்டிலும், புதுடில்லியிலும் உயர் மட்ட அரசியல் மற்றும் ராஜதந்திர நடவடிக்கைகள் களைகட்டியிருந்தது. ரெலோ, புளொட், ஈ.பி.ஆர்.எல்.எஃப், ஈரோஸ் போன்ற ஏனைய போராளி அமைப்புகள் திருமதி காந்தியின் பிரத்தியேக புலனாய்வுப் பிரிவான றோ என்ற அமைப்புடன் தொடர்புகளை ஏற்படுத்தியிருந்ததோடு, ராணுவப் பயிற்சித் திட்டத்திலும் ஈடுபட்டிருந்தன.

1983 இனக் கலவரத்தால் தமிழ் மக்கள் மீது கட்டவிழ்த்துவிடப்பட்ட வன்செயலின் பரிமாணம், இலங்கை முழுவதிலும் நிகழ்ந்த கோரச் சம்பவங்கள் தொடர்பாக அரசுத் தலைவர் ஜெயவர்த்தனா காட்டிய மமதை யான போக்கு, இதனால் தமிழ்நாட்டில் திரண்டெழுந்த உணர்ச்சிக் கொந்தழிப்பு-இந்நிகழ்வுகள், காத்திரமான நடவடிக்கைகளில் ஈடுபட இந்திய அரசுக்கு வாய்ப்பை வழங்கின. இனி, தறிகெட்ட தன் அண்டை நாட்டை ஒழுங்குகட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பது நியாயமே என்ற தார்மீக உணர்வையும் இந்தியாவுக்குக் கொடுத்தது. புதுடில்லி இருமுனை நடவடிக்கைகளைத் தேர்ந்தெடுத்தது. வன்செயல் நிறைந்ததும் இழுபட்டுச் செல்வதுமான இலங்கையின் இனப்பிரச்சனைக்குத் தீர்வுகாணும் விடயத்தில், ஒரு முனையில் ராஜதந்திர அணுகுமுறையையும் மறுமுனையில் ராணுவ நெருக்குவாரத்தையும் கடைப்பிடிக்க, புதுடில்லி தீர்மானித்தது. ராஜதந்திரமானது உயர் நிலையிலும், வெளிப்படையானதாகவும் இருக்க, ராணுவ ஈடுபாடு மூடுமந்திரமாக இருக்க வேண்டும் என்றும் வகுக்கப்பட்டது. பங்களாதேசில் செய்தது போல, நேரடி ராணுவப் படையெடுப்பில் ஈடுபட, திருமதி காந்தி விரும்பவில்லை. இலங்கை இறையாண்மை மீது கை வைப்பதாக மேற்குலகம் ஒரு பகைமைக் கண்கொண்டு பார்க்கக்கூடும் என்று அவர் அஞ்சினார். எனவே ராணுவ நெருக்குவாரம் தமிழ்ப் போராளி அமைப்புகள் மூலம் கொண்டுவரத் திட்டமிடப்பட்டது. போராளி அமைப்புகள் தங்கள் ஆயுதத் தாக்குதல்களைத் தீவிரப்படுத்த வேண்டியிருந்தன. ராணுவப் பயிற்சியையும் ஆயுதங்களையும் வழங்குவதன் மூலம் தமிழ்ப் போராட்ட இயக்கத்துக்கு உதவி புரிவது இந்தியாவின் திட்டமாகும். இந்தியாவின் இரகசியத் தலையீடு வெளியே தெரியாத வண்ணமும், எவ்வித சந்தேகத்தைத் தோற்றுவிக்காத வகையிலும் மிகவும் இரகசியமாகவே இத் திட்டத்தை செயற்படுத்த வேண்டியிருந்தது. இறுதியில், இந்தியா வின் செல்வாக்கு வீச்சுக்குள் சிறீலங்காவைக் கொண்டுவந்து, பேச்சுவார்த்தை மூலமான ஓர் அரசியல் தீர்வுக்கு சிங்கள ஆட்சியாளரை





நிர்ப்பந்திப்பதே இந்தியாவின் உள்ளார்ந்த திட்டமாக இருந்தது. இராணுவ உதவி வழங்கியதால் அனைத்துப் போராளிக் குழுக்களும் தனக்கு நன்றி விசுவாசக் கீழ்ப்படிவோடு இருக்கும் என இந்தியா எதிர்பார்த்தது. இதனால் இக் குழுக்களை தனது விருப்பிற்கு ஏற்ப செயற்படச் செய்து, இதன் மூலம் தனது தேசிய, புவியியல் நலன்களைப் பேணிப் பாதுகாத்து விடலாம் என்றும் கருதியது. இந்திய தலையீட்டுத் திட்டத்தின் ஓர் அச்சாணியான நம்பிக்கை இதுதான்.

இராணுவப் பயிற்சி வழங்குவது தொடர்பான இந்தியாவின் இரகசியத் திட்டம் அனைத்துப் போராளிக் குழுக்களுக்கும் அறிவிக்கப்பட்டது. இதனையடுத்து, தம் அணியிலே புதிய போராளிகளை வடக்கிலும் கிழக்கிலும் சேர்த்துக் கொள்ள இந்த அமைப்புகள் அனைத்தும் மும்முரமாக முயன்றன.

அதிகாரம் உடைய விடுதலைப் புலித் தலைவர் எவரும் தமிழ்நாட்டில் அந்தத் தருணத்தில் இல்லை. மாநில மட்டத்திலோ அரசிடமோ புலிகளின் கருத்தை உறுதியாகத் தெரிவிக்கவல்ல பிரதிநிதி எவரும் அங்கே இருக்கவில்லை. இதனால் விடுதலைப் புலிகளை ஓரங்கட்டிவிட்டு இந்தியப் பயிற்சித் திட்டங்களை ஏனைய அமைப்புகள் ஆக்கிரமிக்க நேர்ந்தது. விடுதலைப் புலிகளோடு எவரும் தொடர்பு கொள்ள, புலிகளுக்கான அரசியல் பணிமனை எதுவும் தமிழகத்தில் இருக்கவில்லை. எனவே இந்தக் குறைபாட்டை நிவர்த்தி செய்யும் பணியில் நாம் ஈடுபட்டோம். அந்தத் தருணத்தில் அங்கு ஓடியாடித் திருந்து கொண்டிருந்த பேபி சுப்ரமணி யம், நேசன் ஆகியோரின் உதவியோடும் விடுதலைப் புலிகளுக்காக லண்டனில் திரட்டப்படும் நிதியோடும், பாலாவும் நானும் நிலைமையை மாற்றிக் கொள்ள முனைந்தோம். வெளிநாடுகளில் புலம்பெயர்ந்து வாழும் மக்களில் எமக்குத் தெரிந்தவர்களோடு தொடர்பு கொண்டு, நிதி ஆதரவை அதி-கரிப்பதிலும் விடுதலைப் புலிகளைப் பலப்படுத்துவதிலும் கடுமையாக உழைத்தோம். "தமிழீழ விடுதலைப் புலிகளும் தமிழர் விடுதலைப் போராட்டமும்" என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் ஒரு நீண்ட கட்டுரையை பாலா எழுதத் தொடங்கினார். பக்கம் பக்கமாக அவர் எழுதியதை உடனே அச்சடித்து, எழுத்துக் கோர்ப்பதற்காக அச்சகத்துக்கு அனுப்புவோம் (நவீன அச்சகம் எதையும் அந்தத் தருணத்தில் அங்கு காணமுடியவில்லை. கையாலேயே ஒவ்வொரு சொல்லையும் கோர்க்க வேண்டியிருந்தது. கோர்த்ததை உடனே படித்து, எழுத்துப் பிழை திருத்தினோம். இரவு பகலாக உழைத்ததால், சில நாட்களிலேயே ஆவணம் தயாராகி விட்டது. உடனடியாகவே அது பரவலாக

விநியோகிக்கவும் பட்டது. விடுதலைப் புலிகளின் நோக்கத்தையும் அரசியல் சித்தாந்தத்தையும் அந்த ஆவணம் விளக்கியது.

நாம் புரிந்த மூன்றாவது முக்கிய காரியம், ஒரு புதிய வதிவிடம் தேடியதாகும். அங்கிருந்தே ஊடகவியலாளர், அரசியல்வாதிகள், புலனாய்வுப் பிரிவினர் ஆகியோருடன் தொடர்புகளை ஏற்படுத்தினோம்.

சென்னையில் சாந்தோம் எனும் இடத்திலுள்ள இரண்டு படுக்கையறை மாடிக்கு நாம் இடம் மாறியதும், தமிழ்நாடு புலனாய்வுப் பிரிவுச் சிறப்புக் கிளைக்கு தகவல் எட்டியது. தமிழ்நாட்டில் நாம் என்ன செய்கின்றோம் என்பதைக் கேட்டறிவதற்காக, ஜம்போ குமார் என்ற அதிகாரியை புலனாய்வுத் துறையினர் பாலாவிடம் அனுப்பி வைத்தனர்.

பாலாவுடன் நெருங்கிப் பழகியவர்களில் இன்னொருவர் உதவி இன்ஸ்பெக்டர் ஜெனரல் அலெக்ஸாந்தர். மாநில அரசில், சிறீலங்கா அலுவல்களுக்குப் பொறுப்பாக இருந்தவர். இறுதியில் அலெக்ஸாந்தரின் உதவியோடு பாலாவுக்கு றோவின் தொடர்பு ஏற்பட்டது. அமெரிக்க சீ.ஐ.ஏ புலனாய்வு அமைப்புக்குச் சமதையானதே இந்தியாவின் இந்த றோ அமைப்பாகும். விடுதலைப் புலிகள், ஏனைய அமைப்புகளைப் போல் அல்லாது, ஆயுதப் போராட்டத்தில் ஏற்கனவே தீவிரமாக ஈடுபட்டுக் கொண்டிருப்பதை றோ அதிகாரிகளுக்கு பாலா எடுத்துரைத்தார். புலிகளுக்கு இராணுவப் பயிற்சி வழங்கப்பட வேண்டும் என்று அவர்களை நம்ப வைத்தார்.

விடுதலைப் புலிகளுக்கு இராணுவப் பயிற்சி வழங்கலாம் என்பது தீர்மானமாகியதும், அந்தத் திட்டத்தைச் செயல் வடிவில் நடைமுறைப்படுத்துவதற்காக பிரபாகரன் அவர்கள் இந்தியா திரும்புவது அவசியம் என்றாகியது. அந்தத் தருணத்தில் பிரபாகரனும் வன்னியில் பயிற்சிப் பாசறை ஒன்றை நிறுவியிருந்தார். விடுதலைப் புலிப் போராளிகளுக்குப் படைப் பயிற்சி வழங்க றோ சம்மதித்திருக்கும் செய்தியைப் பிரபாகரனுக்கு அறிவித்த பாலா, இந்தியாவுக்கு வருமாறும் அவருக்கு வேண்டுகோள் விடுத்தார். இந்தியாவின் பயிற்சித் திட்டம் பற்றி விபரமாக பாலாவிடம் கேட்டறிய தமக்குக் கீழுள்ள இரண்டு மூத்த உறுப்பினர்களை பிரபாகரன் சென்னைக்கு அனுப்பி வைத்தார். அவர்களில் ஒருவர் ரகு; மற்றவர் மாத்தையா. அவர்களில் இருவரும் மதுரையில் உள்ள விடுதி ஒன்றிலே பாலாவையும் என்னையும் சந்தித்தார்கள். இந்தியாவின் பயிற்சித் திட்டம் பற்றி, பாலா அவர்களுக்கு விரிவாக விளக்கினார். ஆனாலும் பிரபாகரன் இந்தியாவுக்குத் திரும்புவது தொடர்பாக அவர்கள் மறுப்புத் தெரிவித்திருந்தார்கள். ஏனென்றால், பிரபாகரன் அப்போது இந்தியாவில் தேடப்பட்டு வந்தார்.





கைது செய்வதற்காக அவரைக் கவர்ந்திழுக்கும் ஒரு சூழ்ச்சித் திட்டமாகவே அவர்கள் இந்தப் பயிற்சித் திட்டத்தைப் பெரிதும் சந்தேகித்தார்கள். பாலா பிரபாகரனுக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில், அன்றுள்ள அரசியல் சூழ்நிலையில், விடுதலைப் புலிகளின் தலைவரைக் கைது செய்வது என்பதை நினைத்துக் கூடப் பார்க்க முடியாது என்று அடித்துக் கூறினார். அந்தக் கடிதத்தோடு ரகுவும், மாத்தையாவும் யாழ்ப்பாணம் திரும்பினார்கள். பாலாவின் அரசியல் கணிப்பீட்டில் பிரபாகரன் நம்பிக்கை வைத்தார். பிரபாகரனை இந்தியாவுக்கு தருவித்து, றோவுடன் அவருக்குத் தொடர்பு ஏற்படுத்த ஆயத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஆனாலும் இவற்றை எல்லாம் மூடுமந்திரமாக வைத்திருக்க வேண்டியிருந்தது. எல்லாமே ஒரு கண்ணாமூச்சி ஆட்டம்போல நடத்தப்பட வேண்டியிருந்தது. பிரபாகரன் அவர்கள் இந்தியா சென்றடைந்ததும், தமிழ்நாடு மாநிலத்துக்கு அருகமைந்த பாண்டிச்சேரியில், உயர்நிலை றோ அதிகாரிகளுடன் சந்திப்பு ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது. எனவே, ஒரு நள்ளிரவில் பாலாவும் நானும் மெய்காவலர் இரண்டு பேரும் கார்வண்டி ஒன்றில் ஏறி, பாண்டிச்சேரிக்கு நெடும்பயணம் சென்றோம். அங்கே விடுதலைப் புலித் தலைவருக்கும் றோ உயர் மட்ட அதிகாரிகளுக்கும் இடையே நடைபெறும் 'இரகசியக்' கூட்டத்தில் கலந்து கொள்ளவே சென்றோம். குறித்த நேரத்தில் அந்த முக்கிய சந்திப்பு நடந்தது. பிரபாகரன் அவர்களும் பாலாவும் றோ அதிகாரிகளும் கலந்து கொண்டார்கள். பாலாவும் தம்பியும் எமது அறைக்குத் திரும்பியபோது அவர்கள் முகங்களில் மிளிர்ந்த மலர்ச்சி, வெற்றிகரமாகக் கூட்டம் நடந்தேறியதை உணர்த்தியது. இந்தியா வழங்கும் இராணுவப் பயிற்சித் திட்டத்தில் விடுதலைப் புலிகள் பங்குபற்றுவது முடிவு செய்யப்பட்டது.

எமது சாந்தோம் வீடு, 1983 ன் பிற்பகுதியில் மிகவும் பிரபலமாகி விட்டது; இட நெரிசலாகியும் விட்டது. இந்தச் சிறிய இரண்டு அறை மாடியில் இருபது பேர் வரை நெருக்கியடித்துக் கொண்டிருந்தோம். இந்தச் சன சந்தடிக்குள் தீவிரமான பணி புரிவது கடினமாகியது. அது தவிர, பிரபாகரன் அவர்களுடைய தனிப்பட்ட பாதுகாப்புக்கும் அச்சுறுத்தலாக அமைந்தது. ஆகவே திரும்பவும் சென்னையில் ஒரு வீடு தேட பாலாவும் நானும் முற்பட்டோம்.

சென்னையில் புறநகரான திருவான்மியூரில் சிறிய வீடு ஒன்று கிடைத்தது. பிரபாகரன் அவர்களும், இனி பாலாவுக்கும் எனக்கும் பிரத்தியேகமான வதிவிடமாக அது இருக்க வேண்டும் என்பதே நோக்கமாக இருந்தது. ஆனால் தனிமையாகவும் நாம் இருக்க

முடியவில்லை; தனிமையில் நாம் விடப்படவுமில்லை. விரைவிலேயே பிரபாகரன் அவர்களுடைய மிக அந்தரங்க உயர்நிலைப் போராளிகள் ஒவ்வொருவராக வீட்டுக்கு வரத் தொடங்கினார்கள். அதன்பின் நாள் முழுவதும் போராளிகள் வருவதும் போவதும் இடையறாது நடைபெற்றது.

இப்படி வந்தவர்களிடையே எனக்குப் பிடித்தவர்களில் ஒருவர் ரஞ்சன்; ஒரு நல்ல கறுவல்; கட்டையர். வெடி தகர்ப்பு விபரங்களை அமைதி யாக உட்கார்ந்து எனக்குச் செய்து காட்டுவார். அப்பாவித் தனமான அவருடைய வெளித் தோற்றத்துக்கும் உண்மையான ஆளுக்கும் நிறைய வேறுபாடு. உண்மையில் அவர் ஒரு கிறுங்காத, துணிச்சலான குட்டிப் பயல். இன்னொரு போராளியின் பெயர் சந்தோசம். பெயருக்கு ஏற்ப சந்தோசம் எந்த நேரமும் சிரித்தபடியே இருப்பார். இந்த இரண்டு இளைஞர்களும் பின்னர் மரணம் அடைந்துவிட்டார்கள். வடமராட்சியில் நடந்த சிறீலங்கா இராணுவ சுற்றிவளைப்பின்போது உயரமான வேலி ஒன்றைத் தாண்டித் தப்பி ஓட முற்பட்டபோது, ரஞ்சன் சுடப்பட்டு மரணமானார். இந்திய இராணுவத்தோடு நடந்த 1987 ஆம் ஆண்டுச் சமர் ஒன்றிலே சந்தோசம் கொல்லப்பட்டார். இவர் யாழ்ப்பாணம் அரியாலையைச் சேர்ந்தவராயினும் தமது மரணத்துக்கு முன் பல ஆண்டுகளாக திருகோணமலையில், விடுதலைப் புலிப் போராளிகளுக்குப் பொறுப்பான தளபதியாக இருந்திருக்கிறார்.

நாம் தரித்திருந்த வீடு நீங்கலாக, வேறு பெரிய வீடொன்றை அடையாறில் வாடகைக்கு அமர்த்தி, அரசியல் பணிமனையை அங்கே நிறுவினோம். இங்கிருந்து, உள்ளூர் ஊடகங்களுடனும் அதிகமதிகம் தொடர்புகளை ஏற்படுத்தினோம். நிதித் துறைக்கு நேசன் பொறுப்பாக இருந்தார். வெளிநாடுகளில் உள்ளவர்களிடம் நிதி கோரி, நூற்றுக் கணக்கான கடிதங்களை இவர் அச்சிலே தயாரித்தார்.

அதே சமயம், இலங்கையில் இருந்து புறப்பட்டு, வடஇந்தியாவில் நடைபெறும் இராணுவப் பயிற்சிக்குச் செல்லும் போராளிகள், பிரபாகரன் அவர்களிடம் அறிவுறுத்தல் பெறுவதற்காக இங்கே வருவார்கள். இந்தப் போராளிகளைச் சந்திப்பதே ஒரு சுவையான அனுபவம். ஏனென்றால் இவர்களில் பெரும்பாலானவர்கள் இயக்கத்தின் மூத்த உறுப்பினர்கள். பிரபாகரன் அவர்களுடன் நெருங்கிப் பணிபுரிந்த பல மூத்த போராளிகளுடன் எமக்குப் பழகக் கிடைத்தது. பயிற்சிக்காக வந்த இவர்களில் ஒருவர் நாற்பத்தைந்து வயதைத் தாண்டியவர். பல ஆண்டுகளாக யாழ்ப்பாணத்திலே தலைமறைவாக வாழ்ந்த விடுதலைப் புலி உறுப்பினர். நிலக் கண்ணிவெடிகளில் நிபுணரான அப்பையா அண்ணாவே அவர்!





## ஆரம்ப காலம்: போராட்டத்தின் பரிமாணங்கள்

போராட்டத்தோடு நான் சங்கமித்த பல்லாண்டு கால அனுபவத்தில் மனித நடத்தையின் பல் வேறு பரிமாணங்கள் பற்றி நிறை யக் கற்றிருக்கிறேன். அதே போல போராளிகள் ஒருவரோடு ஒருவர் பூணும் நுண்மையான உறவுகள் தொடர்பாகவும் கற்றிருக்கிறேன். போராட்டமே ஒரு திறந்த பல்கலைக் கழகம் ஆகியது. அதில் மனித வாழ்வின் விழுது ஓடிய அம்சங்களை நான் கற்க முடிந்தது. உன்னத இலட்சியத்துக்காக போராடும் ஓர் இயக்கத்தையும் இனத்தையும் வெளியே இருந்து பார்ப்பவர்களுக்கு, மக்கள் போராட்டம் தொடர்பாகவும், ஒரு தேசிய விடுதலைப் போராட்டம் தொடர்பாகவும் ஒரு கற்பனைக் கருத்தே நிச்சயம் தோன்றும். ஆனால் விடுதலைப் போராட்டத்தின் முக்கிய நீரோட்டத்தில் நேரே கலந்து கொண்டிருக்கும் ஒருவருக்கு இது முற்றிலும் வேறுபட்ட ஒன்றாகும். தனித்துவமான அனுபவங்களையும் சவால்களையும் கொண்ட பட்டறிவாகவே அது அமையும்.

தேசிய விடுதலைப் போராட்டம் என்பது மிகவும் சிக்கலானது. பல முகம் கொண்டது. முதலில், போராட்டத்தை முன் நின்று வழிநடத்தும் புரட்சி இயக்கம் அமைகிறது; இரண்டாவதாக விடுதலைப் போராட்டத்தின் சமுதாயப் பரிமாணமும் மூன்றாவதாக, போராட்டத்திலே தனிப்பட்டவர்கள் எவ்வளவுக்குப் பங்குபற்றுகிறார்கள் என்பதும் அமையும். ஒரு தேசிய விடுதலை இயக்கம், அரசியல்-ராணுவத் தளத்தில் நின்றே தனது போராட்டத்தை நடத்தும். அரசியல் சுதந்திரத்துக்காக நடத்தப்படும் ஆயுதம் தரித்த புரட்சிப் போராட்டத்தில் ராணுவமும் அரசியல் அம்சங்களும் பிரிக்க முடியாதபடி இணைந்திருக்கும். விடுதலையின் அரசியல் இலட்சியத்தை அடையும் கருவியாகவே ராணுவப் போராட்டம் அமைகிறது. தேச சுதந்திரம் என்ற இறுதியான இலக்கை அடையும் நோக்கத்துடன் இராணுவ, அரசியல் வழிமுறைகளை வகுக்கும் பெரும் பொறுப்பை விடுதலை இயக்கமும் அதன் தலைமையும் ஏற்கின்றன. விடுதலைப் போராட்டம் என்பது, நிச்சயமாக மக்களின் ஒட்டுமொத்தமான பங்களிப்புடன் சம்பந்தப்பட்டது. சுட்டிப்பாகக் கூறுவதானால், ஓர் இன மக்களின் அரசியல் சுதந்திரத்துக்காகவே போராட்டம் நடத்தப்படுகிறது. இப் போராட்டமானது அரச ஒடுக்குமுறைக்கு எதிரான ஆயுத எதிர்ப்பு இயக்கமாக வளர்ந்து விரிவடைகிறது. ஒடுக்குமுறையும் அதனை முகம் கொடுக்கும் எதிர்ப்பு முறையும் ஒரு சுழற்சி முறையில் அமையும். அது

மக்களுடைய சமூக-பொருளாதார பண்பாட்டில் தன் விளைவுகளை ஏற்படுத்தும். போராட்டத்தின் இயங்கு நிலைக்கு ஏற்ப, மக்களின் தெரிவுக்கு அமைவாக ஏதோ ஒரு மட்டத்தில் அவர்களும் போராட்டத்திலே கலந்து கொள்ளும் நிலைக்கு கவரப்படுவார்கள். இதன் பின்னர்தான் போராட்டத்தில் பங்களிப்பு தீர்மானமாகிறது. ஒரு தேசிய விடுதலை இயக்கத்தில் தனிமனிதரின் ஈடுபாடுபற்றியே நான் இங்கு குறிப்பிடுகிறேன். பொதுவான தேசியப் போராட்டத்தின் முழுமைக்குள் நின்றவாறே தனிப்பட்ட ஒருவர் தனது போராட்டத்தை தொடுக்க நிர்ப்பந்திக்கபடுகிறார். சூழல்கள், சவால்கள், உறவுகள் ஆகிய பலதரப்பட்ட நிலைகள் அவரை நிர்ப்பந்திக்கின்றன. அதாவது, தனி மனிதருடைய போராட்டமானது தேசிய விடுதலை இயக்கத்தின் வளர்ச்சிக்கும் செயற்பாட்டிற்கும் சமாந்தரமாக இடம்பெறும். இவ்வகையில் 1984, 1985ம் ஆண்டு காலம் கட்டவிழந்தபோது இயக்கத்தினதும் போராட்டத்தினதும் படிநிலை வளர்ச்சியில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்வுகளை நான் சந்தித்தேன். இவை எனது உணர்ச்சிகளுக்கும் சிந்தனை வளத்திற்கும் சவால்களாக அமைந்தன. இந்த அனுபவங்களால் எதிர்காலப் போராட்டத்துக்கான மன வைராக்கியத்தைப் பெற்றேன். அத்துடன் பலவகையான இடர்பாடுகளை பின்னர் எதிர்கொண்டபோது, அவற்றைத் தாக்குப் பிடிக்கவும், துணிச்சலும் உறுதியான மனத்திடமும் பெற்றேன்.

எப்போதைக் காட்டிலும் 1984 இலேயே விடுதலைப் புலிகள் துரித வளர்ச்சியும் விரிவாக்கமும் கண்டனர். ஒரு சிறிய கெரில்லா அமைப்பானது தேசிய விடுதலை ராணுவமாக அபூர்வமான முகிழ்ப்புப் பெற இரண்டு முக்கிய காரணிகள் இருந்தன. இரண்டும் பொருத்தமான வேளையில் வந்து முதிர்ந்தன. இந்தியா ஏற்பாடு செய்த பயிற்சித் திட்டமானது விடுதலைப் புலிகளை விடுதலை ராணுவமாக வடிவெடுக்கச் செய்வதில் முக்கிய பங்கு வகித்தது. இந்தப் பயிற்சி, விடுதலைப் புலிப் போராளிகளின் அறிவையும் ஆற்றலையும் புடமிட்டது. அவர்களது இராணுவத் தகமையையும் உள்ளார்ந்த திறனையும் அமோகமாக வளர்த்துவிட்டது. ஆனாலும் இந்தியாவின் பயிற்சித் திட்டம் வரம்பு கொண்டதாகவே இருந்தது. இருநூறு போராளிகள் மட்டுமே இதில் பயிற்சி பெற்றார்கள். விடுதலைப் புலிகளின் ராணுவப் பலம் வெகுவாக விரிவடைவதற்கு இந்தப் பயிற்சித் திட்டம் மட்டும் போதுமாக இருக்கவில்லை. சரியான தருணத்தில் நிதியுதவியும் அவசியமாகியது. இல்லையென்றால் இந்திய அரசு வழங்கிய வாய்ப்போடு மட்டும் இயக்கத்தைக் கட்டியெழுப்புவது பிரபாகரன் அவர்களுக்கு சிரமமாக





இருந்திருக்கும். தமிழ்நாட்டில் மிகவும் சக்திவாய்ந்தவரும் வளம் நிறைந்தவருமான முதலமைச்சர் எம்.ஜி.இராமச்சந்திரன் அவர்களிடமிருந்து நிதி ஆதரவு கிடைத்தது. இது நிகழ்ந்தது 1984 முற்பகுதியிலாகும். முதலமைச்சரிடம் இருந்து அழைப்பு வந்ததும் பாலா -வின் தலைமையில் அணி ஒன்று சென்று, முதலமைச்சரின் இல்லத்தில் அவரைச் சந்தித்தது. அந்த அணியிலே பேபி சுப்ரமணியமும், கேணல் சங்கரும், திரு நித்தியானந்தன் அவர்களும் சென்றனர். சந்திப்பு நல்ல பயன் அளித்தது. ஈழத் தமிழ் மக்களின் விடுதலைக்கான விடுதலைப் புலிகளின் போராட்டத்தில் உள்ள தேவையையும் தர்மத்தையும் பாலா எடுத்துரைத்து இராமச்சந்திரன் அவர்களை நம்ப வைத்தார். முதல் சந்திப்பிலேயே பல கோடி ரூபா நிதி உதவி வழங்க முதலமைச்சர் முன்வந்தார். தமிழ்ப் பகுதிகளிலே சிங்கள இராணுவத்தால் நிகழ்த்தப்பட்ட கொலைகளையும் அழிவுகளையும் காட்டும் நிழற்படங்களையும் வீடியோ படங்களையும் பார்த்ததும் அவர் வெகுவாக நெகிழ்ந்து போனார். இத்தகைய நெருக்கடியான ஒரு கால கட்டத்தில், தமிழ் நாட்டிலே பெருமதிப்புப் பெற்ற ஒரு தலைவரின் தங்குதடையற்ற ஆதரவும் துணிச்சலான தலையீடும் விடுதலைப் புலிகளுக்குக் கிடைத்த பெரும் வாய்ப்பு என்றே கூறலாம். எம்.ஜி. ஆர் அவர்களுடைய இந்தப் பெரும் கொடை, இந்த வரலாற்று நாயகனுடன் பிரபாகரன் அவர்களுக்கு ஒரு நெருக்கமானதும் அந்நியோன்யமானதுமான உறவை ஏற்படுத்தியது. விடுதலைப் புலிகளின் நிதியத்துக்குள் திரு. இராமச்சந்திரன் அவர்களுடைய சொந்த நிதி சொரியத் தொடங்கியதும், விடுதலைப் புலிகளை ஒரு தரம் மிக்க தேசிய விடுதலை இயக்கமாக வளர்த்தெடுக்க வேண்டும் என்ற பிரபாகரனின் இலட்சியக் கனவும் கைகூடி வந்தது. அந்த நிதியை மிக முன்னெச்சரிக்கையோடு கையாண்ட விடுதலைப் புலிகளின் தலைவர், தமிழ் நாட்டிலே பல பயிற்சி முகாம்களை நிறுவி, பெரும் தொகையான புதிய போராளிகளையும் அணியிலே சேர்த்ததோடு புதுவகை ஆயுதங்களையும் வாங்கினார். தொடர்ச்சியான காத்திரமான அரசியல் பணிகளுக்காகவும் பரப்புரைகளுக்காகவும் கூட நிதி ஒதுக்கப்பட்டது. அன்றைய வரலாற்றுத் திருப்புமுனையிலே விடுதலைப் புலிகள் வளர்ந்து விரிவடைவதற்கு, எம்.ஜி.இராமச்சந்திரன் அவர்கள் வழங்கிய நிதி உதவியும் அரசியல் ஆதரவும் உறுதுணையாக இருந்தன என்று கூறினால் மிகையாகாது. ஆற்றலும், ஆளுமையும் மிக்க புதிய ஆட்களை அணிசேர்த்து பெருமளவு மனித வளங்களை விடுதலைப் புலிகள் திரட்டினார்கள். விடுதலைப் புலிகளின் அரசியல் சித்தாந்த வேலைத் திட்டத்தை முன்னெடுப்பதில் 1984 ஒரு முக்கிய ஆண்டாக

விளங்கியது.

இயக்கம் வளரத் தொடங்கிய ஆரம்ப நாட்களில் தலைமைப் பீடத்துடனும் உள்நிலைச் செயற்பாடுகளுடனும் நேரடியாகத் தொடர்பு கொள்ளக் கூடிய ஒரே பெண் நானே தான். அது தவிர, இயக்கம் மற்றும் போராட்டம் தொடர்பாக நானும் எனது தனிப்பட்ட சித்தாந்த நிலைகளையும் எதிர்பார்ப்புக்களையும் கொண்டிருந்தேன். எனது சித்தாந்தத்துக்கும் அரசியலுக்கும் அடிநாதமாக, பெண்ணியமே திகழ்ந்தது. எனது பட்டப் படிப்புக் காலம் முழுவதிலும் கணிசமான அளவு பெண்ணிய இலக்கியம் கற்றிருந்தேன். 'சமுதாயத்தில் பெண்கள்' என்பதுவும் எனது கற்கை நெறிகளில் ஒன்றாக இருந்தது. அன்றைய பிரித்தானிய சமுதாயத்தில் முற்போக்கு அரசியலைக் கடைப்பிடித்த போது, 'பெண்ணியம்' அல்லது 'மாக்சிசம்' அல்லது மாக்சிச/ பெண்ணியம் அல்லது சோசலிச/ பெண்ணியம் போன்ற ஒரு சுலோகத்தை எம்மீது ஒட்டிக் கொள்வது வசதியான போக்காக இருந்தது. பல்கலைக் கழகத்தில் எனது ஆங்கிலேயச் சிநேகிதிகள் ஏதோ ஒரு வகைப் பெண்ணியவாதிகளாகவே இருந்தார்கள். நான் எந்தப் பெண்ணியக் குழுவிலும் சேர்ந்திருக்கவில்லை. ஆனாலும் எனது அனுதாபம், குறித்த சில பெண்ணியங்களுக்குச் சார்பாக இருந்தது. குறிப்பாக, மேற்குலகப் பெண்ணியம் எனப்படும் சீர்திருத்தப் பெண்ணிய அரசியலை நாடாது, மூன்றாவது உலக நாடுகளின் புரட்சிகரப் போராட்டப் பெண்ணியக்கங்கள் மட்டில் அனுதாபியாகவே இருந்தேன். இப்பொழுது, இருபது ஆண்டுகள் கழித்த பின், எந்தச் சுலோகத்தையும் அது பெண்ணியமாக இருந்தாலும் அதை என்மீது ஒட்டத் தயங்குவேன். அதற்காக, பெண் ஒடுக்குமுறை தொடர்பான எனது கரிசனையை நான் கைவிட்டு விட்டேன் என்பதல்ல. இன்னமும் அனுதாபியாகவே இருக்கிறேன். ஆனால், இப்போது பழைமைவாத பெண்ணியக் கோட்பாடுகளுக்கு மாறாக ஆழமான சமூக-பண்பாட்டுக் கண்ணோட்டத்திலும் பகுப்பாய்விலும் இருந்து எழும் நிலைப்பாட்டிலேயே ஆண்-பெண் உறவுகளை பார்க்கத் தொடங்கியிருக்கிறேன் என்று கூறலாம்.

பெண்ணியம் தொடர்பாக நான் கொண்டிருந்த அறிவு நிலையே தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்தில் பெண் புரட்சி பற்றிய நம்பிக்கையை என்னிடம் தூண்டிவிட்டது. 'பெண்களும் புரட்சியும்' என்ற தலைப்பில் 1983 இலே சென்னையில் வெளியிடப்பட்ட எனது சிறிய நூல் ஒன்றிலே தேசிய விடுதலைக்கும் பெண்விடுதலைக்கும் இடையே உள்ள உறவு தொடர்பான எனது கருத்துக்களை விரித்துரைந்திருந்தேன். ஒரு தேசிய மக்கள் திரளில் பெண்களும் அங்கம் வகிப்பதால் அவர்கள்





நாட்டுப்பற்றுடன் தம் மக்கள் மீது ஏவிவிடப்படும் அடக்குமுறையை முறியடிப்பதற்கு போராடும் உரிமை அவர்களுக்கு உண்டு என்று அந்த நூலில் வாதிட்டிருந்தேன். ஆயுதப் போராட்டத்தில் பெண்கள் பங்குபற்றும்போது, தேசிய விடுதலைச் சக்திகள் பலமடையும். அத்துடன் விடுதலை அடைந்த சமுதாயத்தில் போராடவும் அவர்களுக்கு வாய்ப்பு ஏற்படும்.

எத்தனையோ இளம் பெண்கள் தங்கள் உயிரைப் பணயம் வைத்து, யாழ்ப்பாணத்தில் உள்ள விடுதலைப் புலிப் போராளிகளுக்கு உதவி புரிந்து போராட்டத்தின் ஆக்க முயற்சிகளில் ஏற்கனவே ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று பிரபாகரன் அவர்கள் என்னிடம் கூறியிருந்தார். ஆயுதப் போராட்டத்தில் பெண்களையும் இணைத்துக் கொள்ளும் திட்டம் ஒன்றைத் தாம் வகுக்க எண்ணியிருப்பதாகவும் அவர் தெரிவித்திருந்தார். சில கடிதங்களையும் அவர் எனக்குப் படித்துக் காட்டினார். யாழ்ப்பாணத்தில் உள்ள பெண் தொண்டர்களிடமிருந்து வந்தவை அவை. தமக்கும் ராணுவப் பயிற்சி தரவேண்டும் என்று அவர்கள் கேட்டிருந்தார்கள். கொடுமையான ஒடுக்குமுறையில் இருந்து தம் மக்களை விடுவிக்கும் விடுதலைப் போராட்டத்தில் தாமும் மும்முரமாக ஈடுபட இப் பயிற்சி உதவுமென அவர்கள் கேட்டிருந்தார்கள். ஆனால் 1983 இன் பிற்பகுதியில் பிரபாகரன் அவர்களுடைய கவனம் முழுவதும் இந்திய அரசு தமக்கு வழங்கும் ராணுவப் பயிற்சித் திட்டம் என்ற பொன்னான வாய்ப்பை முழுமையாகப் பயன்படுத்துவதிலேயே குவிந்திருந்தது. அந்த நிலைப்பாடு சரியே என்பதும் பின்னர் நிரூபணமாயிற்று. ராணுவப் பயிற்சியை நாடிய நூற்றுக்கணக்கான வட-கிழக்கு இளைஞர்கள் விடுதலைப் புலியணியில் பிரபாகரன் அவர்களுடைய மூத்த போராளிகளின் கீழ் சேர்க்கப்பட்டு வடஇந்தியாவுக்கு பயிற்சிக்காக அனுப்பப்பட்டார்கள். இந்திய ராணுவத் தளங்களில் கணிசமான அளவு போராளிகள் ராணுவப் பயிற்சி பெற்ற பின், தமிழ் நாட்டிலே ராணுவப் பாசறைகளை நிறுவுவதில் பிரபாகரன் தமது கவனத்தைத் திருப்பினார். அங்கே, இந்திய பயிற்சி பெற்றவர்களில் சில-ரைத் தேர்ந்தெடுத்து புதிதாக சேர்ப்பவர்களுக்குத் தரமான பயிற்சி வழங்கும் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்து, தமது ராணுவப் பிரிவுகளை பலப்படுத்த அவர் திட்டமிட்டார். இத்தகைய சுறுசுறுப்பான நடவடிக்கைகளும் திட்டமிடலும் நடைபெற்றுக் கொண்டிருந்த 1983 இறுதியில் பிரபாகரன் அவர்களிடமிருந்து எனக்கு ஒரு செய்தி வந்தது. அதன்படி யாழ்ப்பாணத்தில் இருந்து நான்கு இளம் பெண்கள் எனக்குத் துணையாக விரைவிலே வர இருந்தார்கள். இந்த நான்கு பேரும்

போராட்டம் மீது அனுதாபம் கொண்டவர்கள். ஆனால் விடுதலைப் புலிகளிடமிருந்து ராணுவப் பயிற்சி பெறுவதற்காக என்று அவர்கள் சென்னைக்கு வரவில்லை. தமிழ் மாணவர்களுக்கு கல்வி வசதி வழங்கப்படாமைக்கு மறுப்புத் தெரிவித்து உண்ணா மறியலில் ஈடுபட்டிருந்த இந்த இளம் பெண்களை மரணத்திலிருந்து விடுதலைப் புலித் தளபதிகள் காப்பாற்றியிருந்தார்கள். இந்த நான்கு இளம் பெண்களுக்கும் இப்போது குடும்பமோ, நண்பர்களோ இல்லை என்ற நிலையில் இவர்களுடைய நலனில் பிரபாகரன் அவர்கள் கரிசனை கொண்டிருந்தார். இவர்கள் யாழ்ப்பாணத்தில் இருந்து வந்ததும் திருவான்மியூரில் உள்ள எமது பிரத்தியேக வீட்டில் அவர்களை இருத்துவது என்றும் தீர்மானித்தார். அங்கே பிரபாகரன் அவர்களுடைய நேரடிக் கண்காணிப்பு இருக்கும். அத்துடன் திருமணம் புரிந்த தம்பதியராக பாலாவும் நானும் இருந்தோம். எம்மோடு சீவிப்பதே இந்த இளம் பெண்களுக்கு வழங்கக்கூடிய சிறந்த சமூகப் பண்பாட்டுச் சூழலாக இருந்தது. இவர்கள் சென்னைக்கு வருவதும் விடுதலைப் புலிகளின் தலைவருடன் உடனடியாகத் தொடர்பு ஏற்படுத்துவதும் பெண்ணியம் சம்பந்தப்பட்டதாகவோ அன்றி போராட்டத்தில் பெண்களை ஈடுபடுத்துவதை நோக்கமாக கொண்டதாகவோ இருக்கவில்லை. ஆனாலும் மதி, வினோஜா, ஜெயா, லலிதா என்ற இந்த நான்கு இளம்பெண்களின் வருகை, எதிர்பாராத நிலையிலே இயக்கத்துக்குள் ஒரு குட்டிப் புரட்சியை ஏற்படுத்தியது என்றே கூறலாம்.

போராட்டத்தின் இந்தப் படிநிலையிலே கூட, போராளிகளிடையே கடுமையாக ஒழுக்கக் கட்டுப்பாடுகளை விடுதலைப் புலிகள் கடைப்பிடித்தார்கள். திருமணத்துக்கு முன், ஆண்களும் பெண்களும் தனியாகப் பிரிந்து வாழவேண்டும் என்பது யாழ்ப்பாண இந்து சமுதாயத்தின் பழமைபேண்வாதிகளிடையே நன்கு வேரூன்றிய ஒரு பண்பாட்டுக் கோலமாகும். தமிழ் மக்களிடையே இது தொடர்பாக உள்ள இறுக்கமான உணர்வுகளை பிரபாகரன் அவர்கள் நன்கு உணர்ந்திருந்தார். மக்களிடையே பரந்துபட்ட ஆதரவை விடுதலைப் புலிகள் தொடர்ந்து பெற வேண்டுமானால் இந்தச் சமூக பண்பாட்டு அம்சத்திற்கு முக்கியத்துவம் வழங்க வேண்டும் என்பதில் பிரபாகரன் மிகவும் அக்கறையாக இருந்தார். இது அவரது அரசியல் சாணக்கியத்தை புலப்படுத்தியது. எனினும் முன்பின் அறியாத நான்கு இளம் பெண்களுக்கு தங்கும் இடம் வழங்குவது இயக்கத்தின் ஒழுக்கக் கட்டுப்பாட்டை மீறுவது போல் தோன்றியது. அதே சமயம், பிரபாகரனது இல்லத்தில் அவர்களுக்கு இடம் வழங்குவது அவரது சொந்தப்





பாதுகாப்பு ஒழுங்குகளுக்கு ஏற்றதாக அமையவில்லை என்றும் கருதலாம்.

ஆனாலும் ஒரு தமிழ் மனிதனுக்கும் ஓர் அண்ணாவுக்கும் உரிய பொறுப்புணர்வோடும் ஓர் இயக்கத்தின் தலைவர் என்ற கடமை உணர்வோடும் திருமணமாகாத இந்த நான்கு இளம் பெண்களினதும் பாதுகாப்புத் தொடர்பாக அவர் கரிசனை காட்டியது வியப்புத் தருவது அல்ல. ஆனால் நாள் செல்ல, செல்ல பிரபாகரன் அவர்கள் இந்த இளம் பெண்களோடு நன்கு பழகத் தொடங்க, இந்த மாணவிகளில் ஒருத்தி மீது அவருக்கு கூடுதலான பிடித்தம் ஏற்பட்டிருப்பது தெளிவாகத் தெரிந்தது. மதி (மதிவதனி) அவருடைய இதயத்தைக் கவர்ந்திருந்தார். இது எமக்கு வியப்பைத் தரவில்லை. ஏனென்றால், மதி ஒரு அழகிய பெண்; மிக மிக மென்மையான இதயமும் இரக்கமும் கொண்டவர்; இந்து சமய ஒழுக்க சீலங்களைக் பக்தியோடு கடைப்பிடிப்பவர். விவசாய விஞ்ஞான பீட மாணவியான இவர் யாழ்ப்பாணத்தில் மாணவ ஆர்ப்பாட்டக் களத்திலிருந்து வரலாற்றுக்குள் எடுத்து வரப்பட்டு, பிரபாகரன் அவர்களிடமும், அது காரணமாக இயக்கத்திலும் ஒரு புரட்சியை ஏற்படுத்தியிருந்தார்.

ஒரு தேசிய விடுதலை இயக்கமானது, அமைப்பு ரீதியிலும் தனிப்பட்ட முறையிலும், தங்கள் மக்களின் அபிலாசைகளுக்கும், நலன்களுக்கும் பொருத்தமாக உயர் சீலங்களையும் ஒழுக்கக் கட்டுப்பாடுகளையும் கடைப்பிடிக்க வேண்டும் என்று விடுதலைப் புலித் தலைவர்களும் போராளிகளும் கொண்டிருந்த கருத்துடன் பாலாவுக்கும் எனக்கும் உடன்பாடு இருந்தது. ஆனால் இந்த விதிகள் தளர்வின்றி, இறுக்கமாக இருப்பது எமக்குத் திருப்தியாக இல்லை. எம்மைப் பொறுத்த வரையிலே, விதிக்கப்பட்டிருந்த ஒழுக்கக் கட்டுப்பாடுகள் நடைமுறைச் சாத்தியமானவையாகவோ, மனித உணர்வுகளையும் உறவுகளையும் முதிர்ச்சியோடு புரிந்து கொண்டிருப்பவையாகவோ நீண்ட காலத்துக்குத் தாக்குப் பிடிக்கக் கூடியதாகவோ எமக்குப் படவில்லை. ஒழுக்கக் கட்டுப்பாடுகளைப் பேணியாகவேண்டும் என்ற தனிப்பட்ட பிடிவாத முயற்சி தொடர்ந்தாலும், எமது கருத்துப்படி, இயற்கை தனது போக்கிலே சென்று, ஆண், பெண் இருபாலருக்கும் இடையே உறவுகளைத் தோற்றுவிக்கும் என்று நாம் நம்பினோம். காதலின் பலமும் வேகமும் பிரபாகரன் அவர்களைத் தாக்கும் போது, அந்த உக்கிரமான உணர்வெழுச்சி அவரை முழுமையாக ஆகர்சிக்கும் என்பதையும், பாலாவும் நானும் உணர்ந்திருந்தோம். நாம் எதிர்பார்த்ததேதான் நடந்தது. அந்தப் பெண் மீதான காதல் அவர்

இதயத்தில் பொங்கி வழிந்தது. மதி மட்டில் அவரும் அவர் மட்டில் மதியும் காதல் வயப்பட்டு ஒருவரை ஒருவர் முழுமையாக நேசித்தார்கள். இயக்கத்தினதும் போராளிகளினதும் நீண்ட கால நலன்களை நோக்கும் போது, எம்மைப் பொறுத்த வரையிலே இந்த உறவு மிகவும் முக்கியமானதாகப் பட்டதுடன், திருமணத்தில் இது நிறைய வேண்டும் என்றும் உறுதியாக நம்பினோம். பிரபாகரன் அவர்கள் தமது பிரம்மச்சாரியத்தைக் கடைப்பிடிப்பதாக இருந்தால், அவர் ஒரு துறவிக்கான கோலத்துடனேயே வாழ்ந்திருக்க வேண்டும். அப்படி நடந்தால், அனைத்துப் போராளிகளும் அப்போதும் சரி, இப்போதும் சரி, உணர்ச்சியற்ற மலடர்களாகவும் மனவிரக்தி பிடித்தவர்களாகவும் வாழ வேண்டியிருக்கும். ஓர் அரசியல் பின்புலத்திலே, பிரபாகரன் அவர்களுக்கும், மதிக்கும் இடையே மலர்ந்த இந்த உறவு, முக்கியமானதாகவும், ஆரோக்கியமானதாகவும், தலைவராக அவர் மதிக்கப்படுவதற்கு வளமூட்டுவதாகவும் அமைந்தது. தமிழ்ச் சமுதாயத்தைப் பொறுத்த வரையிலே, வயது வந்தவர்கள் திருமணம் ஆகாது இருக்கும் போது, முழுமையான முதிர்ச்சி அடையாதவர்களாகவே சமூகம் அவர்களைப் பார்க்கும். திருமணம் புரிந்து குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டு, ஆழமான உணர்ச்சி அனுபவங்களையும் பொறுப்புணர்வையும் கொண்ட ஒரு தலைவர் தமது தீர்ப்பைக் கூறும் போது தமிழ்ச் சமூகம் அவரில் நம்பிக்கை வைத்து மதிப்பளிக்கும். இருந்தபோதிலும், பிரபாகரன் அவர்கள் மதியுடன் கொண்டிருந்த உறவு, இயக்கத்தின் ஒழுக்கக் கோவைக்கு மாறாக இருந்ததால், தமது போராளிகளிடமிருந்து பலத்த கண்டனமும், எதிர்ப்பும் வரலாம் என்பதை அவர் உணர்ந்தார்; பாலாவின் உதவியை அவர் நாடினார். இயக்கத்தின் தலைவர்களிடமும் போராளிகளிடமும் தமது காதல் உறவைப் பரிந்துரைக்க வேண்டும் என்றும் தொடர்ந்தும் தாம் தமது காதல் உறவைப் பேணுவதற்கு இடமளிக்குமாறு அவர்களிடம் எடுத்துரைக்க வேண்டும் என்றும் கோரினார்.

நாம் எதிர்பார்த்தது போலவே, பிரபாகரன் அவர்களுக்கும் மதிக்குமிடையே அரும்பிய காதல் ஒரு புயலைக் கிளப்பியது. அவருடைய மூத்த தோழர்களும் இயக்க உறுப்பினர்களும் கடுமையாக எதிர்த்தார்கள்.

தகவல் அறிவிக்கப்பட்டதும் மதியின் குடும்பத்தினர் யாழப்பாணத்திலிருந்து சென்னைக்கு விரைந்து வந்தனர். வந்த பின் தம் மகளின் காதல் நன்றாக வளர்ந்து முதிர்ந்திருப்பதைக் கண்டனர்; அவருடைய எதிர்காலம் எப்படி அமையப் போகிறது என்பதையும்





உணர்ந்தனர். மதியின் தந்தைக்கும் பாலாவுக்கும் இடையே நீண்ட கலந்தாலோசனை நடைபெற்றது. அதையடுத்து, பெற்றோரின் சம்மதம் கிடைத்தது. இதன் பின்னர் பிரபாகரன் அவர்களுடனான மதியின் உறவை எமது கரங்களில் ஒப்படைத்துவிட்டு, மதியின் பெற்றோர் மகிழ்ச்சியோடு யாழ்ப்பாணம் திரும்பினர். அந்தப் பிரச்சினை தீர்ந்தாலும் பிரபாகரனுடைய மூத்த தோழர்களுக்கும் இயக்கப் போராளிகளுக்கும் இந்த விவகாரம் தொடர்பான விளக்கம் அளிக்க வேண்டிய பணி மீதம் இருந்தது.

பிரபாகரனுக்கு நெருங்கியவர்களும் இயக்கத்தில் மூத்தவர்களுமான போராளிகள் யாழ்ப்பாணத்தில் இருந்து சென்னைக்கு வரவழைக்கப்பட்டார்கள். மதியுடனான காதல் பற்றியும் விரைவிலே திருமணம் நடக்க இருப்பது பற்றியும் அவர்களுக்கு தெரிவிக்கப்பட்டது. இயக்கத்தின் ஒழுக்கக் கோவையைக் கடைப்பிடிப்பதற்காக தங்கள் காதல் உறவுகளைத் தியாகம் செய்திருந்த சில மூத்த போராளிகளுக்கு, தங்கள் தலைவரின் காதல் உறவு மகிழ்ச்சியைத் தரவில்லை. இயக்கத்தின் பழைய ஒழுக்கக் கோவை மிகவும் இறுக்கமானது என்றும், தூய்மைவாதப் போக்குடையது என்றும், காலத்தோடு ஒட்டி பழைய விதிகளில் மாற்றம் ஏற்படுத்த வேண்டும் என்றும் பாலா விளக்கினார். தமிழ்ப் பண்பாட்டிலே காதலும் வீரமும் உயர் விழுமியங்களாக இருந்து வருவதாக அவர் சுட்டிக் காட்டினார். பிரபாகரன் அவர்களுடைய காதல் உறவு, இயக்கத்தின் உள்ளார்ந்த நிலையை மாற்றியமைக்க வல்லது என்பதையும் அவர் விளக்கினார். எதிர்காலத்தில் இயக்கத்தின் போராளிகள் தங்கள் காதல் உறவுகளைத் திருமணமாக நிறைவேற்றி, குடும்ப வாழ்க்கையிலும் ஈடுபட இது வழிகோலுவதையும் அவர் எடுத்துரைத்தார். இத்தகைய சம்பவத் திருப்பங்கள் அமைப்பின் வளர்ச்சிக்கும் அதன் பெயருக்கும் நல்லதே விளைக்கும் என்றும் பாலா வாதிட்டார். தங்களின் தலைவரின் பிரம்மச்சாரிய வாழ்க்கைக்கு முடிவு வருவது தடுக்க முடியாததாகி விட்டது என்பதை மூத்த போராளிகள் தயக்கத்தோடு ஏற்றுக் கொண்டார்கள். பிரபாகரன் அவர்களுடைய காதலும் திருமணமும் இயக்கம் மீது ஆழமான மாற்றங்களை ஏற்படுத்தியது. போராளிகள் ஒவ்வொருவரும் காதல் வயப்பட்டார்கள்; திருமணம் புரியவும் விரும்பினார்கள். இன்று, திருமணமும் குடும்ப வாழ்க்கையும் இயக்கத்திலே சாதாரணமாக ஆகிவிட்டது.

இயக்கம் மேலும் விரிவடைய எங்கள் திருவான்மியூர் வீட்டில் இடநெருக்கடி பெருகியது. செய்ய வேண்டிய பணிகளுக்கு அந்த வீட்டில் இடம் போதவில்லை. மேலும் பெரிய வீடொன்றை வாடகைக்கு

அமர்த்தத் தீர்மானித்தோம். இயக்கத்தில் வந்து இணையும் பெண்களின் தளமாக அதுவே திகழ வேண்டும் என்றும் முடிவு செய்தோம். இதற்கென, நாம் வாடகைக்கு அமர்த்திய வீட்டில் நிறைய அறைகள் இருந்தன. பெருந்தொகைப் பெண் போராளிகள் தங்குவதற்கு ஏற்றதாகவும் அது அமைந்தது. இந்தப் புதிய வீட்டில் மேன்மாடி அறை ஒன்று பாலாவுக்கும் எனக்கும் கிடைத்தது. இந்த அறையோடு ஒட்டியதாக மாடி முன்கூடம் ஒன்றும் இருந்தது. மேலும், மேலும் இளம் பெண்கள் விடுதலைப் புலிகள் அணியிலே சேர்ந்து, நாம் இருந்த வீட்டுக்கு வந்த போதிலும் எமது அறை எமக்கு வேண்டிய தனிமையைத் தந்தது. இனி, இதமான மாலை வேளைகளில் பாலாவும் நானும் மாடி முன் கூடத்தில் தனியே அமர்ந்து நிறையப் படிக்கவும் விவாதிக்கவும் முடிந்தது.

தமிழ் மக்களுக்கு எதிரான 1983 ஜுலை மாதக் கலவரங்களை அடுத்து இலங்கையின் வட பாகத்தில் ஆர்வம் மிக்க பல இளம்பெண்களை ரெலோ அமைப்பின் சிறீசபாரத்தினம் திரட்டி, பாக்கு நீரிணையைக் கடந்து சென்னைக்கு ராணுவப் பயிற்சிக்காகக் கொண்டுவந்திருந்தார். தமிழ்நாடு சென்றடைந்த மறுகணமே, பெண்களுக்கான பிரிவு எதையும் ரெலோ நிறுவவில்லை என்பதையும், தம்மை வரவேற்று, தங்கவைத்து பராமரிக்க எந்த ஏற்பாடும் செய்யப்படவில்லை என்பதையும் அந்த இளம் பெண்கள் நேரில் கண்டு பெருமளவு மன விரக்தியடைந்தார்கள். அவர்களை விடுதலைப் புலிகள் சேர்த்துக் கொள்வார்களா என்று சில கத்தோலிக்க குரவர்கள் ரெலோவின் சார்பாக விடுதலைப் புலிகளிடம் விசாரித்தார்கள். இந்தப் பெண்களின் நிலைமை பிரபாகரன் அவர்களுடைய செவிகளுக்கு எட்டியதும், இயக்கத்திலே அவர்கள் சேர்வதற்கு அவர் சம்மதித்தார். அது தவிர, முதல் பயிற்சிப் பாசறையைத் தொடக்கும் அளவுக்குப் போதுமான பெண்கள் திரண்டதும், அவர்களுக்கான ராணுவப் பயிற்சித் திட்டம் ஒன்றையும் புலிகள் ஆரம்பிப்பார்கள் என்றும் உறுதிமொழிந்தார். எனவே, நாம் புது வீடு மாறியதும், எம்மோடு வாழ்ந்து கொண்டிருந்த நான்கு மாணவிகளோடு ரெலோவிலிருந்து அதிருப்தியோடு வந்த இளம் பெண்களும் சேர்ந்து கொண்டார்கள். இவர்களில் ஒருவர் சோதியா. பலராலும் மதிக்கப்பட்டவரும், ஆற்றல் மிக்கவருமான சோதியா, பல ஆண்டுகளின் பின் விடுதலைப் புலிகளின் மகளிர் இராணுவ அணியின் தலைவியாக உயர்ந்தார். எவரிலும் தங்காது, தன் காலில் நிற்கும் சுகி, குறிவைத்து சுடுவதில் அபாரமானவர். நெல்லியடி ராணுவ முகாமை 1987 ல் தாக்கிய படைப்பிரிவில் இவரும் ஒருவர். இந்தத் தற்கொடைத் தாக்குதலைத் தொடக்குமுன், ஒரு முக்கிய காவல் முன் அரண் மீது





முதலாவது ஆர்.பி.ஜீ தாக்குதலை நடத்தியவர் சுகியாவார். ரெலோ குழுவில் இருந்து வந்தவர்களில் தீபாவும் ஒருவர்; இவர் முல்லைத்தீவைச் சேர்ந்தவர்; பெண் போராளிகளால் யாழ்ப்பாணத்தில் நடத்தப்பட்ட முதற் பயிற்சி முகாமில் பயிற்சி நடத்துபவராக உயர்ந்தார். இமெல்டா இன்னொருவர். யாழ்ப்பாணத்தில் இடம்பெற்ற சமர் ஒன்றிலே உயிரைத் தானம் தந்தவர். இன்னொருவர் வசந்தி! அபாரமான திறமைகள்; நல்ல உடல்வாகு! இவருடைய சகோதரர் தற்செயலாகச் சுட, அந்த ரவை இவர்மீது பாய, அதனால் கை இரண்டும் கால் இரண்டும் செயலிழந்து, கிடையிலே வீழ்ந்தவர்.

யாழ்ப்பாணத்தில் இருந்து முன்னதாக வந்த மாணவிகளில் இரண்டு பேர் விடுதலைப் புலிகளின் வரலாற்றில் மிக முக்கிய பங்கு வகித்தவர்கள். இயக்கத்திலே சேருமுன், ஜெயா ஒரு அரசியல் விஞ்ஞான மாணவியாக இருந்தவர். இந்திய ராணுவ ஆக்கிரமிப்புக் காலத்தில் யாழ்ப்பாணத்திலே தலைமறைவு நடவடிக்கைகளில் ஜெயா பெரும் பெயர் பெற்றார். பின்னர், விடுதலைப் புலிகள் மகளிர் அணி அரசியற் பிரிவின் தலைமைப் பதவியை 1993 இலே பெற்றார். இவர் பின்னர் திருமணம் புரிந்து கொண்டார். கால ஓட்டத்தில் இயக்கத்தை விட்டு வெளியேறினார்.

இனி லலிதா. பல ராணுவ நடவடிக்கைகளில் 1990 இற்குப் பின் களம் கண்ட மூத்தவர். போர்க் களத்திலிருந்து இப்போது ஓய்வு பெற்றுவிட்டார். ஆனால், தமது வாழ்வின் நீண்ட காலத் தாகத்துடன், அதாவது பாலர்கள் மீது பாசம் கொட்டும் தாகத்துடன் தம்மை இணைத்துக் கொண்டு விட்டார். இன்று செஞ்சோலைப் பொறுப்பாளராகத் திகழ்கிறார். அனாதைப் பெண் பிள்ளைகளுக்கும் சிறுவர்களுக்கும் வதிவிடப் பள்ளியாக விளங்குவது செஞ்சோலை.

மட்டக்களப்பில் ஒரு சிறிய ஆயுதக் குழுவில் இருந்து விலகி வந்து விடுதலைப் புலிகளோடு இணைந்து கொண்டவர் சாந்தி. இறுதியில் இவர் பெண்கள் அணியின் புலனாய்வுப் பொறுப்பாளராக உயர்ந்தார். பல ஆண்டுகளின் பின்னர் இயக்கத்தில் இருந்து இவர் வெளியேறினார்.

இளம் பெண்கள் கூட்டமாக ஒரே குடையின் கீழ் ஒன்றாக வாழ வந்தது அவர்களுக்கே புதிய அனுபவம். அதுவும் தாம் பெருமதிப்பு வைத்திருக்கும் தலைமைக்கு அருகே வாழக் கிடைத்தமையை ஒரு பாக்கியமாகவே அவர்கள் கருதினார்கள். பிரபாகரன் அவர்கள், இயக்க அலுவலாக பாலாவிடம் வரும்போதும் சரி, தமது இதயம் கவர்ந்த மதியுடன் உரையாட வரும்போதும் சரி, அவருக்குப் பிடித்தமான சிற்றுண்டிகளைத் தயாரிப்பதில் அந்த இளம் பெண்கள் காட்டும்

சுறுசுறுப்பான ஆர்வத்தைப் பார்க்க வேண்டும். நாம் குடியிருக்கும் சூழலின் அமைதியைக் கலைக்கா வண்ணமும், சுற்றுப்புறத்தின் கவனத்தை ஈர்க்கா வண்ணமும் நாம் அமைதியாகவே வாழ்ந்து கொண்டிருந்தோம். அந்த வதிவிடத்தின் சமூகச் சூழலையும் நாம் கவனத்தில் இருத்த வேண்டியிருந்தது. ஆசாரம் மிக்க பிராமணர்களின் கூட்டுக் குடும்பங்கள் அமைந்த பகுதியின் மத்தியில் எமது வீடு அமைந்திருந்தது. ஆகவே உள்ளூர் வாசிகள் நம் மட்டில் எத்தகைய கருத்தை வகுக்கிறார்கள் என்பது தொடர்பாக நாம் எச்சரிக்கையாக இருந்திருக்க வேண்டியிருந்தது. அந்தச் சுதேசச் சூழலில் ஒரு வெள்ளைக்காரப் பெண் தரித்திருப்பதே புருவங்களை உயர்த்த வைத்திருந்தது. பொதுவாக இந்திய இளம் பெண்களும் சரி, குறிப்பாக மரபு பேணும் பிராமணப் பெண்பிள்ளைகளும் சரி, அரைத் தாவணி அணிவதே பொதுவாக இருக்க, எங்கள் வீடு நிறைய இருந்த இளம் பெண்கள் பாவாடை சட்டை அணிந்திருப்பது அண்டையில் வாழ்பவர்களுடைய கவனத்தை இயல்பாக ஈர்த்தது; அது புதிராகவும் அவர்களுக்குத் தோன்றியது. ஒரு நாளில் எந்த நேரமும் பிரபாகரன் அவர்கள் தமது வாகனம் நிறைய மெய்க்காவலர்களுடன் வருவது எமது வீடமைந்த சூழலில் ஒரு வரவேற்பு உணர்வை உருவாக்கவில்லை. இதனால், அனைவருடைய நலனைக் கருத்தில் எடுத்து, பிரபாகரன் அவர்கள் தமது தரிசிப்பை இருட்டுவதற்கு முன்னதாகவே வைத்துக் கொள்வது நல்லது என்று மரியாதையாகவே அவரிடம் சுட்டிக் காட்டும் நிலைக்கு பாலா தள்ளப்பட்டார். எமது சூழலில் நாம் தப்பபிப்பிராயங்களுக்கு உள்ளாகாது இருப்பது அவசியம் என்பதே எமது அங்கலாய்ப்பாக இருந்தது. எமது முந்திய திருவான்மியூர் வீட்டுக்குக் கசப்பான அனுபவங்களும் எமக்குப் படிப்பினையாக இருந்தன. குறிப்பாக என்னைப் பற்றிய உள்ளூர் அபிப்பிராயம் முற்றிலும் தவறானதாக இருந்தது. 1979 இலே சென்னைக்கு நான் முதற்பயணம் புரிந்திருந்தபோது, உள்ளூர்வாசிகளால் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்ட முதல் அனுபவம் எனக்குக் கிடைத்திருந்தது. எமது தங்கிடத்தைக் கடந்து செல்பவர்களின் பார்வை குத்திட்டாகவே இருக்கும்; எமது அறையைக் கடக்கும் போது தலைகள் தாமாகவே எமது அறையை நோக்கித் திரும்பும். ஆனால் 1984 இலே திருவான்மியூர் வீட்டில் நான் இருப்பது மிகவும் விபரீதமான தப்பபிப்பிராயத்தைத் தோற்றுவித்திருந்தது. ஒரு விலைமாதர் விடுதியை நடத்தும் முதலாளி அம்மாவாக உள்ளூர் மக்களின் சந்தேகங்களும், கணிப்புகளும் என்னைப் படம் போட்டிருந்தன. உள்ளூர் மக்களின் பார்வையில் நான் வேறு விதமாகத்





தோன்றுவதற்கு இடமில்லை என்றே கூற வேண்டும். அவர்களுடைய பார்வையில் ஒரு வெள்ளைக்காரப் பெண், வாடகை வீடொன்றில் சில தமிழ் ஆடவர்களோடும் நான்கு அழகான இளம் தமிழ்ப் பெண்களோடும் தரித்திருப்பதும், இனி வெவ்வேறு ஆடவர்கள் அடிக்கடி பகல் இரவென்று எந்நேரமும் வருவதும் சந்தேகத்தைத் தோற்றுவித்திருந்தது. நேரடியாக எம்மைக் கேட்டு தங்கள் சந்தேகத்தைப் போக்காது உள்ளூர் சமுதாய விச மூளைகள் சுவையான கதை ஒன்றை கருக்கூட்டி, அதற்கு காதும் சிறகும் வைத்து, தங்கள் சூழலில் ஒரு காமக் கேளிக்கை கூடம் ஒன்று இயங்குவதாகப் புரளியை பரப்பியிருந்தன. கன்னிமை, கற்பு, ஒற்றைத்திருமணம், திருமணத்துக்கு முந்திய உடலுறவு தவிர்ப்பு ஆகியவற்றை உயர் ஒழுக்க சீலங்களாக ஓம்பும் ஒரு சமுதாயத்தில் ஒரு விலைமாதர் விடுதியை நடத்தும் வெள்ளைக்காரப் பெண் ஒருத்தி, தாம் மதிக்கும் ஒழுக்க விழுமியங்களை வெளிப்படையாக அவமதிப்பது, உள்ளூர் சமுதாயத்துக்கு கொதிப்புணர்வை ஏற்படுத்தியிருந்தது. இதனால் தார்மீகச் சீற்றம் உருவேறிய நிலையிலே, உள்ளூர் மக்கள் சிலர் ஒன்றாகத் திரண்டு எங்கள் வீட்டை நோக்கி ஊர்வலம் வந்து தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்க முற்பட்டார்கள். அந்தத் தருணத்தில், பாலாவோ, பிரபாகரன் அவர்களோ, வேறு எந்த ஆண் போராளிகளோ வீட்டில் இருக்கவில்லை. எமது வீட்டின் எதிரே சீற்றம் கொண்ட கும்பல் ஒன்றைக் கண்டதும் உள்ளே இருந்த இளம் பெண்கள் அச்சத்தால் உறைந்து போனார்கள். என்மீது வீசப்பட்ட நிந்தனை வார்த்தைகள் எனக்குப் புரியவில்லை; ஆனால் வந்தவர்களின் முகங்களில் இருந்த கோபத்தையும் வெறியையும் அப்பட்டமாகப் பார்க்க முடிந்தது. வெளியே நின்ற கும்பல் பொறுமையை இழந்தது. வன்செயலில் இறங்கி வீட்டைக் கல்லால் தாக்கத் தொடங்கியது. இந்தத் தருணத்தில் பொன்னம்மான் அவர்கள் அங்கே வந்தது எமக்கு ஆறுதலாக இருந்தது. ஒரு மூத்த தளபதியும் பிரபாகரன் அவர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு தோழருமான பொன்னம்மான் அவர்கள் ஜீப் வண்டி ஒன்றில் சில போராளிகளுடன் வீட்டுக்கு வந்தார். அங்கு நின்ற கும்பல் எம்மீது கொண்டிருந்த அருவருக்கத் தக்க தப்பபிப்பிராயத்தைப் பற்றியும் எமது ஒழுக்கம் மீது அவர்கள் வீசிய வசைவுகளைப் பற்றியும் கேட்டறிந்ததும் பொன்னம்மானும் போராளிகளும் சீற்றம் அடைந்தார்கள். பொன்னம்மான் கூட்டத்தை நோக்கி உரத்துக் கத்தினார். நாம் யார் என்பதை விளக்கினார். ஆதாரத்துக்கு பிஸ்டலை எடுத்துக் காட்டினார். கும்பல் வாயடைத்து நின்றது; தங்கள் நடத்தைக்கு வருத்தம் தெரிவித்தபடி ஒவ்வொருவராக கழன்று சென்றார்கள். இந்திய ராணுவப்

பயிற்சித் திட்டத்தில் கலந்து கொள்வதற்காகத் தமிழீழத்தில் இருந்து வந்த தமிழ்ப் புலிகள் என்ற விடுதலைப் போராளிகளே நாம் என்பதை அவர்களுக்கு பொன்னம்மான் விளக்கினார்.

இந்த அனுபவம் எனக்குள் ஒரு கசப்பான உணர்வை ஏற்படுத்தியது. இத்தகைய ஒரு சமூகத் தப்பபிப்பிராயமோ, இத்தகைய ஒரு அருவருப்பான விரோத சம்பவமோ இனி இடம்பெற இடமளிக்கக் கூடாது என்று நெஞ்சுக்கு உள்ளே உறுதி பூண்டேன். உண்மையிலே இந்தச் சம்பவம், சமுதாயத்தில் பெண்களின் நிலைபற்றிய எனது புரிந்துணர்வில் ஓர் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியது. ஒழுக்க விழுமியங்களைத் தமிழ் மக்கள் எவ்வளவுக்கு வலியுறுத்துகிறார்கள் என்பது பற்றியும் எனக்கு ஒரு கையடக்கமான ஆனால் கூர்மையான சமூக-பண்பாட்டுப் பாடமாகவும் அமைந்தது. பெண்கள் மீதான சமூகக் கட்டுப்பாடு, பொதுசன அபிப்பிராயம் என்ற வடிவிலே மீண்டும் மீண்டும் தலையெடுத்தது. இந்தியாவிலும் இலங்கையிலும் நான் வாழ்ந்த காலம் முழுவதும் வெவ்வேறு அளவிலும் வெவ்வேறு வடிவிலும் இந்தப் பிரச்சினை அவ்வப்போது தலை தூக்கியது. இன்னும் ஒன்றைக் குறிப்பிடலாம். பெண்ணியவாதிகளின் கவனத்தையும் சீற்றத்தையும் இது தூண்டலாம். அதாவது, பெண்களே பெண்கள் மீது இந்தக் கொடுமைகளைப் புரிந்தார்கள் என்பதே அது. இங்கு நான் மேலோட்டமாக மட்டுமே தொட்டுச் செல்கிறேன். உண்மையிலே சமுதாயத்தில் பெண்கள் என்ற முழுமையான கண்ணோட்டத்தில் பார்க்கும்போது இந்தச் சமூகப் பிரச்சினை பல முகம் கொண்டதும் சிக்கல் மிக்கதுமாகும். இதை விரிவாக அலசுவதானால், தனி ஒரு நூலே எழுதலாம். ஆனால் ஒன்றை மட்டும் சுட்டிப்பாகக் கூறலாம். பெண்களுடைய ஒழுக்க சீலம் தொடர்பாக அவதூறு ஒன்றைப் பரப்பினால், சமுதாயத்தில் அவர்களுக்குச் சாவுமணி அடிக்க அதுவே போதும். அதற்குப் பின் அவர்கள் சமூகத்தில் ஒரு கண்ணியமான நட்பையோ, நன்மதிப்பையோ சம்பாதிக்க முடியாது; தமிழ்ச் சமுதாயத்திலே ஒரு பெண் 'ஒழுக்கம் கெட்டவள்' என்று நாமம் சூட்டப்பட்டுவிட்டால், அதன் பின் அவளுடைய வார்த்தைக்கு சமூக மரியாதை எதுவும் கிடையாது. எம்மோடு இருந்த இளம் பெண்களில் எவரேனும் ஒழுக்கம் கெட்டவள் என்று தவறுதலாகக் கூட குற்றம் சாட்டப்பட்டுவிட்டால், விடுதலைப் புலிகள் இயக்கத்தில் பெண்களின் எதிர்காலம் தொடர்பான கெட்ட பெயரே நிலைத்து விடும். அத்தகைய கொடிய அவதூறான வதந்தி காட்டுத் தீ போலப் பரவினால், நியாய விளக்கங்கள் கூட, அவப் பெயரை முழுமையாக கறையழிக்கப்





போதுமாக இராது. சந்தேகம் தொடரவே செய்யும். தமிழ்ச் சமுதாயத்தில், ஒரு பெண் ஒழுக்கம் கெட்டவள் என்று கரும் புள்ளி குத்தப்படுவதற்கு, அவள் கட்டாயமாக ஒரு விலைமாதாகத் தான் இருக்க வேண்டும் என்பதல்ல. ஒழுக்கம் கெட்டவள் என்பது தாராளமாகவும், பரவலாகவும் பயன்படுத்தப்படும் ஒரு பதமாகும். ஒரு பெண் நடமாடும் சமூக எல்லைக் கோடுகள் ஒடுக்கமானவை. மேற்குலக நியமங்களோடு ஒப்பிடும்போது, ஒழுக்கம் கெட்டவள் என்று பட்டஞ் சூட்டுவதற்கு வாய்ப்புகள் அதிகம். சொல்லப் போனால், திருமணம் ஆகாத ஓர் இளம் பெண், இளைஞர்களோடு அடிக்கடி பேசுவது காணப்பட்டால், 'ஒழுக்கம் கெட்டவள்' என்று எளிதாகக் கருதப்படலாம். காதலன் உள்ள ஓர் இளம் பெண் அவனைத் திருமணம் செய்யாமல் இருந்தால், அவளும் 'ஒழுக்கம் கெட்டவள்' என்ற பட்டியலில் அநேகமாகச் சேர்க்கப்படுவாள். ஆனாலும், திருவான்மியூர்ச் சம்பவம் என்னை வெகுவாக விழிப்படையச் செய்தது. மற்றவர்கள் எமது நடத்தை பற்றி என்ன கருதுகிறார்கள் என்பதை உணர்த்தியது. ஒரு பெண்ணின் வாழ்வில் பொது சன அபிப்பிராயத்தின் ஆதிக்கத்தையும் அது விளைவிக்கக்கூடிய பேரிடரையும் புரிந்து கொண்டேன். அரசியல் போராட்டம் ஒன்றிலே பெண்களை ஈடுபடுத்தும் போது உருவாகக் கூடிய பிரச்சினைகளைப் புரிந்து கொள்ளும் வாய்ப்பை அது எனக்குக் கற்பித்ததால், அது மிகவும் பயனுள்ளதாக அமைந்தது. எம்மை எவ்வளவுதான் புரட்சியாளர்கள் என்று கூறிக்கொண்டாலும் சரி, சமுதாய, பண்பாட்டு நியமங்களை நிராகரிக்கும்போது ஏற்படும் விளைவுகளுக்கு முகம் கொடுக்க ஆயத்தம் என்று எவ்வளவுதான் நாம் கூறிக் கொண்டாலும், சமுதாயத்தின் நியமங்களையும் விழுமியங்களையும் புரிந்து கொள்வதும், அவற்றை மதிப்பதும் மிகவும் முக்கியமாகும். சமூக மாற்றத்தை நாம் ஏற்படுத்த வேண்டுமானால், பண்பாட்டுக் கோலத்தினூடாக அதை அணுகும் வழிகளை நாம் தேடவேண்டும். ஒருவர் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் அரசியல் அடிப்படையில் அவரை வலிமை இழக்கச் செய்யும் என்றால், சமுதாயத்தின் நியமங்களை மீறுவதன் மூலம் எதையும் சாதிக்க முடியாது.

## சோதனை மிகுந்த காலம்

லண்டனில் புரட்சி அரசியலில் நாம் பங்கு கொண்ட காலத்தில், சிறீலங்கா அரசுக்கு எதிரான பரப்புரைப் பணியில் ஈடுபட்டிருந்தோம். சிறீலங்கா இராணுவம் புரிந்த கொடுமைகளுக்கு எதிராக

ஆர்ப்பாட்டங்களை ஒழுங்கு செய்தோம். சிங்கள இனவெறி அரசியல்வாதிகள் என்று இனம் காணப்பட்டவர்களுக்கு எதிராகவும் பரப்புரை செய்தோம். பயங்கரவாதத் தடைச் சட்டத்துக்கு அமைவாக இரண்டு மதகுரவர், இரண்டு மருத்துவர், இனி யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தில் இருந்து இரண்டு விரிவுரையாளர்கள் கைது செய்யப்பட்டு கொடுமைக்கு பெயர் பெற்ற வெலிக்கடைச் சிறையில் அடைத்து வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்ற தகவல் கிடைத்ததும், அவர்களுடைய நிலைமையை அனைத்துலக சமுதாயத்தின் கவனத்துக்கும் கரிசனைக்கும் கொண்டுவரும் முயற்சியில், லண்டனில் கடுமையாக பரப்புரை புரிந்தோம். தடுக்கப்பட்டவர்களில் ஒருவர், விரிவுரையாளரும் பெயர் பெற்ற தமிழ் எழுத்தாளருமான நிர்மலா நித்தியானந்தன் ஆவார்.

நிர்மலா நித்தியானந்தன் ஒரு இலக்கிய வாதியாகவும், பெண்ணியவாதியாகவும் பிரபலப்படுத்தப்பட்டார். அவருடைய அரசியல் கருத்துகளுக்காக அவர் சட்டத்துக்கு முரணாக சிறைப்படுத்தப் பட்டிருக்கிறார் என்ற கருத்து முன்வைக்கப்பட்டது. அவருடைய மனித உரிமைகள் மீறப்படுவதாகவும் மனிதாபிமானமற்ற முறையில் அவர் நடத்தப்படக்கூடும் என்றும் பரப்புரை புரியப்பட்டது. அவருடைய விடுதலைக்காக அனைத்துலக மயப்பட்ட போராட்டம் ஒன்று தொடக்கப்பட்டது. நிர்மலா தொடர்ந்தும் சிறையிடப்பட்டிருப்பது ஓர் ஆழ்ந்த மனப் பதற்றத்தைத் தோற்றுவித்திருந்தது. அதுவும் 1983 ஆம் ஆண்டு தமிழ் மக்களுக்கு எதிரான கலவரம் நடத்தப்பட்டபோது, சிங்களக் கைதிகளும் சிறைக் காவலர்களும் தமிழ் அரசியல் கைதி-களைப் படுகொலை செய்ததை அடுத்து, நிர்மலா தொடர்பான அங்கலாய்ப்பு பெருகியது. சிறைச் சாலையின் பெண்கள் பிரிவில் இடப்பட்டிருந்த நிர்மலா, பெண் கைதிகளின் சித்திரவதையில் இருந்து அதிர்ஷ்ட வசமாகத் தப்பினார்; பின்னர், தடுப்புக்காவலில் உயிர் தப்பிய ஏனைய தமிழ்க் கைதிகளோடு அவரும் மட்டக்களப்புச் சிறைக்கு மாற்றப்பட்டார். இந்தத் தமிழ் அரசியல் கைதிகளைச் சிறையுடைத்து விடுவிக்க மட்டக்களப்பு மாவட்ட விடுதலைப் புலிப் போராளிகள் திட்டமிட்டார்கள். சிறையிலிருந்து தப்புவதற்கு நடந்த முயற்சியின் போது எமது போராளி ஒருவரால் நிர்மலா மீட்கப்பட்டார் என்பதைக் கேள்வியுற்றதும், பெரிதும் மகிழ்ந்தேன். நிர்மலாவின் துணிச்சல், அவர் மட்டில் நான் வைத்திருந்த மரியாதையை மேலும் உயர்த்தியது. இயக்கத்துடன் கூடிப் பணியாற்ற அவர் சென்னைக்கு வர இருக்கிறார் என்ற தகவலைப் பிரபாகரன் அவர்களிடமிருந்து பெற்றபோது பெரிதும் மகிழ்ந்தேன். ஆங்கிலம் பேசவல்ல ஒரு தோழியுடன் பல விடயங்களை





விரிவாக ஆராயலாம் ஆதலால், அவர் வருகைக்காக காத்திருந்தேன்.

விடுதலைப் புலிகள் இயக்கத்தில் நிர்மலா இணைவதை ஒட்டி பிரபாகரன் அவர்கள் ஆர்வமாக இருக்கவில்லை. பெண்ணிய எண்ணக்கரு தொடர்பாக ஒரு தெளிவான முரண்பாடும் இருவருடைய போக்கிலும் காணப்பட்டது. தமிழ்ப் பெண்கள் விடுதலை தொடர்பான அவருடைய கருத்துடனும் இலக்குடனும் நிர்மலாவின் பெண்விடுதலைத் திட்ட இலக்கு இணையவில்லை. பிரபாகரன் அவர்களுடைய சித்தாந்தப் பார்வையில், நிர்மலாவின் பெண்விடுதலைப் பார்வை, ஓர் அச்சடித்த மேற்குலகப் பார்வையாக இருந்ததேயன்றி, விடுதலை வேண்டிநின்ற தமிழ்ப் பெண்கள் இனம் கண்டு தழுவக்கூடிய பெண்விடுதலை இலட்சியமாக இருக்கவில்லை. எனவே, விடுதலைப் புலிகளின் பெண்கள் பிரிவைக் கட்டியெழுப்பும் பொறுப்பை நிர்மலாவிடம் ஒப்படைக்கும் நோக்கம் பிரபாகரன் அவர்களுடைய திட்டத்தில் இருக்கவில்லை. பெண்கள் பிரிவில் எந்தப் பொறுப்பையும் வகிப்பதற்கு நிர்மலா தகுதியற்றவர் என்ற அவருடைய கருத்து சரியே என்பது நிரூபணமாயிற்று. அவர் மட்டுமல்ல, எம்மோடு இருந்த இளம் பெண்கள் கூட நிர்மலாவின் சீர்திருத்த வாதத்தை புரிந்து கொள்ளவோ, அதனுடன் தம்மை இணைத்துக் கொள்ளவோ முடியவில்லை. போராட்டத்தில் தம்மை இணைத்து, தாய்மண் விடுதலைக்காக போராட வந்தவர்களே இந்தக் கிராமத்துப் பெண்கள். அவர்களிடம் பெண் விடுதலை பற்றிய ஆழமான பார்வை இருக்கவில்லை. இதனால் இவர்களுக்கும் நிர்மலாவுக்கும் இடையே மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடே நிலவியது. இந்த இளம் தமிழ்ப் பெண்களின் உள் உணர்வுகளையும் சிந்தனைகளையும் சரியான வகையிலே நெறிப்படுத்தி, அவர்களுடைய ஆதரவை வென்றெடுப்பதில் பிரபாகரன் அவர்கள் தமது ஆற்றலை நிரூபித்தார். பெண்களுக்கான பிரிவு ஒன்றைக் கட்டி எழுப்புவதிலும் அவர் அயராது பாடுபட்டார்; பின்னர் அந்தப் பிரிவின் வழிகாட்டியாகவும் குருவாகவும் அவர் நிலைபெற்றார். அரச படைகளுக்கு எதிர்ப்புத் தெரிவி-த்திருந்த நிர்மலாவின் வீர வரலாறு கூட, ஏனைய பெண்களோடு ஒட்டுவதில் அவருக்கு உதவிக்கு வரவில்லை. அவரோடு மற்றவர்கள் ஒட்டிக் கொள்ளவும் இல்லை; பெண் விடுதலை தொடர்பான அவருடைய கருத்தின் மேல் அவர்கள் பற்றுக் கொள்ளவும் இல்லை. இயக்கத்தை நிர்மலா காரசாரமாக விமர்சித்தார். ஆனால் அதிகரித்து வரும் ஒடுக்குமுறைக்கு முகம் கொடுக்கும் மக்கள் எவ்வாறு ஒன்று திரண்டு எதிர்த்து நிற்கலாம் என்பதற்கான மாற்று வழி எதனையும் முன்வைக்கும் ஆற்றலும் அவரிடம் இருக்கவில்லை. இளம் பெண்கள் அவர் மீது

கொண்ட வெறுப்பும், பிரச்சினைகளைத் தோற்றுவித்த வேறு பல விடயங்களும், இறுதியில் அவரை, இயக்கத்தை விட்டு ஒதுங்கச் செய்தது. விடுதலைப் புலிகள் இயக்கத்துடன் நிர்மலா பூண்டிருந்த உறவு நல்விளைச்சல் எதையும் தராவிடினும், நித்தி என்று அன்போடு அழைக்கப்பட்ட நிர்மலாவின் கணவர் நித்தியானந்தன் அவர்களுடைய பங்களிப்பு பயனுள்ளதாகவும் காத்திரமானதாகவும் அமைந்தது. இயக்கத்தின் அதிகார பூர்வ "விடுதலைப் புலிகள்" செய்தித் தாளின் ஏட்டாசிரியராக பல கட்டுரைகளை எழுதினார். விடுதலைப் புலிகளின் நிலைப்பாட்டை தெளிவுபடுத்தினார். வேறு தேசிய விடுதலைப் போராட்டங்கள் பற்றிய விவரங்களை எமது போராளிகளுக்கும் வாசகர்களுக்கும் அறிமுகப்படுத்தினார். விடுதலைப் புலிகளின் அதிகார நிலை வெளியீடாக அந்தச் செய்தித் தாள் 1984 இலிருந்து இன்றும் நிலைத்து நிற்கின்ற போதிலும், நித்தியானந்தன் அவர்கள் தொடர்ந்தும் தாக்குப்பிடிக்கவில்லை. தமது மனைவியோடு 1984 இறுதியிலே இயக்கத்தில் இருந்து அவரும் வெளியேறினார். இயக்க அலுவல்களில் பெண்கள் தொடர்ந்தும் பங்காற்றிக் கொண்டிருக்க வேண்டும் என்பதில் நான் அக்கறை காட்டினேன். ஆனாலும் இந்த முயற்சி, எனது உள் மனப் போராட்டத்தின் ஒரு வெளிப்பாடு மட்டுமே. இயல்பாகவே மற்றவர்களோடு இணைந்து கொள்ளும் தன்மை என்னிடம் இருந்ததால் என்னோடு தொடர்பு கொண்டவர்களுடன் ஒட்டிக் கொள்வதில் எனக்குப் பிரச்சினை இருக்கவில்லை. போராளிகளும் என்னோடு மனம் விட்டுப் பழகினார்கள். புதிய உலகு ஒன்றுக்குள் வந்திருக்கும் மேலை நாட்டுப் பெண் என்று கருதி அனுதாபமாகவும் நடந்து கொண்டார்கள். எனது அர்ப்பணிப்புப் பற்றி அவர்களுக்கு என்றும் ஐயம் எழுந்தது கிடையாது. தேசிய விடுதலைக்கான ஆயுதம் தரித்த போராட்டத்தில் நான் எத்தகைய தியாகம் புரிய வேண்டும் என்பதை, போராளிகள் நன்கு புரிந்து கொண்டு இருந்தார்கள். ஆனாலும் நான் ஏற்கனவே இந்தியா சென்று அங்குள்ள சமூக பண்பாட்டுக் கோலத்திலும், வாழ்க்கை முறையிலும் பரிச்சியம் பெற்றிருந்தாலும், சமூகத்தினதும் பண்பாட்டினதும் நெளிவு சுழிவுகள் பற்றி நான் அறிந்திருக்கவில்லை. சிக்கல் மிக்க அந்தப் பண்பாட்டுக் கோலத்தின் ஊடாக என்னை வழிநடத்த பாலா இல்லாது விட்டிருந்தால், மக்களோடு பழகத் தெரியாதவளாகவும், அறிந்தோ அறியாமலோ மக்களைப் புண்படுத்துபவளாகவும் என்னைத் தப்பாகப் புரிந்திருப்பார்கள். சுருங்கக் கூறுவதானால், எனது பண்பாடு வயப்படும் முயற்சி, தொடக்கத்தில் பாரிய பண்பாட்டு அதிர்ச்சியாகவே இருந்தது. ஒரு புதிய சமூக-பண்பாட்டு உலகு பற்றி முழுமையாகக் கற்பதாக அமைந்தது.





ஒழுக்கம் தொடர்பாகவும் ஒரு புதிய பரிமாணத்தை கற்கவும் புரிந்து கொள்ளவும் வேண்டியிருந்தது. எனது நடத்தையில் சில சீராக்கங்களைச் செய்து கொண்டேன். எனது சிந்தனைப் போக்கை முழுமையாக மாற்றியமைத்தேன். என்னுடைய கருத்துகள் பல மாற்றம் கண்டன; அன்றாட வாழ்க்கை முற்றாக மாறியது; ஆடை பற்றிய உணர்வும் மாறியது. இறுதியாக ஆண்டுகள் ஓட, ஒன்றை நன்றாக உணர்ந்து கொண்டேன். சிறிதுகாலம் வேறொரு நாட்டில் வாழ்வது வேறு; வேறொரு நாட்டில் ஒருவர் தனது சொந்தச் சமூகத்துக்குள்ளே வாழ்வது வேறு. ஆனால் இன்னொரு சமுதாயத்தின் அங்கமாக மாறுவது என்பது முற்றிலும் வேறானது.

இந்த அடிப்படையில் பார்த்தால், இந்தியாவிலும் இலங்கையிலும் நான் பெற்ற அனுபவம் அபூர்வமானது எனலாம். இறுதியில் தமிழ்க் கண்களால் உலகைப் பார்க்கத் தொடங்கினேன்; தமிழ்ச் சமுதாயம் போலவே உணரத் தொடங்கினேன். பல பிரச்சினைகளில் தமிழ்ச் சமுதாயம் போலவே சிந்திக்கத் தொடங்கினேன். நாளாந்த அடிப்படையில் அவர்கள் முகம் கொடுக்கும் ஒடுக்கு முறையின் தன்மை பற்றி தமிழ் மக்களுடைய உணர்வுகளையும் சிந்தனைகளையும் என்னால் பகிர்ந்து கொள்ள முடிந்தது. இதனால் மக்களின் எதிர்வினைகள் இயல்பானவை என்பதையும் நியாயமானவை என்பதையும் உணர்வுபூர்வமாக முழுமையாக அறிந்தேன். இந்தப் பூரண ஈட்டத்தின் பின், சில சாதாரண சில்லறை விடயங்களையும் நான் கற்க வேண்டியிருந்தது. கடைத் தெருவில் பேரம் பேசுவது அவற்றில் ஒன்று. சந்தையில் நான் ஏமாற்றப்பட்ட சந்தர்ப்பம் மிகக் குறைவே. எனக்கும் வியாபாரத் தந்திரங்கள் புரியும் என்பதை உணர்த்த வேண்டிய சந்தர்ப்பங்களும் வந்தன. இதனால் என்னை எளிதில் ஏமாற்ற முடியாது என்பதையும் புரிய வைத்தேன்.

## வாழ்க்கை முறையில் நிகழ்ந்த மாற்றங்கள்

மதியும் பிரபாகரனும் 1984 ஒக்ரோபர் முதலாம் திகதி திருப்போரூர் முருகன் கோயிலில் ஒரு எளிமையான சடங்கில் திருமணம் செய்து கொண்டார்கள். அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. பிரபாகரனின் நெருங்கிய தோழர் ஒருவரின் பெயர் அந்தக் குழந்தைக்குச் சூட்டப்பட்டது; சாள்ஸ் அன்ரனி சீலன்! சிறீலங்கா இராணுவத்துடன் இடம்பெற்ற நேரடி மோதலில் மிகத் தொடக்கத்திலேயே வீரச்சாவைத் தழுவிக்கொண்ட இயக்கப் போராளிகளில் ஒருவரே சாள்ஸ் அன்ரனி

சீலன். அதன் பின் மகள் துவாரகா பிறந்தாள். யாழ்ப்பாண இராணுவ நடவடிக்கை ஒன்றில் உயிரிழந்த பெண் போராளி ஒருவரின் பெயரே துவாரகா. மதியின் மெய்க் காவலர்களில் ஒருவராக இவர் திகழ்ந்தவர். மூன்றாவது ஆண் குழந்தை பத்து ஆண்டுகள் கழித்துப் பிறந்தது. அக் குழந்தைக்கு பாலச்சந்திரன் என்று பெயர் சூட்டப்பட்டது. மதியின் தம்பி பெயர் அது. இந்திய இராணுவத்தால் கொல்லப்பட்ட இயக்கப் போராளி அந்த பாலச்சந்திரன். போராட்டத்தில் வீரச்சாவடைந்த இயக்கப் போராளிகளின் பெயர்களைத் தங்கள் பிள்ளைகளுக்குச் சூட்டி மகிழ்வதை விடுதலைப் புலிப் போராளிகள் தம்மிடையே ஒரு மரபாக்கியிருக்கிறார்கள். இதன் மூலம் உறவினர், நண்பர், நெருங்கிய சகாக்கள் ஆகியோரின் நினைவையும் வரலாற்றையும் முன்னெடுத்துச் செல்ல முனைகிறார்கள்.

மதியைத் தனது மனைவியாகத் தேர்ந்தெடுத்தது பிரபாகரன் அவர்களுக்கு கிட்டிய மிகப் பெரிய அதிர்ஷ்டம் என்றே கூற வேண்டும். திருமணமான இத்தனை ஆண்டுகளிலும், மிகவும் சோதனையான இடர் படிந்த காலங்களில் கூட, நிலையான ஆழமான அன்பையும் இனிமையான குடும்ப வாழ்வையும் பிரபாகரன் அவர்ளுக்கு மதி வழங்கியிருக்கிறார். எனினும் திருமண வாழ்வு என்பது மதிக்கு ஒரு மலர்ப்படுக்கையாக அமையவில்லை. இயல்பாகவே அமைதியும் பொறுமையும் கொண்ட மதி, எத்தனையோ தடவைகளில் மிகவும் நெருக்கடியான துயர சூழல்களை எதிர்கொண்டு சமாளிக்க வேண்டி இருந்தது. பிரபாகரன் அவர்களது போராட்டப் பணிகள் காரணமாக தம்பதிகள் இருவருக்கும் மத்தியில் நீண்ட காலப் பிரிவுகளும் ஏற்பட்டதுண்டு. இதனால் திருமணமான புதிதில், தனிமைத் துயரை அவ்வப்போது அனுபவிக்கும் கொடுமைக்கு மதி உள்ளானார். வடக-ழக்கை இந்திய ராணுவம் ஆக்கிரமித்திருந்த காலத்தில் மதி பெரும் மனத் துயரங்களுக்கு முகம் கொடுக்க நேர்ந்தது. இந்தியாவுக்கும் புலிகளுக்கும் இடையே போர் தொடங்கியதும், நல்லூர்க் கந்தசாமி கோவிலில் தமது பிள்ளைகளுடன் அகதியாகத் தஞ்சமடைந்தவர்களில் மதியும் ஒருவர். அதன் பின்னர் மதி தமது பெற்றோரிடம் பிள்ளைகளை ஒப்படைத்துவிட்டு முல்லைத்தீவு மாவட்ட மணலாற்றுப் பகுதியில் அலம்பில் காடுகளுக்குள் தனது கணவருடன் சேர்ந்து கொண்டார். ஒரு புறம் அவர்களுடைய அலம்பில் முகாம் மீது இடையறாது நடந்த பீரங்கி ஷெல் அடி, தத்தி அடி வைக்கும் மழலைப் பாலரை விட்டுப் பிரிந்த ஒரு இளம் தாயின் பிரிவுத் துயர், இனி, இந்திய இராணுவத்துக்கெதிரான மோதலில், நெஞ்சார நேசித்த தம்பியைச் சாகக் கொடுத்த இழப்புத் துயர் - இவை எல்லாம் மதியை வெகுவாகப் பாதித்தன. பின்னர் பிள்ளைகளோடு சேர்க்கப்பட்ட மதி, வெளிநாடு சென்று சுவீடனில் வாழ்ந்தார். சுவீடனில் இரண்டு பிள்ளைகளுடன் தலைமறைவான வாழ்க்கை. முன்பின் அறிமுகம் இல்லாத ஒரு கலாசாரம், இடையறாத ஆபத்துக்கு மத்தியில் வாழும் கணவனிடம் இருந்து பிரிவு. ஆதரவு தர நெருங்கிய உறவினர் எவரும் இல்லாது இருந்தமை. இவை எல்லாம் மனச்சஞ்சலத்துக்கும் மனச் சோர்வுக்கும் மதியை உள்ளாக்கின. பிரேமதாசா அரசுடன் விடுதலைப் புலிகள் 1989 இலே பேச்சுவார்த்தையைத் தொடக்கியபோது, இலங்கைக்கு மதி திரும்பிச் செல்வதற்கான ஏற்பாடுகளை பாலா செய்தார். இலங்கைக்கு நாம் திரும்பிச் சென்ற ஒரு பயணத்தின்போது மதியும் பிள்ளைகளும் சிங்கப்பூரில் எம்மோடு சேர்ந்து கொண்டார்கள். நாம் கொழும்பு சென்றடைந்ததும் அலம்பில் காட்டுக்கு நாம் செல்வதற்கு உலங்குவானூர்தி ஒன்றை பிரேமதாசா அரசு ஏற்பாடு செய்து தந்தது. இதனால், 1989 இல் மதி, திரும்பவும் தமது கணவருடன் இணைந்து கொண்டார். திருமணமான நாளில் இருந்து மதிக்கு ஒரு நிரந்தர வீடும் இல்லை. பாதுகாப்பான குடும்ப வாழ்க்கையும் கிடையாது. இருந்த போதிலும் ஒரு கெரில்லாப் படைத் தலைவரின் மனைவிக்கு உரிய துணிச்சலுடனும், கண்ணியத்துடனும் செயற்பட்டதோடு தமது பிள்ளைகளுக்கும் ஒரு நிலையான, பாதுகாப்பான வாழ்வை வழங்குவதிலும் அயராது பாடுபட்டார். திருமணம் புரிவதற்காக மதி எமது வீட்டிலிருந்து புறப்பட்ட கையோடு அங்கிருந்த மீதி இளம் பெண்கள் 1984 ஒக்ரோபரில் திருச்சிக்கு அனுப்பி வைக்கப்பட்டார்கள். விடுதலைப் புலிகளின் பெண்கள் பிரிவுக்கான முதல் ராணுவப் பயிற்சித் திட்டத்தில் சேர்ந்து கொண்டார்கள்.

இளம் பெண்களின் பயிற்சி முகாம் மதுரைக்கு இடமாற்றம் பெற்றதும், நாம் வசித்த அந்தப் பெரிய வீடு வெறிச்சோடிக் காணப்பட்டது. அவ்வளவு பெரிய வீடு தேவையாகவும் இருக்கவில்லை. எனவே எம் இருவருக்கும் அடக்கமான சிறிய வீடு ஒன்றைத் தேடத் தீர்மானித்தோம். சென்னைப் புறநகரான பெசன்ற் நகரில் கடலோரமாக கச்சிதமான இரண்டு படுக்கையறை மாடி வீடொன்றை எமது நண்பர் நேசன் தேடிப் பிடித்தார். இங்கே, பாலா, தமது ஆழமான ஆசை ஒன்றுடன் மீளத் தொடர்பு கொண்டார். இயற்கையுடன் ஒன்றிப் போகும் ஆசையே அது. எனக்கும் சிக்கல் குறைந்த ஒரு சூழலில் அமர்ந்து கடந்த ஆண்டின் சிக்கல்களை ஒவ்வொன்றாக அவிழ்க்க வாய்ப்புக் கிடைத்தது. இந்த வீட்டில் மூன்றாமவர் ஒருவரும் எம்மோடு இணைந்து கொண்டார். எமது

நாய் ஜிம்மியே அது. இடையிலே இரண்டே இரண்டு ஆண்டுகள் மட்டும் எம்மிடம் இருந்து பிரிந்து வாழ்ந்த ஜிம்மி, தனது பதினைந்து ஆண்டு ஆயுட் காலத்தின் கடைசிச் சில மாதம் வரை, எம்முடனேயே சீவித்தது. அமைப்பின் அலுவலகங்களில் ஒன்றுக்கு ஒரு நாள் பாலா போயிருந்தபோது, அங்கே தன்னைக் கட்டிவைத்திருந்த சங்கிலியை அறுக்க முயன்று கொண்டிருந்த ஒரு நாய்க்குட்டியைக் கண்டிருக்கிறார். அது சிறைப்படுத்தப்பட்டிருப்பதையும் அதன் முனகல் முறுகல்களையும் சகிக்க முடியாது, வீட்டுக்குக் கொண்டுவந்திருக்கிறார். அந்த மென்பந்து மூட்டையை என்னிடம் நீட்டி “இது உமக்குத் தான்; உமக்கு வீட்டுத் துணையாக ஒரு நண்பன்,” என்று ஒப்படைத்தார். அவர் சொன்னது பலித்தது. ஜிம்மி ஒரு உண்மையான நண்பனாக மாறியது; வேண்டும் என்று புரியாத சிறு கொடுமைகளையும் மன்னித்தது; என்றுமே பொறுமை காத்தது; முழுமையாக என்னை நம்பியது. ஜிம்மி ஊடாகவே, விலங்கு உலகத்தினூடாகப் பயணம் புரிந்தேன். விலங்குகளை மதித்தேன்; இறுதியில் சைவ உணவையே அருந்தத் தொடங்கினேன். ஓராண்டு ஆகிய பின், இப்போது இந்த நாய்க் குட்டியின் கபடம் இன்மை புத்துயிர் அளித்தது; அதனுடைய தேவைகளை நிறைவேற்ற முற்பட்டபோது, எமது வீட்டுக்கு முன்பாக இருந்த கடற்கரையில் இயற்கையை அனுபவிக்கும் வகையில் கூடுதலான நேரம் செலவிடவேண்டிய நிர்ப்பந்தத்துக்கும் நாம் உள்ளாக்கப்பட்டோம்.

இந்தியாவிலும் சரி, இலங்கையிலும் சரி, அன்றாட வாழ்க்கையில் ஒரு மகிழ்ச்சியான நிகழ்வு என்னவென்றால், அதிகாலையில் துயில் எழுவதே. இந்தியாவில் சூரியோதயம் என்பது பருவத்துக்குப் பருவம் மாறாது. ஒவ்வொரு நாளும் காலையில் 5:30 இற்கும் 6:00 இற்கும் இடையே சூரியன் உதித்துவிடும். ஆகவே துயில் எழுவதில் பிரச்சினை இராது. இங்கு காலை 3:30 இற்கே துயில் எழுந்து விடுவார்கள். காலையில் 4:00 மணிக்கு விழிப்பதை நியாயமான நேரமாகக் கொள்வார்கள். பெண்கள் அதிகாலையில் எழுந்து, வீடு வளவைத் துப்புரவாக்கி, காலை ஆகாரம் தயாரிப்பது போன்றவற்றில் ஈடுபடுவார்கள். சிலர் விடியு முன் எழுந்து, பகல் வெய்யில் ஏறும் முன் எவ்வளவுக்கு முடியுமோ அவ்வளவுக்கு வேலை செய்து முடிப்பார்கள். மூளை சுறுசுறுப்பாக வேலை செய்வதற்கு அதிகாலையில் எழுந்து விடுவதே நல்லது என்ற கருத்தும் உண்டு. ஆகவே மாணவர்கள் அதிகாலைக் குளிர்மையில் எத்தனை மணிநேரம் முடியுமோ அவ்வளவுக்குப் படிப்பார்கள். பலர் காலையில் விழித்தெழுந்து உடற்பயிற்சி செய்வார்கள். எமது மாடி வீட்டின் முன்பாக கடற்கரை





வீதியில் பெருந்தொகையானோர் கிரமமாக உலா செல்வதும் ஒரு நாளாந்த காட்சியே. கடற்கரையில் காலைப் பொழுது தனி அலாதியானது. அடி வானில் சூரியன் மெதுவே எழுவதும் கற்றை கற்றையாகத் தனது ஒளியை வானில் கோடுகளாக வீசுவதும், சிறு சிறு அலைகள் வெள்ளை மணலில் மெதுவாக வருடுவதும், எம்மை அந்த அமைதியிலே சேருமாறு காந்தம் என அழைக்க, அந்த அழகு விதானத்துக்குள் நாமும் சென்று கடல் நீரில் கால் நனைய நடப்போம். சிறிது நேரம் ஜிம்மியையும் தனியே ஓடி உலாவ விடுவோம். அந்தக் குட்டியின் பூரிப்பு அதன் உடல் பூராவும் தெரியும்; மகிழ்ச்சியில் அது தரையில் உருண்டு புரண்டு ஓடுவது கொள்ளைக் காட்சியாக இருக்கும். எமக்கு ஏதாவது காலையில் வேலை இருந்து கடற்கரைக்குச் செல்ல முடியாது போய்விட்டால் ஜிம்மியை அநேகமாக, மாலையில் கூட்டிச் செல்வோம். கடற்கரையில் எமக்கு வசதியான ஓர் இடத்தில் ஒரு சாப்பாட்டுக் கடை; வகை வகையாகச் சுவையான தமிழ் உணவு; விலையும் மலிவு; மாலையில் எமது நண்பர்களைக் கவர்ந்து இழுக்கும் இடம் அது. சூழலும் இதமாக இருக்கும். தமிழ்ப் பாரம்பரிய கர்நாடக இசை, அருகே உள்ள கோவில் ஒலிபெருக்கியில் வெளியை நிரப்பும். அரசியல் சிக்கல்களால் கொந்தளித்துப் போயிருந்த எனது உள்ளத்துக்கு, மாசற்ற இந்த இயற்கை உலகும் அதன் இயல்பான சூழலும் சாந்தத்தை அளித்தன.

## புதுடில்லியில் புதிய நிர்வாகம்

இவை எல்லாவற்றிற்கும் அப்பால் எதிர்பாரா நிகழ்வுகளையும் திருப்பங்களையும் ஏற்படுத்தியவாறு போராட்ட வரலாறு தொடர்ந்தது. இந்திரா காந்தி அவர்கள் ஒக்ரோபர் 1984 இல் படுகொலை செய்யப்பட்டதும் புதுடில்லியின் அரசியல் சூழலும் திடீர் மாற்றம் கண்டது. ரஜீவ் காந்தி அவர்கள் தமது தாயின் இடத்தில் பிரதம மந்திரியாக அமர்ந்து நேரு குடும்ப ஆட்சியைத் தொடர்ந்தார். அரசியல் முதிர்ச்சியும் நடைமுறைத் தேர்ச்சியும் கொண்ட இந்திரா காந்தியின் எதிர்பாராத திடீர் மறைவு தமிழ் விடுதலை இயக்கத்துக்கும் ஒரு பேரிடியாக விழுந்தது. தமிழ் மக்களின் சுயநிர்ணயத்துக்கான போராட்டத்தின் வரலாற்றையும் அதன் சிக்கலான பரிமாணங்கள் பற்றியும் ஆழமான புரிந்துணர்வு இந்திரா காந்தி அவர்களிடம் இருந்தது. ஜெயவர்த்தனாவின் ஒடுக்குமுறைக் கொள்கைகளை அவர் எதிர்த்தார்; ஒடுக்கப்பட்டவர்களின் பரிதாப நிலை மீது அனுதாபம் கொண்டவராக

இருந்தார். சிங்கள அரசுக்கு எதிரான தமிழ் மக்களின் ஆயுத எதிர்ப்பு இயக்கத்தை அவர் ஆதரித்தார். தமிழ் மக்களின் நியாயம் மட்டில் அவருக்கு அனுதாபம் இருந்ததாலேயே தமிழ்ப் போராளி இயக்கத்துக்கு ராணுவப் பயிற்சி அளித்து, ஆயுதம் வழங்கும் துணிகர முடிவை திருமதி காந்தி மேற்கொண்டார். இதன் மூலம் ஜெயவர்த்தனாவின் ஆட்சிக்கு எதிராக பலமான ஒரு ஆயுத எதிர்ப்பு அணியைத் தோற்றுவித்து, ஜெயவர்த்தனா அரசு தனது ராணுவ அடக்குமுறைக் கொள்கையை கைவிட்டு, ஒரு நியாய அடிப்படையிலான அரசியல் வழியைக் கடைப்பிடிக்குமாறு அதை நிர்ப்பந்திக்கத் துணிந்தார்.

புத்தி சாதுர்யம் மிக்க பெருமாட்டியுடன் இந்தியாவின் புதிய பிரதம மந்திரியை ஒப்பிடும்போது, வெளிநாட்டுக் கொள்கைகளை வழிநடத்தும் நுண்ணிய சிக்கலான நடைமுறைகளில், புதியவர் ஒரு கற்றுக் குட்டியே. இலங்கையில் ஆயுதம் தரித்த தமிழர்களின் போராட்டத்திற்கு தீவிரமாக உதவும் இந்தியாவின் மறைமுக ஈடுபாட்டின் புவியியல், கேந்திர நோக்கங்களை, அனுபவமற்ற இளையவரான ரஜீவினால் உடனடியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. தமிழ் மக்களின் அரசியல் போராட்ட வரலாறு தொடர்பான அவருடைய அறிவு, சூனியமே. ஒடுக்கப்பட்ட தமிழ் மக்கள் அனுபவித்த கொடிய துயரையும் அவர் புரிந்து கொள்ளவில்லை. எனவே ஒரு நெகிழ்வற்ற தலையீட்டுக் கொள்கையையே அவர் கடைப்பிடித்தார். இதனால், போராளிகளுக்கு வழங்கி வந்த ராணுவ உதவிகளை நிறுத்தி விடுவதற்கான தருணம் வந்துவிட்டதாக ரஜீவ் நிர்வாகம் கருதியது. போர் ஓய்வு ஒன்றை நடைமுறைப்படுத்தி, இனப்பிரச்சினைக்கு பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காணுமாறு போராளிகளை நிர்ப்பந்திக்கவும் ரஜீவ் நிர்வாகம் தீர்மானித்தது.

ரஜீவ் காந்தியின் புதிய இந்திய நிர்வாகம் கடைப்பிடித்த இந்தக் கொள்கைத் தீர்மானத்துக்கு அமைவாக, தமிழ்ப் போராளி அமைப்புகளுக்கு இந்திய புலனாய்வு அதிகாரிகள் அறிவுரை வழங்கினார்கள். தனித் தமிழ் அரசுக்கான கோரிக்கையைக் கைவிட்டு, இலங்கை அரசின் ஒற்றையாட்சி அமைப்பினுள் பேச்சுவார்த்தை மூலமான ஒரு அரசியற் தீர்வை ஏற்க ஆயத்தமாக இருக்க வேண்டும் என்றும் ரஜீவ் அரசு அறிவுரை வழங்கியது. அரசியல் சுதந்திரத்துக்காகவும் நாட்டு உரிமைக்காகவும் பரப்புரை புரிந்து, படைதிரட்டி போராட்டம் நடத்திய போராளிக் குழுக்கள் வெகுவாக மனம் பேதலித்துப் போயின. இந்தியாவின் உள்ளார்ந்த திட்டம் தொடர்பாக விடுதலைப் புலிகளின் தலைமை மட்டுமே தொடக்கத்தில் இருந்து





தெளிவான புரிந்துணர்வோடு இருந்தது. ஏனைய அமைப்புகள் இந்தியா மீது அற்றை வரை நம்பிக்கை வைத்திருந்தன. கிழக்கு வங்காளிகளுக்கு பங்களாதேஷை உருவாக்கிக் கொடுத்ததுபோல, தமிழ் மக்களுக்கும் சுதந்திர அரசு ஒன்றை இந்தியா வடிவமைத்துத் தரும் என்று நம்பியிருந்தார்கள். தமிழ் மக்களின் போராட்டத்துக்கு இந்தியா உதவுகிறது என்றால், அது அரசுத் தலைவர் ஜெயவர்த்தனா மீது நெருக்குவாரத்தைக் கொண்டு வந்து, தமிழ் மக்களின் பேரம் பேசும் பலத்தை அதிகரிப்பதேயன்றி, இலங்கையில் தனித் தமிழ் அரசு ஒன்றை உருவாக்குவதற்கு அல்ல என்பதை விடுதலைப் புலிகள் தொடக்கத்தில் இருந்தே அறிந்திருந்தார்கள். ஆனால், சிங்கள அரசு மட்டில் ஒரு நல்லிணக்க அணுகு முறையை போராளி அமைப்புக்கள் கடைப்பிடிக்க வேண்டும் என்று இந்திய நிர்வாகம் நெருக்கத் தொடங்கியதும், விடுதலைப் புலித் தலைவர்களிடையே ஆழமான ஏமாற்ற உணர்வே தோன்றியது. அமைதி முயற்சியைக் கடைப்பிடிக்குமாறு இந்தியா கடுமையாக வற்புறுத்தத் தொடங்கியதும் போராளி அமைப்புகளிடையே அச்சம் உருவானது. தந்திரம் மிக்க "கிழட்டு நரி" ஜே.ஆர் ஜெயவர்த்தனா, தமிழ் மக்கள் மட்டில் நீதியாகவும் நேர்மையாகவும் நடந்து கொள்ள மாட்டார் என்பது அவர்களுக்குத் தெரியும். தமிழ் மக்களின் இலட்சியத்துக்கும் இந்தியாவின் கேந்திர நலனுக்கும் இடையே ஒரு பெரிய முரண்பாடு உருவாகுவதை பாலா உணர்ந்தார். இத்தகைய முரண்பாட்டை எவ்வாறு தீர்த்து வைக்கலாம் என்பதே அவருடைய சிந்தனையை அப்போது குடைந்து கொண்டிருந்தது.

அதே சமயம் இயக்கத்தின் அரசியல், ராணுவக் கட்டமைப்பை விரிவாக்கும் ஒரு பாரிய திட்டத்தை விடுதலைப் புலிகள் செயற்படுத்தத் தொடங்கினார்கள். தமிழ் நாட்டில் ஒதுக்குப் புறமான காடுகளிலே பல ராணுவப் பயிற்சிப் பாசறைகளை பிரபாகரன் ஏற்கனவே நிறுவியிருந்தார். இதனால், ராணுவப் பயிற்சி பெறுவதற்காக, தமிழீழத்தில் இருந்து இளம் போராளிகள் தொடர்ந்து வந்து கொண்டிருந்தார்கள். எம்.ஜி.ஆர் அவர்கள் சொரிந்த பெரும் நிதியோடு விடுதலைப் புலிகள், வெளிநாடுகளில் இருந்து ஆயுதங்களை வாங்கத் தொடங்கினார்கள். ஒரு தடவை எமது வீட்டு அறைகளில் ஏ.கே 47 துப்பாக்கிகளும் றொக்கற் விசிறி ஏறிகணைகளும் நிரம்பி வழிந்தன. எமது அறையில் ஆடைப் பெட்டகத்தில் ரூபாய் நோட்டுகள் கோடிக்கணக்கில் அடுக்கப்பட்டு இருந்தன. எமது அரசியல் அலுவலகம் நன்கு விரிவடைந்து, நன்கு நிறுவனமயமாக்கப்பட்டும் இருந்தது. உலகம் பூராவும் உள்ள ஊடகவியலாளர்கள் அங்கு அடிக்கடி வந்து போனார்கள். இயக்கம்

தனது அதிகார பூர்வமான ஏட்டைத் தமிழிலேயே வெளியிட்டுக் கொண்டிருந்தது. விடுதலைப் புலிகளின் வெளியீட்டை ஆங்கிலத்திலே "வொய்ஸ் ஓஃப் ரைகர்ஸ்" என்ற பெயரில் பிரசுரிக்க அதன் தயாரிப்பிலும், வெளியீட்டிலும் நான் பாலாவுக்கு உதவிக் கொண்டிருந்தேன். தமிழ் நாட்டிலுள்ள அகதி முகாம்களுக்கு நான் செல்வதற்கு இந்த வெளியீடே காரணமாக இருந்தது.

**தமிழ் நாட்டு அகதிகள்**

இலங்கையிலிருந்து வந்த தமிழ் அகதிகள் ஒரு பாதுகாப்பான புகலிடமாகவே தமிழ் நாட்டைக் கருதி வந்திருக்கிறார்கள். தங்களுடையதும் தங்கள் குடும்பத்தினருடையவும் உயிர்களுக்கு அஞ்சி ஓடிய ஆயிரமாயிரம் அகதிகளுக்கு, தமிழ் நாட்டின் மொழி, பண்பாடு, சமயம் முதலானவை, "ஊருக்கு வெளியே ஊராக", அமைந்திருந்தது. பல இலங்கைத் தமிழ் மக்கள் தமிழ் நாட்டிலே சிறிய வியாபாரங்களைத் தொடங்கி வீடு வாங்கி, நல்லபடியாக அங்கே குடியமர்ந்து இருக்கிறார்கள். ஆனால் பலருக்கு அந்த அதிர்ஷ்டம் கிடைக்கவில்லை. மன்னார்த் தீவின் கரையோரத்தில் வாழ்ந்த தமிழ் மக்களில் ஏறத்தாள இருபதாயிரம் பேர், 1985 முற்பகுதியில், தங்கள் பகுதியில் சிறீலங்கா ராணுவம் நடத்திய ஒடுக்குமுறைக்கு அஞ்சி, படகுகளில் ஏறிப் புலம்பெயர்ந்தார்கள். வியற்னாமிய "படகு அகதிகளுக்குச்" சமதையான தமிழ் மக்களின் படகு அகதிக் கோலம் இது. ஆனாதரவான, துயர் தோய்ந்த இத்தனை பெருந்தொகைத் தமிழ் அகதிகள் திடீரென்று தமிழ் நாட்டுக் கிழக்குக் கரைகளிலே போய் இறங்கிய போது, இத்தகைய பாரிய மனித அவலத்தைத் தேற்ற தமிழ் நாடு அதிகாரிகள் ஆயத்தம் எதுவும் இல்லாது, வழி தெரியாது திகைத்தார்கள். உள்ளூர்வாசிகள் சூறாவளியால் பாதிக்கப்பட்டபோது, காற்று மழையில் இருந்து காப்பாற்றத் தற்காலிகமாகக் குடியேறும் வட்ட வடிவிலான கட்டடங்கள் கரை நீளம் இருந்தன. மன்னாரில் இருந்து வந்த தமிழ் அகதிகளுக்கு அவையே வீடுகளாயின. தமிழ்நாடு - கோவளத்துக்குப் பயணம் புரிந்து அவர்களுடைய நிலையைக் கேட்டறிந்து, அவற்றின் அடிப்படையில், 'புலிகளின் குரலுக்கு' கட்டுரை எழுத தீர்மானித்தேன்.

உள்ளே அறைகள் இல்லாத வட்ட வடிவக் கட்டடங்களே இந்தச் சூறாவளிக் காப்பகங்கள். தமிழ்நாடு கிழக்குக் கரைநீளம் இவை நிறுவப்பட்டு இருக்கின்றன. கரையோரப் பகுதிகளில் சூறாவளிக் காற்று சீறி அடிக்கும்போது, சுற்றிவர உள்ள கிராமத்தவர்களுக்குக் காப்பிடமாக அமையும் வண்ணம் இவை நிறுவப்பட்டு இருந்திருக்கின்றன. இந்திரா காந்தி அவர்களுடைய மறைவுக்குப் பின்னர் 1984 இலே தமிழ்நாடு அத்தகைய ஒரு பேரிடரைச் சந்தித்தது. நடுங்கச் செய்யும் இந்த இயற்கையின் சீற்றத்தை நான் நேரிலே கண்டிருந்தேன். இந்தச் சூறாவளி, தனது வழியில் எதிர்பட்ட அனைத்தையும் வேரோடு சாய்த்திருந்தது. இடுப்பளவு ஆழமான அழுக்கு நீரையும் பரவியிருந்தது. சென்னையிலும் அது வீறோடு சீறியடித்துக் கடந்து சென்றிருந்தது. ஆகவே உறுதியான காப்பகங்கள் தேவை என்பதை நான் புரிந்து கொண்டேன். அனால் அவை அவசரகாலத் தரிப்பிடங்களாக இருக்கவே பொருந்தும். சூறாவளியின் போதும் பெருமழையின்போதும் அவை உதவும். ஆனால் அகதிகளை நிரந்தரமாகத் தங்க வைக்க அவை போதுமானவை அல்ல. அந்தக் கட்டடம் ஒன்றுக்குள் நுழைந்தபோது எனது இதயம் உறைந்து போனது. எங்கும் கூட்டம் கூட்டமாக ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தன. அறைகள் இல்லாத அந்தப் பெருங் கூடத்துக்குள்ளே குறுக்கு மறுக்காக கந்தல்களும் பல வண்ணச் சேலைகளும் கட்டப்பட்டிருந்தன. மனித வாழ்வின் விசித்திரமே இதுதான்! கூட்டாக வாழுமாறு சூழ்நிலை மக்களைப் பொது இடத்தில் தள்ளியபோதும் மக்கள் தங்கள் அடிப்படைச் சமூக அலகை, அதாவது குடும்பத்தை நாடவே முற்படுகிறார்கள். தனிமை காக்க வேண்டும் என்ற பிடிவாதத்தோடு ஒவ்வொரு குடும்பமும், சில அடி நீளம் சில அடி அகலமானதாக இருந்தாலும், தனக்கென ஒரு சிறு பகுதியைப் பிரித்து - முடிச்சுப் போட்ட சேலைகளால் வேலிகளாகவும் மேலிருந்து தொங்கும் சேலைகளால் சுவர்களாகவும் அடைத்து, மற்றவர்களிடமிருந்து தன்னை வேறுபடுத்தியிருந்தது. இந்தத் துணிச் சுவர்களுக்கு உள்ளே ஐந்து, ஆறு, ஏழு, எட்டுப் பேர், இனி முதியவர்கள், புதிதாக திருமணமானவர்கள், பிறந்த குழந்தை இப்படி குடும்பத்தினர் வாழத் துடித்துக் கொண்டிருந்தார்கள். மண்ணெண்ணய் அடுப்பிலிருந்தும் விறகு அடுப்பிலிருந்தும், புகையும் தீச்சுவாலையும் அந்த இடத்தை ஆபத்தான-தாக உடல் நலக்கேடானதாக ஆக்கியிருந்தது. மக்களோடு உரையாடி, இடத்தைச் சுற்றிப் பார்க்க முற்பட்டதும் அங்கே இருப்பவர்களுக்குப் போதுமான உணவு கிடைக்கவில்லை என்று கண்டு கொண்டேன். குழந்தைகள், உப்பிய வயிறோடு, எலும்பும் தோலுமான கை காலோடு, செம்பட்டை பற்றிய கருங்கூந்தலோடு, எங்கும் காணப்பட்டார்கள். ஆதுவே பொது நியதியாக இருந்தது. காரணம் பாலோ, பால் மாவோ அங்கு கிடைப்பது அரிது. பால் இல்லாத தேனீரில் சிறிது சீனி கலந்து,

அல்லது சோறுவடித்த கஞ்சியையே தாய்மார் பாலர்க்கு ஊட்டினார்கள். இருமல், தடிமல், ஒழுகும் நாசி, காய்ச்சல், சொறி, வயிற்றோட்டம் ஆகியவை உடல் நலப் பிரச்சினைகளாக இருந்தன. ஆனால் அங்கே மருந்து இருக்கவில்லை.

இந்த மனித அவலத்தைப் பார்க்கும்போது குற்ற உணர்வும் ஆற்றாமையும் என்னைப் பற்றிக் கொண்டன. நானும் அவர்களோடு ஒருவராக இல்லையே என்ற குற்றவுணர்வு; அவர்களுக்குக் கொடுக்க என்னிடம் எதுவும் இல்லையே என்ற ஆற்றாமை உணர்வு. அதே நேரம் அடக்க உணர்வும் என்னை ஆட்கொண்டது. இந்த உணர்வை, இந்தியாவிலும், இலங்கையிலும் நான் வாழ்ந்த அந்த நீண்ட காலப் பகுதியில், பல தடவை அனுபவித்திருக்கிறேன். இவ்வளவு வறுமைக்கும் துயரத்துக்கும் மத்தியில் கூட, இந்த மக்கள் எப்படித் தமது மனிதத்துவத்தைப் பேணுகிறார்கள் என்பதும், தங்கள் கண்ணியத்தையும் மரியாதை காட்டும் பண்பையும் காப்பாற்றுவதில் எவ்வளவு கருத்தாக இருக்கிறார்கள் என்பதும் என்னை மலைக்க வைத்திருக்கிறது. இந்தத் தடவை, பொருட் தட்டுப்பாட்டையே எங்கும் காண முடிந்தது என்றாலும், தமிழ் விருந்தோம்பலும் தாராள மனப்பான்மையும் அவர்களிடமிருந்து பீரிட்டு வெளியே வந்தன. சீனித் தட்டுப்பாடு நிலவிய போதிலும் தித்திப்பான தேனீரோடு எம்மை உபசரித்தார்கள். யாரோ, அன்று தமது பங்கை எமக்கு மனம் உவந்து கொடை புரிந்து விட்டு, தாம் வயிறு காய்ந்து இருப்பார்.

இந்த மனித அவலத்தை ஒரு கட்டுரை வடிவிலே செய்தித் தாளுக்கு எழுதுவது எனக்கு வெகு இலகுவாக இருந்தது. ஆனால் மனதை உருக வைத்த அந்த அவலக் காட்சிகளை நெஞ்சில் இருந்து நீக்குவது இலகுவாக இருக்கவில்லை. ஏனென்றால், மிக மோசமான நிலையிலேயே அந்த மக்கள் அங்கே வாழ்ந்து கொண்டிருந்தார்கள். பச்சைப் பாலரில் நான் கண்ட நோய் அறிகுறிகள் எனக்கு கவலை அளித்தன. நாம் எந்த மக்களுக்காக போராடுகிறோமோ அவர்களில் இந்த அகதிகளும் ஒரு பகுதியே. ஆகவே இந்தப் பிரச்சினையை ஒதுக்கி விட்டு அப்பால் நகர எனக்கு இயலவில்லை. ஒரு விடுதலை இயக்கமானது, அரசியல் ராணுவ முனைகளில் நின்று போராட்டம் நடத்துவது போல, தான் பிரதிநிதித்துவப்படுத்தும் மக்களின் நலன்கள் மீது அக்கறை எடுக்கவும் கடமைப்பட்டிருக்கின்றது. இயக்கத்தின் செலவுகளை நிர்வகிக்கும் போது நுணுக்கமாகக் கணக்குப் பார்த்துத்தான் பிரபாகரன் அவர்கள் செலவைக் கட்டுப்படுத்தி வைத்திருப்பது எனக்குத் தெரியும். ஆனாலும் எனக்காக 5000 ரூபா சிறு





தொகையை ஒதுக்கித் தர அவர் மறுக்க மாட்டார் என்பதும் எனக்குத் தெரியும். எனவே அவர் எங்களைப் பார்க்க வந்தபோது, பிரச்சினையை அவரிடம் எடுத்துக் கூறினேன். இந்த ஒரு முகாமுக்காவது சில உணவுப் பொருட்களும் மருந்தும் வாங்க நிதி வழங்குமாறு கேட்டேன். அவர் உடனடியாகச் சம்மதித்தார். மட்டக்களப்புச் சிறையிலிருந்து தப்பி வந்த மருத்துவர் ஜெயகுலராஜா, அகதி முகாம்களுக்கு என்னோடு கூடி வந்து நோய்வாய்ப்பட்ட குழந்தைகளைப் பரிசோதிக்க உற்சாகமாக ஒப்புக் கொண்டார். நிதிகள் சேர்ந்தன; நன்கொடைகள் திரண்டன; வேலை பெருகியது. எங்கள் குழு தமிழ்நாடு முழுவதும் உள்ள அகதி முகாம்களைத் தரிசித்தது. இறுதியில் எமது பணியை ஓர் ஒழுங்கமைப்புக்குள் கொண்டு வரத் தீர்மானித்தோம். அந்த அமைப்புக்கான யாப்பை பாலா எழுதினார். எமது பணி, தமிழர் புனர்வாழ்வுக் கழகம் என்ற பெயரில் அறக்கொடை அமைப்பாகப் பதிவாகியது. தமிழ் நாட்டில் உள்ள ஆயிரமாயிரம் இலங்கைத் தமிழ் அகதிகளுக்கு உதவி புரிவதே கழகத்தின் நோக்கம் ஆகியது. மருத்துவர் ஜெயக்குலராஜா கழகத்தின் தீவிர தொண்டர் ஆனார். காலம் செல்ல, நிர்வாகம், திட்டமிடல், திட்ட நடைமுறை ஆகியவற்றின் பொறுப்புகள் மற்றவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. இப்பொழு தமிழர் புனர்வாழ்வுக் கழகம் ஒரு வலுவான அமைப்பாக வளர்ந்து விட்டது. தனித்து இயங்கும் அறக்கொடை அமைப்பாகச் செயற்படுகிறது. இலங்கை வடக்கு-கிழக்கில் தங்கள் தாயகத்திலேயே வீடு வாசல் இழந்து இடம்பெயர்ந்த ஆயிரம் ஆயிரம் தமிழ் மக்களுக்கு பல வகை உதவிகளைப் புரிந்து கொண்டு இருக்கிறது.

இந்தியா பல புதிர்களையும் முரண்பாடுகளையும் கொண்ட நாடு. இந்திய சமூக வாழ்க்கை தொடர்பாக, வெளியாரைத் திகைக்க வைக்கும் மிகவும் புதிரான முரண்பாடு என்னவென்றால், பணக்காரருக்கும் ஏழைகளுக்கும் இடையேயுள்ள பாரிய ஏற்றத்தாழ்வே. இந்தியாவில் இனி இல்லை என்ற பணக்காரர் ஒரு புறம்; படுமோசமான ஏழைகள் மறுபுறம். எதிரும் புதிருமான இந்தப் படுகேடான வேறுபாட்டுக்கு நடுவே பலம் மிக்க நடுத்தர வகுப்புகள். மிக மோசமான வறுமை பற்றிய வர்க்க ஆய்வை நான் இங்கே நடத்த வரவில்லை. இந்தியாவில் ஒப்பற்ற குபேரர் ஒரு புறமும், வறியவரிலும் வறியவர் மறுபுறமும் உள்ள ஒரு பயங்கரச் சூழல் நிலவுகிறது என்பதையே அடித்துக் கூற விரும்புகிறேன். இந்தியாவிலே, தமிழ் அகதிகள், நெருக்கியடித்துக் கொண்டு, மனிதாபி-மானம் மறுக்கப்பட்ட நிலையில் வாழ்வது என்னை வெகுவாகப் பாதித்தது என்பது உண்மையே ஆனாலும் தமிழ் நாட்டின் வறிய

நிலையும் மனதைப் பாதிப்பதே. எனது மனதில் பதிந்த ஒரு சம்பவம், இன்றும் நெருடலாக வருகிறது.

பெசன்ற் நகரில் உள்ள எமது மாடி வீட்டில் இருந்து கொண்டே உலகம் உருள்வதைப் பார்த்துக் கொண்டிருக்கலாம். சமூக அநீதியையும் வறுமையையும் நினைவூட்டும் சம்பவம் ஏதாவது கண்முன்னே நடந்து கொண்டே இருக்கும். ஒரு நாள் மாலை சோம்பலோடு, சிந்தனையில் ஆழ்ந்தபடியே யன்னலருகே நின்று வெளியே பார்த்துக் கொண்டு நின்றேன். தூரத்தில் ஒரு ஒட்டி உலர்ந்த உருவம். நடைபாதையில் தள்ளாடியபடியே நகர்ந்து கொண்டிருந்தது. உருவம் கிட்ட வர, முப்பது வயது மதிக்கக்கூடிய ஒரு இளைஞனை அடையாளம் காண முடிந்தது. வாரப்படாத நீண்ட தலைமுடி. விலா எலும்புகள், ஒட்டிய தோலில் புடைத்துக் கொண்டிருந்தன. மெலிந்த, நீண்ட முடியுடைய தோற்றம், நிழற்படங்களிலும் கோவில்களிலும் பார்க்கும் யேசு கிறிஸ்துவின் சிலையைப் பார்க்கும் ஞாபகத்தை ஏற்படுத்தியது. வீதியில் வழி வழியே நிறுத்தி வைக்கபட்ட பீப்பா போன்ற குப்பைத் தொட்டிகளுக்கு அருகே அவன் அடிக்கடி நிற்பதை உணர்ந்தேன். நல்ல தெளிவாகப் பார்க்க முடிந்தபோது, அந்தக் குப்பைத் தொட்டிகளில் வீசப்பட்ட எச்சில் உணவை அவன் தேடுவதைக் கண்டேன். குப்பைத் தொட்டிகளில் மனிதர் எச்சில் உணவு தேடுவது இந்தியாவில் புதுமை அல்ல. ஆனால் நான் அங்கே பார்த்துக் கொண்டிருக்கும் காட்சி எனது மனதை விட்டு அகலவேயில்லை. அந்த இளைஞன், கடைசியாக எங்கள் மாடிக்கு அருகே உள்ள குப்பைத் தொட்டியை நோக்கி நகர்ந்தான். அதே நேரம் வேறு புறத்திலிருந்து ஒரு பசுவும் மேய்ந்தபடி அங்கே வந்தது. இருவரும் ஒரே நேரத்தில் அந்தக் குப்பைத் தொட்டியை அடைந்தார்கள். அங்கே நாற்றம் எடுத்துக் கொண்டிருக்கும் அழுகலை இருவரும் பகிர்ந்து உண்டார்கள். குப்பைக்குள் இருந்து கிளறி எடுத்த உணவு மீதங்களை அந்த இளைஞன் கடித்துக் கொண்டிருக்க, தொட்டியின் மறுபுறத்தில் அந்தப் பசு தனது வாயில் அகப்பட்டதை மென்று கொண்டிருந்தது. வறுமையின் கொடுமையாக, கையறு நிலையாக, மானிட அவமதிப்பாக, இந்தக் காட்சி எனது மனதை இன்றும் குடைகிறது.

## ஒற்றுமையும் பிரிவும்

சிக்கல்களும் திருப்பங்களும் நிறைந்த தனியான ஆண்டாக 1985 அமைந்தது. தமிழ்ப் போராளி அமைப்புகள். தம்மிடையே உறவு பேணிய





போதிலும் சரி, இந்திய இலங்கை அரசுகளுடன் தொடர்பு கொண்டதிலும் சரி, புதிய அரசியல் ராஜதந்திர சவால்களுக்கு முகம் கொடுக்க நேர்ந்தது. இளையவரான ரஜீவ் காந்தி, இந்தியாவின் பிரதம மந்திரியாக பதவி ஏற்ற பின், ஆட்சி அமைப்பிலே தமக்கு நம்பிக்கையானவர்களையே பதவியில் அமர்த்தினார். அவருடைய தாயாருக்கு விசுவாசமாக இருந்து அவருடன் பல்லாண்டு பணி புரிந்த ஆற்றலும் அனுபவமும் மிக்க சிலரைப் பதவியில் இருந்து அகற்றினார். ஆற்றல் மிக்க தமது ஆலோசகர் சிறீ. பார்த்தசாரதி இருந்த இடத்தில், அனுபவம் அற்றவரும் அவசரக் குடுக்கையுமான றெமேஷ் பண்டாரியை வெளியுறவுச் செயலராக அமர்த்தியதால் புதிய பிரதமர் பெருந்தவறு இழைத்தார். பார்த்தசாரதி, ஒரு அனுபவமும் ஆற்றலும் மிக்க ராஜதந்திரி. இலங்கை இன நெருக்கடி தொடர்பான ஆழமான அறிவும் கொண்டவர். ஜே. ஆர் ஜெயவர்த்தனா அரசின் இனவாதப் போக்கை அவர் வெறுத்தார்; தமிழ் மக்களின் தர்ம நிலைப்பாட்டில் அனுதாபம் கொண்டார். பிரபாகரன் அவர்களும் பாலாவும் புதுடில்லி போகும்போதெல்லாம் அவர்களைத் தமது பிரத்தியேக, சொந்த வீட்டிலே சந்திப்பதில் அவர் எப்போதும் குறியாய் இருந்தார். பார்த்தசாரதி அவர்கள் ஜெயவர்த்தனாவை நம்பவில்லை என்றும் அந்தக் "கிழட்டு நரியின்" ஏமாற்றும் இயல்பு பற்றி ரஜீவை எச்சரித்திருந்தார் என்றும் பாலா என்னிடம் கூறியிருக்கிறார். ஆனால் பார்த்தசாரதி அவர்களுடைய உறுதியான அறிவுரையை ரஜீவ் புறக்கணித்ததும், குறைத்து மதிப்பிட்டதும் இறுதியில் அவரைத் தூக்கி எறிந்ததும் துரதிர்ஷ்டவசமே. புதுடில்லி அதிகார பீடத்தில் இருந்த இரண்டு பலம் மிக்க பெரியார்களான இந்திராகாந்தியும், பார்த்தசாரதியும் போனதால், முன் யோசனை இன்றிச் செயலாற்றுபவரும், அனுபவம் அற்றவருமான ரஜீவை, தனது அரசியல் ஏமாற்று வலையில் வீழ்த்துவது ஜெயவர்த்தனாவுக்கு எளிதாயிற்று. சாணக்கியம் மிக்க ஜெயவர்த்தனா, தந்திரமாக பண்டாரி மூலம் ரஜீவைக் கவர்ந்திழுத்து, தமிழரின் விடுதலைப் போராட்டத்துக்கு எதிராக இந்திய அரசை மாற்றும் தந்திர முயற்சியில் வெற்றி கண்டார்.

ரஜீவ் காந்திக்கும் ஜெயவர்த்தனாவுக்கும் இடையே உருவாகும் இந்த அதர்மக் கூட்டுறவை தமிழ் நாட்டிலே முகாமிட்டிருந்த தமிழ் விடுதலை அமைப்புகள் வியப்போடும் சந்தேகத்தோடும் பார்த்துக் கொண்டிருந்தன. அவர்களுடைய எதிர்காலமே நூலிழையில் ஊசலாடியது. இந்தச் சம்பவங்களை பாலா மிகவும் உன்னிப்பாக கவனித்த வண்ணம் இருந்தார். இந்தியா தனது அதிகார பலத்தைப் பயன்படுத்தி, ஆயுதம் பூண்ட தமிழ் அமைப்புகள் மீது ஆதிக்கம்

செலுத்தப் போகிறது என்று அவர் எதிர்பார்த்தார். அத்துடன் சுய நிர்ணயத்துக்கான போராட்டத்தை அவர்கள் கைவிட்டு, சிறீலங்கா அரசின் ஐக்கிய அமைப்புக்குள் ஓர் அரசியல் இணக்கத்துக்கு வருமாறு அவர்களை இந்தியா நிர்ப்பந்திக்கும் ஒரு சூழல் உருவாகப் போகிறது என்றும் முன்கூட்டியே அவர் அனுமானித்தார்.

இந்திய அரசுடன் முரண்படுவதை எவ்வாறு தவிர்க்கலாம் என்பது பாலாவுக்குத் தலைவலியாக இருந்தது. அதே சமயம் சுய நிர்ணயம், அரசி யல் சுதந்திரம் ஆகிய இலட்சியங்களைக் கொண்ட விடுதலைப் புலிகளின் அரசியல் திட்டத்தை முன்னெடுப்பதிலும் பாலா குறியாக இருந்தார். இந்தியா பிராந்திய வல்லரசு என்பது எமக்குத் தெரியும். இனப் பிரச்சனையின் தீர்வை உறுதிப்படுத்தும் விடயத்தில் அது ஒரு முக்கிய பங்கு வகிக்கும் என்பதும் எமக்குத் தெரியும். இந்த நிலையில் இந்தியாவுடன் உறவு நலிவடைந்தால் அது பேரிடராகவே முடியும் என்பதும் எமக்குத் தெரியும். பிரபாகரன் அவர்களும் பாலாவும் அரசாங்க மூத்த தலைவர்களை, கட்சித் தலைவர்களை, அமைச்சர்களை, புலனாய்வுப் பிரிவுகளின் உயர் அதிகாரிகளை ஓடி ஓடிச் சந்தித்து, தமிழ் மக்களின் சுய நிர்ணய உரிமைக்காக வாதாடிய போதும் பதில் சாதகமாக அமையவில்லை. சிங்கள அரசின் இனப்படுகொலை வடிவான ஒடுக்கு முறைக்கு எதிராகப் போராடும் தமிழ் மக்களின் துயர் நிலை தொடர்பாகச் சில பகுதிகளில் அனுதாபம் நில விய போதும், இந்தியா தனது அண்டை அயலில் பிரிவினை தலைதூக்குவதை எதிர்த்தது. அப்படி எதிர்க்க வேண்டியதற்கான உள்நாட்டு நிர்ப்பந்த நிலைகளும் இருந்தன. இந்தியாவிடம் இருந்து எமக்கு நெருக்குவாரம் வரப்போவது உறுதியாகத் தெரிந்தது. இந்திய அரசுக்கும் தமிழ் விடுதலை இயக்கத்துக்கும் இடையே நலன் முரண்பாடு ஏற்படுவது சாத்தியம் ஆகியது. இந்த நிலையில் தமிழ் அமைப்புகள் ஒன்றிணைந்து ஒரே நிலைப்பாட்டை வலியுறுத்துவது அவசியம் என்று பாலா உணர்ந்தார். இந்தியா, விரைவிலே தனது அரசியல் ராஜதந்திர சவாலை விடுக்கும் போது, விடுதலைப் புலிகளால் அதை அந்த நேரம் தனித்து நின்று எதிர்க்க முடியாது என்று அவர் கருதினார். ரெலோ, ஈ.பி.ஆர்.எல்.எஃப், ஈரோஸ் ஆகியவற்றிடையே ஈழ தேசிய விடுதலை முன்னணி (ஈ.என்.எல்.எஃப்) என்ற கூட்டணி ஒன்று 1984 இல் இருந்து செயற்பட்டு வந்தது. இக் கூட்டணியுடன் விடுதலைப் புலிகளும் சேர்ந்து தமிழ் மக்களின் ஆயுத எதிர்ப்பு இயக்கத்தைப் பலப்படுத்தி, தமிழ் மக்களின் சுயநிர்ணயப் போராட்டத்துக்குப் பெரும் பலம் சேர்க்க வேண்டும் என்று பாலா கருதினார். எல்லாவற்றிற்கும் மேலாக, ஒரு





பொதுவான அரசியல்-ராணுவ கொள்கைத்திட்டத்தின் கீழ் தமிழ் விடுதலை அமைப்புகளின் ஒற்றுமை உருவாக்கப்பட்டால் ரஜீவின் நிர்வாகத்திடமிருந்து அரசியல்-ராஜதந்திரச் சவால் வரும்போது, அந்தப் பொதுத் திட்டம் ஒரு காரிய சாத்தியமான கவசமாக இருக்கும் என்பது பாலாவின் கருத்தாகும்.

ஈழ தேசிய விடுதலை முன்னணியுடன் சேருமாறு, பிரபாகரன் அவர்களை பாலா இறுதியில் ஒருவாறு இணங்கவைத்தார். இந்தக் கூட்டமைப்பின் தலைவர்களுடன் பாலா இது தொடர்பாகக் கலந்துரையாடினார். விடுதலைப் புலிகளைத் தமது கூட்டுக்குள் சேர்ப்பது அவர்களுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. அமைப்புகளிடையேயான இந்த ஐக்கியம், நாள் எடுத்து, படிப்படியாக கட்டியெழுப்பப்படவேண்டும் என்று முடிவாகியது. தொடக்கத்தில், குறித்த சில அரசியல் இலக்குகள் தொடர்பாக நான்கு அமைப்புகளும் இணங்க வேண்டியிருந்தன. இதன் பின்னர் தனியான ஒரே ராணுவ அமைப்பையும், இறுதியாக நிதியையும் ஒரு மத்திய நிர்வாக முறைக்குள் கொண்டுவர முயல்வது என்றாயிற்று. ஐக்கிய முன்னணியை உறுதிப்படுத்துவதற்கான பேச்சுவார்த்தை, ஒரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சந்திப்புக்கு வழி கோலியது. விடுதலைப் புலிகளின் பிரபாகரன், ரெலோவின் சிறீசபாரத்தினம், ஈ.பி.ஆர்.எல்.எஃப் பத்மநாபா, ஈரோஸ் பாலகுமார் ஆகிய தலைவர்களின் சந்திப்பே அது. சென்னையில் ஓர் ஓய்வு விடுதிக் கூடம் ஒன்றிலே 1985 ஏப்ரலில் இந்த இரகசி யச் சந்திப்பு நடந்தது. இச் சந்திப்பின்போது தமிழீழ மக்களின் அரசியல் சுதந்திரத்துக்காகப் போராடுவதென்ற பொதுவான அரசியல் திட்டத்திலும், ஒரு கூட்டுப் பிரகடனத்திலும் நான்கு தலைவர்களும் கைச்சாத்திட்டார்கள்.

அதே சமயம், இந்திய வெளியுறவுச் செயலர் பண்டாரியின் அடுத்தடுத்த கொழும்புப் பயணமும் அவருக்குப் பயனளித்தது. இந்தியாவில் இருந்த தமிழ்ப் போராளி அமைப்புகளுடன் நேரடிப் பேச்சுவார்த்தையில் ஈடுபட சிறீலங்கா அரசுத் தலைவர் ஜெயவர்த்தனா சம்மதித்தார். இதற்குப் பதிலாக, தமிழ்ப் போராளிகளுக்கு ராணுவ உதவி புரிவதை இந்தியா நிறுத்த வேண்டும்; அத்துடன், தனி நாட்டுக்கான அவர்களுடைய கோரிக்கையையும் இந்தியா எதிர்க்க வேண்டும் என்பன பற்றியும் அவர்களிடையே இணக்கப்பாடு ஏற்பட்டது. தமிழ்ப் போராளிக் குழுக்களுக்கு இந்தியா இராணுவப் பயிற்சியையும் ஆயுதங்களையும் வழங்கி வந்தது உண்மையே. ஆனால் அது, நான் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போல, இந்தியாவின் ஆதிக்க ராஜதந்திரக்

கொள்கையின் ஒரு அம்சமேயாகும். ஆயினும், இலங்கைத் தீவில் தனி நாடு தொடர்பாகத் தமிழ் மக்கள் விடுக்கும் கோரிக்கை பற்றி ஜெயவர்த்தனா விதித்த நிபந்தனை தொடர்பாக, இந்தியாவுக்கு எதுவித மறுப்பும் இருக்கவில்லை. பிரிவினைவாதம் மட்டில், இந்தியா என்றுமே அனுதாபம் காட்டியதில்லை. தமிழ்க் குழுக்களுடன் பேச்சுவார்த்தைப் பேரம் பேச ஜெயவர்த்தனாவை பண்டாரி இணங்க வைத்த கையோடு, ஆயுதம் தரித்த விடுதலை அமைப்புக்களை மிரட்டிப் பணிய வைக்க இந்திய அரசு ஆயத்தமானது.

விடுதலைப் புலிகள் ஈழத் தேசிய விடுதலை முன்னணியில் இணைந்து கொண்டதை உடனடுத்து, 1985 ஏப்பிரல்/ மே காலப்பகுதியில் தமிழ் விடுதலை அமைப்புகளுக்கும் சிறீலங்கா அரசுக்குமிடையே போர் ஓய்வு பற்றி ஆராயப்பட்டது. இது 1985 ஜீனில் நடைமுறைப் படுத்தப்பட்டது. இதன் பின் 1985 ஜீலை/ ஓகஸ்டில் பேச்சுவர்த்தைக்கும் திட்டம் இடப்பட்டது. இந்தியாவின் ஆதரவின் கீழ் பூட்டான் தலைநகர் திம்புவில் பேச்சுவார்த்தை நடத்தப்பட்டது. இந்திய அரசின் அனுசரணையுடன் 1985 இல் தமிழ் அரசியல் அமைப்புகளுக்கும் சிறீலங்கா அரசுக்கும் இடையே நடந்த இந்தப் பேச்சுவார்த்தை "திம்புப் பேச்சுவார்த்தை" என்று அழைக்கப்பட்டது.

தமிழ் மக்களின் அரசியல் வரலாற்றிலே ஒரு முக்கிய நிகழ்வாகத் திம்புப் பேச்சுவார்த்தை அமைந்தது. முதற் தடவையாக ஆயுதம் தரித்த தமிழ் விடுதலை அமைப்புகளும், மிதவாத அரசியல் கட்சியான தமிழர் விடுதலைக் கூட்டணியும் தமிழ்த் தேசியப் பிரச்சினையின் அடிப்படைகள் அங்கீகரிக்கப்படவேண்டும் என்று, கூட்டாகவும் ஏகமனதாகவும் கேட்கத் தீர்மானித்தன. தமிழ் மக்கள் அனைவரும் ஏகோபித்த குரலாக முன்வைத்த சுயநிர்ணய உரிமைக் கோரிக்கையைத் தங்கள் தேசியப் பிரச்சனையின் அடி ஆதாரக் கோரிக்கையாக முன்வைப்பது என்றும் தீர்மானிக்கப்பட்டது. அரசியல் தீர்வுக்கான அந்த உரிமையின் அடிப்படையில், இனப்பிரச்சினையின் அடி நாதமாக நான்கு கோட்பாடுகளைத் தமிழ்ப் பிரதிநிதிகள் முன்வைத்தார்கள்;-

1. தமிழ் மக்கள் தம்மை ஒரு தேசிய இனமாக வரித்துக் கொள்கிறார்கள்
2. தமிழ் மக்களுக்கு வரலாற்று ரீதியாக அடையாளம் காட்டக்கூடிய ஒரு தாயகம் உண்டு; அதன் மீது அவர்களுக்கு பிரத்தியேக உரிமை உண்டு





3. தமிழ் மக்கள் தனித்துவமான தேசிய இனம் என்ற வகையில் அவர்களுக்கு சுயநிர்ணய உரிமை உண்டு
4. தமிழ் மக்களுக்கு அனைத்து அடிப்படை மனித உரிமைகளும் குடியியல் உரிமைகளும் உண்டு

இந்தக் கோட்பாடுகள் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்றும் தமிழ்ப் பிரதிநிதிகள் வாதிட்டார்கள். அத்துடன் தமிழ்த் தேசிய பிரச்சனைக்கான அர்த்தமுள்ள நிரந்தரத் தீர்வானது இந்த அடிப்படைகள் மீது வகுக்கப்பட்டதாக வேண்டும் என்று சிறீலங்கா அரசுக்குத் தெளிவா-கத் தெரிவித்தார்கள்.

திம்புவில், சிறீலங்கா அணிக்குத் தலைமை தாங்கியவர் ஒரு மூத்த அரசியல்வாதியல்லர். அரசுத் தலைவர் ஜுனியஸ் ஜெயவர்த்தனாவின் சகோதரரும் சட்டத்தரணியுமான ஹெக்ரர் ஜெயவர்த்தனாவே தலைமை தாங்கினார். தமிழரின் அணியினால் முன்வைக்கப்பட்ட பிரதான கோட்பாடுகளை ஏற்றுக் கொள்ள ஹெக்ரர் ஜெயவர்த்தனா மறுத்தார். தமிழ் மக்கள் ஒரு தேசிய இனம் என்பதையோ, அவர்களுக்கெனத் தனியான பாரம்பரியத் தாயகம் உண்டு என்பதையோ, சுய நிர்ணய உரிமைக்கு அவர்கள் உரித்தானவர்கள் என்பதையோ ஏற்றுக் கொள்ள முடியாதவை என்று அவர் நிராகரித்தார். தமிழ் அணி முன்வைத்த கோட்பாடுகள் சிறீலங்காவின் ஐக்கியத்தையும் இறையாண்மையையும் நிராகரிப்பதால், அவற்றைச் சிறிதேனும் ஏற்க முடியாது என்று அவர் வாதிட்டார். சிறீலங்கா அரசும் சரி, தமிழ் அரசியல் அமைப்புகளும் சரி, தங்கள் தங்கள் நிலையிலே விடாப்பிடியாக நின்று விட்டுக் கொடாது உறுதியாக நின்றதால் பேச்சுவார்த்தை முடக்கம் அடைந்தது. நடுவராக நின்ற பண்டாரிக்கு, பேச்சுவார்த்தை நடத்தும் திறனோ ராஜதந்திர மதியூகமோ இல்லாததால், அவரால் இணக்கம் ஒன்றைக் கொண்டுவர முடியவில்லை. மாறாக அவையடக்கமற்ற குறிப்புகளை அவர் வெளியிட்டு, ரெலோவின் பிரதிநிதியாகத் திம்புப் பேச்சுவார்த்தையில் கலந்து கொண்ட நடேசன் சத்தியேந்திரா அவர்களிடம் செம்மையாக வாங்கிக் கட்டிக் கொண்டார்.

திம்புப் பேச்சுவார்த்தையில் புலிகளின் பிரதிநிதிகளாகக் கலந்து கொண்ட திலகருடனும் அன்ரனுடனும் தொலைபேசி மூலம் பாலா அடிக்கடி தொடர்பு வைத்துக் கொண்டார். பூட்டான் தலைநகருக்கும் சென்னைக்கும் இடையே நேரடித் தொலைத் தொடர்பு ஏற்படுத்தப்பட்டிருந்தது. தமிழ் நாட்டில் உள்ள ஈழத் தேசிய விடுதலை

முன்னணி (ஈ.என்.எல்.எஃப்) தலைவர்கள் திம்புவில் உள்ள தங்கள் பிரதிநிதிகளுடன் உடனுக்குடன் தொடர்பு கொள்ள இது வாய்ப்பாக இருந்தது. இந்தியப் புலனாய்வாளர்கள் ஒட்டுக் கேட்பதற்கு இந்த நேரடித் தொலைபேசி பெரும் வாய்ப்பாக அமைந்தது. இந்த வாய்ப்பு பாலாவுக்குக் கிடைத்தமை எமக்குக் கெடுதியாகவே முடிந்தது. தமிழ் நாட்டில் உள்ள ஈ.என்.எல்.எஃப் தலைவர்களுக்கும் திம்புவில் உள்ள அவர்களுடைய பிரதிநிதிகளுக்கும் இடையே என்ன உரையாடல் நடக்கிறது என்பதை அறிய இந்திய வெளியுறவுப் புலனாய்வுப் பிரிவான 'றோ' மிக ஆர்வமாக இருக்கும் என்பது பாலாவுக்குத் தெரியும். ஆகவே ஈ.என்.எல்.எஃப் தலைமைப்பீடத்தின் முடிவுகள் மற்றும் நகர்வுகள் தொடர்பான பின்னணிச் சிந்தனைகள் என்ன என்பதைத் தவிர்த்து, வெறும் செய்திகளை மட்டுமே பாலா அறிவித்துக் கொண்டிருந்தார். திம்புப் பேச்சுவார்த்தை முறிவு அடையும் கட்டத்தை எய்திக் கொண்டிருந்தபோது, 1985 ஒகஸ்ட் 17ம் நாளன்று வடபுல நகரமான வவுனியாவில் பயங்கரப் படுகொலை ஒன்று நடந்தது. வெறிகொண்ட ராணுவத்தினர் தமிழ்ப் பொதுமக்கள் பலரை வெட்டிச் சரித்தார்கள். இது போர் நிறுத்த ஒப்பந்தத்தை முற்றிலும் மீறுவதாக அமைந்தது. திம்புப் பேச்சுவார்த்தை நடைபெறுவதற்கு, போர் நிறுத்த ஒப்பந்தம் ஒரு முக்கிய நிபந்தனையாக இருந்தது. பிரபாகரன் அவர்கள் சீற்றம் கொண்டார்; கடும் நடவடிக்கையினை எடுக்க வேண்டும் என்று கேட்டார். இச் சம்பவத்திற்கு ஆட்சேபம் தெரிவித்து திம்புப் பேச்சுவார்த்தையிலிருந்து வெளியேறுமாறு இயக்க பிரதிநிதிகளுக்கு அறிவிப்பதென பிரபாகரன் அவர்களும் ஈ.என்.எல்.எஃப் இன் ஏனைய தலைவர்களும் கூட்டாக முடிவெடுத்தார்கள். நேரடித் தொலைபேசி மூலமாக இந்தச் செய்தியை ஈ.என்.எல்.எஃப் பிரதிநிதிகளுக்கு அறிவிக்குமாறு பாலா கேட்கப்பட்டார். பாலாவும் அப்படியே செய்தார். ஆறு தமிழ் அரசியல் அமைப்புகளின் பிரதிநிதிகளும் திம்புப் பேச்சுவார்த்தையில் இருந்து கூட்டாக வெளியேறினார்கள். இதன் விளைவாக பேச்சுவார்த்தை முறிவடைந்தது. புது டில்லி சீற்றம் அடைந்தது. திம்புப் பேச்சுவார்த்தை முறிவடைய விடுதலைப் புலிகளின் ஆலோசகரே காரணர் என்று 'றோ' முடிவு கட்டியது.

## பாலா நாடுகடத்தப்பட்டார்

எமது பயிற்சிப் பாசறைகள் பல தமிழ் நாட்டிலே நன்கு நிறுவப்பட்டு இருந்தன. இந்தியா எம் மட்டில் கடுமையாக நடக்கத்





தீர்மானித்து, தமிழ் நாட்டில் நாம் இருப்பதையே எமக்கு எதிராகப் பயன்படுத்தி அரசியல், ராஜதந்திர நெருக்குவாரத்தை பிரயோகிக்க முற்பட்டால் அது எம்மைப் பெரிதும் பாதிக்கும் என்பதை நாம் உணர்ந்திருந்தோம். ஒரு புறம் றொமேஷ் பண்டாரி கொழும்பை மிரட்டி, தமிழ்ப் போராளிகளுக்கு மேலும் உதவி வழங்கப் போவதாகக் கூறிக் கொண்டிருக்க, மறுபுறம், பயிற்சிப் பாசறைகளைக் கலைத்து, தமிழ் நாட்டிலிருந்து வெளியேற்றப் போவதாக மிரட்டி போராளிக் குழுக்களைக் கொழும்புடன் பேச இசையுமாறு புதுடில்லி அவர்களை நிர்பந்தித்துக் கொண்டிருந்தது. திம்புப் பேச்சுவார்த்தைக்கு முன்னரே இப்படியான நிலை ஏற்படலாம் என்று விடுதலைப் புலிகளிடமும் புது டில்லியில் இருந்த ஏனைய போராளி அமைப்புகளிடமும் மூத்த இந்திய அதிகாரிகள் கூறியிருந்தார்கள். திம்புப் பேச்சுவார்த்தையில் இருந்து நாம் வெளியேறி, பேச்சுவர்த்தையே பொசுக்கென்று முறிந்து விட்டதால், இந்தியாவின் அதிருப்தியை நாம் சம்பாதித்து விட்டோம் என்று நாம் உணர்ந்திருந்தோம். திம்புப் பேச்சுவார்த்தை முறிவு, புதுடில்லிக்கும் தமிழ் போராளி அமைப்புக்களுக்கும் இடையே பிளவை ஏற்படுத்தி இருந்தது. தனது மத்தியஸ்த்தப் பங்களிப்பு, சூழ்ச்சியால் தகர்க்கப்பட்டதாக இந்தியா கருதியது. தெற்கு ஆசியாவிலே தனது வல்லரசு அந்தஸ்திற்கு தமிழ் ஆயுதக் குழுக்களே அவமானம் ஏற்படுத்துவதாகவும் இந்தியா கருதியது. ஏதாவது தண்ட நடவடிக்கை மூலம் தனது அதிருப்தியை இந்தியா வெளிப்படுத்தும் என்று நாம் எதிர்பார்த்தோம். என்ன நடக்கும் என்பது பற்றி, பேச்சுவார்த்தைக்கு முன்னதாகவே நானும் பாலாவும் பேசியிருந்தோம். பேச்சுவார்த்தை முறிவடைந்த பின், என்ன நடக்கப் போகிறதோ என்று சிந்தித்துக் கொண்டிருந்தோம். அது தவிர, ஈ.என்.எல்.எஃப் தலைமையிடம் இருந்து திம்புப் பிரதிநிதிகளுக்குச் செய்திகளையும் அறிவுரைகளையும், அவர்களுடைய அனுசரணையின்படி பாலா அனுப்பிக் கொண்டிருந்ததை 'றோ' தவறாகப் புரிந்து கொண்டிருந்தது என்பது எமக்குத் தெரியும். இதன் பலன் விரைவிலே தெரிந்தது.

இந்திய அரசு எம்மை நாடு கடத்தக் கூடும் என்பதை அன்று மதிய உணவின்போது விவாதித்திருந்தோம். அன்று வெயில் அகோரம். பாலா ஒரு குட்டித் தூக்கம் போட்டு எழுந்தார். முகம் கழுவி, உடுத்திக் கொண்டு அலுவலகம் போகத் தயாராகிக் கொண்டிருந்தபோது, எமது மாடிக்கு முன்னே நிறைய காவற்துறை ஜீப் வண்டிகள் வந்து நின்றன. காக்கிச் சீருடை தரித்த காவற்துறையினர் வெளியே குதித்து, அந்தப் பகுதியை சுற்றி வளைத்தபதுபோல, வேறு வேறு நிலைகளில்

நின்றார்கள். காவல் அதிகாரிகள் அணி ஒன்று படி ஏறி வந்து கதவைத் தட்டியது. ஓர் இக்கட்டான அல்லது அசௌகரியமான சந்தர்ப்பத்தில், ஓர் இசகு பிசகான செய்தியைத் தெரிவிக்க, ஒரு பொருத்தமான ஆளைத் தெரிவு செய்து அனுப்புவது ஒரு பொது மரபு. ஆகவே இதற்காக ஜம்போ குமார் அவர்கள் தேர்ந்தெடுத்து அனுப்பப்பட்டிருந்தார். பாலாவின் நண்பர் இவர். தமிழ் நாடு, புலனாய்வுப் பிரிவைச் சேர்ந்தவர்; 1983 இல் சென்னைக்கு நாம் வந்ததில் இருந்து, எம்மோடு பழக்கம். இந்திய அரசின் கடுமையான ஒரு நடவடிக்கையை நோகாது புரிவதற்காக, ஒரு காவற்துறை அணியோடு அவர் அனுப்பப்பட்டிருந்தார். பாலாவுக்கு எதிராக நாடு கடத்தல் கட்டளை பிறப்பிக்கப் பட்டிருப்பதாக மிகவும் வருத்தத்துடனும் மரியாதையுடனும் அவர் எடுத்துக் கூறியது, கட்டளை-யின் குரூரத்தைக் குறைத்தது. பாலாவும் நானும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம். வருவது வரட்டும் என்பதுபோல பதட்டம் எதுவுமின்றி, காவல் அதிகாரிகளுடன் பாலா வெளியே சென்றார். லண்டனுக்குச் செல்லும் அடுத்த விமானம் வரும் வரைக்கும் காவல்துறைக் காவலில் இருக்க அவர் புறப்பட்டுச் சென்றார்.

துரிதமாகவும் தீர்க்கமாகவும் பாலாவின் கைது இடம் பெற்றது. திடீரென எமது மாடிக்குக் காவல் துறைப் பிரிவு வந்தது; அவரைக் கதவுக்கு வெளியே அழைத்துச் சென்றது. மறுகணம் அவர் சென்றுவிட்டார். ஆனால் எனது நிலை என்ன என்பது அரச கட்டளையில் கூறப்படவில்லை. ஆகவே, நாடு கடத்தல் கட்டளையில் நான் இல்லை என்று புரிந்து கொண்டேன். உடனடியாக ஒரு முச்சக்கர வண்டியில் ஏறி, பிரபாகரன் அவர்களுக்கும் ஏனைய போராளிகளுக்கும் அறிவிப்பதற்காக அரசியல் பணிமனைக்கு விரைந்தேன். பயிற்சி முகாம்களில் இருந்த பிரபாகரன் அவர்கள் உடனே தலைமறைவானார். தண்டனை நடவடிக்கை அவருக்கு எதிராகவும் எடுக்கப்படலாம் என்று நாம் எதிர்பார்த்ததே அதற்குக் காரணம்.

பாலாவைப் பற்றிய செய்திக்காகவும் அவர் நாடுகடத்தப்படும் நேரத்தை அறியவும் அடையாறில் உள்ள அரசியல் பணிமனையில் காத்திருந்தேன். ஒழுங்கான சட்ட முறையைக் காவற்துறை கடைப்பிடிக்கும் என்றும், அவர் எங்கே வைக்கப்பட்டிருக்கிறார் என்பது போன்ற விபரங்களை வழங்கும் என்றும் நான் பைத்தியக்காரத்தனமாக நம்பிக் காத்து நின்றேன். இருளத் தொடங்க எனது மனக்கலவரம் அதி-கரித்தது. அவர் எங்கே என்று அறிவிக்கப்படாததால், பயங்கரக் கற்பனைகளும் மனதில் தோன்றின. ஒரு விபத்து நடக்கவில்லை என்றோ, அவர் கொல்லப்படவில்லை என்றோ எப்படி நம்புவது?





ஏனென்றால் நாம் சம்பந்தப்பட்ட அரசியல் அத்தகையது. எனது நல்ல காலம், பாலாவிடம் அரசியல் பாடம் படித்த போராளிகள் சிலர் அரசியல் பணிமனையில் பணிபுரிந்து கொண்டிருந்தார்கள். எனக்கு உதவ அவர்கள் தயாராக இருந்தார்கள். நம்பிக்கையான, விசுவாசமான நண்பர்கள் என்பதையும் நிரூபித்தார்கள். எம்மை எமது வீட்டில் இருந்து அரசியல் பணிமனைக்கு ஒவ்வொரு நாளும் கூட்டிச் செல்லும் குரு என்ற போராளியை வழியில் கண்டேன். அவரையும் கூட்டிக் கொண்டு மரீனா கடற்கரைக்கு முன்பாக உள்ள புலனாய்வுக் காவல் துறை ('கியூ' பிரிவுத்) தலைமைப் பணிமனைக்கு விரைந்தேன். அங்கே போய்ச் சேர்ந்தபோது இருட்டிவிட்டது. எனது உள்மனமும் இருட்டாகவே இருந்தது. மற்றவர்களுடைய தொடர்பு துண்டிக்கப்பட்டு, தனியாக வைக்கப்பட்டிருந்த பாலாவை எப்படி நடத்தினார்களோ என்பது ஒரு கவலை. அதைவிட, வீட்டில் இருந்து போகும் போது அவர் இன்சுலின் மருந்து கொண்டு போகவில்லையே என்பது இன்னொரு கவலை. காவற்துறைப் புலனாய்வுத் திணைக்களத்தைச் சென்றடைந்த போது, கொதியுடன் போனேன். பாலா எங்கே என்று அறிய வேண்டும்; அவரைப் பார்க்க அனுமதி பெற வேண்டும். இனி, அவர் மட்டில் அவர்களுடைய திட்டம் என்ன என்பதை அறிந்தே தீர்வது என்று உறுதியும் பூண்டிருந்தேன். காவல் அதிகாரிகளுடன் முதற்தடவையாக நேர் நேராக மோதுவதற்காக, இப்போது தான் போய்க் கொண்டிருந்தேன். எனக்குள்ளே ஒரே கொதி. பாலாவை அவர்கள் கடத்திக் கொண்டு போய், தொடர்பு கொள்ள விடாது அவரை ஒளித்து வைத்திருப்பது ஓர் அத்துமீறலாகப் பட்டது. சட்டக் கடமையில் இருந்து அவர்கள் தவறி விட்டார்கள் என்ற உணர்வே எனக்குள் பொங்கி நின்றது. ஒரு மனோதர்ம ஒழுக்க பலத்தை அது எனக்குத் தந்தது. பாலாவைப் பற்றி நான் முதலில் விசாரிக்கத் தொடங்கியபோது, பதிலாக மௌனமே எனக்குக் கிடைத்தது. நான் யாரைப் பற்றிப் பேசுகின்றேன் என்பது காவற்துறை அதிகாரிகளுக்கு நன்கு தெரியும். ஆனாலும் பாலாவைப் பற்றி நான் விசாரித்ததும், என்ன நடந்தது என்றோ அவர் எங்கே என்றோ தமக்கு எதுவும் தெரியாது என்றே எல்லோரும் சாதித்தார்கள். அவரிடம் கேள், இவரிடம் கேள் என்று தட்டிக் கழித்த வண்ணம் அலைத்தார்கள். என்னுடைய நல்ல காலம், தமிழ்நாடு காவற்துறையின் புலனாய்வுப் பிரி வின் தலைவரை எனக்குத் தெரியும். முதலமைச்சர் எம்.ஜீ இராமச்சந்திரன் அவர்களுக்காக அவர் அரசை எவ்வாறு நடத்திக் கொண்டிருந்தார் என்பதும் எனக்குத் தெரியும். ஆகவே எமக்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பது அவருக்கு நிச்சயம் தெரிந்திருக்க

வேண்டும். எனவே, எனக்குத் தெரிந்த ஓர் காவற்துறை அதிகாரியை அங்கே கண்டதும், அவரை மடக்கினேன். மேல்மாடி அலுவலகத்தில் இருக்கும் பெரியவரிடம் சென்று பாலாவுக்கு ஏதாவது இசகு பிசகாக நடந்தால் அவரையே பொறுப்பாளியாக நான் குற்றம் சுமத்துவேன் என்றும், இது தொடர்பாக, செய்தியாளர் மாநாடு ஒன்றைக் கூட்ட எண்ணியிருக்கிறேன் என்றும் அவரிடம் தெரிவிக்குமாறு, நிர்தாட்சண்யமாகக் கூறினேன். எனது மிரட்டல் எப்படியாவது தனது வேலையைச் செய்யும் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. நான் கூறிய ஏதோ ஒன்று அவர்களை மிரள வைத்திருக்க வேண்டும். மேலே சென்ற அந்த அதிகாரி, தமது உயர் அதிகாரிகளுடன் கலந்தாலோசித்து விட்டு, கீழே வந்தார். காவற்துறைக் காவலிலே பாலா இருப்பதாகக் கூறினார். ஆயினும் அவரை விடுதலை செய்ய முடியாது என்றார்; பாலாவுக்கு நான் இன்சுலின் கொண்டு போகலாம் என்றும், அவ்வாறு செல்லும் பட்சத்தில் பாலா வெளியேற்றப்படும் வரை நானும் காவலில் இருக்க வேண்டும் என்றும் அவர் நிபந்தனை விதித்தார். இதற்கு நான் உடனே இணங்கினேன்.

இந்தச் சம்பவத்தில் இருந்து ஒன்றை மனப்பூர்வமாக உணர்ந்தேன். காவல் நிலையங்களில் அல்லது ராணுவ முகாம்களில் காணாமற் போகும் உறவுகளைத் தேடி அங்கே போகின்றவர்களுக்கு எங்கே திரும்பினாலும் மௌனமே விடையாக எதிர்கொள்ளும் போது, பெருந் தொகையான அந்த சாதாரண மக்கள் படும் துயரம், அச்சம், ஆற்றாமை ஆகியவை எவ்வளவு ஆழமானவை என்பதை எனது அன்றைய அனுபவத்தின் அடிப்படையில் புரிந்து கொண்டுள்ளேன். சிறீலங்காவில் இத்தகைய சம்பவங்கள் எத்தனையோ இடம் பெற்றிருக்கின்றன அல்லவா?

தயாராக நின்ற காவற்துறைச் சிற்றுந்து ஒன்றினுள் உடனடியாகத் தாவினேன். அது எமது வீட்டுக்குச் சென்றது. பாலாவின் இன்சுலினையும் ஒன்றிரண்டு துணிமணிகளையும் நான் திரட்டியதும், பாலா காவலில் இடப்பட்டிருந்த இடத்துக்கு என்னைக் கொண்டு போனார்கள். அவருடைய சிறைக் கூண்டு என்று நான் நினைத்திருந்தது ஒரு புதிய இரண்டடுக்கு மாடியில் ஓர் அறையாகும். எனக்கு இது வியப்பாக இருந்தது. சென்னைப் புற நகரில் ஒதுக்குப் புறமாக அந்த வீடு இருந்தது. சிறை இல்லாத சாதாரண வீடு ஒன்றிலே அவரை ஏன் சிறை வைத்திருக்க வேண்டும் என்பது அப்போது எனக்குப் புதிராக இருந்தது. ஆனால், சட்டத்துக்குப் புறம்பான விசாரணைக்காக, அனாமதேய வீடுகளை, புலனாய்வு, மற்றும் காவற்துறையினர் அடிக்கடி





பயன்படுத்துகிறார்கள் என்பதை அனுபவம் எனக்குக் கற்பித்திருக்கிறது. வீட்டை நாம் நெருங்கும் போது, அந்தக் கட்டடத்தையும் அந்தப் பகுதியையும் நூற்றுக் கணக்கான காவலர்கள் காவல் புரிவது எனக்கு மலைப்பாக இருந்தது. வீட்டுக்கு உள்ளே கூட, எங்கே பார்த்தாலும் காவற்துறையினர். மேல்மாடி அறை ஒன்றிலே பாலா தனியாக இருந்தார். அவர் கவலையுடனோ மனச் சஞ்சலத்துடனோ அங்கு காணப்படவில்லை. என்னைக் கண்டதில் அவருக்கு மகிழ்ச்சி. ஆனால் தம்மிடம் இன்சுலின் இல்லையே என்ற கவலை மட்டுமே இருந்தது. அவர் சிறிது கூடத் துன்புறுத்தப்படவில்லை. உண்மையில் நிலைமை நேர்மாறாக இருந்தது. அவருடைய நண்பரான காவல்துறை அதிகாரி ஜம்போ குமார், அவரை மிகவும் நன்றாகக் கவனித்துக் கொண்டிருந்தார். விடுதலைப் புலிகள் வீட்டை முற்றுகையிட்டு பாலாவை மீட்டுக் கொண்டு போய்விடுவார்களோ என்ற அச்சத்தில் பாதுகாப்பு நடவடிக்கையாகவே பலத்த பாதுகாப்பு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருப்பதாக, பேசும் போது அவர் கூறினார்.

லண்டன் செல்லும் அடுத்த முதல் விமானம் மறுநாள் மாலையிலேயே புறப்படும் என்று கூறினார்கள். எனவே, நாமும் தொடர்ந்து காவலில் இருந்தோம். பாலா புறப்படுவதற்கு சில மணிநேரம் முன்னதாக மீண்டும் என்னை எமது வீட்டுக்கு கொண்டு சென்றார்கள். பாலாவுடைய கடவுச் சீட்டையும் ஒன்றிரண்டு துணிமணிகளையும் எடுத்தேன். நான் விரும்பினால், நானும் பாலாவுடன் லண்டன் போகலாம் என்றார்கள். ஆனால் நான் மறுத்து விட்டேன். தமிழ் நாட்டையோ போராட்டத்தையோ விட்டுச் செல்ல நான் விரும்பவில்லை. என்மீது நாடு கடத்தல் கட்டளை எதுவும் இல்லை. ஆகவே போகப் போவதில்லை என்று நான் தீர்மானித்தேன்.

திம்புப் பேச்சுவார்த்தை முறிவடைந்தது தொடர்பாக இந்தியாவின் அதிருப்தி வெளிப்பாடாகவே பாலாவின் நாடுகடத்தல் கட்டளை அமைந்திருப்பதாக நான் உணர்ந்தேன். பேச்சுவார்த்தை மூலமான இணக்கத்தை ஏற்படுத்த ரஜீவ் நிர்வாகம் உண்மையாக விரும்பினால், பாலா திருப்பி அழைக்கப்படுவார் என்றும் நான் கருதினேன். இந்தியாவில் நான் தங்க வேண்டும் என்றே பாலா விரும்பினார். இரண்டு வார காலத்தில் தான் இந்தியா திரும்பி விடுவேன் என்றும் நம்பிக்கையோடு கூறினார். விமான நிலையத்துக்கு புறப்படுவதற்கு சற்று முன்பாகத் தம்மை விடுதலைப் புலிகளின் அரசியல் பணிமனைக்கு கொண்டு செல்லுமாறு காவற்துறை அதிகாரி குமாரிடம் பாலா வேண்டுகோள் விடுத்தார். தலைமறைவாகிவிட்ட பிரபாகரன் அவர்களுக்கு ஓர் அவசர செய்தி

அனுப்ப வேண்டும் என்று பாலா தெரிவித்தார். அரசியல் பணிமனையிலே, காவற்துறையினர் கட்டடத்தைக் காவல் காத்து நிற்க, விடுதலைப் புலிப் போராளிகளோடு பாலா ஒரு அவசரக் கூட்டம் நடத்தினார். தமது நாடு கடத்தலின் பின்னணியில் உள்ள காரணங்களை அவர் கவலையோடு நின்ற போராளிகளுக்கு விளக்கி, அரசு தம்மைத் திருப்பி அழைக்க வேண்டும் என்ற பரப்புரையை முடுக்கி விடுமாறு அவர்களைக் கேட்டுக் கொண்டார். ஒரு ரகசிய வழி மூலம் பிரபாகரனுக்கு செய்தி அனுப்பினார். அதன் பின்னர் விமான நிலையம் புறப்பட்டோம். காவற்துறை வாகனங்களும் விடுதலைப் புலி வாகனங்களும் பின்னே தொடர்ந்து வந்தன.

மறுநாள் காலை, அநேகமாக அனைத்து இந்தியத் தேசியச் செய்தித் தாள்களும் - தமிழ் மற்றும் ஆங்கிலப் பதிப்புகள் - பாலா நாடு கடத்தப்பட்டதையே பெரிதுபடுத்தியிருந்தன. செய்தித் தாள் அறிக்கைகள் விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாக இருந்தன. சில ஆசிரியத் தலையங்கங்கள், அவசர, மூடத்தன நடவடிக்கைக்காக ரஜீவ் நிர்வாகத்தை கண்டித்திருந்தன. இந்தியாவிலிருந்து பாலா நாடு கடத்தப்பட்ட உடனடியாகவே தமிழ் நாட்டு அரசியல் கட்சிகள் அதைப் பெரிதுபடுத்தியிருந்தன; பாலா நாடு கடத்தப்பட்டிருந்ததைக் கண்டித்தன. அவர் திரும்பி வர வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டன.

திம்புப் பேச்சுவார்த்தை முறிவு, பாலாவின் நாடுகடத்தல், பிரபாகரனின் தலைமறைவு ஆகியவை சிறீலங்காவுடனான எதிர்காலப் பேச்சுவார்த்தைக்கு முற்றுப் புள்ளி வைத்தன. இந்த நிலையை இந்தியா எதிர்பார்க்கவில்லை. இந்தியாவுக்கு பாலா திரும்பினாலன்றி நிலைமை சுமூகமாகாது என்பது தெளிவாகியது. இந்தியாவுடனோ, சிறீலங்காவுடனோ பேச்சுவார்த்தை மீளத் தொடக்கப்பட வேண்டும் என்றால், பாலா இந்தியாவுக்குத் திரும்பி வந்தாக வேண்டும் என்று பிரபாகரன் அவர்களும் ஈ.என்.எல்.எஃப் இன் ஏனைய தலைவர்களும் நிபந்தனை விதித்தார்கள். இதையடுத்து, பாலா இந்தியாவுக்கு விரைவிலேயே திரும்பி விடுவார் என்று இந்தியப் புலனாய்வுப் பிரிவினர் எனக்கு நம்பிக்கையூட்டும் செய்திகள் அனுப்பினர். இறுதியில், லண்டனில் உள்ள இந்திய தூதரகம் புதுடில்லி செல்வதற்கு அவருக்கு வீசாவும் விமானச் சீட்டும் வழங்கியது. அதே சமயம் நான் புதுடில்லி போய் பாலாவைச் சந்திக்க இந்திய அதிகாரிகள் ஏற்பாடு செய்தார்கள்.

பாலா திரும்பி வந்தபோதிலும், இந்தியாவுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையே உறவு தொடர்ந்தும் நலிவடைந்தது. இந்தியாவின் உள்நோக்கம் மட்டில் ஆழமான அவநம்பிக்கை பிறந்தது. இந்தியா





தன்னை ஒரு பிராந்திய வல்லரசு என்று வரித்துக் கொண்டு, தனது கேந்திர, தேசிய நலன்களுக்கு விடுதலைப் புலிகள் வளைந்து கொடுக்க வேண்டும் என்ற முனைப்பில் புலிகளை அடிபணியச் செய்ய முயன்றது. இருந்தபோதும், இந்தியாவின் இந்த உள்நோக்கங்களை நன்கு புரிந்து கொண்டு, விடுதலைப் புலிகள் தங்கள் நடவடிக்கைகளை இந்தியாவில் தொடர்ந்தார்கள். சிறீலங்காவும் தனது கடும்போக்கைத் தொடர்ந்து கடைப்பிடித்தது. இனப் போராட்டத்துக்குப் பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காணப்பட வேண்டும் என்ற இந்தியாவின் அபிலாசையை ஆதரிப்பது போல, ஜெயவர்த்தனா ஒருபுறம் பாசாங்கு பண்ணினார். மறுபுறம், தமிழ்த் தாயகத்திலே பாரிய ராணுவத் தாக்குதல் நடவடிக்கைகளை மேற்கொள்வதற்காக, சிறீலங்காவின் ராணுவக் கட்டமைப்பைப் படிப்படியாக அவர் பலப்படுத்தினார். அதே சமயம், சிறீலங்கா அரச அமைச்சர் ஒருவர் இரகசியமாகத் திட்டமிட்ட ஒரு கொலைச் சூழ்ச்சி பற்றி நாம் எதுவுமே அறியாதிருந்தோம். பாலசிங்கத்தைப் படுகொலை செய்வதே அந்தச் சூழ்ச்சித் திட்டம். பாலாவின் நாடுகடத்தல் கட்டளை இரத்துச் செய்யப்பட்ட மூன்று மாத காலத்தின் பின், 1985 டிசம்பர் 23 இல், பாலாவின் உயிரைப் பறிக்கும் முயற்சி நடைபெற்றது. விபரீத சம்பவங்கள் நிறைந்த ஆண்டின் உச்சமாக இது அமைந்தது. நாம் எதிர்கொள்ளும் குரூர சக்திகள், தங்கள் ஆற்றா நிலையிலே எத்தகைய கீழ்த்தரத் தன்மையுடன் நடந்து கொள்கின்றன என்பது பற்றி எமக்குப் பாடம் புகட்டுவதாகவும் இந்தப் படுகொலை முயற்சி அமைந்தது.

**படுகொலை முயற்சி**

ஒடுக்குமுறை அரசு ஒன்று, விடுதலைப் போராட்டத்தை நசுக்கிவிடும் கைங்கரியமாக, தன்னை எதிர்க்கும் விடுதலை இயக்கத் தலைவர்களைப் படுகொலை செய்வது, பொதுவான வழிமுறையாகும். கிளர்ச்சியை முறியடிக்கும் ஒரு தந்திரோபாயமாகவே இது கடைப்பிடிக்கப்படுகின்றது. உலகம் பூராவும், அரசுகளால் இயலா நிலையில் கடைப்பிடிக்கப்படும் இந்தக் கொடிய அணுகுமுறை பற்றி, பாலாவும் நானும் அடிக்கடி கலந்துரையாடி இருக்கின்றோம். படுகொலை முயற்சி இடம் பெறலாம் என்ற எதிர்பார்ப்போடு மேலும் கூடுதல் விழிப்பாக இராமல் விட்டது எமது முட்டாள்த்தனமே என்று, இப்போது நினைத்துப் பார்க்கும் போது கூறுவேன். பிரபாகரன் அவர்கள் இந்த அச்சுறுத்தலை உணர்ந்தே வாழ்கிறார். ஆயினும் அதைத் தடுக்க, தமது பாதுகாப்பு முறைகளை ஒழுங்காக வகுத்திருக்கிறார். ஆனால், பாலா, தமது

ஆபத்தைப் பற்றிக் குறைவாக மதிப்பிட்டிருந்ததாலோ என்னவோ, தம்மைக் கொல்ல எவரும் நேரம் செலவிட்டுச் சதிபுரிய மாட்டார்கள் என்று கருதியிருந்தார். அப்படி அவர்கள் கொல்வதாக இருந்தால், போராட்டத்தில் அது எதிர்பார்க்கப்பட வேண்டியதே என்றும் அவர் நியாயம் கற்பிப்பார். தனிப்பட்ட முறையில் அவர் என்றுமே தனது பாதுகாப்பில் அக்கறை செலுத்தாது, மற்றவர்கள் அதைப் பார்த்துக் கொள்வார்கள் என்று ஒதுக்கிவிடுவார். பாதுகாப்பைப் புறக்கணித்து, காவல் எதுவும் இல்லாதிருந்த தருணத்திலேயே அவருடைய உயிரைப் பறிக்கும் முயற்சி நடத்தப்பட்டது. அந்த நாளில் தேசிய பாதுகாப்புக்குப் பொறுப்பாக இருந்தவரும் அரசுத் தலைவர் ஜெயவர்த்தனாவின் அந்தரங்க நம்பிக்கைக்குப் பாத்திரமானவருமான லலித் அத்துலக் முதலியே அந்தச் சதியைப் புரிந்தார்.

தமது உயிரைப் பறிக்க முயன்ற சதிகாரரை பாலாவுக்கு ஏற்கனவே தெரியும். 1984 இலே, இந்தக் கொலை முயற்சியாளர் சென்னையில் வந்து இறங்கிய நாளில் இருந்தே அவரை பாலா அறிவார். அவர் பெயர் கந்தசாமி; சிறீலங்காவின் முன்னாள் புலனாய்வு அதிகாரி; இவரைப் போன்றவர்களுக்கு இலட்சிய சீலம் எதுவும் கிடையாது. இவர்களுக்குப் பல எசமானர்கள். அவர்களுக்காக தகவல்களைப் பெறவும் தகவல்களைத் திரிவுபடுத்தவும் இவர்கள் பயன்படுத்தப்படுவார்கள். தாமாகவும் இவர்கள் இயங்குவார்கள்; ஏவலர்களாலும் பயன்படுத்தப்படுவார்கள். இவர்களைப் புலனாய்வுப் பரத்தையர் என்பதே பொருந்தும். பெசன்ற் நகர்க் கடற்கரையில் உலா செல்லும் போது, இவர் பாலாவுடன் ஒட்டிக் கொண்டார். இவரோடு நடத்திய உரையாடல்களில் இருந்து, இவரை ஓர் இரட்டை வேட உளவாளி என்று பாலா புரிந்து கொண்டார். இவர் நாணயம் அற்றவர் என்று பாலா கடுமையாகச் சந்தேகித்தபோதிலும், படுகொலை முயற்சி நடந்த பின்னேதான் இவருடைய பின்னணியையும் தமது உயிரைப் பறிக்க நடைபெற்ற சதி முயற்சியையும் பாலா தொகுத்துப் பார்த்தார். இவரைப் பற்றி பாலா சரியாக அளவிட்டிருந்ததாலேயே, தமிழ்நாடு புலனாய்வு சிறப்புப் பிரிவினர் அவரைக் கைது செய்து விசாரணை நடத்தியபோது, அவர் நிலைகுலைந்து உண்மையை ஒப்புக் கொண்டார். கொலை முயற்சிக் குற்றச்சாட்டு அவர் மீது சுமத்தப்பட்டது.

நடந்தது இதுதான். படுகொலை முயற்சிக்கு இரண்டு வாரங்களுக்கு முன் எமது மாடியின் முன் கதவருகே நான் நிலம் பெருக்கிக் கொண்டிருந்தேன். எமது வீட்டின் மொட்டை மாடிக்கு எமது தளத்தில் இருந்து செல்லும் படிக்கட்டில், அழகாக ஆடை அணிந்த





இளம் பெண் ஒருத்தி செல்வதைக் கண்டேன். என்னைப் பார்த்ததும் அவர் திடுக்கிட்டுப் போனார். மேல் மாடியில் யாராவது குடியிருக்கிறார்களா என்று அவர் என்னைக் கேட்டார். "மேலே யாரும் இல்லை; மொட்டை மாடிதான் இருக்கிறது" என்று நான் பதிலளித்ததும், எதுவுமே நடக்காதது போல மாடிப்படிகளால் கீழே இறங்கி அவர் வெளியே சென்றார். எமது மாடியைக் கடந்து, மேலே மொட்டை மாடிக்கு எவராவது செல்ல முயன்றதை நான் பார்த்தது இதுவே முதற்தடவை. எமது மாடியின் சொந்தக்காரர்கள் கீழ்த் தளத்திலேயே குடியிருந்தார்கள். அவர்கள் கூட, என்றுமே மொட்டை மாடிக்குப் போனதில்லை. எமது தளத்துக்கு அருகே கூட வந்ததில்லை. ஆகவே இது எனக்கு விநோதமாகப் பட்டது. அன்று பத்தும் பலதும் பற்றி உரையாடும்போது, அந்த இளம் பெண்ணை மாடிப்படியில் பார்த்ததை பாலா விடம் கூறினேன். அவர் அந்தச் சம்பவத்தை அவ்வளவு பொருட்படுத்தவில்லை.

குண்டு வெடிப்பதற்கு முதல்நாள் மாலையும் அதே மாதிரிச் சம்பவம் ஒன்று நடந்தது. மாலை ஏழு மணிபோல, நான் வீட்டில் தனியாக இருந்தேன். அரசியல் பணிமனையில் இருந்து வரவேண்டிய பாலாவுக்காகக் காத்திருந்தேன். யாரோ படியேறும் சத்தம் கேட்டது. கதவில் பொருத்தப்பட்டிருந்த வெளிப்பார்வைக் கண்ணாடியூடாகப் பார்த்தேன். ஓர் இளம் பெண், படியேறி மொட்டை மாடிக்குச் செல்வதைக் கண்டேன். "இதென்ன விசித்திரம்" என்று எனக்குள்ளே கூறிக்கொண்டேன். "கீழ்வீட்டுக்காரர்கள் மொட்டை மாடிக்கு எதையோ எடுத்துச் செல்கின்றனர்" என்று நினைத்தேன். எனது அறைக்குள் ஏதோ செய்ய வேண்டியிருந்ததால், உள்ளே போய்விட்டேன். கீழே வெளிக்கதவு கிறீச்சிட்ட சத்தம் கேட்டது. பாலா வீடு திரும்பி விட்டார் என்ற நினைப்பில், யன்னல் ஊடாக வெளியே எட்டிப் பார்த்தேன். ஆச்சரியம் என்னவென்றால் மாடிப்படியில் ஏறிய அந்தப் பெண் வெளியே சென்றுகொண்டிருந்தார். ஆனாலும் வெளிக் கதவைத் தாண்டி, அந்தப் பெண் சென்ற திக்கு, எனக்கு விசித்திரமாகப் பட்டது. கீழ் வீட்டில் வசிக்கும் குடும்பத்தினரிடம் செல்வதாக இருந்தால், அவர்களுடைய வாயில் பக்கம் அந்தப் பெண் திரும்பியிருக்க வேண்டும். ஆனால் அவர் எதிர்ப்பக்கம் நோக்கி நடந்து இருளில் மறைந்து விட்டார். சிறிது நேரத்தில் பாலா வந்து விட்டார். அவரிடம் நடந்ததைக் கூறினேன். ஒரு கொலைகாரனுக்கு உடந்தையாக அந்தப் பெண் இருப்பார் என்று நான் கருதவில்லை. ஆனாலும் அவருடைய போக்கு விசித்திரமாகவே எனக்குப் பட்டது. பத்து மணியளவில் மொட்டை மாடிக்குச் செல்லும்

கதவு காற்றில் அடித்துக் கொண்டிருப்பது கேட்டது. இந்தக் கதவுக்கு உட் பக்கமாக ஒரேயொரு தாழ்ப்பாள். இரவிலே அது அடித்துக் கொண்டிருக்கக் கூடாது என்பதற்காகவும், பாதுகாப்புக்காகவும் அதை எப்போதும் பூட்டியே வைத்திருந்தேன். கட்டடத்துக்குள் நுழைந்த அந்தப் பெண்தான் கதவைத் திறந்திருக்க வேண்டும். இதன் மூலம், கட்டடத்தின் பின்பக்கத்தில் உள்ள வேலைக்காரரின் பகுதியில் இருந்து, எவரும் உள்ளே வர, அந்தப் பெண் வசதியேற்படுத்தியிருந்தார். அதாவது அந்தக் கட்டடத்தின் பின்பக்கப் படிகளால் எவரும் மொட்டை மாடிக்குச் செல்லலாம். அங்கே திறந்திருந்த கதவு வழியாக, முன்னே இருந்த எமது மாடி வீடுகளுக்கு வரலாம். எமது வாயிலுக்கும் வரலாம்; படிகளால் கீழே இறங்கி வெளியே போகலாம். ஏனென்றால் கீழ்த்தளக் கதவிலும் உள்பக்கமாகவே தாழ்ப்பாள். எம்மோடு வசித்துக் கொண்டிருந்த எனது மருமகனிடம் மேலே போய்க் கதவைத் தாழ்ப்பாளிடுமாறு கூற அவரும் போய்ப் பூட்டிவிட்டு வந்தார்.

படுகொலை முயற்சி நடந்த அன்று காலை, எமது விசுவாசமான நாய்க்குட்டி ஜிம்மி, வழக்கத்துக்கு மாறாகக் குரைத்துக் கொண்டிருந்ததோடு, குறித்த ஒரு யன்னலைப் பார்த்து எகிறவும் தொடங்கியது. நாயிடம் சென்று அதைத் தடவிக் கொடுத்தேன். அது பின்னே பாய்ந்து, தனது கதிரைக்குள் தாவி, அமைதியாகியது. அதன் அமைதியைக் குலைத்தது எதுவோ என்று அறிய, யன்னல் வழியே எட்டிப் பார்த்தேன். எதையும் காணமுடியவில்லை. ஆனால் வெளிக்கதவு கிறீச்சிட்டுக் கேட்டது. எமது போராளிகளில யாரோ கடற்கரையில் அதிகாலை உடற்பயிற்சி செய்ய வந்து, கீழ்வீட்டில் தங்கள் மிதி உந்து வண்டிகளை விட்டுவிட்டு, வெளிக்கதவைப் பூட்டாமல் போயிருக்க வேண்டும் என்று கருதினேன். காலைக் காற்றில் குளிர் அடித்தது. ஒரு படுக்கை விரிப்பால் பாலாவைப் போர்த்திவிட்டு, நானும் போய்த் தூங்கினேன். அருமையான அரைத்தூக்கம். காலை ஆறு மணி. கோவில் ஒலிபெருக்கியில் வேத ஆலாபனை காதில் விழுந்தது. திடீரென உலகமே அதிர்ந்தது; யன்னல்கள் நொருங்கின; புகையும் தூசியும் அறைக்குள் மண்டிப்போயிருந்தன. தனது உயிரைக் கையில் பிடித்தபடி ஜிம்மி ஓடியது. எனது மூளையில் முதலில் உறைத்தது, "கடவுளே, சமையல் வாயுக் குடுவை வெடித்து விட்டது" என்பதுதான். நான் எழுந்தபோது நொருங்கிய கண்ணாடித் துண்டுகள் கலீரென்றன. பாலாவைப் பார்த்தேன். நான் அவரைப் போர்த்திய போர்வை மீது கண்ணாடிச் சிதறல்கள் குவிந்திருந்தன. அந்தச் சுமையின் கீழே பாலா அசைய மாட்டாமல் கிடந்தார். சிதறிய கண்ணாடி யன்னல், அதனருகே





படுத்திருந்த என்மீது விழாமல், என்னைக் கடந்து பறந்து பாலாமீது இறங்கியிருந்தது. பாலாவின் மீதிருந்த போர்வையை நான் சுருட்ட, கண்ணாடிச் சிதறல்கள் அதனுள் சுருண்டன. எம்மையே நம்ப முடியாதவர்களாக, என்ன நடந்தது என்று பார்க்க, கூடத்துக்குச் சென்றோம். எங்கே பார்த்தாலும் புகையும் தூசியும். எனது மருமகன் தலையிலிருந்து கால்வரை வெள்ளைத் தூசியால் போர்க்கப்பட்டவராக, அதிர்ச்சியிலிருந்து மீளாத நிலையில், அங்கும் இங்கும் மிலாந்திக் கொண்டிருந்தார். முழுமையாகப் பாதிக்கப்பட்டவர் அவரே. மொட்டை மாடியில் வெடித்த குண்டு, அவருடைய அறைக்கு நேரே, மேற் கூரையைத் தகர்த்திருந்தது. ஒரு வாரம் முன்னதாகத்தான் நாம் எமது அறைகளை மாற்றியிருந்தோம். கடற்கரைக் காட்சியைப் பார்ப்பதற்காக அவருடைய அறையை நாம் எடுத்து, எமது அறையை அவருக்குக் கொடுத்திருந்தோம். எனக்குள்ளே திடீரென்று ஒரு சந்தேகம் தோன்றியது. தமது முயற்சி முழுமையாக வெற்றி பெறுவதை உறுதிப்படுத்த, கொலையாளிகள் இரண்டாவது குண்டையும் நட்டிருப்பார்கள் என்று தோன்றியது. இரண்டாவது குண்டும் வெடிக்கலாம் என்ற எதிர்பார்ப்போடு கூடத்தின் நடுவே நின்று கொண்டிருந்தோம். நாம் வெளியே ஓடினால், எம்மைச் சுடுவதற்காகக் கொலையாளிகள் காத்திருக்கலாம் என்ற நினைப்பில் யாருமே வெளியே போகக் கூடாது என்று உரக்கக் கூறினேன்.

சில நிமிடங்களில் சீருடை தரித்த காவற்துறையினர் எமது மாடி வீட்டுப் படிகளில் ஏறினார்கள். பொது மக்களும் வெளியே கூடிவிட்டார்கள். எமது போராளிகள் பிரபாகரன் அவர்களுக்கு விடயத்தை அறிவித்தார்கள். பல கிலோ மீட்டர் தொலைவில் தமது வீட்டில் இருந்த பிரபாகரனுக்கும் இந்த வெடிச் சத்தம் கேட்டிருக்கின்றது.

ஒன்று தெளிவாகப் புரிந்தது. கொலையாளிகள் பின்புறப் படிகளால், மேலே மொட்டை மாடிக்கு வந்திருக்கிறார்கள். மாடிகளுக்கான கதவு பூட்டியிருப்பதைப் பார்த்ததும் பயந்து, கால வெடிகுண்டை மொட்டை மாடியிலே வைத்து விட்டு, வந்த வழியே ஓடியிருக்கிறார்கள். உடந்தையாக வந்த அந்தப் பெண் மொட்டை மாடிக் கதவைத் திறந்து விட்டிருந்தால் கொலையாளிகள் மாடிக்கு வந்து எமது கதவுப் படியில் குண்டைப் பொருத்திவிட்டு, கீழே இறங்கி, வாயில் கதவுத் தாழ்ப்பாளைத் திறந்து, காத்திருந்த மோட்டார் சைக்கிளில் தப்பிச் சென்றிருக்கலாம்.

இந்தச் சம்பவத்துக்குச் சில நாட்களுக்கு முன்னதாக எமது வீட்டுக்கு எதிரே கடற்கரையில் இரவு பத்து மணிக்கு பாலாவை தனிமையிற் சந்திக்க விரும்புவதாக, கொலையாளி கேட்டிருந்தார்.

ஆனால் பாலாவைத் தனியே போகக் கூடாது என்றும், வேண்டுமென்றால் கூடவே ஒரு போராளியைக் கூட்டிச் செல்லுமாறும் பிரபாகரன் கூறினார். அன்று, எமது போராளிகளில் ஒருவர் பாலாவைக் கூட்டிச் சென்றார். இல்லையென்றால் அந்தக் கடற்கரைச் சந்திப்பில் இருந்து பாலா உயிரோடு திரும்பியிருக்க மாட்டார் என்பதில் எனக்கு ஐயமே கிடையாது.

தூசி கீழே படிந்து, புகையும், தெளிவடைந்த பின், எமது திடீர் அதிர்ச்சியில் இருந்து நாம் மீண்ட பின் எமது மாடிக்கு ஏற்பட்ட சேதத்தைப் பார்வையிட்டோம். யன்னல்கள் எல்லாமே உடைந்திருந்தன. கதவுகள் ஒன்றுமே இல்லை. சிறிதும் பெரிதுமாக எல்லாச் சுவரிலும் வெடிப்பு. ஆனால் வெடித் தகர்ப்பின் முழுத் தாக்கத்தையும் எமது மருமகனின் அறையிலேயே கண்டோம். வெடியின் பலம், கம்பி வலையையும் இரும்புச் சலாகைச் சுவரையும் தகர்த்திருந்தது. மொட்டை மாடிக் கூரையில் ஓர் அடி ஆழமும் நான்கு அடி விட்டமுமான ஒரு பெரிய துவாரம். அதனூடாக வானம் தெரிந்தது. மாடிப் படிகளுக்கும் கடும் சேதம். சுவரில் ஓட்டை. எமது வாயில் கதவுக்கு முன்னே குண்டு வைக்க கொலைகாரனுக்கு வாய்ப்புக் கிடைத்திருந்தால், கட்டடம் முற்றாகத் தகர்ந்திருக்கும். குண்டு எம்மை மட்டுமல்ல, கீழ் வீட்டில் வாழ்ந்த குடும்பத்தையே கொன்றிருக்கும்.

தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளில் இருந்தெல்லாம் மக்கள் எம்மைப் பார்க்க வந்தார்கள். தம் கவலையைத் தெரிவித்தார்கள்; ஆறுதல் கூறினார்கள். சம்பவம் நடந்த உடனடியாகவே நூற்றுக் கணக்கானோர் எமது வீட்டைத் தரிசித்துச் சென்றார்கள். அனைத்து இயக்க அமைப்புகளின் தலைவர்களும் வந்தார்கள். ஈ.பி.ஆர்.எல்.எஃப் இன் பத்மநாபா, ரெலோவின் சிறீசபாரத்தினம், ஈரோசின் பாலகுமார், புளொட்டின் சித்தார்த்தன், ரீ.யூ.எல்.எஃப் இன் சிவசிதம்பரம் ஆகிய எல்லோரும் தமிழ் மக்கள் ஒன்றுபட்டு நிற்பதை உணர்த்தும் வகையில் வந்திருந்தார்கள். தமிழ்நாடு முதலமைச்சர் எம்.ஜி. இராமச்சந்திரனும் எம்மைப் பார்க்க வரவிருந்தார். ஆனால் பாதுகாப்புக் காரணங்களுக்காக, அவர் தமது வருகையை இரத்துச் செய்ய வேண்டியதாயிற்று. காவற்துறையினர் தம் புலனாய்வைத் தொடக்கினர்.

எனது கதையைக் காவற்துறையினர் செவிமடுத்தார்கள். நான் அடையாளம் காண்பதற்காக ஒரு வெளிறலான பெண்ணை அடையாளம் காட்டினார்கள். அவர்களுடைய புலனாய்வு திசை மாறத் தொடங்கியது விடுதலைப் புலிகளின் உள்வீட்டு வேலையே இந்தக் குண்டுச் சம்பவம் என்று சந்தேகப்பட்டார்கள். இறுதியில் பாலா கூறியதை வைத்துக் கொண்டு உண்மைக் குற்றவாளியைக் காவற்துறையினர் கண்காணிக்கத் தொடங்கினர். கொலையாளி கொழும்பிலுள்ள தனது முதலாளி - லலித் அத்துலத் முதலியோடு தொலைபேசி மூலம் உரையாடிக் கொண்டிருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. உத்தேச கொலையாளி விசாரணைக்காக கொண்டு செல்லப்பட்டார். அங்கே, குற்ற உணர்வு மேலிட கண்ணீரும் கம்பலையுமாகச் சதித்திட்டத்தை ஒப்புக் கொண்டார். உடந்தையாக இருந்த பெண் அவருடைய மருமகள் என்பதும் தெரிய வந்தது.





குற்றவாளி, பல மாதங்களாக சென்னை மத்திய சிறையில் காவலில் இடப்பட்டார். கொலை முயற்சிக்காக வழக்குப் பதிய மாநில காவற்துறை மேற்கொண்ட அனைத்து முயற்சிகளையும் மத்திய அரசு அதிகாரிகள் முறியடித்தார்கள். ஜெயவர்த்தனாவின் அமைச்சரவையின் மூத்த அமைச்சர் ஒருவர் அதில் சம்பந்தப்பட்டிருந்ததால், நாடுகளின் உறவில் அது பெருஞ்சேதம் விளைவிக்கும் என்று அவர்கள் கருதினார்கள். சம்பவத்தை முழுமையாக மூடி மறைக்க இரண்டு அரசுகளும் கூடி முடிவெடுத்ததால், இறுதியில் கந்தசாமி விடுவிக்கப்பட்டார். யாரும் அறியாமல், சிறீலங்கா திரும்பி குற்றவியல் பதிவு எதுவும் இன்றி அமைதியான வாழ்வில் ஈடுபட்டார்.

மாடி வீட்டைத் திருப்பிக் கட்டிக் கொடுக்க விடுதலைப் புலிகள் பெருமளவு நஷ்டஈடு செலுத்த நேர்ந்தது. ஆனாலும் வசதியான அந்த இடத்தில் தொடர்ந்தும் எம்மை வசிக்க விடுவதற்கு வீட்டுச் சொந்தக்காரர் இணங்கவில்லை. சிறு குழந்தைகளோடு அவர் கீழ் வீட்டில் வாழ்ந்து கொண்டிருந்தார். வெடிச் சம்பவத்தின் பின், நடுங்கியபடி, அந்தக் குடும்பம் அச்சத்துடனேயே வாழ்ந்தது. குண்டு வெடிச் சம்பவத்துக்குப் பிறகு, பாலசிங்கம் குடும்பத்துக்கு வாடகைக்கு வீடு தர சென்னையில் உள்ள வீட்டுச் சொந்தக்காரர் பலரும் தயங்கினார்கள். அது, புரிந்து கொள்ளப்பட வேண்டியதுதானே? கடைசியில் ஒரு முஸ்லிம் குடும்பம் துணிந்து வீடு தந்தது. எமது புதிய வசிப்பிடம் விடுதலைப் புலிகளின் அரசியல் பணிமனைக்கு அருகே அமைந்திருந்தது. எமது போராளிகளும் அதே சூழலில் தரித்திருந்தார்கள். அதனால், அதுவும் எமக்கு நல்ல வசதியாக இருந்தது. ஆனால் இந்தப் புதிய வீடும் எனக்கு ஒரு புதிய அனுபவத்தை இந்தியாவில் தந்தது.

## இந்தியாவில் வீட்டு ஊழியம்

இந்த நூல் முழுவதிலும், தமிழ் நாட்டில் பரந்து கிடக்கும் சமுதாய

முரண்பாடுகளையும் வறுமையையும் உணர்த்தும் வகையிலே, ஆங்காங்கே பல நிகழ்வுகளைத் தொட்டுக் காட்டியிருக்கின்றேன். அல்லது மனப் பதிவுகளை விபரித்திருக்கின்றேன். நகரங்களில் ஒரு புறம் மத்திய வர்க்கத்தினரும், பணக்காரரும் சொந்த அல்லது வாடகை வீடுகளில் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். மறுபுறம், கிராமங்களிலும், நகர்ப்புறச் சேரிகளிலும் பெரும்பான்மை வறியவர்கள் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். இவர்கள் சமூக, பொருளாதார புறக்கணிப்பாலும், இடர்பாடுகளாலும் சபிக்கப்பட்டவர்கள்; பல இலட்சக்கணக்கானவர்கள்; சிறிய ஓலைக் குடிசைகளில் ஒண்டியிருக்கிறார்கள். இந்தக் குடிசைகளில் தூங்க, சமைக்க, குளிக்க என்று தனித்தனியான அறைகள் கிடையாது. இவை எல்லாமே ஒற்றை அறைக் குடிசைகள். இதற்கு உள்ளேயே ஒரு முழுக்குடும்பமும் சமைத்து, உண்டு, உறங்கும். இங்கே சமையல் வாயு விநியோகம் கிடையாது. மின்சார வழங்கலும் இல்லை. இந்தக் குடிசையின் பின்புறத்தில் சிறிது தூரம் நீண்டு செல்லும் நெடும்புல் புதர், பற்றை, செடிகள் ஆகியவை வழங்கும் மறைவிடமே அவர்களுடைய கழிப்பிடம். வீட்டின் அன்றாட குப்பை, சுற்றுப் புறத்தில் இறைந்து கிடக்கும்.

இந்த வறுமைக்கும் சிறுமைக்கும் மத்தியில், தங்கள் கண்ணியத்தைக் காப்பாற்றுவதிலும், குடும்பத்தை உயிரோடு பேணுவதிலும், பெண்கள் படும் சிரமம் கொஞ்ச நஞ்சமல்ல. இந்த இடர்பாடுகளின் சிகரமாக பெண்கள் முகம் கொடுப்பது குடிசைகளுக்கான நீர்த் தட்டுப்பாடு! பெரும்பாலான இந்தக் குடிசைக் குடும்பங்களுக்கு பொதுவான ஒரு நீர்க்குழாய் இருக்கும். இதிலிருந்து நீர் எடுப்பதும் பெண்களின் பணியே. மிகச் சின்ன வயதிலேயே பெண்கள் வீட்டு வேலையில் ஈடுபடத் தொடங்கி விடுவார்கள். ஆறு ஏழு வயதுச் சிறுமிகள் நீர்க்குழாயிலிருந்து குடங்களில் நீர் சுமந்து வீடுகளுக்கு கொண்டு வருவார்கள். முதலில் தண்ணீர் வரிசையில் காத்து நிற்க வேண்டும்; நீர்ப்பம்பியை அமுக்கி, நீர் பிடிக்க வேண்டும். பெண்ணின் நேரத்தை உறிஞ்சி, பொறுமையைச் சோதிக்கும் சடங்கு இது. கோடைக் காலத்தில், உள்ளூர்ச் சமூகத்தின் நீர்த் தேவையைப் பூர்த்தி செய்ய நீர் விநியோகம் போதாதிருக்கும். அப்போது, அந்தச் சுற்றுப் புறத்தில் உள்ள வேறு நீர்க்குழாயைத் தேடும் நிர்ப்பந்தம் பெண்களுடையதாகவே இருக்கும். தண்ணீர் தேடிக் கூட்டம் கூட்டமாகச் செல்லும் பெண்கள், அடிக்கடி எமது வீட்டு முன் வாயிலில் நின்று, முன்வளவுக்குள் இருக்கும் நீர்க்குழாயில் நீர் பிடிக்க அனுமதி கோருவார்கள். கோடையில் மத்திய தர வர்க்கத்தினரும் நீர்த்தட்டுப்பாட்டால் பாதிக்கப்பட்டு, நீருக்காகத்





தேடுதலில் ஈடுபடுவர். இல்லையென்றால், அந்தப் பக்கம் நீர் வழங்க வரும் நீர் வண்டிக்காக காத்து நிற்பர்.

போதுமான அளவு சுத்தமான நீர் கிடைப்பது இந்தியாவில் பெரும் பிரச்சினையே. கிராமப் புறத்தில் ஒரு சில குடம் குடி நீருக்காக பெண்கள் நீண்ட தூரம் நடந்து செல்வது பொதுவானது. தமிழ் நாட்டுக்கு நாம் முதலில் சென்றபோதே, சென்னையின் வாழ்க்கைத் தரத்தையும், தன்மையையும் தண்ணீரே நிர்ணயிப்பதை நாம் புரிந்து கொண்டோம். ஆகவே தமிழ்நாட்டுக்கு நாம் சென்று அங்கே நிரந்தரமாக வாழ்வதற்கு வீடு தேடும் போது, அந்தப் பகுதியின் நீர் விநியோகம் பற்றி விசாரிப்பதும் எமக்கு முக்கியமானதாக இருந்தது. இந்தச் சமூகப் பிரச்சினை பற்றிய அறிவுடனே வீடு தேடியதால், வீட்டின் அடிப்படைத் தேவைக்காகத் தலையைப் பிய்க்கும் சிரமம் எனக்கு ஏற்படவில்லை. ஆனால் குண்டு வெடித்த பிறகு கிடைத்த வீடு அமைந்த இடத்தில் நீர் விநியோகம் குறைவாகவும், நிலையற்றதாகவும் இருந்தது. அதுவும் வெப்பமான கோடையில் அதன் பாதிப்பு மிகவும் மோசமாக இருந்தது. ஆகவே, புதிய வீட்டுக்கு இடம் மாறிய பின், நீர் தொடர்பான பல பிரச்சனைகள், என் வாழ்க்கைத் தரத்தைப் பாதிக்கத் தொடங்கின.

வீட்டின் முன்வளவுக்குள் கையால் அமுக்கும் நீர்க்குழாய்ப் பம்பி இருப்பது பெரும் வசதி என்று நான் கருதியபோதும், கோடைக்கால வெப்பம் அதிகரித்துச் செல்ல, நீர் விநியோகம் வருவதும் நிற்பதுமாகத் தொடங்கி, இறுதியில் படிப்படியாக இல்லாது போகும் நிலையை எய்தியது. கோடைக்காலத் தொடக்கத்திலே எமது வீட்டு நீர் விநியோகம் நாளுக்கு அரைமணிநேரமாக குறைக்கப்பட்டது. அந்த நேரத்துக்குள் நீர்ப் பம்பியைக் கையால் அமுக்கி, அன்றைய வீட்டுத் தேவைக்கான நீரை, குடங்கள் எல்லாவற்றிலும் நிரப்பி விடுவேன். சமையல் கட்டிலோ, குளியல் அறையிலோ, குழாயில் நீர் வராது. குழாய் நீர் இல்லாது போனபோது ஓர் இயற்கையான அன்றாட அவசியத்தேவை மறுக்கப்பட்டதை உணர்ந்தேன். அது எமது வாழ்க்கை முறையையும், தரத்தையும் வெகுவாகப் பாதிக்கிறது என்பதையும் முழுமையாக உணர்ந்தேன். நீர் கிடைக்காது இருப்பது அப்படி என்ன பிரச்சினை என்று நினைப்பவர்களுக்குக் கூட, அதற்கு முகம் கொடுக்கும் போதுதான், அது எத்தகைய பெரிய பிரச்சினை என்பதும், நீரை எப்படி சேமிப்பது என்று சதா சிந்தித்துக் கொண்டேயிருக்க வேண்டும் என்பதும் புரியும். சமையலுக்காக ஒதுக்கும் ஒரு வாளி நீரை எப்படிச் சேமித்து, அதில் சமையலுக்கு எவ்வளவு நீர், பாத்திரங்களைக் கழுவ எவ்வளவு நீர் என்று கவனமாக இருப்பதே தலையைக் குடையும். குறைந்த பட்ச நீரில்

எப்படிப் பாத்திரங்களைக் கழுவலாம், சமையல் அறையை எப்படி ஒற்றி எடுக்கலாம் என்று, புதிய சிறந்த வழிகளைச் சோதித்துப் பார்ப்பதே தனிக் கலையாகும். இறுதியில் இலகுவான வழி, சமையல் முடிந்த சட்டி பானைகளை வெளியே தூக்கிச் சென்று, ஒரு சிறிய குந்திலே அமர்ந்து, பாத்திரங்களுக்குச் சவர்க்காரம் போட்டு, கழுவி எடுத்து. கொதிக்கும் வெய்யிலில் கவிழ்த்துக் காய விடுவதே சிறந்த வழி என்பதை பட்டறிந்து கொண்டேன். காய்ந்த பின் அவற்றைச் சமையற்கட்டில் அடுக்கி விடுவேன்.

மேல்வீட்டுக் குளியல் அறைக்கு நீர் சுமப்பது மேலும் ஒரு பிரச்சனையாகியது. ஒரு வாளி நீரில் உடலைக் கழுவிச் சுத்தம் செய்து கொள்ளலாம் என்பதைக் கற்றுக் கொள்வதே திகைப்பூட்டும் அனுபவம். பொசுக்கும் வெக்கையில், ஒவ்வொரு நாளும் ஒரு வாளி நீரில் என்னை ஒற்றி எடுப்பது எனக்குக் கிடைத்த அதிர்ஷ்டம். நீர்ப் பிரச்சினை எனக்கு அசௌகரியத்தை ஏற்படுத்தியது உண்மையே. ஆனால் தங்கள் குடும்பத்தின் அடிப்படைத் தேவைக்கான இந்தப் பண்டத்தைப் பெறுவதில் தங்கள் நேரத்தையும் சக்தியையும் செலவிடும் பல லட்சக்கணக்கான இந்தியப் பெண்களோடு ஒப்பிடும்போது, நான் கொடுத்து வைத்தவள் என்பேன்.

நீர்ப் பிரச்சினை இருக்கிறதோ இல்லையோ, வீட்டு வேலை என்று வரும்போது அது இந்தியாவில் ஒரு பெரும் சுமையே ஆகும். சமையல் ஒரு பெரிய வேலை. பெண்களுக்கென்றே ஒதுக்கப்பட்ட தொல்லை. தேங்காய் துருவி, ஈர வெங்காயம் உரித்து, இறைச்சி வெட்டி, மீன் துப்புரவாக்கி, காய்கறி நறுக்கி, சோறு காய்ச்சி, வடித்து இப்படி சமையல் வேலையே நாள்தோறும், அடுத்தடுத்து, மாற்றம் இல்லாமல் செய்து கொண்டிருப்பது சலிப்புத் தருவதாகும். இனி, சமையலுக்கு நீண்ட நேரம் பிடிக்கும். சமையலுக்கு வாயு அடுப்பே பொதுவாகப் பயன்படுத்தப்படும். அதில் இரண்டு நெருப்பு முனைகளே இருக்கும். அரிசியின் தரத்துக்கு ஏற்ப, சோறுகாய்ச்ச, ஒரு நெருப்புமுனை அரை மணிநேரம் பயன்படுத்தப்படும். அனைத்து கறி வகைகளையும் தயாராக்க மீதமாக ஒரு முனை மட்டும் இருக்கும். வேறு வாய்ப்பு என்றால் அது, விறகு அடுப்பே. பெரும்பாலும் ஒன்றிரண்டு விறகடுப்புகளைக் காணலாம். சமையல் என்பது உணவு தயாரிப்பில் ஒரு பகுதி மட்டுமே. ஆனால் இது முழுக்க முழுக்க ஒரு பெண்ணின் பணியே ஆகும். இதைவிட, அரிசியை ஊறவிட்டு, மா அரைப்பது; மா இடிப்பது; மிளகாய்த் தூள் சரக்குகள் வறுப்பது; தானியங்களை ஊறவைத்து அம்மியில் அரைப்பது; இப்படிப் பல!





நாம் இந்தியாவில் இருந்த காலத்தில் ஆடை கழுவும் பொறி வசதி எமக்குக் கிடைக்கவில்லை. கைகளாலேயே எமது உடைகளைக் குளிர் நீரில் கழுவ வேண்டும். எனக்குப் பஞ்சியாக இருந்தால், அல்லது நீர்த் தட்டுப்பாடு நிலவினால், ஒவ்வொரு வாரமும் குறித்த நாளில் வீடு வரும் ஒரு பெண்மணியிடம் எனது ஆடைகளையும், பாலாவின் சட்டைகளையும் ஒப்படைப்பேன். அவற்றை அவர் எடுத்துச் சென்று, துவைத்துக் கொண்டு வருவார். அழுக்கு நீர் உள்ள சிறிய குளங்களில் தோய்க்கிறாரோ, நோய் ஏதும் தொற்றிக் கொள்ளுமோ, என்று கவலை இருக்கும். ஆனால் ஆடைகளைக் கழுவி, மடித்து, பெட்டிபோட்டு அவர் எடுத்து வரும்போது எனது கவலை பறந்து விடும்.

இவற்றையெல்லாம் விட, புதிய காய்கறி, உடன் மீன், இறைச்சி ஆகியவற்றுக்காக அன்றாடம் கடைத் தெருவுக்குப் போக வேண்டும். இத்தகைய அன்றாடச் சிறிய சிறிய பணிகள் பெண் மீதான சுமையாகி, அவள் பலம் உறிஞ்சப்பட்டு, அவள் சிந்தனை வளர்ச்சியும், மந்தமாகி, அன்றாட வாழ்க்கையே அவளுக்கு சிரமம் ஆக்கிவிடும். சமூகச் சூழலே சிந்தனையைத் தீர்மானிக்கிறது என்று கூறும் மாக்சிய சித்தாந்தத்தை நான் அடிக்கடி நினைவு கூருவேன். இங்கு, மாக்ஸ் கூறுவது முற்றிலும் உண்மையே என்றும் முடிவு செய்தேன். இடையறா வீட்டு வேலைச் சுமை காரணமாக, உயர் சிந்தனைக்கு இடம் இருப்பதில்லை. இந்தியாவிலே வசதியான பெண்கள் வீட்டு வேலைக்காரரை வைத்திருக்க விரும்புவதன் நோக்கமும் தெளிவாகியது. வீட்டுப் பொறுப்பு அனைத்தையும் பொறுப்பான ஒருவரிடம் ஒப்படைக்க வேண்டும் என்று மனக் கோட்டை கட்டுவேன். ஆனால் எனக்கு அந்த வாய்ப்பு என்றுமே கிடைத்ததில்லை.

இன்னொரு பெண் எனக்காகச் சமைத்து, வீட்டைச் சுத்தப்படுத்துவது எனக்குச் சிறிதும் பிடிக்காத ஒன்று. வீட்டில் உள்ள எல்லோருமே அந்த வீட்டுக்கான பணிகளைப் பங்கிட்டுச் செய்ய வேண்டும் என்பதுதான் என்றுமே எனது நிலைப்பாடு. இரண்டாவதாக, வீட்டு வேலைக்காக அமர்த்தப்படும் இந்தப் பெண்களுக்குக் குறைந்த சம்பளம் வழங்கி, அவர்களைச் சுரண்டுவதிலும், எனக்கு விருப்பம் இல்லை. இனி, பலர் செய்வது போல, மிகக் குறைவான சம்பளத்தில் சிறுமி ஒருத்தியை பணிக்கு அமர்த்துவதையும் என்னால் சிறிது கூட ஏற்க முடியவில்லை. ஒவ்வொரு நாளும், அதிகாலையில் வீட்டு விறாந்தையில் அமர்ந்து தேனீர் பருகும்போது, என் கண்முன்னே இரண்டு காட்சிகள் விரியும். ஆறில் இருந்து பத்து வயது வரையான சிறுமிகள் வீட்டு வேலைக்காரிகளாக, தங்கள் குடிசைகளிலிருந்து போவது ஒரு காட்சி. வசதியான குடும்பத்துச் சிறுமிகள் கச்சிதமாகச் சீருடை அணிந்து

தங்கள் வீடுகளில் இருந்து பள்ளி செல்வது இன்னொரு காட்சி. அதிலும் வறிய சிறுமி ஒருத்தி, வசதியான வீட்டில் இருந்து பள்ளி செல்லப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் தனது சம வயதுச் சிறுமிக்காக உணவு தயாரிக்க, வீட்டு வேலைக்காரியாக அங்கே செல்லும் காட்சி, அந்தச் சமுதாய முரண்பாட்டைத் தோலுரித்துக் காட்டும். பள்ளி செல்லும் தனது சம வயது முதலாளிக்காக வீட்டு வேலைக்காரியான அந்தச் சிறுவயதுத் தொழிலாளி, அவருடைய சீருடையைத் தோய்க்கும் சடங்கும் அங்கு நடைபெறும்.

**உறவில் நிகழ்ந்த பாதிப்புகள்**

இந்திய ஆதரவுடன் 1985 ஓகஸ்ரில் இடம்பெற்ற திம்புப் பேச்சுவார்த்தை, இலங்கை அரசுக்கும் தமிழ்ப் போராளிக் குழுக்களுக்கும் இடையே முரண்பாட்டை ஏற்படுத்தியது. ஆயினும் இனப் பிரச்சனைக்கு அரசியல் தீர்வைக் கொண்டு வந்து விடலாம் என்ற முயற்சியை இந்தியாவும் கை விடுவதாக இல்லை. இந்திய அமைச்சர்களும் அதிகாரிகளும் கொழும்புக்குப் பல பயணங்களை மேற்கொண்டார்கள். சிறீலங்காவின் அரசியல் யாப்பு மாற்றங்கள் தொடர்பான கருத்துக்களையும் பரிந்துரைகளையும் வகுப்பதும் திருத்துவதுமாக இருந்தார்கள். அதே சமயம், புது டில்லிக்கும், புலிகளுக்கும் இடையே 1983 இற்கு முன் நிலவி -ய உறவின் சுமுக நிலை அதற்குப் பின் என்றுமே மீண்டதில்லை. திம்புப் பேச்சுவார்த்தை முறிவடைந்ததில் இந்தியாவுக்குக் கசப்பு. பாலாவை நாடு கடத்தியதாலும், கொழும்புடன் புதுடில்லி கூடிய உறவு பேணியதாலும் இந்தியா மட்டில் விடுதலைப் புலிகளுக்குக் கசப்பு. தமிழ்நாடு காவற்துறையானது, பிரதிக்காவல் மா அதிபர் மோகன்தாஸ் தலைமையில் 1986 நவம்பர் நடத்திய பாரிய பாதுகாப்பு நடவடிக்கையை அடுத்து, தமிழ்நாட்டின் ஆதரவிலும், புதுடில்லியின் ஆதரவிலும் தாம் தொடர்ந்தும் தங்கியிருக்க முடியாது என்பதை விடுதலைப் புலிகளும் ஏனைய போராளிக் குழுவினரும் புரிந்து கொண்டார்கள்.

தமிழ்ப் போராளிக் குழுக்களின் உறுப்பினர்கள் அதிகமதிகமாகத் தங்கள் ஆயுதங்களுடன் நடமாடுவது தமிழ்நாடு காவற்துறையையும் புலனாய்வு அதிகாரிகளையும், அச்சமடையச் செய்திருந்தது. விடுதலைப் புலிகள் உயர்வான ஒழுக்கக் கட்டுப்பாடுகளைப் பேணியதோடு, பொதுமக்களுடன் நல்லுறவு பேணிக் கொண்டிருந்த போதிலும், ஏனைய ஆயுதக் குழுக்கள் புரிந்த வன்செயல் சம்பவங்கள் மாநிலக் காவற்துறைக்கு எரிச்சலூட்டியது. சென்னையின்





மையப் பகுதியான சூளைமேட்டில், 1986 நவம்பெர் முதல் திகதியன்று, ஒரு சம்பவம் நிகழ்ந்தது. சிறீலங்கா அரசில் பின்னர் அமைச்சரான டக்ளஸ் தேவானந்தா அப்போது ஈ.பீ,ஆர்.எல்.எஃப். இன் மூத்த தலைவர்களில் ஒருவராக இருந்தார். அவருக்கும் ஓட்டோ வண்டி ஓட்டுனர் ஒருவருக்கும் இடையே ஒரு சில்லறைத் தகராறு! அதில் டக்ளஸ் தேவானந்தா, தானியங்கித் துப்பாக்கியால் சிலாவிச் சுட, இளவயது வழக்கறிஞர் ஒருவர் அந்த இடத்திலேயே பலியாகியிருக்கிறார்; பல பொதுமக்கள் காயமடைந்திருக்கிறார்கள். இதன் விளைவாக தமிழ் நாட்டிலே பலத்த கண்டனம் கிளர்ந்தது. கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று, ஊடகங்கள் நிர்பந்தித்தன.

எம்.ஜீ. ஆர் நிர்வாகத்தில் சட்டத்துக்கும் ஒழுங்குக்கும் பொறுப்பாக இருந்தவர் காவல்துறைப் பிரதிமா அதிபர் மோகன்தாஸ். தமிழ்நாடு புலனாய்வுப் பிரிவின் தலைவரும் அவரே. சூளைமேட்டுச் சம்பவம் அவருக்கு நல்ல வாய்ப்பை வழங்க, இலங்கைத் தமிழ்ப் போராளிக் குழுக்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்க அவர் தீர்மானித்தார். அந்தத் துப்பாக்கிச் சூட்டுச் சம்பவம் தவிர, கர்நாடக மாநிலத்தில் விரைவிலே நடைபெற இருந்த சார்க் மாநாட்டை ஒட்டிக் கடுமையான பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு மத்திய அரசின் உள்துறை அமைச்சும் கேட்டிருந்தது. அந்த மாநாட்டில் சிறீலங்கா அரசுத் தலைவர் ஜே.ஆர் ஜெயவர்த்தனாவும் கலந்த கொள்ள இருந்தார். ஆனபடியால் இலங்கைத் தமிழ்ப் போராளிகளுக்கு எதிராக கடும் நடவடிக்கை எடுக்க சூளைமேட்டுச் சம்பவம் வாய்ப்பாக அமைந்தது. இளம் வழக்கறிஞர் கொலையில் விடுதலைப் புலிகளுக்கு சிறிதும் பங்கில்லை. ஆனால் அனைத்துப் போராளி அமைப்புகளையும் புலிகள் என்றே பொதுமக்கள் வாய்ப்பாடு செய்திருந்தார்கள். ஆகவே 1986 நவம்பர் 8ம் நாள், தமிழ்நாடு காவற்துறையினர், இலங்கைத் தமிழ்ப் போராளிக் குழுக்களை நிராயுத பாணிகளாக்கும் நடவடிக்கையில் இறங்கினார்கள். 'புலி நடவடிக்கை' என்று அதற்குப் பெயரும் சூட்டினார்கள்.

அதிகாலை ஆறு மணியிருக்கும்! ஆயுதம் தரித்த காவற்துறை அணி ஒன்று எமது வீட்டு முன்வாயிலால் முண்டியடித்துக் கொண்டு உள்ளே வந்தது. அவர்களுடைய தோரணை ஏதோ ஒரு பெரிய காரியம் நடைபெறுகிறது என்பதை உணர்த்தியது. என்ன நடக்கிறது, ஏன் வந்தார்கள் என்பதே புரியவில்லை. அனால் பொது இடம் அல்லாத தனிப்பட்ட வாழ்மனைக்குள் அவர்கள் புகுந்ததில் இருந்தே அது, நட்புணர்வற்ற நடவடிக்கை என்பது புரிந்தது. நாம் கைது செய்யப்படலாம்

என்று உள் மனம் கூறியது. எனது கைத்துப்பாக்கி பறிமுதல் செய்யப்படக்கூடாது என்பதற்காக அதை ஒளித்து வைக்க உடனடியாக விரைந்தேன். அதைத் தூக்கி கூரை மீது வீசினேன். பின்னர் அதை மீட்டெடுக்கலாம் என்பதே என் எண்ணம். உள்ளே நுழைந்த காவற்துறை அதிகாரிகள் அனுமதி கேட்காமலே வீட்டில் தேடுதல் தொடங்கினார்கள். அக்குவேறு ஆணி வேறாகச் சோதனையிட்டார்கள். அந்தத் தருணத்தில் எனது பெற்றோரும் அங்கே கூட இருந்தார்கள். எம்மைப் பார்ப்பதற்காக அவுஸ்திரேலியாவிலிருந்து வந்திருந்தார்கள். எவ்வித சமாதானமும் கூறாது காவற்துறையினர் எமது வீட்டுக்கு அடாத்தாக நுழைந்து நடந்து கொண்ட விதமும், யாரும் உள்ளே வராமலும் வெளியே செல்லாமலும் அறுக்கையிட்ட விதமும் அவர்களை மலைக்கச் செய்திருந்தன. தங்கள் பயணப் பெட்டிகளையும் கைப்பைகளையும் கவிழ்த்துக் கொட்டி, ஒவ்வொரு பொருளையும் துருவித் துருவி ஆராய்வதை ஆற்றாமையோடு பார்த்துக் கொண்டிருக்கவே அவர்களால் முடிந்தது. மற்றவர்களுக்கு இப்படி நடப்பது பற்றி அவர்கள் இதற்கு முன் படித்திருக்கலாம்; அல்லது கேள்விப்பட்டிருக்கலாம். ஆனால், காவற்துறையின் இத்தகைய அடாவடித்தன நடவடிக்கைக்கு தாமும் உள்ளாக்கப்படலாம் என்று அவர்கள் கனவு கூடக் கண்டிருக்கமாட்டார்கள். தமிழ்நாடு காவற்துறை பற்றிய அவர்களுடைய மதிப்பு, தரம் இறங்கியிருக்கும் என்பது இயல்புதானே! காவற்துறையினர் எதைத் தேடுகிறார்கள் என்பது எமக்கு இன்னமும் புதிராகவே இருந்தது. ஏனென்றால் எமது வீடு, ஆயுத பதுக்கலுக்காக என்றுமே பயன்படுத்தப்படவில்லை. வீட்டுக்கு வெளியே, காவற்துறை வாகனங்களும், ஆளணிகளும், பெருந்திரளாக அந்தப் பகுதியைச் சுற்றி வளைத்துக் காவிலிட்டிருந்தன. விடுதலைப் புலிகளின் வீடுகள் அனைத்திலும் கடும் தேடுதல் நடப்பது தெரிந்தது. மாநிலத்தில் உள்ள போராளிக் குழுக்களின் அனைத்துப் பாசறைகளும் முழுமையான அதிகாலைச் சோதனைக்கு உள்ளாகி இருந்தன. எமது வீட்டுச் சோதனையின் முடிவில், எனது தனிப்பட்ட பாதுகாப்புக்காக இருந்த கைத் துப்பாக்கி ஒன்று மட்டுமே அவர்கள் கையில் அகப்பட்டது. எனினும் காவல் நிலையத்துக்குத் தம்முடன் வருமாறு அவர்கள் பாலாவைக் கேட்டார்கள். உள்ளூர் காவல் நிலையத்தில் பாலாவைப் படம் பிடித்தார்கள்; கைரேகை பதிவு செய்தார்கள்; சொல்லொணா அவமானத்துக்கும் சிறுமைக்கும் உள்ளாக்கினார்கள். இதே சூழ்நிலையில் பிரபாகரன் அவர்களும் அழைத்துச் செல்லப்பட்டு, அந்தச் சிறுமைப்படுத்தும் சடங்கிற்கு உள்ளாக்கப்பட்டிருந்தார். பல மணிநேர விசாரணைக்குப் பின் அவர்கள் இருவரும் வீடு திரும்ப





அனுமதிக்கப்பட்டார்கள். ஆனாலும் உடனடியாக வீட்டு மறியலில் வைக்கப்பட்டார்கள். வீதிமுனையிலே ஆயுதம் தரித்த காவலர் நிறுத்தப்பட்டார்கள். எம்மைச் சந்திக்க எவரும் வரலாம் என்று அனுமதித்தார்கள்; ஆனால் பாலா மட்டும் வீட்டை விட்டு வெளியேற அனுமதிக்கப்படவில்லை. பிரபாகரன் அவர்கள் மீதும் அதே நிபந்தனைகள்! இவையெல்லாம் பாலாவின் பாதுகாப்புக்காகவே என்று அவர்கள் நியாயம் கூறினார்கள். ஆனால் ஏற்கனவே படுகொலை முயற்சிக்கு இலக்காகி இருந்த பாலாவுக்கு யாரிடமிருந்து பாதுகாப்பு, அல்லது ஏன் பாதுகாப்பு என்பதை அவர்கள் விளக்கிக் கூறத் தவறிவிட்டார்கள்.

பாலாவும் சரி, பிரபாகரன் அவர்களும் சரி, இதனால் கொதிப்படைந்தார்கள். தாம் அவமானப்படுத்தப்பட்டதாக அவர்கள் கருதினார்கள். தமிழ் நாடும் புதுடில்லியும் வேண்டுமென்றே தம்மை அச்சுறுத்தி அவமானப்படுத்துவதாக எண்ணினார்கள். மாநில, மற்றும் மத்திய அரச அதிகார பீடங்களுக்குத் தெரியாமல் இத்தகைய பாரிய ராணுவ நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது என்பதை நம்ப, நாம் எவரும் முட்டாள்களல்ல. விடுதலைப் புலிகளுக்கும் புதுடில்லிக்கும் இடையே அரசியல் வேறுபாடு அடிக்கடி தலைதூக்கிய போதிலும், இத்தகைய காவற்துறைக் கடும்நடவடிக்கை இடம்பெற்றிருக்கக் கூடாது என்பதே விடுதலைப் புலிகளின் கருத்தாகும். பாதுகாப்புப் பதகளிப்பு ஏதாவது இருந்திருந்தால், அதைப்பற்றி விவாதித்து, பொருத்தமான ஏற்பாடுகளைச் செய்திருக்கலாம். விடுதலைப் புலிகளுக்கும், புலித் தலைவர்களுக்கும் எதிரான கடும் நடவடிக்கை, பாலாவையோ பிரபாகரனையோ காவற்துறைப் புலனாய்வுப் பிரிவினர் ஆழமாகப் புரிந்து கொள்ளவில்லை என்பதையே சுட்டிக்காட்டியது. யாழ்ப்பாணத்து உளப்பாங்கு பற்றித் தமிழ் நாடு காவற்துறை ஆழமாக அறிந்திருந்தால், தாம் புரிந்த அவமரியாதையானது, பாலாவையும் பிரபாகரனையும் அச்சுறுத்திப் பணிய வைப்பதற்குப் பதிலாக, அவர்களைச் சீற்றத்துக்கு உள்ளாக்கி இருந்தது என்பதை அவர்கள் உணர்ந்திருப்பார்கள். உண்மையில் தம் சுயமரியாதையும் சுய கௌரவமும் கண்ணியமும் ஊறுபடுத்தப்பட்டதாகவே அவர்கள் கருதி ஆத்திரமடைந்திருந்தார்கள். அவர்களுடைய எதிர்ப்பு உணர்வும் மேலோங்கியிருந்தது. இந்திய அரசின் கடும் நடவடிக்கை, இவர்கள் இருவருடைய சந்தேகங்கள் பலவற்றை உறுதிப்படுத்தின. தமிழ் மக்கள் மட்டில் இந்தியாவின் கரிசனை எவ்வளவு என்பதையும் அவர்களுக்கு உணர்த்தின. புதுடில்லியின் உள்ளார்ந்த எண்ணங்களையும் புரிய வைத்தன.

எப்படியாயினும் ஒரு வாரத்துக்குப் பிறகு, வீட்டுக்கு முன்பாக நிறுத்தப்பட்டிருந்த காவலர் திடீரென தமது உடைமைகளையும் தூக்கிக் கொண்டு அவசர அவசரமாக வெளியேறினார்கள். எவருக்கும் எதுவித விளக்கமும் இன்றி, வீட்டு மறியல் நீக்கப்பட்டது.

புதுடில்லிக்கும் கொழும்புக்கும் இடையே ராஜதந்திர முயற்சிகள் மாதக்கணக்கில் முடுக்கி விடப்பட்டிருந்தன. பங்களூரில் நடைபெற இருந்த சார்க் மாநாட்டில் இனப் பிரச்சனைக்கு அரசியல் தீர்வு காணும் முயற்சியில் வழி கிடைத்து விட்டது என்று அறிவிக்க வேண்டும் என்ற நோக்கமே அதற்குக் காரணம். இதன் மூலம் சார்க் மாநாட்டில் தாம் அரசியல் புகழ் சம்பாதிக்க வேண்டும் என்பது ரஜீவ் காந்தியின் அபிலா சையாக இருந்தது. சிறீலங்கா, வெவ்வேறு யோசனைகளையும் முன்வைத்திருந்தது. அதிகாரப் பகிர்வை வெவ்வேறு வடிவங்களில் வழங்குவதோடு, கிழக்கு மாகாணத்தை மூன்று கூறாக்கும் திட்டத்தையும் அது உள்ளடக்கியது. சற்றேனும் ஏற்க முடியாத இந்தத் திட்டத்தோடு இந்திய, மற்றும் சிறீலங்கா அதிகாரிகள் பங்களூர் சென்றனர். இதை விவாதிப்பதற்காக, பாலாவும் பிரபாகரனும் அடிக்கடி புதுடில்லிக்கு கொண்டு செல்லப்பட்டனர். “அருகமர் பேச்சுவார்த்தை” என்ற திட்டம் எடுபடவில்லை. மாநாட்டில் அதை வெளியிடவும் முடியவில்லை. அந்தப் பேச்சுவார்த்தை ‘பங்களூர் பேச்சுவார்த்தை’ என்று அழைக்கப்பட்டது. விடுதலைப் புலி அமைப்பு மீது தமது செல்வாக்கைப் பிரயோகிக்க, தமிழ்நாடு முதலமைச்சர் எம்.ஜி. ராமச்சந்திரன் ஈடுபடுத்தப்பட்டார். ஒரு நியாயமான பேச்சுவார்த்தையின் அனுகூலம் பற்றிப் புலிகளுக்கு விளக்கி, அவர்கள் அதை ஏற்குமாறு செய்ய தமிழரான இந்திய வெளியுறவுச் செயலர் வெங்கட்ராமன் அவர்களும் ஈடுபடுத்தப்பட்டார். உத்தேச திட்டத்தை முற்றுமுழுதாக நிராகரித்த விடுதலைப் புலிகள், சிறீலங்கா தலைவர்களுடன் அதை விவாதிக்க மறுத்தனர். திட்டத்தை நிராகரிப்பதற்கு புலிகள் வழங்கிய விளக்கத்தை எம்.ஜி. இராமச்சந்திரன் ஏற்கமாட்டார் என்றே பொதுவாக எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், எதிர்பார்ப்பிற்கு மாறாக, புலிகளின் விளக்கத்தை எம்.ஜி.ஆர் ஏற்றுக் கொண்டார். யாரும் இதை எதிர்பார்க்கவில்லை. ஆனாலும் அது அங்கே நிகழ்ந்தது.

பங்களூர் பேச்சுவார்த்தை தோல்வி கண்டதால், ரஜீவ் காந்தியின் அரசியல் மகுட எதிர்பார்ப்பும் மண் கௌவியது. உச்சி மாநாட்டிலே இனப் பிரச்சனைக்கு ஒரு தீர்வு காணப்பட்டிருந்தால், அது ரஜீவுக்கு ஒரு ராஜதந்திர மகுடமாக மாறியிருக்கும். ஆனால் நேர்மாறான ஒன்றே அங்கு நிகழ்ந்தது. ஜெயவர்த்தனா அங்கு நிகழ்த்திய உரை, ரஜீவை ஒரு தர்மசங்கட நிலைக்கு உள்ளாக்கியது. உச்சி மாநாட்டு அரங்கத்தைப் பயன்படுத்தி, ஆயுதம் தரித்த தமிழ் விடுதலை அமைப்புகளுக்கு இந்தியா மறைமுகமாக வழங்கும் ஆதரவை, பயங்கரவாதத்துக்கு இந்தியா வழங்கும் ஆதரவாகக் குறிப்பிட்டு நீண்டதொரு உரையை அவர் நிகழ்த்தினார்.

தீர்வுக்காண அடிப்படையாக முன்வைக்கப்பட்ட அரசியல் யோசனைகளை விடுதலைப் புலிகள் முற்றுமுழுதாக நிராகரித்திருந்தார்கள். இதனால், இந்திய அரசு பெரும் மனக்கசப்பிற்கு உள்ளாகி இருந்தது. விடுதலைப் புலிகளுடனான இந்திய உறவு மேலும் விரிசல் அடைவதற்கு இதுவும் ஒரு காரணமாகியது. இந்திய அரசினரும் வெவ்வேறு புலனாய்வுப் பிரிவினரும் விடுதலைப் புலிகள் மீது தமது அதிருப்தியை தெளிவாக உணர்த்த முடிவு செய்தனர். விடுதலைப் புலிகளும் சரி, ஏனைய போராளிக் குழுக்களும் சரி, தொடாந்து இந்தியாவில் இயங்க முடியாது என்று அவர்களுக்கு உறைக்கும்படி செய்யத் தீர்மானித்தனர். தமிழ்நாடு புலனாய்வுப் பிரிவுகள், மற்றும் காவற்துறை ஆகியவற்றின் துணையோடு, விடுதலைப் புலிகளின் தொலைத் தொடர்பு சாதனங்களைக் கைப்பற்றும் இரண்டாவது மிக முக்கிய நடவடிக்கையை இந்திய அரசு மேற்கொண்டது.

பங்களூர் அரசியல் யோசனைகளை விடுதலைப் புலிகள் நிராகரித்தமையையிட்டு இந்தியா ஆத்திரம் கொண்டிருக்கிறது என்பதை உணர்த்துவதற்காக பிரபாகரன் அவர்களின் தொலைத் தொடர்பு சாதனங்களை இந்தியா பறிமுதல் செய்தது. இது விடுதலைப் புலிகளுக்கும் புதுடில்லிக்கும் இடையே நிலவிய உறவு மீது ஒரு பேரிடியாக அமைந்தது. இந்தியாவின் உள்ளார்ந்த எண்ணங்கள் தொடர்பாக பிரபாகரன் கொண்டிருந்த மதிப்பீட்டுக்குச் சிகரம் வைத்தாற் போல இந்த நடவடிக்கை அமைந்தது. அவரைப் பொறுத்த வரையில், இந்தியா தொடர்பான அனைத்து விடயங்களிலும் ஓர் ஆழமான அவநம்பிக்கையை அவர் மனதிலே பதித்தது.

பங்களூர் பேச்சுவார்த்தையின் முறிவு இந்தியாவுக்கு அதிருப்தியைத் தோற்றுவித்திருந்தது என்பதை பாலாவும் பிரபாகரன் அவர்களும் உணர்ந்தே இருந்தார்கள். இந்தியாவின் அரசியல் தீர்வு எதிர்பார்ப்புகள் அவர்களுக்குப் பலத்த ஏமாற்றத்தையும் அயர்வையும் ஏற்படுத்தியிருந்தன. வடக்கும் கிழக்கும் பிரிக்க முடியாத ஒரே தமிழ்ப் பிரதேசமாக அங்கீகரிக்கப்படவேண்டும் என்ற வேணவாக் கொண்டிருந்த இவர்களுக்கு, கிழக்கு மாகாணத்தை முக் கூறுகளாக்க முனைந்த யோசனை எள்ளளவேனும் ஏற்க முடியாத திட்டமாக இருந்தது. கிழக்கு

மாகாணத்தைப் பிரிக்கும் சிறீலங்காவின் யோசனையை புதுடில்லி ஆதரிக்குமேயென்றால், இந்தியாவின் எதிர்பார்ப்புகளுக்கும் விடுதலைப் புலிகளின் இலக்குக்கும் இடையே உள்ள இடைவெளி, நிரவல் செய்ய முடியாத அளவுக்கு அகன்று விட்டது என்று பாலாவும் பிரபாகரனும் கருதினார்கள். பங்களூர் பேச்சுவார்த்தைக்குப் பின் பிரபாகரன் அவர்களுடைய தொலைத் தொடர்பு சாதனங்களைப் பறிமுதல் செய்த நடவடிக்கை, அவர்களுடைய சந்தேகம் சரியே என்று நிரூபித்ததோடு, ஏற்கனவே நலிவடைந்திருந்த உறவை மேலும் சேதப்படுத்தியது.

தொடர்பு சாதனங்கள் பறிமுதல் செய்யப்பட்ட செய்தி பிரபாகரன் அவர்களுடைய காதில் எட்டியதும், பாலாவுடன் கலந்தாலோசனை புரிவதற்காக அவர் எமது இல்லத்தினுள் புயலெனப் புகுந்தார். கேடு விளைக்கும் இத்தகைய திடீர் முடிவை எடுத்த புதுடில்லி மீது அவருக்கு கடுஞ்சினம். இந்த நடவடிக்கைக்கு காவற்துறையை அனுமதித்த முதலமைச்சர் எம்.ஜி. இராமச்சந்திரன் மீதும் அவருக்குக் கோபம். இந்த நடவடிக்கையைப் பார்க்கும் போது, இந்தியாவில் தாம் தொடர்ந்து இருந்தால் எதிர்காலத்தில் தனது உயிருக்கே ஆபத்து நேரலாம் என்றும் அவர் நம்பினார். தமது பாசறைகளை மூடிவிட்டு யாழ்ப்பாணம் திரும்புவதற்கு முன்னதாகத் தமது சாதனங்களை மீட்க வேண்டும் என்பதில் அவர் குறியாக இருந்தார். வளைந்து கொடுக்காத அசையாப் பிடிவாதம் பிரபாகரன் அவர்களுடைய ஆளுமையில் ஊறிப்போயிருந்தது. அது இப்போது சுரந்து கிளர்ந்தது. தமது சாதனங்கள் திருப்பித்தரப்படும் வரை, சாகும் வரையான உண்ணாவிரதம் மேற்கொள்ள அவர் முடிவு செய்தார். இந்தியாவுக்கு எதிரான குற்றச்சாட்டுக்களை அவர் அடுக்கும் போது, அவருடைய ஊடறுக்கும் கருவிழிகள் அனல் கக்கின. தமது சாதனங்களைத் திருப்பித் தர இந்தியா மறுக்குமேயானால், உயிரற்ற தமது உடலமே எமது வீட்டின் படிகளைத் தாண்டும் என்றும் அவர் சபதம் உரைத்தார். அந்தக் கணத்தில் இருந்தே தமது உண்ணா விரதத்தை எமது வீட்டில் அவர் தொடங்கினார். உணவோ நீரோ அவர் உதடு கடந்து உள்ளே செல்லவில்லை. இப்படியான தளராத உறுதிக்கு முன்னே பாலா வால் எதுவும் செய்ய முடியவில்லை. அதே சமயம் பிரபாகரனுடைய நியாயத்தையும் ஏற்காதிருக்க முடியவில்லை. தமிழ்நாடு அரசியல்வாதிகள், அரசியல் செயற்பாட்டாளர்கள், ஊடகவியலாளர்கள் என்று வெவ்வேறு பிரிவினர் சாரி சாரியாக எங்கள் வீட்டை மொய்த்தார்கள். பிரபாகரனுக்குத் தங்கள் ஆதரவைத் தெரிவித்தார்கள். இந்தப் போராட்ட நடவடிக்கையில் தம்மையும் இணைக்குமாறு அவருடைய தளபதிகளிற் சிலர் கெஞ்சினர். அவருடைய உண்ணாவிரதப்





போராட்டத்துக்கு ஆதரவான ஆர்ப்பாட்டங்களும், தமிழ்நாடு அரசு மற்றும் புதுடில்லி மீதான கண்டனங்களும் வேகம் பெறத் தொடங்கின. எமது வீட்டின் முன்புறத்தே மக்கள் கூட்டம் திரளத் தொடங்கியது. பிரபாகரன் அவர்களுடைய நடவடிக்கையை ஆதரிக்கும் உச்சாடனங்களும் சுருதி கூட்டின.

பிரபாகரன் அவர்களுடைய தொலைதொடர்பு சாதனங்கள் பறிமுதல் செய்யப்பட்டபோது முதலமைச்சர் எம்.ஜி. இராமச்சந்திரன் சென்னையிலிருந்து பல நூறு மைல் அப்பாலுள்ள சேலத்தில் இருந்தார். நிலைமை கட்டுக்கடங்காது மீறும் நிலை கண்டதும், சாதனங்கள் பறிமுதல் செய்யப்பட்டது தமக்குத் தெரியாது என்று அவரும் புதுடில்லியும் மாறி மாறிப் பொறுப்பைத் தட்டிக் கழித்ததோடு, பழியை ஒருவர் மீது ஒருவர் சுமத்தவும் தொடங்கினர். தமது நேசத்துக்கும் மதிப்புக்கும் பாத்திரமான பிரபாகரன் சாகும் வரை உண்ணாவிரதப் போராட்டத்தில் ஈடுபட்டிருப்பதை அறிந்ததும் எம்.ஜி.ஆர் கவலை அடைந்தார். இத்தகைய நடவடிக்கையை புலிகளின் தலைவர் மேற்கொண்டார் என்றால், அவர் அதிலிருந்து பின்வாங்க மாட்டார் என்பதும் முதலமைச்சருக்குத் தெரியும். மாநில அரசின் இந்த ஆத்திரமூட்டும் நடவடிக்கையை ஒட்டி, தமிழ் மக்களிடையே ஒரு பரவ லான எதிர்ப்புணர்வு வேகம் பெறத் தொடங்கியிருந்தது. ஈழத் தமிழரின் வரலாற்று நாயகனுக்கு ஏதாவது நேர்ந்தால், அரசியல் பிரதிகூலங்கள் படு பாதகமாக அமையும் என்பதையும் அவர் உணர்ந்தார். உண்ணாவிர-தத்தின் இரண்டாவது நாளன்று, முதலமைச்சரிடம் இருந்து பாலாவுக்கு அவசரத் தகவல் ஒன்று வந்தது. அதில் உண்ணாவிரதத்தைக் கைவிடுமாறு பிரபாகரனை பாலா வலியுறுத்த வேண்டும் என்று எம்.ஜி.ஆர் கேட்டிருந்தார். காவற்துறையினரின் நடவடிக்கைக்கான காரணத்தை விடுதலைப் புலிகளின் தலைவரைப் பின்னர் சந்திக்கும்போது விளக்குவார் என்றும் தெரிவித்தார். தொலைத் தொடர்பு சாதனங்கள் திருப்பி ஒப்படைக்கப்பட்டாலன்றி புலிகளின் தலைவர் உண்ணாவிரத மறியலைக் கைவிடவே மாட்டார் என்று முதலமைச்சரிடம் அப்பட்டமாக பாலா தெரிவித்தார். நிலைமை பாரதூரமாகிவிட்டதை உணர்ந்த எம்.ஜி.ஆர் கைப்பற்றப்பட்ட சாதனங்களை உடனே திருப்பி ஒப்படைக்குமாறு ஆணை பிறப்பித்தார். பல்வேறு செய்தி ஊடகர்கள், உள்ளூர் அரசியல் தலைவர்கள், பெருந்திரள் ஆதரவாளர்கள் ஆகியோரின் மத்தியில் ஆயாசம் அடைந்த - ஆனால் மன உறுதியும் விடாப்பிடியும் கொண்ட பிரபாகரன் தமது நாற்பத்தி எட்டு மணிநேர உண்ணாவிரதத்தை முடிவுக்கு கொண்டுவந்தார். பல வாரங்களின்

பின்னர், பிரபாகரனுடனும், பாலாவுடனும் முதலமைச்சர் நீண்ட நேரம் கலந்துரையாடினார். அதன் பின்னர் புலிகளிடம் இருந்தும் ஏனைய போராளிக் குழுக்களிடம் இருந்தும் பறித்தெடுத்த ஆயுதங்கள் அனைத்தையும் புலிகளிடமே ஒப்படைக்க வேண்டும் என்றும் அவர் ஆணையிட்டார்.

போராட்டத்தைப் பொறுத்த வரையிலே, பிறர் மீது தங்கியிருக்கலாகாது என்பதில் எப்போதும் உறுதியான நம்பிக்கை கொண்டிருந்த பிரபாகரன் அவர்கள், உண்ணாவிரதம் முடிந்த சில வாரங்களில், இந்தியாவின் பிடியிலிருந்து விலகி யாழ்ப்பாணத்தில் இருந்து சுதந்திரமாக இயங்குவதற்கான திட்டங்களைத் தீட்டினார். இந்தியக் கரைகளில் இருந்து 1987 முற்பகுதியில் இரகசியமாக அவர் வெளியேறி, தமது தாயகத்தை அடைந்தார். பாலாவும் நானும் சென்னையில் தரித்திருந்து, நாம் வெளியேறும் காலம் வரும்வரை எமது அரசியற் பணியைத் தொடர வேண்டும் என்று கேட்கப்பட்டோம். ரஜீவ் நிர்வாகம் மேற்கொண்ட நெருக்குவார, அடாவடித்தன ராஜதந்திரத்தினால், ஏற்பட்ட நீண்டகால, கசப்பான அனுபவம் விடுதலைப் புலிகளின் இதயங்களில் ஆழமான வடுவை ஏற்படுத்தியிருந்தது. இந்திய அரசியல் அமைப்பின் உள்ளார்ந்த சிக்கல்கள், முரண்பாடுகள் பற்றிய தெளிவான புரிந்துணர்வையும் அவர்கள் பெற்றிருந்தார்கள். பிரச்சனைக்கான அரசியற் தீர்வு, இந்தியாவின் மத்தியஸ்தத்துடன் அப்போதைக்கு இடம்பெற வாய்ப்பில்லை என்பதும் தெளிவாகத் தெரிந்தது. தமிழ் மக்களுக்கு எதிரான 1983 ஆம் ஆண்டு வன்முறைகளுக்குப் பின்னர், தமிழ் மக்களின் அரசியல் போராட்ட வரலாற்றில் 1987ம் ஆண்டானது கொந்தளிப்பான ஒரு முக்கிய காலகட்டமாக விரியத் தொடங்கியது. இந்த ஆண்டிலேயே இந்தியத் தலையீடானது எதிர்பாராத திருப்பத்தை ஏற்படுத்தியது; தமிழ் மக்களின் உளப்பாங்கிலும் அரசியலிலும் ஆழமான தாக்கங்களையும் பதித்தது.





# அத்தியாயம் IV

# இந்திய-புலிகள் யுத்தம்

"அதென்ன. இடிச்சத்தமா?" யாழ்ப்பாணம் வல்வெட்டித்துறையில் உள்ள எங்கள் வீட்டில் போராளி ஒருவரிடம் நான் வினவினேன். வீட்டு விறாந்தையில் நின்றபடி வெளியே பார்த்தேன். காலை வேளை; நிர்மலமான வானம்; தூரத்து இடிமுழக்கம் காதில் விழுந்து கொண்டிருந்தது. "இல்லை அன்ரி" போராளியின் குரலில் ஆற்றாமை இழையோடியது. "அது இந்தியாக்காரர்; பலாலி இராணுவ முகாமில் இருந்து யாழ்ப்பாண நகரம் மீது ஷெல் அடித்துக் கொண்டிருக்கிறார்கள்." யாழ்ப்பாண நகரம் மீது ஷெல் அடி நாட்கணக்கில் நடந்து கொண்டிருந்தது. முன்பு ஒரு நாள் எமது போராளிகளுக்கு இராணுவப் பயிற்சி வழங்கிக் கொண்டிருந்த இந்திய இராணுவம் இன்று தனது இராணுவ, ஆற்றலையும், ஆயுதங்களையும் எமக்கு எதிராகத் திருப்பி விட்டிருந்தது. இது தலைகீழான ஒரு நிலைமை மாற்றம். ஆசிய அரசியல் அரங்கின் சகடவோட்டம். சென்னையில் இருந்த காலம் தொடக்கம், விடுதலைப் புலிகளுக்கும் புதுடில்லிக்கும் இடையே அடிக்கடி நிலவிய கருத்து மோதல், முரண்பாடு, சந்தேகம் ஆகியவை அடங்கிய உறவின் சிகரமாக இப்போது பகிரங்கமான போர் ஒன்று, விடுதலைப் புலிகளுக்கும், இந்திய அமைதிப் படைக்கும் இடையே நடந்து கொண்டிருந்தது. இது நடந்தது 1987 ஒக்டோபரில்.

விடுதலைக்கான போராட்டத்தில் வரிந்து செல்லும் கொடுந்துயர் நிறைந்த இந்தக் கால கட்டத்தைப் பின்னோக்கிப் பார்க்கும் போது, எதிரும் புதிருமான உணர்வுகள் சலனப்பட்டு மிதந்து வரும். தமிழர் தாயகத்தில் இந்தியா, சிறீலங்கா, விடுதலைப் புலிகள் ஆகியோரின் அரசியல் நலன்கள் முரண்பட்டவையாக இருந்தபோதிலும், போருக்கான காரணத்தை இப்போது வகைப்படுத்திப் பார்க்கும் போது தப்பபிப்பிராயமும் அச்சமுமே அடிப்படைக் காரணம் எனக் கூறலாம். ஒருவர் மீது ஒருவர் குற்றச்சாட்டுக்களை மாறி மாறிச் சுமத்திக் கொண்டிருந்தாலும், இறுதியில் இந்தப் போரின் கொடிய அனர்த்தங்களுக்கு முகம் கொடுத்தவர்கள் தமிழ் மக்களே என்பதுதான் உண்மை. இதில், ஈடு செய்யமுடியாத ஒப்பற்ற மனித வளத்தையும், பொருள் வளத்தையும் தமிழினம் பறிகொடுத்தது. அதில் எதிர் வார்த்தைக்கே இடமில்லை. தாக்குதலுக்கு உள்ளான வேளையில்

தமிழீழ மக்கள், பாராட்டத்தக்க வகையிலே தனியொரு இனமாக, ஒன்றுபட்டு நின்றார்கள்; வளைந்து கொடுக்க மறுத்தார்கள். தமது வரலாற்றின் நெருக்கடி மிக்க இந்தக் காலப்பகுதியில், இரக்கமற்ற கொடிய எதிரிக்கு முகம் கொடுக்கும் கட்டத்தில் உண்மையிலேயே மலைக்க வைக்கும் துணிச்சலோடும், தனித்துவத்தோடும் அளவிட முடியா மனோ பலத்தோடும், தமிழ் மக்கள் நிமிர்ந்து நின்றார்கள்.

அவல சம்பவங்கள் அடுதொடராக நிகழ்ந்தன. அவை, ஒரு புறம் மக்களின் தேசிய உணர்வுகளை ஒன்று திரள வைத்து, கூட்டு விழிப்புணர்வைத் தோற்றுவித்தன. மறுபுறம், இந்திய அமைதிப் படைக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையே பாரதூரமான தப்பபிப்பிராயங்களையும் முரண்பாடுகளையும் தோற்றுவித்தன. இதனால், இரு சாராருக்கும் இடையே விரிசலும் பகைமை உணர்வும் வளர்ந்தன. விடுதலைப் புலிப் போராளிகளில் முன்னணியில் இருந்தவர்களும் மக்களால் நேசிக்கப்பட்டவர்களுமான சிலருடைய மரணம் தவிர்க்கப்படக்கூடியதும், அனாவசிமாகவும் இருந்தபோதும், அது தோற்றுவித்த சமூகச் சீற்றத்தில் நானும் மனசாரப் பங்கு கொண்டேன். இறந்த அந்தப் போராளிகள் மாவீரர் மட்டுமல்ல, எமது நெருங்கிய கூட்டாளிகளுமாவர். ஆனால் உலகின் மிகப் பெரிய இராணுவத்தைக் கொண்ட ஒரு பிராந்திய வல்லரசுக்கும் ஒரு கெரில்லாப் படைக்கும் இடையே நிலவிய பொது உறவு, சீர்படுத்த முடியாத அளவுக்கு எவ்வாறு சீரழிந்தது என்பதையும், பகிரங்கமான இராணுவ மோதலுக்கு எவ்வாறு இட்டுச் சென்றது என்பதையும் புரிந்து கொள்வது புதிராக இருக்கிறது. எப்படியோ, விடுதலைப் புலிகளுக்கும் இந்திய அமைதிப் படைக்கும் இடையே 1987 ஒக்ரோபர் 10 இல் போர் மூண்டபோது தமிழினம் விக்கித்து நின்றது.

போர் தொடங்கிய முதற்கட்ட வேளையில், நாம் வல்வெட்டித்துறையில் வாழ்ந்து கொண்டிருந்தோம். அந்தக் கட்டத்தில் இடையறாத பீரங்கிச் சத்தமே காதில் விழுந்தது. போர் எவ்வளவு தீவிரமாகவும் எங்கெங்கு நடைபெறுகிறது என்பதும் எமக்கு முதலில் தெரியாது. பிரபாகரன் அவர்களைத் தேடிச் சென்று யாழ்ப்பாணப் பல்கலைக்கழக விளையாட்டுத் திடலிலே இந்திய இராணுவம் இறங்க முற்பட்ட முயற்சி முறியடிக்கப்பட்டது பற்றியோ, பலாலி இராணுவ முகாமிலிருந்து புறப்பட்டு யாழ்ப்பாண நகரை நோக்கி முன்னேற முனைப்பட்டது பற்றியோ எமக்குத் தெரியாது. ஆனாலும் நாள் செல்லச் செல்ல பொதுமக்களும் போராளிகளும் பலியாவது எண்ணிக்கையில் அதிகரித்துச் செல்லும் துயரச் செய்தி எம் காதுகளை எட்டியது.





இடையறாத பீரங்கி ஒலியும், எமது இழப்புகள் அதிகரிக்கும் செய்தியும், நிலைமை இனிச் சுமூகமாக முடியாது என்ற உண்மையை எமக்கு உறைக்கச் செய்தது. மோதல் தொடங்கிய வேளை, பாலா யாழ்ப்பாண நகரில் இருந்தார். இந்தியப் படைகளின் யாழ்ப்பாண நகரச் சுற்றி வளைப்பை ஊடறுத்து, பாலாவும் சில போராளிகளும் வெளியே வந்து வல்வெட்டித் துறையில் உள்ள எமது இல்லத்தை அடைந்த பின்னரே போர் நிலைமை பற்றியும் மோதலுக்கு முன்னும் பின்னும் நிலவிய நிலைமை பற்றியும் தெளிவான விபரம் எனக்குத் தெரிந்தது. வீடு திரும்பிய வேளை, உணர்ச்சிபூர்வமாகவும் அறிவுபூர்வமாகவும் பாலா அயர்வடைந்திருந்தார். நிலைமை சீரழிவு கண்டு ஆற்றாமையும் துயரும் கொண்டிருந்தார். விடுதலைப் புலிகளுக்கும் இந்திய இராஜ தந்திரிகளுக்கும் படைத்தளபதிகளுக்கும் இடையே அனைத்துத் தொடர்புகளிலும் தீவிரமாக பாலா ஈடுபட்டு இருந்தவராதலால், அரசியல் கோலம் வேகமாக சீரழிவதையும் இராணுவ மோதல் தவிர்க்க முடியாது இருக்கப்போகிறது என்பதையும் அவர் கணிப்பிட்டிருந்தார். ஆயினும் போர் மூள்வதை அவர் விரும்பவில்லை. இந்தியாவுடன் போரைத் தவிர்ப்பதற்காக தம்முடைய இராஜதந்திரத் திறன்களையும் பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காணும் ஆற்றல்களையும் கூடுமான அளவு பயன்படுத்தி வந்தார். இருப்பினும் துரதிர்ஷ்டவசமாக சம்பவங்களும், எதிர்விளைவுகளும் அடுத்தடுத்து வேகமாக நிகழ, விடுதலைப் புலிகளுக்கும் இந்திய அமைதிப் படைக்குமிடையே நேரெதிர் மோதலாக அது பரிணமித்திருந்தது. போரின் நீண்ட காலப் பாதிப்பு எவ்வாறு இருக்கும் என்பது எம் இருவருக்கும் புரிந்தது. இந்தியாவுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையிலான எதிர்கால உறவு மட்டுமல்ல, போராட்டமும் இனிப் போரினால் ஏற்கனவே களைப்புற்றிருந்த தமிழ் மக்களும் உடனடியாகப் பாதிக்கப்படப் போகிறார்கள் என்பதையும் உணர்ந்திருந்தோம். தமிழ் மக்களுக்கு இது ஒரு பாரதூரமான பின்னடைவாகவே அமைந்தது.

இந்திய அமைதிப்படை தொடர்பாகவும் புதுடில்லி தொடர்பாகவும் யாழ்ப்பாண மக்கள் கொண்டிருந்த கணிப்பும் எதிர்பார்ப்பும் தகர்ந்து போயின. இந்திய இராணுவம் தம்மீது கொலைக் கருவிகளைப் பிரயோகிக்கிறது என்பது, அவர்களை வாயடைக்கச் செய்தது. இத்தகைய கடுமையான இராணுவ நடவடிக்கையை ஏற்றுக் கொள்ள, மனதாலும், உணர்வாலும் மக்கள் தயாராக இருக்கவில்லை. தமது வரலாற்றுப் பகைவரான சிங்களவரின் வெறுப்பையும் இனவாதத்தையும் புரிந்து கொள்ள அவர்களால் முடிந்தது. ஆனால்

பண்பாட்டு அடிப்படையிலும் இன அடிப்படையிலும் உறவுடைய அண்டை நாட்டவர், கொலைபுரியும் எதிரிபோல நடக்க முற்பட்ட போது தமக்கு துரோகம் இழைக்கப்பட்டது போல மக்கள் விக்கித்த நிலையில் நின்றார்கள். சிங்கள அரச ஒடுக்குமுறையாலும் நீடித்த போராலும் பல தசாப்தங்களாக அரசியல் மற்றும் இராணுவ வன்செயலுக்கு முகம் கொடுத்த தமிழ் மக்கள், இந்திய இலங்கை ஒப்பந்தம் காரணமாகக் கிடைத்த போரோய்வுக்கு அமைவாக, சிறிது கால அமைதியைச் சுகித்து வந்திருந்தார்கள். இந்தியாவுடன் போர் மூண்டதும் அவர்கள் அதிர்ந்து போனார்கள். தம்மீதும் தமது போராட்டம் மீதும் இது பாரதுரமான தாக்கங்களை ஏற்படுத்தப் போவதையும் அவர்கள் உணர்ந்தார்கள். வல்வெட்டித்துறையிலே வீதி முனைகளிலும் வீடுகளிலும் மக்கள் சிறு சிறு குழுக்களாகக் கூடினார்கள்; ஆழ்ந்த கவலையுடன் அவர்கள் காணப்பட்டார்கள். தாம் எதிர்நோக்கப் போகும் பாரிய அவல நிலையைப் பற்றிய கவலையே அவர்களிடம் இருந்தது.

வல்வெட்டித்துறையில் இருந்து விடுதலைப் புலிப் போராளி அணிகள் யாழ்ப்பாணப் போர்முனைக்கு நகரத் தொடங்கின. துப்பாக்கிகளைத் தோளில் சுமந்த வண்ணம் வரிசை வரிசையாக அவர்கள் நடந்து செல்வது தெரிந்தது. யாழ்ப்பாண நகரிலே தங்கள் உறவினர்க்கு என்ன நேர்ந்தது என்பதை அறிவதற்காக, மக்கள் சிலர் அங்கும் இங்கும் ஆற்றாமையோடு ஓடி ஓடித் திரிந்தார்கள். விடுதலைப் புலிகளுக்கும் இந்தியப் படைக்கும் இடையே கடும் மோதல்கள் நடந்ததாக வதந்திகள் சிறகு கட்டிப் பறந்தன. பொதுமக்கள் பலர் பாதிக்கப்பட்டதாகவும், வீடுகளும் சொத்துக்களும் தூள் தூளாக்கப்பட்டதாகவும் பாதுகாப்புத் தேடிச் சிதறி ஓடும் மக்களால் வீதிகள் நிரம்பி வழிவதாகவும் கதை உலாவியது.

இரண்டரை ஆண்டுகளின் பின்னர், எதிர்பாராத சம்பவங்களின் விளைவாக, இந்தியப்படை, தமிழர் தாயகத்திலிருந்து வெளியேற நிர்ப்பந்திக்கப்பட்டது. முடிவிலே, புதுடில்லி - சுட்டிப்பாகக் கூறுவதானால், ரஜீவ் நிர்வாகம், மானுடத்துக்கு எதிரான குற்றம் புரிந்தது தெரிந்தது. ஆறாயிரம் தமிழ்ப் பொதுமக்கள் கொல்லப்பட்டிருந்தார்கள். அவர்களுடைய கடின உழைப்பால் பெற்ற சொத்துக்களின் சேதம் மதிப்பிட முடியாததாக இருந்தது. ஆயிரமாயிரம் மக்கள் கைது செய்யப்பட்டிருந்தார்கள். தடுத்து வைக்கப்பட்டு இருந்தார்கள். சித்திரவதைக்கு உட்படுத்தப்பட்டிருந்தார்கள். எண்ணற்ற தமிழ்ப் பெண்கள் கூட்டுக் கயமைப் பாலியல் வன்தாக்குதலுக்கு ஆளானார்கள். இத்தகைய பெருந்தொகைப் படுகொலைகளையும் சொத்துடைமைச்





சேதங்களையும் புரிய வேண்டிய அவசியம் எதுவாக இருந்தது என்பது பற்றிய நியாயத்தை, புதுடில்லி இதுநாள் வரை, திருப்திகரமாக விளக்கத் தவறிவிட்டது. இந்தக் கொடிய நிகழ்வுகள் இடம் பெற்றபோதும், தங்கள் நம்பிக்கைக்குரிய பலம் மிக்க அண்டை நாடு தமது நம்பிக்கையைத் தகர்த்த போதும் தங்கள் அரசியல் எதிர்காலத்தை நிர்ணயிப்பதில் இந்தியா ஓர் ஆதரவு நாடாக முக்கிய பங்கு வகிக்க வேண்டும் என்று தமிழ் மக்கள் இன்னமும் எதிர்பார்ப்பது வியத்தற்குரியதே.

குறித்த ஓர் ஆண்டில், அரசியல் இராணுவ நிகழ்வுகள் ஒன்றன் பின் ஒன்றாக குவிந்து ஏற்படுத்திய பாதிப்புகளின் விளைவாக, இந்திய-விடுதலைப் புலிகள் போர் நிகழ்ந்தது. தமிழ் மக்களின் போராட்ட வரலாற்றிலே பாரதூரமான அவலங்களை ஏற்படுத்திய ஆண்டு, இந்த ஆண்டு. அதுவே 1987!

## சிங்கள இராணுவ படையெடுப்பு

பிரபாகரன் அவர்கள் 1987 ஜனவரியிலே இந்தியக் கரைகளை விட்டு அகன்றபோது, இந்தியாவின் அடாவடித்தன இராஜதந்திரம் தொடர்பாக, கசப்புணர்வுடனேயே வெளியேறினார். தாம் வெளியேறிய போது இருந்த பகைமை நிலைமையை விட, இனித் தொடரப் போகும் நிலைமை கூடுதலான பேரிடரை விளைவிக்கப் போகின்றது என்பதை அப்போது அவர் ஊகித்திருக்க முடியாது. நாமும் அதை எதிர்பார்க்கவில்லை. ஆயினும், அரசியல், இராணுவ நிலவரம் தொடர்ந்து சீரழிந்து செல்ல இந்தியாவோ, சிறீலங்காவோ அனுமதிக்கப் போவதில்லை என எண்ணினோம். அரசியல் இணக்க முயற்சிகள் தோல்வி கண்டிருந்தன. விடுதலைப் புலிகள் தங்கள் இராணுவ ஏற்பாடுகளை தீவிரப்படுத்தியிருந்தார்கள். பிரபாகரன் அவர்களும் தாம் யாழ்ப்பாணம் திரும்பிய பின், போராட்டத்தை எவ்வாறு நடத்த விரும்புகிறார் என்பது பற்றிச் சில இலக்குகளை வைத்திருந்தார். ஆனால், சில அரசியல் முனைப்புகளும் இராணுவ நடவடிக்கைகளும் நிலைமையைச் சீரழிக்கத் தொடங்கியிருந்தன. பிரபாகரன் அவர்கள் யாழ்ப்பாணம் சென்றடைந்தவுடன் தெரிவித்த தகவலில், யாழ்ப்பாண தீபகற்பத்தில் முக்கிய இராணுவத் தாக்குதலை நடத்துவதற்கு ஆயத்த மாக சிறீலங்கா இராணுவம் மிகப் பெரிய படை நகர்வில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதாக அறிவித்தார். சிறீலங்காப் படைகளின் பழிவாங்கும் இராணுவ நடவடிக்கைகள் மக்கள் அடர்த்தியாக வாழும் யாழ்ப்பாண தீபகற்பத்தில் மேற்கொள்ளப்படும்போது, பெருந்தொகையான

பொதுமக்கள் நேரடியாகப் பாதிக்கப்படப் போகிறார்களோ என்று பெருங்கவலை அடைந்தோம். இராணுவத் தாக்குதல் திட்டத்தோடு, சிங்கள அரசு, வடக்கின் மீது ஈவிரக்கமற்ற பொருளாதாரத் தடையைச் சுமத்தியது. மக்கள் மீது இது சொல்லொணாத் துயரப் பளுவை ஏற்றியது. சிறீலங்கா அரசு விடுதலைப் புலிகளுடன் நடத்திய போரில், இஸ்ரேலியரின் கிளர்ச்சி முறியடிப்பு நுட்பத்தைத் தருவித்துப் பயன்படுத்தியது. கெரில்லாப் படையினருக்கும், பொதுமக்களுக்கும் இடையே ஒரு பிளவை ஏற்படுத்தி, இயக்கம் பெற்றிருந்த மக்கள் ஆதரவைத் துண்டிப்பதே, அவர்களுடைய கிளர்ச்சி முறியடிப்பு முயற்சியின் குறியாக அமைந்தது. இஸ்ரேலியர் வழங்கிய அறிவுரைப்படி கெரில்லா படைத் தாக்குதல் நடக்கும்போதும், அரச எதிர்ப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்போதும், மக்களைக் கூட்டாகத் தண்டிக்கும் நடைமுறையை சிறீலங்கா அரசு ஆண்டாண்டாகக் கடைப்பிடித்து வந்தது. கிளர்ச்சி எதிர்ப்பு நடவடிக்கையாக இந்த முறை "கூட்டுத் தண்டனை முறை" என்று அழைக்கப்பட்டது. மக்களின் மன உறுதியை முறியடிப்பதே இதன் நோக்கமாகும். வடக்கின் மீது பொருளாதாரத் தடையைச் சுமத்தி, கூட்டுத் தண்டனை மூலம் மக்கள் மீது ஆற்றொணாத் துன்பத்தைப் பளுவேற்றும் போது பொதுமக்கள் விடுதலைப் புலிப் போராளிகளுக்கு எதிராகத் திரும்புவார்கள் என்று ஜெயவர்த்தனா அரசு தவறாக எடைபோட்டது. எதிர்பார்ப்புக்கு மாறாக, பொதுமக்களின் சீற்றம் சிங்கள அரசுக்கு எதிராகவே திரும்பியது.

அரச படைகள் தங்கள் இராணுவத் தாக்குதல் நடவடிக்கைகளை 1987 முற்பகுதியில் தொடர்ந்து நடத்தின. விடுதலைப் புலிப் போராளிகளிடம் இருந்து அதற்குப் பலத்த எதிர்ப்புக்கு கிடைத்தது. சிறீலங்கா இராணுவத்தின் தாக்குதற்போரும், விடுதலைப் புலிகளின் தற்காப்புப் போரும் அதிகரித்து நீண்டன. தமிழரின் தாயகம் எங்கும் போராட்டம் இடம்பெற்றது. உக்கிரமடைந்த இந்த வன்செயலைச் சென்னையில் இருந்து நாம் பார்த்துக் கொண்டிருந்தோம். இன அழிப்பு எண்ணத்துடனேயே ஜெயவர்த்தனா இந்த இராணுவ நடவடிக்கையை நடத்துகிறார் என்றும் அஞ்சினோம். வன்முறையும் எதிர்வன்முறையும் 1987 முற்பகுதியில் தீவிரம் பெற்றதோடு, மே மாதம் 26 ல் முழு நிலை படையெடுப்பில் சிங்கள அரசு ஈடுபட்டபோது, அந்த வன்முறையும் உச்சத்தை எட்டியது. அந்தத் தாக்குதலுக்கு சிங்கள அரசு "விடுதலை நடவடிக்கை" என்று பெயர் சூட்டியது.

மக்கள் அடர்த்தியாக வாழும் வடமராட்சி மீது சிறீலங்கா அரசு தனது கூட்டுப்படைத் தாக்குதலை கட்டவிழ்த்து விட்டதோடு, தமிழ்





மக்களின் பாதுகாப்பை அது முற்றாகப் புறக்கணித்தது. பிரபாகரன் அவர்களுடையதும், பல புலித் தளபதிகளினுடையதும் சொந்த இடம் வடமராட்சியே. வடமராட்சி மக்களைத் தண்டித்து, புலிகளுக்கு அவர்கள் வழங்கும் ஆதரவை முறியடிப்பதே இந்தத் தாக்குதல் நடவடிக்கையின் முக்கிய நோக்கங்களில் ஒன்றாகும். அந்த வேளையில், வடமராட்சியில் இருந்த புலிப் போராளிகளின் தொகை மிகச் சிறியதே. ஆனால் அவர்களுக்கு எதிராக ஏவிவிடப்பட்ட அரச படைகளின் எண்ணிக்கையோ மிகப் பெரியது. இதுவும் அரசின் உள்நோக்கத்தை வெளிப்படுத்தியது. யாழ்ப்பாணத்தில் இருந்து எம்மை வந்தடைந்த செய்திகளின் படி, ஆயிரமாயிரம் அரச படையினர் மிகக் கொடூரத் தாக்குதலைத் தொடுத்திருந்தனர். பெருந்தொகைப் பொதுமக்கள் காயமடைந்தும் பலியாகியும் இருந்தார்கள். பெருமளவு சொத்துக்களும் அழிக்கப்பட்டிருந்தன. எரியூட்டும் குண்டுகள் கண்மூடித்தனமாக விமானத்தில் இருந்து பொழியப்பட்டன. இடைவிடாத பீரங்கிக் குண்டுகளும் ஏவப்பட்டன. ஒரு சிறிய புவியியற் பரப்பின் மீது பாரிய தாக்குதல் குவிக்கப்பட்டது. பலத்த சேதம் விளைந்தது. கண்மூடித்தனமான பேரழிவை ஏற்படுத்துவதே அரசின் நோக்கம் என்பது புரிந்தது.

பாதுகாப்பற்ற கரையோரத் தமிழ்க் கிராமங்கள் மீது கடலிலே இருந்து கடற்படைப் பீரங்கிப்படகுகள் ஏவிய எறிகணைகள் பொதுமக்களையே இலக்காகக் கொண்டிருந்தன. சிறீலங்கா இராணுவம் வடமராட்சியை ஆக்கிரமித்த பின், அது நடத்திய தேடுதல்களும், சுற்றிவளைப்புகளும், இளைஞர்களைக் கைது செய்து சிங்களத் தெற்கில் உள்ள வெவ்வேறு சிறைகளுக்குப் பிரித்து அனுப்பி வைப்பதும், அச்சம் தரும் நடவடிக்கைகளாகவே அமைந்தன. இராணுவத் தாக்குதல் பொதுமக்களையே இலக்காகக் கொண்டிருந்தது என்பதை நிரூபித்தது. இராணுவச் சுற்றிவளைப்புகளின் போது தமிழ் இளைஞர்கள் காணாமற் போயிருக்கிறார்கள். அவ்வாறே சிங்களத் தெற்கில் உள்ள வெவ்வேறு தடுப்பு முகாம்களிலும் சிறைகளிலும் தமிழ் இளைஞர்கள் காணாமற் போயிருக்கிறார்கள். இவற்றை மனித உரிமை அமைப்புக்கள் விளக்கமாக பதிவு செய்திருக்கின்றன.

வடமராட்சியை ஆக்கிரமித்த சிறீலங்கா இராணுவப் படைகள் யாழ்ப்பாண தீபகற்பத்திலும் மேலும் அடர்த்தியாக மக்கள் வாழ்ந்த பகுதியான வலிகாமம் மீதும் தனது நடவடிக்கையைத் தொடங்கியது. விடுதலைப் புலிகளும் தங்கள் பங்குக்கு வடமராட்சிக்குள் ஊடுருவினார்கள். ஆக்கிரமிக்கும் இராணுவம் மீது கெரில்லாத்

தாக்குதல்களை நடத்தி பலத்த உயிர்ச் சேதத்தையும் விளைவித்தார்கள். ஆக்கிரமிப்பாளருக்கு எதிரான ஒரு முக்கிய பதிலடித் தாக்குதலில், விடுதலைப் புலிகள் முதற்தடவையாக கரும்புலித் தாக்குதல் அணியையும் பயன்படுத்தினார்கள். வடமராட்சி இராணுவத் தலைமைப் பணிமனை மீது நிகழ்த்தப்பட்ட இந்தத் திகிலூட்டும் தாக்குதலில் கப்டன் மில்லர் தாமாகவே முன்வந்து தமது உயிரைக் கொடைபுரிந்து விடுதலைப் புலிகளின் முதற் கரும்புலியானார். வடம ராட்சி கரவெட்டி வாசியான கப்டன் மில்லர் சிறீலங்கா இராணுவத்தின் புதிய தலைமைப் பணிமனைகளை உள்ளடக்கியிருந்த நெல்லியடி மத்திய கல்லூரிக்குள் வெடிபொருள் நிரம்பிய லொறி வண்டி ஒன்றை வேகமாக ஓட்டி மோதினார். அதனால் ஏற்பட்ட வெடி கட்டடத்தை தரைமட்டமாக்கியது. நூற்றுக்கணக்கான அரச படையினரைக் கொன்றது. அந்தப் பகுதியில் இராணுவ ஆக்கிரமிப்பையே நிலை குலையச் செய்தது. விடுதலைப் புலிகளின் போராட்டப் பதிவேட்டில் 1987 ஜூலை 5, ஒரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நாளாகும்.

சிறீலங்கா இராணுவ நடவடிக்கையின் தாக்கத்தை அங்கலாய்ப்போடு புதுடில்லி பார்த்துக் கொண்டிருந்தது. தமிழ்ப் பொதுமக்களுக்கு எதிரான வன்முறைகள் வளர்ந்து செல்வதும், மக்கள் மீது பொருளாதாரத் தடை ஏற்படுத்தும் கொடிய தாக்கங்களும் புதுடில்லியில் அச்சத்தைத் தோற்றுவித்தன. யாழ்ப்பாணக் குடாநாடு மீது கொழும்பு நடத்தும் இராணுவ நடவடிக்கை தொடர்பாகப் புதுடில்லி வெளியிட்ட கண்டன அறிக்கையில் சிறீலங்கா பாதுகாப்புப் படைகளால் இன அழிப்பு மேற்கொள்ளப்படுகிறது என்ற தொனி காணப்பட்டது. பெருந்தொகையான தமிழ்ப் பொதுமக்கள் உயிர்ச் சேதத்துக்கு ஆளாகி வருவது தொடர்பாக இந்தியா தெரிவித்த ஆழ்ந்த கவலைக்கு சிறீலங்கா அரசு பதிலளிக்கத் தயங்கிக் கொண்டிருந்தது. ஈழத் தமிழர்கள் மீது இழைக்கப்பட்ட கொடுமைகளுக்கு முற்றுப் புள்ளி வைக்க இந்தியா தலையிடவேண்டும் என பரந்து பட்ட இந்திய மக்களிடமிருந்து எழுந்த நெருக்குவாரமும் புதுடில்லியை நிர்ப்பந்தித்தது. எனவே, யாழ்ப் பாணத்தில் முற்றுகைக்கு உள்ளான தமிழ் மக்களுக்கு, மனிதாபிமான உதவிகளுடன் 1987 ஜுன் 2ம் திகதியன்று ஒரு கூட்டம் படகுகள் அனுப்பி வைக்கப்பட்டிருந்தன. பொருளாதாரத் தடையாலும் இராணுவத் தாக்குதல் நடவடிக்கைகளாலும் மக்களுக்கு ஏற்பட்ட இடுக்கண்ணுக்கு நிவாரணம் வழங்கி அவர்களைத் தக்க வைப்பதே இந்தப் படகுகள் அனுப்பப்பட்டதன் நோக்கமாகும். ஆனால் கடுப்பும், திமிரும் கொண்ட சிறீலங்காக் கடற்படை, தனது கடல் எல்லைக்குள் இந்திய உதவிப்





படகுகளை நுழைய விடாது தடுத்து, விளக்கம் எதுவும் வழங்காது இந்தியாவுக்குத் திருப்பியனுப்பியது. யாழ் தீபகற்பத் தமிழ் மக்களுக்கு மனிதாபிமான உதவிபுரிய முற்பட்ட வேளை சிறீலங்காவால் அவமானப்படுத்தப்பட்ட இந்தியா, தனது விமானப் படைப் போர் விமானங்களின் பாதுகாப்போடு, தளர்ந்து கிடந்த யாழ்ப்பாண மக்களுக்கு அத்தியாவசிய உணவுப் பண்டங்களை விமானப் பொட்டலங்களாக வானிலிருந்து சொரிந்தது. வெகுண்டெழுந்த சிங்கள அரசு, தனது வான் எல்லையை இந்தியா அடாத்தாக மீறிவிட்டதாக குற்றம் சாட்டியது. தனது இறைமையை இந்தியா அவமதித்து விட்டதாக சிறீலங்காவும், இனப்படுகொலையை சிறீலங்கா புரிவதாக இந்தியாவும் ஒருவரை ஒருவர் மாறி மாறிக் குற்றம்சாட்ட, இரண்டு அண்டை நாடுகளுக்கும் இடையே அரசியல் முறுகல் நிலை உரமேறியது.

## இந்திய - இலங்கை உடன்பாடு

கொந்தளிப்பான இந்த நாட்களில் கிட்டு எம்மிடம் சென்னைக்கு வந்தார். யாழ்ப்பாணத்தில் கிட்டுவைக் கொல்ல மேற்கொள்ளப்பட்ட முயற்சியில் அவர் தப்பிப் பிழைத்திருந்தார். அந்தத் தாக்குதலில் கால் துண்டிக்கப்பட்ட நிலையிலே மருத்துவச் சிகிச்சைக்காகச் சென்னை வந்திருந்தார். இதே காலகட்டத்தில், இலங்கைத் தேசிய நெருக்கடிக்கு, அரசியற் தீர்வு ஒன்றை உருவாக்கும் முயற்சி இலங்கைக்கும் இந்தியாவுக்கும் இடையே தீவிரம் பெறுவதாக ஊடகச் செய்திகள் தெரிவித்தன. இந்த முயற்சி புதுடில்லிக்கும் கொழும்புக்கும் இடையில் மட்டுமே நடந்து கொண்டிருந்தது. விடுதலைப் புலிகளுடன் காத்திரமான ஆலோசனை எதுவும் நடக்கவில்லை. இந்தப் புதிய அரசியல் முயற்சி பாலாவுக்கு திருப்தி தரவில்லை. விடுதலைப் புலிகளைக் கலந்தா லோசிக்காமல், ஓர் அரசியற் தீர்வை அவர்கள் எப்படி எடுக்க முடிவு செய்யலாம் என்பதே அவர் வாதம். எவ்வளவுதான் ஆழமான பேச்சுக்களை நடத்தனாலும் சரி, இரு நாடுகளுக்கும் மத்தியில் அரசியல் இணக்கம் காணப்பட்டாலும் சரி, விடுதலைப் புலிகளைப் புறக்கணித்து எடுக்கும் முடிவானது புலிகள் மீதும் தமிழினம் மீதும் திணிக்கப்பட்ட ஓர் தீர்மானமாகவே இருக்கும். அதே சமயம் தமது தேசம் தொடர்பான விடயங்களை ஆராய்ந்து விவாதிக்கும் தமிழ் மக்களின் சனநாயக உரிமை மீறப்பட்டதாகவும் இருக்கும். நிலை இவ்வாறு மாற்றமடைவதை- யொட்டி, நாம் கவலையோடு இருக்கும்போது, தமிழ்நாட்டு முதலமைச்சருடன் கலந்தாலோசனை நடத்துவதற்காக மாநில

காவல்துறையினர் பாலாவை அழைத்துச் சென்றனர். பிரபாகரனும் அவருடைய அணியும் யாழ்ப்பாணத்திலிருந்து இந்தியாவுக்குக் கொண்டு வரப்படுவதாக அவரிடம் அங்கே கூறப்பட்டது. அவர்களோடு சேர்ந்து பாலாவும் சென்னை விமான நிலையத்தில் இருந்து புதுடில்லிக்கு அரசியல் கலந்தாலோசனைக்காகச் செல்ல வேண்டும் என்று அவருக்கு அங்கு கூறப்பட்டது. பிரபாகரனுடைய அணியில் யோகியும், யாழ்ப்பாண அரசியல்துறைப் பொறுப்பாளர் திலீபனும் இருந்தனர். புதுடில்லியில் இருந்து பாலா எனக்குத் தகவல் தந்தார். இந்திய இலங்கை ஒப்பந்தம் என்ற பெயரில் தயாரிக்கப்பட்ட உடன்படிக்கை ஒன்றிலே புதிய யோசனைகள் தங்களுடைய அங்கீகாரத்துக்காகச் சமர்ப்பிக்கப்பட்டிருப்பதாக தெரிவித்தார் விடுதலைப் புலிகளின் பார்வையிலே அந்த உடன்படிக்கை ஏற்க முடியாத ஒன்று என்றும் கூறினார். தாம் தங்கியிருந்த பயணிகள் விடுதி அறைக்குள்ளேயே தமது நடமாட்டம் முடக்கப்பட்டிருப்பதாகவும், கரும்பூனை அதிரடிப் படையினரால் தாம் சூழப்பட்டிருப்பதாகவும் பாலா அறிவித்தார். யோகரத்தினம் யோகியின் கருத்து வெளிப்படையாவே இருந்தது. தமது அணியினர் அச்சுறுத்தப்படுவதாகவும், தாம் வீட்டு மறியலில் வைக்கபட்டிருப்பதாகவும் யோகி கூறினார். தொலைபேசியில் அவருடைய சீற்றம் தெரிந்தது. தங்கியிருந்த விடுதியில் இருந்து வெளியே தொலைபேசித் தொடர்பு கட்டுப்படுத்தப்படுவதாகவும், அது காரணமாக சிறிது காலத்துக்கேனும் பாலாவிடமிருந்து தொடர்பு எதுவும் கிடைக்காமல் போகலாம் என்றும் அவர் கூறினார். புதுடில்லியில் இருந்து சில நாள் கழித்து அவர்கள் சென்னை மீண்டபோது புதுடில்லியில் தாங்கள் நடத்திய பேச்சுவார்த்தை பற்றியே பாலா ஆழமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தார். ஜெயவர்த்தனாவுக்கும், ரஜீவுக்கும் இடையே கைச்சாத்தாக இருந்த ஒப்பந்தம் தொடர்பாகத் தமது ஆழமான நம்பிக்கையீனத்தை பாலா வெளியிட்டார். புதுடில்லியிலே விடுதலைப் புலிகளின் அணி, கடுமையான நெருக்குவாரத்துக்கு உள்ளாக்கப்பட்டிருப்பதாக என்னிடம் அவர் ஒப்புக் கொண்டார். வெளித் தொடர்பு துண்டிக்கப்பட்டு, பலத்த பாதுகாப்புடன் விடுதி அறைகளில் அவர்கள் விடப்பட்டிருந்தார்கள். ஒப்பந்தத்தின் உள்ளடக்கத்தையும் படித்துப் பார்த்துத், தங்கள் ஒப்புதலை வழங்க, சில மணி நேர அவகாசமே அவர்களுக்கு வழங்கப்பட்டது. ஒப்பந்தத்துக்கு விடுதலைப் புலி அணி ஒப்புதல் அளிக்க மறுத்தால் கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்று சிறீலங்காவுக்கான இந்தியத் தூதுவர் டிக்சிற், அச்சுறுத்தியிருந்தார். விடுதலைப் புலிகள் ஒப்பந்தத்தை ஏற்றால் என்ன? நிராகரித்தால் என்ன? அது கைச்சாத்திடப்பட்டு நடைமுறைப்படுத்தப்படும் என்றும் அவர்





நிர்தாட்சண்யமாகக் கூறியிருந்தார். டிக்சிற் அவர்களுடைய வரம்பு மீறிய, அடாவடித்தனமான இராஜதந்திர அணுகுமுறை குறித்து பிரபாகரன் அவர்களும், பாலாவும் சினமடைந்திருந்தார்கள். தமிழ் மக்களின் அரசியல் வேணவாவை அந்த ஒப்பந்தம் சிறிதேனும் நிறைவேற்றாததால், விடுதலைப் புலிகளோ, ஈழத் தமிழ் மக்களோ, அதை ஏற்கமாட்டார்கள் என்று இந்திய இராஜதந்திரியிடம் விடுதலைப் புலிகளின் தலைவர் திட்டவட்டமாகக் கூறியிருந்தார். கடும் நெருக்குவாரம், தொந்தரவு, அச்சுறுத்தல் ஆகியவனவற்றை எதிர்கொண்டபோதும், விடுதலைப் புலிகள் தங்கள் நிலைப்பாட்டில் இருந்து தளரவில்லை. இறுதியில், இந்தியப் பிரதம மந்திரி ரஜீவ் காந்தி அவர்கள், பிரபாகரன் அவர்களையும் பாலாவையும் தமது இல்லத்துக்கு அழைத்தார். ஒப்பந்தம் தொடர்பாக விடுதலைப் புலிகளின் நிலைப்பாட்டை பாலாவும், பிரபாகரனும் பிரதமருக்கு தெளிவு படுத்தினார்கள். அதில் கூறப்படும் மாகாண வடிவமைப்பில் உள்ள வரையறைகளையும் குறை பாடுகளையும் விளக்கினார்கள். வடக்கும், கிழக்கும் ஒன்றானது; இணைந்தது; தமிழ் மக்களின் தாயகம்; இந்த ஐக்கிய ஒன்றிணைவை ஒப்பந்தத்தில் கூறுவது போல கருத்து வாக்கெடுப்புக்கு விடுவது அநியாயமானது; - ஏற்கமுடியாது- என்றும் அவர்கள் வாதாடினார்கள். ஜெயவர்த்தனாவைத் தமிழ் மக்கள் நம்பவில்லை என்றும் ஒருபோதும் தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகளை அங்கீகரிக்க மாட்டார் என்றும் ரஜீவ் காந்திக்கும் அவர்கள் விளக்கி உரைத்தார்கள். அதே சமயம், ஒப்பந்தம் கூறும் வடிவம் நடைமுறைப்படுத்தப்படுவதற்கு முன்னதாக, ஒப்பந்தத்தில் கூறப்பட்டவாறு. அது கைச்சாத்தான எழுபத்திரண்டு மணிநேரத்துக்குள் தமிழ் விடுதலை அமைப்புகளின் ஆயுதங்களைக் களைய வேண்டும் என்ற கோரிக்கையானது ஒரு பெரிய தவறு என்றும் இந்தியத் தலைவருக்கு விளங்கப்படுத்தப்பட்டது. ஒப்பந்தத்தின் உள்ளடக்கம் அவர்களால் ஏற்றுக் கொள்ளப் படமுடியாதது என்ற போதிலும், அதை அவர்கள் எதிர்க்கக்கூடாது என்று ரஜீவ் அவர்கள் வற்புறுத்தினார். வடகிழக்கில், இடைக்கால நிர்வாக அரசு ஒன்றை குறைந்த அதிகாரங்களோடு விடுதலைப் புலிகளுக்கு வழங்குவதாகவும் உறுதியளித்தார். ரஜீவின் யோசனை மட்டில் பிரபாகரன் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை என்றும், இந்திய அரசுடன் மோதலைத் தவிர்க்கும் பொருட்டு ரஜீவின் திட்டத்திற்கு தாங்கள் சம்மதித்ததாகவும் பாலா என்னிடம் கூறினார். புதுடில்லியில் இடம்பெற்ற நிகழ்வுகள் தொடர்பாகப் பிரபாகரன் அவர்களுக்குத் திருப்தி இல்லை. சென்னையில் உள்ள எமது வீட்டுக்கு அவர் வந்தபோது, அவருடைய

போராளிகள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். கொழும்புக்கும் புதுடில்லிக்கும் இடையிலான ஒப்பந்தத்தின் உள்ளடக்கமானது போராட்டத்தை எவ்வாறு பாதிக்கப் போகிறது என்பதை அறியும் பதகளிப்போடு போராளிகள் இருந்தார்கள். தம் மட்டில் இந்திய அதிகாரிகள் அடாவடித்தனமாகவும் அராஜகத்துடனும் நடந்து கொண்டதாகக் கருதிய பாலாவும் பிரபாகரனும் கடுப்புடன் இருந்தார்கள். ஒப்பந்தம் நடைமுறைப்படுத்தப்பட்ட காலம் முழுவதும் இதே உணர்வே அவர்களிடம் மேவி நின்றது. டிக்சிற் அவர்களை ஒரு புத்தி சாதுரிய இராஜதந்திரியாகப் பலர் கருதியபோதும், விடுதலைப் புலிகளின் தலைமை அவரைக் குருபியாகவும், கபட தாரியாகவும் நம்பிக்கைக்கு அருகதையற்றவர் என்றுமே கருதியது. இந்த ஒப்பந்தத்தைத் தயாரிக்கும்போது, தமிழ் மக்களை இது எவ்வளவு தூரத்துக்குப் பாதிக்கும் என்பது கவனத்துக்கு எடுக்கப்பட்டிருக்க வேண்டும். அவ்வாறே தமிழ் மக்களின் விடுதலைப் போராட்டத்தில் புலிகள் வகித்த முக்கிய பங்கையும் கருத்தில் எடுத்திருக்க வேண்டும். ஒப்பந்தம் தொடர்பாகத் தெளிவாகவும், விரிவாகவும் விவாதிப்பதற்கு அவர்களுக்கு போதிய காலமும், இடைவெளியும் வழங்கப்பட்டிருக்க வேண்டும். இவற்றையெல்லாம் புறம் தள்ளி, புதுடில்லியில் விடுதலைப் புலித் தலைவர்கள் மிகவும் கீழ்த்தரமாக நடத்தப்பட்டமை வியப்பையே தருகிறது. இந்த வரலாற்று முக்கியம் பெற்ற நிகழ்வு தொடர்பாக நாம் புரிந்து கொள்ள வேண்டிய விடயம் என்னவென்றால், விடுதலைப் புலிகள் இந்த ஒப்பந்தத்தில் கைச்சாத்திடவில்லை என்பதும், அது உருவாக்கப்பட்டபோது அவர்கள் புறம்தள்ளப்பட்டார்கள் என்பதுமாகும். விடுதலைப் புலிகளின் போராட்டம் மட்டிலும், புதுடில்லி சென்ற அவர்களின் பிரதிநிதிகள் மட்டிலும் அடாவடித்தனமான போக்கைக் கடைப்பிடித்தமையால் இறுதியில், இந்தியா அரசியல் ரீதியாகவும் இராணுவ ரீதியாகவும் பெரிய விலை கொடுக்க வேண்டிநேர்ந்தது.

இந்திய இலங்கை ஒப்பந்தம் கைச்சாத்தானதை அடுத்து இலங்கையில் இரண்டு இனங்களினிடையேயும் நேர்மாறான கருத்துக்களே நிலவின. சிங்களத் தென்னிலங்கையில் இந்திய எதிர்ப்பு உணர்வு தலைதூக்கியிருந்தது. இலங்கையின் உள்நாட்டு விவகாரங்களில் இந்தியா தலையீடு செய்திருப்பதை சிங்கள மக்கள் குறைகூறி ஆர்ப்பாட்டங்கள் நடத்தி எதிர்ப்புத் தெரிவித்தார்கள். வடக்கையும் கிழக்கையும் பொறுத்த வரையிலே, காலாகாலமாக இந்தியாவை ஒரு நேச நாடாகவும், பாதுகாப்பாளராகவும் கருதி வந்த தமிழ் மக்கள், விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள அரச படைகளுக்கும்





இடையே போர் நிறுத்தத்தை கண்காணிக்க வந்த இந்திய அமைதிப் படை தமக்கு பாதுகாப்பையும் அமைதியையும் தரும் எனக் கருதினார்கள். 1987 ஜுலை 30 ல் பலாலி வந்திறங்கிய இந்தியப் படையினர் யாழ்ப்பாண தீபகற்பத்துக்குள் பிரவேசித்த போது, படையினருக்கு பரவலாக மலர் மாலை சூட்டி வரவேற்பளித்தார்கள். அமைதிப் படை வந்த மூன்று மாதங்களுக்குள் அந்தப் படை தொடர்பாக இரண்டு இனங்களும் கொண்டிருந்த கருத்து நேரெதிர்த் துருவங்களைத் தொட்டன. இந்தியப் படைகளை வடக்குக் கிழக்குத் தமிழ் மக்கள் ஆக்கிரமிக்கும் படையாக வெறுத்து எதிர்த்தார்கள். சிங்களவரிற் சில பிரிவினர், விடுதலைப் புலிகளுக்கு எதிராகத் தாம் இது வரை நடத்திய போரை, தமக்குப் பதிலாக இந்தியப் படைகள் நடத்திக் கொண்டிருப்பதையொட்டி மகிழ்ச்சியடைந்தனர். விடுதலைப் புலிகளுக்கும், சிறீலங்கா அரச படைகளுக்கும் இடையே போர் நிறுத்தத்தை நடைமுறைப்படுத்துவதற்காகவே இந்திய அமைதிப் படை வந்திருப்பதாக புலிகள் நம்பிக் கொண்டிருந்தார்கள். ஒப்பந்தத்துக்கு அமைவாக புலிகள் நடக்கத் தவறினால், புலிகளிடமிருந்து வலுக்கட்டாயமாக ஆயுதங்களைக் களையவும் அமைதிப் படையை பயன்படுத்தத் தீர்மானித்திருந்தது என்பது விடுதலைப் புலிகளுக்குச் சிறிதும் தெரியாது. ஆயினும் பலாலி இராணுவத் தளத்தில் இந்தியர் கனரக இராணுவத் தளபாடங்களை இறக்கியபோது புலிகளுக்குச் சந்தேகம் முளைவிட்டது. அமைதி காக்கும் பணியுடன் பீரங்கி வண்டிகளும், கனரக ஆயுதங்களும், எவ்வாறு இணையலாம் என்ற கேள்வி சந்தேகமாக அப்போது உருவெடுத்தது.

இந்தியப் படைகள் யாழ்ப்பாணத்துக்குள் பிரவேசித்ததை அடுத்து, ஓகஸ்ட் 4 ல், பிரபாகரன் அவர்கள், தமது மக்களுக்கு ஓர் உரை நிகழ்த்தினார். யாழ்ப்பாணம் சுதுமலையில் நிகழ்ந்த இப் பொதுக் கூட்டத்துக்கு மிகப் பெரும் சனத்திரள் அணிதிரண்டது. "நான் இந்தியாவை நேசிக்கிறேன்" என்ற தலைப்பில் அவர் நிகழ்த்திய மிகப் பிரபல்யம் வாய்ந்த உரை அது. ஒப்பந்தம் தொடர்பான தமது நிலைப்பாட்டையும் இந்திய அமைதிப் படையினரிடம் ஆயுதங்களை ஒப்படைப்பது பற்றியும் அவர் அதில் விளக்கினார். இந்தியாவின் அரசியல் மற்றும் இராணுவ பலத்தினால் தமது இலட்சியங்கள் கட்டுப்படுவதை அவர் ஒப்புக் கொண்டார். ஆயினும், தனித் தமிழ் நாடு தொடர்பான போராட்டத்தைக் கைவிட அவர் மறுத்தார். மிகக் கவனமாகத் தொகுக்கப்பட்ட இந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த உரையிலே தமிழ் மக்களின் வேணவாவை அவர் வெளியிட்டதோடு, இந்தியாவின்

கேந்திரச் செல்வாக்கும் சுயநிர்ணயத்துக்கான தமிழ் மக்களின் போராட்டமும் உரசுவதையும் அவர் எடுத்துச் சொன்னார். அதன் பின்னர் நடைபெற்ற சம்பவங்கள் அவருடைய கூற்றை, யதார்த்தமானவை என்று நிரூபித்தன. தொடக்கத்தில் இருந்தே ஒப்பந்தத்தை நடை முறைப்படுத்துவதில் சிக்கல் காணப்பட்டது. சிறீலங்காவினதும், இந்தியாவினதும் கருத்துக்கள் மட்டும் கவனிக்கப்பட்டதேயன்றி, பாதிப்புக்கு உள்ளான தமிழ் மக்களின் அங்கலாய்ப்புகள் பொருட்படுத்தப்படவில்லை. எடுத்துக்காட்டாக விடுதலைப் புலிகள் ஆயுதங்களை கீழே வைக்க வேண்டும் என்ற கடப்பாடுகளைத் துரிதமாகச் செயற்படுத்த வேண்டும் என்பதில் இந்திய அமைதிப் படைத் தளபதிகளும் சிங்கள இராணுவ அதிகாரிகளும் வேகம் காட்டினார்களேயொழிய, ரஜீவ் காந்தி வாக்குறுதியளித்த இடைக்கால நிர்வாகம் நடைமுறைப்படுத்தப்படுவதை வேண்டுமென்றே தாமதப் படுத்தினார்கள். இதனால் விடுதலைப் புலிகளிடையேயும் தமிழ் மக்களிடையேயும் சந்தேகம் எழுந்தது நியாயமானதே! விடுதலைப் புலிகள் கணிசமான அளவு ஆயுதங்களை ஒப்படைத்திருந்தனர். சிறீலங்கா அரசுக்கு எதிரான அனைத்து போர் நடவடிக்கைகளையும் நிறுத்தியிருந்தனர். இந்த நிலையிலே வடக்குக் கிழக்கில் இடைக்கால நிர்வாக அமைப்பை இந்திய அரசு நிறுவ வேண்டும் என்று விடுதலைப் புலித் தலைவர்களும் போராளிகளும் எதிர்பார்த்து நின்றார்கள். மாறாக இந்தியர்கள் மௌனமாக இருக்க, தமிழ்ப் பகுதிகளில் சிங்களக் குடியேற்றங்களை சிறீலங்கா அரசத் தலைவர் ஜெயவர்த்தனா தீவிரப்படுத்தியதோடு, கிழக்கிலே புதிய காவற்துறை நிலையங்களைத் திறந்து கொண்டிருப்பதை ஆற்றாமை நிலையில் நின்று விடுதலைப் புலிகள் பார்த்துக் கொண்டிருக்க நேர்ந்தது.

## திலீபனின் சாகும் வரை உண்ணாவிரதம்

யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த திலீபன் என்ற இளம் புலித் தலைவன் நல்லூர்க் கந்தசாமி கோவில் முன்றலில் செப்டெம்பர் 14 ல் இருந்து சாகும்வரை உண்ணாவிரதப் போராட்டத்தை ஆரம்பித்தார். இந்தியா தனது உறுதி மொழியை நிறைவேற்றத் தவறியதைச் சுட்டிக்காட்டும் வகையிலும், தமிழ் மக்களின் ஆற்றாமை உணர்வை, தேசிய மக்கள் எழுச்சியாக ஒன்று திரட்டும் வகையிலும் திலீபனின் உண்ணா மறியல் அமைந்தது. அவருடைய இந்த சாத்வீகப் போராட்டம் தனித்துவம் வாய்ந்தது. ஆயுதப் போராளியான திலீபன், மாபெரும் இந்தியத் தலை





வரான மகாத்மா காந்தியால் உலகுக்கு அறிமுகப்படுத்தப்பட்ட, ஆன்மீகப் பண்பு கொண்ட அகிம்சைப் போராட்ட வழியைக் கையாண்டு, தமிழீழ மக்களின் இக்கட்டான நிலையை இந்திய மக்களுக்கு உணர்த்த முனைந்தார். தமிழ் மக்களும் சரி, விடுதலைப் புலிகளும் சரி, தமது விடுதலைக்காக எந்த எல்லைக்கும் செல்லத் தயாராக இருக்கிறார்கள் என்பது, விடுதலை மட்டில் அவர்கள் கொண்டிருக்கும் ஆழமான பற்றாகப் பிரதிபலிக்கிறது; அவர்கள் மீதான ஒடுக்குமுறையின் சகிக்க முடியாதஆழத்தையும் அது பிரதிபலிக்கிறது. இத்தகைய தாங்க முடியாத ஒடுக்குமுறைக்கு உள்ளாகி இருப்பவர்களும், இன அழிப்புக்கு உள்ளானவர்களும் மட்டுமே தமது இனத்தின் சுபீட்சத்துக்காகத் தம்மையே பலியாக அர்ப்பணிக்கத் தயங்க மாட்டார்கள் என்பது, திலீபன் என்ற அத்தியாயம் புகட்டும் ஒரு வரலாற்றுப் பாடமாகும்.

ஒப்பந்தம் கைச்சாத்திடப்படுவதற்கு முன்னதாக, பிரபாகரன் அவர்களுடைய அணியில் ஒருவராக திலீபனும் புதுடில்லி சென்றிருந்தார். அங்கே இந்தியப் பிரதமருக்கும் விடுதலைப் புலிகளின் தலைவருக்கும் இடையே இடம்பெற்ற பேச்சுவார்த்தையின் உள்ளடக்கம் திலீபனுக்கும் தெரிவிக்கப்பட்டிருந்தது. ரஜீவ் காந்திக்கும் பிரபாகரன் அவர்களுக்கும் இடையே எழுதப்படாத ஒப்பந்தம் ஒன்று ஏற்பட்டதைத் திலீபன் அறிந்திருந்தார். அது நிறைவேற்றப்படாது போனதைக் கண்டதும், தமது மக்களும், தமது போராட்டமும் ஏமாற்றப்பட்டு விட்டதாகத் திலீபன் கருதினார். எனவே அந்த உறுதி மொழிகள் நிறைவேற்றப்பட வேண்டும் என்ற கோரிக்கையோடு சாகும் வரை உண்ணாவிரதப் போராட்டத்தில் ஈடுபட அவர் முடிவு செய்தார். திலீபனின் இந்த உண்ணாவிரதம் பற்றிய செய்தியும் விடுதலைப் புலிகளுக்கும் அமைதிப்படைக்கும் இடையே அரசியல் உறவு சீர்குலைந்து போகும் செய்தியும் எமது செவிகளை எட்டியதும் இந்தியாவை விட்டு யாழ்ப்பாணம் புறப்படத் தீர்மானித்தோம்.

இந்திய-இலங்கை ஒப்பந்தம் கைச்சாத்தானதை அடுத்து சென்னையில் இருந்து சில விமானப் பயண வசதிகள் ஏற்பாடு செய்யப்பட்டன. நாடு கடத்தப்பட்டு இந்தியாவில் வாழ்ந்து கொண்டிருந்த சில ஈழத் தமிழ்ப் பிரமுகர்கள், வடக்குக் கிழக்கில் உள்ள தங்கள் இல்லங்களுக்குத் திரும்ப, இந்த விமானப் பயண ஏற்பாடுகளை இந்திய அதிகாரிகள் செய்திருந்தார்கள். ஆனால் இந்த வாய்ப்பைப் பயன்படுத்த நான் விரும்பவில்லை. கடந்த சில ஆண்டுகளாக எம்மைச் சந்திக்கச் சென்னைக்கு வந்த பல போராளிகள் பாக்கு நீரிணையை படகிலே கடந்து செல்லும் போது தாம் எதிர்கொள்ளும் ஆபத்துக்கள், இடர்பாடுகள் பற்றி நிறையக் கூறியிருந்தார்கள். அந்த இடர்பாடுகளுக்கு முகம் கொடுக்க

நாம் ஏன் தயங்க வேண்டும் என்ற கேள்வி என்னுள் எழுந்தது. அடிக்கடி சீர் மாறும் பாக்கு நீரிணையைக் கடக்க நாம் புறப்பட்ட அன்று விண்மீன் நிறைந்த நிர்மலமான வானமும், அமைதியான பளிங்கு போன்ற கடலும், இதமான கால நிலையும், எமக்குச் சாதகமாக அமைந்தன. குறுகிய கடற்பயணம். ஆபத்து எதுவும் கிடையாது. மகிழ்ச்சியான பயணமாக அமைந்தது. 1987 செப்ரெம்பரில் இருளின் போர்வையில், பாக்கு நீரிணையைக் கடந்து, வல்வெட்டித்துறை வெண்மணற் கடற்பரப்பில் கால்பதித்த போது, எனது நீண்ட கால வேணவா ஒன்று நிறைவேறியது. ஆனாலும் போராட்டத்துக்கு இத்தனை காலமாக வழங்கிய ஆதரவை அடுத்து, தமிழீழக் கரையை அடைந்தது மகிழ்ச்சியைத் தரவேண்டும் என்ற போதிலும், யாழ் மண்ணில் நிலவிய துயர நிலை, அந்த மகிழ்ச்சியின் இனிமையைக் கட்டுப்படுத்தியது. சாகும் வரையிலான உண்ணாவிரதத்தை திலீபன் தொடங்கிச் சில நாட்களே கழிந்திருந்தன. யாழ்ப்பாண தீபகற்ப மக்கள் இதனால் கவலையோடு இருந்தார்கள். ஆனாலும் உலகின் மிகப் பெரிய மக்களாட்சி நடைபெறும் நாட்டிடம் இருந்து நீதிகேட்டு, தனியொரு மனிதன் நடத்தும் இந்த அகிம்சைப் போராட்டத்தை அவர்கள் முழுமையாக ஆதரித்தார்கள். தீபகற்பத்தை நாம் சென்றடைந்த பின், எமது முதல் முக்கிய பணிகளில் ஒன்றாக வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நல்லூர் கந்தசாமி கோவில் முன்றலுக்கு திலீபனைப் பார்க்கச் சென்றோம். யாழ்ப்பாணத் தமிழ் மக்களின் பண்பாட்டு மையம் நல்லூர் கந்தசாமிக் கோயில். அவர்களுடைய ஆன்மீக மையமும் அதுதான். சிறீலங்கா அரச ஒடுக்குமுறையை எதிர்க்க விடுதலைப் புலிப் போராளியாக முகிழ்த்த திலீபன், இந்திய அரசின் கபடத் தனத்தைத் தோலுரித்துக் காட்டத் தனியொருவராகப் புறப்பட்டிருந்தமை, அவருடைய போராட்ட இயல்பின் தன்மையைக் காட்டியது. கிட்டு காலத்தில் யாழ்ப்பாணத்தின் பாதுகாப்புக்காகப் பல தடவைகளில் அவர் ஆயுதச் சமரில் ஈடுபட்டிருந்தார். அப்போது அவரது வயிற்றில் பலத்த காயம் ஏற்பட்டது. தமது மக்களின் அரசியலையும் மனோபாவத்தையும் மிகத் தெளிவாகத் திலீபன் புரிந்து வைத்திருந்தார். தேசியப் போராட்டத்தில் பெண்களும் இணைக்கப்பட வேண்டும் என்பதை பலமாக ஆதரித்து வந்தார் என்று விடுதலைப் புலிகளின் மூத்த பெண் போராளிகள் அடிக்கடி குறிப்பிடுவர். பெண்கள் நிலையை உயர்த்தும் முயற்சியின் பிதாமகர்களில் ஒருவராகத் திலீபன் மதிக்கப்பட்டார். இத்தகைய வரலாறு உடைய ஒருவர் போராளிகளோடு மட்டுமல்ல யாழ்ப்பாணப் பொதுமக்களோடும் நன்றாக ஒட்டிக் கொண்டார் என்பது வியப்பல்ல. ஒப்பந்தத்துக்கு முந்திய





பேச்சுவார்த்தைக் காலகட்டத்திலேயே திலீபனை பாலா சந்தித்தார். புதுடில்லியில் ஒரே அறையில் இரண்டு பேரும் தங்கினார்கள். ஒட்டிக் கொள்ளும் இந்த இளைஞனை பாலாவுக்கு வெகுவாகப் பிடித்திருந்தது. இப்பொழுது யாழ்ப்பாணத்திலே மிக முரண்பாடான ஒரு சூழலிலே, அதுவும் திலீபனின் உயிர் ஒடுங்கிக் கொண்டிருக்கும் கட்டத்தில் அவரைச் சந்திப்பது, பாலாவுக்கு ஆற்றொணாத் துயர் தரும் ஒரு சந்திப்பாக இருந்தது.

நல்லூர் கந்தசாமி கோயில் வளாகத்துக்குள் நாம் சென்ற போது சன சமுத்திரமே எம்மை எதிர்கொண்டது. எரிக்கும் வெய்யிலில் வெள்ளை மணலில் மக்கள் திரள் அமர்ந்திருந்தது. ஒன்று திரண்டு பொங்கும் உணர்வு காற்றில் கனத்தது. ஒரு தெய்வீகத் தன்மையையும் அந்தச் சூழல் பிறப்பித்தது. தனது மக்களின் அரசியல் உணர்வுகளையும் வேணவாக்களையும் ஒன்று திரட்டிய உருவினனாக மேடையிலே தளர்வுற்றுக் கிடந்த அந்த இளைஞன் காணப்பட்டான். திலீபனுடைய உண்ணாவிரதம் மேலும் ஒன்றைச் சாதித்திருந்தது. தமிழ் இனத்தின் ஆன்மாவையே அது தொட்டிருந்தது. பொதுமக்களின் ஒன்றுதிரண்ட ஆதரவையும் அது பெற்றிருந்தது. ஒடிந்து விழக்கூடிய அந்த இளைஞனின் ஒப்பற்ற தியாகம் அவனுடைய மக்களின் கூட்டப் பலம் என்ற மகா சக்தியாக வடிவெடுத்திருந்தது. திலீபனின் உண்ணாவி ரதப் போராட்டமானது ஒரு பொது நலனுக்காகத் தனியொருவன் தன்னை உதிர்க்கும் ஒப்பற்ற தியாகம். மற்றவர்கள் சுதந்திரமாகவும் கண்ணியத்தோடும் வாழவேண்டும் என்பதற்காக வீரம் மிக்க ஓர் இளைஞன் தனக்குத்தானே மரண தண்டனை வழங்கும் உயர் கொடை; தன்னைத் தானே சிலுவையில் அறைந்த ஒப்பற்ற அர்ப்பணிப்பு. ஆழ்ந்த மரியாதையோடும் பணிவோடும் பாலாவும் நானும் மேடை மீது ஏறி, உறை நிலையிலிருந்த திலீபனுடன் பேசச் சென்றோம். எற்கனவே பல நாட்களாக நீரோ, உணவோ ஏற்காததால், உலர்ந்து வெடித்த உதடுகளோடு காணப்பட்ட திலீபனால் முணுமுணுக்கவே முடிந்தது. களையிழந்த திலீபனுடன் பேச பாலா குனிந்தார். ஓரிரு வார்த்தைகள் பேசினார்கள். எதிர்பார்த்தது போல, அரசியல் நிலவரம் பற்றியே திலீபன் விசாரித்தான். விரைவிலேயே அங்கிருந்து அகன்றோம். அதன் பின் அந்த உன்னதத் தியாகியை நாம் உயிரோடு பார்க்கவில்லை.

திலீபனின் உண்ணாவிரதம் நாளேற ஏற, தனது படுக்கையில் இருந்து பொதுமக்களுக்கு உரை நிகழ்த்த அவனால் இயலாது போயிற்று. நிலைமை படிப்படியாகச் சீரழிய அவன் அமைதிப் படுக்கையில் ஆழ்ந்தான். அவனுடைய மக்களின் கண் எதிரே அவன்

வெளிப்படையாகவே வலுவிழந்து பலம் கரைய தமிழ் மக்கள் இந்தியா மட்டிலும் அமைதிப்படை மட்டிலும் கொண்டிருந்த சீற்றமும் வெறுப்பும் உருப்பெருக்கத் தொடங்கின. மக்களிடையே பிரபலமான இந்த இளைஞன் தம் கண் எதிரிலே துடிதுடித்துச் சாகும் போது, தமக்கென்ன என்று பாராமுகமாக இருக்கும் இந்தியாவினதும், அமைதிப்படையினதும் புறக்கணிப்புப் போக்கை அவர்களால் நம்ப முடியவில்லை. ஒடுங்கிக் கொண்டிருக்கும் திலீபனினது உயிரைக் காப்பாற்றுவதற்கு ஒரேயொரு காரியம் நடந்தாலே போதுமாக இருந்தது. இந்தியாவின் தூதுவர் டிக்சிற் தமது செருக்கை ஒருபுறம் ஒதுக்கிக் கொண்டு, திலீபனைப் போய்ப் பார்த்து, தமிழ் மக்களுக்கு வழங்கிய உறுதிமொழியை இந்திய அரசு நிறைவேற்றும் என்று வாக்களித்திருந்தாலே அது போதுமாயிருக்கும். ஆனால், திலீபனின் உண்ணாவிரதம் தொடங்கிய காலத்தில் புதுடில்லி அதை அசட்டை செய்தது. தனிப்பட்ட ஒருவருடைய அபத்தமான வீண் செயல் என்று நிராகரித்தது. ஆனால், பலர் கவனத்தையும் ஈர்த்து ஒரு தேசிய எழுச்சியாக இந்திய எதிர்ப்பு உணர்வுகளோடு உண்ணாவிரதப் போராட்டம் வளரத் தொடங்கியதால் புதுடில்லி கலவரம் அடைந்தது; நிலைமையை ஆராய யாழ்ப்பாணம் செல்லுமாறு டிக்சிற்றை நிர்ப்பந்தித்தது. திலீபனின் உண்ணாவிரதம் எட்டாவது நாளை எட்டிய செப்ரெம்பர் 22 ம் திகதியன்று திரு டிக்சிற், பலாலி விமானத் தளத்தில் வந்திறங்கினார். அங்கு பிரபாகரன் அவர்களும் பாலாவும் அவரைச் சென்று சந்தித்தார்கள். அவர் செருக்கோடும் கடுஞ்சினத்தோடும் காணப்பட்டார் என்றும், திலீபனின் உண்ணாவிரதப் போராட்டம் இந்திய அரசுக்கு எதிராகத் தமிழ் மக்களைத் தூண்டிவிடும் விடுதலைப் புலிகளின் ஆத்திரமூட்டும் செயலே என்றும் அவர் கண்டனம் தெரிவித்தார் என்றும் பாலா பின்னர் என்னிடம் கூறினார். பிரபாகரன் அவர்கள் அங்கே நிறையப் பொறுமையைக் கடைப்பிடித்திருக்கிறார். அந்த இந்திய இராஜதந்திரி நல்லூர் சென்று, மரணப் படுக்கையில் இருக்கும் அந்த இளைஞருடன் பேசி, இந்தியா தனது வாக்குறுதியை உறுதிப்படுத்தி, உண்ணாவிரதத்தை கைவிடுமாறு கேட்க வேண்டும் என்று பிரபாகரன் பரிந்து கேட்டிருக்கிறார். ஆனால் டிக்சிற் தமக்கே உரித்தான செருக்குடனும் மமதையுடனும், விடுதலைப் புலிகளின் தலைவர் விடுத்த வேண்டுகோளை நிராகரித்திருக்கிறார். தமது பயணத் திட்டத்தில் அது அமையவில்லை என்றும் உதறியிருக்கிறார். டிக்சிற் அவர்கள் நிலைமையைப் புரிந்து கொண்டு அந்த முக்கிய கட்டத்தில், தமிழ் மக்களின் உணர்வுகளுக்கு மதிப்பு அளித்திருந்தால், இனப் பிரச்சனையில் இந்தியாவின் நேரடித் தலையீடு வேறொரு வடிவம்





பெற்றிருக்கும். ஆனால் தமது உயிரை இத்தகைய வகையில் தியாகம் செய்ய மனமுவந்து முன்வந்த திலீபனின் அர்ப்பணிப்பு மக்களின் ஆன்மாவைத் தொட்டது. செப்ரெம்பர் 26 லே அநியாயமாக அவர் உயிர் பிரிந்தபோது அமைதிப்படை மட்டில் மக்களுக்கு இருந்த கசப்புணர்வு மேலும் வேரோடியது. அடுத்து நிகழ்ந்த சம்பவங்கள் அமைதிப்படை மட்டிலும் இந்தியா மட்டிலும் தமிழ் மக்களுக்கிருந்த நம்பிக்கையைத் தகர்த்தன.

திலீபனின் மரணத்தின் பின்னரும் நான் வல்வெட்டித்துறையிலே தங்கியிருந்தேன். இந்த அமைதியான கரையோர மீன்பிடிக் கிராமத்தில் வசதியாகவும், பாதுகாப்பாகவும் இருந்தேன். வரட்டும் வெய்யிலில் தகிக்கும் வல்வெட்டித்துறை மக்கள் துணிச்சலுக்கும் பெயர் போனவர்கள். போர்க்குணம் மிக்கவர்கள். ஒடுக்குமுறைக்கு எதிராக கிளர்ந்தெழும் குணம் இயல்பாகக் கொண்ட பெருமை மிக்கவர்கள். இவர்களைப் பற்றிப் பக்கம் பக்கமாக எழுதலாம். இந்தப் பழைமை வாய்ந்த வரலாற்று நகரிலேயே வியக்கத்தகு விடுதலை வீரன் திலீபனுக்கு நான் மரியாதை செலுத்தினேன். தீபகற்பம் முழுவதும் நடைபெற்றதுபோல வல்வெட்டித்துறையிலும் ஒவ்வொரு வீட்டின் முன்பாகவும் திலீபனின் படம் தாங்கிய சிறு கூண்டு; அந்தச் சிற்றாலயத்தினுள் மெழுகுவர்த்திகள்! வீதியோரக் கம்பங்களில் துக்க வெளிப்பாடாக கிடுகுகள்! கோவில் பள்ளிகளில் இருந்து ஒலிபரப்பி மூலம் முகாரியாக ஒப்பாரி! இராணுவச் சீருடை அணிவித்து புலிக் கொடி யால் போர்க்கப்பட்டு, மலர்ப் போர்வையால் மூடப்பட்ட மைய ஊர்தியில் வளர்த்தப்பட்ட திலீபனின் உடலம், தீபகற்பத்தில் கிராமம் கிராமமாக மெதுவாக இறுதிப் பயணம் புரிந்து கொண்டிருந்தது. தங்கள் வரலாற்றுத் தியாகிக்கு இதய அஞ்சலியைச் செலுத்த மக்களும் திரண்டு கொண்டிருந்தார்கள். வல்வெட்டித்துறையில் தரித்து இறுதி அஞ்சலியை ஏற்றுக் கொண்டபின், கிராமத்தின் பிரதான பாதையூடாக இராணுவ முரசத்தின் சோக தாளத்துடன் திறந்த பேழையில் திலீபனின் உடலம் அடுத்த கிராம அஞ்சலிக்காக மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தது. சாலை இரு மருங்கும் அமைதி பூத்து அஞ்சலித்து நின்ற கிராம மக்களோடு நானும் அங்கே துயர் பகிர்ந்து நின்றேன். சத்தியாக்கிரகத்தின் பிதாமகரான மகாத்மா காந்தியையே தனது உண்ணாவிரதத்தினாலும், தற்கொடைத் தியாகத்தினாலும் விஞ்சிய அந்த இளைஞனுக்கு என் இறுதி அஞ்சலியைச் செலுத்தினேன். உணவை மட்டும் அல்ல, பானத்தைக் கூட மறுத்த தன் சுயமறுப்புச் செயலால், காந்தியையே விஞ்சி நின்றவன் திலீபன்!

## மூத்த தளபதிகளுக்கு ஏற்பட்ட அவலம்

வல்வெட்டித்துறையின் பெயர் பூத்த குடிகளில் ஒருவர் குமரப்பா! விடுதலைப் புலிகளின் மூத்த போராளி; அவருடைய குடும்பம் பெரியது. வல்வெட்டித்துறையிலேயே வாழ்ந்தார். எமது சென்னை வாழ்க்கைக் காலத்தில் இருந்தே, அதாவது, எழுபதுகளில் இருந்தே எம்மோடு நட்புப் பூண்டவர். எண்பதுகளின் தொடக்க காலத்தில் கடற்-பொறியியல் கற்க அயர்லாந்து சென்றார். அங்கிருந்து, எம்மைச் சந்திக்க அடிக்கடி லண்டன் வருவார். தமிழ் மக்களுக்கு எதிராக 1983 லே கலவரங்கள் இடம்பெற்றதும், படிப்பை உதறிவிட்டு, எம்மைத் தொடர்ந்து சென்னை வந்தவர். போராட்டத்தில் திரும்பவும் நேரே ஈடுபட யாழ்ப்பாணம் சென்றார். அங்கிருந்து மட்டக்களப்புக்கு பிரதேசப் பொறுப்பாளராக அனுப்பி வைக்கப்பட்டார். அங்கேதான், தமது மனைவி ரஜினியைக் கண்டு காதல் வயப்பட்டார். ஒப்பந்தம் கைச்சாத்தாகி, நல்லிணக்கம் காணப்பட்ட ஆரம்ப நாட்களில் குமரப்பாவைத் திருமணம் புரிய, ரஜனி, வல்வெட்டித்துறைக்கு வந்து சேர்ந்தார். சென்னையில் இருந்து அரசியல் அலுவலாக பாலா யாழ்ப்பாணம் சென்றபோது, அந்தத் தருணத்தை வாய்ப்பாக எடுத்த குமரப்பா, தமது திருமண முதற்சாட்சியாகக் கலந்து கொள்ளுமாறு பாலாவை அழைத்தார். திருமணம் நடந்தபோது நான் சென்னையில் இருந்தேன். எனவே ரஜனியை நான் அப்போது சந்திக்கவில்லை. நான் வல்வெட்டித்துறை வந்ததும், குமரப்பா செய்த முதல் வேலையில் ஒன்று, தமது இளம் மனைவியை எனக்கு அறிமுகம் செய்ததுதான். தமது புதுமணப் பெண்ணை எமது வீட்டுக்கு அவர் அழைத்து வந்தபோது பூரித்துப் போனேன். ஏனோ தெரியாது, ரஜனி யைச் சந்தித்த அந்தக் கணம், இன்னமும் என் மனதில், தெளிவாக பசுமரத்தாணி போலப் பதிந்திருந்தது. அதற்குக் காரணம் என்ன? வெண் நிலாவொளி, குமரப்பாவின் முகத்தில் பட்டுத் தெறித்த போது, மகிழ்ச்சிப் பூரிப்புடன் இருந்த அந்த இளம் முகத்தில் ஒரு கணம் பளிச்சிட்டது அழகா? அல்லது ஒருவர் மீது ஒருவர் கொண்ட காதலை வெளிப்படுத்தும் வெட்கமா? அன்று, வெள்ளி நிறைந்த இரவு. கதகதப்பாகவும் அமைதியாகவும் இருந்தது. குமரப்பாவும் ரஜனியும் ஒரு இரட்டைக் கதிரையில் அமர்ந்திருந்தார்கள். அவருடைய கரம் அவளுடைய தோளை அணைத்தபடி இருந்தது. அந்த மாப்பிள்ளை தனது மணப் பெண்ணை உற்றுப் பார்த்தபோது அவர் பூத்த முறுவல் இப்பொழுதும் என் நினைவில் நிற்கிறது. ஆனாலும் குமரப்பா யாழ்ப்பாணத் தளபதி





பொறுப்பை வகித்ததால் தமது இளம் மனைவியுடன் அதிக நேரம் செல விட இயலவில்லை. பாலா, கிரமமாக குமரப்பாவுடன் யாழ்ப் பாணத்துக்குப் போய் வந்து கொண்டிருந்தார். குமரப்பா இல்லாத வேளை, நான் அடிக்கடி அவர்களுடைய குடும்ப வீட்டுக்குச் சென்று ரஜனியைச் சந்திப்பேன். எல்லாமே அமைதியாகவும் குதூகலமாகவும் நடைபெற்றுக் கொண்டிருந்தது. கொடுந்துயர் அவர்களைத் தாக்கும் என்றோ, குமரப்பாவின் உயிரைப் பறிக்கும் என்றோ, ரஜனியின் இதயத்தைச் சிதறடிக்கும் என்றோ எவர்தான் எதிர்பார்த்தார்?

மாலை ஐந்தரைபோல, நான் ரஜனியைச் சந்திக்கச் சென்றேன். கடற்கரையில் உலாவச் செல்வது என்பதுதான் திட்டம். குமரப்பா அப்போது வீட்டில் இருந்தார். ஆறு மணிக்குத் தாம் வெளியே போக இருப்பதாகக் கூறினார். தாம் புறப்படுவதற்கான ஆயத்தம் செய்யப் போவதால், நாம் உலவச் செல்ல வேண்டும் என்று அவர் வற்புறுத்தினார். ஆனால் நாம் விரைவாக உலவிவிட்டுத் திரும்பினோம். புதிதாகத் திருமணமான அவர்களைத் தனியே விட்டு நான் கண்ணிமாக அங்கிருந்து அகன்றேன். வழியில் திருகோணமலைத் தளபதி புலேந்திரன் ஒரு பெரிய மோட்டார் சைக்கிளில் வேகமாகச் செல்வதைக் கண்டேன். தாம் ஓட்டும் அந்த வண்டியின் பலமும், தம்முகத்தில் அறையும் காற்றும் அவருக்குத் தெம்பூட்டுவது தெரிந்தது. குமரப்பா செல்லும் அதே திக்கில் தான் புலேந்திரனும் செல்கிறார் என்பதும் சில நிமிடங்களில் அவர்கள் சந்திக்கப் போகிறார்கள் என்பதும் எனக்குத் தெரியாது. ஒழுங்கை ஒன்றில் நான் எனது சைக்கிளில் திரும்பும் போது, புலேந்திரன் என்னைக் கண்டார். முகமெல்லாம் பல்லாக, பளிச்சென்று சிரித்தபடி, கையை அசைத்த வண்ணம் வீதியால் கடந்து சென்றார். குமரப்பாவின் திருமணத்துக்குச் சில வாரங்கள் முன்னதாகத்தான் புலேந்திரன் திருமணம் புரிந்திருந்தார். தமிழ்நாடு திருப்போரூர் முருகன் கோவிலில் சுபாவை அவர் திருமணம் புரிந்தபோது, அந்த வைபவத்தில் நாமும் கலந்து கொண்டோம். இந்தக் கோவிலில் தான் சில ஆண்டுகளுக்கு முன்னதாக பிரபாகரன் அவர்களுடைய திருமணமும் நடைபெற்றது.

மறுநாள் பருத்தித்துறைக் கடலில் வைத்து, குமரப்பாவும் புலேந்திரனும், வேறு பதினைந்து போராளிகளும் சென்ற படகை சிறீலங்கா கடற்படை வழிமறித்துப் பிடித்திருப்பதாக பாலா எனக்குத் தெரிவித்தார். பலாலி இராணுவத் தளத்தில், சிறீலங்காவினதும், இந்தியாவினதும் இராணுவப் பாதுகாவலில் அவர்கள் வைக்கப்பட்டு இருந்தார்கள். எனக்கு அது வியப்பாகவும் குழப்பமாகவும் இருந்தது; ஆனால் அவ்வளவு கோபமூட்டவில்லை. பொருட்படுத்தத் தேவையற்ற

சம்பவம் இதுவென்றும், விரைவிலேயே அவர்கள் விடுவிக்கப்படுவார்கள் என்றும் கருதினேன். யாழ்ப்பாணத்தில் நிலைமை அமைதியாகவும், சாதாரணமாகவும் இருந்தது. போர் ஓய்வும் நடைமுறையில் இருந்தது. அமைதிப்படை அமைதியைப் பேண, சிங்களப் படைகள் தங்கள் பாசறைகளில் அடங்கி இருந்தன. அது தவிர, இந்திய-இலங்கை ஒப்பந்தத்தின் கட்டுப்பாடுகளுக்கு அமைவாக இந்தியாவிடம் ஆயுதங்கள் ஒப்படைக்கப்பட்டதை அடுத்து, விடுதலைப் புலிப் போராளிகளுக்குப் பொதுமன்னிப்பும் வழங்கப்பட்டிருந்தது. இப்படியான நிலைமையில், அந்தக் கடல் கைதை அடுத்து, பாரதூரமாக ஏதும் நடக்கக்கூடும் என்று எவரும் எதிர்பார்க்கவில்லை. குமரப்பாவும், புலேந்திரனும் விடுதலைப் புலிகளின் மூத்த தளபதிகளாக அமைதிப் படை அதிகாரிகளுக்கு நன்கு அறிமுகம் ஆனவர்கள். ஆகவே அவர்களுக்குத் தீங்கு எதுவும் நேராது இந்தியாக்காரர் பார்த்துக் கொள்வர் என்று நாம் நம்பினோம். அவர்கள் கைது செய்யப்பட்டதன் நோக்கம் இந்திய அதிகாரிகளுக்குத் தெளிவுபடுத்தப்பட்டதும், அவர்கள் விடுவிக்கப்படுவார்கள் என்று கருதினோம். பதறிப்போன குமரப்பாவின் இளம் மனைவிக்கு, என் மூலமாக இதே விளக்கத்தையே பாலா வழங்கியிருந்தார். ஆனால், பலாலித் தளப் பாதுகாவற்கூடத்துக்கு மறுநாள் சென்றுவிட்டுத் திரும்பும்போது, பாலா கலவரமடைந்தே காணப்பட்டார். துப்பாக்கி நீட்டியபடி சிங்களப் படையினர் மூர்க்கமாகச் சூழ்ந்து நிற்க, குற்றவாளிகளைப் போல அவர்கள் வைக்கப்பட்டிருந்தது பாலாவைக் கலவரப்படுத்தியிருந்தது. கட்டடத்துக்கு வெளியே இந்திய ராணுவ அதிகாரிகளும் ஒரு சிறிய படையணியினரும் தங்கியிருந்தனர். விடுதலைப் புலிப் போராளிகளை விசாரணைக்காக கொழும்புக்கு அனுப்பி வைக்க வேண்டும் என்று சிறீலங்கா அரசாங்கம் கடுமையான பிடிவாதத்தோடு நிற்பதாக இந்திய அமைதிப்படைத் தளபதி ஹர்க்கிரத் சிங், பாலாவிடம் கூறினார். இந்தச் சம்பவங்களின் புதிய திருப்பம் பாலாவுக்கு அதிர்ச்சி அளித்தது. அவர் உடனடியாக இந்திய தூதுவர் டிக்சிற் அவர்களோடு தொடர்பு கொண்டார். தமது இராஜதந்திர வல்லாண்மையைப் பயன்படுத்தி, புலிப் போராளிகளை விடுவிக்க வேண்டும் என்று பாலா கேட்டார். எமது போராளிகளிற் சிலர் மூத்த தளபதிகளாகவும் போர்க்கள நாயகர்களாகவும் இருப்பதால், அவர்களுக்கு ஏதாவது தீங்கு நேரும் பட்சத்தில், விளைவுகள் விபரீதமாக இருக்கும் என்றும் டிக்சிற் அவர்களுக்கு எச்சரிக்கை விடுத்தார். டிக்சிற் அவர்களும் போராளிகளை விடுவிக்க தம்மாலான அனைத்தையும் புரிவார் என்று பாலாவுக்கு உறுதியளித்தார்.





கைது செய்யப்பட்ட போராளிகளை கொழும்புக்கு கொண்டு வரவேண்டும் என்று ஜெயவர்த்தனா அரசும், குறிப்பாக போர் வெறி பிடித்த தேசிய பாதுகாப்பமைச்சர் லலித் அத்துலத் முதலியும் பிடிவாதமாக இருந்தார்கள். ஒப்பந்தம் கைச்சாத்தாவதற்கு முன்னதாக புரிந்த குற்றங்கள் தொடர்பாக விசாரணை செய்யப் போவதாகக் கூறினார்கள். குமரப்பாவும், புலேந்திரனும் மட்டக்களப்பு, திருகோணமலை மாவட்டங்களின் மூத்த தளபதிகளாகத் திகழ்ந்தவர்கள். பல சமர்களில் வெற்றி வாகை சூடியவர்கள். கிழக்கு மாகாணத் தமிழ் மக்களால், போர்க்கள நாயகர்களாக உயர்ந்து ஏற்றப்படுபவர்கள். புகழ் பெற்ற இந்தக் கெரில்லாத் தலைவர்களைத் தேடி வேட்டையாடப் பல ஆண்டுகளாக முயற்சித்துத் தோல்வி கண்ட லலித் அத்துலத் முதலி, இந்தத் தளபதிகள் தமது படையினரால் கைதாகி காவலில் இடப்பட்டமை, தமது அதிர்ஷ்டம் என்றே கருதினார். கொடுமைக்குப் பெயர் பெற்றவர்களும், லலித் அத்துலத் முதலியின் கீழ் இயங்குபவர்களுமான புலனாய்வுப் பிரிவினரிடம் விசாரணைக்காக எமது போராளிகள் கொழும்புக்கு அனுப்பப்பட்டால், அவர்களுடைய உயிருக்குப் பேராபத்து நேரும் என்பதை நாம் முழுமையாக உணர்ந்தோம். அவர்களைப் பழிவாங்க வேண்டும் என்று லலித் அத்துலத் முதலி எவ்வளவு வெறியாக இருந்தார் என்பதும் எமக்குத் தெரியும். ‘விசாரணை’ என்பது சிறீலங்கா காவல்துறை அதிகாரத்தில் வேறு அர்த்தம் கொண்டது. அது சித்திரவதையைக் குறிக்கும். மேலும் விடுதலைப் புலிகள் என்றால், எழுந்தமானக் கொலைத் தீர்ப்பு! சிங்களக் காவல்துறையினரிடமும் இராணுவ அதிகாரிகளிடமும் அகப்படும் தடுப்புக்காவல் கைதிகளின் மனித உரிமை மீறல்களின் கறைபடிந்த வரலாறுகள் எமக்குத் தெரியுமாதலால், இப்போது காவலில் இடப்பட்டிருந்த எமது போராளிகளும், சித்திரவதைக்கும், எழுந்தமானப் படுகொலைக்கும் உள்ளாவார்கள் என்பதில் எமக்குச் சந்தேகம் இருக்கவில்லை.

அமைதிப் படை அனுமதியோடு, குமரப்பா, புலேந்திரனையும் ஏனையோரையும் பாலா சந்தித்தார். இவர்களிற் பெரும்பாலானவர்கள் எமக்கு அறிமுகமானவர்கள். அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் புதிய கதி பற்றி அவர்களுக்கு பாலா எடுத்துரைத்தார். அவர்கள் அதிர்ச்சியும் சீற்றமும் அடைந்தார்கள். விசாரணைக்கு என்று தாம் கொழும்புக்குக் கொண்டு செல்லப்பட்டால் சித்திரவதை, அடுத்து மரணத்தை சந்திக்க நேரும் என்பதை உணர்ந்தார்கள். தங்கள் முடிவை அவர்கள் தம்மிடையே விவாதித்து, ஏகமனதான தீர்மானத்துக்கு வந்தார்கள்.

தங்கள் தலைவர் பிரபாகரனுக்கு அவர்கள் எழுதிய கடிதங்களில் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தார்கள். துயரமும் கொடுமையும் நிறைந்த இந்த நிகழ்ச்சித் திருப்பங்களை பிரபாகரன் அவர்களிடம் விபரித்த பாலா, கடிதங்களையும் ஒப்படைத்தார். ஏகமனதாகவும், இரகசியமாகவும் அந்தப் போராளிகள் மேற்கொண்ட முடிவை, அவர்களுடைய கடிதங்கள், விடுதலைப் புலித் தலைவருக்குக் கூறின. விசாரணை என்ற போர்வையில் காட்டுமிராண்டித்தனமான சித்திரவதைக்கும், அநேகமாக மரணத்துக்கும் சிங்கள அரசினால் தாம் உள்ளாக்கப்படுவதைக் காட்டிலும், விடுதலைப் புலி மரபுப்படி, தம் உயிரைத் தாமே மாய்க்கத் தாம் விரும்புவதாகத் தங்கள் தலைவருக்குத் தெரிவித்திருந்தார்கள். சிங்கள இனவாத அரசின் நிர்பந்தங்களுக்குப் பணிந்து கொடுத்தால், அது தங்கள் எதிரிக்கு எதிராக நடத்தும் தற்காப்புப் போரின் நீண்ட, உறுதியான வரலாற்றைக் கறைபடுத்திவிடும் என்றும், அதற்கு நேரெதிராக, கௌரவமான மரணத்தைத் தழுவத் தாம் விரும்புவதாகவும் அவர்கள் தெரிவித்திருந்தார்கள். சயனைட் குப்பிகளை அனுப்பி வைக்குமாறு அவர்கள் கேட்டிருந்தார்கள்.

இந்தச் சம்பவங்களின் பாடுகேடான திருப்பம், பிரபாகரன் அவர்களுக்குக் கடுஞ் சீற்றத்தையும், ஆழமான ஏமாற்றத்தையும் கொடுத்திருந்தன. தமிழ்ப் பகுதிகளில் அமைதியை நிலைநாட்டும் பொறுப்பு அமைதிப்படையினது என்று அவர் கருதினார்; பொது மன்னிப்புக்கு அமைவாக மன்னிப்புப் பெற்ற போராளிகளை மீட்டெடுக்க வேண்டியதும் இந்திய இராணுவ அமைப்பின் பொறுப்பு என்றும் அவர் நம்பினார். ஆகவே அவர்களை மீட்டெடுக்குமாறு டிக்சிற் அவர்களை வெகுவாக நிர்பந்திக்குமாறு அவர் பாலாவை கேட்டுக் கொண்டார். மறுநாள் காலை, பலாலி விமானத் தளத்துக்கு விரைந்த பாலா, கொழும்பில் இருந்த டிக்சிற் அவர்களுடன் தொடர்பு கொண்டார். திலீபன் விவகாரத்தை விட மிகவும் பாரதூரமான கெடுதி ஒன்று உருவெடுத்திருப்பதை பாலா அவருக்கு விளக்கினார். இந்தியாவுக்கும் புலிகளுக்கும் இடையே நிலவும் உறவில் பெரியதொரு நெருக்கடி ஏற்படக்கூடாது என்றால், விடுதலைப் புலிப் போராளிகளை விடுவித்தாக வேண்டும் என்றும் கெஞ்சினார்; நியாயம் உரைத்தார்; எச்சரித்தார். இதனால் ஏற்படப்போகும் பிரதிகூலங்கள் தமிழர் தாயகத்தில் பூகம்பத்தை ஏற்படுத்தி அமைதியைச் சிதறடிக்கலாம் என்று டிக்சிற் அவர்களுக்கு உணர்த்தினார். இதனால் டிக்சிற், கலவரம் அடைந்தார் என்றும், போராளிகளைக் கொழும்புக்கு கொண்டு செல்லும் முயற்சியைக் கைவிடுமாறு ஜெயவர்த்தனாவை நிர்ப்பந்தித்தார் என்றும், எப்படியாயினும், அவருடைய முயற்சி வெற்றியளிக்கவில்லை என்றும் பாலா என்னிடம் கூறினார். நிலைமையை மேலும் மோசமாக்கியது என்னவென்றால், டிக்சிற் அவர்களுக்கும், அமைதிப்படைத் தளபதிக்கும் இடையே நிலவிய சுமூகமற்றதும் நிலிவடைந்ததுமான உறவாகும். இந்திய இராஜதந்திரியின் ஆணைகளை ஏற்க அந்தத் தளபதி எடுத்த எடுப்பிலேயே மறுத்தார். நேரம் ஓடிக் கொண்டிருந்தது. புதுடில்லியின் அதிகாரபீடத்துக்கு உண்மையான கொந்தளிப்பு நிலையை எடுத்துரைக்க டிக்சிற் தவறிவிட்டார். மாறாக சிறீலங்கா போர் அமைச்சருக்கு முழு ஆதரவை வழங்கிக் கொண்டிருக்கும் "கிழட்டு நரி" தமது செல்வாக்கைப் பிரயோகிக்ககலாம் என்று எண்ணி டிக்சிற் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொண்டார். இரண்டு ஆண்டுகளின் பின் அரசுத் தலைவர் பிரேதாசா காலத்தில், கொழும்பு அரசுடன் நாம் பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டிருந்த வேளையில், ஜெயவர்த்தனாவின் கடும்போக்குக்கு லலித் அத்துலத் முதலியே பிரதான காரணம் என்று ஜனாதிபதி பிரேமதாசா அவர்களிடம் இருந்தே அறிந்தோம். பிடிவாத தீர்மானத்துடன் இயங்கிய தேசிய பாதுகாப்பமைச்சரே அரசுத் தலைவரை ஆட்டிப் படைத்தார் என்றும், விடுதலைப் புலிப் போராளிகளைக் கொழும்புக்கு கொண்டு செல்ல வேண்டும் என்ற தமது கோரிக்கை நிறைவேற்றப்படாவிட்டால், தாம் பதவி விலகிவிடுவார் என்றும் அவர் மிரட்டியிருந்தார் என்று பிரேமதாசா விபரமாகக் கூறியிருந்தார். இறுதியில் லலித்தின் மிரட்டலுக்கு வளைந்து கொடுத்த ஜெயவர்த்தனா, இந்தியத் தூதுவரின் வேண்டுகோளுக்கு இசைய மறுத்திருக்கிறார். போராளிகளின் விடுதலையை வென்றெடுக்கத் தாம் கொழும்பு அரசிடம் மேற்கொண்ட முயற்சி தோற்றுவிட்டதாகவும், ஒக்ரோபர் 5ம் நாள் மாலையில், அவர்களை கொழும்புக்கு விமானம் மூலம் கொண்டு செல்ல முடிவாகி இருப்பதாகவும் பாலாவிடம் டிக்சிற் தெரிவித்திருக்கிறார்.

இந்த இறுதி முடிவு பற்றிக் கேள்விப்பட்டதும் பிரபாகரன் அவர்கள் அடக்க முடியாச் சினம் கொண்டார். தடுப்புக் காவலில் உள்ள தம் போராளிகளின் இறுதி விருப்பத்தை நிறைவேற்றுவது தமது கடமை என்று அவர் உணர்ந்தார். பிரபாகரனும் அவருடைய தளபதிகளும் தங்கள் கழுத்தில் இருந்த சயனைட் குப்பிகளைக் கழற்றி, பாலாவின் கழுத்திலும், மாத்தையாவின் கழுத்திலும் சூட்டினார்கள். காவலில் இருக்கும் போராளிகளிடம் அவற்றை ஒப்படைக்குமாறு ஆணை பிறப்பிக்கப்பட்டது. போராளிகள் கொண்டு செல்லப்படும் நாளன்று,

தயக்கத்தோடும், மனமின்றியும், சயனைட் குப்பிகளைக் கழுத்திலே மாலையாக அணிந்த வண்ணம், பாலாவும், மாத்தையாவும் அவர்களைப் போய்ச் சந்தித்தார்கள். குமரப்பா தமது மனைவிக்கென்று சில பணிப்புரைகளைத் தெரிவித்தார். புலேந்திரனும் தமது மனைவிக்குச் செய்தி வழங்கினார். திருமணமாகி இரண்டு சின்னஞ்சிறு குழந்தைகளுக்குத் தந்தையாக இருந்த கரன், தமது பிள்ளைகளின் எதிர்காலம் பற்றிய ஆவலை வெளியிட்டார். விடுதலைப் புலிப் போராளிகளின் முடிவு இதுவே என்றாயிற்று. கொழும்புக்கு விமானம் புறப்படச் சில நிமிடங்களே இருந்தபோது, குமரப்பாவும் புலேந்திரனும் அவர்களுடைய கூட்டாளிகள் பதினைந்து பேரும் ஒரே வேளையில் குப்பி கடித்தார்கள். அவர்களைச் சூழ நின்ற அரச படையினர் தம் கண்முன்னே நிகழும் விபரீதத்தைக் கண்டதும் அவர்கள் மீது ஆத்திரத்துடன் பாய்ந்து கூட்டுத் தற்கொலையைத் தடுக்க வேண்டும் என்ற நோக்கோடு துப்பாக்கி முனைகளால் அவர்களை அடித்துத் தாக்கியிருக்கிறார்கள். ஆனால் கணப் பொழுதினுள் எல்லாமே முடிந்து விட்டது. குமரப்பா, புலேந்திரன் உட்பட பன்னிரெண்டு போராளிகள் அதே இடத்தில் உயிர்ப் பலியானார்கள். ஐந்து பேர் இதிலிருந்து மீட்கப்பட்டு மருத்துவமனையில் உயிர் பிழைத்தார்கள்.

விடுதலைப் புலிப் போராளிகளின் கூட்டுத் தற்கொலைச் செய்தி பொதுமக்களுக்கும் எனக்கும் அறிவிக்கப்பட்டது. ஒக்ரோபர் 5, மாலையிலே வல்வெட்டித்துறையில் உள்ள விடுதலைப் புலித் தளத்தில் இருந்து "வாக்கி ரோக்கி" மூலம் செய்தி அறிவிக்கப்பட்டது. அழுத்தம் திருத்தமாக ஆறுதலாக பெயர்கள் படிக்கப்பட்டன: "குமரப்பா, போய்விட்டார்; புலேந்தி அம்மான் போய்விட்டார்..." அதன் பின் ஒவ்வொரு பெயராக, இந்த அவலத்தின் பெயர்ப்பட்டியல் முழுமையாக, படிக்கப்பட்டது. எனது செவிகளையே நம்ப முடியாதவளாக விக்கித்துப் போய் உட்கார்ந்தேன். இது எப்படி நடந்திருக்கலாம்? இது உண்மையாக இருக்க முடியாது. என்ன நடந்தது? அதன் பின் தூரத்தில் இருந்து ஓலம் ஒன்று சன்னமாகக் கேட்டது. எமது வீட்டில் இருந்து ஒரு கால் மைல் தூரத்தில் குமரப்பாவின் மனைவிக்கு தகவல் தரப்பட்டிருக்கிறது; இன்னொரு பக்கத்தில் இருந்து வருத்தமும் துயரமும் கலந்த உணர்ச்சி ஒப்பாரி ஓவென்று கேட்டது; இன்னொரு குடும்பத்துக்குத் தகவல்; அதன் பின் இன்னொன்று; இன்னொன்று; இப்படியே கிராமம் முழுவதும், திறந்த ஒரே சொந்த வீடாக ஒப்பாரி ஓலம் ஓங்கியது.

தமிழ்ச் சமுதாய மரபுப்படி, மக்கள் செத்த வீட்டுக்குப் போய் இறந்தவருக்கு அஞ்சலி செலுத்தி, அவருடைய குடும்பத்துக்கு ஆறுதல்





கூறுவது மரபு. ஒருவரை ஒருவர் நன்கு அறிந்த வல்லெட்டித்துறை போன்ற சிறிய கிராமத்தில் அது பொதுவான ஒன்று. மாவீரராகப் பலர் உயிர் நீத்து தேசிய வீரர்களாகிவிட்ட இந்தச் சந்தர்ப்பத்தில், அந்த மாவீரர்களின் தீரத்துக்கு வணக்கம் செலுத்தவும், அவர்கள் குடும்பத்தினரோடு துயர் பகிரவும் எல்லோரும் விரும்பினார்கள். மறுநாள் காலை, வல்வெட்டித்துறையில் வாழ்ந்து கொண்டிருந்த மூத்த விடுதலைப் புலிப் போராளியான நடேசன் அவர்களுடைய மனைவியான வனிதாவுடன் மாவீரராகிவிட்ட அனைவரது வீடுகளுக்கும் சென்றோம். வனிதா ஒரு சிங்களப் பெண்மணி. கிராம மக்களும் மாறி மாறி ஒவ்வொரு வீட்டுக்குப் போவதும், இந்தத் துயரமான சம்பவம் பற்றிக் கூடிப் பேசுவதுமாக இருந்தார்கள். ஆற்றாமை, துயரம் ஆகிய இரண்டு உணர்வுகளும் எங்கும் வியாபித்திருந்தன. ஆண்கள் கூடிக் கூடிக் கீழ் குரலில் உரையாடினார்கள் ; பெண்கள், உறவினரும் சரி, சினேகிதிகளும் சரி, தரையிலே இருந்து மார்பில் அடித்து ஒப்பாரி வைத்து தங்கள் கூட்டுத் துயரை வெளிப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

பாலா வீடு திரும்பும் வரை காத்திருந்து, குமரப்பாவின் இளம் மனைவி ரஜனியைப் பார்க்க மறுநாட்காலையே போனேன். ரஜனியைச் சந்திப்பதை நினைக்க எனக்கு உள்ளூர நடுக்கம். இந்த இளம் பெண்ணின் முகத்தை எப்படித்தான் பார்க்கப் போகிறேனோ? என்ன கூறப் போகிறோம்? அவர் வீட்டுக்கு போவதற்காக ஆடை மாற்றும்போது எனது வயிறு பிசைந்தது. துயரக்கதை உணர்த்த வெளிர் நிறச் சேலை அணிந்து கொண்டேன்.

துயர் தோய்ந்து ஆடிப்போயிருந்த கிராமத்தின் ஊடாக, குமரப்பாவின் வீட்டுக்கான அந்தச் சொற்ப தூரத்துக்கு நடந்து சென்றோம். அங்கேதான், ரஜனி இருந்தார். வீட்டுக்கு அருகே வரும்போது, அதே பக்கமாக ஊர்ந்து கொண்டிருக்கும் சனத்திரளில் நாமும் அங்கமானோம். வீட்டுக்கு அருகே செல்லச் செல்ல ஒப்பாரியும் பலத்து ஒலித்தது. குமரப்பாவின் வீட்டு முன் வாயிலுக்குச் செல்லும் ஒழுங்கையில் மக்கள் நெருக்கியடித்து நின்றார்கள். ஆனாலும் நாம் உள்ளே செல்வதற்காகப் பிரிந்து வழிவிட்டார்கள். ரஜனி நாராய்க் கிழிந்து கிடந்தார்; துயரத்தால் உருக்குலைந்திருந்தார்; பிதற்றிக் கொண்டிருந்தார்; தமது துயரத்தை எங்கே எவ்வாறு போக்குவது என்று வகையறியாது தவித்துக் கொண்டிருந்தார். முன்வாயிலுக்கு சில யார் தூரத்தில் எம்மைக் கண்டதும் பிய்த்தெறிந்து என்னிடம் பாய்ந்து வந்தார்; என்னைக் கட்டி அணைத்து வேலியோடு சாய்ந்து, நெஞ்ச அவலத்தோடு ஓலமிட்டார். "அன்ரி, அன்ரி என்ரை அவர், என்ரை அவர்.." என்று

கதறினார். எனது தோளில் சாய்ந்தவாறு ஆற்றமுடியாதவராக விம்மினார். அவரை மெதுவாக அழைத்துக் கொண்டு வீட்டுக்குள் சென்றேன். எண்ணுக்கணக்கற்ற சொந்தக்காரப் பெண்கள் தரையிலே அமர்ந் திருந்தார்கள்; ரஜனியோடும், குமரப்பா குடும்பத்தோடும் துயர் பகிர்ந்து, ஆறுதல் கூற அங்கே எல்லோரும் கூடியிருந்தார்கள்.

ரஜனி இரவு முழுவதும் ஆற்றாமையோடு அரற்றிக் கொண்டிருந்தார். நான் தூங்க முயன்றேன். ஆனால் எனது உணர்வுகள் விழித்தே இருந்தன. இரவின் அமைதியைக் கிழித்தபடி "அத்தான், அத்தான்" என்று ரஜனி தேம்புவது என் காதில் விழுந்த வண்ணமே இருந்தது. தமிழ்ப்பண்பாட்டின் படி தனது கணவரை முதல் பெயர் சொல்லிக் கூப்பிடுவதில்லை. மரியாதையாக "அத்தான்" என்று அழைப்பதே மரபு.

ரஜனி வீட்டில் துயர் பகிர்வதோடு செத்த வீட்டுச் சடங்கு முடியவில்லை. பிரதான ஈமச் சடங்குகள் மறுநாள் மாலை நடைபெற இருந்தன. கிராமத்தின் விளையாட்டு மைதானத்தில், ஒரு பெரிய பொதுவான இறுதிச் சடங்காக நடத்த ஏற்பாடாகியிருந்தது. இப்படியான சந்தர்ப்பத்தில் எனது உணர்ச்சிகளை எப்படிக் கட்டுப்படுத்தப் போகிறேன்? ஆனால் நானும் மற்றவர்களைப்போல எனது உணர்ச்சிகளை அடக்கியே ஆக வேண்டும். பலியாகிவிட்ட விடுதலைப் புலி மாவீரர்களுக்கு ஒரு தேசிய பிரியாவிடை வீரவணக்கம் செலுத்த ஏற்பாடாகிக் கொண்டிருந்த அதே சமயம், மீட்கப்பட்ட மாவீரரின் உடலங்கள், இறுதி இராக் காவலுக்காக அவர்களுடைய வீடுகளுக்கு அனுப்பி வைக்கப்பட்டன.

வல்வெட்டித்துறை மைதானம் சனத்திரளால் விம்மி வழிந்தது. வீழ்ந்து பட்ட பன்னிரண்டு மாவீரர்களுக்கும் இறுதி அஞ்சலி செலுத்த மக்கள் திரண்டிருந்தார்கள். துயரக் கனதி எங்கும் வியாபித்திருந்தது. திறந்திருந்த உடலப் பேழைகளைக் கடந்து மக்கள் மரியாதையுடன் வரிசையாக நடந்தார்கள். தமக்குத் தெரிந்த வீரரின் காலடியில் நின்று சிலர் விம்மினார்கள். ரஜனியும், புலேந்திரனின் மனைவி சுபாவும் அலறி யடித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய உறவினர்கள் அவர்களைக் கட்டப்படுத்தியபடி நின்றார்கள். கரனின் மனைவி குகாவும் அவருடைய இரண்டு பிள்ளைகளும் அந்தக் கூட்டத்தில் இருந்தார்கள். உறவினர்களே அவர்களையும் தேற்றிய வண்ணம் இருந்தார்கள். விம்மலும், ஓலமும் ஒப்பாரியும், ஒவ்வொரு திக்கிலும் கேட்டன. கவிதை, பாடல், இரங்கல் உரை என்று புகழாரம் ஒன்றன்பின் ஒன்றாக





ஒலிபரப்பிகளை நிறைத்தன. இன்னும் சில நாட்களில் இந்தியப் படையுடன் நடைபெற இருந்த சமரில் உயிர் துறக்க இருந்த சந்தோசமும் புலிகளின் சார்பில் அன்று இரங்கல் உரை நிகழ்த்திய முக்கியமானவர் ஆவார். கனத்த இதயங்களோடும் சுரத்தே இல்லாதவர்களுமாக பிரபா கரன் அவர்களும் ஏனைய விடுதலைப் புலித் தலைமை உறுப்பினர்களும் உடல் பேழைகளை மெதுவாகக் கடந்து சென்றார்கள்; கடந்து போன ஆண்டுகளில் பிரபாகரன் அவர்களைப் பின்பற்றிய மிகுந்த விசுவாசமும், நம்பிக்கையும் உடைய சில மூத்த விடுதலைப் புலிப் போராளிகளின் உடலப் பேழைகளைக் கடக்கும் போது கால்கள் தயங்கின; பழைய நினைவுகள் சுரந்து வந்தன.

பிரபாகரன் அவர்கள் அங்கிருந்து அகன்றதும், தீ மூட்டுவதற்கு முன்னதாக, தமிழ் மரபுப்படி, அந்தக் களத்தில் இருந்து ரஜனியும், சுபாவும், குகாவும் அகற்றப்பட்டார்கள். ரஜனி தனக்கு எதிர்ப்புறமாக எடுத்துச் செல்லப்பட்ட தனது கணவனின் உடலப் பேழையை விடாது பற்றிப் பிடிக்கப் போராடினார். அவரைப் பிடித்து அணைத்து அப்பால் கூட்டிச் செல்ல வேண்டியதாயிற்று. அவருடைய அரற்றலை ஏற்கனவே தாங்க முடியாத செவிகளில் "அத்தான், அத்தான்" என்ற அவருடைய அலறல் துயரச் சுமை ஏற்றன. புலேந்திரனுடைய உடல் பேழையைத் தூக்கிச் செல்ல முற்பட்டபோது, இனிமேல் அதைப் பார்க்க முடியாது என்ற உணர்வு தாக்க, அதை விடாது அணைத்தபடி திமிறிய சுபாவைக் கட்டுப்படுத்தி வைத்திருப்பதும் பெரும்பாடாகியது. ஒவ்வொன்றாக, மிகக் கண்ணியமாக ஒரு வரிசையில் சுமந்து செல்லப்பட்ட உடலப் பேழைகள் அடுக்கப்பட்ட சிதைகளில் வைக்கப்பட்டன. தமிழ் மரபுப்படி, வெள்ளை வேட்டியணிந்து வெறும் மேலுடன், முதிய தந்தையர் தமது மைந்தரின் உடற் பேழைகளின் அருகே அமைதியாக வெறித்த பார்வையுடன் நின்றார்கள். எரியும் கொள்ளிகள் அவர்களிடம் கையளிக்கப்பட்டன. இராணுவ மரியாதை வேட்டுக்கள் காற்றில் கலந்த பின், அந்த முதியவர்கள் முன்னே அடி வைத்து ஒரே கணத்தில், சிதைகளுக்கு தீ மூட்டினார்கள். தங்கள் வம்ச விருத்தி வித்தின் இறுதிக் கருகலை உறுதிப்படுத்தினார்கள்.

உப்பிய கரும் புகைத் திரள் வானை ஊடறுத்தது; மக்கள் விறைத்து நின்றார்கள்; பொருமல் ஒலி அந்தப் பெருங் கூட்டத்தில் இருந்து விம்மலாக எகிறியது. எல்லாமே ஒரு கோரக் கனவாகத் தோன்றியது. ஏன் இது நேர்ந்தது? இத்தனை தொகை மக்களின் இதயங்கள் ஏன் சீலம் சீலமாகக் கிழிந்தன. இத்தகைய பேரிழப்பையும், துயரத்தையும் அடைய மக்கள் அப்படி என்ன கொடுமை புரிந்தார்கள்? போரோய்வு ஒன்று

நடைமுறையில் இருப்பதாகக் கூறப்படும்போது மக்கள் இத்தகைய துயரத்துக்கு உள்ளாக்கப்பட்டமையும் போராட்டம் இத்தகைய சோதனைக்கு உட்பட்டமையும் இயல்புக்கு மாறான புதிரல்லவா? திலீபன் பலியானதை உடனடுத்து இப்படி ஒரு பேரிடர் நேர்ந்தமை, மக்களை வகையறியாத் திகைப்புக்கு உள்ளாக்கியது. பொதுமக்கள் பார்வையில் இந்திய அமைதிப் படையும் புதுடில்லி நிர்வாகிகளும் சாயம் வெளுத்து நின்றார்கள். கொழும்பு மீதிருந்த அவநம்பிக்கையும் அதிகரித்தது. காயங்கள் ஏற்படுத்தப்பட்டன. இவை என்றுமே பூரண குணம் காணும் என்று எனக்குப் படவில்லை.

செத்த வீட்டுச் சடங்கிலிருந்து திரும்பும்போது உணர்ச்சிகள் வற்றியகோது போன்ற மனநிலையோடு சென்றேன். சில நாட்கள் முன்னதாகத்தான், புதிய மலர்ந்த முறுவலோடு, மகிழ்ச்சியான மாப்பிள்ளைகளாக புலேந்திரனையும், குமரப்பாவையும் பார்த்திருந்தேன். இப்பொழுது உயிரற்ற உடலங்களாக அவர்களைப் பேழைகளில் பார்த்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருக்கிறேன். ஏனைய போராளி களையும் எனக்கு நேருக்கு நேர் தெரியும். சென்னையிலோ வல்வெட்டித்துறையிலோ எனக்கு அறிமுகம் ஆனவர்கள். இழப்பும் துயரமும் என் நெஞ்சை நிறைத்தன. வாழ்க்கையின் சகட வோட்டத்திலிருந்தும், நிலையில்லாத் தன்மையிலிருந்தும், துயரமும் கசப்பும் நிறைந்த பாடத்தை அன்று கற்றேன்.

கடந்த சில நாட்களாக இடம்பெற்ற சம்பவங்கள், அரசியல் நிலைமையைக் கட்டுப்படுத்தமுடியாத அதல பாதாளத்தை நோக்கி விரையச் செய்திருந்தன. விடுதலைப் புலிகளுக்கும் அமைதிப்படைக்கும் இடையே நிலவிய உறவு என்றுமே முன்னைப்போல இருந்ததில்லை; இருக்கவும் மாட்டாது என்பதும் உறுதியாயிற்று. இன மோதல்களும், அவற்றையடுத்து பழிவாங்கலாக அப்பாவிச் சிங்களப் பொதுமக்கள் கொல்லப்பட்டமையும் தேசிய துயரத்தின் துரதிர்ஷ்டவசமான வெளிப்பாடுகளாக இடம்பெற்றன. மிகவும் கொந்தளிப்பான அரசியல் சூழ்நிலை! விடுதலைப் புலிகளுக்கும் அமைதிப் படைக்கும் இடையே அதிகரிக்கும் முறுகல் நிலை! துயர நிகழ்வுகளால் கொதிப்படைந்த பொதுமக்கள் வெளிப்படையாகவே இந்தியப் படைகளுக்குப் பணியமறுத்தார்கள். அதே சமயம், சிங்களப் பொதுமக்கள் கொல்லப்பட்டமைக்கு ஜெயவர்த்தனா அரசு புலிகள் மீது பழி சுமத்தியதோடு, புலிகள் மீது இந்திய இராணுவம் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் நிர்ப்பந்தித்தது. பிரதம இந்திய இராணுவத் தளபதி ஜெனரல் சுந்தர் ஜீ அவர்களும் இந்திய பாதுகாப்பு அமைச்சர் கே.சீ.





பான்ற் அவர்களும் கொழும்புக்கு விமானம் மூலம் சென்று, அரசுத் தலைவர் ஜெயவர்த்தனாவுடன் மந்திராலோசனை நடத்தினார்கள். இராணுவ நடவடிக்கை மூலமாக இந்தியப் படைகள் விடுதலைப் புலிகளை நிராயுதபாணிகளாக ஆக்க இந்தியா தீர்மானித்திருப்பதாக அவர்கள் ஜெயவர்த்தனாவுக்குத் தெரிவித்தார்கள். ஜெயவர்த்தனா வுக்கு இதனால் பெரும் மகிழ்ச்சி! இந்திய இராணுவம் பயிற்சி கொடுத்து, ஆயுதம் வழங்கி, காப்பாற்றி வந்த தமிழ்ப் புலி கெரில்லா வீரர்களுக்கு எதிராக இந்திய இராணுவத்தின் துப்பாக்கிகளே திரும்புகின்றன என்றால் தமது தந்திரம் இறுதியாகப் பலித்துவிட்டதையொட்டி அவருக்குத் திருப்தி. ஜெயவர்த்தனாவுக்கு இது ஒரு இராஜதந்திர வெற்றி; ஆனால் தமிழ் மக்களுக்கு இது பேரிடி! பலாத்காரம் மூலம் விடுதலைப் புலிகளை நிராயுதபாணிகள் ஆக்குவதற்காக யாழ்ப்பாணம் மீது இந்திய இராணுவம் படையெடுப்பதற்கான தேதி ஒக்ரோபர் 10 என்று குறிக்கப்பட்டது. தமது இராணுவ நடவடிக்கை பற்றி, தமிழ்ப் பொதுமக்கள் எதுவும் அறியக்கூடாது என்பதற்காகவும், இராணுவ அத்துமீறல்கள், போர்க் கொடூரம் பற்றி உள்ளூர் மற்றும் அனைத்துலக கண்டனங்கள் வரக்கூடாது என்பதற்காகவும், யாழ்ப்பாணத்தில் உள்ள சுதந்திரமான செய்தி ஊடகம் மீது இந்திய இராணுவம் திடீரென்று துரித நடவடிக்கை எடுத்தது. இராணுவத் தாக்குதல் நடத்தப்படுவதற்கு சில மணிநேரம் முன்னதாக, ஒக்ரோபர் 10 அதிகாலையில், 'ஈழமுரசு' முரசொலி ஆகியவற்றின் அச்சுக்கூடங்கள் வெடிவைத்துத் தகர்க்கப்பட்டதோடு, செய்தியா ளர்களும் கைது செய்யப்பட்டார்கள். வானொலி, தொலைக் காட்சி நிலையங்களும் தகர்க்கப்பட்டு ஒலி, ஒளி பரப்புப் பொறிகள் செயலிழக்கச் செய்யப்பட்டன. யாழ்ப்பாண மக்களின் கருத்துச் சுதந்திரத்தையும் வெளியீட்டுச் சுதந்திரத்தையும் முடக்கி ஜன நாயகத்தின் கருவியையே தகர்த்து ஒழிக்கும் பாதகக் கொடுமையை உலகின் ஆகப் பெரிய ஜனநாயக நாடு புரிந்தது. புகழ் பெற்ற யாழ்ப்பாண நகரை நோக்கி ஒல்லாந்தர் கோட்டையில் இருந்து தாக்கப் புறப்பட்ட இந்தியப் படைகளை எதிர்கொண்டு ஒக்ரோபர் 10ம் தேதி காலையில் ஆயுதம் தரித்த விடுதலைப் புலிகளின் சிறிய அணிகள் கடுமையாக எதிர்த்துப் போரிட்டன. இந்தியாவுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையே முழு அளவிலான போர் தொடங்கியது. வன்செயல், சாவு, அழிவு என்ற புதிய முன்னெப்போதும் காணாத ஒரு நச்சு சுழலுக்குள் தமிழினம் தள்ளப்பட்டது.

### பவான் இராணுவ நடவடிக்கை

இந்திய இலங்கை ஒப்பந்தத்தின் நிபந்தனைகளுக்கு அமைவாக இந்தியப் படைகளை அமைதிப்படை என்ற பெயரில் அனுப்பி வைப்பதற்கு முன்னதாக தேவைப்பட்டால், விடுதலைப் புலிகளை வலுக்கட்டாயமாக நிராயுதபாணிகளாக்க எழுபத்தியிரெண்டு மணிநேரம் தாராளம் என்று இந்திய இராணுவ உயர் பீடம் கணிப்பிட்டிருந்தது. அது, அப்பட்டமான இராணுவத் தப்புக் கணக்கு என்று நிரூபணமாகியது; விடுதலைப் புலிகளின் துப்பாக்கிப் பலம், போராட்ட வடிவம், மன உறுதி ஆகியவை தொடர்பாக இந்தியா குறைத்து மதிப்பிட்டு விட்டது என்பது நிரூபணமாயிற்று. யாழ்ப்பாண மண்ணில் 1987 ஒக்ரோபர் 10ம் திகதியன்று மோதல் தொடங்கியபோது ஒரு சிறிய கெரில்லாப் படையை அடித்துத் துடைத்து ஒழிக்கும் சிறிய பணியாகவே இருக்கும் என்றே இந்திய இராணுவம் கருதியது. “ஒப்பரேசன் பவான்” (அதாவது பவான் இராணுவ நடவடிக்கை) என்ற பெயரில் விடுதலைப் புலிகளை பலவந்தமாக நிராயுபாணி களாக்கும் நடவடிக்கையின் முதற்கட்டமாக விடுதலைப் புலிகளின் தலைவர்களைச் சிறைப்பிடிப்பதன் மூலம், அமைப்பின் தலையை வெட்டிவிடத் திட்டமிடப்பட்டது. தலையை அகற்றிவிட்டால், புலிப் போராளிகள் சீர்குலைந்து, மனம் தளர்ந்து இறுதியில் எதிர்ப்பு இன்றியே சரணடைந்து விடுவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் தொடக்கத்தில் இருந்தே விடுதலைப் புலிகளின் ஆக்ரோஷமான எதிர்த்தாக்குதலையே இந்தியப் படைகள் சந்திக்க நேர்ந்தது. பிரபா கரன் அவர்களையும் அவருடைய மூத்த தளபதிகளையும் சிறைப்பிடிக்கும் நோக்கத்தோடு ஒக்ரோபர் 12ம் திகதியன்று தனது விசேட அதிரடிப் படைப் பிரிவை வான்வழியாக யாழ்பல்கலைக்கழக வளாகத்திற்குள் இந்திய இராணுவம் இறக்கியது. ஆனால் நிராயுதபாணிகளாக்கும் முயற்சி எதிர்பார்த்ததுபோல அவ்வளவு எளிதாக இருக்கப் போவதில்லை என்பதை அவர்கள் விரைவில் புரிந்து கொண்டார்கள். இந்திய இராணுவத்தின் வரலாற்றில் இந்தியா கண்ட மிகப் பெரும் இராணுவத் தோல்விகளில் ஒன்றாக பவான் நடவடிக்கை பெயரெடுத்தது.

பிரபாகரன் அவர்களுடைய தலைமைப் பணிமனை புறநகரில் உள்ள கொக்குவில், பிரம்படி ஒழுங்கையில் இருப்பதாக இந்தியப் புலனாய்வுப் புரிவு தகவல் திரட்டியிருந்தது. இது, யாழ்ப்பாண பல்கலைக்கழக மருத்துவ பீடத்துக்கு அருகாமையில் உள்ளது. இந்தக் கட்டடங்களுக்கு இடையே ஒரு திறந்த வெளி. வான்வழியாக





மேற்கொள்ளும் நடவடிக்கைக்கு ஒரு நல்ல இறங்கு தளமாக அமையும் என்பதால், கவரப்பட்ட இந்தியர், மோட்டுத்தனமான ஆபத்து நிறைந்த இராணுவ நடவடிக்கையில் இறங்கினர். இராணுவத் திட்டமிடல் போர்முறை என்று வரும்போது, மிக உயர்ந்த உள்ளுணர்வுடைய பிரபா-கரன் அவர்கள் தமது தலைமைப் பணிமனை மீது முக்கிய அதிரடித்தாக்குதல் நடப்பதாயின் அது எங்கே தொடங்கும் என்று முன்கூட்டியே இடத்தைப் புரிந்திருந்தார். அந்த மைதானத்தைச் சூழவுள்ள பல்கலைக்கழக கட்டடங்களில் தாமே தேர்ந்தெடுத்த போராளிகளை நிறுத்திக் காத்திருந்தார். ஒக்ரோபர் 12 அதிகாலையில் உலங்குவானூர்திகள் பதின்மூன்றாவது சீக்கிய இளவணிப் படையினரையும் ஆகாய அதிரடிப் படையினரையும் வானத்தில் இருந்து இறக்கியபோது, காத்திருந்த விடுதலைப் புலிகளின் இயந்திரத் துப்பாக்கிகளிடம் இருந்து ஆக்ரோஷமானதும், தயவு தாட்சண்ய மற்றதுமான எதிர்ப்புக் கிடைத்தது. படையினருக்குக் கிடைத்த அதேயளவு சேதம் இந்திய உலங்குவானூர்திகளுக்கும் கிடைத்தன. ஏற்கனவே வந்திறங்கி விடுதலைப் புலிகளின் தொடர் துப்பாக்கி வேட்டுக்கு முகம் கொடுத்துக் கொண்டிருந்த இந்தியப் படையினருக்கு உதவியாக மேலும் படையின ரைக் கொண்டு வந்து இறக்க உலங்குவானூர்திகளுக்கு இயலாது போயிற்று. வந்திறங்கிய இந்தியப் படையினர் சுற்றிவளைத்து தனியாக்கப்பட்டனர். ஒக்ரோபர் 12ம் திகத-ியன்று தங்கள் கடைசித் துப்பாக்கி ரவை தீர்ந்த முன் மதியம் வரை தங்கள் உயிருக்காக அவர்கள் போராடினார்கள். உயிர் தப்ப முனையும் இறுதி முயற்சியாக கூர்முனைக் கத்தியால் குத்தும் தாக்குதலிலும் ஈடுபட்டார்கள். இந்த நடவடிக்கையின் படுதோல்வி வரலாறு கூறுவதற்காக் ஒரேயொரு இந்தியப் படையினரே உயிர் தப்பினார். சிறப்புப் பயிற்சி பெற்ற சீக்கிய அதிரடிப்படையினர் இருபதியொன்பது பேர் இந்தச் சமரில் கொல்லப்பட்டார்கள்.

அதே சமயம், வான்குடைப் பயிற்சி பெற்ற அதிரடிப்படையினர், சீக்கிய படையணியிலிருந்து பிரிந்து பிரபாகரன் அவர்களை அழித்தொழிக்கும் இராணுவ இலக்கை மட்டும் தங்கள் தனி இலக்காகக் கொண்டு அவர் இருந்த இடத்தை குறியாக வைத்து நகரத் தொடங்கினர். அவருடைய தலைமைப் பணிமனையை அவர்கள் சென்றடைந்தபோது, இந்திய நடவடிக்கை தொடங்குவதற்கு சில மணிநேரம் முன்னதாக அவர் வெளியேறி விட்டதைக் கண்டறிந்தார்கள். மட்டுமீறிய நம்பிக்கையோடும் தவறான கணிப்போடும் நடத்தப்பட்ட இந்த இராணுவ நடவடிக்கை, தமிழ்ப் பொதுமக்களுக்கு எதிராகப் புரியப்பட்ட மிக மோசமான கொடூர

சம்பவமாக வரலாற்றில் பதியப்பட்டிருக்கிறது. முற்றுகைக்கு உள்ளாகி முழிபிதுங்கி நின்ற இந்திய அதிரடிப்படையினர், தமக்கு பரிச்சயம் இல்லாத ஒரு சூழலில் தாம் யாரைத் தேடிச் செல்கிறார்களோ, அவரை முன்பின் பார்த்தறியாத நிலையில், தமது இராணுவத் தாக்குதல் இலக்குக்குள் அகப்பட்ட தமிழ்ப் பொதுமக்களையும் ஈவிரக்கமின்றிச் சுட்டுக் கொன்றார்கள். திணறிக்கொண்டிருந்த அதிரடிப்படையினருக்கு உதவியாக ஏவப்பட்ட மோட்டார், பீரங்கி எறிகணைகளும், பொதுமக்கள் பலரைப் பலியெடுத்தது. அருகே அமைந்திருந்த யாழப்பாணத்துக் கோட்டையில் இருந்து புறப்பட்ட கனரக டாங்கி வண்டிகள், எதிர்பட்ட பொதுமக்களை புல்லை நெரிப்பதுபோல் அரைத்துச் சென்றன.

இந்தியப் படைகள் அனாவசியமாக இரத்த வெறியாடிய படுகொலைக் களத்தை விட்டு அகன்றபின், நெரியலில் பிய்ந்த உடலத் துண்டங்களும், துப்பாக்கிச் சல்லடையிட்ட சடலங்களும் அந்தப் பகுதியில் இறைந்து கிடந்தன. இந்தக் கண்மூடித்தனமான இராணுவ நடவடிக்கையால் மொத்தம் நாற்பது தமிழ்ப்பொதுமக்கள் உயிரிழந் தார்கள்; பெருந்தொகையினர் காயமடைந்தார்கள்.

பவான் இராணுவ நடவடிக்கை தொடர்ந்தது; தீவரமடைந்தது. தீபகற்பத்து வலிகாமப் பகுதியில் மக்கள் அடர்த்தியாக வாழ்ந்த பகுதி மீது பீரங்கி ஷெல் அடிகள் மழைபோல பொழிந்தன. சொத்துக்களைச் சிதறடித்து கற்குவியல் ஆக்கின. மக்களைத் துண்டம் துண்டமாகச் சிதறடித்தன. பலரை நிரந்தர ஊனமானவர்கள் ஆக்கின.

தமிழ்ப் பொதுமக்களை இந்தியப் படையினர் ஒருபுறம் கண்டதுண்ணடமாக வெட்டிச் சரிக்க, மறுபுறம், தீபகற்பத்தின் பிரதான வீதிகளூடாக யாழ்ப்பாண நகரை நோக்கி, சமவேளைப் படைநகர்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இந்த நகர்வின்போது, அசைவு கண்டதும் சுடும் இந்திய இராணுவத்தினர் சென்ற பாதையில், கோர மரணங்களும், எழுந்தமானக் கொலைகளும் இடம்பெற்றன. ஆக்கிரமிக்கும் வெளிநாட்டுப் படையாக இந்தியப் படையினர் சூறையாடினர். கூட்டம் கூட்டமாக சென்ற இந்தியப் படையினர், மிருகத்தனமான பாலியல் வன்தாக்குதல் புரிய, அச்சத்தோடும் ஆற்றாமையோடும் எண்ணற்ற தமிழ்ப் பெண்கள் ஓலமிட்டனர். மிகப் புனிதமானது என்று தமிழ்ப் பெண்கள் பேணி வந்த, கற்பு, கண்ணியம், பெருமை ஆகியவை “அமைதிக்காப்பாளர்களால்” சிதைத்தழிக்கப்பட்ட வேளைகளில், பெண்களின் கதறல்களும் ஓலமும் அடுத்தடுத்து காற்றைக் கிழித்து காயப்படுத்தின.

நகரும் இந்தியப் படையின் வழியில் இருந்த ஒவ்வொரு வீடும்





சூறையாடப்பட்டது. காசும் நகையும் விலை உயர்ந்த பொருட்களும் களவாடப்பட்டன. யாழ்ப்பாணம் மீதான தாக்குதலால் இந்தியப் படையினர் பெரும் பொருளீட்டினர். ஆனால் யாழ்ப்பாண பொதுமக்களைப் பொறுத்த வரையிலே அவர்கள் பெற்றதெல்லாம், அதிர்ச்சி; திகில்; அவமதிப்பு! இந்திய அமைதிப்படை மட்டில் மக்கள் மனப்பேதலிப்பும் வெறுப்பும் கொண்டார்கள். அதுவே விடுதலைப் புலிச் சுதந்திரப் போராளிகளுக்கு ஆதரவாகவும் வடிவெடுத்தது. போர்க்கோல உலங்குவானூர்த்திகள், ஆட்டிலறி மற்றும் மோட்டார் தாக்குதல்கள், கனரக பீரங்கி வண்டிகள் சகிதம் இந்தியர்கள் பெரியதொரு மரபுவழிப் போரைத் தொடுத்தார்கள். விடுதலைப் புலிப் போராளிகள் தெளிவான போர்க்களப் பரிச்சியத்தோடும், தேர்ந்தெடுத்த நகர்புற கெரில்லா தாக்குதல் வழிகளைக் கையாண்டார்கள். இறுதியில் மூன்றுநாள் போர் என்று இந்தியர் தொடக்கிய பவான் இராணுவ நடவடிக்கையை இரண்டு வார காலம் நீடிக்கச் செய்தார்கள். போரினால் களைத்துப்போன தமிழ்ப் பொதுமக்கள், ஏற்கனவே சிறீலங்கா இராணுவப் படைகளிடம் பெருமளவு உயிர்களைப் பறி கொடுத்திருந்தார்கள். அவர்களுடைய சொத்து க்களும் அழிபட்டிருந்தன. இப்பொழுது, இன்னொரு அந்நிய இராணுவ ஆக்கிரமிப்புப் பிடியில் தாம் சிக்கியிருப்பதை உணர்ந்தார்கள். அமைதிப் படை என்ற பெயரில் வந்த எதிரியிடம் கண்ட குரூர உக்கிரத்தை அவர்கள் இதற்குமுன் சிங்களப் படையிடம் கூடக் கண்டதில்லை.

“பவான் நடவடிக்கை” நடத்தப்பட்டதன் நோக்கம், விடுதலைப் புலிகளின் ஆயுதங்களைக் களையவே. ஆனால் அதைத் தொடக்கிய தீவிரமான ஆரம்ப கட்டத்தில் நியாயம் கூற முடியாத அளவு பொதுமக்கள் கொல்லப்பட்டார்கள். ஊனம் அடைந்தார்கள். அதைவிட, சனத் தொகை யின் பெரும்பகுதி தற்காலிகமாகவோ நிரந்தரமாகவோ இருப்பிடங்களை இழந்தது. குறிக்கப்பட்ட அகதி முகாம்களுக்கு யாழ்ப்பாண மக்கள் பாய்ந்தோடினார்கள். வேறு சிலர் போர் நடைபெறும் பகுதிகளில் இருந்து முற்றாக வெளியேறினார்கள். பின்னே தங்கியிருந்தவர்கள் எப்படி நடப்பார்கள் என்று ஊகிக்க முடியாத, குரூரப் போக்குடைய இந்தியப் படைகளால் தாம் கொல்லப்படலாம் அல்லது காயப்படுத்தப்படலாம் என்று தெரிந்தே இருந்தார்கள். இத்தகைய பகைமைச் சூழலில் காயமடைந்த விடுதலைப் புலிப் போராளிகளை யாழ்ப்பாணப் பொது மருத்துவமனையில் இருந்து யாழ்ப்பாண தீபகற்பத்தின் வடமராட்சியிலும் சாவகச்சேரியிலும் உள்ள உள்ளூர் மருத்துவ மனைகளுக்கு மாற்ற வேண்டியது தவிர்க்க முடியாததாயிற்று. வசதிகள் குறைந்த இந்தச் சிறிய மருத்துவ மனைகளில் விடுதலைப்

புலிப் போராளிகளையும் பெருந்தொகையாக காயம் அடைந்து கொண்டிருக்கும் பொதுமக்களையும் வைத்துப் பராமரிப்பது கடின மாகியது.

வீடுவாசல்களை இழந்த பெருந்தொகை மக்கள் வடமராட்சியில் உள்ள வல்வெட்டித்துறையில் உள்ள தங்கள் உறவினர்களுடனும் நண்பர்களுடனும் தங்கியிருக்க வந்தார்கள். வல்வெட்டித்துறையைச் சேர்ந்த சில புலிப் போராளிகள் தங்கள் கூட்டாளிகளையும் தம்மோடு கூட்டி வந்திருந்தார்கள். இந்தத் தேசிய நெருக்கடிக்கு வல்வெட்டித்துறை மக்கள் தயக்கமின்றி முகம் கொடுத்தார்கள். தங்கள் மண்பற்றையும் பெருந்துணிச்சலையும் வெளிக்காட்டினார்கள். பல குடும்பங்கள், காய மடைந்த புலிப் போராளிகளுக்கு இருப்பிடமும் தஞ்சமும் அளித்தார்கள். அவர்களில் ஒருவர் கிட்டுவின் தாயார்; கிட்டு அம்மா என்று வாஞ்சையோடு அழைக்கப்படுபவர். தமிழ் ஈழத்தை பற்றுறுதியோடு ஆதிரிப்பவர். போராட்டத்தின் தேவைகளுக்காகத் தமது வீட்டையும் இதயத்தையும் முழுமனதாக திறந்து விட்டிருந்தார். நீண்ட காலமாக விடுதலைப் புலிப் போராளிகளை ஆதரித்து பராமரித்த வரலாறு அவருடையது. யாழ்ப்பாண மருத்துவபீட மைதானத்தில் இந்தியப் படையினர் இறங்கும்போது போராளிகள் பதுங்குத்தாக்குதல் நடத்திய வேளை அதில் காயமடைந்த மூத்த தளபதி பொட்டு அம்மானை பத்திரமாக வைத்திருக்கக்கூடிய மிகப் பாதுகாப்பான இடம் கிட்டு அம்மாவின் வீடே என்று முடிவு செய்யப்பட்டது. இந்தத் தாக்குதலின் போது காயமடைந்த முதற் புலிப்போராளி பொட்டு அம்மானே ஆவார். உடனடியாக இவரை யாழ்ப்பாணம் அரச மருத்துவமனைக்கு விரை வாகக் கொண்டு போயிருக்கிறார்கள். வயிற்றில் ஏற்பட்ட கடுங்காயத்தால் உயிர்போகும் நிலையில் இருந்த இவரைக் காப்பாற்ற அவசர அறுவை சிகிச்சை நடத்தப்பட்டது. சிறிது சுகம் காணப்பட்டதும், வல்வெட்டித் துறையிலுள்ள கிட்டு அம்மாவின் பாதுகாப்பான வீட்டுக்கு அவர் கொண்டு போகப்பட்டார். அங்கே அவரோடு வேறும் இரண்டு மூத்த போராளிகள் தரித்திருந்தார்கள். பொட்டு அம்மானுக்கு வேறு காயங்களும் இருந்தன. தானியங்கித் துப்பாக்கிச் சூடு தைத்து முழங்கையின் முட்புரித் தசைநார்கள் கிழிந்து போயிருந்தன. மிகக் கவனமான பராமரிப்பும், இடையறா மருந்து கட்டலும் தேவைப்பட்டது. காலிலும் பாதத்திலும் கூட, சிறு காயங்கள். அதாவது அவர் படுகாயம் அடைந்திருந்தார்.





## கொடூரமான படுகொலைகள்

பொட்டு அம்மானும் வேறு புலிப் போராளிகளும் கிட்டுவின் வீட்டில் இருப்பதை அறிந்தோம். எமது வீட்டிலிருந்து சில நூறு யார் தூரத்தில் அந்த வீடு இருந்தது. சுகம் விசாரிக்க அங்கே போனோம். வீடு தற்காலிக மருத்துவமனையாக மாற்றப்பட்டிருந்தது. காயமடைந்த போராளிகள் படுக்கையிலேயே கிடந்தார்கள். கிட்டு அம்மா பொறுப்பாக இருந்தார். அறுபதைத்தாண்டிய அந்தத் தாயார், அன்னைக்குரிய அரவணைப்போடு அவர்களைச் செல்லமாகப் பராமரித்துக் கொண்டிருந்தார். அவருடைய பேச்சில் நகைச்சுவை இருக்கும். கலகலவென்ற சிரிப்பொலியும் குறும்பும் நையாண்டியும் இருக்கும். இருபத்தினான்கு மணி நேரமும் ஓடியாடிப் பணிபுரிந்து கொண்டிருந்தார். அவருடைய உறவினரும், அயலவர்களும் உணவு வழங்கியும் அவருக்காகக் கடை கண்ணிக்குச் சென்று உதவினார்கள். எனது மருத்துவத்தாதி ஆற்றலுடன் நானும் உதவி புரிந்தேன். புலிகளின் மருத்துவப் பிரிவுக்கு எனது உதவி, பளுவைக் குறைத்தது. பொட்டு அம்மானையும் வேறு சிலரையும் பராமரிக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டேன். பொட்டு அம்மானின் வயிற்றுப் புண் நன்றாக குணமடைந்தது. ஆனால் கையில் ஏற்பட்ட காயம் மட்டும் மாறுவதாக இல்லை. பெரிய கட்டுப்போட வேண்டியிருந்தது. ஆனால் ஊநீர் கசிந்து கொண்டிருந்தது. பெரிய புண் ; பயங்கர வலி. உள்ளூர் மருத்துவமனையில் அடிக்கடி மயக்க மருந்து எடுத்து அதன் பின்னரே மிகக் கவனமாகத் துப்புரவு செய்ய வேண்டியிருந்தது. பொட்டு அம்மான் உட்பட கடுங்காயம் அடைந்தவர்களை, பருத்தித்துறை மந்திகை மருத்துவமனைக்கு கொண்டு செல்லும்போது நானும் உடன் சென்றேன்.

மந்திகை மருத்துவமனையில் போரின் பாதிப்பு அப்பட்டமாகத் தெரிந்தது. குண்டுச் சிராய்களோடு பொதுமக்களும், காயமடைந்த போராளிகளும் மருத்துவமனைப் படுக்கையில் நிரம்பி வழிந்தார்கள். இனித் தாங்காது என்ற அளவுக்கு அங்குள்ள மருத்துவ வளங்கள், வற்றும் அளவுக்கு பயன்படுத்தப்பட்டன. அங்குள்ள மருத்துவர்களுக்கு உதவியாக நோபல் பரிசு பெற்ற சர்வதேச பிரெஞ்சு மருத்துவ நிறுவனத்தைச் சேர்ந்த மருத்துவர்களும் பணியாற்றினார்கள். ஒரு தடவை எமது வழமையான மருத்துவமனைப் பயணத்தின்போது இரத்தம் ஓட, ஓட வலிதாங்கமுடியாது அரற்றிக் கொண்டிருந்த பல பொதுமக்கள் தொடர்ந்து, தொடர்ந்து மந்திகை மருத்துவமனைக்கு

கொண்டுவரப்பட்டார்கள். சாவகச்சேரிப் பக்கத்தில் இருந்து அவர்கள் வருவது தெரிந்தது. இந்திய அமைதிப் படையினரால் சாவகச்சேரியில் பெரியதொரு தாக்குதல் நடத்தப்பட்டதாக காயப்பட்டவர்களும், அவர்களோடு கூடி வந்தவர்களும் கூறினார்கள்.

அந்த நாள் 1987 ஒக்ரோபர் 27ம் திகதியாகும். இந்திய இராணுவத்தின் வரலாற்றில் வெட்கப்படவேண்டிய நாளாகவும், தமிழ் மக்களின் துயர வரலாற்றில் ஒரு பயங்கர சோக நாளாகவும் அது அமைந்தது. இயந்திரத் துப்பாக்கிகளும் ஏவுகணைகளும் பொருத்திய உலங்குவானூர்திகள் சாவகச்சேரி நகருக்கு வந்து, உள்ளூர்ச் சந்தைக்கு மேலே வட்டமிட்ட வண்ணம் இருந்தன. சந்தையில் அடர்த்தியான சனத்திரள். ஆறுதலாகச் சாமான் வாங்குவதில் மக்கள் ஈடுபட்டார்கள். மக்கள் எதிர்பாராத நிலையில், உலங்குவானூர்திகள் திடீரென்று மக்களைக் குறிவைத்து தாக்குதலை நடத்தின. வானூர்திகளிலிருந்து ஏவப்பட்ட ஏவுகணைகள் மக்கள் மத்தியில் விழுந்து வெடித்துச் சிதறின. மக்கள் பீதியால் நாலா பக்கமும் ஓட அங்கே ஒரே குழப்பமும் களேபரமும்!உலங்குவானூர்திகள் அகன்ற பின் அங்கே விளைந்த அனர்த்தம் வெளி வெளியாகத் தெரிந்தது. சிதறிய உடலங்கள் குடல் எறியப்பட்டுக் கிடந்தன. பலருக்குப் படுகாயம்; வலி! அதிர்ச்சி! பயங்கரமான காயங்களில் இருந்து இரத்தம் ஆறாக ஓடியது. காயமடைந்தவர்களை மருத்துவமனைக்கு அனுப்ப, மக்கள் வாகனங்களைத் தேடினார்கள். இதன் விளைவாக மருத்துவமனை காயமடைந்தவர்களால் நிரம்பி வழிந்தது. மருத்துவமனையின் இந்த நெருக்கடியில், நானும் உதவ முன்சென்றேன். யாழ்ப்பாண அரச மருத்துவமனையில் கூடுதலான வசதிகள் இருந்தபோதிலும். அங்கே செல்ல, காயம் பட்ட பொதுமக்கள் மறுத்தார்கள். ஒருவாரம் முன்னதாக, அதாவது ஒக்ரோபர் 21 ம் திகதியன்று யாழ்ப்பாண மருத்துவமனையில் இடம்பெற்ற குரூரப் படுகொலையால் மக்கள் பீதியடைந்திருந்தார்கள். அந்த மருத்துவமனைக்குள் இந்தியப் படையினர் நுழைந்து காட்டுமிராண்டித்தனப் படுகொலை புரிந்தபோது, மருத்துவர்கள், தாதியர், பணியாளர் என்று 21 பேர் அங்கு கொல்லப்பட்டிருந்தார்கள். இந்தியப் படையினர் மருத்துவமனைக்குள் சென்று, தானியங்கித் துப்பாக்கிகளால் சிலாவிச் சுட்டு, நோயாளிகள் மீதும் மருத்துவ பணியாளர் மீதும் எறிகுண்டுகள் வீசி வெறியாட்டம் ஆடினார்கள். அந்த இந்திய வெறி யாட்டத்துக்கு உதவியாக, மோட்டார் எறிகணைகளும் ஏவப்பட்டன. மருத்துவமனைச் சுவர்களை அவை துளைக்க புகையும் தூசியும் அங்கே நிரம்பி வழிந்தன. சமாதானத்தையும் சரணடைவதையும் உணர்த்தும்





வகையில், மருத்துவப் பணியாளர்கள் கைகளை உயரத் தூக்கியபடி நின்றபோதும், இந்திய அமைதிப் படையினர் நேரெதிரில் நின்று அவர்களைச் சுட்டு வீழ்த்தி ஏறிகுண்டுகளையும் அவர்கள் மீது வீசியிருக்கிறார்கள். நோயாளிகள் எதுவித எரிச்சலூட்டும் செயலைச் செய்யாத போதிலும், இந்திய ராணுவக் காட்டுமிராண்டித்தனத் தாக்குதலில் மருத்துவமனைப் பணியாளரும் நோயாளிகளுமாக ஐம்பத்தியொருவர் கடுங்காயம் அடைந்திருக்கிறார்கள். இந்த நிலையில் யாழ்ப்பாண மருத்துவமனைக்கு பொதுமக்கள் செல்லத் தயங்கியதன் நியாயத்தை நாம் புரிந்து கொள்ள முடிந்தது.

உடனடி மருத்துவச் சிகிச்சைக்காக, மருத்துவ மனையைத் தயார் செய்ய நாம் முற்படுவதற்கு இடமளிக்காத வகையில், காயப்பட்டவர்கள் வந்து குவியத் தொடங்கினார்கள். ஒரேயொரு கூடமே அறுவைச் சிகிச்சைக்காக இருந்தது. அதனுள்ளே காயப்பட்டவர்கள் பலர் குவிந்திருந்தார்கள். காயமடைந்தவர்கள் எல்லா வயதிலும் இருந்தார்கள். தங்கள் அன்புக்கு உரியவர்களை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்ற தவிப்போடு அவர்களுடைய உறவினர்களும் அறுவைச் சிகிச்சைக்காக கூடத்துக்குள்ளே முண்டியடித்துக் கொண்டு நின்றார்கள். அறுவைச் சிகிச்சைப் படுக்கையில் ஓர் இளம் பெண். வயிற்றில் பல காயங்கள். கிழிந்து போன குடலில் இருந்து எறிகுண்டுச் சிராய்கள் நீக்கப்பட்டு கிழியல்கள் பல தைக்கப்பட்டன. காயம் பட்ட ஒருவருடைய கால் குருதி நாளத்திலிருந்து சீறும் ரத்தத்தை அவருடைய உறவினர் ஒருவர் பொத்திப் பிடித்தபடி மருத்துவருக்காக காத்திருந்தார். முப்பது வயது ஆண் நோயாளி ஒருவர் என் பொறுப்பில் இருந்தார். அவருடைய நெஞ்சில் ஒரு துளை. வயிற்றிலும் கிழிந்த காயங்கள். வயிற்றுச் சவ்வு சிதைந்திருக்குமோ என்று மருத்துவர்கள் சந்தேகித்தார்கள். இடைத் தொடைக்குக் கீழே இரத்தம் வந்து கொண்டிருந்தது. கிழிந்த காயங்களுக்கு கீழே கடுங்காயம் இருக்குமோ என்றும் எண்ணத் தோன்றியது. முதலுதவி செய்தவர்கள் தலையைச் சுற்றிக் கட்டியிருந்தார்கள். அதில் ரத்தக் கறை! மண்டையோடு கிழிந்திருந்தது. எனது கால்மீது ஏதோ சிந்திக் கொண்டிருந்தது. ஓடும் நீர் எங்கேயிருந்து வருகிறது என்று ஒரு கணம் யோசித்தேன். கீழே பார்த்தபோது, அந்தக் காயக்காரரின் மண்டையோடு ஆழமாகப் பிழந்திருப்பதைக் கண்டோம். அவரை எவராலும் காப்பாற்ற முடியாது என்பது உறுதியாயிற்று. யன்னலூடாக வெளியிலிருந்து ஆற்றாமையோடு பார்த்துக் கொண்டிருந்த அவருடைய உறவினர்கள் அவர் இறந்ததும் கதறி அழுதார்கள். அடுத்த ஒரு அறையில் சில முஸ்லிம்கள். சிதறிக் கிடந்த ஒரு உடலத்துக்கு

அருகே குவிந்து நின்றார்கள். சிதறிப்போன பாகங்களை மருத்துவர்கள் ஒன்றாகப் பொருத்தி புதுமை செய்யமாட்டார்களோ என்ற தவிப்பு அவர்களுக்கு! அன்று மரணம்தான் வெற்றி பெற்றது. ஒருவருடைய சிதைந்துபோன முண்டத்தைக் கூட அவருடைய உறவினர்கள் கொண்டுவந்திருந்தார்கள். துண்டிக்கப்பட்ட மனித உடல் உறுப்புக்கள் கழிவுக் கூடையில் நிரம்பி வழிந்தன. சிந்திய இரத்தம் தரையில் பசையாக உறைந்து கொண்டிருந்தது. பயங்கரமும் அவலமும் நிறைந்த சூழலே அங்கு நிலவியது. அன்று மட்டும் இந்திய அமைதிப் படையால் சாவகச்சேரியில் முப்பது தமிழ்ப் பொதுமக்கள் கொல்லப்பட்டார்கள். எழுபத்தி ஐந்து பேருக்கு பெரிதும் சிறிதுமாக காயம்.

பலமணிநேரம் கழிய காயத்தோடு வந்த பலரோடு அல்லாடி முடிய, உடைந்த உடலங்களையும் பழுதுபார்த்துச் செப்பனிட்டு முடிய, காயக்காரர் படுக்கைப்பிரிவுக்கு உயிரோடு போராட அனுப்பி வைக்கப்பட்டு முடிய அறுவைச் சிகிச்சைக் கூடத்தை துப்புரவாக்கும் பணியே மீதமிருந்தது. அசுர பணி நடந்த அந்த அறையை பார்த்துக் கொண்டிருந்தேன். வழுவழுப்பான வெள்ளைத்தரையில் வளைந்து நெளிந்து செல்லும் சிவப்பு இரத்த சிற்றோடைகள். குப்பைச்சாக்குகள் மனித உடலுறுப்புகளால் நிரம்பியிருந்தன. அவற்றில் இருந்து கையும் காலும் நீட்டிக் கொண்டிருந்தன. பார்ப்பவர்களுக்கு முதுகெலும்பின் ஊடாக ஒரு நடுக்கம் ஏற்படும் நிலை! வாளிகளில் இரத்தம் ஊறிய பஞ்சுப் பொதிகள். எண்ணற்ற அறுவை சிகிச்சைகள் நடந்ததற்கு சாட்சியாகக் கிடந்தன. கை கழுவும் நீர்க் கிண்ணங்களில் நீர் சிவப்பாக இருந்தது. பயன்படுத்தப்பட்ட கையுறைகள், அடுத்த ஆட்டத்துக்காக உலர்த்தி வைத்த நிலையில் இருந்தன. அன்று மாலை நடந்ததை நினைத்தால் ஆத்திரம்தான் வரும். சூதுவாதற்ற மக்கள் மீது இத்தகைய குரூரக் கொடுமையைப் புரிந்து விட்டு அதற்கு நியாயம் கற்பிக்க முயலும் மனித சிந்தனை மனச்சாட்சியற்றதாகவே இருக்க முடியும். பாதிக்கப்பட்டவர்கள் இவர் இவரென்று தெரிந்தெடுக்கபடாது சகட்டு மேனிக்கு தாக்கப்பட்டவர்கள். எவரும் பாதிக்கப்பட்டிருக்கலாம் என்பதை உணர்ந்தபோது நான் உயிர் தப்பியதற்கு பாக்கியம் செய்திருக்க வேண்டும் என்ற உணர்வைத் தந்தது. அன்று பாதிக்கப்பட்டவர்களை விட நான் எதிலும் வேறுபட்டவளல்ல என்பதும், இப்படியான சந்தர்ப்பங்களில் நான் பிரித்தெடுத்துக் காப்பாற்றப்பட இடமே இல்லை என்பதையும் உணர்ந்தேன். நான் மட்டும் எப்படிக் காப்பாற்றப்படலாம்? பிழையான நேரத்தில் பிழையான இடத்தில் நான் இருக்கவில்லை என்பதால் தப்பிப்பிழைத்தது எனது அதிர்ஷ்டம்!





ஆனாலும் இந்த மக்களின் அவலத்தையும் அவர்கள் படும் துயரத்தையும் நேரே பார்க்கும்போது, நடந்து கொண்டிருக்கும் கொடுமையின் தன்மையைச் சிந்திக்க முடிந்தது. ஒரு அந்நிய ஆக்கிரமிப்பின் அரக்கத்தனமான ஒடுக்குமுறைக்கும் பயங்கரத்துக்கும் குறிப்பிட்ட இந்த இன மக்களே உட்படுத்தப்பட்டிருக்கிறார்கள் என்பதையும் உணர முடிந்தது. என்னைப் பொறுத்த வரையிலே தமிழ் மக்கள் மீது வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்ட கொடூரமும், பேரழிவும் அவர்கள் தங்கள் எதிர்காலத்தைத் தாமே நிர்ணயிக்கும் அரசியல் உரிமை பெற முழுமையான அருகதை உடையவர்களாக்கப் போதுமானவை என்றே கூறுவேன்.

இந்தியப் படைகள், வலிகாமத்தில் பலமாகக் காலூன்றிக் கொண்டு, வடக்கே வடமராட்சியிலும் தெற்கே தென்மராட்சியில் உள்ள சாவகச்சேரியிலும் தங்கள் இராணுவ நடவடிக்கையை நடத்தி விடுதலைப் புலிகளின் ஆயுதங்களைப் பறித்தெடுக்க களம் குதித்தார்கள். சாவகச்சேரியே முதலில் இந்தியப் படைகளிடம் வீழ்ந்தது. கண்மூடித்தனமாக பொதுமக்கள் படுகொலை செய்யப் பட்டார்கள். தமிழ்ப் பெண்கள் பாலியல் பலாத்காரத்துக்கு உட்படுத்தப்பட்டார்கள். தமிழ் மக்களின் சொத்துக்களும் உடைமைகளும் சூறையாடப்பட்டன. இவையெல்லாம் அந்தப் பகுதிகளில் தேடுதல் நடத்தி அழிக்கும் நடவடிக்கைகள் என்ற போர்வையில் மேற்கொள்ளப்பட்டன. இவை யெல்லாம் பதிவேடுகளில் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

தேசியப் போராட்ட காலங்களில் ஒப்பற்ற தீரமும் அர்ப்பணிப்பும் நிறைந்த தனித்துவமான நீண்ட வரலாறு கொண்டவர்களே சாவகச்சேரி மக்களாவர். பெருந்தொகை விடுதலைப் புலிப் போராளிகளையும் அநேகம் மாவீரர்களையும் வழங்கிய தாய் மண் அது. பின்னொரு நாளில் சாவகச்சேரி மக்கள் தயங்காது வழங்கிய தொடர்ந்த ஆதரவால் விடுதலைப் புலிகளின் எதிர்ப்புப் போராட்டம் இந்தியப் படைகளை ஆட்டங்காண வைத்தது. தாக்குவதற்கு மீளத் திரள்வதும், திட்டமிடுவதும், அங்கிங்காக பதுங்கியிருந்து தாக்குதல் நடத்து வதுமாகப் புலிப்படைவீரர்கள் சுறுசுறுப்படைந்தார்கள். சாவகச் சேரி மீதான இந்திய இராணுவ அக்கிரமிப்பு செறிவடைந்த நிலையிலும் விடுதலைப் போராளிகள் தாக்குப்பிடித்து தப்பிப் பிழைத்தார்கள் என்றால் அது அவர்களுடைய துணிச்சலையும் மன உறுதியையுமே காட்டுகிறது. சாவகச்சேரியிலே இந்திய இராணுவ ஆக்கிரமிப்பு நிலவிய இந்தக் காலப் பகுதியில் இப்பிரதேச விடுதலைப் புலிகளின் கெரில்லாத் தளபதியாக பொறுப்பு வகித்தவர் தமிழ்ச்செல்வன் ஆவார். பின்னர் விடுதலைப்

புலிகளின் அரசியற் பிரிவுக்குப் பொறுப்பாளரானார்.

வடமராட்சி பிரதேசத்தில் வரவர விமானப்படை நடை வடிக்கைகள் அதிகரித்தன. வடமராட்சி எல்லைகளில் இந்திய காலாட் படையினரின் காவல் உலா அணிகளும், வேவு முயற்சிகளில் நடமாடக் காணப்பட்டன. இந்திய இராணுவத் தலைமைப் பீடம் தனது கவனத்தை விடுதலைப் புலிகளின் முக்கிய தளம் மீது திருப்பத் தொடங்குகிறது என்பதையே அவை உணர்த்திற்று. விரைவில் அந்தப் பகுதியில் இந்தியப் படை நடவடிக்கை அதிகரிக்கப் போகிறது என்பது தெளிவாகியது. எனவே, யாழ்ப்பாணம்-உடுப்பிட்டி பிரதான வீதி வழியாக இந்திய காவல் உலாப் பிரிவு மெதுவாக நகர்ந்து கொண்டிருக்க காணப்பட்டதாக எமது போராளிகள் மோப்பம் பிடித்து அறிவித்ததும், எமது வேளை வந்துவிட்டது என்பதை உணர்ந்தோம். எமது வீட்டை விட்டு வெளியெறி வடம ராட்சியின் மையப்பகுதிக்குச் செல்ல வேண்டும் என்று தீர்மானித்தோம். அதுதான் எமக்குக் கிடைத்த ஒரே வழி! ஏனென்றால் எமது மண்ணுக்கு வடக்கே பாக்கு நீரிணை எனும் பெருங்கடல்! இந்துமாகடலின் ஒரு கீற்று! தென் இந்தியாவையும் இலங்கையையும் அது பிரித்துக் கொண்டிருந்தது. வடகடலிலே சிறீலங்காவினதும் இந்தியாவினதும் போர்க்கப்பல்கள் தங்கள் கடற்காவலை பலப்படுத்தியிருந்ததால், அப்போதைக்கு கடற்பயணம் எதையும் நினைத்துப் பார்க்க முடியாது. அது தவிர எம்மோடு போர் புரிந்து கொண்டிருந்த இந்தியாவே வடக்கு எல்லையில் எமது நகர்வுக்காக காத்துக் கொண்டிருந்தது. வன்னிக் காட்டின் மத்தியில் நிரந்தர கெரில்லாப் போராளி வாழ்க்கை என்பது எமக்குச் சாத்தியமானதாகத் தோன்றவில்லை. பாலாவின் உடல் நலத்தையே நாம் முதலில் கருத்தில் வைக்க வேண்டியிருந்தது. வயதில் இளையவராகவும் சுகதேகியாகவும் அவர் இருந்திருந்தால் வன்னி வாழ்க்கை சாத்தியமாக இருந்திருக்கலாம். இரண்டாவதாக நாம் இரண்டு பேருமே இயக்கத்தின் இராணுவப் பிரிவில் அல்லாமல் அரசியல் பிரிவிலேயே கூடுதலாக ஈடுபட்டிந்தோம். ஆகவே தலைமறைவாக காட்டுக் கெரில்லா போரில் ஈடுபடுவதைக் காட்டிலும் மக்கள் மத்தியில் பணிபுரிந்தால் அல்லது அனைத்துலக சமுதாயம் மத்தியில் பணிபுரிந்தால் போராட்டத்துக்கு கூடுதலான பங்களிப்பவர்களாக இருப்போம். அதைவிட கிரமமாக இன்சுலின் மருந்து பெறவேண்டும் என்ற கவலையும் புறக்கணிக்கக் கூடிதொன்றல்ல. காட்டுப் பகுதியில் நாம் வாழ்ந்தால் இன்சுலினைக் கிரமமாகப் பெறுவோம் என்பதற்கு உத்தரவாதம் எதுவும் இல்லை. இந்தக் காரணங்களை எல்லாம் ஒரு புறம் ஒதுக்கினாலும் எமது விருப்பமும் வேணவாவும் மக்கள் மத்தியில்





வாழவேண்டும் என்பதேயாகும். அத்தோடு வடமராட்சியில் தலைமறைவு வாழ்க்கை வாழ எம்மால் இயலும் என்றும் கருதினோம். இனி, போராட்டத்தின் ஆரம்ப காலங்களில் பாலாவுக்கு ஒரு நம்பிக்கை இருந்தது. இந்திய இராணுவத்துடன் போர் நிறுத்தம் பற்றி பேச்சுவார்த்தை நடத்துமாறு பிரபாகரன் தம்மை அனுப்பி வைப்பார் என்று பாலா கருதினார். ஆனால் இந்தியர் தமது இராணுவ முயற்சியை இடைநிறுத்த விரும்பவில்லை. பவான் போர் நடவடிக்கையானது பிரபா கரன் அவர்களையே இலக்கு வைத்துத் தொடக்கப்பட்டது. இதனால் அவர் தீபகற்பத்தை விட்டு வெளியேறி வன்னிக்காட்டின் மையப் பகுதியை அடைந்திருந்தார். அங்கேயிருந்து தமிழர் தாயகத்தை ஆக்கிரமித்து நின்ற இராணுவத்துக்கு எதிராக, காட்டுப்புற கெரில்லாப் போர் நடவடிக்கைகளை ஒழுங்கு செய்வதிலும் நடைமுறைப்படுத்துவதிலும் ஈடுபட்டுக்கொண்டிருந்தார்.

# அத்தியாயம் V

# இந்திய இராணுவத்தின் வேட்டை

இந்திய-புலிகள் யுத்தம் தொடங்கிய காலத்தில், இன்று கடற்புலிகளின் சிறப்புத் தளபதியாக பணியாற்றும் கேணல் சூசை அன்று வடமராட்சிப் பிரதேசத்திற்குப் பொறுப்பாக இருந்தார். அவர் அடிக்கடி எமது வீட்டுக்கு வந்து செல்வார். வடமராட்சியில் எமது பாதுகாப்பிற்கு அவரே பொறுப்பாகவும் இருந்தார். யாழ்ப்பாணத் தீபகற்பத்தில் நிகழும் இராணுவ நடவடிக்கைகள் பற்றியும் வடமராட்சி நோக்கி இந்தியப் படைகள் நகர்வது பற்றியும் சூசையே பாலாவுக்கு கிரமமாக அறிவித்து வந்தார். வடமராட்சிப் பிரதேசத்தில் விடுதலைப் புலிகளின் படைபலம் எத்தகையது, இந்திய இராணுவத்தை எதிர்த்து நிற்க எவ்வகையான தற்காப்புப் போர் வடிவத்தை வகுக்க வேண்டும் என்பவை தொடர்பாக இரண்டு பேரும் கலந்துரையாடுவார்கள். விடுதலைப் புலிகளிடம் ஆளணிப் பற்றாக்குறையும், ஆயுதப் பற்றாக்குறையும் இருப்பதால், முன்னேறிவரும் இந்தியப் படைகளுக்கு எதிராக, பகிரங்கமான மரபுவழிப் போரை நடத்துவது அர்த்தமற்றது என்றும், இதனால் புலிகளுக்கு மோசமான உயிரிழப்புக்கள் ஏற்படலாம் என்றும் பாலா வாதாடினார். வலிகாமம் மீதும் சாவகச்சேரி மீதும் இந்தியப் படைகள் நிகழ்த்திய மிருகத்தனமான தாக்குதல்களைப் பார்க்கும் போது, விடுதலைப் புலிகள் மரபுவழித் தற்காப்பு இராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டால் பலாலியிலும் வல்வெட்டித்துறையிலும் உள்ள தமது படைத்தளங்களில் இருந்து இந்தியர்கள் கண்மூடித்தனமான பீரங்கித் தாக்குதலை வடமராட்சி மீது நடத்துவார்கள் என நாம் கணிப்பிட்டோம். இதன் விளைவாகப் பெருந்தொகையான பொதுமக்கள் பாதிக்கப்படப் போகிறார்கள் என்பதும் தெளிவாகியது. இது நேர்ந்தால், இறுதியில் வடமராட்சியிலிருந்து புலிகள் பின்வாங்க நிர்ப்பந்திக்கப்படுவர். நின்று நிலைக்கக்கூடிய மாற்று வழிப் போர்த்திட்டத்தை விடுதலைப் புலிகள் கடைப்பிடித்து, பொதுமக்களுக்கு அனாவசியமான பேரழிவுகள் ஏற்படுவதைத் தவிர்ப்பதே சாலச் சிறந்தது எனக் கருதினோம். சிறிது காலத்திற்கு முன்னராகவே சிறீலங்கா இராணுவம் வடமராட்சியின் மீது





'ஒப்பரேஷன் லிபரேஷன்' என்ற இராணுவ நடவடிக்கையை மேற்கொண்டு பெருமளவில் உயிரழிவையும் பொருளிழப்பையும் விளைவித்திருந்தது.

சூட்டோடு சூடாக இன்னொரு பாரிய இராணுவ நடவடிக்கை இடம்பெற்றால் மக்களால் அதைத் தாங்க முடியாது என்றும் கருதினோம். பாலாவின் யதார்த்தக் கருத்துக்களைச் செவிமடுத்த சூசை ஆழமாகச் சிந்தித்தார். அவற்றை ஏற்றுக் கொண்டார். இதனால் பீரங்கி எறிகணைத் தாக்குதலில் இருந்து அந்த பிரதேசம் காப்பாற்றப்பட்டது. சூசையும் அவருடைய போராளிகளும் தலைமறைவான கெரில்லாப் படையாக இயங்கி வடமராட்சியில் இந்திய இராணுவ ஆக்கிரமிப்பு இருந்த காலம் முழுவதும், அதற்குத் தலைவலியாக இருந்தார்கள்.

இந்திய இராணுவம் யாழ்ப்பாணத் தீபகற்பத்துக்கு வந்ததில் இருந்து, அதன் ஒரு பிரிவு, வல்வெட்டித்துறை எல்லையில் உள்ள சிறீலங்கா இராணுவத் தளத்தில் தங்கியிருந்தது. போர் தொடங்கிய பின், அங்கிருந்த இந்திய ஜவான்கள் சிலர் நோட்டம் விடும் காவல் உலா புரிந்தார்களேயன்றி, சிறீலங்கா இராணுவத் தளத்திலிருந்து வெளியே நகர்ந்து வல்வெட்டித்துறையைக் கைப்பற்றும் பெரும் தாக்குதல் முயற்சி எதிலும் ஈடுபடவில்லை. நோட்டமிடும் காவல் உலா ஜவான்கள் மீது கெரில்லாத் தாக்குதல் நடந்த போதெல்லாம் அவர்கள் உடனே தங்கள் தளத்திற்கு பின்வாங்கி விடுவார்கள். இறுதியாக வடமராட்சி மீதான இந்திய இராணுவ நகர்வு நிகழ்ந்த போது, அந்தப் படைகள் வேறொரு புறத்திலிருந்து, அதாவது யாழ்ப்பாணம் வல்வெட்டித்துறை நெடுஞ்சாலை வழியாகவே நகரத் தொடங்கியது.

இந்திய இராணுவம் எந்த நேரமும் வடமராட்சிக்கு உள்ளே நுழையலாம் என்ற நிலை ஏற்பட்டதும், அங்கிருந்து பாதுகாப்பான ஒரு பகுதிக்குச் செல்வதே சாலச் சிறந்தது என்று கருதினோம். உயிருக்கு அச்சுறுத்தல் ஏற்பட்ட இந்த நிலையில், எம்மோடு கொண்டு செல்ல, என்ன என்ன பொருட்களை எடுத்துக் கொள்வது என்ற கேள்வி என் முன் எழுந்தது. பெருஞ்சுமையோடு அலைவது, சூழ்நிலைக்கு ஒவ்வாது. அதற்கேற்ற வகையில் எனது தெரிவுகளை வரிசைப்படுத்துவதே சிறந்தது என்று உணர்ந்தேன். தேவையில்லாத எவற்றைக் கழிக்க வேண்டும் என்று கவலை கொள்வதிலும் பார்க்க, அத்தியாவசியமாக எதை எதை தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதை முடிவு செய்வதே நலம் என்று கண்டேன். உடைமைகளால் நிரம்பி வழியும் 'கையஸ்' வான் வண்டியை ஒருகணம் பார்வையால் துளாவினேன். முதலில் கைவிட வேண்டியவை புத்தகப் பெட்டிகளே என்பதை உணர்ந்தேன். எம்மிடம் பெருந்தொகை நூல்கள்; பலவகை நூல்கள்; இலண்டனில் இருந்து இந்தியாவுக்கு

அனுப்பப்பட்டவை; யாழ்ப்பாணத்துக்கு எம்மோடு அவற்றை எடுத்து வந்திருந்தோம். பல ஆண்டுகளாக சேகரித்த அறிவுப் பெட்டகம் இது. ஆனால் விருப்பு வெறுப்புக்கு இதுவல்ல நேரம். மற்றவர்களுக்குப் புத்தகங்களைக் கொடுப்பதும் எளிது. அவற்றை அவர்கள் பாதுகாப்பதும் சுலபம். ஆனால் படித்த குடும்பங்களுக்கே அவற்றைக் கொடுக்க வேண்டியிருந்தது. படிக்காத குடும்பங்களிடம் ஆங்கில நூல்களைப் பகிர்ந்தால், தேடுதல் நடத்தும் இந்திய இராணுவத்தினர் சந்தேகம் கொள்ளவும் தகவல் திரட்டவும் எளிதாகி விடும். இனி, சமையல் பாத்திரங்களை ஒப்படைப்பதில் சிரமம் இருக்கவில்லை. உடைகள் என்று வரும்போதும், மிகத் தேவையானவற்றை மட்டும் எடுத்துக் கொண்டோம். எனக்கு மிகவும் பிடித்த சில ஆடைகளையும் எடுத்துக் கொண்டேன். எமது உடைகளை இரண்டு பயணப் பைகளில் அடைத்தேன். ஒன்று பாலாவுக்கு, மற்றது எனக்கு. நாம் போயடைந்த இடத்தில் மின்சாரம் இல்லை. ஆகவே ரோச் லைற்களையும், (மின்விளக்குகள்) பற்றறிகளையும் கொண்டு செல்வது அவசியமாகப் பட்டது. எம்மிடமிருந்த மண்ணெண்ணெய் விளக்கையும் கொண்டு செல்லத் தீர்மானித்தேன். சில மெழுகுவர்த்திகளையும் தீப்பெட்டிக ளையும் கூட, தேவைப் படக்கூடும் என்ற நினைப்பில் பையில் பொதித்தேன். பின்னர் அவை பெரும் உதவி புரிந்தன. மிஞ்சிக் கிடந்தவற்றை, பெட்டிகளில் அடைத்து, வெவ்வேறு வீடுகளில் ஒப்படைத்தேன். இந்தச் சுத்திகரிப்பு முயற்சியின் பயனாக வாழ்க்கையில் நான் சேர்த்து வைத்திருந்த ஐந்தில் நான்கு பாகப் பொருட்கள் என்னைவிட்டுப் போயின. ஒன்றே ஒன்றை விட்டுப் பிரிவது கடினமாக இருந்தது. எனது நிழற்பட அல்பம். எனது பிள்ளைப்பருவ பள்ளிப்படங்கள், திருமணப் படங்கள், குடும்பப் படங்கள், இவை அடங்கிய நினைவு மீட்டும் படங்கள் - பிளாஸ்டிக் பக்கங்களில் ஒட்டப்பட்டிருந்தன. போராளி ஒருவர் அந்த அல்பத்தை எடுத்துக் கொண்டுபோய் இருட்டிய பின் நிலத்தைத் தோண்டி, அதில் புதைத்தார். தேடப்படும் அதன் சொந்தக்காரரைப் பற்றிய தடயம் எல்லாமே அங்கு புதைக்கப்பட்டன. அவை தப்பிப் பிழைக்கும் என்று எனக்கு ஒரு நப்பாசை! அது நிராசையாகவே முடிந்தது. இரண்டு ஆண்டுகள் கழிந்து, நான் வடமராட்சிக்குத் திரும்பி புதைத்த இடத்தில் இருந்து நிழற்பட அல்பத்தைத் தோண்டி எடுத்த போது படங்கள் உருக்குலைந்து பழுதாகி இருந்தன. பிளாஸ்ரிக் உறையூடாக பூஞ்சணம் பிடித்து, முகங்கள் அழிபட்டிருந்தன. எனது கடந்த காலத்தைப் பறிகொடுத்த இழப்பு நிலை உணர்வே தலைதூக்கியது.





பிரதான வீதிகளில் இருந்தும் கரையோரப் பகுதிகளில் இருந்தும் விலகி வடமராட்சியின் நடுப்பகுதிக்குள் நகர்வதே எமக்குப் பாதுகாப்பாக இருக்கும் என்று கருதினோம். வடமராட்சியில் உள்ள ஒடுக்கமான ஒழுங்கைகள் பாய்ப்பின்னல் போல, தனித்துவம் வாய்ந்தவை. எங்கே நாம் தங்க வேண்டும் என்பதைத் தீர்மானிக்கும் விடயத்தில் அந்த ஒழுங்கை அமைப்பு வாய்ப்பான ஒன்றாகக் கருதப்பட்டது. இது பாலாவுக்கு நியாயமாகப்பட்டது; பிடித்தமாகவும் இருந்தது. அவரும் அவருடைய குடும்பமும் நண்பர்களும் வடமராட்சியின் இந்தப் பகுதியிலே வாழ்ந்தனர். சிறுவனாக இருக்கும் போது, இந்தப் பகுதியிலேயே அவர் மகிழ்ச்சியாக விளையாடித் திரிந்திருக்கிறார். இந்தப் பகுதியின் மூலை முடுக்குகள் அவருக்கு நன்கு தெரிந்தும் இருந்தது. இந்தப் பகுதியில் வாழ்வது என்பது, பாலாவுக்கு இளமைப் பருவத்துக்கு மீளச் செல்வது போல இருந்தது.

வல்வெட்டித்துறையில் இருந்து நாம் வெளியேறியதும் இந்தியப் படைகள் அங்கே காவல் சாவடிகள், சோதனைச் சாவடிகள் ஆகியவற்றை நிறுவி, தங்கள் நிலைகளைப் பலப்படுத்திக் கொண்டன. அதன் பின்னர், தங்கள் ஆக்கிரமிப்பை அவர்கள் படிப்படியாக விரிவாக்கி நகரத்தையும் பிரதான வீதிகளையும் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தார்கள்.

## கரவெட்டிக்குள் நகர்ந்தோம்

எமது வாழ்வின் இக்கட்டான இந்தக் கட்டத்திலே சுக்ளா எம்மோடு இணைந்தார். விடுதலைப் புலிகளிடையே அனுபவம் மிக்க மூத்த உறுப்பினர் இவர். வடமராட்சியின் இதயப் பகுதியான கரவெட்டிப் பிரிவுக்கு இவர் பொறுப்பாக இருந்தார். போர் அனுபவமும் இவருக்கு நிறைய உண்டு. அந்தப் பகுதியைப் பற்றியும் அங்கு வாழும் மக்கள் பற்றியும் விலாவாரியாக அறிந்திருந்தார். எத்தகைய வசதிகளை எமக்கு ஏற்படுத்தவேண்டும் என்பதில் அவர் தெளிவாக இருந்தார். வல்வெட்டித் துறையில் இருந்து நான்கு மைல் தூரத்தில் எமக்கு ஒரு வீடு பார்த்த சுக்ளா, எமது பாதுகாப்புப் பொறுப்பையும் தானே ஏற்றுக் கொண்டார். கரவெட்டி, கலட்டியில் ஒரு நவீன வசதிகள் உள்ள வீடொன்றை எமக்காக அமர்த்தினார். இந்தியப் படைகளின் வரவால் பாதுகாப்பான இடம் தேட வேண்டியிருந்த பொட்டு அம்மானுக்கும் ஏனைய காய மடைந்த போராளிகளுக்கும் இந்த வீடு போதுமாக இருந்தது. இங்கிருந்து, மந்திகை மருத்துவமனைக்கு மருந்து கட்டப் போவது

பொட்டு அம்மானுக்கு வசதியாக இருந்தது, வீட்டிலே தங்குவதற்கு வரும் ஆட்களின் தொகை கூடிக் குறையும். ஆனால் எம் எல்லோருக்கும் பொதுவாக ஒன்று இருந்தது. அதுதான் பொதுவான ஆபத்து. பாதுகாப்பும் தங்குமிட வசதியும் எல்லோருக்கும் பொதுவாகத் தேவையாகவும் இருந்தது.

வடமராட்சியில் மக்கள் வாழும் பகுதிக்குள் இந்திய இராணுவம் படிப்படியாகத் திட்டமிட்டு ஊடுருவியது. ஆனால் அந்தப் புவியியல் அமைப்பு அவர்களுக்குப் புதிராகவே இருந்தது. இனி, கிராமங்களில் காணப்பட்ட ஒழுங்கைகளின் சிக்கலான பின்னல் அமைப்பு புதிதாக அங்கு செல்பவர்களுக்குத் திகைப்பூட்டிக் குழப்பம் ஏற்படுத்துவதாக இருக்கும். ஆனால் புலிகளுக்கு இதுவே வாய்ப்பாக இருந்தது. இந்தியப் படைகளைத் தவிர்ப்பதற்கு கிராம வாசிகளுக்கும் இந்த இடியப்பச்சிக்கல் போன்ற ஒழுங்கை அமைப்பு உதவியாக இருந்தது. குழப்பம் அடைந்த இந்தியப் படைகள், ஆக்கிரமிப்பின் ஆரம்ப காலத்தில் பிரதான வீதிகளில் மட்டுமே காவல் உலா புரிந்தார்கள். இது எமக்கும் நல்ல வசதியாக இருந்தது. காயமடைந்த போராளிகளுக்கு, குறிப்பாக பொட்டு அம்மானுக்கு உடல் தேறிவர அவகாசம் கிடைத்தது. அடுத்ததாக இந்திய இராணுவம் வருகிறதா என்று கலவரம் அடையாமல், நிலைமையை அவதானிக்கவும் ஒவ்வொரு வளர்ச்சியையும் கூர்ந்து கவனிக்கவும் பாலாவுக்கும் எனக்கும் வாய்ப்புக் கிடைத்தது.

முன்னாள் ஈரோஸ் தலைவர் பாலகுமார் வடமராட்சியைச் சேர்ந்தவரே. இந்த நாட்களில் எமது புதிய முகாமில் பாலாவைச் சந்திக்க அவர் வந்தார். இந்தியாவில் வாழ்ந்த காலத்தில் இருந்தே பாலகுமாரை, பாலாவுக்கு நன்கு தெரியும். விடுதலைப் புலிகளின் அரசியல் கொள்கை மீது பாலகுமாருக்கு நிறைய நம்பிக்கை இருந்தது. இந்திய அமைதிப் படையோடு அவருடைய அமைப்புக்கும் பிணக்கு இருக்கவில்லை. ஆகவே இந்திய இராணுவத் தலைமையிடமிருந்து புலிகளுக்குச் செய்தி கொண்டு வரக்கூடிய வசதியான நிலையில் அவர் இருந்தார். மேலும், நாட்டுப் பற்று உடையவர் என்ற நிலையில் பகைமை உணர்வு கொண்ட இந்தியர்களோடு அல்லாது புலிகள் மட்டிலேயே அவருக்கு ஆழ்ந்த அனுதாபம் இருந்தது. அவர் வரும்போதெல்லாம் இந்தியப் படைகளின் சிந்தனை என்ன, நகர்வுகள் என்ன என்பது போன்ற முக்கிய தகவல்களுடன் வருவார். அவர் கொண்டு வந்த சுவையான செய்திகளில் ஒன்று வடமராட்சி இந்திய இராணுவத் தளபதிகளிடமிருந்து வந்திருந்தது. இந்திய இராணுவ உயர்பீடத்துக்கும் பாலாவுக்கும் இடையே ஒரு சந்திப்பு இடம் பெற அவர்கள் விருப்பம் தெரிவித்திருந்தார்கள். அந்த அழைப்பு





ஒரு சூழ்ச்சியாக இருக்குமோ என்று பாலா சந்தேகப்பட்டார். ஆனால் போரை முடிவுக்குக் கொண்டுவர, வழிபிறக்குமா என்ற சிந்தனையில், பிரபாகரன் அவர்களுக்கு விபரம் அறிவித்தார். ஆழமாகச் சிந்தித்த பிரபாகரன் பாலாவைக் கைது செய்யும் சூழ்ச்சியாக இது இருக்கலாம் என்று கருதியதால், இந்தியத் தளபதிகளைப் போய்ப் பார்க்க வேண்டாம் என்று பாலாவுக்கு அறிவுரை கூறினார். பிரபாகரன் அவர்களுடைய அனுமானம் சரியாகவே இருந்தது. ஏனென்றால், இதே ஏமாற்று முறையை இந்தியர் மட்டக்களப்பில் கையாண்டு, மூத்த விடுதலைப் புலிப் போராளி ஒருவரைத் தடுத்து வைத்தார்கள். நல்ல காலம், அவர்கள் வீசிய வலையில் நாம் சிக்கவில்லை. பாலாவை இந்தியர் கைது செய்திருந்தால், அவர்களுக்கு அது ஒரு பரப்புரை வெற்றியாக இருந்திருக்கும். அதற்கு இடமளிக்கும் எண்ணம் எமக்கு இருக்கவில்லை. அவர்களுடைய பரப்புரை முயற்சிகள் மும்முரமாக முடுக்கி விடப்பட்டிருந்தன. கொழும்பின் கட்டுப்பாட்டில் வானலைகள் இருந்தன. கொழும்பு அரசு இந்தியர்களுடன் ஒத்துழைத்தது. ஆகவே தமிழ் மக்கள் நம்பும் வகையில் செய்திகள் புனையப்பட்டன. இராணுவ பெருவெற்றிகள் பற்றியும் கைதான அல்லது கொல்லப்பட்ட அல்லது சரணடைந்துவிட்ட புலிப் போராளிகள் பற்றியும் பொய்க் கணக்குகளைப் பெருப்பித்துக் கூறியது. தவறான தகவல்களைச் செய்தி அறிக்கை களாக வெளியிட்டு, தமிழ்ப் பொதுமக்களுக்கும் புலிப் போராளிகளுக்கும் மனமுறிவு ஏற்படுத்த முயன்றது. இப்படியான நிலையில் பாலாவோ பொட்டு அம்மானோ கைது செய்யப்பட்டு விட்டார்கள் அல்லது கொல்லப்பட்டு விட்டார்கள் என்று இந்திய பரப்புரை அமைப்பு பெருமை பீற்றிக் கொள்ள இடமளிக்கக் கூடாது என்பதில் நாம் உறுதியாக இருந்தோம். இந்திய இராணுவம் எம்மை உயிரோடு பிடிப்பதற்கு நாம் இடமளிக்கக் கூடாது என்பதே பாலாவுடையதும் என்னுடையதும் எண்ணமாக இருந்தது.

இந்திய இராணுவம் வடமராட்சியில் தனது ஆக்கிரமிப்பைத் தீவிரப்படுத்தி, தனது கட்டுப்பாட்டையும் இறுக்கமாக நிறுவியது. முக்கிய கேந்திர நகரங்களில் இந்திய இராணுவ முகாம்கள் நிறுவப்பட்டன. இந்திய இராணுவ நிர்வாக அமைப்புக்கள் செயற்பட்ட நகரங்களில் பருத்தித்துறை, நெல்லியடி, பொலிகண்டி, உடுப்பிட்டி, துன்னாலை ஆகியவையும் அடங்கும். தடுப்புக் காவலும் சித்திரவதையும் பரவலாக இடம்பெற்ற நிலையங்களில் உடுப்பிட்டி முகாமும் ஒன்றாகும். அந்தப் பகுதி முழுவதிலும், பிரதான வீதிச் சந்திகளில் பலமாக ஆயுதம் தரித்த இந்திய இராணுவத்தினர் காவல் சாவடிகளை நிறுவியிருந்தார்கள். பகைமை உணர்வும், எடுத்ததெற்கெல்லாம் துப்பாக்கியை நீட்டும்

பண்புடனேயே சோதனைச் சாவடிகளில் அவர்கள் நின்றார்கள். இந்திய அமைதிப் படையின் பிரசன்னம் மக்களுக்கு அச்சுறுத்தலாகவே இருந்தது. வடமராட்சியில் இராணுவக் குவிப்பு படிப்படியாகத் தீவிரமடைய எமது பாதுகாப்புக்கான வாய்ப்பு, குறையத் தொடங்கியது. இந்தியப் படையினர் துணிச்சலும் நம்பிக்கையும் பெறத் தொடங்கினர். கிராமங்களின் உட்பகுதிகளையும் ஊடறுக்கத் தொடங்கினர். நேரடி யாகத் தெரியாத இடங்களை வரைபடங்களில் பார்த்து அறிந்தனர். குறித்த ஒரு பகுதியைத் தேர்ந்தெடுத்து அங்குள்ள பிரதான வீதியிலிருந்து கிளைபிரியும் ஒழுங்கைகளில் ஒவ்வொன்றாக ஒவ்வொரு நாளும் உலா செல்லத் தொடங்கினர். இத்தகைய நடவடிக்கைகள் தந்த துணிச்சலால், ஒரு பகுதியைச் சுற்றிவளைத்துத் தேடுதல் நடத்தி, அழிக்கும் பணியிலும் துணிந்து ஈடுபட்டனர். இந்திய இராணுவ நடவடிக்கையில் இது ஒரு ஆபத்தான வளர்ச்சியாக எமக்குப் பட்டது. ஆகவே ஆபத்தான அவசர நிலை ஏற்படும் போதெல்லாம் நாமும் அவசர திட்டங்களை வகுத்து அடிக்கடி இடம் மாற நேர்ந்தது.

படையினரின் நடமாட்டம் பற்றி, அந்தப் பகுதி மக்கள் எமக்குப் புதிய புதிய தகவல்களை அடிக்கடி வழங்குவார்கள். சின்னப் பிள்ளைகள் எலும்பும் தோலுமான பிஞ்சுக் கால்களோடு எமது வீட்டுக்குள் வேகமாகப் பாய்ந்து நுழைந்து எதிர்பாராத வகையில் அங்குவரும் இந்தியப் படையினர் பற்றி எம்மை எச்சரிப்பார்கள். எத்தனை பேர் வந்தார்கள், எவ்வளவு நேரம் நின்றார்கள், இறுதியாக எந்தப்பக்கமாகச் சென்றார்கள் என்ற விபரமும் வரும். குடும்பத்தினரா லும் உறவினராலும் காப்பாற்றப்பட்டு வடமராட்சியில் தலைமறைவாக வாழ்ந்து கொண்டிருந்த வேறு புலிப் போராளிகள் அடிக்கடி எம்மை வந்து பார்ப்பார்கள். அப்போது தாம் சேகரித்திருந்த வேவுத் தகவல்களும் கொண்டு வருவார்கள். இவற்றை அடிப்படையாக வைத்து படையினரின் நடமாட்டங்களை நாம் ஊகித்து உணர்வோம். எப்பொழுதும் எமக்குத் தகவல்கள் வந்து கொண்டே இருக்கும். அதே போல இந்தியர்களுக்கும் தகவல்கள் போய்க் கொண்டிருக்கும் என்பதும் எமக்குத் தெரியும். குழுமங்களாக வாழும் சிறிய சமுதாயங்களில் எதுவும் ஒளிவு மறைவாக நீண்ட நாள் இருக்காது. ஆகவே நாம் எங்கே இருக்கிறோம் என்பது பற்றிய விபரம் நாம் இருந்த இடத்தை விட்டு வெளியே போயிருக்கும் என்பதில் எவருக்கும் ஐயம் இருக்கவில்லை. வடமராட்சியில் நாம் தொடர்ந்தும் இருக்கிறோம் என்பது மக்களிடையே வஞ்சகம் இன்றி பேசப்பட்டது. இதைத் தமிழ் பேசும் இந்திய இராணுவத்தினர் இலகுவாகப் புரிந்து கொண்டனர்.





இன்னொரு பாரதூரமான தகவலை பாலகுமார் கொண்டுவந்தார். பாலாவும் நானும் கரவெட்டியில் இருப்பது இந்தியர்களுக்குத் தெரிய வந்து விட்டதாம். எம்மைத் தீவிரமாகத் தேடி கைது செய்யுமாறு ஆணையும் பிறப்பிக்கப்பட்டிருந்தது. எனவே தேடுதல் வேட்டை தீவிரமாகியபோது எமது மனநிலையிலும் மாற்றம் ஏற்பட்டது. நாம் கைது செய்யப்படுவது இனிமேல் தற்செயலாக இருக்கப் போவதில்லை. இந்தியர்களுடைய குறி எல்லாம் இப்பொழுது எம்மீதே இருந்தது. ஆனால் அவர்களிற் பொரும்பாலானவர்கள் பாலாவை நேரில் கண்டதில்லை. அவருடைய அடையாளங்களும் அவர்களுக்குத் தெரியாது. பாலசிங்கத்தை எளிதாக அடையாளம் காணக் கூடியது அவருடைய வெள்ளைக்கார மனைவி மூலமாகவே என்பது தெளி வாகியது. முதலில் பாலசிங்கம் என்ற பெயர் உடையவர்களின் வீடுகளைப் படையினர் சோதனையிட்டார்கள். சிலரைப் பிடித்துச் சென்று அடையாள அணிவகுப்புக்குப் பின் விடுதலை செய்தார்கள். வேறு ஒரு விசாரணை முறையையும் கையாண்டார்கள். அந்தப் பகுதியில் ஒரு வெள்ளைக்காரப் பெண் எங்கே இருக்கிறார் என்று பொதுமக்களிடம் கேட்கத் தொடங்கினார்கள். வீடுவீடாகத் தேடல் நடத்தும் போது, “ஒரு வெள்ளைக்காரப் பெண்ணை இந்தப் பகுதியில் பார்த்தீர்களா?” என்று தீவிரமாக அவர்கள் விசாரிக்கும் செய்தி எம்மை எட்டியது. எம்மோடு பழகிக் கொண்டிருந்த எல்லோருக்குமே எனது நிறம் ஆபத்தைத் தோற்றுவித்தது. தேடுதல் சூடுபிடிக்கத் தொடங்க எனது வெள்ளைத் தோலை வெறுக்கத் தொடங்கினேன். அது வேறு கதை. ஆனால் எமது பகுதியில் சுற்றிவளைப்புத் தேடுதல் தீவிரம் அடைவதும் எமது வீட்டுக்கு மேலே உலங்குவானூர்த்திகள் சுற்றிவருவதும், இந்தியப் படையினர் எமது முகாமுக்கு மிக அருகாக வரத் தொடங்கிவிட்டார்கள் என்பதை எமக்கு உணர்தியது. உலங்குவானூர்த்தியில் இருந்து எமது முகாம் மீது துப்பாக்கிச் சூடு மேற்கொள்ளப்பட்டதும் எமது சந்தேகம் உறுதியாயிற்று.

போர் தொடங்கிய நாட்களில் இருந்தே வடமராட்சி மீது இந்திய விமான நடமாட்டம் தீவிரப்பட்டிருந்தது. இராணுவப் பொருட்களை ஏற்றிச் செல்வதற்கும் வானத்திலிருந்து தாக்குவதற்கும் உலங்குவானூர்திகள் வெகுவாகப் பயன்படுத்தப்பட்டன. பகல் வேளையில் அவற்றின் நடமாட்டம் அதிகம் இருக்கும். இரவில் குறைவு. இதனால் உலங்குவானூர்திச் சத்தம் அந்தப் புறச் சூழலுடன் சாதாரணமாக இரண்டறக் கலந்திருந்தது. தூரத்தில் உலங்குவானூர்திச் சத்தம் கேட்டதும் நாம் உசாராகிவிடுவது, எமது வாழ்க்கையோடு ஒட்டிக் கொண்டது. அந்தச் சத்தத்தில் இருந்தே அதன் தூரத்தையும் கணிப்பிட்டு

விடுவோம். ஆனால் ஒரு நாள், மாலை மங்கத் தொடங்கும் நேரம், தாழப் பறந்த ஒரு உலங்குவானூர்தி தனது வழக்கமான பாதை யை விட்டு, நேரே எமது வீட்டை நோக்கி வந்து, சுற்றி வட்டமடிக்கத் தொடங்கியதும் ஆபத்து வந்துவிட்டது என்பதை உடனே உணர்ந்தோம். தாக்குதல் நடவடிக்கை இது என்பதை உணர்ந்த மக்களும் உடனே ஆபத்துக்கு முகம் கொடுக்கத் தயாரானார்கள். உடனே, போராளிகளும் தாம் செய்து கொண்டிருந்த வேலைகளை அப்படியே விட்டுவிட்டு, கட்டங்களுக்குப் பின்னே பதுங்கிக் கொண்டார்கள். காயமடைந்த போராளிகள் பலமான ஒரு சிறிய கொங்கிறீட் கட்டடத்துக்குள் ஓரளவு பாதுகாப்பாக இருந்தார்கள். உலங்குவானூர்தி அருகே வரும்போது, பாலாவும் நானும் தோட்டத்தில் இருந்தோம். எமது வீட்டை நோக்கி உலங்குவானூர்தி மெதுவாகத் திரும்பத் தொடங்க பாதுகாப்பைத் தேடி ஓடினோம். அந்த வளவுக்குள் இருந்த தண்ணீர்த் தொட்டியின் சீமெந்துத் தூணுக்குப் பின்னே நின்று கொண்டோம். தூணில் முதுகை ஒட்டியபடி, சுற்றிவரும் உலங்குவானூர்தியின் கண்ணில் படாமல் அப்படியே சுற்றிச் சுற்றி அரக்கினோம். உலங்குவானூர்தியில் இருந்து தானியங்கித் துப்பாக்கிச் சூடு எமது வசிப்பிடத்தைச் சல்லடை போட்டது. தாம் ஒன்றில் நிறையச் சேதம் விளைவித்து விட்டதாக அல்லது போதுமான அளவு அச்சுறுத்தி விட்டதாக மனத் திருப்தியோடு அந்த விமானப் பறவை தனது தளம் நோக்கிச் சென்றது.

**வீடுகள் மாறும் படலம்**

அதிசயம் என்னவென்றால் இந்தத் தாக்குதலின்போது, எமது போராளிகளோ அந்தச் சூழலில் வாழும் மக்களோ, யாருமே காயம் அடையவில்லை. எமது வீட்டுக் கூரையில் சில ஓடுகள் உடைந்தன. சில வாழை மரங்கள் சிதைக்கப்பட்டன. சூழவுள்ள காய்கறித் தோட்டத் தரையிலேயே பெரும்பாலான வேட்டுக்கள் தைத்திருந்தன. நாம் எல்லோருமே கொதிப்படைந்திருந்தோம். மக்கள் வாழும் பகுதியில் பொறுப்பற்ற முறையில் காட்டுமிராண்டித் தனமாகத் தாக்குதல் நடத்திய இந்தியப் படையினரைத் திட்டித் தீர்த்தோம். வானத்திலிருந்து தாக்குதல் நடத்துவதைப் பார்க்கும்போது, விரைவிலே நாம் வாழும் பகுதிக்குள் தாக்கி அழிக்கும் நோக்கத்தோடு இந்தியர்கள் வரப்போகிறார்கள் என்ற சந்தேகம் உறுதிப்படுத்தப்பட்டது. ஆகவே பாதுகாப்பான பகுதிக்கு நாம் இடம் மாறுவதைத் தவிர வேறு வழி இருக்கவில்லை. பெரிய குழுவாக ஒரே இடத்தில் இருப்பதைக் காட்டிலும் சிறிய சிறிய குழுக்களாக





இருந்தால் கைது செய்யப்படுவதற்கான வாய்ப்புக் குறைவாக இருக்கும் என்ற பொதுவான கருத்துத் தோன்றியது. அப்படியான நிலையில் பாதுகாப்பான வீடுகளைப் பெறுவதும் இலகுவாக இருக்கும். எனவே வேறு வேறு திக்குகளிற் செல்லத் தீர்மானித்தோம். இந்தியப் படையினர் தமது தேடுதலைக் குறி வைக்காத பகுதியில் உள்ள பாதுகாப்பான வீடொன்றில் தங்கியிருக்க காயமடைந்த போராளிகள் ஏற்பாடு செய்து கொண்டார்கள். நாம் தங்குவதற்கு வேறொரு வீடொன்றை சுக்ளா ஏற்பாடு செய்தார். எம்மிடமிருந்த குறைந்த பட்ச உடைமைகளைச் சுருட்டிக் கட்டிக்கொண்டு நாம் வெளியேறினோம். உயர்ந்த மதில்களும் ஒடுங்கிய ஒழுங்கைகளும் செறிந்த பாதையூடாக கரவெட்டியில் உள்ள வீடொன்றுக்குச் சென்றோம். ஒரு பெரிய வளவுக்குள் ஒரு விசாலமான செங்கல் வீடு. கிணறு பின்புறத்தில். நிழலுக்குத் தென்னை மரங்கள் அங்கே இருந்தன.

எமது பாதுகாப்பான வீட்டை நாம் அடைந்தபோது, மூதாட்டி ஒருவர் தமது காணிக்குள் நடமாடுவதைக் கண்டோம். வீடு வெறுமையாக இருளடைந்து இருந்தது. வீட்டினுள் அந்த மூதாட்டிக்குச் சொந்தமான ஒரு சில உடைமைகள் மட்டுமே இருந்தன. வீடு இருளடைந்து இருந்ததன் காரணம் மர நிழலல்ல. மனை அமைப்புச் சோதிடமே காரணம். வீட்டுச் சொந்தக்கார மூதாட்டி ஒரு சைவப் பழம். சோதிடத்திலும் நம்பிக்கை கொண்டவர். வீட்டைக் கட்டு முன் மனை பார்க்கும் சோதிடரை குடும்பத்தினர் கலந்தாலோசித்திருக்கிறார்கள். அவருடைய ஆலோசனையின் படியே வீட்டுக்கான வரைபடம் வரையப்பட்டது. சமையலறையும் ஏனைய அறைகளும் எங்கே எங்கே இருக்க வேண்டும் என்பது சோதிடரின் ஆலோசனைப்படியே முடிவு செய்யப்பட்டது. இதன் விளைவாக, அறைகள் இருளில் மூழ்கின. மற்றும்படி, மீதிப்பகுதிகள் வெளிச்சமும் வெப்பமுமாக இருந்தன.

பாதுகாப்பான புதிய வீட்டில் எமக்கு ஒவ்வொரு அறையைத் தேர்ந்து நாம் குடியமர்ந்த பின், மூதாட்டி தமது கதையை எடுத்துரைத்தார். அந்தத் தருணத்தில் வடமராட்சியில் வாழ்ந்த முதியவர்களின் ஒரு பொதுப் பிரதிநிதியே இந்த மூதாட்டி. ஒரு சிறிய கூனல். உதிர்ந்து நரைத்த கூந்தலை சிறிய கொண்டையாக முடிந்திருந்தார். தளர்வாக அணிந்திருந்த நூற்சேலை. இவை அவருடைய வயது போன தோற்றத்துக்கு சான்றுகள். அவருடைய சாதாரண வெளிறிய சேலையும், தாலி இல்லாத கழுத்தும் அவருடைய கணவனைப் பற்றி நாம் விசாரிக்க வேண்டியதில்லை என்பதை உணர்த்தின. முதுமையும் கைம்மையும் பூண்ட தோற்றம் அவருடையது. யாழ்ப்பாணச் சமூக

மட்டத்தின் உயர் சாதியாகக் கொள்ளப்படும் வெள்ளாள சமூகத்தைச் சேர்ந்தவர் அந்த மூதாட்டி. நீண்ட நாள் வாழ்ந்த முதியவர் என்ற தன்நம்பிக்கையோடு தமது குடும்ப வரலாற்றை அவர் கூறினார். யாழ்ப்பாண வெள்ளாள சமூகத்தின் சமூக முறைமைகள் பற்றி அவர் விளக்கினார். பரம்பரை பரம்பரையான நில உடைமையாளரான அந்த மூதாட்டியும் அவருடைய கணவரும் தங்கள் செல்வத்தில் பெரும் பகுதியைத் தங்கள் பிள்ளைகளின் கல்விக்காக செலவிட்டிருக்கிறார்கள். உண்மையில் யாழ்ப்பாணத் தமிழ் மக்களின் தனித்துவம் வாய்ந்த அம்சங்களில் ஒன்று கல்வி மீது அவர்கள் கொண்டிருக்கும் அதீத பற்றாகும். கல்வியை ஆழ்ந்த பற்றோடும் மன வைராக்கியத்தோடும் ஊட்டுவிப்பார்கள். கல்வித் தெய்வமான சரஸ்வதி உயர் நிலையில் வைத்து வணங்கப்படுவதோடு கலைமகள் விழா வரும்போது, யாழ்ப்பாண சமூகம், குறிப்பாக பெண்கள், மிக உற்சாகமாகப் பங்குபற்றுவார்கள். எனது அனுபவத்தில் யாழ்ப்பாண சமூகம் தனித்துவம் கொண்டது என்பேன். கல்வி என்று வரும்போதும், அறிவு தேடல் என்று வரும்போதும், அதன் மகிழ்ச்சியும் ஈடுபாடும் அலாதியானது. மனித இனம் கல்வியை வேணவாவாகக் கொண்டிருக்க வேண்டும் என்று அந்தச் சமுதாயம் எதிர்பார்க்கிறது எனலாம். யாழ்ப்பாணத் தமிழ் மக்களைப் பொறுத்த வரையிலே கல்வி என்பது சமூக உயர்வுக்கும் திரவியம் திரட்டுவதற்கும், உயர் சமூக அந்தஸ்து பெறுவதற்கும் திறவுகோலாக அமைகிறது. ஒரு பண்பாட்டு வாழ்க்கைக்கும், மரியாதையான சமூக நடத்தைக்கும், சமூகப் பொறுப்புக்கும் அதுவே அவசியம் என்று மதிக்கப்படுகிறது. தற்பெருமை கொண்ட இந்த மூதாட்டி, இளம் பெண்ணாக இருந்தபோது, தமிழ்ச் சமுதாயம் கனவு காணும் தொழிலான மருத்துவத் தொழிலை நோக்கி, தமது புதல்வனின் அக்கறையை திசை திருப்பியிருப்பார். நினைத்ததை சாதிக்கும் ஒரு தாயாக ஒரு ஒளி மயமான எதிர்காலத்தை தமது மகனுக்கு ஈட்டிக் கொடுக்கும் முனைப்போடு செயற்பட்டிருப்பார். அந்த மகன், தமது பிரத்தியேகக் கல்விக்காக பல மணிநேரம் செல விடக்கூடிய வகையில் ஏற்பாடுகளைச் செய்து கொடுத்து ஊக்கப்படுத்தியிருப்பார். அதிகாலையில் மைந்தனை எழுப்பி, அவருக்கு வேண்டிய தேனீரையோ, கோப்பியையோ பாலையோ தயாரித்து பள்ளிக்குச் செல்வதற்கு முன், அந்தக் காலை வேளையில் கூடுதலாகப் படிப்பதற்கு வழி வகுத்திருப்பார். பள்ளி முடிந்த பின், மாலை வேளையில் ரியூசன் படிப்புக்கு ஏற்பாடு செய்து, கல்வி மேம்பாட்டை அதிகரிக்க உதவியிருப்பார். இந்தக் கடமைகளை கிரமமாக தமது மற்றப் பிள்ளைகளுக்கும் ஏதோ ஒரு அளவில் அவர் செய்திருப்பார். தமது





முயற்சியில் இந்தத் தாய் வெற்றியும் கண்டிருக்கிறார். அவருடைய மகன் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்திலிருந்து மருத்துவராக தேறியிருக்கிறார். இலங்கைத் தமிழ்ச் சமுதாயம் கடைத்தேறக் கிடைத்த ஒரே வழி வெளிநாடு செல்வதேயாகும். அந்த மகனும் அதே வழியில் வெளிநாடு சென்றுவிட்டார். உண்மையில், அவருடைய எல்லாப் பிள்ளைகளும் வெளிநாடுகளுக்கே சென்று விட்டார்கள். இத்தனையும் சாதித்த அந்தத் தாய்க்கு இறுதியாகக் கிடைத்தது, இப்போதைய தனிமையும் வெறுமையும்தான். இதே வழியைக் கடைப்பிடித்த எத்தனையோ பெற்றோருக்குக் கிடைத்ததும், இந்த மதிப்புக்குரிய மூதாட்டிக்குக் கிடைத்த அதே துயரக் கதிதான். இப்பொழுது அவருக்கு தள்ளாமை நிலை. உயிரின் தீபம் மெள்ள மெள்ள ஒடுங்கத் தொடங்கியிருக்கிறது. பிள்ளைகளால், பேரப்பிள்ளைகளால், பூட்டப் பிள்ளைகளால் கிடைக்கும் மகிழ்ச்சி, அரவணைப்பு, பாதுகாப்பு எதுவுமே கிடைக்காத ஏக்கம். சுற்றி அடைக்கப்பட்ட பரம்பரைக் காணி பூமியிலும் வீட்டிலும் இன்று அடைபட்டு, தனிமையும் துயரமும் வாட்ட, இன்று ஒடுங்கும் நிலை அவருடையது. வெளிநாடுகளில் இருந்து வரும் கடிதங்கள் மிக அரிதாகவே இருப்பதாக அவர் வருந்திக் கூறும்போது அதில் ஒரு சோக இழையையும் கடுப்பையும் காணலாம். தனது உணர்வுகளைத் தனக்குள்ளேயே அடக்கிக் கொண்டு, யார் மீதும் தங்கியிராத இந்த மூதாட்டியும், இவரைப் போல பலரும், காலத்தின் விளைவுகளாக இங்கே இருக்கிறார்கள். தமிழ் இனம் மீதான அரசின் ஒடுக்கு முறையும் சித்திரவதைகளும் இவருடைய வேணவாவுக்குக் குறுக்கே நின்றன. படிப்படியாகத் தமது பிள்ளைகளின் சமூக மற்றும் பொருளாதார வளர்ச்சியைக் கட்டியெழுப்ப வேண்டும் என்ற அவருடைய ஆசையில் மண் போட்டன. எனவே தமது வயதான காலத்தில் கூட்டுக் குடும்ப இனிமையைச் சாதிக்க வேண்டும் என்ற தமது ஆசையை ஒதுக்கிக் கொண்டு வெளிநாடுகளில் தமது பிள்ளைகளுக்கு நல்ல எதிர்காலம் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு அவர்களை வழியனுப்பி வைத்தார். அதே சமயம், பரம்பரை பரம்பரையாக வந்த காணி பூமிகளுடனும் சொத்துடமைகளுடனும், பண்பாட்டுப் பாதுகாப்புகளுடனும் வாழ்ந்து வந்த வாழ்க்கையை விட்டுச் செல்ல அவர் விரும்பவில்லை. எனவே நாம் முதற்தடவையாக அந்த வீட்டுக்குச் சென்றபோது, ஒரு புறம் படுக்க ஒரு பாய், இரவு கூதலில் போர்க்க ஒரு போர்வையைக் கண்டோம். அடுக்களைக்குள் அவர் ஏதோ செய்து கொண்டிருந்தார். சமுதாயம் அவரிடம் எதிர்பார்ப்பது போல, ஒரு பாட்டிக்குரிய இரக்கத்தோடு அவர் எம்மை நடத்தினார்.

பொட்டு அம்மான் வேறொரு பகுதிக்குச் சென்றார். வல்வெட்டித்துறையைச் சேர்ந்த மூத்த போராளிகளில் ஒருவரான நடேசன் எம்முடனேயே இருந்தார். அவருடைய கிராமத்தில் இந்தியப் படையினரின் தேடுதல் நடவடிக்கை அதிகரித்ததும், அவர் தமது மனைவியையும் பிள்ளைகளையும் விட்டுவிட்டு பாதுகாப்பான இடம் நாடவேண்டியதாயிற்று. இந்தியப் படைகள் அவருக்காக வீடு வீடாகத் தேடிக் கொண்டிருந்தபோது வீட்டுச் சுவர்களில் அமைக்கப்பட்ட இரகசியப் பலகை அறைகளில் அவர் பல மணிநேரம் பதுங்கியிருக்கிறார். தமிழேந்தியும் எம்முடன் சேர்ந்து கொண்டார். இவர் பிரபாகரன் அவர்களுக்கு மிகவும் நெருக்கமானவர். அவருடைய நம்பிக்கைக்கு உரியவர். புலிகளில் அவரும் ஒரு மூத்த போராளி. முழு இயக்கத்தின் நிதிக்கும் அவரே பொறுப்பாளர். அவரிடம் ஒரேயொரு பயணப் பை. அதில் பணமும் நகையும். இயக்கத்தின் நிதி அது. அந்தப் பை அவருடன் எப்போதும் ஒட்டியபடியே இருக்கும். தமிழேந்தி எமது குழுவுடன், போவதும் வருவதுமான தொடர்பை வைத்திருந்தார். வடமராட்சியில் இருப்பது ஆபத்து என உணர்ந்த ஒரு கட்டத்தில் வன்னி வனத்துக்குப் புறப்பட்டார். கெட்டகாலம்: வழியில் ஒரு சுற்றிவளைப்பின்போது சிக்கிய அவர், இந்திய இராணுவம் யாழ்ப்பாணத்தை ஆக்கிரமித்திருந்த காலத்தில் காங்கேசன்துறைச் சிறையில் அடைக்கப்பட்டார். இரும்பு மனவுறுதி கொண்ட இந்த மனிதரை இந்தியர் கடுஞ்சித்திரவதைக்கு உள்ளாக்கினார்கள். மன வைராக்கியத்தோடு அவர் அதைத் தாங்கிக் கொண்டார். அவரைப் பணிய வைக்க அவர்களால் முடியவில்லை. அவருடைய உதடுகளிலிருந்து தகவல் எதுவும் உதிரவில்லை. யாழ்ப்பாணத்திலிருந்து இந்தியர் பின்வாங்கியபோது விடுதலையான அவர், விரைந்து சென்று, புதைத்த இடத்திலிருந்து நிதியை மீட்டு, பிரபாகரன் அவர்களிடம் கையளித்தார். இன்றும் விடுதலைப் புலிகளின் தளம்பாத் தலைவர்களில் ஒருவராகத் திகழும் தமிழேந்தி, இயக்கத்தின் நிதியைத் தொடர்ந்தும் நிர்வகித்து வருகிறார். தமிழேந்தியேதான் நாம் ஆபத்தான சூழ்நிலையில் இருப்பதை இனம் கண்டு, அந்தப் பகுதியில் இருந்து எம்மை வெளியேற்ற உடனடியாக ஆயத்தம் செய்ய வேண்டும் என்று வன்னி வனத்தில் உள்ள பிரபாகரன் அவர்களுக்கு அவசரச் செய்தி அனுப்பியவராவார். அன்று எம்மிடையே நிலவிய செய்தித் தொடர்புகள் கடினமான நிலையிலேயே இயங்கிக் கொண்டிருந்ததால், பதில் வர நாள் பிடித்தது. இறுதியாக பதில் எம்மை வந்தடைவதற்கு முன்பாக மிகப் பெரும் ஆபத்துக்களுக்கு முகம் கொடுக்கும் நிலைக்கு நாம் நிர்ப்பந்திக்கப்பட்டோம்.





நாம் இருந்த சூழ்நிலையில் மனம் சோர்ந்து போகாமல் இருப்பதற்கு மக்கள் தந்த ஆதரவு எனது மனதை நிறைத்தது. ஆனால் தலைமறைவு வாழ்க்கையின் முழுக் காத்திரத்தையும் நாம் உணர்ந்திருக்கவில்லை. நாம் திரும்பவும் இடம்பெயரவேண்டும் என்றும், அதுவும் சில நாட்களிலேயே புறப்பட வேண்டும் என்றும் சுக்ளா கூறியபோது, ஒரு இடத்தில் தரிப்பதற்கும் அங்கிருந்து நகர்வதற்கும் எந்த நேரமும் தயாராக இருப்பது தலைமறைவு வாழ்க்கையில் ஓர் அம்சம் என்பதைப் புரிந்து கொண்டோம். ஒரே இடத்தில் தொடர்ந்து இருப்பது ஆபத்து என்பது தெளிவாகப் புரிந்தது. ஆனால் இடையறாது இடம் மாறுவது கூட ஆபத்தைத் தரலாம். நாம் தவிர்க்க விரும்புவர்களின் கரங்களிலேயே சிக்கலாம். நாம் ஓர் இடத்தில் தரிக்கும் போது அங்கே இருப்பது வெளியே தெரிய வர இரண்டு மூன்று நாட்கள் போதும். காரணம் எனது நிறம். போராளிகளில் பெரும்பாலானவர்கள் பகல் வேளையில், சாதாரண உடையில் வடமராட்சியில் நடமாடினார்கள். பாலா கூட. ஒரு விவசாயியின் தலைப்பாகையும், மழித்த முகமும், பாமரத் தோற்றமுமாக தம்மை மறைக்க முடிந்தது. ஆனால் என்னால் முடியவில்லை. கோடியில் உள்ள கழிப்பகத்துக்கு நான் நடந்து செல்வதை யாராவது பார்த்தாலே போதும். நாம் இருக்கும் இடம் வெளியாகிவிடும். அதன் பின் இடம்பெயர்வது பற்றி நாம் உடனே யோசிக்க வேண்டும். மக்களுக்குத் தெரிந்து விட்டால் தகவல் உடனே பரவிவிடும். நாம் சுற்றிவளைப்புக்கு உள்ளாகும் நிலையும் ஏற்பட்டு விடும். ஆனால் அதுவரை, இந்தியரை ஓர் அடி முந்திக் கொண்டு தப்பியபடி இருந்தோம். இப்படி, எமது அடுத்த நகர்வு, கரவெட்டியில் இருந்து சில மைல் தூரத்தில் உள்ள நவிண்டில் என குறிக்கப்பட்டது. அதுவரை இந்தியர் ஊடுருவாத இடமாக அது இருந்தது.

நவிண்டிலில் பொட்டு அம்மானுடன் சேர்ந்து கொண்டோம். காயங்கள் நன்றாகப் பராமரிக்கப்படாத நிலையல் அவர் இருந்தார். அவருடைய கமக்கட்டுக் காயத்தால் ஊனம் வடிந்து கொண்டிருந்தது. அதற்குக் கட்டுப் போட்டு விடுமாறு அவர் என்னை வேண்டினார். வெப்ப அவியலான நிலையில் காயங்கள் சீழ் பிடிக்கத் தொடங்கியிருந்தன. அவருடைய வயிற்றுக் காயத்திலும் புதிய சிக்கல். விட்டு விட்டு வலிக்கத் தொடங்கியது. காரணத்தை கண்டுபிடிக்க கருவிகள் எதுவும் இல்லை. ஆகவே பிரச்சினை என்ன என்பதும் தெரியவில்லை. எப்படி சிகிச்சை அளிப்பது என்றும் புரியவில்லை. மென்பதமான ஊசி மருந்தேற்றினேன். அதனால் பலன் எதுவும் இல்லை. இரவு முழுதும் முனகியபடியே கிடந்தார். அதுவே எம்மை இனங்காட்டக்கூடிய ஆபத்தைத்

தோற்றுவித்தது. இரவில் இந்தியப் படைகள் நடமாடும்போது, நாய்கள் குரைக்கும். நாம் விழிப்படைந்து விடுவோம். அதை விட்டால் இரவில் வடமராட்சியில் மயான அமைதி நிலவும். இந்த நிலையில் அந்தப் பகுதியில் இந்தியத் துருப்பினர் இருந்தால் பொட்டு அம்மானின் முனகல் எமது மறைவிடத்தைக் காட்டிக் கொடுத்துவிடும்.

பொட்டு அம்மானுடைய காயங்கள் அவரை எளிதாகக் காட்டிக் கொடுத்து விடும். இனி அவரால் நீண்ட தூரம் நடக்க முடியாது. அவரைச் சாய்மனைக் கதிரையில் இருத்தி போராளிகள் அவரைத் தோளிலேயே காவ வேண்டியிருந்தது. என்னுடைய இருப்பிடத்தை மறைப்பதற்கு ஒன்றில் நாம் இரவில் பயணம் புரிய வேண்டியிருந்தது. அல்லது ஒரு நோயாளியைப் போல போர்வையால் தலையிலிருந்து கால்வரை போர்த்தபடியே செல்ல வேண்டும். நெல்லியடியில் உள்ள எமது மறைவிடத்துக்கு இருண்ட பின்னரே நகர்வது என்று தீர்மானித்தோம்.

விடுதலைப் புலி ஆதரவாளர்கள் நெல்லியடியில் தங்களுடைய காணி ஒன்றில் உள்ள ஒரு சிறிய வீட்டை எமக்குத் தந்தார்கள். அது ஒரு பழைய பரம்பரை வீடு. நூறு ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டு இருக்கவேண்டும். உள்ளூர் மூலப் பொருட்களால் கட்டப்பட்ட வீடு அது. கற்களை அடுக்கி, சுண்ணாம்புக் காரையால் மெழுகிய சுவர்கள் கொண்ட பலமான வீடு அது. யாழ்ப்பாண நிலக் கனிவளங்களில் சுண்ணாம்பும் முக்கிய ஒன்றாகும். இரண்டு சிறிய அறைகள், அவற்றில் குட்டி யன்னல்கள். அதற்குள்ளேயே அடுக்களையும் இருந்தது. அதனுள் களிமண் அடுப்புகள். ஒரு காணி மூலைக்குள் வேப்ப மர நிழலில் வீடு கட்டப்பட்டிருந்தது. அந்த வீடும் வேம்பும் ஒரே காலத்தைப் போலத் தோன்றியது. அடுக்களைக்கு அருகே கொல்லைப் பக்கத்தில் ஒரு பெரிய கிணறு. அதில் குளிர்மையான சுத்தமான, பச்சைத் தண்ணீர்!

அந்தப் பகுதி மக்களின் ஆதரவு எமக்கு இருந்தது, அடுத்த நகர்வுக்கு முன் சில நாட்களேனும் அந்த வீட்டில் தங்க முடியும் என்று கருதினோம். அடுத்த இடத்தை ஏற்பாடு செய்வதில் சுக்ளா ஈடுபட்டார். அதை உறுதிப்படுத்த அவருக்கு நேரம் தேவைப்பட்டது. எமது போராளிகளும் வேவு பார்க்கும் பணியில் ஈடுபட்டார்கள். படை நடமாட்டம் அசுமாத்தம் எதுவும் அந்தப் பகுதியில் இல்லை. ஆனால் அதைப் பெரிதாக நம்பி விடவோ, உசார் நிலையைத் தளர்த்தவோ கூடாது என்பதை எமது அனுபவம் எமக்குக் கற்பித்திருந்தது. நாம் உயிர் தப்பி வாழ வேண்டும் என்றால், எந்த நேரமும் உசாராகவும் விழிப்பாகவும் இருக்க வேண்டும் என்பதையும் கற்றிருந்தோம்.





## எமது வீடு மீது தாக்குதல்

பொழுது சாயும் நேரம்தான் அந்தச் சம்பவம் இடம்பெற்றது. சூழவிருந்த காணியில் விறகு சேகரித்துக் கொண்டிருந்தேன். எதிர்பாராத விதமாக சின்னப் பிள்ளைகள் சிலர் எமது வீட்டை நோக்கி மூச்சிரைக்க ஓடிவந்தார்கள். எமது வீட்டை நோக்கி காவல் உலா வந்த சில இந்தியப் படையினர் இரகசியமாக நகர்ந்து கொண்டிருப்பதாக மூச்சுவாங்கிய படியே கூறத் தலைப்பட்டார்கள். பிள்ளைகள் தகவல் தந்த மறுகணம், அந்தப் பகுதியில் வாழும் வேறு ஆட்களும் அவசர அவசரமாக அங்கே வந்து இராணுவக் காவல் உலா அணி ஒன்றைக் கண்டதாகக் கூறினார்கள். ஆனால் இவர்கள் குறிப்பிட்ட இராணுவத்தினர் வேறு திக்கில் இருந்து வந்து கொண்டிருந்தார்கள். பொட்டு அம்மான் இதைக் கேட்டதும் எழுந்து உட்காந்தார். விழிப்படைந்தார். சுற்றி வளைப்புகளில் இருந்து எதிரி யைத் திணறடித்து வெளியேற்றுவதில் அவருக்கு பல ஆண்டு அனுபவம் உண்டு. மட்டக்களப்பில் இருந்தபோது, சிறீலங்கா இராணுவம் அவருடைய காட்டு முகாம்களை சுற்றி வளைத்தபோது, அவர்களோடு போராடியபடியே நழுவிய அனுபவம் அவருக்கு உண்டு. இராணுவ நடமாட்டம் பற்றிய விபரம் கிடைக்கும்போது எந்தக் கட்டத்தில் அதைப் பற்றிக் கவலைப்படவேண்டும் என்பதை அனுபவத்தால் உணர்ந்திருந்தார். அதே சமயம் வேறும் ஒரு புறத்தில் இருந்து படைகள் வரும் தகவல் வந்தடைந்தது. இதைக் கொண்டு எமது வீடு ஒரு மிகப் பெரிய இந்தியப்படை சுற்றிவளைப்புக்கு உள்ளாகப் போகிறது என்பது தெளிவாகியது. வெவ்வேறு பக்கங்களில் இருந்து பலத்தோடு நகர்ந்து எமது முகாமைச் சுற்றி வளைத்து தப்பி ஓடும் பாதைகளைப் படிப்படியாக மூடி அடைக்கப் போகிறார்கள் என்பது தெரிந்தது. நிலைமை மோசமடைவதும் தெரிந்தது. எமது உடன் தேவை என்ன என்பதைத் தீர்மானித்தேன். பாலாவுடைய இன்சுலின் பையை மட்டும் என்னுடன் வைத்துக் கொண்டேன். எந்த நேரம் ஓடுவதானாலும் அதை எடுத்துக் கொண்டு ஓடினால் போதும். அந்த நேரம் சுக்ளா ஒரு சைக்கிளில் வேகமாக வந்தார். இந்தியப் படைகள் சில நூறு யார் தூரத்தில் வேகமாக வந்து கொண்டிருப்பதாகக் கூறினார். மருந்துப் பையைக் கையில் எடுத்தேன். பாலாவும் நானும் செருப்பை மாட்டிக் கொண்டு வீட்டுக்கு வெளியே தாவினோம். பொட்டு அம்மான் கஷ்டப்பட்டு எழுந்து போராளி ஒருவரின் உதவியோடு வயிற்றைப் பிடித்தபடி வீட்டை விட்டு நொண்டியபடி வெளியே வந்தார். உள்ளூர் போராளியான கந்தையா முன்னே வழிகாட்டிச் சென்றார். வெளியேறும் பாதையைப் பிடித்தபடி,

பாதுகாப்பான வேளை பார்த்து எமக்குச் சைகை காட்டினார். எமது நல்ல காலம் இராணுவ அணி ஒன்று ஒரு பெரும் பிழை விட்டது. தங்களுடைய நிலைகளை உறுதிப்படுத்துவதில் தாமதம் செய்தன. சுற்றி வளைப்பை அவர்கள் துரிதமாகச் செய்யாததால் அந்த முக்கிய ஒழுங்கையைக் கடப்பதற்கு எமக்கு நேரம் கிடைத்தது, ஒழுங்கையில் தூரத்திலே படைகள் வீடு வீடாகச் சோதனையிடச் செல்வது தெரிந்தது. அவர்கள் அங்கே தங்கள் கருமத்தில் கண்ணாக இருக்கும் போது நாம் ஒவ்வொருவராக ஒழுங்கையைக் கடந்து எமது விட்டைச் சுற்றி இறுகும் தடத்திலிருந்து தப்பினோம். எமது நிலையை உணர்ந்த உள்ளூர் மக்கள் இந்தியப் படைகள் இருக்கும் திசையை சைகைகளால் உணர்த்தி நாம் எட்டத்தே செல்லுமாறு பார்த்துக் கொண்டார்கள்.

அந்த இடத்திலிருந்து நாம் தப்பிச் சென்று கொண்டிருந்தபோது, நாம் விட்டு வெளியேறிய வீட்டுப் பக்கம் அடு தொடராகத் துப்பாக்கி வேட்டு கேட்டது. பின்னர், அங்கே சுற்றி வளைக்கப்பட்ட ஊர் மக்களிடமிருந்து என்ன நடந்தது என்பது தெரிய வந்தது. இந்தியப் படையினர், காட்டிக் கொடுத்த ஈ.பி.ஆர்.எல்.எஃப் ஆள் ஒருவரின் வழிகாட்டலோடு அந்த இடத்தை மொய்த்து வீட்டை இறுக்கமாகச் சுற்றி வளைத்து துப்பாக்கிகளை நீட்டியபடி நிலையெடுத்திருக்கின்றனர். ஒவ்வொருவராக வெளியே வரவேண்டும் என்று உரக்கக் கூவி அழைத்திருக்கிறார்கள். வீட்டுக்குள்ளே ஒரே அமைதி. சலனமே கிடையாது. பொறுமை இழந்த அமைதி காப்பாளர் தானியங்கித் துப்பாக்கியால் வெறும் வீட்டின் மீது சுட்டுத் தள்ளியிருக்கிறார்கள். விரைவில் அவர்களுடைய தவறை உணர்ந்தார்கள். வீட்டின் மீது தாக்குதல் நடத்த வந்த இந்தியப் படையினரை நாம் மண் கௌவச் செய்திருந்தோம்.

வீட்டுச் சொந்தக்காரரான மார்க்கண்டு அவர்கள் மீது படையினர் தங்கள் கைவரிசையைக் காட்டியிருக்கிறார்கள். அந்த நேரம் துணை அரசாங்க அதிபராக இருந்த மார்க்கண்டு அவர்களைப் படையினர் படைப் பாதுகாவலில் கொண்டு போய் நையப் புடைத்திருக்கிறார்கள். சில நாட்கள் வைத்துக் கொடுமைப் படுத்தியபின், புலிப் போராளிகளுக்கு இனிமேலும் இடவசதி வழங்கிப் பிடிபட்டால் விளைவு மோசமாக இருக்கும் என்ற எச்சரிக்கையோடு அவரை விடுவித்திருக்கிறார்கள். மார்க்கண்டு அவர்கள் கிலேசமடைந்தார். அவருக்கு ஒரு குமர்ப் பெண்ணும், விடுதலைப் புலிப் போராளியான விஜயன் என்ற மகனும் உண்டு. இந்திய இராணுவத்தின் யாழ்ப்பாண நடவடிக்கையின்போது, அவர்கள் புரிந்த கொடிய பாலியல் வன்தாக்கல் சம்பவங்கள் பற்றி அறிந்திருந்த அவர், எதிர்காலத்தில் ஏதாவது தண்டனை என்று வந்தால்,





அந்தத் தண்டனை தமது மகளுக்கே கிடைக்கும் என்று அஞ்சினார். ஆனால் துணிச்சலும் தாராள மனமும் கொண்ட இந்த மனிதர் வளைந்து கொடுக்கவே இல்லை. இந்திய இராணுவம் அந்த வீட்டின் மீது தொடர்ந்து கண்வைத்திருந்ததால், அந்த வீட்டுக்குத் திரும்பிச் செல்ல நாம் நினைக்கவேயில்லை.

நாம் தப்பிய இந்த இக்கட்டான நிலைமையிலிருந்து ஒன்று தெளிவானது. பொட்டு அம்மானை நடமாட விடாதபடி அவருடைய காயங்கள் அவரைக் கட்டுப்படுத்துவதை உணர்ந்தோம். வடமராட்சியில் புலிப் போராளிகளைத் தேடும் முயற்சியை இந்தியப் படையினர் தீவிரப்படுத்தியிருந்ததால், சுற்றி வளைப்பும் தேடுதலும் அன்றாட நடவடிக்கையாயின. பொட்டு அம்மான் உயிர் பிழைக்க வேண்டுமென்றால், அவர் அந்த இடத்தை விட்டு வெளியேறி, மருத்துவப் பராமரிப்பும் ஓய்வும் பெறுதல் அவசியமானது என்பதும் தெளிவாயிற்று. எனவே அவரை மருத்துவ பராமரிப்புக்காக கடல்மூலம் தமிழ் நாட்டுக்கு அனுப்ப ஏற்பாடாயிற்று. இதனால் எமது குழுவை விட்டு அவர் பிரிந்து சென்றார். காயமடைந்திருந்த ஏனைய போராளிகளுக்கும் தனித் தனியான தொடர்புகளும் வழிகளும் கிடைத்தன. இவர்களும் தமக்கு உதவி புரிய முன்வந்தவர்களுடன் சிகிச்சைப் பராமரிப்பு வழிதேடி, வெளியேறினார்கள். உயிர் தப்பிப் பிழைக்கும் போராட்டத்தில் நாம் தொடர்ந்தும் ஈடுபட்டோம்.

இந்தியர்கள் எம்மைத் தொடர்ந்து தேடிய வண்ணம் இருந்தார்கள். நாமும் இடம் மாறியபடியே இருந்தோம். அந்தப் பகுதியின் அரசியற் பொறுப்பாளர் சுக்ளா என்பதால், இந்தியர் அவரையும் வேட்டையாட முயன்று கொண்டிருந்தார்கள். இதனால், புதிய பாதுகாப்பான வீடுகளை ஆயத்தப்படுத்துவதற்காக அவர் அடிக்கடி வெளியே செல்வதும் அவருக்கு ஆபத்தை ஏற்படுத்தும் போலப் பட்டது. அந்தப் பகுதி முழுவதும் அவருக்கு நன்கு பரிச்சியமாக இருந்ததால், அப்போதைக்கேனும் அகப்படாமல் இருப்பது அவருக்கு இயலுமாயிற்று. ஆனால் நெல்லியடி நகருக்குள் அவர் வெளிவாரியாக நடமாட முடியவில்லை. இந்தியப் படையினருக்குத் தங்கள் எதிரிகள் யார் யாரென்று அடையாளம் தெரியாது. ஆகவே விடுதலைப் புலிப் போராளிகளையும் அவர்களுக்கு உதவுபவர்களையும் அடையாளம் காட்டுவதற்காக முகமூடி தரித்த உளவாளிகளை மக்கள் கூடுதலாக உள்ள பகுதிகளில் நிறுத்தியிருந்தார்கள். விடுதலைப் புலிப் போராளி என்று சந்தேகிக்கப்படும் ஒருவரை முகமூடி தரித்தவர் கண்டதும், அவர் பக்கமாகத் தலையை ஆட்ட படையினர் அவரைக் கைது செய்வர். இந்த

உளவாளிகளைத் தமிழ் மக்கள் வெறுத்தார்கள். தலையாட்டிகள் என்று ஏளனமாக அழைத்தார்கள். தலையாட்டிகளை படையினர் சந்தையிலோ, சோதனைச் சாவடி ஒன்றிலோ நிறுத்தும்போது, அதிர்ஷ்டவசமாக போராளிகளுக்கு தகவல் கிடைத்து விடும். அந்த இடங்களை அவர்கள் முற்றாகத் தவிர்த்து விடுவார்கள்.

தமது உறவுக்காரப் பெண்களிடமும் நண்பர்களிடமும் எமக்கு உணவு வழங்குவதற்கான ஏற்பாடுகளை சுக்ளா செய்திருந்தார். மிகவும் காரமான கறிவகைகளைச் சமைப்பதில் வடமராட்சி ஒரு பெயர் பெற்ற இடமாகும். ஆகவே, வகைவகையாக எமக்கு உணவு கிடைத்தது. விசுவாசமும் அக்கறையும் உள்ள எத்தனையோ முகம் தெரியாத பெண்கள், தங்கள் உயிராபத்தையும் பொருட்படுத்தாது எமக்கு உணவு தயாரித்தார்களோ தெரியாது. உணவைச் சேகரிக்கும் பணி கந்தையா என்ற போராளியிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அவர் ஒழுங்கைகள் மாறி மாறி, சமைக்கும் வீட்டுக்குச் சென்று, பத்திரமாக உணவைக் கொண்டு வந்து விடுவார். வேறு வழிகளிலும் அங்குள்ள மக்கள் தாராள குணத்தோடும் ஆதரவோடும் நடந்து கொண்டார்கள். பின்னேரத் தேனீர் வேளை ஒரு முக்கியமான நேரமாகும். தேனீரோடு உண்பதற்காக தமிழ்ப் பெண்கள் ஏதாவது இனிப்பு வகையோ காரவகையோ சிற்றுண்டிகளாகச் செய்வார்கள். நாம் அந்தப் பக்கத்தில் இருப்பது தெரிந்தால், சின்னப் பையனோ பெண்ணோ கையில் ஒரு ஓலைப் பெட்டியுடன் என்னிடம் ஓடிவருவார்கள். தாயார் கொடுத்து விட்ட சிற்றுண்டி ஏதாவது அதில் இருக்கும். கோவில் திருவிழாக்களுக்காக பெண்கள் பொங்கும்போது எனக்கும் ஒரு வெள்ளித்தட்டு வந்து சேரும். அதில் அழகாக அடுக்கிய வாழைப்பழமும் ஒரு கிண்ணத்தில் புக்கையோ, எனக்கு வெகுவாகப் பிடித்த மோதகமோ இருக்கும். இந்தப் பெண்களை நான் நேரில் பார்த்ததில்லை. ஆனால், என்னையும் நினைத்து தங்கள் குடும்ப உணவை என்னோடு பகிரும் உணர்வு பூர்வமான தாராண்மை அவர்களிடம் இருந்தது. இப்படியான சிறிய சிறிய கருணை வெளிப்பாடுகளே, நானும் அவர்களில் ஒருத்தி என்ற உணர்வையும் நானும் அங்கத்தையவளே என்ற உணர்வையும் எனக்குத் தந்தன.

சுக்ளாவும் எமது போராளிகளும் மக்களுக்குள் நன்றாக ஊடாடிப் பழகினார்கள். இதனால் வடமராட்சியில் இராணுவத்தின் நடவடிக்கைகள் தொடர்பான பல தகவல்கள் எமக்குக் கிடைத்தன. அந்தப் பகுதி முழுவதிலுமே, இராணுவச் சுற்றி வளைப்பும் தேடுதல் முயற்சிகளும் சாதாரண நடவடிக்கையாகிவிட்டது. அவர்கள் எவ்வளவுக்கு எவ்வளவு தேடுதல்கள் நடத்தினார்களோ, அவ்வளவுக்கு





அவர்களுடைய நடவடிக்கை ஒழுங்கு விபரங்கள் பற்றி நாம் அறிய முடிந்தது. பொதுவாக இரண்டு வழிமுறைகளை அவர்கள் கையாள்வதை அவதானித்தோம். அநேகமாக அதிகாலையில், வெவ்வேறு பக்கங்களில் இருந்து படையணிகள் வந்து ஒரு இடத்தில் குவியும். அந்த இடத்தைச் சுற்றி வளைத்து, தேடுதலை நடத்துவார்கள். ஆனால் கூடுதலாக என்ன நடக்கும் என்றால், சிறுசிறு காவல் உலா அணிகள் வெவ்வேறு பக்கத்திலிருந்து அல்லது வெவ்வேறு முகாம்களில் இருந்து ஒரு இடத்துக்கு வந்து, அந்தப் பகுதியைச் சுற்றி வளைத்து, வெளியே இருந்து யாரும் உள்ளே வராமலும், உள்ளே இருந்து யாரும் வெளியே போகாமலும் அறுக்கை செய்து, அதன் பின் வீடுவீடாக, கட்டடம் கட்டடமாகத் தேடுதல் நடக்கும். கிளர்ச்சியை முறியடிப்பதற்கு இத்தகைய நடவடிக்கை அத்தியாவசியம் என்று இந்திய படைத் தலைமை கருதியது. ஆனால் அடுத்தடுத்து நடந்த தேடுதல்களே அவர்களுடைய மோசமான பலவீனத்தை உணர்த்தியது. படையினரின் இந்தத் தொந்தரவை மக்கள் வெறுத்தார்கள். இந்தியர்கள் மட்டில் மக்களுக்கு இருந்த ஆதரவு ஒழிந்து போயிற்று. இந்த நடவடிக்கைகளின் போதே மக்களுடைய வீடுகளின் பௌத்திரம் சிதைக்கப்பட்டது. இந்தியர் புரிந்த மிக மோசமான அடாவடித்தனங்களும் இடம் பெற்றன. இந்தியப் படைத்தளபதிகளும் சாதாரண படையினரும் கலகங்கள் நடக்கும் வட இந்தியாவில் இருந்து தமிழர் தாயகத்திற்கு இறக்கப்பட்டவர்கள். தனது விழுமியங்களிலும் பண்பாடுகளிலும் பெருமை கொண்டிருந்த, இந்த அமைதி காக்கும் யாழ்ப்பாண சமுதாயத்தின் வாழ்க்கை முறையும் மொழியும் பண்பாடும் அவர்களுக்கு முற்றிலும் வேறானதாக காணப்பட்டது. அவர்களுடைய கண்களுக்குப் புலனாகாத எதிரி, அடிக்கடி பொதுசன சமுத்திரத்தில் கரைந்து காணாமல் போய் விடுவதால், அனைத்து தமிழ் மக்களும் ஒன்றில் புலிகளாக அல்லது புலி ஆதரவாளர்களாக இருக்க வேண்டும் என்று இந்திய இராணுவம் கருதியது. தமிழ் மக்களின் விடுதலைப் போராட்டத்தின் தன்மையையோ வரலாற்றையோ இந்தியப் படையினர் சிறிதும் அறிந்திருக்கவில்லை. மேலும் முக்கியமானது என்னவென்றால், இந்த அமைதி காப்பாளர்கள் தமிழ் பகுதிகளில் தங்களுக்கு வழங்கப்பட்ட மனுவின் நோக்கம் என்ன என்பதை மறந்துவிட்டார்கள். நெறிமுறைக் கட்டமைப்புடன் ஒழுகும் தலைமையின் வழிகாட்டல் இல்லாததால், இந்தியப் படைகள் இலக்கின்றி கிராமங்களில் அலைந்து திரிந்து புலிவேட்டை என்ற பெயரில், பொதுமக்கள் மீது மனிதாபிமான-மற்ற முறையில் கொடுமை புரிந்தார்கள். வீடுகளுக்குள் புகுந்த இந்தியப்

படையினர், இரக்கமற்ற காடையர்களாக மாறினர். மானுட கண்ணியத்தின் அடிப்படைச் சீலங்களையே மீறினார்கள். பாலியல் வன்முறை, திருட்டு, காடைத்தனம், குற்றமற்றவர்களை தாக்குதல், ஆகியவை இந்தத் தேடுதல் நடவடிக்கை என்ற பெயரில் கிரமமாக நடந்தன. சந்தேகத்துக்கு உரிய தனி ஒருவரை அடையாளம் காட்டுவதற்கு ஆயிரமாயிரம் பொதுமக்கள் ஊர் மைதானங்களுக்கு நிர்ப்பந்தமாக அழைக்கப்பட்டு, பாரிய அடையாள அணிவகுப்புக்கள் நடத்தப்பட்டன. பல முதியவர்களை இந்தியப் படையினர் பலவந்தமாக வீட்டுக்கு வெளியே இழுத்து, வீதியோரமாக பல மணிநேரம் சுடு வெய்யிலில் நிறுத்தி வைத்ததை அந்த முதியவர்களே என்னிடம் கூறியிருக்கிறார்கள். வயது வித்தியாசம் பார்க்காது, எல்லாப் பொதுமக்களுமே மிகக் கீழ்த்தரமான சிறுமைக்கு உள்ளாக்கப் பட்டார்கள். சந்தேகத்தில் கைதானவர்கள் வெளித் தொடர்பு முற்றிலும் மறுக்கப்பட்டு, வெவ்வேறு தடுப்பு நிலையங்களில் இடப்பட்டார்கள். விசாரணை நடவடிக்கை ஒரு சாதாரண நடவடிக்கை ஆகியது. ஆயுதம் தரித்த படையினர் முன்னிலையில் பாதுகாப்பு எதுவும் இல்லாத பெண்களே பெரிதும் பாதிக்கப்பட்டார்கள். இரங்குமாறு கேட்டு அவர்கள் கெஞ்சிக் கதறினாலும், பலர் பாலியல் வன்முறைக்கு உள்ளானார்கள். கூட்டு பாலியல் வன்முறையும் பெரிதும் இடம் பெற்றது. அறுபது வயது மூதாட்டி ஒருவர் தமக்கு நேர்ந்த சிறுமையை என்னிடம் தனியே விபரித்தார். ஆயுதம் தரித்த மூன்று இள வயதுப் படையினர் திடீரென்று வீட்டுக்குள் பாய்ந்து புகுந்து, நோய்வாய்ப்பட்டு படுக்கையில் விழுந்து அசைய முடியாது கிடந்த முதிய கணவரிடமிருந்து தம்மைப் பிரித்து அறை ஒன்றினுள் இழுத்துச் சென்று, கூட்டாக பாலியல் வன்செயலில் ஈடுபட்டதாக தெரிவித்தார். அவலமான துன்பியல் நிகழ்வை என்னிடம் கூறும்போது, கண்ணியமான அந்தப் பெண் தன் கண்ணீரை அடக்க சிரமப்பட்டார். அலுமாரி, பெட்டகங்களைத் துளாவி, பெறுமதி வாய்ந்த நகைகள், பணம் விலையுயர்ந்த பொருட்கள், இனி என்னென்ன பண்டங்கள் தம்மைக் கவர்கின்றனவோ அவற்றையெல்லாம் இந்தியப் படையினர் அபகரித்த போது, மக்களின் அந்தரங்க வாழ்வின் தனித்துவமும் பங்கப்பட்டது. படை நடவடிக்கை என்று வரும் போதெல்லாம், தமது இராணுவ உணவுக்கு மேலதிக ஊட்டமாக தோட்டத்தில் இருக்கும் கால்நடைகளைப் பிடித்துச் செல்வதும் ஒரு வழமையாகியது. ஒழுக்கமோ கட்டுப்பாடோ இல்லாமல், தங்கு தடையற்று குரூரத்தனத்தையும் பாலியல் வன்முறையையும் வடக்கு, கிழக்கு முழுவதிலும் இந்தியப் படையினர் கடைப்பிடித்ததால்,





பயங்கரவாதம் தலைவிரித்தாடியது. தமிழ் மக்களின் தேசியப் பெருமையுணர்வு பாடுகேடாக அவமானப்படுத்தப்பட்டது. அதே சமயம் இந்திய ஆக்கிரமிப்புப் படை மட்டில், ஆழமான வெறுப்பையும் உள்ளே கனன்று கொண்டிருக்கும் சீற்றத்தையும் வளர்த்தது.

நாட்கள் வாரங்களாயின. இராணுவ நடவடிக்கைகள் பரவிச் செல்ல, அதற்குச் சமதையாக மக்களிடம் அச்சமும் ஆழம் பெற்றது. ஆனால், நெருக்கடியின்போது, மக்கள் வீறுகொண்டெழுந்து சவாலுக்கு முகம் கொடுப்பது இயல்பு. எதிர்பாராத கோணங்களில் இருந்து துணிச்சலும் தியாகமும் மேம்பட்டன. படையினரின் அடாவடித் தனைத்தையும் மீறி, மக்களின் மனவுறுதி உடைபடாது தாக்குப் பிடித்தது, ஆகவே, நாம் வாழ்ந்த பகுதிகளில் அச்சம் பரவியிருந்தாலும், துணிச்சலும், அனுதாபமும் கொண்ட மக்கள் தங்கள் வீடுகளை எமது பாதுகாப்பிடமாகப் பயன்படுத்த இடமளிப்பது தொடர்ந்து நடைபெற்றது. அதே சமயம் இந்தியர் எங்கே இருக்கிறார்கள் என்பதையும் அவர்களுடைய சுற்றிவளைப்புத் தேடுதல் எப்படி நடத்தப்படுகிறது என்பதையும் நாம் நன்கு அறிந்திருந்ததால், பிரச்சினை வரக்கூடும் என்று எமக்குத் தோன்றிய பகுதிகளை அடிக்கடி தவிர்த்தோம். ஆனாலும் வடமராட்சியை படிமுறையாகத் தேடும் முயற்சி முடிந்தபின், திடீர், திடீரென்று ஆங்காகங்கே தேடுதல் நடத்துவதில் படையினர் ஈடுபட்டனர். தப்பிப் பிழைக்கும் எம் முயற்சியில் இது ஒரு புதிய சிக்கலை தோற்றுவித்தது. எந்த ஒரு பகுதியையும் அவர்கள் குறிவைத்து திடீர்த் தேடுதல் நடத்தலாம். அப்படியானால், நாம் வாழும் வீடு, இரவோ பகலோ எந்த நேரமும் தேடுதலுக்கு உள்ளாகலாம் என்ற அந்தரித்த நிலை எமக்கு! ஒரு கத்திமுனையில் சீவியம்.

## யாழ்ப்பாண சொத்துடமை முறை

கரணவாய் கிழக்கில் பாதுகாப்பான வீடொன்றுக்குச் சென்றோம். யாழ்ப்பாண சமூக கட்டமைப்பை பரவலாகப் பிரதிபலிக்கும் குடும்பக் கட்டமைப்பே இங்கு நிலவியது. இந்தப் பாதுகாப்பான வீட்டில் நிலவிய குடும்ப உறவுகள் நடைமுறையில் உள்ள தாய் வழிச் சமுதாய அமைப்பின் அனைத்து அம்சங்களையும் கொண்டிருந்தது. யாழ்ப்பாண சமூக அமைப்பில் தாய் வழிச் சமுதாய விதிப்படியான பரம்பரைச் சொத்துரிமை முறையே வழக்கில் உள்ளது. ஒரே காணி எல்லைக்குள் அவர்களுடைய வழித்தோன்றல்களும், அடுத்தடுத்தே அமைந்த இரண்டு

மூன்று வீடுகளில் வாழ்வது, குடும்ப உறவுகளில் நிலவும் பொதுவான கட்டமைப்பாகும். இங்கே ஒரு பெரிய காணிக்குள் இரண்டு சராசரி வீடுகள் இருந்தன. நவீன வசதிகளுடனான வீடு இளைய பெண்ணுக்கும் அவருடைய மூன்று பிள்ளைகளுக்கும் உரித்தாக இருக்க பழைய வீடு, வயதான அவருடைய தயாருக்குச் சொந்தமாக இருந்தது. அவர்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையில் மூக்கை நுழைக்க நான் விரும்பவில்லையாயினும், திருமணத்தின் போது வீடுகள் பெண்களுக்கே சீதனமாக வழங்கப்படுவதால், இந்த இரண்டு வீடுகளும் பெண்களுக்கே சொந்தமானவை என்று நாம் ஓரளவு உறுதியாக நம்பினோம். நிச்சயமாக, இரண்டு வீடுகளில் ஒன்றும், இனிக் காணி முழுவதும், குடும்பத்தின் ஒரே மகளுக்கே வழங்கப்பட்டிருக்கும். தேச வழமையில் வரிக்கப்பட்டதுபோல, பெண்களுக்கே சொத்துடமை செல்லும் புரதான பாரம்பரியச் சட்டம் இங்கும் கடைப்பிடிக்கப்பட்டிருக்கும். இந்தக் காணி யில் குடும்ப உறவுகள் எவ்வாறு வழிப்படுத்தப்படுகின்றனவோ, அதே போல தன்னில்தானே தங்கி நிற்கும் ஒரு சிறிய வீட்டு பெருளாதாரமும் வழிப்படுத்தப்பட்டிருக்கிறது. இவற்றுள் முதல் முக்கியமானதாகத் தென்னை மரங்களை எடுத்துக் கொண்டால், இங்குள்ள முதிய பெண், தமது இளவயதில் அவற்றை நாட்டியிருப்பார். அவை குடும்பத்துக்குத் தேவையான தேங்காய்களை வழங்கிக் கொண்டிருக்கும். தமிழ் மக்களின் அனைத்துச் சமையல் பாகங்களிலும் தேங்காய் ஒரு முக்கிய இடம் பெறுகின்றது. தென்னையில் இருந்து கிடைக்கும் ஓலை அடி மட்டைகளை சிக்கனமாக வாழும் இந்தப் பெண்கள் விறகாகப் பயன்படுத்துவார்கள். ஓலையை ஒன்றில் காயவைத்து, கிடுகாகப் பின்னி, கொட்டில் கூரைகளை வேயவோ வீட்டைச் சுற்றி வேலி அடைக்கவோ பயன்படுத்துவார்கள். அல்லது விற்றுச் சிறுவருவாய் பெறுவார்கள். பச்சை ஓலையை வார்ந்து அதன் நடுவில் உள்ள ஈர்க்கிலை ஒன்றாகக் கூட்டிக் கட்டினால் அது, வளவு கூட்டும் விளக்குமாறாகும்.

பெரும் பயன் தருவது என்றால் அது பனைமரமே. யாழ்ப்பாண இயற்கைச் சூழலின் குறியீடே பனைதான். எங்கு பார்த்தாலும் பனை காடாக நெடிதுயர்ந்து வளர்ந்து நிற்கும். மர உச்சியில் உள்ள ஓலையில் இருந்து அடி வேர் வரை இது மக்களுக்குப் பயன் தரும். ஓலையானது வீடு வேய, வேலி அடைக்க, மாட்டுத்தீனியாக உதவும். பழம் சாறு நிறைந்தது, இனிக்கும். பூவின் தண்டிலிருந்து உள்ளூர் மதுவான கள் வடிக்கப்படும். பனை மட்டை விறகாகிறது. அதன் வைரமான தண்டு பல நூற்றாண்டுகளாக தமிழ் வீடுகளின் நடுத்தூணாக விளங்குகிறது. கிழங்கு ஒடியலாக உலர வைக்கப்பட்டுவெவ்வேறு வகை உணவாகிறது.





வளம் நிறைந்த இவ்விரண்டு மரங்களும், உள்ளூர் பொருளாதாரத்தின் அடிநாதடமாக அமைகின்றன. இவற்றை ஒட்டிய வெவ்வேறு பணிகள் வீட்டுப் பெண்களை நாள் முழுவதிலும் சுறுசுறுப்பாக வைத்திருக்கின்றன.

வீட்டு வளவினுள், காணியில் ஒரு சிறிய பகுதி, துப்புர வாக்கப்பட்டு, அங்கு மிளகாயும் வெங்காயமும் நடப்பட்டிருந்தன. கத்தரி பூக்கத் தயாராக இருந்தது, இதன் காய்கள் நாளாந்தம் வீட்டுக் கறியாக இருக்கும். வீட்டுத் தேவைக்கு மிஞ்சிய கத்தரிக்காய் உள்ளூர்ச் சந்தையில் விற்பனையாகி, வீட்டுக்குச் சிறு வருமானம் தரும். கிணற்றைச் சுற்றி கத்தையாக வாழை மரங்கள். கிணற்றைச் சுற்றியுள்ள அழுக்கு நீர் வடிகாலிடப்பட்டு வாழைக்குப் போகும். வாழை செழிக்க அந்த நீர் போதும். உணவின் மேல் வாழைப்பழம் உண்பர். பிட்டு காலை உணவாக அல்லது இரவு உணவாக அமையும். மீதமாகும் வாழைக் குலைகளும் சந்தைக்குப் போகும். வாழைப் பொத்தி எனப்படும் வாழைப்பூ ஒரு சிறப்பான மரக்கறியாகத் தயாரிக்கப்படும். வாழைக் குலையை வெட்டியவுடன், மரம் நிலமட்டத்துக்கு வெட்டப்பட்டு, தண்டு மாட்டுக்கு உணவாகிறது. வெட்டிய இடத்தில் உள்ள வாழைக் கிழங்கில் இருந்து புதிய மரம் வளரும். வீட்டில் வளரும் கோழி முட்டை தரும். கறியாகவும் மாறும். ஆடும் மாடும் பால் தரும். மரங்களுக்கு பசளையும் தரும்.

இவ் அசையும் சொத்துக்களும் அசையாச் சொத்துக்களும் இருந்தபோதிலும் குடும்பத்தின் முக்கிய தேவையான பணம், தட்டுப்பாடாகவே இருந்தது. ஆகவேதான் பிள்ளைகளின் தந்தை வீட்டில் இல்லை. தாயே வீட்டுத் தலைமையைப் பொறுப்பேற்றிருந்தார். அவர்களுக்கு மூன்று பிள்ளைகள். ஒரு சின்னப் பையன். ஒரு பதினான்கு வயதுப் பையன். ஒரு பதின்மூன்று வயது குமர்ப் பெண். எதிர் காலத்தில் பல காரணங்களுக்காக இவர்களுடைய தந்தை பணம் சம்பாதித்தாக வேண்டும். அவர்களுடைய முதற்கவலை, பிள்ளைகளின் உயர் கல்வியே. யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்துக்கு அல்லது வேறேதாவது சிறீலங்கா பல்கலைக்கழகத்துக்குத் தேவையான நுழைவுப் புள்ளிகள் பிள்ளைகளுக்குக் கிடைத்து விட்டால் அவர்களுடைய எதிர்காலக் கல்வி பிரச்சினையாக இருக்காது. ஆனால், பல்கலைக்கழக அனுமதி பெறுவதற்குச் சிங்களவரைக் காட்டிலும் தமிழர்கள் கூடுதலான தேர்வுப் புள்ளிகள் பெற வேண்டும் என்பதால், போட்டி கடுமையாக இருக்கும். பல்கலைக்கழகத்தில் இடம்பிடிக்க ஆயிரமாயிரம் பேர் போட்டி போடுவார்கள். சிலருக்கே அனுமதி கிடைக்கும். மகனார் கெட்டிக் காரனாக இருக்கலாம். ஆனால் பல்கலைக்கழக இடம்பெறுவதற்கு

தேவயையான உயர்ந்த தேர்வுப் புள்ளிகள் பெறக்கூடிய அதீத திறமை இல்லாவிட்டால், உடனே அவரை வெளிநாட்டுக்கு, வெளிநாட்டுக் கல்விக்காக அனுப்பப் பெற்றோர் முனைவர். அந்த மகன், தமது தொழில் கல்வித் தகைமைகளைப் பெற்றுவிட்டால், உழைத்துச் சம்பாதித்து, தமது தம்பியாரின் கல்வியையும், தங்கையின் சீதனத்தையும் பொறுப்பு ஏற்கலாம். மகளுடைய சீதனமே, பெற்றோருடைய இரண்டாவது கவலையாக இருக்கும். தான் படித்து, ஒரு தொழில் பார்க்க வேண்டும் என்று பிள்ளை விரும்பலாம். ஆனால் தன் மகளுக்கு ஒரு நல்ல கல்யாணம் பேசி, ஏற்பாடு செய்வதே தமது மிகப் பெரும் கடமை என்றே யாழ்ப்பாண பெற்றோர் கருதுவர். அது பலிதமாவதற்கு, குடும்பத்துக்கு நிறையப் பணம் வேண்டும். பரம்பரைச் சொத்து மகளுக்கே செல்லும் என்ற உத்தரவாதம் இருந்தாலும், கொழுத்த சீதனம் எதிர்பார்க்கும் யாழ்ப்பாணத்தாருக்கு அது போதாமல் இருக்கும். சீதனத்துக்கு மேலே பண ரொக்கமும் எதிர்பார்ப்பார்கள். ஆகவே, பெற்றோரின் கடப்பாடுகளும் சமூக உயர் வேணவாக்களும் நிறைவேற்றப்பட வேண்டுமானால், குடும்பத் தலைவர் தொழில் வாய்ப்புத் தேடி வெளிநாடு செல்வது அவசியமாகிறது. விதவை நிலை, திருமண முறிவு, கணவன் காணாமல் போதல், வெளிநாட்டில் கணவன், போன்ற வெவ்வேறு சமூக காரணங்களால் வடக்கிலும், கிழக்கிலும் உள்ள தமிழ்ச் சமுதாயத்தினிடையே குடும்பத்தின் தலைவராக பெண் அமைவது ஒரு பொதுவான நடைமுறையாகிவிட்டது. குறிப்பிட்ட இந்தக் குடும்பத்தில், மூதாட்டியார் நீண்ட கால விதவையாவார். மிகக் கொடுமையான நாட்டு நிலையில், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து, தங்கள் குடும்பத்தையும் காணி பூமிகளையும் மன உறுதியுடனான இந்த இரண்டு பெண்களும் நிர்வகிக்கும் நிலையை இங்கே காண முடிந்தது.

மூதாட்டியின் வீட்டில் தங்கியிருக்கவே எமது சிறிய குழு சென்றது. இரண்டு பெண்களுக்குமே பாரிய பொறுப்புகள். ஆனாலும் இரண்டு பேருமே விருந்தோம்பலில் உயர்ந்து நின்றார்கள். எமக்காக உணவு சமைத்தார்கள். தங்கள் உணவை எம்முடன் பகிர்ந்து கொண்டார்கள். பிள்ளைகள், குறிப்பாக மூத்த பையன், கிரமமாக எம்மைப் பார்க்க வருவார். ஒரு சுமூகச் சூழலை இங்கே காண முடிந்தாலும், இந்த வீடு எமக்குத் துரதிர்ஷ்டவசமாகவே அமைந்தது. பல தடவை இராணுவ சுற்றி வளைப்புக்கள் நடந்தன. மறு நாள் அதிகாலை சுற்றி வளைப்பு நடக்கப் போவதாக எமக்கு ஒரு தடவை முன்கூட்டியே தகவல் கிடைத்தது. ஊர் நன்றாக அடங்கிய பின்னிரவிலேயே தகவல் கிடைத்த போதிலும் உடனடியாக நாம் இடம்





மாற வேண்டியிருந்தது. நிலாவொளியில் வயல் வரப்பு வழியாக எமது குழு ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்துக்கு நகர்ந்தது. ஒழுங்கைகளில் உள்ள வளைவு நெளிவுகளில், போராளிகள் சைக்கிளின் முன்தண்டிருக்கையில் எம்மை ஏற்றிக் கொண்டு அடுத்த தரிப்பிடம் நோக்கிச் சென்றார்கள். நேரம் போகப் போக மன அங்கலாய்ப்பு அதிகரித்தது. மரணமே நேர்ந்தாலும் ஒருவரில் இருந்து ஒருவர் பிரிக்கப்படக்கூடாது என்பதில் பாலாவும் நானும் உறுதியாக இருந்தோம். எம்மிடையே ஒருவரில் இருந்து ஒருவர் பிரிக்கப்படலாம் அல்லது பிடிபடலாம், அல்லது கொல்லப்படலாம் என்ற அச்சமே, முன்னைக்காட்டிலும் எப்போதுமே எம்மை ஒட்டியபடி வைத்திருந்தது. எனவே கடும் அபாயம் வருகிறது என்று தோன்றும் போதெல்லாம் ஒருவரை ஒருவர் காப்பாற்றுவதற்காக அருகிலேயே இருக்க வேண்டும் என்ற உணர்வையும் தந்தது. எம்மிருவரையும் பிரித்து வைப்பதால் உயிர் தப்புதற்கான வாய்ப்பு அதிகம் என்ற கருத்து எப்போதாவது தெரிவிக்கப்பட்ட மறுகணமே நாம் அதை ஒரேயடியாக நிராகரித்து விடுவதால், அந்தப் பேச்சு எடுபடுவதே முற்றாக நின்றுவிட்டது. கரவெட்டியில் உள்ள கத்தோலிக்க கன்னியர் மடம் ஒன்றில் கன்னியர் போல நான் வேடமிட்டு இருக்கலாம் என்று எனக்குத் தெரிவிக்கப்பட்டது. அதை நான் எடுத்த எடுப்பிலேயே நிராகரித்துவிட்டேன்.

இரவு வேளைகளில் அடிக்கடி நானே பாலாவின் விழிகளாகவும் இருக்க வேண்டியதாயிற்று. ஒழுங்கைகளூடாகவும் செல்லும் தருணங்களில் நானே அவருடைய விழியானேன். இரவில் பாலாவுக்கு பார்வை மங்கல். அடிக்கடி எனது தோளை அணைத்தபடி வர, ஒழுங்கையில் கூட்டிச் செல்வேன். அதே சமயம் அந்தக் குழுவில் நான் ஒருத்தியே பெண். ஆகவே திருமணம் மூலம் கிடைத்த நெருங்கிய உறவு பெரும் பயன் தந்தது, எனது கண்ணியத்தையும் தனித்துவத்தையும் பேண பாலா உதவினார். சின்னச் சின்ன விடயங்களே எனக்கு முக்கியமாக இருந்தன. கழிப்பிட வசதிகளில் எனக்கு முன்னுரிமை வழங்கப்படவும், எனக்கு தேவைப்பட்ட போதெல்லாம் வசதி ஏற்படுத்தக்கூடியதாகவும் பாலா பார்த்துக் கொண்டார். கழிப்பிடத்துக்கு உள்ளே இருப்பவரிடம் அன்ரிக்கு கழிப்பிடம் தேவை என்று பாலா கத்துவது அவ்வப்போது நடக்கும். நான் குளிக்கும்போதும் அது நடக்கும். யாழ்ப்பாண வீடுகளில் பெரும்பாலானவற்றில், குறிப்பாக பழைய வீடுகளில் குளியல் அறை வீட்டினுள் இருப்பதில்லை. வீட்டின் பின்புறம் உள்ள கிணற்றிலேயே மக்கள் கழுவுவது வழக்கம். கிணற்றிலிருந்து நீரை அள்ளி, வாளியால் குளிர் நீரை மேலில் ஊற்றிக்

கொண்டிருக்கும்போது, மேலில் மெல்லிய காற்றுத் தடவிச் செல்லும்போது, அந்த இயற்கை நிலை தரும் சுகானுபவம், அதை அனுபவித்தவர்களுக்கே புரியும். இளைஞர்கள் கிணற்றடியில் தங்கள் சாரத்தில் அல்லது உள்ளாடையுடன் கூடி நின்று யார் தம்மை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற பிரக்ஞையே இல்லாமல் ஆறுதலாகக் குளித்துக் கொண்டிருப்பார்கள். பெண்கள் சாறத்தை தங்கள் மார்புக்கு மேலே குறுக்குக் கட்டாகக் கட்டியபடி குளிப்பார்கள். ஆனாலும் குளியல் என்பது ஆண்களைப் பொறுத்த வரையில் ஆரவாரமாகவே இருக்கும். இப்படியான கழுவும் முறையை நான் கடைப்பிடிக்கவும் இல்லை. அது எனக்கு பிடிபடவும் இல்லை. இயற்கையாக நின்று, வாளிகளில் நிரப்பிய நீரில், மூடிய குளியல் அறைக்குள் நின்று கழுவுவதே எனக்கு பழக்கப்பட்ட ஒன்று. அநேகமாக இருட்டும் வரை குளிப்பதற்காக நான் காத்திருப்பதுண்டு. எல்லோரையும் பாலா விரட்டிவிட்டு, இடத்தை வெளியாக்கி, நான் தனிமையில் குளிப்பதற்கு வசதி ஏற்படுத்துவார். அதன் பின், கிணற்றில் இருந்து நீர் இறைத்து என்மேல் ஊற்றுவார். அப்படியான தருணங்களில் எமது நிலைபற்றியும் எமது வாழ்க்கை பற்றியும் கூடிப் பேசுவோம். குளிக்கும் வேளைகளிலேயே காப்பு உணர்வும் அதிகமாக இருக்கும். அந்த நேரத்தில் இராணுவச் சுற்றிவளைப்பு இருக்கிறதா என்பதை பாலா கவனமாகப் பார்க்க வேண்டியிருக்கும். நான் இயற்கையாக நின்று குளித்துக் கொண்டிருக்கும் போது அல்லது கழிப்பறையில் இருக்கும்போது இராணுவ சுற்றி வளைப்பு நடக்கக் கூடுமோ என்ற அச்சம் எப்போதுமே எனக்குள் இருந்தது. இதனால், எமது குளியலை ஆறுதலாக நடத்தாது அவசர அவசரமாகச் செய்து முடிக்கும் நிர்ப்பந்தமே பெரும்பாலும் நிலவியது.

## ஒரு பண்பான பெண்

தலைமறைவாகத் தப்பிப் பிழைக்கும் வழிமுறைகளை நாம் உருவாக்கியிருந்தோம். இந்திய இராணுவத்தின் வெவ்வேறு நடவடிக்கைகளுக்கும் அவை ஈடுகொடுத்தன. உள்ளூர் மக்களின் அச்சத்தையும் அவை தவிர்த்தன. பாதுகாப்பான வீடுகளுக்கு இடம் மாறுவதைப் பொதுவாக இரவில் வைத்துக் கொண்டோம். எமது நகர்வில் புதிரையும் குழப்பத்தையும் ஏற்படுத்தும் நோக்கில் விடியற்காலைக்கு முன்னதாகவும் இடம்பெயர்ந்தோம். பகலில் பயணம் புரிவதில்லை என்று





நாம் பிடிவாதமாக இருந்ததில்லை. தவிர்க்க முடியாத அல்லது எதிர்பாராத ஒரு சூழலில் பகலில் இடம் மாறுவது எனத் தீர்மானித்திருந்தோம். இந்திய இராணுவத்தின் தண்டனைக்கு உள்ளாகலாம் என்ற அச்சத்தில் எமக்கு உதவாமல் பலர் தம் கதவுகளை அடைத்தனர். எனவே பழைய இடங்களை நாடும் புத்திசாலித்தனமற்ற நிலையிலும் நாம் இருந்தோம். நாம் எங்கே சென்றாலும் இந்தியப் படை காவல் உலா அணிகளைக் காண நேர்ந்தது. எனவே இருபத்திநான்கு மணி நேரமும் விழிப்போடு இருந்தோம். இரவுக் காவல் உலாவை அவர்கள கிரமமாக நடைமுறைப்படுத்தாதபோதிலும் எந்த நேரமும் எந்த இடத்திலும் படையினர் வரலாம் என்று எதிர்பார்த்தோம். ஆகவே ஒரு பின்னிரவில், நவிண்டிலில் எமது ஆதரவாளர்களில் ஒருவரான ரதியின் வீட்டை நாம் சென்றடைந்தபோது, கரவெட்டியிலிருந்து நாம் புரிந்த பயணத்தின்போது பருவ மழையில் சிக்கி தெப்பமாக நனைந்திருந்ததால், ரதியின் உபசாரம் எனது வாழ்வில் கிடைத்த மிகக் குதூகலமான, மறக்க முடியாத வரவேற்பாக மனதில் பதிந்தது.

ரதியின் வீட்டை நாம் சென்றடைந்தபோது, அவர் எம்மை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். சூடான பிட்டு அடுப்பில் இதமாக மணந்து கொண்டிருந்தது. மெழுகுவர்த்தி ஒளியில் அவர் தரையில் உட்கார்ந்து கூடுதலான பிட்டு அவிப்பதற்காக மாவைக் குழைத்துக் கொண்டிருந்தார். அவரைச் சுற்றி அவருடைய மூன்று பிள்ளைகளும் சமையலில் உதவி புரிந்த வண்ணம் அமர்ந்திருந்தார்கள். எமது போராளிகளிற் சிலரும் அங்கே உதவி புரிந்து கொண்டிருந்தார்கள். எம்மைக் கண்டதும் எம்மை வரவேற்க ரதி உடனே எழுந்து வந்தார். மழை நீர் எம்மிலிருந்து சொட்டிக் கொண்டிருந்தபோதும், எமக்கென கவனமெடுத்து ஆயத்தப்படுத்தியிருந்த அறைக்குள் எம்மை இட்டுச் சென்றார். அந்த அறை தந்த வரவேற்பு என்னை ஒரு கணம் திக்குமுக்காடச் செய்தது. எளிமையான மிகச் சுத்தமான அறை. இரண்டு கட்டில்கள், ஒவ்வொன்றும் எதிர் எதிர்ச் சுவர்களுக்கு அருகே. ஒவ்வொரு கட்டில்களுக்கும் அருகே குட்டிப் படுக்கை மேசை. ஒரு விடுதியின் அறையை அது நினைவூட்டியது. ஆனால் ரதியின் வருக வருக என்ற உணர்வும் அங்கே தனியாகத் தெரிந்தது. படுக்கை மேசையில் வெந்நீர்க் குவளைகள். அருகே தேனீர், சீனி, பால்மா!

என்னை வீட்டுக்கு வெளியே உள்ள பெரிய தொட்டி அருகே கூட்டிச் சென்றார். கொங்கிறீற்றால் கட்டப்பட்ட குளிக்கும் தொட்டிபோல அது இருந்தது, தோட்டத்துக்கு இறைப்பதற்காகவும், குளிப்பதற்காகவும்

தோட்டக்காரர் நீரைத் தேக்கி வைத்த தொட்டி அது. நீர் நிறைந்திருந்தது. என்னிடம் ஒரு துவாயையும், புதிய சவர்க்காரம் ஒன்றையும் தந்தார். வெதவெப்பான அந்த பருவ மழையில் நின்று குளித்தேன். கதகதப்பான மழை பொழிந்து கொண்டிருக்கும்போது கிணற்றடியில் நின்று குளிப்பது யாழ்ப்பாணத்தில் ஒன்றும் புதுமையல்ல. இளைஞர்களிடைய அது பொதுவான நடைமுறை. இதைப் பார்க்கும்போது ஒரு முரண்பாடான செய லாகத் தோன்றினாலும், யாழ்ப்பாண வாழ்க்கையில் சிறப்பாகக் காணப்படும் அனுபவங்களில் இதுவும் ஒன்றாகும். குளித்து விட்டு வந்ததும் ரதி எமக்கு உணவு பரிமாறினார். சுடச் சுட மென்மையான பிட்டு. சிறிது சிறிதாக நறுக்கிய வெங்காயமும், பச்சை மிளகாயும் இட்டு முட்டைப் பொரியல். கடைசியில் பழுத்து இனித்த கதலி வாழைப்பழம். இந்த வீட்டுக்கு நாம் இப்போதுதான் வந்திருந்தோம். நாம் அங்கு இருப்பது யாருக்கும் தெரியாது. படையினரும் இன்னமும் காவல் உலா புறப்படவில்லை. அமைதியாகக் தூங்கலாம் போலப் பட்டது. தூங்குவதற்காகக் கண்களை மூடும்போது அப்படியான ஒரு அமைதி உணர்வு வந்ததென்றால், நான் கடுமையான மன நெருக்குவாரத்துக்குள் சீவித்திருக்கின்றேன் என்பதுதானே அர்த்தம்!

இந்தக் கல்வீடு மிகப் பெரியது அல்ல என்றபோதிலும், ரதியின் பொருளாதார நிலைக்கு முற்றிலும் பொருந்தாத ஒன்று. இன்னமும் முப்பது வயதை எட்டாத ரதி மெலிந்த தோற்றம் உடையவர். திருமணம் புரிந்ததில் இருந்து, ஏமாற்றம், துயரம், நிதி நெருக்கடி போன்றவற்றிற்கு முகம் கொடுத்துக் கொண்டிருந்தார். அவருடைய மூத்த மகனுக்கு எட்டு அல்லது ஒன்பது வயதாக இருக்க வேண்டும். ஆகவே, இருபது வயதைத் தாண்டியவுடன் ரதி திருமணம் செய்திருக்கலாம் என்று நாம் ஊகிக்கலாம். அவருடைய கணவர் ஒரு வர்த்தகர். தென்னிந்தியா விலேயே அவருடைய கூடுதலான வர்த்தகத் தொடர்புகள். அவர் வீட்டுக்கு வருவது ஒழுங்காக இருக்கவில்லை. இறுதியில் வராமலேயே நின்று விட்டார். ரதியின் கணவர் தென்னிந்தியாவிலேயே தமக்கென ஓர் இரண்டாவது மனைவியைத் தேடிக் கொண்டதாகக் கேள்வி. அவர் உண்மையில் ரதியையும் மூன்று பிள்ளைகளையும் கைவிட்டிருந்தார். வருவாயைத் தேடுவதற்கான தொழிற்பயிற்சி எதுவும் இல்லாத ரதி, தமது பிள்ளைகளுக்கு உணவும் உடையும் வழங்க முடியாது திணறினார். தன்னுடைய கஷ்டங்களை பொறுமையோடு சகித்துக் கொண்ட ரதி, தமது பிள்ளைகளை படிப்பிக்க வேண்டும் என்பதில் குறியாக இருந்தார். பிள்ளைகளின் கல்வி வாய்ப்புக்கு குறுக்கே தமது வறுமை தடையாக இருக்கக்கூடாது என்பதிலும் அவர் குறியாக இருந்தார். தனது





குடும்பத்தின் மீட்சி, தமது பிள்ளைகளின் கல்வியிலேயே தங்கி யிருப்பதாக ரதி கருதினார். உண்மையில் பொதுவான தமிழ்ச் சிந்தனையே அதுதான். இதற்காக அவர் தன்னை வருத்தி, தனது வளங்கள் அனைத்தையும் செலவிட்டார். போர்களினால் அவர்களுடைய வாழ்க்கையில் இடையூறுகள் ஏற்பட்ட போதிலும், பிள்ளைகள் தங்கள் கல்வியைத் தொடர வேண்டும் என்பதில் ரதி, மன உறுதியோடு பிடிவாதமாக இருந்தார். நாம் அங்கே இருந்த போது ரதி தமது கதை யைக் கூறினார். சிறீலங்கா இராணுவத்தின் விடுதலை நடவடிக்கை யின்போது (ஒப்பரேஷன் லிபரேஷன்) இடம்பெற்ற விமானக் குண்டுத் தாக்குதலின்போதும், தமது பிள்ளைகளைக் காப்பாற்ற அவர் எவ்வளவு கஷ்டப்பட்டார் என்பதை விளக்கினார். வல்வெட்டித்துறையில் தமது வீட்டிலே பதுங்குகுழி இல்லாததால், தாமும் அச்சத்தால் நடுங்கிய தமது பிள்ளைகளும் கட்டிலுக்கு கீழே ஒடுங்கிக் கொண்டிருந்ததாக அவர் கூறினார். அவருடைய வாழ்க்கை வரலாறு பரிதாபகரமானது. இந்தத் துயரத்துக்கு முகம் கொடுக்க அவர் எங்கிருந்துதான் மனவலிமையைப் பெற்றாரோ என்று நான் வியந்தேன். மேலை நாடுகளில் கைவிடப்படும் பெண்களின் சமூக-பொருளாதார நிலையோடு ஒப்பிடும்போது, யாழ்ப்பாணத்தில் கைவிடப்படும் பெண்களின் நிலை, வெகுவாக வேறுபட்டது. கூட்டுக் குடும்ப உறுப்பினர்கள் இவர்களுக்கு உதவி புரிய முன்வராவிட்டால், இவர்கள் கதி அதோ கதிதான். அரச நலன் புரி உதவிகள் இவர்களுக்குக் கிடைப்பதில்லை. தமது பிள்ளைகளுடைய வயிற்றை அன்றாடம் நிரப்புவதற்கு வேண்டிய பணம் திரட்டுவதற்காக தொட்டாட்டு வேலைகளைக் கூட ரதி தேடினார்.

ஓர் இரவு, புலிகளுடைய வடமராட்சித் தளபதி சூசை எம்மைப் பார்க்க வந்திருந்தார். சுற்றிவளைப்புக்களில் இருந்து சூசை நூலிழையில் தப்பியிருந்தார். அவர் பிடிபட இருந்தபோது, அவரைப் பாதுகாத்துக் கொண்டவர்களின் சமயோசித புத்தியால் அவர் காப்பாற்றப்பட்டார். சுருட்டி வைக்கப்பட்ட பாய்க்குப் பின்னே அவரைப் பதுக்கி விட்டு, துணிமணிகளையும் அவருக்குமேல் குவித்து விட்டிருந்தார்கள். அவருடைய நல்ல காலம், இந்தியர்கள் அங்கே துளாவவில்லை. பொதுவாக எவரும் ஒளிந்திருக்கக்கூடிய இடம் பாய்ச்சுருள் ஆதலால், அதனுள் யாரும் இருக்க மாட்டார்கள் என்று இந்தியப் படையினர் நினைத்திருக்க வேண்டும். அதனால், பாய்ச் சுருளை விட்டுவிட்டார்கள் போலும். நூலிழையில் உயிர்தப்பிய சம்பவங்கள் அந்த நாட்களில் அதிகம்! தப்புவதற்கும் ஒளித்திருப்பதற்கும் கடைப்பிடிக்கப்பட்ட புதுப் புது வழிகளும் அதிகம். இந்தியர்கள் கீழே அறைகளில் தேடிக்

கொண்டிருக்கும்போது, போராளிகள் பல மணிநேரம் வீட்டுக் கூரையில் ஒட்டிக் கிடந்திருக்கிறார்கள். வைக்கோல் போருக்குள், புகையிலை சூடுகளுக்கு இடையில், புதைந்து கிடந்திருக்கிறார்கள். அந்தரித்த வேளைகளில் மலக்குழிக்குள் பதுங்கிய சந்தர்ப்பங்களும் உண்டு. இதனால், இருண்ட பின்னரே நடமாடுவது புத்திசாலித்தனம் என்று சூசை உணர்ந்து கொண்டார். கால நிலையும் கடலும் சாதகமாக அமையும்போது, படகுமூலம் இந்தியாவுக்கு அனுப்பி வைக்குமாறு புலி இயக்கத் தலைமை பணிப்புரை வழங்கியிருப்பதாக சூசை எம்மிடம் தெரிவித்தார். ஆனால் மேலும் சில காலம் நாம் காத்திருக்க வேண்டும் என்றும் அவர் கூறினார்.

ரதியின் வீட்டில் நாம் சில நாட்களே தரித்திருந்தோம். அந்த நாட்களில் எதுவித இடர்பாடுகளோ குழப்பங்களோ எமக்கு வரவில்லை. ஆனால் நீண்ட நாட்கள் அங்கே தரித்திருப்பது புத்திசாலித்தனமாகப் படவில்லை. அப்படித் தங்கியிருந்தால் எல்லோருக்கும் அது ஆபத்தாக முடியும் என்பது எமக்குத் தெரியும். எனவே அங்கிருந்து வெளி யேறினோம்.

## கள் இறக்கும் தொழிலாளர்

இந்தியரிடம் இருந்து நாம் தப்பி ஓடிக் கொண்டிருந்துபோது கிடைத்த அனுபவங்களில், மனம் நிறைந்தவையும் இருந்தன. கசப்பானவையும் இருந்தன. யாழ்ப்பாண சமுதாய அமைப்பின் வெவ்வேறு மட்டங்களில் உள்ள மக்களைச் சந்திக்கும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது. வடமராட்சியின் இதயக் கிராமமான துன்னாலை என்ற புரதான கிராமம் ஒன்றிலே நாம் தங்கியிருக்க சென்றபோது, கள் இறக்கும் சமுதாய மக்களின் விருந்தோம்பலையும் தாராள குணத்தையும் சுகிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இந்தக் கூட்டுக் குடும்பத்தினர் விடுதலைப் புலிகளின் உறுதியான ஆதரவாளர்கள். ஒரு குடும்பச் சிற்றூர் என்று அவர்கள் வாழ்ந்த இடத்தைக் கூறலாம். அந்த வீடுகளில் ஒன்று இரண்டு அறைகள் கொண்டது. அவற்றின் வாயில்கள் ஒரு அகன்ற விறாந்தையோடு ஒட்டியவை. அடுக்களை, தனியான, சுத்தமான மண் குடிசை. இங்கேயே குடும்பப் பெண்கள் ஒன்றுகூடி, ஒற்றை விறகடுப்பில் உணவு சமைப்பார்கள். இரண்டு பெரிய மாமரங்கள் வீட்டுக்கு மேலே கிளைவிட்டு குளிர் நிழல் தந்து கொண்டிருந்தன. வளவுக்கு வெளியே பனங்காடு. அதனுள் அடர்ந்த முள்ளுப் பற்றைகள். வீட்டுச் சொந்தக்காரர் தாராள குணத்தோடு, தமது குடும்பத்தினரைத் தமது உறவினர் வீட்டுக்கு





அனுப்பி விட்டு, தமது வீட்டைத் தற்காலிகமாக நாம் தங்கியிருக்க வசதி செய்து தந்தார். அந்த உறவினர் வீடும் பின்புறத்திலேயே இருந்தது. ஓலையால் வேய்ந்த மண் குடிசை அது. பனை ஓலை வேலி ஒன்று இரண்டு வீடுகளையும் பிரித்தது. இந்த வீடு இருந்த வளவுக்குள் ஒரு பெரிய, திறந்த கிணறு இருந்தது.

குறித்த இந்தச் சமூக மக்கள், யாழ்ப்பாண சமுதாயக் கட்டமைப்பில் கள் இறக்கும் சாதியைச் சேர்ந்தவர்கள். தென்னம் பாளைகளிலிருந்தும், பனம் பாளைகளிலிருந்தும் வடிக்கப்படும் இயற்கையான மதுவே கள்ளாகும். மங்கலான இந்தத் திரவம் யாழ்ப்பாண ஆடவரிடையே பிரபலமானது. குறிப்பாக மதிய உணவின் போதும், மாலையிலும், மரத்திலிருந்து புதிதாக இறக்கப்பட்ட மறுகணமே அருந்தப் படுவது. இந்த மதுவுக்கு எந்த நேரமும் கிராக்கி இருக்கும். சில ஆடவர் இதன் கிரமமான வாடிக்கையாளர். பால் விநியோகம் போல, ஒவ்வொரு நாளும் புதிதாக இறக்கியதும், போத்தல்களில் அவர்க ளுடைய வீடுகளில் இது விநியோகிக்கப்படுவதும் உண்டு. ஆனால் பொதுவாக மதிய உணவு வேளைகளில் ஆண்களின் சைக்கிள் வண்டிகள் ஒரே பக்கத்தை நோக்கிச் செல்வதை காணலாம். நகரத்தின் எல்லையில் அல்லது யாரும் பயன்படுத்தப்படாத ஒரு காணியி ல் ஒழுங்காகக் கட்டப்படாத ஒரு கள்ளுக் கொட்டிலில், கள் விற்பனை நடக்கும். யாழ்ப்பாணம் பயணம் புரிபவர்கள், மதிய வேளையில் ஒரு கொட்டிலுக்கு அருகே நிறைய சைக்கிள்கள் நிறுத்தப்பட்டிருப்பதைக் கண்டால், அது கள்ளுக் கொட்டிலே என்று இலகுவாக ஊகிக்கலாம்.

இந்தக் குடும்பங்கள் கள் இறக்குவதோடும், கள் விற்பதோடும் மட்டும் நின்றுவிடவில்லை. பலதிற வளங்கள் நிறைந்த பனையோடு தொடர்புடைய பல்வேறு சிறிய குடிசைக் கைத்தொழில்களிலும் ஈடுபட்டுவந்தார்கள். குறிப்பிட்ட இந்தக் குடும்பத்தினர் முயற்சியும்; கடின உழைப்பும் கொண்டவர்கள். அவர்களுடைய பொருளாதார சுதந் திரத்தையும் கண்ணியத்தையும் பேண அவர்களுடைய வருவாய் போதுமானதாக இருந்தது. ஆனால் அவர்கள் பணக்காரரல்லர். பரிதாபம் என்னவென்றால், ஆற்றலும் கடின உழைப்பும் தற்பெருமையும் கொண்ட இந்த மக்கள், யாழ்ப்பாண சமூகக் கட்டமைப்பின் அடிமட்டத்தில் நிறுத்தப்பட்டிருந்தார்கள். இந்தியாவிலும், இலங்கையிலும் நான் வசித்த காலம் முழுவதிலும் சாதித்துவத்திற்கு எதிரான எனது அருவருப்பை என்னால் அமைதிப்படுத்த முடியவில்லை. பிறப்பினால் ஒரு மனிதரை ஒரு சாதிக்குள் தள்ளி விடும் சமுதாய அமைப்பானது காட்டு மிராண்டித்தனமானது. ஒடுக்குமுறை நிறைந்தது. யாழ்ப்பாண சமூகத்தின்

பொருளாதார சமூக வாழ்வில் இது பின்னிப் பிணைந்ததாயினும், சாத-
ியமைப்பானது, மனித உழைப்புக்குக் கண்ணியமும் மரியாதையும் வழங்கும் நவீன சிந்தனைக்கு முரணானது. யாழ்ப்பாண சமூகத்தை நான் கணிப்பிட்ட அளவில், அங்கு உயர் சாதி என்றும், தாழ்ந்த சாதி என்றும் வகுத்திருப்பது ஒரு போலியான அடிப்படையிலேயே என்பேன். கடுமையாக உழைத்து, தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளத் தக்கதும், வளமிக்கதும், சமூக உற்பத்தித்திறன் கொண்டதுமான ஒரு சமூகத்தை தாழ்ந்தது என்று கூறுவதில் என்ன நியா யம் இருக்கிறது. இந்தக் குடும்பத்துடன் நான் தங்கியிருந்தபோது, யாழ்ப்பாண சமுதாயத்தில் உள்ள பெருந்தொகை முரண்பாடுகள் பற்றி அறிந்து கொண்டேன். தம்மை உயர் சாதி என்று கூறிக் கொள்ளும் வெள்ளாள ஆண்கள், தம் அயலில் உள்ள கள்ளிறக்கும் வீடுகளுக்கு மாலையில் மறைவாகச் செல்வதை நான் கண்டுபிடித்தபோது, அது வேடிக்கை யாகவே இருந்தது. எனக்குள்ளேயே சிரித்துக் கொண்டேன். புளாவில் கள் அருந்தியபடியே, தாழ்ந்த சாதிப் பெண்களின் தீண்டப்படக்கூடாத கரங்களால், மீன் பொரியலையும், இறால் பொரியலையும் சுவைத்து மகிழ்வதில் பலமணிநேரம் அவர்கள் செலவிடுவார்கள். நல்ல தண்ணி போட்டதும், உயர்ந்த, தாழ்ந்த என்ற சமூகப் படிமுறைகள் காணாமல் போய்விடுகிறது என்பதை அறிந்த போது அது மனதுக்கு ஆறுதலாக இருந்தது. இத்தகைய வேளைகளில் அவர்கள் அன்றைய அரசியலை ஆராய்வதும் தனிச் சுவையாக இருக்கும். பொதுமக்களின் அபிப்பிராயம், மக்களின் சிந்தனையோட்டம், உணர்வுகள் ஆகியவை பற்றியே நேரடியான சமூக ஆய்வு அங்கே வெளியாகும். விவாதங்கள், கருத்துப் பரிமாறல்கள், வாய்ச் சண்டைகள், என்று பலதும் அலசப்படும். இந்திய அமைதி காப்பாளர்கள் பற்றியும் அவர்களுடைய அடாவடித்தனம் பற்றியுமே பெரிதாகப் பேசப்படும். ஆனால், கள் அருந்துபவர்களின் குடிகாரப் பேச்சாக இருந்தாலும், புலிப் போராளிகளுக்கு அதாவது பொடியளுக்கு பொதுவான அனுதாபம் இருந்தது. கள்வெறி ஏறிய பின், புலித் தலைமைக்கும் வசவு நடக்கும். எப்படியாயினும் நாம் அங்கு இருப்பதைப் பொருட்படுத்தாது அவர்கள் சுவையாக விவாதம் நடத்துவது, நாள்முழுவதும் சப்பென்றிருக்கும் எமக்குத் தென்பூட்டுவதாகவும் களிப்பூட்டுவதாகவும் இருக்கும். எம்மையே மறந்து இந்த உரையாடல்களைச் சுவைத்துக் கொண்டிருக்கும்போது ஒரு நாள், சில போராளிகள் ஓடிவந்து இந்திய காவல் உலாப் படையணி வருவது பற்றி எச்சரித்தனர். உடனடியாக நாம் எமது பைகளை அடுக்கிக் கொண்டு புறப்பட ஆயத்தமானோம். நாம் புறப்படும் வேளையில் வீட்டுக்காரர் ஓடி





வந்தார். எம்மை அவசரப்படவேண்டாம் என்றும், அஞ்ச வேண்டாம் என்றும் கூறினார். அங்கு வந்த படையினர், கள் கிடைக்கும் இடம் தேடி வந்திருக்கிறார்கள். வீட்டுக்காரரும் அவருடைய குடும்பத்தினரும் அந்தப் படையினருக்கு திருப்தி தரும் வகையில் கள் வழங்கிக் கொண்டிருக்கும்போது, நாம் முன்புறமாக விழிப்போடு காத்திருந்தோம். படையினர் தள்ளாடியபடி வெளியேறிய பின்னரே ஆறுதல் அடைந்தோம்.

இந்த மக்களிடையே நாம் சீவித்த நாட்களில், ஒரு சிறிய ஆனால் தர்ம சங்கடமான பிரச்சினை எழுந்தது. நாம் இருந்த வீட்டிலோ, அயலில் உள்ள வீடுகளிலோ கழிப்பிடம் கிடையாது. இந்தச் சமூகத்து மக்களுக்கு இது ஒரு பிரச்சினையாகப் படவில்லை. பனந் தோட்டத்துப் பற்றைகள் வேண்டிய மறைவிடம் வழங்குவதால், அவை அப்படியே விடப்பட்டிருந்தன. பாலாவுக்குக் கூட அது பிரச்சினையாக இருக்க வில்லை. அவர் தமது பிள்ளைப் பருவத்துக்குத் திரும்பியிருந்தார். எப்படி சமாளிப்பது என்பதும் அவருக்குத் தெரியும். எனக்கு, இது பெரிய பிரச்சினையாகவிருந்தது. எனது நிறமும் அனுகூலமாக இருக்கவில்லை. பற்றைகளின் பச்சைக் குழைகளினூடாக எனது வெள்ளை நிறம் வெளியே தெரியக் கூடியதாக இருந்தது. அந்தப் பக்கத்தால் போகிறவர்களுக்கு அது கண்ணைக்குத்தும் என்பது புரிந்தது. இதனால், பாலாவுக்கும் எனக்கும் இடையே இருந்த நெருக்கம் மீண்டும் உதவிக்கு வந்தது. ஒரேயொரு வழிதான் இருந்தது. விடிவதற்கு முன்னதாக, அதிகாலையில் எழுந்து, பற்றைக்குப் போகிறவர்களின் வரிசையை முந்திக் கொள்ள வேண்டும். பொதுவாக விடியுமுன்னரே பெண்கள் எழுந்து தம் காலைக்கடனை முடித்து பற்றைப்பக்கம் ஆண்கள் செல்ல இடமளிப்பார்கள். பயன்படுத்தப்படாத பற்றைக்குப் பின்னே ஆண்கள் சென்று குந்துவதற்கு முன், கிளைகளில் காத்திருக்கும் காகங்கள், கழிப்பிடத் துப்புரவு செய்து காலையாகாரம் முடித்து விடும். ஆகவே நானும் பாலாவும் காலை நான்கு மணிக்கே எழுந்து விடுவோம். மற்றவர்களும் அந்த நேரம் விழித்து விடுவார்கள். ஆனால் மரியாதையை ஒட்டி தூங்குவது போல பாசாங்கு செய்வார்கள். நான் உடனே பாலாவுக்கு தேனீர் தயாரிப்பேன். அவருக்கு ஒழுங்காகப் போக அது உதவும். இல்லாவிட்டால், வெளிச்சம் வந்த பின்னரும் அவர் பனங்கூடலுக்குப் போக வேண்டிய தேவை இருக்கும். பாலசிங்கம் பற்றைக்குள் போய்க் குந்துவது கிராம மக்களுக்கு பெரும் வேடிக்கையாக இருந்திருக்கும். ஆகவே, அப்படிக் காட்சியளிப்பதில் பாலாவுக்கும் ஆர்வம் இல்லை. தேனீர் பருகிய பின், நான் கிணற்றடிக்குச் சென்று சத்தம் இல்லாமல் ஒரு வாளி தண்ணீர் அள்ளுவேன்.

கழுவுவதற்கு நீர் தயாரானதும் பாலா ஒரு கையில் லாம்பையும் மறு கையில் ஆறு அடி நீளத் தடி ஒன்றையும் எடுப்பார். பாலா முன்னே செல்வார். ஒற்றையடிப்பாதையால், அடிக்கடி நிலத்தைத் தட்டியபடி செல்வார். நீர்வாழியைத் தூக்கியபடி நான் பின்னே செல்வேன். தரையில் ஏன் தடியால் தட்டவேண்டும் என்று கேட்டேன். அந்தப் பகுதியில் நிறைய நாக பாம்புகள் இருப்பதாகவும் தரையில் தட்டியபடி சென்றால், அவை விலகி, பற்றைக்குள் நழுவிவிடும் என்று அவர் விளக்கியபோது அது நல்ல முன்யோசனை என்று கருதினேன். சீறும் பாம்பு ஒன்று, என் மீது தனது நச்சுப் பல்லைப் பதிப்பதை நான் விரும்பவில்லை. எமது வீட்டிலிருந்து சிறிது தூரத்தில் நாம் குந்தக்கூடிய இடம் ஒன்றைக் கண்டு பிடித்தோம். அதன்பின், நான் ஒரு புறமும் பாலா மறுபுறமும் சென்று, விளக்கு ஒளி படக்கூடிய தூரத்தில் குந்துவோம். இது ஒரு திருப்தியான ஏற்பாடு அல்ல. ஆனால் என்னுள் ஊறிய பழக்கம் எனக்குத் திருப்தி தராதிருப்பதை உணர முடிந்தது. என்றாலும் எமது காலைக்கடனை முடித்துக் கொண்டு, தரையில் தடியால் தட்டியபடி திரும்பிச் செல்லும்போது, இதே அலுவலுக்காக வந்து கொண்டிருக்கும் சில பெண்களைக் கடந்து வீட்டுக்குத் திரும்புவோம்.

பாதுகாப்பான புதிய வீடொன்றுக்குச் சென்றவுடன், முதல் வேலையாக, ஒளித்திருக்கும் இடம் தேடுவதையும், தப்பி ஓடும் பாதை தேடுவதையும் வழமையாகக் கொள்ள அனுபவம் பாடம் கற்பித்திருந்தது. ஆனால் இந்தப் பகுதியில் ஓடி ஒளிப்பதற்கு அதிகம் வசதிகள் இருக்கவில்லை. அங்கே ஒரு மயானமும், அதில் சில புதைகுழிகளும் இருந்தன. நடுகல் நடுவதற்காகத் தோண்டிய இடத்தின் அருகே சிறிய குழிகளும் இருந்தன. தேவை ஏற்பட்டால், இந்தக் குழிகளில் எம்முள் ஒருவராவது பதுங்கி இருக்கலாம் என்று எண்ணினேன். பழுதடைந்த அந்த மயானத்துக்கு அருகே படையினர் வரமாட்டார்கள் என்று உறுதியாக நம்பினேன். ஆனால் இப்படியான ஓர் இடத்தில் ஒளிந்து மறைய வேண்டிய தேவை எனக்கு ஏற்படவில்லை என்பதே நிம்மதி.

இந்த மக்களோடு நாம் வசித்தவரை, இந்திய இராணுவத் தலையீட்டால் எமக்குத் தொந்தரவு அதிகம் இருக்கவில்லை. ஆனால் நாம் விலகிச் சென்றபின், அந்தக் குடும்பத்துக்குப் பெரும் உபத்திரவம் ஏற்பட்டிருக்கிறது. அந்த விபரம் பின்னர் பார்க்கலாம். எப்படியாயினும், 1990 இலே நாம் யாழ்ப்பாணம் திரும்பிய பின்னர், நன்றி கூறுவதற்காக இந்த வீட்டாரை நாம் மீண்டும் தரிசித்தோம்.





## நெருக்கடி நிறைந்த நாட்கள்

இந்தியப் படையினர் விடுதலைப் புலிப் போராளிகளுக்கு எதிராக வடமராட்சியில் மேற்கொண்ட இராணுவ நடடிக்கைகள் வெற்றியை அளிக்கவில்லை. போராளிகள் மத்தியில் பெருமளவு உயிர்ச் சேதங்களும் ஏற்படவில்லை. சுற்றி வளைப்புகளின்போது சில போராளிகள் கொல்லப்பட்டார்கள். சிலர் கைதாகி காவலிலிடப் பட்டார்கள். ஆனால் புலிகளின் பாதுகாப்பான மறைவிடங்களில் இருந்து அவர்களை விரட்ட, படையினரால் முடியவில்லை. ஆயுதங்களைக் களைய வந்தவர்கள், கெரில்லாப் போராளிகளுக்கு எதிராக பெரிய கிளர்ச்சி எதிர்ப்பு நடவடிக்கை முயற்சியில் ஈடுபட நேர்ந்தது. ஆனால், போராளிகளோ, மாவோவின் உவமானப்படி, மக்கள் கடலோடு கலந்த மீன்கள் போல இருந்ததால், இராணுவத்தினரின் நடவடிக்கை பிசு பிசுத்துப் போனது. விடாப் பிடியாகத் தேடுதல் நடத்திய இந்தியரிடமிருந்து புலிகள் நழுவுவதில் வெற்றி கண்டார்கள் என்றால், வடமராட்சி மக்களின் விடுதலைப் பற்றும், துணிச்சலுமே, அந்த வெற்றிக்குக் காரணம் என்று கூறலாம். தப்பியோடும் விடுதலைப் புலிப் போராளிகளுக்குப் புகலிடம் அளித்ததாலும், படையினரின் நடமாட்டம் பற்றித் தாமாகவே முன்வந்து தகவல் கூறியதாலும், தங்கள் உயிரை அர்ப்பணித்த எண்ணற்ற பொதுமக்களை நோக்கி நாம் கரம் கூப்பவேண்டும். அவர்கள் தன்னலமற்ற துணிச்சல் மிக்க செயல்களில் ஈடுபட்டமையாலும், போராட்டத்தில் கலந்து கொண்டமையாலும் பல உயிர்கள் காப்பாற்றப்பட்டன. அதே போல, எமது போராளிகளுக்கு உதவி புரிந்தமைக்காக கைது செய்யப்பட்டு தடுப்புக்காவலில் துன்பம் அனுபவித்த பொதுமக்கள், அவமானத்துக்கும், சித்திரவதைக்கும் உட்படுத்தப்பட்ட போதிலும், வியக்கத்தக்க வகையில் மனோ வலிமையோடு அனைத்தையும் சகித்துக் கொண்டார்கள். இந்தியரைப் பொறுத்த வரையில், குற்றமற்ற பொது மக்கள் மீது, பயங்கரவாதத்தைக் கட்டவிழ்த்து விடுவதிலேயே அவர்கள் வெற்றி பெற்றார்கள். இந்தியப் படைகள் இரவு வேளைகளில் தமது நடவடிக்கைகளை விரிவாக்கம் செய்ய முற்பட்டபோதே அவர்களுடைய கொடூரம் உச்சத்தைத் தொட்டது.

இந்திய-விடுதலைப் புலிகள் போர் தொடங்கிய காலத்தில் இருந்தே, மாலை ஆறு மணியில் இருந்து பன்னிரெண்டு மணி நேர ஊரடங்கு பிறப்பிக்கப்பட்டதால், வடமராட்சிப் பகுதி செயலிழந்து போனது என்றே கூறலாம். விடுதலைப் புலிப் போராளிகளும் எம்மைப்

போன்றவர்களும் ஓரிடத்தில் இருந்து வேறொரு இடத்திற்கு இரவில் செல்வதைத் ஒதுக்கினால், அந்தப் பகுதி முழுவதும் மயான அமைதியே இரவில் நிலவியது எனலாம். எமது போராளிகளை இந்தியப் படையினர் இனம் காண்பதற்கு இரவு ஊரடங்கு அவர்களுக்கு உதவியாக இருந்தது. எவராவது ஊரடங்கை மீறினால், அவர்கள் விடுதலைப் புலிப் போராளிகள் என்று இந்தியர் முடிவு செய்தனர். எனவே விடுதலைப் புலிகளுக்கு எதிரான பெரிய நடவடிக்கைகளை அவர்கள் நடத்தும் போது இரவு வேளைகளையே தேர்ந்தெடுத்தார்கள். இது, மக்களுக்குப் பெரும் தொந்தரவாகியது. பெருந்தேடுதல் வேட்டை நடத்திக் கொண்டு, இந்தியப் படைகள் தங்கள் வீடுகளுக்குள் திடீரென நுழையலாம் என்ற அச்சத்தில், இரவிலேயே நிம்மதியாகத் தூங்குவது மக்களுக்கு இயலாது போயிற்று. சூழ்ச்சி நோக்கத்தோடு இரவுக் காவல் உலாக்களையும் இந்தியர் அதிகரித்தனர். படையினர் எங்கே இருக்கிறார்கள் என்றோ, எங்கே தலைகாட்டுவார்கள் என்றோ எவராலும் அனுமானிக்க முடியவில்லை. ஆனால் இரவிலே படையினரின் நடமாட்டத்தை மோப்பம் பிடிப்பதற்கான வழி, எதிர்பாராத கோணத்தி லிருந்து கிடைத்தது.

எமது போராளிகள், தமது மறைவிடங்களில் முடியுமான அளவு நோட்டக் காவலை அதிகரித்திருந்தார்கள். அனாலும், மனிதனின் மிருக நண்பனான நாய் புரியும் உதவிக்கும் இரவுப் பாதுகாப்பிற்கும் நிகராக எதுவும் இல்லை எனலாம். வடமராட்சியில் இருந்த பெருந்தொகையான வீட்டு நாய்களும் தெரு நாய்களுமே, எதிர்பாராத அளவிலும் நம்பிக்கை தரும் வகையிலும், அந்தப் பிரதேசத்தில் மிகச் சிறந்த எச்சரிக்கை யையும் பாதுகாப்பையும் வழங்கின. இருளின் போர்வையில் எமது போராளிகள் நகரும்போது, கிராமத்து நாய்கள் அவ்வளவு பலமாக குரைப்பதில்லை என்பதை அவதானித்தோம். அதே சமயம் பெருந்தொகை இந்தியப் படையினர் தங்களுடைய சப்பாத்துக்களை அடித்து நடக்கும்போது, வயிற்றைப் பிடுங்குவது போல நாய்கள் உரத்துக் குரைக்கும். உலா செல்லும் படையினரை அதுவே காட்டிக் கொடுத்துவிடும். நாய்கள் குரைக்கும் சத்தத்தின் அளவை வைத்துக் கொண்டு, எமது முகாமுக்கு எவ்வளவு அருகில் படையினர் இருக்கிறார்கள் என்பதை ஊகித்து விடுவோம். எத்தனையோ இரவுகள் விழித்தபடியே படுத்திருந்து நாய்குரைப்பின் ஒலி ஏற்ற இறக்க வேறுபாடுகளுக்கேற்ப, படையின் நகர்வை அனுமானித்துக் கொண்ட தருணங்களில், அந்த விசுவாசமுள்ள பிராணிகளுக்கு மனதார நன்றி கூறிக் கொண்டேன்.





புலிப் போராளிகளுக்கு எதிராக இந்தியப் படைகள் நடத்திய இராணுவ நடவடிக்கைகளில், காவல் உலாவோடு மட்டும் அவர்கள் நிறுத்திக் கொள்ளவில்லை. எண்ணிக்கையில் கூடுதலான புலிகளை அவர்கள் சிக்க வைக்க விரும்பினார்கள். எனவே தங்கள் இரவு நடவடிக்கைகளை விரிவு படுத்தினார்கள். வீதிகளின் அருகே குழிகளிலும், ஒழுங்கைகளிலும், பாலங்களின் கீழும் பதுங்கிக் காத்திருந்தார்கள். கூடுதலான புலிகளைப் பிடிக்க வேண்டும் என்ற வெறியே இதற்குக் காரணம். இந்த அணுகுமுறையை அவர்கள் கடைப்பிடிக்கத் தொடங்கியதால், இரவில் நாம் நடமாடுவது கடின மாயிற்று. இராணுவத்தின் எதிர்பாராத இந்த அதிரடி முறை தொடக்கத்தில் அவர்களுக்கு பலனைக் கொடுத்தது. இரவிலே இந்தியப் படையினர் பதுங்கி இருக்கிறார்கள் என்பது பரவலாகத் தெரியும் வரை, சந்தேகப்படாத பொது மக்கள் ஒழுங்கைகளில் ஆபத்து இராது என்ற நம்பிக்கையில் இரவிலே நடமாடப் புறப்பட்டு, புலிப் போராளிகள் என்ற சந்தேகத்தில் கைதாகி, அடிவாங்கி, அமைதிப் படையினரால் தடுப்புக் காவலிலும் இடப்பட்டார்கள். ஆனால் படையினரின் இந்த இரவு நடவடிக்கை தீவிரம் அடைந்து, பலர் கைதாகியபோது, வாழ்வா சாவா என்ற போராட்டத்துக்குள் எம்மையும் தள்ளியது.

போராளிகளுக்கான இந்தியரின் வேட்டை தனது இறுதி அத்தி யாயத்தை அடையும் கட்டம் வந்தபோது, இந்தியப் படையினரால், வடமராட்சி மக்கள் கணிசமான அளவு அச்சுறுத்தப்பட்டிருந்தார்கள். குறித்த ஒரு பகுதியில், நாம் இருப்பது தெரிந்தால், அங்குள்ள மக்களுக்கு எத்தகைய தண்டனை கிடைக்கும் என்றும், அவர்கள் கவன- மாக இருக்க வேண்டும் என்று மிரட்டியும் இருந்தார்கள். எனவே, ஒரு பகுதியில் நாம் இருப்பது தெரிந்ததும் அங்குள்ள மக்கள் அஞ்சினார்கள். ஒரு தடவை ஒரு சிறிய கிராமத்தில் ஒரு வீட்டில் அவசர அவசரமாக நாம் புகலிடம் நாட நேர்ந்தபோது, அங்குள்ள மக்களின் அச்சம் வெளிப்படையாகத் தெரிந்தது. மக்களின் அமைதியைக் கெடுத்து, அச்ச உணர்வைத் தூண்டுவதற்கு நாம் காலாக இருக்கிறோம் என்பது எனது மனச்சாட்சியை உறுத்தியது. நாம் தங்கள் கிராமத்தில் தங்கியிருப்பதாக ஒரு கிராம மக்கள் அறிந்தபோது, இந்திய இராணுவத்தின் கொடூரமான பழிவாங்கலுக்கு அஞ்சி அந்தக் கிராமம் முழுவதுமே அங்கிருந்து வெளியேறியபோது, அதற்கு நாம் முகம் கொடுக்க வேண்டியதாயிற்று. மக்களின்றி, கிராமமே வெறுமையாகியபோது, அதுவே இராணுவத்தை விழிப்படையச் செய்திருக்கும் என்று எதிர்பார்த்தோம். எமது முகாம் சுற்றி வளைக்கப்படலாம் என்ற எண்ணத்தோடு, இரவு முழுவதும்

விழித்திருந்தோம். படையினர் வந்துவிடலாம் என்ற எதிர்பார்ப்பு ஒரு புறம். மக்களுக்கு இவ்வளவு அசௌகரியம் ஏற்படுத்திவிட்டோமே என்ற அங்கலாய்ப்பு மறுபுறம். எனவே அந்த வீட்டில் இனியும் இருக்க முடியாது என்று உணர்ந்தோம். வெள்ளைக்காரியாக நான் இருப்பதால் மக்களுக்கு எவ்வளவு ஆபத்து ஏற்படுத்துகிறேன் என்ற உண்மையையும் இந்த அனுபவம் எனக்கு உணர்த்தியது. வேறு எந்தப் போராளியும் எவராலும் சந்தேகிக்கப்படாது, வடமராட்சியில் எந்தப் பகுதியிலும் இலகுவாக நடமாட முடியும். ஆனால் எனது நிறம், எமது குழு முழுவதையுமே ஆபத்துக்கு உள்ளாக்கிக் கொண்டிருந்தது. நிறத்தை மறைக்க அரிதாரம் பூசலாமா அல்லது குறைந்தபட்ச நிறம் மட்டும் வெளியே தெரியக் கூடிய வண்ண ஆடை புனையலாமா என்று சிந்தித்தேன். ஓரளவு முஸ்லிம் வடிவில் அமையக்கூடியதாக போர்வையால் போர்த்தி எனது பாதங்கள் தெரியாவண்ணம் காலுறை அணிந்தால் யாரும் என்னை அடையாளம் காணமாட்டார்கள் என்று கருதினேன். நோயாளிகள் உடலைக் கதகதப்பாக வைத்திருப்பதற்காக இப்படி ஆடை அணிவது வழக்கம். ஆகவே யாரும் கவனிக் மாட்டார்கள் என்றும் நினைத்தேன். வண்ணப் போர்வை ஒன்றால், என்னை முடிந்த வரை மறைத்துக் கொண்டு, அதிகாலை நான்கு மணியளவில் அந்தக் கிராமத்தை விட்டு வெளியேறினோம். பல மணி நேரத்துக்குப் பின், கிராமம் பலமாகச் சுற்றி வளைக்கப்பட்டு, கடும் தேடுதலும் அங்கு நடந்தது.

எமக்கான தேடுதல் வேட்டை ஓய்வதாக இல்லை. நாமும் தொடர்ந்து நகர்ந்தபடியே இருந்தோம். சில தருணங்களில், சில மணிநேரமே ஒரு இடத்தில் தரித்தோம். எவ்வளவு நெருக்குவாரம் இருந்தபோதும், இந்திய-இலங்கை ஒப்பந்தம் தொடர்பாக அறிவுறுத்தல் ஒன்றை பொதுமக்களுக்கு எழுத வேண்டும் என்று பாலா உந்தப்பட்டார். பாதுகாப்பான வீடொன்றை அடைந்ததும், வெள்ளைத்தாளையும் பேனாவையும் எடுத்து, மங்கலான லாம்பு வெளிச்சத்தில் சிரமப்பட்டபடி, ஒப்பந்தம் பற்றிய கருத்தாய்வு ஒன்றைத் தமிழில் எழுதத் தொடங்கினார். எழுதி முடித்ததும், அச்சடிப்பதற்காக அது அனுப்பப்பட்டது. அச்சடித்து வரும்வரை காத்திருந்தபோது, கரணவாயில், எமக்கு முன்பு அடைக்கலம் தந்த மூன்று பிள்ளைகளின் தாயுடைய வீட்டுக்குச் சென்றோம். இரவு எட்டுமணிபோல, சுக்ளா, ஒப்பந்தம் பற்றிய அந்த அச்சடித்த கட்டுரையைப் பெற்றுவர, எமது பாதுகாப்பான வீட்டில் இருந்து புறப்பட்டுச் சென்றார். நம்பிக்கைக்குரிய அவர் வீட்டுக்குத் திரும்பி வரமாட்டார் என்பதை நாம் அப்போது உணரவில்லை.





**நெருக்கமான சுற்றிவளைப்புகள்**

படையினர் தம் சுற்றிவளைப்பு நடவடிக்கைகளை அந்தப் பகுதியில் அதிகரித்து விட்டார்கள் என்றும், ஒழுங்கைகளிலும் வீதிகளிலும் இரவு பகலாகக் காவல் உலாவை நடத்திக் கொண்டிருக் கிறார்கள் என்றும் எமக்குத் தகவல் கிடைத்தது. பேராபத்தான நிலை உருவாகிவிட்டிருந்தது. இருப்பினும், இரவில் நகர்வதைக் காட்டிலும், பகலில் வெளியேறுவதில் ஆபத்து அதிகம் என்று சுக்ளா கருதினார். அதே சமயம் அந்த வட்டாரம் தமக்கு நன்கு பரிச்சயமானது என்பதால், தாம் கைதுசெய்யப்படுவதைத் தவிர்த்து விடலாம் என்பது அவர் எண்ணம். ஒப்பந்தம் தொடர்பாக எழுதப்பட்ட கட்டுரையைத் தட்டச்சளாரிடமிருந்து பெற்றுவர அவர் தீர்மானித்தார். கட்டுரையோடு அவர் மிக விரைவிலேயே திரும்பி விடுவார் என்று எதிர்பார்த்தோம். கவன-மாக இருக்கும்படியும் அனாவசிய ஆபத்தை விலைக்கு வாங்கக் கூடாது என்றும் அறிவுரை கூறி அவரை அனுப்பி வைத்தோம். ஆபத்து அதி-கரித்துக் கொண்டிருக்கும் அந்த நெருக்கடியான சூழலில், அவர் இருளில் கரைந்தார். ஆபத்தான அந்த வேளையில் அவர் செல்வதை நாம் யாரும் விரும்பவில்லை. அந்தப் பகுதியைப் பற்றியும், பாதுகாப்பான வீடுகள் பற்றியும் எம்மிடையே நன்கு அறிந்தவர் சுக்ளாவே. அன்றிரவு அவர் வெளியே செல்லக்கூடாது என்று நாம் அஞ்சியது சரியே என்பது பின்னர் தெரிய வந்தது. இரவு கழிந்து கொண்டே இருந்தது. சுக்ளா வரவேயில்லை. பொதுவாக அவர் இவ்வளவு சுணங்குவதில்லை. அவர் பாதுகாப்பாக இருப்பாரா என்ற அச்சம் அதிகரித்தது. நேரம் செல்லச் செல்ல கவலை அதிகரித்தது. சுக்ளாவின் நிலை என்ன என்பது தெரி யாத நிலையில், எம்மோடு இருந்த போராளிகளில் ஒருவரான ஆனந்த், நிலைமையை அறிந்து வருவதற்காக இருட்டுக்குள் பாய்ந்தார். ஆனந்தும், திரும்பி வராததால், கிலேசம் அதிகரித்தது. ஏதோ நேர்ந்து விட்டது என்ற உணர்வு மேம்பட்டது. ஒரேயொரு மன ஆறுதல் என்னவென்றால் துப்பாக்கி வேட்டு எதுவும் கேட்கவில்லை. ஆகவே அவர்கள் இன்னமும் உயிரோடு இருக்கிறார்கள் என்ற நம்பிக்கை. ஆனால் அவர்கள் காணாமற் போய்விட்டதால், என்ன நடந்திருக்கலாம் என்ற ஊகங்களும் பெருகின. நாம் இனி என்ன செய்யலாம். ஏதோ தாமதம், விரைவில் வந்து விடுவார்கள் என்று நினைத்தோம். வேறு யாராவது அவர்களைத் தேடிப் போகலாமா? அவர்கள் பிடிபட்டிருந்தால், அருகே வேறு போராளிகள் ஒளிந்திருக்கிறார்களோ என்ற எதிர்பார்ப்பில் படையினர் அந்தப் பகுதியைச் சுற்றி வளைக்கத் தொடங்குவார்களா?

இப்படியெல்லாம் கேள்விகள் கிளர்ந்தன. அடுத்த முக்கிய பிரச்சினை என்னவென்றால், இந்த வீட்டை விட்டு வெளியேறும் போது நாம் அடுத்து எங்கே செல்வது என்பதாகும். சுக்ளா ஒருவருக்கு நாம் எங்கே போவது என்பது தெரியும். இந்தச் சிந்தனைகள் எம்மைக் குழப்பின. வெளியே நிலவிய இருளைப் போல வீட்டுக்கு உள்ள எமது மனங்களும் குழம்பிப்போய் இருந்தன. திடீரென்று, வானத்து மின்னல் போல ஆனந்த் வீட்டுக்கள் வந்து இறங்கினார். அவரில் அச்சம் தெரிந்தது. பைகளை அடுக்குமாறு சைகை காட்டியபடி, வெளியே உள்ள நிலைமை பற்றியும், சுக்ளா பற்றியும் தடுமாறியபடியே விளக்கினார். எல்லா இடமும் இந்தியப் படையினர் பதுங்குத் தாக்குதலில் பிடிபட்ட சுக்ளா, வீட்டுக்கு அருகிலேயே கட்டப்பட்டு கைதியாகக் கிடக்கிறார். பொதுமக்களும் பிடிபட் டிருக்கிறார்கள். பதுங்கியிருந்த படையினர் ஆனந்தையும் கைது செய்திருக்கிறார்கள். படையினர் தாம் கைது செய்த மக்களை கூட்டமாகச் சேர்த்து கட்டி உட்கார வைத்திருக்கிறார்கள். வைத்திருந்த இடத்தில் சுக்ளாவை ஆனந்த் சந்தித்திருக்கிறார். அவர்கள் எல்லோரு மாகத் திட்டமிட்டு ஆனந்தைத் தப்பிச் சென்று ஆபத்து நிலை பற்றி எம்மை எச்சரிக்குமாறு அனுப்பியிருக்கிறார்கள். இந்தியப் படையினர் அதிகம் விழிப்பாக இராதது எமது அதிர்ஷ்டமாயிற்று. மெதுவாகத் தம்மைக் கட்டிய கயிற்றைத் தளர்த்திக் கொண்டு, காவலர்களின் கவனம் கைதிகளில் இருந்து வேறு பக்கம் திரும்பிய வாய்ப்பை பயன்படுத்தி, எம்மை எச்சரிப்பதற்காக பாய்ந்தோடி வீட்டுக்கு வந்திருக்கிறார். இந்தியர்கள் தமக்கு பின்னே வந்து கொண்டி ருப்பதாகவும் அவர் நம்பினார்.

வீட்டிலிருந்து வெளியேறுமாறு எமது முதல் உள்ளுணர்வு கூறியது. பாலாவின் இன்சுலின் பையைக் கையில் எடுத்தேன். செருப்பை மாட்டினோம். இருளில் பாயந்தோம். இரண்டு குழுக்களாகப் பிரிந்து, சிலராவது உயிர் தப்புவோம் என்ற நம்பிக்கையோடு எதிரெதிர் பக்கம் நழுவினோம். இருளில் தடவித் தடவிச் சென்றோம். எங்கே இருக்கிறோம் என்பதோ, எங்கே போகப் போகிறோம் என்பதோ தெரியவில்லை. சிறிது தூரம் நடந்து சுத்தமான காற்றை சுவாசித்த பின், சிந்தனை உணர்வும் தெளிவடைந்தது. தெளிவில்லாமல் வெறுமே இருட்டில் உழல்வதால் நிலைமை மேலும் மோசமாகும் என்பது தெளிவாகியது. ஒழுங்கைகள் வழியாகத் தொடர்ந்து செல்வோமே என்றால், எந்த இந்தியப் படையினரைத் தவிர்க்க விரும்புகிறோமோ, அதே படையினரின் கரங்களில் சிக்குவோம் என்பதும் உறுதியாகத் தெரிந்தது, ஆகவே முதலில் ஒழுங்கைகளைத் தவிர்க்கத் தீர்மானித்தோம். உடனடியாகவே





ஒரு வேலியால் பாய்ந்து, காய்கறித் தோட்டம் ஒன்றுக்குள் நுழைந்தோம். மிளகாய் கன்றுகளுக்கு மத்தியில் அமர்ந்து எமது நிலைமையைப் பரிசீலனை செய்தோம். எங்கும் படையினர் இருந்தனர். எங்கே போவது என்பது எமக்குத் தெரியாது. சுக்ளாவும் அகப்பட்டு விட்டார். என்ன செய்யலாம் என்பதை அமைதியாக உட்கார்ந்து எடை போட்டோம். திடீரென்று, தூரத்தில் யாரோ முணுமுணுப்பது எனது காதில் விழுந்தது. சத்தமில்லாமல் அப்படியே உறையுமாறு மற்றவர்களுக்கு உணர்த தினேன். தூரத்தில் யாரோ பேசும் ஒலி எனக்குக் கேட்டது. பேச்சு ஒலி அருகே வர, எல்லோரையும் தரையிலே படுத்துவிடுமாறு சைகையால் காட்டினேன். கீழே படுத்து, மிளகாய் மரங்களூடாக எம்மை எவரும் காணமாட்டார்கள் என்று நினைத்துக் கொண்டோம். ஹிந்தி மொழியில் பேசுவது உரத்துக் கேட்டது. சப்பாத்துக் காலடியும் காதில் கனமாக விழுந்தது, மூச்சை அடக்கிக் கொண்டோம். பீதியால் உறைந்து போன எங்கள் உடல்களின் மேலே நட்சத்திரங்களின் மங்கலான ஒளி படர்ந்திருந்தது. படையினரின் காவல் அணியினர் சில அடி தூரத்தின் இருந்த எம்மைக் கடந்து சென்று கரைந்து போய்விட்டார்கள். அதிர்ஷ்டம் எம் பக்கம்! படையினரும் கெட்டித்தனம் அற்றவர்களாக இருந்தார்கள். தெருவின் கரையோரங்களை அவர்கள் நன்றாகப் பார்க்கவில்லை. எழுந்து உட்கார்ந்து ஆழமான மூச்சை உள்ளிளுத்தோம். நாம் நூலிழையில் உயிர் தப்பியிருப்பதை உணர்ந்தோம். பாலாவும் ஏனையவர்களும் நட்சத்திர வெளிச்சத்தில் அடையாளம் தெரியக் கூடிய தங்கள் மேற்சட்டைகளைக் கழற்றினார்கள். அதன் பின்னரும் சிறிது காத்திருந்தோம். சில நிமிடங்களில் மீண்டும் பேச்சொலியும் படையினர் வருவதும் கேட்டது. அதே காவல் உலா அணி எமது பக்கமாக திரும்பி வந்து கொண்டிருந்தது. முதல் செய்தது போல, எம்மைக் கடந்து சென்றார்கள். தூரத்தில் ஒரு துப்பாக்கி வேட்டுக் கேட்டது. பாவம், யார் மீது குறி தைத்ததோ தெரியவில்லை.

நாம் அங்கு அப்படியே இருக்க முடியாது என்பதை உணர்ந்தோம். விடிந்து விட்டால், படையினரின் துப்பாக்கி இலக்குக்கு உள்ளாவோம். தோட்டத்துக்கு அப்பால் தூரத்தில் ஓர் ஒளி தெரிந்தது. அது நம்பிக்கை ஒளிக்கீற்றையும் தந்தது. போராளி ஒருவருக்கு அந்தப் பகுதி பரிச்சயமாகத் தோன்றியது. ஆனால் அங்கே போவதற்கு திறந்த வெளியைக் கடக்க வேண்டும். எமக்கு வேறு வழி இல்லாததால், அங்கே செல்லத் தீர்மானித்தோம். உழுதிருந்த வயல் ஊடாக மண் கட்டிகளில் தடக்கி விழுந்து பதுங்கியபடியே நகர்ந்தோம். சில யார் தூரமே ஒரு

மைல் போலப் பட்டது. நல்ல காலம், அந்த வயலையும் அதன் சொந்தக்காரரையும் எமக்குத் தெரியும். இரவை அங்கேயே கழித்தோம்.

பகல் ஒளியில் ரதி வீட்டுக்குத் திரும்பிச் சென்றோம். ஆனால் அங்கே நீண்ட நேரம் தரிக்க முடியவில்லை. தேடுதல் வேட்டை முழுமூச்சாக நடந்து கொண்டிருந்தது. மாலை ஆறு மணியளவில் பீதியடைந்த மக்கள் 'ஆமி', 'ஆமி' என்று உரத்துக் கத்துவது ஊரெங்கும் எதிரொலித்து எல்லோருக்கும் எச்சரிக்கை கொடுத்தது. ரதியின் வீடும் சோதனைக்கு உள்ளாகும் என்பது எமக்குத் தெரியாது. தாம் தேடுபவர்கள் எங்கே ஒளிந்திருப்பார்கள் என்று தமக்குத் தெரிந்த இடங்களில் படையினர் கவனமாகத் தேடுதல் நடத்திக் கொண்டிருந்தார்கள்.

எமது மெய்க்காவல் போராளியான கிங்ஸ்லி சைக்கிளில் தாவ, பாலா முன் தண்டு இருக்கையில் அமர அவர்கள் பாய்ந்தார்கள். அடுத் சைக்கிளில் எனக்கு இருக்கை. போராளிகள் தம்பாட்டில் கொண்டு சென்ற இடத்துக்குப் போய்க் கொண்டிருந்தோம். அந்த நேரம், பின்னால் உள்ள படையினருக்கு நான் அஞ்சவில்லை. படையினரிடமிருந்து கடும் வேகத்தில் ஒழுங்கைகளால் ஓடிக் கொண்டிருக்கும்போது, எமக்கு முன்னே போய்க்கொண்டிருக்கும் பாலாவின் சைக்கிளை பிடித்துவிட வேண்டும் என்பதே எனது ஒரே தவிப்பாக இருந்தது.

அதே வேளை, வடமராட்சியில் எமக்குப் பாதுகாப்பு வழங்கிய அத்தனை வீடுகளும் அடுக்காக சோதனையிடப்பட்டன. நாம் வெளி யேறிய பின் ரதியின் வீட்டைப் படையினர் மொய்த்தார்கள். ஆனாலும், தமது பிள்ளைகளைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஒரு தாய்க்குரிய மன உறுதியும், கடினமான உலகுக்கு முகம் கொடுத்து வந்த பல்லாண்டு அனுபவமும் அவரை வேகமாச் சிந்திக்க வைத்தது. சித்திரவதைப் பழிவாங்கலில் இருந்து தப்பும் வண்ணம் நடந்து கொண்டார். கடும் எச்சரிக்கையோடு அவரை விட்டதால், அவருக்கோ அவருடைய பிள்ளைகளுக்கோ, பாதகம் எதுவும் நேரவில்லை. ஆனால் துன்னாலை யில் இருந்த கள் இறக்கும் குடும்பத்தினருக்கு, பாவம் அதிர்ஷ்டம் இருக்கவில்லை. அவர்களுடைய வட்டாரம் கடுமையாக சுற்றி வளைக்கப்பட்டு, அவர்கள் வீடுகளுக்குள் வெறி கொண்டு படையினர் நுழைந்தார்கள். அந்தக் குடும்பம் புகலிடம் வழங்கியதற்கு ஆதாரம் தேடினார்கள். அந்த வீட்டாரின் இளம் வயது மகனே படையினரின் தாக்குதலுக்கு முதலில் இலக்காவார் என்ற எதிர்பார்ப்பில், படையினர் வீட்டுக்குள் வருவதற்கு முன்னதாக அந்த இளைஞனை ஒளித்துக் கொள்ளுமாறு அவருடைய பெற்றோர் அனுப்பி விட்டார்கள். அவர் அங்கிருந்து தப்பி ஓடியதால், கைது செய்யப்படவில்லை.





பெண்களையும் வீட்டையும் காப்பாற்ற வேண்டும் என்ற பொறுப் புணர்வோடு தந்தை வீட்டில் இருந்திருக்கிறார். படையினர் வீட்டை முற்றுகை இட்டபோது அவரே பழிவாங்கப்பட்டார். நாம் தரித்திருந்ததற்கு எந்த வித ஆதாரத்தையும் வீட்டுத் தேடலில் பெறமுடியாததால், தங்கள் ஆத்திரத்தையும் எரிச்சலையும் வீட்டுச் சொந்தக்காரர் மீதே படையினர் கட்டவிழ்த்து விட்டனர். அங்கேயே அவரைக் கடுமையாகத் தாக்கிவிட்டு, அண்மையில் இருந்த படை முகாமுக்கு அவரை நடத்திச் சென்று அங்கே சித்திரவதை செய்திக்கிறார்கள். குற்றமற்ற அந்த மனிதர் தடுப்புக் காவலில் இடப்பட்டு, ஆறு மாதம் கழித்தே விடுதலை செய்யப்பட்டார். இரண்டு பெண்களால் தலைமை தாங்கி நடத்தப்படுவது பற்றி முன்னரே குறிப்பிட்ட மூன்று பிள்ளைகள் உள்ள பரம்பரை வீட்டையும் படையினர் முற்றுகையிட்டிருக்கிறார்கள். அந்தப் பெண்கள் எத்தகைய பழி வாங்கலுக்கு உள்ளாக்கப்பட்டார்கள் என்பதை என்னால் என்றுமே அறிந்து கொள்ள முடியவில்லை. ஆரம்ப காலத்தில் காயமடைந்த போராளிகளுடன் நாம் தங்கியிருந்த கலட்டி வீடு, இந்திய இராணுவ முகாமாக மாறியிருந்தது. வடமராட்சி முழுவதும் இதுவே நடந்தது. எமது பாதுகாப்பான வீடுகளில் ஒன்று தவிர ஏனைய அனைத்தும் ஒன்றில் ஆக்கிரமிக்கப்பட்டன அல்லது தேடுதலுக்கு உள்ளாக்கப்பட்டன.

## மரணத்தை எதிர்கொண்டோம்

கரவெட்டியிலிருந்து எமது மெய்க் காவலராக வந்த கிங்ஸ்லி, தமது பெற்றோரின் வீட்டுக்கு முன்னே இருந்த மருத்துவரின் வீட்டுக்கு எம்மைத் திரும்பவும் கொண்டு சென்றார். பின் இரவில் போய்ச் சேர்ந்தோம். அந்தப் பகுதி அமைதியாக இருந்தது. நாம் அடிக்கடி சென்று கொண்டிருக்கிறோம் என்று எல்லோரும் அறிந்த ஒரு வீட்டுக்குத் திரும்பவும் செல்வது எமக்கு பிடித்தமானதாகவும் இல்லை. ஆனால் வேறு வழி இருக்கவில்லை. போவதற்கு வேறு இடமும் இருக்கவில்லை. போய்ச் சேர்ந்த ஒரு மணி நேரத்தில், தூரத்தே நாய்கள் குரைப்பது கேட்டதும் எம்மை அச்சம் பீடித்தது. படையினர் எங்கே போகிறார்களோ என்று யோசித்தோம். ஆனால் நாய்கள் குரைப்பது வரவரப் பலமாகக் கேட்டது. ஒலிகள் எமது பக்கமே வந்து கொண்டிருந்தன. எமது வீட்டைச் சுற்றி வளைக்கத்தான் படையினர் வந்து கொண்டிருக்கிறார்களோ என்று சந்தேகித்தோம். பின்புறமாக ஒழுங்கை வழியாக வெளியே ஓடி வீட்டிலிருந்து 30 யார் தூரத்தில் உள்ள ஒரு வெற்றுக் கொட்டிலுக்குள்

நுழைந்தோம். கிங்ஸ்லியின் குடும்பத்துக்குச் சொந்தமான ஓலைக் குடிசைக்கு அடுத்த வளவில் தட்டு முட்டுச் சாமான் வைக்கும் களஞ்சியமாக அது பயன்படுத்தப்பட்டது. நாள் முழுவதும் நாம் சாப்பிடவில்லை. பாலாவுக்கு பசியால் வயிற்று வலி எடுத்திருந்தது. கிங்ஸ்லியின் அம்மா தமது அடுப்பிலே எமக்காகச் சமைத்துக் கொண்டி ருக்கும் இடியப்பமும் கோழிக்கறியும் மூக்கைத் துளைக்க பாலாவின் வாயால் நீர் வடியத் தொடங்கியது. ஆனால், அடுத்திருந்த மருத்துவரின் வீட்டுக்குள் இந்தியப் படையினர் நுழைந்ததும் கிங்ஸ்லி வீட்டுச் சூழ்நிலையும் தேடுதல் நடக்கும் என்ற எதிர்பார்ப்பில் அந்தப் பகுதியில் உள்ள அனைத்துக் குடும்பங்களும் நடுங்கத் தொடங்கியிருந்தன. கிங்ஸ்லியின் தாயார் வீட்டுக்குப் பின் புறமாக தரையில் ஒரு குழி தோண்டினார். எமக்கென்று சிறப்பாகத் தயாரிக்கப்பட்ட கோழிக் கறியையும் இடியப்பத்தையும் அந்த மூதாட்டி அந்தக் குழியில் புதைத்தபோது, பாலாவின் முகம் நிராசையால் விழுந்தது. ஒரு சிறிய குடும்பத்தில் தேவைக்கு அதிகமான உணவு நள்ளிரவிலே தயாரிக் கப்படும்போது, சந்தேகத்துடன் வரும் படையினருக்குத் திருப்தியளிக்கும் விளக்கம் கொடுப்பது கடினமாக இருக்கும். ஆகவே அனாவசியக் கேள்விகளைத் தவிர்ப்பதற்காக உணவைப் புதைப்பதே பொருத்த மாகப்பட்டது. பசிக் கொடுமையைக் காட்டிலும் மிகப் பெரிய ஆபத்தான நிலையை எதிர் நோக்கிக் கொண்டிருந்தோம். இந்தியப் படைகள் எம்மைச் சூழ்ந்துவிட்டிருந்தன. இந்தத் தடவை தப்பவே முடியாது என்று தோன்றியது.

கிங்ஸ்லி எச்சரிப்பதற்காக எம்மிடம் ஓடி வந்தார். தமது பெற்றோரின் வீட்டை நோக்கி, பெருந்தொகைப் படையினர் ஒழுங்கை வழியே நகர்ந்து கொண்டிருப்பதாகக் கூறினார். இனி, எமது கதியை நிர்ணயிக்கும் நிலையில் நாம் இல்லை. நிலைமை எமது கட்டுப்பாட்டை மிஞ்சிவிட்டது. மரணத்தையல்ல, இந்தியாவை முக முகமாக எதிர்த்து நிற்கும் ஒரு கட்டத்தை நாம் அடைந்து விட்டோம் என்று பட்டது. எமது மறைவிடத்தை விட்டு நாம் வெளியேற முற்பட்டிருந்தால் படையினர் எம்மை நிச்சயம் கண்டிருப்பார்கள். சுட்டுக் கொன்றிருப்பார்கள். வெறுமையாக இருந்த அந்தக் கொட்டிலில் பழைய கட்டில் ஒன்றில் நாம் படுத்திருந்தோம். விதிப்படி நடக்கட்டும் என்ற நிலை. "பயப்படாதே! உடலைத் துப்பாக்கி ரவைகள் துளைக்கும்போது, தற்காலிக நோவேற்படும். அதோடு எல்லாம் சரி" என்று பாலா என்னிடம் இரகசிய மாக கூறினார். நான் அதையொட்டி அஞ்சவில்லை. கிங்ஸ்லியின் பெற்றோருடைய வீடு தேடப்பட்டுக் கொண்டிருந்த வேளை, கிங்ஸ்லியும்





எம்மோடு, கொட்டிலில் ஒளிந்திருந்தார். தன்னுடைய வாழ் நாள் அன்றோடு சரி என்றும் அவரும் முடிவு செய்தார். சத்தம் எவுதும் போடாது அப்படியே இருந்தோம். தற்செயலாக அவர்கள் எம்மைப் பார்க்காது விடலாம் என்ற ஒரு நப்பாசை. ஆம் ஒரு நப்பாசைதான். நாமே எம்மைக் கைவிட்ட நிலையா? வரப்போகும் மரணத்தை ஏற்றுக் கொண்ட உணர்வா? இரண்டு பேரும் ஒன்றாகச் சாகப் போகிறோம் என்ற எண்ணமா? என்னவோ தெரியவில்லை. ஆனால் எம்மில், எவரிடையும் கலக்கமோ அச்சமோ இல்லை. நடப்பது நடக்கட்டும் என்று மௌனிகளாக நிலைமை யைப் பார்த்த வண்ணம் இருந்தோம். சூழவிருந்த வீடுகளில் வாழ்ந்த மக்களும் தமக்கு ஏற்படப் போகும் கதியை எதிர்பார்த்தபடி, காத்திருந்தார்கள். கிங்ஸ்லியின் வீட்டில் தேடுதல் நடத்திக் கொண்டிருக்கும் போது, படையினர் ஹிந்தியில் சத்தம் போடுவது கேட்டது. அதன் பின்னர் எங்கள் கொட்டிலுக்குள் வரப்போகிறார்கள் என்ற எதிர்பார்ப்போடு காத்திருந்தோம். அவர்கள் வந்தார்கள். அவர்களுடைய ரோச்லைற் ஒளி கொட்டில் யன்னல் ஊடாக அங்கும் இங்கும் பாய்ந்தது. மூச்சை அடக்கிக் கொண்டோம். படையினரின் சப்பாத்துச் சத்தம் கொட்டிலை நெருங்க நெருங்க, மரணமும் என்னை நெருங்குவது போன்ற உணர்வு. அவர்கள் வருகிறார்கள் என்று ரகசி யமாக கூறியபடி பாலா என்னை அணைத்துப் பிடித்துக் கொண்டார். வரப்போகும் துப்பாக்கி ரவைகளைப் பார்க்க விரும்பாது எனது தலைக்குமேல் ஒரு போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டேன். கொட்டில் வாயிலில் படையினர் கால் வைக்கப்போகும் நேரத்தில், கிங்ஸ்லியின் அக்காவினுடைய கணவரின் குரல், வேகமாகச் சிந்தித்து, துணிச்சலோடு முன்வந்து, படையினரின் கவனத்தை திசை திருப்பியது. அந்த வெற்றுக் கொட்டிலுக்குள் போவதால் எந்தப் பயனுமிருக்காது என்று அவர் கருத்துத் தெரிவித்தார். அந்தக் கொட்டிலுக்குள் எவருமே இருக்க முடியாது என்றும் அவர் படையினரிடம் கூறினார். அத்துடன் நிறுத்தாது, படையினர் தேடுதலுக் காகச் செல்லக் கூடிய வேறு பாதையையும் காட்டினார். அவருடைய வார்த்தைக்கு மதிப்புக் கொடுத்துப் படையினர் கொட்டிலை விட்டு வேறு புறம் சென்றார்கள். இரவின் இருட்டு மீண்டும் கனத்தது. படையினர் ஒழுங்கையின் மறுபுறத்தில் உள்ள வீடுகளை நோக்கிப் போனார்கள். கிங்ஸ்லியின் அக்கா கணவர் எம் உயிர்களைக் காப்பாற்றியிருந்தார். படையினர் அப்பால் சென்றதும் கிங்ஸ்லி குடும்பத்தினர் கொட்டிலுக்கு ஓடி வந்தார்கள். படையினர் சென்ற பக்கத்துக்கு எதிர்ப்பக்கமாக கிங்ஸ்லியின் மைத்துனர் எம்மை இட்டுச் சென்றார். படையினர் திரும்பி வரலாம் என்ற அச்சத்தில் எம்மை ஒளித்து வைப்பதற்கு ஏற்ற வேறிடம்

தேடுவதில் அந்த வீட்டார் துடிப்போடு முனைந்தார்கள். ஆனால், எங்கே எம்மை ஒளித்து வைப்பது? மருத்துவர் வீட்டுக்குச் செல்ல முடியாது. ஏனென்றால் படையினர் அங்கே தரித்திருந்தார்கள். படையினரின் சுற்றி வளைப்பிலிருந்து நாம் தப்பிப் பிழைக்க வேண்டுமென்றால், ஒரேயொரு வழி, சில யார் தூரத்தில் இருந்த நெல்வயலுக்குள் போய்ப் பதுங்குவதே என்று எல்லோரும் அபிப்பிராயப்பட்டார்கள். உடனடியாகப் புறப்பட்டு அப்பால் உள்ள தென்னந்தோட்டத்தில் காத்திருக்கும் அவருடைய பாட்டனாரிடம் சென்றார். உயரமான முதியவர் அவர். படையினர் வருகிறார்களா என்று பார்த்து, ஒழுங்கை எல்லைக்கு எம்மை கூட்டிச் செல்ல அவருக்கு அசாத்திய துணிச்சல் இருந்திருக்க வேண்டும். நாம் குறிவைத்துச் சென்ற நெல் வயலைச் சுற்றியிருந்த ஒழுங்கைகளில் படையினர் காவல் புரிந்து கொண்டிருந்தார்கள். முதியவரின் நெடிய உருவம் அந்த இருளில் நகர்வதைப் படையினர் கண்டால், அவரைச் சுட்டுக் கொல்ல அவர்கள் தயங்கமாட்டார்கள். நாம் ஒழுங்கையைக் கடக்கும்போது காவல் உலாப் படையினர் எம் முன்னே வந்து விடுவார்களா, அல்லது இனம் கண்டுவிடுவார்களா என்ற சிந்தனையோடு தயங்கினோம். ஆனால் ஒழுங்கையைக் குறுக்கு வெட்டிக் கடப்பதிலேயே எமது உயிர் தங்கியிருக்கிறது என்பதும் எமக்குத் தெரியும். தப்பிவிட வேண்டும் என்ற மன உந்தலோடு வெளியே வந்து ஒவ்வொருவராக ஒழுங்கையைக் கடந்து வெட்டுக் குறுக்காகச் சென்று வயற்கரையில் உள்ள முள்ளுப் பற்றைகளை மிதித்து கடந்து, புதிதாக நெல் முளைவிடும் வயலுக்குள் இறங்கினோம்.

நெல்வயலுக்கூடாக வரம்புமீது நடந்து போய்க் கொண்டிருந்தபோது, பாலாவுக்கு கால் சறுக்கியது. வயல் நீருக்குள்ளும் சேற்றுக்குள்ளும் கணைக்கால் புதைத்து எழுந்து வந்தார். வயல் வரம்பிலே அமர்ந்திருந்தோம். திடீரென்று நிலை தழும்பி விழுந்த தாக்கத்திலிருந்து தேறிக் கொண்டிருந்தபோது அச்சத்தில் பாலா எகிறிக் குதித்தார். ஒரு நீர்ப்பாம்பு அவருடைய காலைக் கடந்து அப்பால் நழுவிக் கொண்டிருந்தது. ஒரு புறம் பாம்புகளுடனும் நுளம்புகளுடனும் போராட வேண்டிய நிலை! மறு புறம், வெளிச்சம் எங்கள் பக்கமாகப் பாய்ச்சப்படும்போது உடனே பதுங்க வேண்டிய நிலை! மக்களுடைய வளவுக்குள் அத்து மீறி நுழையும் படையினர் எம்மைத் தேடத் தொடங்கும்போது, ரோச் ஒளிகள் ஒன்றன் பின் ஒன்றாக வீடுகளில் வெளிச்சம் பாய்ச்சும். நாம் வயல் வரப்பிலே உட்கார்ந்திருந்து பார்த்துக் கொண்டிருக்க எமது கண் முன்னே எமக்கான தேடுதல் இரவின் இருளில் மணிக்கணக்காக ஒரே போக்கில் நடந்து கொண்டிருந்தது.





காத்திருப்பதைத் தவிர எம்மால் வேறு எதுவும் செய்யமுடியவில்லை. நெல் வயலுக்கு அப்பால் உள்ள ஒரு பழுப்பு வண்ணக் கட்டடத்தைச் சுட்டிக் காட்டிய பாலா, இதுதான் பிரசித்தி பெற்ற கரவெட்டி விக்னேஸ்வரா கல்லூரி என்றார்.

இருள் கரைந்து வைகறை ஒளி அரும்பத் தொடங்க, எமது அடுத்த நகர்வைப் பற்றிச் சிந்திக்க வேண்டியதாயிற்று. உலங்குவானூர்திகள் மேலே வட்டமிடத் தொடங்க, பகல் வெளிச்சமும் நெல்வயலும் எமக்குப் பாதுகாப்பு அளிக்கமாட்டா. எனவே, கிங்ஸ்லி தமது வீடு சென்று நிலைமையை அறிந்துவரத் தீர்மானித்தார். அவருடைய அனுபவப்படி, தேடுதல் நடவடிக்கையே முடித்திருந்தால், படையினர் தங்கள் முகாமுக்குத் திரும்பியிருப்பார்கள். ஆனால் வெவ்வேறு பக்கங்களில் இருந்து வரும் ஒலிகளை வைத்து அனுமானிக்கும்போது, படையினர் இன்னமும் அங்கே இருப்பதாக எனக்குப் பட்டது.

காலை ஒளி பரவத் தொடங்க, நானும் பாலாவும் வயற்கரையை அடுத்த முள்ளுப் பற்றைகளுக்குள் கிங்ஸ்லியின் வருகைக்காக காத்திருந்தோம். சிறிது பின்னர் கிங்ஸ்லி வந்தபோது மனதுக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது. எமது சந்தேகத்தை அவர் உறுதிப்படுத்தினார். நாம் திரும்பி வரக் கூடும் என்ற எதிர்பார்ப்பில், இரவு முழுவதும் மருத்துவரின் வீட்டில், படையினர் காத்திருக்கிறார்கள். அவர்கள் பின்வாங்குவதுபோல பாவனை செய்து எம்மைத் திரும்பவும் கவர்ந் திழுத்து, பின் வீட்டைத் துரிதமாகச் சுற்றி வளைத்து எம்மைக் கைது செய்யத் திட்டம் இட்டிருப்பார்களோ என்றும் சிந்தித்தோம். ஆனால் கிங்ஸ்லியின் அனுமானத்தின்படி, அந்தத் தருணத்தில் அந்தப் பகுதியில் படையினர் இருக்கும் அசுமாத்தம் இல்லை. ஆகவே, வயல் காணியி லிருந்து தமது வீட்டுக்குப் போய், அடுத்து என்ன செய்வது என்பது பற்றி, அங்கிருந்து திட்டமிடுவதே நல்லது என்று அவருக்குத் தோன்றியது.

ஒரு புறம், தூக்கமற்ற களைப்பு, மறுபுறம் வயிற்றைக் குடையும் பசி. ஒரு குட்டித் தூக்கும் போட்டுவிட்டு, ஏதாவது சாப்பிட்டு விட்டு, தப்பிப் பிழைக்கும் எம் போராட்டத்தின் அடுத்த நகர்வு பற்றி அதன் பின் சிந்திக்கலாம் என்று கருதினோம். எதிர்நோக்கும் ஆபத்தைத் தற்காலிகமாக மனதில் இருந்து ஒதுக்கிவிட்டு, வெற்றுக் கொட்டிலில் இருந்த கட்டிலில் படுத்துத் தூங்கினோம். கிங்ஸ்லியின் சகோதரி, சுடச் சுடத் தேனீர் கொண்டு வந்தார். எனது வாழ் நாளில் என்றுமே சுவைத்திராத, பாலில்லா வெறும் தேனீர் அது. பாலாவிடமிருந்து கிளம்பிய ஒற்றைக் குறட்டை, அவர் ஆழ்ந்த தூக்கத்துக்குள் செல்லும் நிலையில் இருப்பதை உணர்த்தியது. எமது பாதுகாப்பை மறந்து நானும்

ஆழ்ந்த நித்திரைக்குள் அமிழ்ந்து விடலாமா என்று கருதியபோது, எம்மை உதறவைக்கும் சொல் காற்றிலே மிதந்து வந்தது. ஆமி! என்னைச் சுதாரித்துக் கொண்டு எழுந்து யன்னலூடாக உற்று நோக்கினேன். ஒரு புறத்திலிருந்து மறுபக்கம் மக்கள் ஓடிக் கொண்டிருப்பதைப் பார்க்க எனது இதயம் உறைந்தது. ஏதோ பாரதூரமான ஒன்று நடந்து கொண்டிருப்பது தெளிவாகப் புரிந்தது. பாலா வை எழுப்பி, படையினர் வந்துவிட்டதாகக் கூறிக்கொண்டிருக்கும் போது கிங்ஸ்லியும் உள்ளே ஓடி வந்து, படையினர் மருத்துவரின் வீட்டுக்கு அருகே வந்துவிட்டதால், நாம் உடனே வெளியேற வேண்டும் என்று அவசரப்படுத்தினார். அந்த வட்டாரம் மீண்டும் சுற்றிவளைப்புக்கு உள்ளாகி இருந்தது.

## சுற்றிவளைப்பிலிருந்து தப்பியோட்டம்

கிராமத்தவர் ஒருவர் வேகமாக வந்து, தமது சைக்கிளை கிங்ஸ்லியிடம் மனமுவந்து கையளித்தார். பாலா அதில் ஏறி நகரத் தயாரானார். அந்த நேரம், எமது இன்னொரு போராளியான சந்திரன், எங்கிருந்தோ ஓடிவந்து என்னைத் தமது சைக்கிளில் ஏறுமாறு கூறினார். சந்திரனும் அதே பகுதியைச் சார்ந்தவர். கிங்ஸ்லியின் நண்பர். தூரத்தில் ஒழுங்கை முடிவில் காக்கிச் சட்டைகளின் நகர்வை காணமுடிந்தது. என்மீது கரிசனை கொண்ட ஒரு கிராமப் பெண் முன்னே வந்து என் நிறத்தை மறைக்கும் நோக்கத்தோடு எனது தலையை ஒரு கரும் போர்வையால் போர்த்தினார். நிதானமாகச் செயற்படும் கிங்ஸ்லியின் சகோதரி, சுற்றிவளைப்பின் ஊடாக எமக்குப் பாதை திறக்கும் நோக்கத்தோடு எமக்கு முன்னே பிரதான வீதியை நோக்கி வேகமாகச் சென்றார். பெருந்தொகையான படையினர் அங்கே குவிந்திருந்ததால், கிராம மக்கள் பதறியபடி நின்றார்கள். பிரதான வீதியால் கிங்ஸ்லியின் சகோதரி எட்டிப் பார்த்தார். அங்கே அவருக்குத் தெரிந்த ஒரு பெண்ணை அடையாளம் கண்டார். அந்தப் பெண், தமது சிநேகிதி ஒரு நெருக்கடியில் சிக்கியிருப்பதைப் புரிந்து கொண்டு, வீதியை எட்டிப் பார்த்து, இந்தியப் படையினர் வீதியில் இல்லை என்பதை உறுதிப்படுத்திக்கொண்டு எம்மை முன்னேறுமாறு சைகை காட்டினார். அவர் இன்னொரு பெண்ணிடம் கை அசைத்து உசாவ, அவரும் பாதுகாப்பை உறுதிப்படுத்திக்கொண்டு, எம்மைத் தொடர்ந்து முன்னேறுமாறு கை காட்டினார். துணிச்சலான இந்தப் பெண்கள், எழுந்தமானமாக, நிலைமையை அளவிட்டு,





வழிகாட்டியமையால், நாம் அகப்படாமல் தப்பினோம். அந்த வட்டாரத்தைச் சுற்றி நிறுவப்பட்ட மூன்று சுற்றி வளைப்பு வளையங்களில் முதல் வளையத்தை உடைத்துச் செல்ல அவர்களுடைய துணிச்சலே உதவியது. படையினரின் சுற்றிவளைப்புத் தடைகளை அதிர்ஷ்ட வசமாகக் கடந்து கரவெட்டி கிழவித் தோட்டத்தில் உள்ள இந்துக் கோவிலில் எமது ஓட்டத்தை நிறுத்தினோம்.

கோவில் மடத்துக் குளிர்மையான சுத்தமான தரையில் அமர்ந்தபோது, இனி எங்கள் பாடு முடிந்தது என்றே கருதினோம். எமக்குப் பாதுகாப்பளிக்கும் அத்தனை வீடுகளுமே சோதனை யிடப்பட்டிருந்தன. வடமராட்சியின் இந்தப் பகுதி பற்றி கிங்ஸ்லிக்கும் அதிகம் தெரியாது. ஒரு நம்பிக்கையில், கிங்ஸ்லியும், சந்திரனும், எமக்குப் பொதுவாக உதவக் கூடியவர்கள் என்று தாம் கருதிய ஒரு குடும்பத்தினரை சந்திக்க சைக்கிளில் சென்றார்கள். நாம் எமது உடனடிப் பிரச்சனைக்கு ஒரு தீர்வு காணும் வரை, தம்முடன் தங்கியிருக்க அந்த வீட்டார் இடமளிப்பார்கள் என்று இவர்கள் நம்பினார்கள். தாம் திரும்பி வரும்வரை நாம் கோவிலிலேயே இருக்க வேண்டும் என்று கூறிவிட்டு, அவர்கள் போனார்கள். இடியப்பச் சிக்கலான ஒழுங்கைகளில் அவர்கள் மறைந்த மறுகணம், விடுப்புப் பார்க்கும் உள்ளூர்வாசிகள், மெதுவாகத் தங்கள் வீடுகளுக்கு வெளியே வந்து, கோவிலில் கூடத் தலைப்பட்டார்கள். விரைவில் ஒரு பெரும் கூட்டம் அங்கே திரண்டு, எம்மைப் பார்த்துக் கொண்டு நின்றது. ஆபத்தான சூழ்நிலை விரைவாக உருவாகும் போலப்பட்டது. அந்த வீதியில் சில மைல் தூரம் சென்றால், ஒரு பெரிய இந்திய இராணுவப் பாசறை நிறுவப்பட்டிருந்தது. படையினரின் வாகனமோ நடைக் காவல் உலா அணியோ அந்தப் பக்கம் வந்தால், கூட்டமாக மக்கள் நிற்பது அவர்கள் கவனத்தை ஈர்க்க படையினரும் அங்கே வந்துவிடுவார்கள். ஆனால், இந்தத் தருணத்தில் நாம் எங்கே போவது, எங்கே ஒளிப்பது என்று வகையறியா நிலையில், எமது உயிர் இந்த மக்களின் கரங்களிலேயே தங்கியிருப்பதாக நான் பாலாவிடம் கூறினேன். எமது எதிரிகள் யாராவது அங்கிருந்து எம்மைக் காட்டிக் கொடுக்க நினைத்தால், கோவிலில் நாம் இருப்பதைக் காட்டிக் கொடுக்க சில நிமிடங்களே போதும். நான் இதை பாலாவுக்குக் கூறிக் கொண்டிருக்க, ஒரு நடுத்தர வயது ஆண்மகனார், திடீர் உள்ளுணர்வோடு, சனக் கூட்டத்தால் எமக்கு வரக்கூடிய ஆபத்தை உணர்ந்தவராக, மக்கள் முன்னே நின்று அவர்களைக் கலைந்து போகுமாறு, அமைதியாகவும் மரியாதையாகவும் வேண்டினார். மக்களும் திடீரென்று ஆபத்தை உணர்ந்தவர்கள் போல நிலைமையைப் புரிந்து

கொண்டு எம்மை ஆபத்துக்குள் தள்ளக்கூடாது என்பவர்கள்போல, துரிதமாக் கலைந்து சென்றார்கள். அதன் பின்னர் வேலியாலும் யன்னலூடாகவும் மட்டுமே விழிகள் எம்மைக் கூர்ந்து பார்த்த வண்ணம் இருந்தன.

எமது போராளிகளின் பாட்டியார் ஒருவர் தமது வீட்டில் ஒரு நாள் தங்கியிருக்க எமக்கு இடமளித்தார். இந்த மூதாட்டி, இனியவர், கருணை உள்ளம் கொண்டவர். இந்தியரால் நாம் வேட்டையாடப்படுவதையும், இரண்டு நாட்களாக நாம் உணவு அருந்தவில்லை என்பதையும் கடுமையாக களைத்துப் போய்விட்டோம் என்பதையும் கேள்விப்பட்டதும், தமது வயதுக்கும் பண்பாட்டுக்கும் ஏற்ப மனிதாபிமானத்தோடும் புரிந்துணர்வோடும் செயற்பட்டார். எம்மைக் கிணற்றடிக்குக் கூட்டிச் சென்றார். முதல் நாளிரவு வயலில் அப்பிய சேற்றை நாம் ஆறுதலாக கழுவி சுத்தப்படுத்திக் கொண்டிருக்கும் போது, தமது நீண்ட காலச் சமையல் அனுபவத் திறமையை ஒன்று திரட்டி, சுவை சொட்டும் உணவைத் தயாரித்து தந்தார்.அற்புதமான விருந்து உண்ட திருப்தியோடு எவர் தொந்தரவும் இன்றி, பொழுதுபடும்வரை நன்றாக தூங்கி எழுந்தோம். இரவு தொடங்கும் வேளை பாலாவின் நண்பர் ஒருவர் ஓடி வந்தார். நாம் இருக்கும் இடம்பற்றி படையினர் தகவல் பெற்றிருக் கிறார்கள் என்று தாம் கருதுவதாகக் கூறினார். நாம் இருக்கும் இடத்தை விட்டு உடனடியாக வெளியேறுவது உசிதம் என்று தாம் கருதுவதாகவும் தெரிவித்தார். எனவே திரும்பவும் ஒழுங்கைகளூடாக இழுபட்டோம். எங்கேயாவது இடம் கிடைத்தால் போதும் என்பதே எங்கள் நிலை. வீடு எதுவும் கிடைக்காவிட்டால், மீண்டும் நெல்வயலில் படுத்துத் தூங்குவது என்றும் கூறிக் கொண்டோம். நாம் போகும் பாதை யில் எமக்குச் சில நிமிடம் முன்னதாக இராணுவக் காவல் அணி ஒன்று சென்றதாக மக்கள் விபரம் தந்தார்கள். மணலில் அவர்களுடைய சப்பாத்து அடை யாளங்களைக் காண முடிந்தது. இருளத் தொடங்கி விட்டதாலும் படையினர் தமது இரவு உலாவில் ஈடுபட்டிருப்பர் என்றதாலும், பாழடைந்த வீடொன்றுக்குள் புகுந்து அங்கு காத்திருந்தோம். எம்மோடு திரும்பவும் சேர்ந்திருந்த கந்தையா திடீரென்று இருளில் மறைந்தார். அவர் திரும்பி வரும் வரை தவிப்போடு காத்திருந்தோம். நேரம் கழியக் கழிய, அவரும் காவல் உலா அணியி னரிடம் சிக்கியருப்பாரோ என்று ஊகித்தோம். அவர் பிடிபட்டிருந்தால், எமது பகுதி அன்றிரவு நிச்சயம் சுற்றிவளைப்புக்கு உள்ளாகும் என்பது எமக்குத் தெரியும். நடப்பது நடக்கட்டும் என்று நாம் முடிவுக்கு வந்தபோது, வாயில் வழியாக கந்தையா அமைதியாக வந்தார். அவருடைய கையில் உணவு நிறைந்த ஒரு பிரம்புக் கூடை. அவர் தமது





ஒரு நண்பர் வீடு சென்று, உணவு தயாரிப்பித்து இருந்தார். மக்களின் தாராள மனப்பான்மையும் எம்மீதான அக்கறையும் என்னை வாயடைக்க வைத்தது.

என்னிடமிருந்த மின் ஒளிவிளக்கை தரையின் நடுவில் வைத்து கூடையில் என்ன உணவு இருக்கிறது என்று பார்த்தோம். தட்டுகளை ஒவ்வொன்றாகப் பிரிக்கும்போது, அந்த உணவைத் தயாரிப்பதில் கரிசனை உள்ள ஒரு பெண், சம்பந்தப்பட்டிருப்பதை உணர முடிந்தது. அதன் பின்னர் கூடையின் அடியில் இருந்து கல்போன்ற ஏதோ ஒன்று இருப்பதை உணர்ந்து அதை வெளியே எடுத்தேன். அது ஒரு கரித்துண்டு. வியப்பாக இருந்தது. கரிசனையுள்ள அந்தப் பெண், உணவுடன் ஏன் கரிக்கட்டியை வைக்க வேண்டும் என்பது புதிராக இருந்தது. இரவு வேளைகளில் வீட்டில் இருந்து உணவை எடுத்துச் செல்லும்போது காற்றுக் கறுப்புப்பட்டு ஆபத்து நேராமல் இருப்பதற்காக ஒரு கரித்துண்டைப் பாதுகாப்பாக வைப்பது உள்ளூர் நம்பிக்கை என்று விளக்கம் பெற்றபோது உள்ளுக்குள் உருகிப்போனேன். கிராமத்தில் எங்கேயோ ஒரு புறத்தில், அந்த இரவு நாம் பத்திரமாக இருக்க வேண்டும் என்று ஏங்கும் ஒரு பெண்மணி இருக்கிறார் என்பதை உணர்ந்தபோது மனத் தெம்பு பிறந்தது. நாம் மிருகங்களைப் போல வேட்டையாடப்பட்டுக் கொண்டிருக்கிறோம் என்றும் பெருந்துன்பம் அனுபவித்துக் கொண்டி ருக்கிறோம் என்றும் அந்த வட்டாரம் பூராவும் விபரம் பரவியிருந்தது. எம்மைத் தம் வீட்டுக்குள் ஏற்பவர்கள், ஆணோ, பெண்ணோ பெரும் ஆபத்தை விலைக்கு வாங்குபவர்களாக இருப்பார்கள். ஆனால் மனித உள்ளுணர்வின் ஆழத்தை அழவிடுவது எளிதல்ல. எதிர்பாராத வேளையில், எதிர்பாராத வழியில், அது தனது பெருந்தன்மையையும் விசாலத்தையும் வியாபிக்கச் செய்யும். பதவி ஓய்வு பெற்ற காவற்துறை அதிகாரி ஒருவரும் இருபதாவது வயதைத் தாண்டிய அவருடைய இரண்டு புதல்விகளும் தம் வீட்டில் எமக்கு அடைக்கலம் தந்தார்கள். எம்மிருவர் நெஞ்சிலும் நன்றி உணர்வு பெருகியது. ஆனால், நாம் இருக்கும் இடத்தை இராணுவத்தினர் அறிந்து கொண்டால், அந்த இரண்டு இளம் பெண்களுடையவும் பாதுகாப்பு என்னவாகும் என்ற நினைப்பு வந்ததும் சஞ்சலம் அடைந்தோம். நான் அந்த வீட்டில் இருப்பதையொட்டி அந்தப் பெண்களுக்கு ஆபத்து எதுவும் வரக்கூடாது என்று மன உறுதி பூண்டவளாக பகல் வேளையில் அறைக்குள் முடங்கிவிட்டு குளித்த லையும் மற்ற அலுவல்களையும் இரவில் பார்த்துக் கொண்டேன். பொதுவான ஆபத்துத் தவிர இந்த வீட்டில் வேறு தொந்தரவு இராது என்ற போதிலும், சூழலின் நிழலைமை எம் இருவரையும் பாதிப்பதை

உணர்ந்தோம். அமைதியாக எம்மால் தூங்க முடியவில்லை. சிறுநீர் கழிப்பதற்காக இரவில் அடிக்கடி எழுந்தோம். எமக்கு ஏற்பட்டிருந்த மன நெருக்குவாரமும் உளைச்சலுமே என்பது இதிலிருந்து புரிந்தது. நாம் தூங்க முற்படும்போது, எமது வீட்டைச் சுற்றிய ஒழுங்கைகளில் நாய் குரைப்பதை வைத்துக் கொண்டு இந்திய இராணுவத்தினர் அங்கு காவல் உலா புரிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர்ந்தோம்.

தாராள குணமும் பரிவும் கொண்ட இந்த இளம் பெண்களின் பராமரிப்பில் இரண்டு நாட்கள் அசம்பாவிதம் எதுவும் இன்றிக் கழிந்தன. தொடர்ந்தும் அந்த வீட்டில் நாம் இருந்தால் அனைவருக்கும் ஆபத்தாக முடியும். ஆனால், தமக்கு வரக்கூடிய ஆபத்தைப் பற்றிப் பொருட்படுத்தாது, எவ்வளவு வேண்டுமோ அத்தனை காலம் நாம் தம் வீட்டில் தங்கலாம் என்று, இந்தக் குடும்பம் உறுதியளித்தது. எமது அடுத்த விடுதி என்ன என்ற விசாரணைக்கு முற்றுப் புள்ளி வைக்கும் வகையில் அதிர்ஷ்டவசமாக சூசை அங்கே வந்தார். எமக்கு ஏற்பட்ட சொல்லொணா இடுக்கண் பற்றியும் நாம் எவ்வாறு தப்பிப் பிழைத்துக் கொண்டிருக்கிறோம் என்பது பற்றியும் அவருக்கு முழுமையான விபரங்கள் கிடைத்திருந்தன. கால நிலையும் கடல் நிலையும் சீரடையத் தொடங்கி இருந்ததால், வடமராட்சியை விட்டு நாம் வெளியேறுவதற்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. சூசையிடம் இருந்து வந்த இந்தச் செய்தி, எம் முகத்தில் மலர்ச்சியைக் கொண்டு வந்தது. மறுநாளே, இறுதி ஆயத்தங்களுடன் தாம் வருவார் என்று அவர் உறுதியளித்தார். அதே சமயம் தமிழ்நாடு முதலமைச்சர் 1987 டிசெம்பர் 23ம் திகதி காலமாகி விட்டதை செய்தி ஒலிபரப்புக்கள் தெரிவித்தன. தேசிய துக்க தினமும் போர்நிறுத்தமும் அறிவிக்கப்பட்டன. முதலமைச்சருக்கு மரியாதையாக அமைதிப் படைகள் தங்கள் பாசறைகளில் முடங்கி இருக்கும் என்றும் கூறப்பட்டது. இது ஒரு விதியின் விளையாட்டு. தமிழ்நாட்டில் நாம் இருந்தபோது அமைப்பின் வளர்ச்சிக்கும் அபிவிருத்திக்கும் காலாக இருந்து, சென்னையில் நாம் இருந்தபோது பாலாவின் மருத்துவ சிகிச்சைக்கு நிதியளித்து பேருதவி புரிந்த அந்தப் பெரிய மனிதர் தமது மறைவிலே கூட எமக்கு உயிர் அளிப்பதில் பெரும் பங்கு வகித்தார்.

எமது இந்த சகாப்தத்தின் இறுதிப்படிகளுக்கான ஆயத்தங்களைப் புரியுமாறு சூசை எம்மிடம் கூறினார். டிசெம்பர் 24ம் திகதி சாயந்தரம், இரண்டு போராளிகள் சைக்கிளில் வந்தார்கள். வடமராட்சி ஒரு மூலையில் இருந்து வடகரைத் திக்கத்தில் எமக்காகக் காத்திருக்கும் படகு ஒன்றில் ஏற்று எம்மை அழைத்துச் சென்றார்கள். பிரியாவிடை பெறும்போது, அந்த இளம் பெண்களிடமும் அவர்களுடைய தந்தை






முப்பது வயதில் பாலாவும் 24வயதில் நானும்



1978ல் இலண்டனில் எமது திருமணத்தின்போது



1989ல் அவுஸ்திரேலியாவில் வாகஸ் என்ற பட்டினத்தில் நானும் எனது குடும்பத்தினரும். இடமிருந்து வலது புறமாக அமர்ந்திருப்பது எனது தந்தையார் திரு. புரூஸ் வில்பி (இப்போது காலமாகிவிட்டார்) எனது தாயார் பெற்றி வில்பி நின்றுகொண்டிருப்பது எனது மூத்த் சகோதரர் பிரண்ட். எனது இளைய சகோதரி லின்லி. எனது இளைய சகோதரர் டேவிட்.



1984 அக்டோபர் முதலாம் திகதி, தமிழ் நாட்டிலுள்ள திருப்போரூர் இந்துக் கோவிலில் திரு பிரபாகரன் அவர்களுக்கும் மதிவதனி அவர்களுக்கும் திருமணம் நடந்த வேளையில், தமிழ் மரபின்படி நான் திருமணத் தம்பதிகளை வாழ்த்துகின்றேன்.



1985 ஆகஸ்ட் மாதம். பாலா இந்தியாவிலிருந்து நாடு கடத்தப்பட்ட போது சென்னை, மீனம்பாக்கம் விமான நிலையத்தில் எடுத்த படம்.



1985 டிசம்பர் மாதம். சென்னையிலிருந்த எமது வீட்டில் குண்டு வெடிப்பு சம்பவம் நிகழ்ந்தது. எமது படுக்கை அறையின் கூரை மீது பெரிய துவாரம் ஏற்பட்டிருப்பதைக் காணலாம்.



இலங்கையின் அரச அதிபர் திரு ஆர். பிரேமதாசா அவர்களுடன் விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள். இடமிருந்து வலமாக திலகர், நான், பாலா, அரச அதிபர், யோகரத்தினம் யோகி, பரமு மூர்த்தி



1990ல் யாழ்ப்பாணம் கொக்குவில் பகுதியிலிருந்த எமது பதுங்கு குழியும் எனது வளர்ப்பு நாய் ஜிம்மியும்.



அரச அதிபர் திரு ஆர். பிரேமதாசா அவர்களுடன் நிகழ்ந்த சந்திப்பு ஒன்றில் நான் குறிப்பு எடுக்கிறேன்



1991ல் தற்பாதுகாப்புக்காக எனக்குத் தரப்பட்ட துப்பாக்கியுடன்.



1989ல் அலம்பில் காட்டில், சிறுத்தைக் குட்டிகளுடன் வலது புறமாக
திரு.பிரபாகரன் அமர்ந்திருக்கிறார் ( படம் பிடித்தவர் கேணல் கிட்டு)



1990ல் யாழ்ப்பாணம் வருகைதந்த அமைச்சர் ஹமீது
அவர்களுடன் பாலாவும், புலிகளின் பிரதிநிதிகளும் நானும்.



1991ல் நானும், வைத்தியக் கலாநிதி பத்மினி [illegible]
[illegible] செஞ்சிலுவை [illegible] பிரதிநிதிகளுடன்



1989ல் அலம்பிலில் காட்டிலுள்ள பயிற்சிப் பாசறைக்கு என்னை அழைத்துச் செல்கிறார்
பெண் போராளிகளின் முன்னாள் தளபதியான சுகி



1990ல் யாழ்ப்பாணம்
வின்சர் தியேட்டரில்
நிகழ்ந்த மகளிர்
மாநாட்டில் நான்
உரையாற்றுகின்றேன்.



1990ல் யாழ்ப்பாணத்தில்
கிட்டுவின் தாயாரான
காலம் சென்ற
கிட்டு அம்மாவுடன்.



1990ல் பெண் போராளிகளுடன் ஒரு கலந்துரையாடலின் போது.



1989ல் அம்பாறையில், இடதுபுறமாக பாலாவும் வலதுபுறமாக கிழக்கு மாகாண அரசியற் பொறுப்பாளர் கரிகாலன் அவர்களும் வந்து கொண்டிருக்கிறார்கள்.



1989ல் அலம்பில்
காட்டிலுள்ள
1-4 பாசறையில்
ராஜும் பாலாவும்
பிரபாகரன் அவர்களுடன்
கலந்துரையாடுகிறோம்.
(படம் பிடித்தவர் கேணல் கிட்டு)



1989ல் மட்டக்களப்பில்
நிகழ்ந்த பொதுக்கூட்டம்
ஒன்றில் நான்
உரையாற்றுகின்றேன்.
எனது உரையை
கவிஞர் காசி ஆனந்தன்
அவர்கள்
மொழிபெயர்க்கிறார்.
பாலா பின்னால்
அமர்ந்திருக்கிறார்.



1989ல் சென்னையில் முன்னாள் தமிழக முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி அவர்களை சந்தித்தபொழுது எடுத்தபடம். இடமிருந்து வலமாக திரு. கருணாநிதி, பாலா, போஸ், நான்.



1989ல் கொழும்பு ஹில்டன் விடுதியில் கேணல் கிட்டுவின் திருமணத்தின் போது. இடமிருந்து வலமாக நான், கிட்டு, சிந்தியா, பாலா.

மீண்டும் எமது நன்றியையும் பாராட்டுணர்வையும் தெரிவிக்க வார்த்தை இன்றி தடுமாறினேன். நாம் சென்ற பின் அவர்களுக்குக் கெடுதி எதுவும் நேரக்கூடாது என்று எம் அடிமனத்தில் நாம் ஆசித்ததை அவர்கள் அறிந்திருக்கமாட்டார்கள். அவர்களுக்கு எதுவும் நேரவில்லை. தர்மத்தின் விதிகள் நிலைபெற்றன. இந்த நல்ல மனிதரின் வீட்டில் நாம் அடைக்கலம் பெற்றது பற்றி இந்தியா அறிய வரவேயில்லை. மலர்ந்த புன்னகையோடு எம்மைச் சூழ்ந்து நின்றவர்களிடம் பிரியாவிடை பெற்று, சைக்கிளில் புறப்பட்டோம். உலவும் படையினரின் பிரசன்னம் இல்லாத அன்றைய நாளில் மக்கள் தங்கள் முன்வாயிலில் கூடி நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். சைக்கிள் முன்தண்டு இருக்கையில் ஒருக்களித்து இருக்கும் என்னை, கைகளை அசைத்து வழியனுப்பினார்கள்.

## இறுதியான சவால்

பெரும்படைபலத்துடன் இரக்கமற்ற முறையில் கடுமையாக நடத்தப்பட்ட மனித வேட்டையில் தெய்வாதீனமாக நாம் உயிர் பிழைத்திருந்தோம். நாம் முகம் கொடுத்து வெற்றி கண்ட உயிருக்குப் பங்கம் விளைக்கும் மிகக் கொடிய அந்தச் சூழலை விடப் பயங்கரமான வேறு சூழல் எதுவும் இருந்திருக்க முடியாது. மிக மோசமான நிலையை நாம் கடந்து வந்து விட்டோம் என்றே கருதினேன். அடுத்து, பாக்கு நீரிணையைக் கடந்து தமிழ் நாட்டுக்கு நாம் புரியவிருந்த கடற்பயணம் ஒரு உல்லாசப் பயணமாக இருக்கமாட்டாது என்றாலும், அந்த நாள்வரை நாம் முகம்கொடுத்த கஷ்டங்களோடு ஒப்பிடும்போது, அந்தப் பயணம் அவ்வளவு மோசமாக இருக்க மாட்டாது என்று நம்பினேன். கடற்கரையை அடைந்து இந்தியாவுக்குப் படகு ஏறிவிட்டால், சில மணி நேரத்தில் எமக்குப் பாதுகாப்பு கிடைத்து விடும் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அது எந்தப் பெரிய தவறு. தரையிலே உயிர் பிழைக்க எவ்வாறு போராடினோமோ, கடலிலும் அதே போராட்டத்தை நாம் எதிர் நோக்க நேர்ந்தது. நாம் ஏற்கனவே எதிர்நோக்கி வெற்றி கொண்ட அதே வகை இடையூறுகளை எமது புதிய பயணத்திலும் எதிர்நோக்க நேர்ந்தது.

நீண்ட கரையை அடைந்த போது எமது பழைய நண்பர்கள், சிலர் எம்மோடு மீளச் சேர்ந்துக் கொண்டார்கள். அவர்களும் எம்மைப்போல ஓடிக் கொண்டிருந்தவர்கள். கடற்பயணத்தில் எம்மோடு சேர்ந்து கொள்ள காத்திருந்தார்கள். ஆசையும் அங்கு வந்திருந்தார்.

அவர், நாம் புறப்படுவதற்கு முந்திய ஏற்பாடுகளைக் கவனித்தார். பயணம் புறப்படும் முன் என்னைத் தயார்படுத்திக் கொள்வதற்காக, பயணம் எவ்வளவு நேரம்பிடிக்கும் என்றும் சூசையிடம் கேட்டேன். நான்கு மணிநேரம் என்று உடன் பதில் வந்தது. நான்கு மணிநேரமா? இந்தியாவிலிருந்து யாழ்ப்பாணம் வந்தபோது ஒரு மணிநேரமே பிடித்தது. இந்தப் பயணம் நீளமாகவே இருக்கப்போகிறது. ஆனால் சமாளித்து விடுவேன் என்று எனக்குள் அமைதியாகக் கூறிக்கொண்டேன். ஆனால் புறப்படுமுன், வெண்மணலில் இறங்கிப் படகை நோக்கி நடந்தபோது, அச்ச உணர்வு என்னைக் கௌவியது. பருவகால மழை ஓரளவு விட்டுக் கொடுத்தது என்றபோதிலும், குளிர் காற்று, கடலைக் கெம்ப வைத்திருந்தது, பயணம் ஒரு சவாலாகவும் அச்சமூட்டுவதாகவும் அமையப் போகிறது என்று பட்டது. கொந்தளிக்கும் கடல் முன்னே விரிந்து கிடந்தபோதும், பயணம் பற்றித் தோன்றிய அச்சத்தையும் மனதில் பின்னே தள்ளினேன். கடந்த சில மாதங்களாக எதிர்த்த தடைகளை வெற்றி கண்ட எனக்கு, இந்த கடற் பயணம் கூட வெற்றி கொள்ள வேண்டிய இன்னொரு தடை என்று நினைத்தேன். ஆனால், அலையடிக்கும் கடலில் நாம் செல்லவிருந்த படகைப் பார்த்ததும் எனது நம்பிக்கை ஒரு கணம் அதிர்ந்தது. அது ஒரு சிறிய கண்ணாடி இழைப்படகு. அதன் கடையாரில் எட்டுப்பரி வலு இயந்திரங்கள் இரண்டு இணைக்கப்பட்டிருந்தன. குமுறும் கடலின் சவாலை இந்தப் படகு எப்படிச் சமாளிக்கப்போகின்றது என்று ஒரு கணம் திகைத்தேன். எனக்கு வேறு வழி இருக்கவில்லை. சூசையின் அனுபவத்திலும் திறைமையிலும் நம்பிக்கை வைக்க வேண்டி இருந்தது. எம்மை அழிவுப்பாதையில் அவர் அனுப்பி வைக்கமாட்டார் என்று உறுதியாக நம்பினேன். என்ன இருந்தாலும் எமது எத்தனையோ போராளிகள் இதே படகைப் பயன்படுத்தி, கடலைக் கடப்பதில் வெற்றியும் கண்டிருக்கிறார்கள். எத்தனையோ மீனவர், இத்தகைய படகுகளில், இத்தகைய இயற்கைச் சக்திகளை எதிர் கொண்டிருக்கிறார்கள். இயற்கையுடனான இந்தப் போராட்டத்தில் நாம் வெற்றி கண்டு, இந்தியாவைச் சென்றடைந்தால், முட்டிமோதும் கோடிக்கணக்கான மக்கள் மத்தியில் நாம் காணாமற் போய், உயிர் தப்பிப் பிழைக்கக் கூடுமாயிருக்கும் என்று என் மனதைத் திடப்படுத்தினேன். யாழ்ப்பாணத்தில் நாம் இருந்தபோது, மரணம் எம்மைத் துரத்திக் கொண்டிருந்தது. வாய்ப்பு எதுவும் இல்லை என்ற கட்டத்தில் சிறிது வாய்ப்புக் கிடைத்தாலும் அதைப் பெரிது என்று





கொள்ளக்கூடியதுதானே? எம்மை எதிர்நோக்கும் ஆபத்துக்களைப் பொருட்படுத்தாதவளாக எமது பைகளைப் படகில் ஏற்றிக் கொண்டு பயணம் புறப்பட்டோம்.

நாம் செல்லப்போகும் திசையில், விரைவாக இருள் படியத் தொடங்கியது. வானிலே காணப்பட்ட கரிய மேகமும் சூழலை மங்கலாக்கிக் கொண்டிருந்தது. நேரம் போகப் போக ஓர் அவசர உணர்வு படியத் தொடங்கியது. நாம் இன்னமும் புறப்படாமல் நின்றோம். படையினர் இரவில் வெளியே வருமுன்னர் அந்த இடத்தை விட்டு அகன்று விடவேண்டும் என்று எமது போராளிகள் விரும்பினார்கள். எனவே படகில் ஏறி, உள்ளே தரையில் உட்கார்ந்தோம். விரைவில், சூசையும் டசின் கணக்கிலான போராளிகளும் ஓங்கி அடிக்கும் அலைகளினூடாக சமுத்திரத்துக்குள் எங்கள் படகை தள்ளிச் சென்றார்கள். இயந்திரங்கள் முடுக்கி விடப்பட்டன. எமது பயணம் தொடங்கியது. கரையிலிருந்து படகு எட்டத்தே செல்ல, குற்ற உணர்வும் துயர உணர்ச்சியும் திடீரென என்னை மேவின. இதுநாள் வரை நாம் முகம் கொடுத்து வந்த நெருக்குவாரங்களின்போது மானுட உயர் சீல மாணிக்கங்கள் சிலருடன் நான் உறவு பூண நேர்ந்தது. எமது அவல வேளையில், எமக்காகத் தாம் பேரிடரைச் சந்தித்துத் தியாகம் புரிய அவர்கள் புரிந்த அர்ப்பணிப்புக்கள். அவர்களுடைய அடி மனதிலிருந்து கிளர்ந்த ஒப்பற்ற பண்புகளாகும். அவர்களோடு ஆழமான பிணைப்பு என் மனதில் ஏற்பட்டிருந்தது. எனவே நாம் புறப்பட்ட கரை என் பார்வையில் இருந்து மறையத் தொடங்க எமது நம்பிக்கைக்குரிய நண்பர்களை ஒரு நிச்சயமற்ற எதிர் காலத்துக்குள் கைவிட்டுச் செல்லும் உணர்வே என்னுள் மிதந்து வந்தது. போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் மக்களோடு சேர வேண்டும் என்று பல ஆண்டுகளாகக் காத்திருந்து விட்டு யாழ்ப்பாணத்தில் சில மாதங்களே வாழ்ந்த போதிலும் தமிழ் மக்கள் முகம் கொடுத்த ஒடுக்குமுறையையும் அடிமனத் துயரையும் அவர்களோடு பகிர்ந்து கொண்டிருந்தேன். அவர்களுடைய கையறு நிலையில் அவர்களை விட்டுச் செல்வது துயரமாக இருந்தது. அதே வேளை, ஆறுதல் உணர்வும் ஏற்பட்டது. வேட்டையாடப்பட்ட நெருக்குவார உணர்வும் அகன்றிருக்கிறது. ஆனால் ஆறுதல் உணர்வு சிறிது நேரமே நிலைத்திருந்தது.

கரையருகே ஓங்கி அடிக்கும் அலைகளை வெற்றிகரமாகக் கடந்தபின், மலையும் மடுவுமாக உருளும் கரிய கடலுக்கு முகம் கொடுக்கும் சூழல் உருவாகியது. சில மைல் தூரம் சென்றவுடன்

தமிழ்நாட்டில், பெண்களுக்காக நடத்தப்பட்ட பயிற்சிப் பாசறையில் முதலாவது அணியாகப் பயின்றவர்கள். அடுத்து மூத்த பெண் போராளி தீபா. தீபாவும் ஜெயாவும் ஆரம்பத்தில் சென்னையில் எமது வீட்டில் வசித்து வந்தவர்கள். ஜெயந்தி, ஜெயா, தீபா ஆகிய மூவரும் எமக்கு நெருக்கமானவர்கள். எமது இருப்பிடத்திற்கு அடிக்கடி வருவார்கள். ஜெயந்தி, என்னையும் பாலாவையும் தனது பயிற்சி முகாம்களுக்கு அழைத்து விருந்து தருவார். அவ்வேளை, ஜெயந்தியின் பொறுப்பில், தென்மராட்சியிலுள்ள கிளாலியிலும், வடமராட்சியுள்ள பொலிகண்டி யிலும் இரு பெரும் பயிற்சிப் பாசறைகள் அமைந்திருந்தன. இங்கு நாம் அடிக்கடி அழைக்கப்பட்டிருக்கிறோம். பாலா என்னோடு இங்கு வரும்பொழுது அன்றைய அரசியல் நிலைமையை விளக்கி பெண் போராளிகளுக்கு வகுப்புகளை நடத்துவார்.

இப்பொழுது, யாழ்ப்பாணத்தில் பெண் போராளிகள் பற்றிய படிமம் அடிப்படையான மாற்றத்தைக் கண்டிருந்தது. 1990 ல் இந்திய அமைதிப் படை வெளியேறியதை அடுத்து, ஆயுதம் தாங்கியபடி கம்பீரமான சீருடை அணிந்து யாழ்ப்பாண வீதி வழியே வலம் வந்த பெண் போராளிகளுக்கும் அதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பாக இந்திய இராணுவப்படையெடுப்பின்போது சாதாரண உடையுடன் வன்னிக்கு பின்வாங்கிய பெண் போராளிகளுக்கும் மத்தியில் அடிப்படை வேறுபாடு இருக்கத்தான் செய்தது. இப்போதைய பெண் போராளிகள் சிறந்த போர்ப் பயிற்சி பெற்றவர்கள்; நிறைய கள அனுபவம் உடையவர்கள்; தன்னம்பிக்கை நிறைந்தவர்கள். இவ்வாறான புதிய பெண் போராளிகள், அணி அணியாக காவல் வலம் வருவதைக் கண்டு வியப்படைந்த பொதுமக்கள், சமதாயத்தில் ஒரு புரட்சிகர மாற்றம் நிகழ்ந்துள்ளதை உணர்ந்தனர். இது சர்ச்சைக்குரிய விவாதங்களை எழுப்பியது. பெண் போராளிகளின் இலட்சியப் பற்றையும் அர்ப்பணிப்புக்களையும் தமிழ் மக்கள் போற்றிப் பாராட்டத் தவறவில்லை. ஆயினும் அதே வேளை ஆயுதப் போராட்டம் தமிழ்ப் பெண்களின் படிமத்திலும் பாரம்பரிய பங்குகளிலும் அடிப்படையான மாற்றங்களை ஏற்படுத்தி விடுவது சாத்தியமென்றும் மக்கள் அஞ்சினார்கள். மரபுக்கும் மாற்றத்திற்கும் மத்தியில் காலம் காலமாக நடைபெற்றுவரும் விவாதம் இது. பெண் போராளிகளை மையமாகக் கொண்டு இப்பொழுது இச் சர்ச்சை மீண்டும் தலை தூக்கியிருக்கிறது. நீளமாக முடிவளர்த்து, சேலை உடுத்தி அல்லது பாவாடை அணிந்து, தலை குனிந்தபடி பணிவடக்கத்துடன் நடந்து செல்லும் பண்டைய தமிழ் இளம் பெண்ணின் படிமத்தோடு பழகிய





யாழ்ப்பாணத்து பழமைவாதிகளில் சில பிரிவினருக்கு, திருமணமாகாத இளம் பெண் போராளிகள் ஆயுதம் தரித்தபடி, சீருடையுடன் வீதிகளில் வலம்வருவது தமிழ்ப் பாரம்பரிய மரபிற்கும் பண்பாட்டிற்கும் ஆபத்தான அச்சுறுத்தலாகவே தென்பட்டது.

வீடு தோறும் விவாதங்களும் சர்சைகளும் கிளர்ந்தன. இயற்கை செயற்கை என்றும், மரபு மாற்றம் என்றும் சாதாரண பகுத்தறிவு மட்டத்தில் தர்க்கங்கள் சூடுபிடித்தன. ஆயுதம் தரித்த விடுதலைப் போராளிகளாக பெண்கள் புதிய பங்கு வகிப்பதை விரும்பாத சிலர், அது இயற்கைக்கு மாறானதென வாதிட்டனர். இயற்கைதான் பெண்களின் தலைவிதியைத் தீர்மானிக்கும் சக்தி. ஆண்களைவிட பெண்கள் பலவீனமானவர்கள் மட்டுமன்றி, குழந்தைகளைப் பெற்று வளர்ப்பதே வாழ்க்கையில் பெண்கள் வகிக்கும் முக்கியமான பங்கு என்பது இவர்களது கருத்து. வாழ்வின் நியதியாக இயற்கையால் அருளப்பட்ட இந்தப் பங்கை பெண்கள் மீறினால் அதன் விளைவு பாரதூரமாக அமையும் என்றும், அது சமூக கட்டமைப்பையும் ஒழுங்கையும் சீர்குலைத்து விடும் என்றும் இவர்கள் வாதிடுவர். திருமணத்திற்கும் குடும்ப வாழ்விற்கும் அச்சாணியாக விளங்குபவள் பெண் என்றும், இந்த உறவுமுறைகளுக்கு மாறாக அவள் சிந்தித்தாலும், செயற்பட்டாலும் அது குடும்பத்தை மையமாகக் கொண்ட தமிழ்ப் பண்பாட்டிற்கு பங்கம் ஏற்படுத்திவிடும் என்பதும் ஒரு சாராரது கருத்து. தமிழ்ப் பெண்களையும் யாழ்ப்பாண சமூகத்தையும் பொறுத்தவரை, ‘பெண் விடுதலை’ என்பது அவசியமில்லை என்ற பிற்போக்கான வாதத்தை முன்வைப்பவர்களும் இருக்கிறார்கள். இந்த வாதங்கள் எல்லாமே தவறானவை என்பதும், பொருத்தமற்றவை என்பதும் எனது கருத்து. தமிழ்ப் பெண்களுக்கான விடுதலை எவ்வாறு அமைய வேண்டும் என்பதில் தெளிவான பார்வை இல்லாத காரணத்தினாலேயே இத் தவறான கருத்துகள் எழுகின்றன. ஆயுதப் போராட்டத்தில் பெண்கள் பங்குகொள்வது என்பது, தமிழ் சமுதாயத்தில் பெண்களின் வாழ்நிலை சம்பந்தப்படுத்தப்பட்ட மட்டில், ஒரு புரட்சிகரமான மாற்றத்தைக் குறிக்கின்றது என்பது உண்மை. எனினும் பெண்களின் மீட்சி என்பது ஆயுதப் போராட்டத்தில் பங்குகொள்வதோடு முடிவடைவதில்லை. மாறாக, பரந்த குறிக கோள்களை அடையும் நோக்கத்துடனேயே பெண்கள் ஆயுதப் போராட்டத்தில குதிக்கிறார்கள். இந்தப் பரந்த குறிக்கோள்கள் என்ன என்பது பற்றிய விவாதம், ஆரம்ப காலத்தில், யாழ்ப்பாண சமூகத்தில் பெரிதாக எழவில்லை. ஆயுதம் தரித்த பெண்ணின் உருவகம் மட்டுமே முக்கியமாகத் தென்பட்டது. இதனால் யாழ்ப்பாண சமூகத்தில் ஆயுதம்

தரித்த பெண்ணின் வடிவமே பெண் விடுதலையின் குறியீடாகத் தோற்றம் எடுத்தது. இந்தப் படிமம், பரந்துபட்ட பெண் சமூகத்தினரையும் பொது மக்களையும் கவர்ந்து விடவில்லை. அத்தோடு பெண் போராளிகள் தமது நீண்ட கருங்கூந்தலை கத்தரித்து விடுவதென மேற்கொண்ட துணிச்சலான தீர்மானம் பெரிய சர்ச்சையைக் கிழப்பியது. தமது நீண்ட முடியை இரட்டையாகப் பின்னி, சுற்றிவளைத்துக் கட்டுவதுதான் பெண் போராளிகளின் பாணியாக இருந்தது. ஆனால் திடீரென குறுக வெட்டிய முடியுடன் பெண் போராளிகள் தென்பட்டபோது, அது சமூகத்தில் ஒரு பரபரப்பை ஏற்படுத்தியது. கண்டனங்களும் கிளம்பின. தமிழ்ப் பண்பாட்டிற்கு விரோதமான நடவடிக்கையென பெண் போராளிகள் மீது குற்றம் சுமத்தப்பட்டது. ஆனால் பெண் போராளிகள் இது பற்றி பெரிதும் அலட்டிக் கொள்ளவில்லை. விரும்பினால், முடியை குறுக வெட்டலாம் என்ற இயக்கத்தின் முடிவு பெண் போராளிகள் மத்தியில் அமோக வரவேற்பைப் பெற்றது. நேரத்தைப் பிடிக்கும் சிகை அலங்கார மரபிலிருந்து விடுபடுவதற்கு தமக்கு வாய்ப்புக் கிடைத்ததையிட்டு அவர்களுக்கு மகிழ்ச்சி. ஆனால் உண்மையில் இந்த முடிவு இராணுவ தேவைக்காக மேற்கொள்ளப்பட்டது. போர்ப் பயிற்சியின்போதும், போர் நடவடிக்கைகளின்போதும் நீண்ட பின்னிய முடிகளை வைத்திருப்பது, இளம் பெண்போராளிகளுக்கு ஒரு தொல்லை கொடுக்கும் விடயம். எனினும் எல்லாப் பெண் போராளிகளுமே முடியை குறுக வெட்டவில்லை. அனேகமானோர் இரட்டையாக முடியைப் பின்னி, அவர்களது பாணியில் சுற்றி வளைத்துக் கட்டுவார்கள். என்னைப் பொறுத்த வரையில், முடியை எவ்விதம் வைத்துக் கொள்வது என்பது பற்றி ஒரு தேர்வுச் சுதந்திரம் அவர்களுக்கு உண்டு என்பது ஒரு முற்போக்கான விடயமே.

ஆயுதப் போராட்டத்தில் பங்குகொள்வது குறித்து தமக்கு முன்வைக்கப்பட்ட குற்றச்சாட்டுகள் பற்றி பெண் போராளிகள் பெரிதாக பொருட்படுத்தவில்லை. இலட்சியத்தில் உறுதியாக நின்ற அவர்கள், இந்த எதிர்ப்பு அலைகளை தன்நம்பிக்கையோடும் பெருந்தன்மையோடும் முகம்கொடுத்தார்கள். இதே வேளை போராட்டத்தில் பெருந்தொகை யான இளம் பெண்கள் இணைந்தார்கள். பெற்றோர்களுக்கு ஆரம்பத்தில் ஏற்பட்ட அதிர்ச்சி காலப்போக்கில் தணிந்து போனது. பெண்களும் போராட்டத்தில் பங்குகொள்ளும் யதார்த்த புற நிலையை தம்மால் மாற்றிவிட முடியாது என உணர்ந்த அவர்கள் நிலைமையை ஏற்றுக் கொண்டார்கள். எனவே, ஆயுதப் போராட்டத்தில் பெண்கள் பங்குகொள்வது என்பது தமிழ்ச் சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட மரபாகிவிட்டது. பலர் எதிர்பார்த்ததுபோல அன்றி எச்சரித்தது போல தமிழ்ப் பண்பாடு சீர் குலையவில்லை.





தமிழீழ விடுதலைப் புலிகளின் இராணுவக் கட்டமைப்பான பெண் போராளிகளின் படையணிகள் வளர்ச்சி பெற்று விரிவாக்கம் கண்டதுடன், விடுதலைப் போரிலும் முக்கிய பங்காற்றி வருகின்றன. 1991 ஜூலை 10ம் திகதி தொடங்கிய ஆனையிறவுச் சமரின்போது இது புலனாகியது. இந்தப் பெரும் சமரில் பெண் போராளிகளைக் கொண்ட பல படைப் பிரிவுகள் தாக்குதல் நடவடிக்கைகளில் ஈடுபட்டு துணிவாற்றலுடன் வீர சாதனை படைத்தனர். விடுதலைப் புலிகளுக்கும் சிங்களப் படையினருக்கும் மத்தியில் நிகழ்ந்த இந்த உக்கிரமான மோதல்கள் 24 நாட்கள் வரை நீடித்தன. அப்பொழுது விடுதலைப் புலிகளிடம் மரபு வழிப் போருக்கான கனரக ஆயுதங்கள் இருக்கவில்லை. நவீன ரக விமான எதிர்ப்பு ஏவுகணைகளும் இருக்கவில்லை. அத்தோடு, புலிகளுக்கு அனுகூலமற்ற திறந்த வெளி நிலப்பரப்புகளிலேயே சண்டைகள் நிகழ்ந்தன. இந்தக் காரணங்களால் புலிகள் தரப்பில் பெரும் உயிர்ச் சேதம் ஏற்பட்டது. இறுதியில், புலிகளின் படையணிகள் சமர்க் களத்திலிருந்து தந்திரோபாயமாக பின்வாங்க நிர்ப்பந்திக்கப்பட்டன. இந்தச் சமரில் 123 பெண் போராளிகள் உட்பட 573 புலிவீரர்கள் கொல்லப்பட்டனர். நூற்றுக்கணக்கானோர் காயம் அடைந்தனர். இந்தப் பின்னடைவிலிருந்து விடுதலைப் புலிகள் ஒரு முக்கிய பாடத்தைக் கற்றுக் கொண்டனர். அதாவது, தமது படையணிகளை ஒரு மரபு வழி இராணுவக் கட்டமைப்பாக உருவாக்க வேண்டும் என்ற அவசியத்தையும் தேவையையும் அவர்கள் உணர்ந்து கொண்டார்கள். இந்தப் போர் நடவடிக்கையை திட்டமிட்ட வேளையிலும், செயற்படுத்திய வேளை யிலும் மக்கள் வழங்கிய பங்களிப்பே ஆனையிறவுச் சமரின் முக்கிய அம்சமாக அமைந்தது. புவியியல் ரீதியாகப் பார்க்கப்போனால், யாழ்ப்பாணக் குடாநாட்டின் தொண்டையை நெரிடுவதுபோல அமைந்திருந்த இப் படைத்தளம் தமிழ் மக்களுக்கு நீண்ட காலமாகவே எரிச்சலூட்டி வந்திருக்கிறது. இப்படைத்தளம் விடுதலைப் புலிகளால் அழிக்கப்படவுள்ளதும், அது சாத்தியமானால், யாழ்ப்பாணக் குடாநாட்டு மக்கள் வன்னி மாநிலத்திற்கு சுதந்திரமாக சென்று வரும் வாய்ப்பு ஏற்படுமென்பதும் தமிழ் மக்களுக்கு ஊக்கத்தை ஏற்படுத்தியது. இதனால், உணவு வகைகள் வழங்குவதிலிருந்து, போக்குவரத்து வாகன வசதிகள் செய்வது வரை, பல்வேறு வழிகளில் யாழ்ப்பாணப் பொது மக்கள் ஆனையிறவுச் சமருக்கு பங்களிப்பு செய்தனர். எனக்கிருந்த மருத்துவ அனுபவத்தின் அடிப்படையில், காயமடைந்த போராளிகளுக்கு உதவி செய்ய நானும் முன்வந்தேன். நாம் வசித்த வீட்டுக்கு அருகாமையில் இரண்டு மருத்துவ நிலைகளை ஜெயந்தியும் ஜெயாவும் நிறுவியிருந்தனர். அங்கு காயமடைந்து சிகிச்சை பெற்று வந்த பெண்

போராளிகளைப் பராமரிக்கும் பொறுப்பு எனக்குத் தரப்பட்டது. இது எனக்குப் புதிய அனுபவத்தைத் தந்தது. முன்னேறிய நாடுகளில் பிரமாண்டமான வைத்திய வசதிகள் கொண்ட பின்புலத்துடன் மருத்துவ, சத்திர சிகிச்சை நோயாளிகளை பராமரிப்பது வேறு; மருத்துவ வசதிகளற்ற, தற்காலிகமாக ஒழுங்கு செய்யப்பட்ட நிலைகளில் காயமடைந்தோரைப் பராமரிப்பது வேறு. இரண்டிற்கும் பாரிய வேறுபாடுகள் உண்டு என்பதை பட்டறிந்து கொண்டேன். குடல் முளை அகற்றும் அறுவைச் சிகிச்சையின் பின்னர் ஏற்படும் துப்பரவான காயங்களுக்கு சிகிச்சை அளிப்பது வேறு; கூர்மையான பீரங்கிக் குண்டு சிராய்களால் பிளக்கும் தசைகளுக்கு மருந்து கட்டுவது வேறு. இளம் பெண்களுக்கு உடற்பயிற்சி விபத்தின்போது ஏற்படும் சிறிய முறிவுகள் வேறு. 50 கலிபர் இயந்திரத் துப்பாக்கி ரவை ஊடறுத்து 18 வயது இளம் பெண் ஒருத்தியின் கால் எலும்பு சிதறுவது வேறு.

மருத்துவப் பிரிவில் பணிபுரியும் பெண் போராளிகளுக்கு இயக்கத்தைச் சேர்ந்த மருத்துவர்கள் சிறப்பான மருத்துவ தாதிப் பயிற்சி அளித்திருக்கிறார்கள். இந்த அடிப்படையான தாதிப் பயிற்சியோடு, மருத்துவக் கருவிகளும் போதிய மருந்துகளும் இல்லாத சூழ்நிலையில், இந்த இளம் தாதிகள் அங்கு வந்து சேரும் மிகவும் சிக்கலான, ஆபத்தான காயங்களுக்கு சிகிச்சை அளிக்கும் திறன் அபாரமானது. இயக்கத்தின் மருத்துவ நிலையங்களில் ஏராளமான படுகாயமடைந்த பெண் போராளிகள் சிகிச்சை பெற்று வந்தனர். படுகாயமடைந்தவர்கள், காயத்தின் வேதனை தாங்கமுடியாது புலம்பும் வேளைகளில் சிறுகாயமடைந்தோர் அவர்களைத் தேற்றுவது மனதை உருக்கும். காயமடைந்த பெண் போராளிகளின் தேவைகளையும் வேண்டுகோள்களையும் சமாளிப்பதில் எல்லையற்ற பொறுமையைக் கடைப்பிடித்தார்கள் மருத்துவத் தாதிமார். மருத்துவ தொழில் நுட்ப அனுபவம் இல்லாத போதும், காயங்களுக்கு மருந்து கட்டுவதில் தாதிமாரின் கரங்கள் நுட்பமாக செயற்பட்டன. காயங்களிலிருந்து தொற்றுநோய் பரவாமல் தடுப்பதில் வெற்றிகரமாக செயற்பட்டனர். இளம் பெண்களுக்கு ஏற்பட்ட பெரும் காயங்களைப் பார்த்தாலேயே சிலருக்கு அங்கலாய்ப்பு ஏற்படக்கூடும். ஆனால் இங்கு நிலைமை அப்படியல்ல. போர் அனுபவத்தினாலோ அல்லது கடும் காயங்களின் வேதனையாலோ. பெண் போராளிகள் மனம் தளர்ந்து போகவில்லை. இவர்களுக்குப் பணி புரிவதில் எனக்கு பெரு மகிழ்ச்சி. காயங்களின் வேதனைகளையும் சகித்துக் கொண்டு, கேலியும் பகிடியுமாக சிரித்து மகிழும் இவர்களின் மகிழ்ச்சியில் நானும் இணைந்து கொள்வேன். "உனது காயத்தை அன்ரி தொட்டால்போதும் அது குணமாகிவிடும்" என்று காயமடைந்த பெண்





போராளிகள் சொல்வார்கள். ஆனால் உண்மையில் அப்படியானதொரு அற்புத சக்தி என்னிடம் இருக்கவில்லை. அவர்கள் துரித கதியில் குணமாகி வந்ததற்கு அவர்களது இளமையே காரணம். என்றாலும், எனது பராமரிப்பில் அவர்களுக்கு இருந்த அபார நம்பிக்கை என்னை மகிழ்ச்சியடைய வைத்தது.

சுண்டுக்குளியில் பெண்களுக்கான மருத்துவ சிகிச்சை நிலையங்கள் அமையப் பெற்றிருப்பது, காலக் கெதியில் யாழ்ப்பாண பொதுமக்களுக்கு தெரிய வந்தது, இளம் பெண் போராளிகள் களத்தில் போராடி காயமடைந்து சிகிச்சை பெற்றுவரும் செய்தி மக்கள் மத்தியில் ஆழமான அனுதாபத்தை தோற்றுவித்தது. தமது அக்கறையையும் நன்றியையும் தெரிவிக்க விரும்பிய யாழ்ப்பாண மக்கள், படுக்கைகள், தலையணைகள் சமைத்த உணவுகள், இளநீர்கள் என பல்வேறு பொருட்களை மருத்துவ நிலையங்களுக்கு அனுப்பி வைத்தார்கள். சுண்டுக்குளியில் இயக்கத்தின் தற்காலிக மருத்துவ நிலையங்கள் அமையப் பெற்றுள்ளன என்ற தகவல் சிறீலங்கா ஆயுதப் படையினருக்கு தெரிய வந்தது. ஒரு நாள் மதிய நேரம், சிறீலங்காவின் குண்டுவீச்சு விமானங்கள் எமது மருத்துவ நிலைகள் மீது திடீரென்று தாக்குதலை நிகழ்த்தின. நான் திகைத்துப் போனேன். சிறிது நேரத்திற்கு முன்னர் தான் நான் அங்கிருந்து வீடு திரும்பினேன். காயமடைந்த போராளிகளுக்கு ஏதாவது தேவைகள் இருக்கின்றதா என்பதை அறியவே நான் அங்கு சென்றேன். மருத்துவ நிலையத்திலிருந்து நான் வீடு திரும்பி ஐந்து நிமிடங்கள் மட்டுமே இருக்கும் ஒரு பிரமாண்டமான வெடிச்சத்தம் அதிர்ந்தது. அதன் அதிர்வு அலையால் நான் தரையில் வீசப்பட்டேன். எமது வீடு மீதுதான் குண்டு வீச்சு நடைபெறுவதாக எண்ணினேன். உடனே எழுந்து பதுங்கு குழியை நோக்கி ஓடினேன். வீட்டுக் கதவை தாண்டியபோது, பயங்கர ஓசையுடன் இரண்டாவது குண்டும் வெடித்தது. அதன் அதிர்வு அப்பகுதியையே நடுங்கச் செய்தது. குண்டுச் சிதறல்களும் அவ்விடமெல்லாம் பறந்தது. நான் பதுங்கு குழிக்குள் ஒளிந்தேன். சிறிது நேரம் கழித்து எமது மெய்ப்பாதுகாவலரான போராளிகள் என்னிடம் ஓடிவந்தார்கள். குண்டுவீச்சு விமானங்கள் சென்றுவிட்டதாக சொன்னார்கள். எமது வீட்டுக்கு மிகவும் சமீபமாக விமானத் தாக்குதல் நிகழ்ந்ததால் நாம் எல்லோருமே பதட்டமடைந்து போனோம். குண்டுகள் எங்கே வீசப்பட்டிருக்கலாம் என்று நாம் அங்கலாய்த்தபோதுதான் எமது மருத்துவ நிலையங்கள் மீது தாக்குதல் நடத்தப்பட்டதாக தகவல் வந்தது. உடனடியாக நான் அங்கு ஓடிச் சென்றேன். அதிர்ஷ்டவசமாக, மருத்துவ நிலையத்திலிருந்த பெண் போராளிகள் எவருக்குமே உயிர்ச் சேதமோ அன்றி காயமோ

ஏற்படவில்லை. ஜெட் விமானங்கள் ஆகாயத்தில் சுற்றியதை அறிந்ததுமே காயமடைந்த போராளிகளும் தாதியரும் பதுங்கு குழிக்குள் ஒளிந்து கொண்டதால் உயிர் தப்பிப் பிழைத்தனர். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக வீதியால் அவ்வழியே சென்ற ஒரு அப்பாவிப் பெண் தலைசிதறி உயிர் நீத்தார். ஆனையிறவுச் சமரை அடுத்து நாம் வசித்த சுண்டுக்குளி பகுதி அடிக்கடி விமானக் குண்டு வீச்சுக்கு இலக்காகியது. எமது வீட்டிற்கும் குறிவைக்கப்படலாம் என அச்சுறுத்தல் எழுந்த காரணத்தினால் நாம் சுண்டுக்குளியிலிருந்து இடம் மாறி, கொக்குவில் பகுதியில் ஒதுக்குப் புறமான ஒரு வீட்டில் குடியமர்ந்தோம். யாழ்ப்பாணம் மீதான படையெடுப்பு வரை நாம் அந்த வீட்டிலேயே வசித்து வந்தோம்.

## யாழ்ப்பாணத்தில் புலிகளின் நிர்வாகம்

போர்க்கால சூழ்நிலைக்கு ஏற்றவாறு தமது வாழ்க்கையை அமைத்துக் கொண்ட யாழ்ப்பாண மக்கள், இயல்பான செயற் பாடுகளோடு காலத்தை ஓட்டினர். அதே சமயம், விடுதலைப் புலிகள் இயக்கமும் தனது இராணுவ அரசியற் பிரிவுகளை விரிவாக்கம் செய்ததோடு, சிவில் நிர்வாக கட்டமைப்புகளையும் பலப்படுத்தியது. சட்டம் ஒழுங்கைத் தவிர பல்வேறு அரச நிறுவனங்களையும் செயற்படுவதற்கு புலிகள் அனுமதித்தனர். அரச நிர்வாக கட்டமைப்பான கச்சேரி செயலகம் மற்றும், கல்வி, சுகாதாரம், போக்குவரத்து, விவசாயம் போன்ற துறைசார்ந்த இலாகாக்கள் அரச நிதியுதவியுடன் செயற்பட்டு வந்தன. மத்திய அரச நிறுவனங்களின் செயற்பாடுகளை மேற்பார்வை செய்து கண்காணிக்கும் நோக்குடனேயே ஒரு 'நிழல்' நிர்வாகத்தையும் விடுதலைப் புலிகள் நிறுவியிருந்தனர். இந்த நிழல் நிர்வாக கட்டமைப்பை செயற்படுத்த அனுபவமும் ஆற்றலும் மிக்க பொதுமக்களையும் புலிகள் வேலைக்கு அமர்த்தினர். திரு. தமிழேந்தியின் தலைமையின் கீழ் நிதிப்பிரிவு செயற்பட்டது. இப்பிரிவில் குடிமக்களான அனுபவம் பெற்ற கணக்காளர்களும் பணிபுரிந்தனர். ஒரு சிறப்பான வரி அறவிடும் முறையும் அறிமுகப்படுத்தப்பட்டது. வர்த்தகர்களிடமும் நடுத்தர வியாபாரிகளிடமுமே வரி அறவிடப்பட்டது. இந்திய அமைதிப் படை வருவதற்கு முன் பொருளாதார ஆய்வு நிறுவனம், தமிழ் மக்களின் பொருளாதார வாழ்வை முன்னேற்றமடையச் செய்யும் நோக்குடன் விரிவாக்கம் செய்யப்பட்டது. சட்டம் ஒழுங்கைப் பேணும் நோக்கில் முதலில் காவல்துறைக் கட்டமைப்பும், பின்னர் நீதி நிர்வாக சேவையும்





உருவாக்கப்பட்டன. இன்னொரு விதத்தில் சொல்லப்போனால், ஒரு நடைமுறையான அரச கட்டுமாணத்தை விடுதலைப் புலிகள் நிறுவினார்கள். இதன் தலைமை செயலகம் யாழ்ப்பாணத்திலும், கிளை-கள் தமிழர் தாயகத்தில் புலிகளின் கட்டுப்பாட்டிலுள்ள சகல பகுதிகளிலும் நிறுவப்பட்டன. திரு. பிரபாகரன், குறிப்பாக வட மாகாணத்தில் தனது நிர்வாகக் கட்டமைப்பை பலப்படுத்தி வந்த வேளையில், கிழக்கில் திரு. பிரேமதாசா தனது ஆயுதப் படைகளை கட்டவிழ்த்து விட்டார். சிங்கள ஆயுதப் படைகள், கிழக்கு மாகாண கரையோரப் பகுதியில் புலிகளின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்த பட்டினங்கள் நகரங்களைக் கைப்பற்ற, புலிப் படைப் போராளிகள் காட்டுப் புறங்களுக்கு பின்வாங்கினர்.

நாம் யாழ்ப்பாணத்திலிருந்து திரும்பிய வேளையில் இயக் கத்தின் அரசியல் அமைப்பான விடுதலைப் புலிகள் மக்கள் முன்னணி யாழ்ப்பாணம் கோண்டாவில் பகுதியில், தலைமைச் செயலகத்தை நிறுவி, செயற்பட்டு வந்தது. யாழ்ப்பாணக் குடா நாடு அடங்கிலும் மக்கள் முன்னணியின் கிளைகள் நிறுவப்பட்டன. சட்டம், ஒழுங்கு, நிதிப் பிரிவு தவிர்ந்த ஏனைய சிவில் நிர்வாகக் கட்டமைப்புகள் மக்கள் முன்னணியின் கட்டுப்பாட்டின் கீழேயே இயங்கின. மக்கள் முன்னணியிலும், மற்றும் சிவில் நிர்வாக சேவைகளிலும் பொதுசன ஊழியர்கள் இணைத்துக் கொள்ளப்பட்டதால், விடுதலைப் புலிகள் இயக்கம் ஒரு மக்கள் இயக்கம் என்ற வகையில் நற்பெயர் ஈட்டியது. ஆனால் காலப் போக்கில் யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற புலிகளின் நிர்வாகம் விமர்சனத்துக்கு இலக்காகியது. வெளிநாடுகளில் தஞ்சம் கோருவதற்காக கொழும்புக்கு அலை அலையாக அள்ளுப்பட்ட இளைஞர்களைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் புலிகளால் நடைமுறைப்படுத்தப்பட்ட கடவுக் கட்டுப்பாட்டு முறை (பாஸ் முறை) ஒரு பெரிய சர்ச்சையையே உருவாக்கிவிட்டது. தமிழ் இளம் சமூகத்தினர் பெருந்தொகையில் தமிழர் தாயகத்தை விட்டு வெளியேறுவதன் விளைவாக தமிழ்ச் சமூக கட்டமைப்பு சிதையக் கூடுமென புலிகள் அஞ்சினார்கள். இதனைத் தடுப்பதற்காகவே கடவுக் கட்டுப்பாட்டு முறை கொண்டுவரப்பட்டது. ஆனால் தமிழ்ப் பெற்றோர்களின் சிந்தனையோட்டம் மாறாக இருந்தது. தமது பிள்ளைகள் போர்ச் சூழலிலிருந்து வெளியேறி, வெளிநாடு சென்று, சுபீட்சகரமான வாழ்வைத் தேடிக் கொள்ள வேண்டுமென பெற்றோர்கள் விரும்பினார்கள். இதனால் விடுதலைப் புலிகளின் கொள்கைக்கும் தமிழ்ப் பெற்றோர்களின் அபிலாசைக்கும் மத்தியில் முரண்பாடு நிலவியது.

பெரும் சர்ச்சையையும் விமர்சனத்தையும் தோற்றுவித்த அடுத்த விடயம் தமிழ்ச் சினிமாப் படங்களாகும். பெரும்பாலான தமிழ்ச் சினிமாப் படங்கள் மெய்யான யதார்த்த வாழ்க்கையை கொச்சைப்படுத்துவதோடு மக்களின் மனநிலையையும் மாசுபடுத்துவதாகவும் புலிகளின் தலைமைப் பீடம் கருதியது. ஆனால் மக்கள் அப்படிக் கருதவில்லை. படங்களை தெரிவு செய்யும் உரிமை தமக்கு உண்டு என்றும், இந்தத் தேர்வு உரிமையோடு படங்களை சுயமாக தணிக்கை செய்யும் ஆற்றலும் தமக்கு இருக்கின்றதென்றும் பெரும்பான்மையான மக்கள் கருதினார்கள். இவர்களது கருத்து சரியானதென்றே நானும் நினைத்தேன். போர்ச் சூழலில் மக்களுக்கு பொழுது போக்கு எதுவுமில்லை என்பதும் இச்சர்ச்சைக்குரிய பின் புலத்திலுள்ள ஒரு முக்கிய காரணம். பொழுது போக்கு மறுக்கப்பட்ட சூழலில்தான், மனித வாழ்வின் மேம்பாட்டிற்கு பொழுது போக்கு எத்தகை முக்கிய பங்கு வகிக்கிறது என்பதைக் கண்டு கொள்ள முடிகிறது. போரும் வன்முறையும் தலைவிரித்தாடும் ஒரு கொந்தளிப்பான சூழ்நிலையில் எந்த வடிவிலான பொழுது போக்கு வாய்ப்புகள் கிடைக்குமா என மக்கள் அங்காலாய்த்துக் கொண்டிருந்த நேரமது. பொதுமக்களிற் பலர் எமது வீட்டிற்கு வந்து தமது விரக்தியை வெளிப்படையாகவே சொன்னார்கள். பல விடங்களில் அவர்களது கருத்தை நாம் ஏற்க வேண்டியிருந்தது. இந்த விரக்திகள், விமர்சனங்களுக்கு மத்தியிலும் யாழ்ப்பாணத்தில் வாழ்க்கை இயல்பாக ஓடிக்கொண்டேயிருந்தது. விடுதலைப் புலிகளின் நிர்வாகத்தில் குறைபாடுகள் இருந்தபோதும் பொதுமக்கள் அதனைப் பொறுத்துக் கொண்டார்கள். விடுதலைப் புலிகள் சுதந்திர வீரர்கள் என்பதும் அவர்களே தமது சொந்தப் பிள்ளைகள் என்பதும் மக்களின் கருத்து. ஒரு புறத்தில் ஒரு நவீன அரசுக்கு எதிராக முழு அளவிலான போரை நடத்திக் கொண்டு, மறுபுறத்தில் தமது கட்டுப்பாட்டுப் பகுதியில் சிவில் நிர்வாகத்தை நடத்துவதில் புலிகள் இயக்கம் எதிர்கொண்ட கடுமையான சிக்கல்களை மக்கள் அறிவார்கள். அதனால் விடுதலைப் புலிகள் மீது மக்களுக்கு அனுதாபமே மேலோங்கி நின்றது. ஒரு காவல் துறை நிர்வாகமும், நீதி நிர்வாக சேவையும் செயற்படத் தொடங்கியதை அடுத்து யாழ்ப்பாணத்தில் அபாரமான முறையில் குற்றச் செயல்களின் விகிதாசாரம் வெகுவாகக் குறைந்தது. விடுதலைப் புலிகளின் நிர்வாக இயந்திரத்தில் பெண்கள் பங்களிப்பதை ஊக்குவிக்கும் நோக்கத்துடன் தமிழீழக் காவல் துறையினர் பெண்களைச் சேர்ந்து, பயிற்சியளித்து, காவல் துறை பெண் அதிகாரிகளாக சேவைக்கு அமர்த்தினர். காவல் துறையில் பெண்கள் இணைந்து கொள்வதால், பெண்களுக்கு எதிராக குற்றம் புரிபவர்கள் தண்டிக்கப்படுவதுடன் பெண்களுக்கு நீதியும்





வழங்கப்படும் என்ற கருத்தும் நிலவியது. குற்றவாளிகளை தண்டிக்கும் அதிகாரத்துடன் பெண் காவல்துறை உறுப்பினர்களும், பெண் போராளிகளும் வீதிகளில் நடமாடியதால் பெண் சமூகம் மத்தியில் நிம்மதியும் பாதுகாப்பும் நிலவியது. இரவு வேளைகளில் பயம் எதுவுமின்றி பெண்கள் பயணம் செய்ய முடிந்தது. பெண்களுக்கு கிட்டிய இப்புதிய அனுபவம் விடுதலைப புலிகளது நிர்வாகத்தின் மகத்தான சாதனை என்றே சொல்ல வேண்டும்.

தமது மட்டுப்படுத்தப்பட்ட வளங்களோடும் விடுதலைப் புலிகள் இயக்கம் கல்வியின் மேம்பாட்டிற்காக உழைத்தது. அரச கல்வி முறையில் தலையீடு செய்யாமல் திரு. இளங்குமரன் (பேபி சுப்ரமணியம்) தலைமையில் தமிழீழ கல்விக் கழகம் நிறுவப்பட்டது. இக்கல்விக் கழகம் நிறுவப்பட்டு, தமிழ்மொழி, தமிழ்ப் பண்பாடு, தமிழ் வரலாறு போன்ற துறை சார்ந்த பாடத் திட்டங்களில் புதிய நூல்களை அறிமுகப்படுத்தி கல்வி வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் உதவியது. சிறீலங்கா அரசின் கல்வி இலாகாவால் வெளியிடப்பட்ட பாட நூல்கள் தமிழர்களது வரலாறு பற்றியும் நாகரீகம் பற்றியும் திரிபுபடுத்தப்பட்ட கருத்துகளும் தகவல்களும் நிறைந்து இருந்தன. இதனைக் கருத்திற்கொண்டே விடுதலைப் புலிகளின் கல்விக் கழகம், தமிழீழ மக்களின் உண்மையான வரலாற்றையும் தமிழ் மொழியின் அழகையும் ஆழத்தையும் எடுத்தியம்பும் புதிய பாட நூல்களை வெளியிட்டது. விடுதலைப் புலிகளின் இந்த முற்போக்கான கல்விக் கொள்கையானது, தமிழ் மக்களின் அறிவுத் தாகத்திற்கு இசைவாக இருந்ததால் யாழ்ப்பாண சமூகத்தில் பெரும் வரவேற்பைப் பெற்றது.

## பெண் போராளிகள்

இது இவ்வாறிருக்க விடுதலைப் புலிகளுக்கும் சிறீலங்கா அரச படைகளுக்கும் மத்தியில் பல முனைகளில் மோதல்கள் நிகழ்ந்தன. இந்த மோதல்களில் பெண் போராளிகளின் பங்களிப்பு விடுதலைப் போரின் இணைபிரியாத அம்சமாக வடிவெடுத்தது. ஆனையிறவுச் சமரில் பெண் போராளிகளே முக்கிய பங்கு வகித்ததைத் தொடர்ந்து 'மின்னல் இராணுவ நடவடிக்கை' என்ற பெயரால் மணலாற்றில் நிகழ்ந்த தற்காப்புச் சமரிலும், பெண் போராளிகள் பங்கு கொண்டனர். பலாலிப் பெருந்தளத்தின் எல்லையோரக் காவல் நிலைகளில் நிலை

கொண்டிருந்த பெண் புலிகளின் போர் அணிகள், சிறீலங்கா இராணுவத்தின் மினி முகாம்கள் மீது துணிகரத் தாக்குதல்களை நடத்தி சாதனைகள் படைத்தனர். விடுதலைப் போராட்ட வரலாற்றில் பெண் போராளிகளின் பங்களிப்பு ஆழமாகிச் சென்றபோது, அவர்களது வீர தீரச் செயல்கள் பற்றிய கதைகள் எனது காதுக்கு எட்டியது. இந்த இளம் பெண்கள் எதிர்கொண்ட திகைப்பூட்டும் சம்பவங்களையும், அபூர்வமான அனுபவங்களையும் எழுத்தில் வடிக்க வேண்டுமென எனக்கு ஒரு ஆசை பிறந்தது. காலமும், காலத்தின் விரிப்பில் கட்டவிழும் நிகழ்வுகளும், துரித கெதியில் ஓடிக் கொண்டிருந்தன. வரலாற்று நிகழ்வுகளை உட னடியாகப் பதியாவிட்டால் ஞாபகத்தில் பசுமையிலிருந்து அவை மங்கலாகிவிடலாம். அத்தோடு புதிதாக கட்டவிழும் நிகழ்வுகளால் பழைய வரலாற்றுச் சம்பவங்களின் உண்மைகளும் திரிவுபடலாம். ஆகையால் தான் பெண் போராளிகளின் போராட்ட வரலாற்றை ஆவணப்படுத்தி ஒரு நூல் வெளியிட முடிவு செய்தேன். பெண்களின் படைப்பிரிவுக்கு அன்று தளபதியாகப் பணிபுரிந்த ஜெயந்தி, எனது எழுத்து முயற்சிக்கு முழுமையான ஒத்துழைப்புத் தர முன்வந்தார். அத்தோடு பல்வேறு சமர்களில் களமாடி வீரசாதனை படைத்த பெண் போராளிகள் சகலரையும் எனக்கு அறிமுகம் செய்து வைக்கவும் இணங்கினார். முக்கிய பெண் தளபதிகள் எனது வீட்டுக்கு வருகை தந்து போராட்ட வரலாறு பற்றி என்னுடன் கலந்துரையாடினர். பல சமயங்களில் நான் பெண் போராளிகளிடமிருந்து செவ்வி எடுக்கும்போது, அவர்களது சொந்தப் போர் அனுபவங்களை அவர்களது வாயால் கேட்கும் போது மெய்சிலிர்க்கும். மாவீரர் ஆகிவிட்ட தமது தோழிகளின் வீரம் செறிந்த வரலாறுகளை விபரிக்கும்போதெல்லாம் தாழ்ந்த குரலில் தன்னடக்க மாகவும் மரியாதையுடனும் கதைப்பார்கள். சிலர் தமது சொந்தப் போர்ச் சாதனைகளை கூறும்போது உணர்ச்சிவசப்படுவார்கள். சில சிக்கலான நிகழ்வுகளை சிலர் நடித்துக் காட்டியும் விளக்குவார்கள். ஆழமான அதிர்ச்சியூட்டும் அனுபவங்களை சொற்களில் வடிக்க முடியாது திண்டாடுபவர்களும் உண்டு. போர்க்கள வெற்றிகள் பற்றிச் சொல்லும்போது எல்லோருமே நெஞ்சை நிமிர்த்தியபடி பெருமிதத்துடன் பேசுவார்கள். களமாடிக் கொண்டிருக்கும் தமது சக போராளிகளுக்கு அவசியமாகத் தேவைப்படும் ரவைகள் வெடிபொருட்களைக் காவியபடி, இருபுறத்திலும் எறிகணைகள் வீழ்ந்து வெடித்தபடி இருந்தபோதும், துணிந்து சாவுக்கு பயப்படாது களமுனைக்குச் சென்ற சம்பவங்களை





சில பெண் போராளிகள் விபரித்தார்கள். தாம் பசி கிடந்தபடி, போர் முனையில் நின்ற தமது சக போராளிகளுக்கு நேரம் தவறாது, சிரமமாக உணவுப் பொட்டலங்களை எடுத்துச் செல்லும் தன்னலமற்ற சேவை பற்றியும் சில பெண் போராளிகள் எடுத்துச் சொன்னார்கள். கள முனைகளில் காயமுற்றோருக்கு அவசர சிகிச்சை அளித்து, உயிராபத்தையும் பொருட்படுத்தாது அவர்களை சுமந்து செல்லும் பெண் மருத்துவப் பேராளிகளின் துணிச்சலான சாதனைகள் பற்றியும் சிலர் விபரித்தார்கள். சிங்கள ஆயுதப் படைகளின் திடீர் சுற்றிவளைப்புகளை உடைத்துச் சென்ற வியப்பூட்டும் சம்பவங்கள் பற்றியும் சொன்னார்கள். சில பெண் போராளிகள் தமது மரணம் பற்றி முன்னுணர்ந்து சொன்னதையும், பின்னர் அது அவ்வாறே நிகழ்ந்ததாகவும் எனக்கு சிலர் விசித்திரமான சம்பவங்களை கூறினார்கள். இப்படியான பல வியப்பூட்டும் சம்பவங்களை, வீரம் செறிந்த தனிமனித வரலாறுகளை, அலாதியான அர்ப்பணிப்புகளை இப் பெண் போராளிகளிடமிருந்து கேட்டபோது நான் மலைத்துப் போனேன். அவர்கள் மத்தியில் பிரசன்னமாக இருப்பதே எனக்குப் பெருமிதமாக இருந்தது. அவர்கள் கூறிய சம்பவங்களையும், வரலாற்று நிகழ்வுகளையும் அவர்களது ஒட்டுமொத்தமான போரனுபவங்களையும் தொகுத்துப் பார்த்தபோதுதான் அவர்களது இலட்சியப் பற்றுறுதியையும், அர்ப்பணிப்பின் ஆழத்தையும் புரிந்து கொள்ள முடிந்தது. இந்தப் புரிந்துணர்வு ஏற்பட்ட காரணத்தினாலேயே பெண் போராளிகள் பற்றி விடயம் தெரியாது கண்டன விமர்சனங்களை எழுதுபவர்கள் மீது எனக்கு கடும் சினம் ஏற்படுவதுண்டு. **விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள்** என்ற எனது ஆங்கில நூல் 1993 ஜனவரி முதல் திகதி யாழ்ப்பாணத்தில் பிரசுரமாகியது. பின்னர் விடுதலைப் புலிகளின் அனைத்துலக செயலகம் இந்நூலினை லண்டனிலும் பாரிசிலும் வெளியிட்டது. விடுதலைப் புலிகளின் மகளிர் கட்டமைப்பின் தோற்றம், வளர்ச்சி, முதிர்ச்சி பற்றிய வரலாற்றுப் பதிவாகவே இந் நூல் அமைகிறது. தமிழீழ விடுதலைப் போரில் பெண் போராளிகள் பங்கு கொண்ட சமர்களையும் அவர்களது சாதனைகளையும் இந்நூல் விபரிக்கின்றது. 1986 ஒக்ரோபரில், மன்னாரில் நிகழ்ந்த சமரில் முதற் தடவையாக போராட்ட களத்திற்கு அறிமுகமாகியதில் இருந்து 1992 நவம்பர் 23ல் பலாலி இராணுவத் தளம் மீது நிகழ்த்தப்பட்ட தாக்குதலில் பங்குகொண்டதுவரை, விடுதலைப் புலிகளின் பெண் போராளிகளது ஆறாண்டு கால ஆயுதப் போராட்ட

வரலாற்றை இந் நூல் சித்தரித்துக் காட்டுகின்றது. காட்டுப்புற கெரில்லாப் போர் முறையிலிருந்து, மரபு வழிப் போர் வரை பல்வகையான போர் அனுபவங்கள் ஊடாக மகளிர் படையணியில் ஏற்பட்ட வளர்ச்சி பற்றியும் முன்னேற்றம் பற்றியும் இந்த வரலாற்று விவரணத்தில் விபரிக்க முயன்றுள்ளேன். பிரமாண்டமான இராணுவ இயந்திரமான இந்தியப் படைகளை, காட்டுப் புற, நகர்ப் புற கெரில்லாப் போர் வடிவில் முகம்கொடுத்து, புலிகளின் மகளிர் படையானது ஒரு வலுப்பெற்ற போராட்ட சக்தியாக உருவெடுத்ததையும் இந் நூலில் விபரிக்கின்றேன். இந் நூலில், ஒரு பகுதி பெண் போராளிகளுக்கு வழங்கப்படும் போர்ப் பயிற்சி பற்றி விபரித்துக் கூறுகிறது. எந்த வித, ஆபத்தான போர்ச் சூழலையும் எதிர்கொண்டு நிற்க வல்ல, ஒழுங்கும் கட்டுப்பாடும் உடைய போராளிகளாக மாற்றும், மிகத் திறமான கடுமையான பயிற்சி பெண் போராளிகளுக்கு வழங்கப்படுகிறது என்பதை இப் பகுதியில் நான் எடுத்துக் கூறுகின்றேன்.

வரலாற்று ரீதியாகப் பார்க்கும் போது, தமிழீழப் பெண் சமூகம் அரசியல் விழிப்புணர்வுடன் சுயநிர்ணய உரிமைக்கான தேசியப் போராட்டத்தில் பங்குபற்றி வந்துள்ளது புலனாகும். அறுபதுகளிலும் எழுபதுகளிலும் நடைபெற்ற அகிம்சை வழிப் போராட்டங்களில் பெண்கள் தீவிரமாக பங்கு கொண்டனர். தேசிய விடுதலைப் போராட்டத்தில் பெண்களது பங்களிப்பின் ஒரு விரிவாக்கமாகவே ஆயுதப் புரட்சிப் போரிலும் பெண்கள் பங்கு கொள்கிறார்கள் என நான் எனது நூலில் வாதிடுகிறேன். ஆயுதப் போரில் பெண்களை ஈடுகொள்ளச் செய்த, அக, புற சூழல்களை இந் நூலில் எடுத்து விளக்கும் போது, இவை "அரச ஒடுக்குமுறையின் வரலாற்றுச் செல் நெறிகளால் உருவகித்தவை"[1] எனச் சுட்டிக் காட்டியிருக்கிறேன். தேசிய இனக் கட்டமைப்பில் ஒரு இணைபிரியாத அங்கமாக இருப்பதாலும், அரச ஒடுக்குமுறைக்கு நேரடியாக பலியாகி வருவதாலும், மக்களின் போராட்டம் என்ற ரீதியில் தமிழ்ப் பெண்கள் தாமாகவே முன்வந்து ஆயுத எதிர்ப்புப் போரில் பங்குகொள்கிறார்கள் என்றும் இந் நூலில் நான் வாதிடுகிறேன்.

## கண்டன ஆய்வாளருக்கு ஒரு பதில்

"விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள்" என்ற எனது நூல், பெண்ணியம் பற்றிய அறிவாய்வு ஆவணமாக அமையவில்லை என்பதை





நூலின் முன்னுரையிலேயே நான் தெட்டத் தெளிவாக விளக்கி யிருக்கிறேன். "ஆயுதப் போராட்டத்தில் ஈடுபடும் பெண்கள் எதிர் கொள்ளும் பல்வேறான பெண்ணியப் பிரச்சனைகள் பற்றி முழுமையான ஆய்வு செய்வது இந் நூலின் குறியிலக்கிற்கு அப்பாற்பட்டது. எனினும், இந் நூலடங்கிலும் ஆங்காங்கே ஒரு சில பெண்ணியப் பிரச்சினைகளை மேலோட்டமாகத் தொட்டிருக்கிறேன்"[2] என முன்னுரையில் நான் குறிப்பிட்டிருக்கிறேன்.

விடுதலைப் புலிகளின் ஆயுதப் போராட்டத்தில் பெண்களின் பங்கு பற்றிய ஆங்கில எழுத்துக்கள் அரிதாகவே உள்ளன. ஆகவேதான், 1993 ல் வெளியான எனது ஆங்கில நூல், பெண் புலிகள் பற்றிய பல்வேறு திறனாய்வாளர்களினதும் கண்டன விமர்சனங்களுக்கு பலிக்கடா ஆனது. அரசியலிலும் கருத்தியலிலும் திறனாய்வுகளுக்கு இடமுண்டு. எனினும், திறனாய்வை இருவகைப்படுத்தலாம். ஒன்று ஆக்கபூர்வமானது; மற்றது எதிர்மறையானது. சில திறனாய்வாளர்கள் ஆக்கபூர்வமான ஆய்வை செய்கிறார்கள். இந்த ஆய்வுகள் புறநிலைப் பார்வை உடையதாக, நடுநிலையானதாக அமைந்திருக்கும். இந்த ஆக்கபூர்வமான திறனாய்வுகள் பயனுடையவை; வரவேற்கத் தக்கவை. இவை பக்க சார்பு அற்றதாக, ஆய்வுக்கு ஆளாகும் பொருளின் அல்லது விடயத்தின் மெய்நிலையை வெளிக்காட்டுவதாக இருக்கும். அதே சமயம், எதிர்மறையான திறனாய்வு என்பது சாராம்சத்தில் ஆக்கக் கேடானதாக இருக்கும். புற நிலை ஆய்வுக்கு எதிர்மாறானதாக அமையும். இவ்வாய்வுகள் அனேகமாக தவறானதாக இருப்பது மட்டுமன்றி, ஆய்வுக்கு எடுக்கப்பட்ட பொருளின் அல்லது விடயத்தின் மெய் நிலையை புலப்படுத்தத் தவறிவிடும்.

விடுதலைப் புலிகளின் ஆயுதப் போராட்டத்தில் பங்குகொள்ளும் பெண் போராளிகள் பற்றி எதிர்மறையான, கண்டன விமர்சனங்களை முன்வைப்பவர்களுக்கு முன்னணியில் நிற்பவர்கள், மனிதவுரிமைச் செயற்பாட்டாளரும் பெண்ணியவாதிகளும் ஆவர். இவ்வகையான திறனாய்வாளர்கள், எப்பொழுதுமே ஒடுக்குமுறையான அரச இயந்திரத்தின் உள்வட்டத்தைச் சேர்ந்தவர்களாகவே இருப்பார்கள். அரசியற் போராட்ட வடிவமாக உருவாக்கம் பெற்றிருக்கும் தமிழரின் ஆயுத எதிர்ப்பு இயக்கத்தின் நியாயப்பாட்டை கண்டித்து மாசு கற்பிப்பதுதான் இவர்களது பிரதான நோக்கம். ஆயுதப் போராட்டத்தில் பங்குகொள்ளும் பெண் போராளிகளை எதிர்மறையாக விமர்சிப்பதன் வாயிலாக, தமிழ் மக்களின் பொதுவான அரசியல் போராட்டம் மீது பரந்த அளவில் கண்டனத் தாக்குதலை தொடுப்பதும் இவர்களது

தந்திரோபாயம். ஒட்டுமொத்தத்தில் பார்க்கப்போனால், ஒடுக்கப்படும் இனத்தின் இணைபிரியா அங்கமாக விளங்கும் பெண் சமூகத்தினர் தம்மைப் பேரழிவிலிருந்து காப்பாற்றிக் கொள்ள வேண்டிய தற்காப்பு உரிமையை இந்த எதிர்மறை விமர்சனங்கள் மறுத்துவிட முயற்சிக் கின்றன என்றே சொல்ல வேண்டும்.

தமிழ் இளம் பெண்கள் ஆயுதப் போராட்டத்தில் பங்கு கொண்டதன் வரலாற்றுப் புறநிலைகள் பற்றிய ஆழமான அறிவு எதுவுமின்றி, பெண் போராளிகளை கண்மூடித்தனமாக விமர்சித்து எழுதும் பெண்ணிய எழுத்தாளர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். இவர்களில் சிலர் சிங்களப் பெண்ணியவாதிகளாவர். இவர்களது ஆய்வுகள் பக்க சார்புடையவை. சிங்களப் பேரினவாத சித்தாந்த சகதிக்குள் இருந்து வருபவை. கொழும்பில் பிறந்து, வெளிநாட்டில் கல்வி பயின்ற தமிழ்ப் பெண்ணியவாதிகள் சிலரும் பெண் போராளிகள் மீது கண்டன விமர்சனங்களை முன் வைத்திருக்கிறார்கள். தமிழர் தாயகத்தில் நிகழும் அரச ஒடுக்குமுறை பற்றியோ, அதற்கு எதிரான ஆயுத எதிர்ப்பு முறை பற்றியோ, அவற்றின் வரலாற்றுப் புறநிலைகள் பற்றியோ இவர்களிடம் ஆழமான பார்வை இல்லை. இவர்கள் படித்த அறிவுஜீவிகளாக இருந்தபோதும், தமது ஆய்வுகளுக்கான தகவல் களை கொழும்பு ஊடகங்கள் உற்பத்தி செய்துவரும் செய்திக் குப்பைகளிலிருந்தே பெற்றுக் கொள்கிறார்கள். மானிடத்தை மீட்கும் தரிசனம் கொண்ட இரட்சகர்களாக இவர்கள் தம்மைக் கருதிக் கொள்கிறார்கள். அனைத்துலக பண்பாடுகள் ஒன்று கலந்து ஒரு பொதுவான மானிட நாகரீகத்தை அதியுன்னத விழுமியமாக வரித்துக் கொண்டதால், தமிழ்ப் பண்பாட்டு அடையாளத்தை தாம் துறந்து விட்டதாக இவர்கள் போலிப் பெருமை கொள்கிறார்கள். இவர்களது பார்வையில், தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டமானது ஒரு குறுகிய தேசியவாதத்தின் அசிங்கமான வெளிப்பாடாகும். இப்படியான திறனாய்வாளர்களில் ஒருவர்தான் ராதிகா குமாரசுவாமி. **விடுதலைப் புலிப் பெண்புலிகள்; இதுதான் விடுதலையா?**[3] என்ற தலைப்பில், ஒரு ஆங்கில கொழும்பு வாரப் பத்திரிகையில் ராதிகா குமாரசுாமி எழுதிய கட்டுரை, சமூகவியலாளர் மத்தியிலும் அரசியல் ஆய்வாளர்கள் மத்தியிலும் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. அயுதப் போராட்டத்தில் குதித்துள்ள தமிழ்ப் பெண்கள் பற்றி அவர் கொண்டிருக்கும் மிகவும் தவறான, பிறழ்வுபட்ட பார்வையிலிருந்தே இந்தச் சர்ச்சை எழுந்தது. ஆயுதப் போராட்டத்தை ஒரு அரசியற் போராட்ட வடிவமெனக் கருதுவதை அவர் கடுமையாகக் கண்டிப்பதும் ஒரு முக்கிய பிரச்சினையாகக் கொள்ளவேண்டும். விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள் பற்றிய





அவரது கண்டன ஆய்வில் பல்வேறு பெண்ணியப் பிரச்சினைகளையும் அவர் எழுப்புகிறார்.

ராதிகா குமாரசுவாமியின் ஆய்வில், எனக்கு ஆச்சரியமூட்டிய விடயம் என்னவென்றால், அவர் தமிழரின் அடிப்படையான பிரச்சினைக்கு இருட்டடிப்புச் செய்ததுதான். 70,000 அப்பாவித் தமிழ் மக்களைக் கொன்றொழித்த, இன அழிப்பு வடிவிலான, அரச பயங்கரவாத ஒடுக்குமுறை பற்றி அவர் தனது ஆய்வில் எதுவுமே குறிப்பிடவில்லை. அடுத்து எனக்கு வியப்பூட்டிய விடயம் என்னவென்றால் தமிழரின் அரசி யற் போராட்ட வரலாற்றையும் அவர் மூடி மறைத்ததுதான். இரு தசாப்தங்களுக்கு மேலாக நிகழ்ந்த அமைதி வழிப் போராட்டங்கள் பற்றியோ, அவை எவ்வாறு அரச பயங்கரவாத வன்முறையால் அடக்கியொடுக்கப்பட்டன என்பது பற்றியோ அவர் எதுவும் குறிப்பிடவில்லை. ஆகவே, வரலாற்றுத் தளமும் பின்னணியுமற்ற அவரது ஆய்வில், அரச வன்முறைக்கு எதிரான தமிழரின் அரசியற் போராட்டம் இருட்டடிப்பாகிறது. இவ்விதம், அரச வன்முறையை மூடிமறைக்கும் ராதிகா குமாரசுவாமி, தான் வன்முறைக்கு எதிரானவர் எனப் பிரகடனம் செய்கிறார். அத்துடன், விடுதலைப் புலிகளின் பெண் போராளிகளை 'வன்முறையாளர்' என்றும் வசைபாடுகிறார். ராதிகாவின் ஆய்வுக் கட்டுரையை மிகவும் உன்னிப்பாக படித்ததிலிருந்து, இவருக்கு விடுதலைப் புலிகளின் இலட்சியம், கொள்கை, சித்தாந்தம் ஆகியன பற்றி மிகவும் குறுகிய அறிவு மட்டுமே இருப்பதுபோல எனக்கு தெரிகிறது. தனது சொந்தக் கற்பனைகளாலும் ஊகங்களாலும் பெறப்பட்ட தவறான பார்வையின் அடிப்படையிலேயே பெண் புலிகளை இவர் சித்தரிக்க முனைகிறார்.

முத்றபடியாக நான் ஒன்றைச் சொல்ல வேண்டும். அதாவது, மனித உரிமை, அகிம்சை, மானிடத்தின் மேம்பாடு போன்றவற்றில் ராதிகா குமாரசுவாமி கொண்டுள்ள இலட்சியப் பற்றை நான் பாராட்டுகின்றேன். அனைத்துலக மனித நேய அரசியலின் அடிப்படை விழுமியங்களை அவர் ஆதரித்தும், அவற்றிற்காக குரல் கொடுத்தும் வருகிறார். ஐ.நா சபையின் சாசனங்களில் பொறிக்கப்பட்டிருக்கும் மனித உரிமைக் கோட்பாடுகளை ஏற்றுக் கொள்ளும் விடயத்தில் எனக்கும் ராதிகாவுக்கும் எவ்வித முரண்பாடும் இருக்கப்போவதில்லை. மனித உரிமைகளும், சுதந்திரங் களும் மதிக்கப்படுவது மானிட மேம்பாட்டிற்கு மையமானது. உலக அரசி யலில் இவை தொடர்ந்தும் முக்கிய இடத்தைப் பெறும். அத்தோடு, அமைதி வழியை ஆதரிப்பதிலும் கௌரவிப்பதிலும் எனக்கு சிக்கல் இல்லை. மானிடத்தின் மேன்மைக்கும், சமூகத்தின் உயர்ச்சிக்கும்,

நாகரீக வாழ்விற்கும் இத்தகைய உன்னத விழுமியங்கள் அடிப் படையானவை. மனித நேயம், சிருஷ்டியின் அற்புதம், பல்லின உயிர்வாழ்வின் பிரமிக்க வைக்கும் அழகு, மானிடத்தின் அற்புத சாதனைகள் - இவ்விடயத்தில் ராதிகாவின் உணர்வுகளைப் பகிர்ந்து கொள்ள நான் தயார். எனினும், மானிட மேம்பாட்டிற்கு வழிகோலும் உன்னத விழுமியங்கள் பற்றி சிந்திப்பதோடு நாம் நின்றுவிட முடியாது. சமூக அநீதிகளாலும், அடக்குமுறையாலும் நசுக்கப்பட்டு மூச்சுத் திணறி நிற்கும் மனித குலத்தின் பெரும்பகுதி மக்களை நாம் புறம் தள்ளி விட முடியாது. பல்வகையான அடக்குமுறை வடிவங்களுக்கு இம்மக்கள் ஆளாகி நிற்கிறார்கள். சாதியத்தால் ஒடுக்கப்படும் மக்கள்; பாலியல் அடிப்படையில் பாரபட்சத்தையும் வன்றையையும் எதிர்கொள்ளும் பெண்கள்; பெரிய தேசிய இனங்களால் நசுக்கப்படும் சிறிய தேசிய இனங்கள்; இனவேறுபாடு, மத வெறுபாடு காரணமாக இன அழிவை எதிர்கொள்ளும் சமூகங்கள்; தோலின் நிற வேறுபாட்டால் அநீதிக்கு முகம்கொடுக்கும் மக்கள் இப்படியாக இன்னும் எத்தனையோ வகையான அடக்குமுறைகளும் அநீதிகளும் இவ்வுலகில் தலை விரித்தாடுகின்றன. தமக்கே உரித்தான துன்பங்களோடும் துயரங்க ளோடும், போராட்டங்களோடும் ஒடுக்கப்பட்டுவரும் மனித சமூகங்கள் இவ்வுலகில் வாழ்ந்து வருவது யதார்த்த மெய்நிலை. இவற்றுள் சில சமூகங்கள் இன அழிப்புப் பரிமாணத்தில் தீவிரமான அடக்கு முறையையும் மனித உரிமை மீறல்களையும் எதிர்கொண்டு நிற்கின்றன. சமாதானப் பேச்சுவார்த்தை, அரசியல் தீர்வு போன்ற வழமையான சமரச முயற்சிகளும் இந்தச் சமூகத்தினரின் பிரச்சினைகளுக்கு தீர்வைக் கொண்டுவரவில்லை. மாறாக இம் மக்களுக்கு எதிரான அடக்குமுறை தொடரவே செய்கிறது. இப்படியான அவல நிலையில், தமக்கு எதிராக ஏவப்பட்டிருக்கும் இன அழிப்பு வன்முறையை வன்முறையால் எதிர்கொள்ள இம்மக்கள் முடிவு செய்கிறார்கள். தற்பாதுகாப்பின் சட்டபூர்வமான இறுதி ஆயுதமாகவே இம்மக்கள் வன்முறை வடிவத்தை போராட்ட வழிமுறையாக தேர்ந்தெடுக்கிறார்கள். சகல விதமான சன நாயக, அமைதிப் போராட்டங்களும் வலுவிழந்து செயலிழந்து போன சூழ்நிலையில், அம் மக்களின் தேசிய வாழ்வுக்கு பேராபத்து ஏற்படும் வகையில் அரச ஒடுக்குமுறை கோர தாண்டவம் ஆடும் சூழ்நிலையில், ஒடுக்கப்படுவோர் கையாளும் வன்முறைக்கும், ஒடுக்குமுறையாளர் கையாளும் வன்முறைக்கும் பண்பியல்பில் வேறுபாடு உண்டு.





ஒடுக்கப்படுவோர் கையாளும் வன்முறை நியாயபூர்வமானது; தர்மமானது. ஏனெனில், ஒடுக்கப்படும் சமூகத்தின் உயிர்வாழ்வை பாதுகாக்கும் ஆயுதமாகவே இங்கு வன்முறை பிரயோகிக்கப்படுகின்றது.

இலங்கையில் வாழும் தமிழ் மக்களின் நிலையும் இதுதான். பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள், இலங்கை மக்களிடம் இறைமையை மீள ஒப்படைத்தபோது ஒரு சிறந்த அரசாட்சிமுறையை வகுக்கத் தவறிவிட்டனர். இதனால் ஆட்சியதிகாரம் பெரும்பான்மை மக்களின் அரசியற் தலைவர்களிடம் சிக்கியது. அன்றையவரலாற்றுச் சூழலில், சமத்துவம், பல்லின ஐக்கியம், இன ஒருமைப்பாடு போன்ற உயரிய இலட்சியங்களுக்கு மதிப்பளிக்கப்பட்டால், இன்றைய நிலைமை வேறாக இருந்திருக்கும். இலங்கைத் தீவையே உலுப்பிய கோரமான நிகழ்வுகள் நிச்சயமாக நிகழ்ந்திருக்காது. ஆனால் துரதிர்ஷடவசமாக இனவாதமும், தீவிரப் போக்குடைய தேசியவாதமுமே சிங்கள மக்களையும் அவர்களது அரசியற் பிரதிநிதிகளையும் ஆட்கொண்டது. ஒரு முற்போக்கான அரசமைப்பின் கீழ், சனநாயகம், சமத்துவம், சமாதானச் சக வாழ்வு போன்ற பண்புகளைக் கொண்ட ஒரு உன்னத சமுதாயத்தை கட்டியெழுப்புவதற்கு பதிலாக, சிங்கள அரசியற் தலைவர்கள் இனவெறியையும் மதவெறியையும் தூண்டிவிடும் இழிவான அரசியலில் இறங்கினர். இலங்கை சுதந்திரம் அடைந்த பின் ஆட்சிபீடம் ஏறிய அரசுகள், குடிமக்களின் நலனையும், நல்வாழ்வையும் பேணத் தவறினர். அரச ஆட்சிபீடத்தையே இனவாத நிறுவனமாக மாற்றினர். கடந்த ஐம்பது வருடங்களுக்கு மேலாக, சிங்கள அரசுகள் மிகவும் அநீதியான, சனநா யக விரோதமான கொள்கைகளை கடைப்பிடித்ததால், சிங்களத்திற்கும் தமிழினத்துக்கும் மத்தியில் வரலாற்று ரீதியாக நிலவிய ஒருமைப்பாடு சீர்குலைந்து முரண்பாடு தலைதூக்கியது.

## இனக் கொலைக்கு எதிரான போராட்டம்

தமிழ் மக்கள் எதிர்கொண்ட அநீதிகளையும் அரச ஒடுக்குமுறையின் கொடுமைகளையும் நான் இங்கு விபரித்து எழுதுவது அவசியமில்லை. ஏனென்றால் இந்த ஒடுக்குமுறை வரலாறு செம்மையான முறையில் ஆவணப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், பல ஆய்வாளர்கள் கருதியதற்கு மாறாக, தமிழர்களுக்கு எதிரான ஒடுக்குமுறை மிகவும் பாரதூரமானது; ஆழமானது. இருபது வருடங்களுக்கு மேலாக அவர்களுடன் கூடிவாழ்ந்து, அவர்கள் அனுபவித்த கொடுமைகளை

நேரில் கண்ட ஒரு சாட்சியாக நான் ஒரு தீர்மானத்துக்கு வந்திருக்கிறேன். அதாவது, அரசியல் உரிமைக்கான தமிழ் மக்களின் போராட்டம், இப்பொழுது இனக் கொலைக்கு எதிரான போராட்டமாக மாறியிருக்கிறது. இந்த இனக்கொலை வடிவம் எடுத்த ஒடுக்குமுறைக்கு எதிராகவே, தமது உயிர்வாழும் உரிமையை நிலைநிறுத்த தமிழர்கள் ஆயுதமேந்திப் போராடுகிறார்கள். இனக்கொலை என்ற குற்றச்சாட்டு எந்தளவு பாரதூரமானது என்பதையும் நான் அறிவேன். ஆகவே, ஒரு கேள்வி எழத்தான் செய்யும். அதாவது தமிழ் மக்களுக்கு எதிரான ஒடுக்குமுறையை இன அழிப்பு வடிவமாகக் கொள்ளலாமா? அடுத்ததாக, எந்த அடிப்படையில் சிறீலங்கா அரசு மீது இக்குற்றச் சாட்டை சுமத்தலாம். இந்தக் கேள்விகளுக்கு பதிலளிப்பதாயின், முதலில் இனக்கொலை என்ற பதத்திற்கு தெளிவான ஒரு வரைவிலக்கணம் காணப்படவேண்டும். இரண்டாவது சிறீலங்காவில் இக்கொடுமைகள் தோன்றியதற்கான புற நிலைகளை ஆராய வேண்டும்.

இனக்கொலை என்ற பதத்திற்கு அனைத்துலகமும் அங்கீகரிக்கும் வகையில் தெளிவான வரைவிலக்கணமோ அன்றி அறிவியற் கோட்பாட்டு விளக்கமோ இல்லை. 1995 ல் இனக்கொலை சம்பந்தமாக ஐ.நா மாநாட்டில் நிறைவேறிய தீர்மானத்தில் கொடுக்கப்பட்ட விளக்கமும் வரையறுக்கப்பட்டதாக, குறுகிய பார்வையுடையதாகவே இருக்கிறது. "ஒரு இன, அல்லது தேசிய, அல்லது மதக் குழுவை ஒரு பகுதியாகவோ அன்றி முழுமையாகவோ அழிக்கும் நோக்கில் மேற்கொள்ளப்படும் செயல்கள்தான் இனக்கொலை'' என்ற குறுகிய விளக்கமாக இத் தீர்மானம் அமைகிறது. ஜேர்மெனிய தடுப்பு முகாம்களில் நச்சுவாயு செலுத்தப்பட்டு யூத இனத்தை அழிப்பதற்கான கொடுமை நிகழ்ந்தது, இப்படியான சில வரலாற்றுப் படுகொலைச் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு, தேசிய அல்லது இனக்கட்டமைப்பைக் கொண்ட மக்கள் சமூகத்தை கூட்டுக்கொலை மூலம் அழித்தொழிக்கும் செயலையே இனக்கொலை எனப் பொதுவாக நம்பப்படுகிறது. ஐ.நா தீர்மானத்திலும் கொன்றொழிப்பு அம்சத்திற்கே முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது.

தமிழ் மக்களும் பெருந்தொகையில் உயிரழிப்புக்கு ஆளாகி இருக்கிறார்கள். இனவெறிக் கலவரங்கள், இராணுவ படையெடுப்புகள், காணாமற் போகுதல் ஆகியவற்றின்போது, ஆயிரமாயிரம் மக்கள் கொன்றொழிக்கப்பட்டிருக்கிறார்கள். பெருவாரியான உயிரழிப்பின் அடிப்படையில் பார்க்கப்போனால், தமிழருக்கு இந்த வரைவிலக்கணம் பொருந்தலாம். எனினும் இந்த விளக்கம் போதுமானதல்ல. தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் மிகவும் நுட்பமான, மிகவும் சிக்கலான இன அழிப்பை,





ஐ.நா தீர்மானம் தரும் வரைவிலக்கணத்தின் அடிப்படையில் புரிந்து கொள்வது கடினம். தமிழர்கள் எதிர்கொள்ளும் இனக் கொலை வித்தியாசமானது. மிகவும் நுட்பமாக திட்டமிடப்பட்டு, நீண்ட கால எல்லைக்குள் தமிழரின் அரசியல், சமூக, கலாச்சார, பொருண்மிய வாழ்வையும் அதன் அடிப்படைகளையும் படிப்படியாக, மெல்ல மெல்ல சீரழித்து, இறுதியில் அவர்களது இன அல்லது தேசிய அடையாளத்தை அழிக்கும் நோக்கத்தைக் கொண்டதுதான் தமிழீழ மக்கள் எதிர்கொள்ளும் இனக்கொலை.

ஐ.நா. மாநாட்டு தீர்மானத்தை வரைந்த உலக அரசுகளில் சில, தமது சொந்த நடவடிக்கைகளை மூடிமறைப்பதற்காக, இனக்கொலைக்கு ஒரு விரிவான, தெளிவான வரைவிலக்கணத்தை கொடுக்க விரும்பவில்லை. உலக பிரசித்தி பெற்ற சட்ட வல்லுனரான ரபேல் லெம்கின் என்பவரே முதன்முதலாக இனக்கொலை (Genocide) என்ற சொல்லைப் புனைந்தார். ஐரோப்பாவை யேர்மானியர்கள் ஆக்கிரமித்திருந்த காலத்தில் நிகழ்ந்த இனக்கொலை பற்றி அவர் ஒரு நூல் எழுதினார். அந்த நூலில் அவர் கீழ்க்கண்டவாறு இனக்கொலைக்கு ஒரு விரிவான விளக்கம் கொடுக்கிறார்.

**"பொதுவாகச் சொல்லப் போனால் இனக் கொலை என்பது; உடனடியாகவே ஒரு இனத்தை அழித்து விடுவது என்ற அர்த்தமல்ல. அப்படிக் கொள்வதாயின் அந்த இனத்தைச் சார்ந்த அனைத்து உறுப்பினர்களுமே கூட்டாகக் கொலை செய்யப்பட வேண்டும். இனக்கொலை என்பது; தேசிய இனக் குழுமங்களின் வாழ்விற்கும் வளத்திற்கும் அடிப்படையாக விளங்கும் ஆதார தூண்களை அழித்துவிடும் நோக்கத்தைக் கொண்ட ஒருங்கிணைக்கப்பட்ட ஒரு அழிவுத் திட்டத்தையே குறிக்கும். இந்த அழிவுத் திட்டமானது அந்த இனக் குழுமங்களை படிபடியாக அழிக்கும் நோக்குடையது. தேசிய இனங்களின் மொழி பண்பாடு; தேசிய உணர்வு மதம் அரசியல் சமூக நிறுவனங்கள்; பொருளாதார வாழ்வு ஆகியனவற்றை படிப்படியாக சிதைப்பது மட்டுமன்றி அந்த இனத்தைச் சேர்ந்த தனிமனிதர்களின் சுதந்திரம் உடல் நலம் கௌரவம் தனிப்பட்ட பாதுகாப்பு உயிர்வாழ்வு ஆகியன வற்றை அழிப்பதுமே இந்தப் பலமுகம் கொண்ட அழிவுத் திட்டத்தின் நோக்கம். இனக் கொலையானது ஒரு இனத்தின் தேசிய வாழ்வை சிதைப்பழிப்பதையே இலக்காக் கொண்டது. தனி மனிதர்களுக்கு எதிராக எடுக்கப்படும் நடவடிக்கை அந்தத் தனிநபருக்காக அல்ல. மாறாக அவர் அந்த இனத்தைச் சேர்ந்த தனிமனித உறுப்பினர் என்பதற்காகவே".**[4]

மேற்கண்ட வரைவிலக்கணத்தின் அடிப்படையில் பார்க்கப் போனால், தமிழீழ மக்களுக்கு எதிராக சிறீலங்கா அரசு கடைப்பிடித்த ஒடுக்குமுறையானது இனக் கொலை அன்றி வேறொன்றுமல்ல. தமிழ்த் தேசிய இனத்தின் ஆதார தூண்களாக விளங்கும் மொழி, பண்பாடு, தாயக நிலம் மற்றும் சமூக அரசியல், பொருளாதா வாழ்வு ஆகியவற்றை படிப்படியாக சிதைத்தழிக்கும் நோக்கத்துடன் கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக ஆட்சி பீடம் ஏறிய சிங்கள அரசுகள் திட்டமிட்டுச் செயற்பட்டன. இந்த இனக்கொலைத் திட்டத்தின் நோக்கம் தமிழ் மக்களின் தேசிய கட்டுக் கோப்பையும் இன அடையாளத்தையும் அழித்துவிடுவதுதான்.

இனக்கொலை என்பது மனித விரோத உணர்வின் மிகவும் கொடூரமான ஒரு வெளிப்பாடு. அது படுபாதகமான ஒரு பயங்கரவாதச் செயல். அந்தப் பயங்கரத்தில் அது திளைத்து வளர்கிறது. மனித உயிர்களை அது சருகுகள் போல மிதித்து அழிக்கிறது. குடும்ப, சமூக உறவுகளுக்கு அது மதிப்பளிப்பதில்லை. பால் வேறுபாட்டிற்கோ அல்லது வயது வேறுபாட்டிற்கோ அது மரியாதை கொடுப்பதில்லை. இக் கூட்டு மனித அழிப்புப் பயங்கரவாதத்திற்கு பெண்களும் இலக்காகிறார்கள். இனக்கொலையின் நோக்கத்தை வெளிப்படுத்த பெண்களே ஊடகமாக தெரிவு செய்யப்படுகிறார்கள். இனக் கலவரங்களின் போதும் இராணுவப் படையெடுப்புகளின்போதும் பெண்கள் பரவலாக பாலியல் வன்முறைக்கு ஆளாக்கப்படுவது இதற்கு உதாரணம். தனிமனித அடிப்படையில் பார்க்கப்போனால், பாலியல் வன்முறை என்பது ஒரு பெண்ணின் சுயாதீனத்திற்கும் சுயகௌரவத்திற்கும் பாதகமாக இழைக்கப்படும் ஒரு இழிசெயல்; உளரீதியாகவும் உடல் ரீதியாகவும் அவளுக்கு இழைக்கப் படும் ஒரு சித்திரவதை. சமூக அடிப்படையில் பார்க்கும்போது, பாலியல் வன்முறை என்பது சமூகத்தின் பண்பாட்டு மரபை மீறி, அச் சமூகத்தை அவமதிக்கும் செயலாகும். இவ்விதம் பெண்கள் மீது நடத்தப்படும் வன்முறையானது ஒரு இனத்தின் தேசிய கௌரவத்திற்கு இழுக்குச் சேர்ப்பதுடன் தேசிய உணர்வையும் புண்படுத்தி விடுகிறது. தேச கௌரவத்தை அவமதித்து அசிங்கப்படுத்துவதற்கு பெண்களை சாதன-மாக பாவிப்பது மட்டுமன்றி, இம் மக்கள் இனத்தின் தேசிய அடையா-ளத்தையும் அழித்துவிடும் ஒரு திட்டமுமாகும்.

ராதிகா குமாரசுவாமியும் அவரது சிந்தனை வட்டமும் எண்ணுவதற்கு மாறாக, தமிழ்ப் பெண்களுக்கு, தங்கள் தற்காப்புக்கும் தங்கள் இனத்தின் பாதுகாப்பிற்குமாக போராடும் உரிமையுண்டு. அந்த உரிமையை எவரும் மறுக்க முடியாது. ஒடுக்கப்படும் மகக்ளின் தற்காப்பு உரிமையை மறுப்பது அவர்களைக் கூட்டாக தற்கொலை புரியச்





சொல்வதற்கு ஒப்பானதாகும். ஆகவே, ஆயுதப் போராட்டத்தில் குதித்துள்ள விடுதலைப் புலிப் பெண் போராளிகளை ‘வன்முறையாளர்’ என்றும் ‘பெண்மைக்கு சாவுமணி அடிப்போர்’ என்றும், ‘சமூகத்தை இராணுவ மயப்படுத்துவோர்’ என்றும் ராதிகா வர்ணிப்பது, விவாதத்தை தவறான திசைக்கு இட்டுச் செல்வதாகும். தேசிய விடுதலைப் போரில் தமிழ்ப் பெண்களது பங்களிப்பின் ஒரு வளர்ச்சியும் விரிவாக்கமுமாகவே ஆயுதப் போராட்டத்தில் பெண்கள பங்களிக்கிறார்கள். ஆரம்பத்தில் அமைதி வழியில் நடைபெற்ற போராட்டங்களில் எல்லாம் பெண்கள் பங்களித்தார்கள். இப்பொழுது போராட்ட வடிவம் மாற்றம் கண்டிருக்கிறது. ஆகவே ஆயுதப் போர் வடிவம் எடுத்துள்ள விடுதலைப் போரில் பெண்கள் கலந்து கொள்வது பற்றி ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை. அமைதி வழிப் போராட்டங்கள் தோல்வி கண்டுள்ளதால், மீண்டும் பெண்களை அமைதி வழியில் போராடுமாறு வேண்டுவது அபத்தமானது. ராதிகாக்கு அடிப்படைப் பிரச்சினை புரியவில்லை. தமிழ் மக்களுக்கு எதிராக ஏவிவிடப்பட்ட அரச ஒடுக்குமுறைதான் பெண்களை ஆயுதப் போராட்டத்தில் குதிக்க நிர்ப்பந்தித்தது.

ஆயுதப் போராட்டம் பற்றி ராதிகாவுக்கு ஒரு தறவான கண்ணோட்டம் இருக்கிறது. அயுதப் புரட்சிப் போராட்டத்தை அவர் ஒரு இராணுவவாதமாகப் பார்க்கிறார். பெண்கள் ஆயுத பாணிகளாக நிற்பதை தவறாக எடைபோடும் அவர், தமிழ்ச் சமூகம் இராணுவமயமாவதால், இப்போக்கானது இறுதியில் சட்டம் ஒழுங்கு, சமாதானப் பாதை, பேச்சு மூலம் தீர்வு போன்ற சனநாயக வழிமுறைகளை குழிதோண்டிப் புதைத்துவிடும் எனக் கருதுகிறார். தமிழ் மக்களின் தேசிய விடுதலைப் போராட்டமானது, தனது வரலாற்றுப் படிநிலை வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட கட்டத்தை அடைந்துள்ளது. இக்கட்டத்தில் இளைஞரும், முதியோரும், பெண்களுமாக பரந்து பட்ட பொதுமக்கள் அனைவருமே ஒன்றுதிரண்டு, ஒரே தேசமாக கிளர்ந்தெழுந்து, தமிழ் மக்களை வேரோடு அழிக்க முனையும் ஈவிரக்கமற்ற இனவாத அரசுக்கு எதிராகப் போர் தொடுத்து நிற்கிறார்கள். இந்த வெகுசனக் கிளர்ச்சியை இராணுவ மயமாக்கல் என தவறாகப் பார்க்கிறார் ராதிகா குமாரசுவாமி. இன அழிப்புச் சூழலும், அதனை எதிர்த்துப் போராடி தடுத்து நிறுத்த வேண்டிய வரலாற்றுத் தேவை எழுந்ததன் காரணமாகவே தமிழ்ப் பெண்கள் உட்பட அனைத்து மக்களும் ஆயுத எழுச்சிப் போரில் பங்குகொள்கிறார்கள். ஆகவே, ராதிகா எழுதுவதுபோல, விடுதலைப் புலிகள் இயக்கம் தனது படைபலத்தைப் பெருக்குவதற்காக சமூகத்தை இராணுவமயப் படுத்துவதாக கூறுவது தவறு. மாறாக, இனப் போரின் கொடூர சூழ்நிலையால் எழுந்த வரலாற்றுத் தேவை காரணமாகவே தமிழரின்

உரிமைப் போர் வெகுசன ஆயுதப் போராக வெடித்துள்ளது.

இராணுவ மயமாக்கல் பற்றியும், மனித உரிமை மீறல் பற்றியும், வன்முறை பற்றியும் கவலை கொள்ளும் ராதிகா குமாரசுவாமி, தனது அக்கறையை சிங்கள தேசம் மீது திருப்புவது நல்லது. அங்கு சிங்களப் பெண்கள், பெருந்தொகையில் அரச படைகளில் இணைந்து கொண்டு அரச இயந்திரத்தை வலுப்படுத்தி, ஆணாதிக்க நிறுவனத்திற்கு முண்டுகொடுத்து, தமிழருக்கு எதிராக சிங்கள இனவாதிகள் நடத்தும் கொடிய யுத்தத்திற்கு பங்களிக்கிறார்கள். சிங்களப் பெண்ணிய வாதிகளும் கூட, தமது சிங்கள சகோதரிகள் இராணுவத்தில் இணைந்து கொள்வதை தடுக்கவில்லை. அப்படியான ஒரு தேவையோ, அல்லது நிர்ப்பந்தமோ அவர்களுக்கு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. தமிழ் மக்களின் இனப் பிரச்சினைக்கு சமாதான வழி மூலமாக ஒரு நீதியான நியாயமான தீர்வு காண்பதற்கு சிங்களப் பெண்ணியவாதிகள் தமது பெண்மைப் பண்புகளை' பிரயோகித்தால் அது சிங்கள தேசத்திற்கு பயனுள்ளதாக அமையும் சிங்களப் பெண்கள் ஒரு சனநாயக ஆட்சி யமைப்பைக் கொண்ட ஒரு தேசத்தில் வாழ்கிறார்கள். அங்கு மக்கள் ஆட்சி நடக்கிறது. சிங்கள மக்கள் தம்மைத் தாமே ஆட்சி புரிகிறார்கள். அவர்களது அரசமைப்பு அவர்களது மொழியை, மதத்தை, பண்பாட்டை மதிக்கிறது. சிங்கள மக்களுக்கு எதிராக யாருமே பாரபட்சம் காட்டுவதில்லை. அவர்களுக்கு எதிராக இனத்துவேச கலகங்கள் ஏவிவிடப்படுவதில்லை. இப்படியான சூழ்நிலையில் சிங்களப் பெண்கள் இராணுவத்தில் சேர வேண்டிய அவசியமோ கட்டாயமோ இருக்க வில்லை.

## பெண்களும் தேசியப் போராட்டமும்

சமகால சர்வதேச அரசியல் அரங்கில் தேசிய விடுதலைப் போராட்டங்கள் எத்தகைய முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன என்பதை ஐ.நா சபையில் பணிபுரியும் ஒரு அதிகாரி என்ற ரீதியில் ராதிகா குமார சுவாமிக்கு நன்கு தெரிந்திருக்க வேண்டும் என்றே நினைக்கின்றேன். இன்றைய உலகில், இன நெருக்கடிகள் தலைதூக்கியுள்ள பிரதேசங்களில் இனக்கொலைப் பரிமாணத்தில் பாரிய மனித உரிமை மீறல்கள் நிகழ்ந்து வருவது குறித்து சர்வதேச சமூகம் ஆழமான கவலை கொண்டிருக்கிறது. கொஸோவோ, கிழக்குத் தீமோர் போன்ற நாடுகளில் சர்வதேச சமூகம் தலையிட்டு, இராணுவ பலத்தைப் பிரயோகித்து அங்கு





சமாதானத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டியுள்ளது. இலங்கையின் இனப் பிரச்சினையானது ஆசியாவிலேயே வன்முறை கொந்தளிப்பு மிகுந்த ஒரு நெருக்கடி என்பதை சர்வதேச சமூகம் அறியும். அத்தோடு, இலங்கையில் பௌத்த-சிங்கள அரசின் கொடுமையான ஒடுக்குமுறைக்கு எதிராக, விடுதலை வேண்டி தமிழர் தேசம் போராடி வருகிறது என்பதையும் அறியும். இலங்கையின் வடகிழக்குப் பிரதேசத்தில் வாழும் மக்கள் ஒரு தேசிய இனக் கட்டமைப்பைக் கொண்ட சமூகம் என்பதும் அவர்களது போராட்டம் ஒரு தேசிய போராட்டம் என்பதும் வரலாற்று ரீதியான ஒரு அரசியல் உண்மை. தமிழர் தேசத்தின் சனத் தொகையில் அரைவாசிப் பகுதியினராக விளங்கும் தமிழ்ப் பெண்களும் தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்தில் இணை பிரியாத அங்கமாக விளங்குகிறார்கள். தமிழரின் தேசிய விடுதலை இராணுவத்தில் இணைந்துள்ள பெண்களும், மற்றும் வெகுசன ஆர்ப்பாட்டப் பேரணிகளில் பங்குகொள்ளும் பெருந்தொகை யான பெண்களும் தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு முதுகெலும் பாக விளங்குபவர்கள். வரலாற்று ரீதியாக வளர்ச்சி பெற்று முதிர்ச்சி பெறும் ஒரு தேசிய விடுதலைப் போராட்டம் பாலியல் வேறுபாடுகளுக்கு அப்பாலானது; தேசிய உணர்வானது அன்றி, தேசியப் பிரக்ஞையானது மக்கள் அனைவரையும் ஒன்றுபட்ட சக்தியாக, சுதந்திரத்தை நோக்கிய இலட்சியப் பாதையில், அணிதிரட்டிவிடுகிறது.

தேசிய போராட்டங்களை வலுவாகக் கண்டிக்கிறார் ராதிகா குமாரசுவாமி. தேசிய அபிலாசைகளை அடையும் நோக்கில், தேசிய விடுதலைப் போராட்டங்கள் பெண்களைப் பயன்படுத்திச் சுரண்டுகின்றன என்பது அவரது வாதம். தேசியவாதம் என்பதும், தேசியப் போராட்டம் என்பதும் பிற்போக்கான அரசியலைச் சார்ந்தது என்கிறார் ராதிகா. தேசியவாதத்திற்கு பதிலாக சர்வதேசவாதத்தை அவர் முன்நிறுத்து கிறார். யுத்தத்தை எதிர்த்து சமாதானத்திற்கு ஆதரவாக, தேசிய பண்பாடுகளுக்கு அப்பால், பெண்ணினம் அனைத்துலக ரீதியாக ஒன்றுபட்ட சக்தியாக அணிதிரள வேண்டும் என்பது அவரது நிலைப்பாடு. ஐ.நாவில் 'பெண்களுக்கு எதிரான வன்முறை' என்ற துறையில் விசேட பிரதிநிதியாக பணிபுரியும் ராதிகா, தனது சொந்த மக்கள் அவதியுறும் நெருக்கடியையும் அதன் யதார்த்த மெய்யுண்மைகளையும் மறுதலித்து, ஒரு வித்தியாசமான, புதிரான கருத்துலகில் வாழ்ந்து வருகிறார் போலத் தெரிகிறது. தமிழீழத்தில் அகதி முகாம்களிலும், இராணுவ ஆக்கிரமிப்பு பிரதேசங்களிலும் வாழ்ந்து கொண்டு, சதா மரணத்தையும், இராணுவப் பயங்கரவாதத்தையும், பாலியல் வன்முறையையும் எதிர்கொண்டவாறு அவலத்தில் வாழும் தமிழ்ப் பெண்களுக்கு, சர்வதேசியம் பற்றியும்,

அனைத்துலப் பண்பாடு பற்றியும் யாராவது போதித்தால், நிச்சயமாக அவர்களுக்கு சினம்தான் ஏற்படும். நியூயோர்க், ஜெனீவா போன்ற நகரங்களில் ஒதுங்கி வாழ்ந்து கொண்டு சர்வதேச விழுமியங்கள் பற்றி தத்துவம் பேசுவது சுலபம். ஆனால் தமது நாளாந்த வாழ்வில் அவலத்தையும் பயங்கரத்தையும் சந்தித்து நிற்கும் தமிழ்ப் பெண்களுக்கு இந்த தத்துவங்களில் எவ்வித அர்த்தமுமில்லை.

தமிழ்ப் பெண்கள் ஆயுதப் போராட்டத்தில் பங்குகொண்டதன் விளைவாக தமிழ் சமூதாயத்தில் பெண் பற்றிய உருவகத்தில் அடிப்படையான மாற்றம் ஏற்பட்டுள்ளதாகக் கூறுகிறார் ராதிகா குமாரசுவாமி. 'திருமணமாகி, பல குழந்தைகள் பெற்றெடுத்து, சொத்தும் செல்வமும் படைத்த பெண்ணே தமிழ் இந்து சமுதாயத்தில் சிறப்புரிமை பெற்ற பெண்' என மானிடவியல் ஆய்வுக் குறிப்புகளை ஆதாரம் காட்டி வாதிடுகிறார் ராதிகா. "விலையுயர்ந்த பட்டுப் புடவைகள், பகட்டான தங்க நகைகள், கால் விரல்களில் வெள்ளி மோதிரங்கள், நெற்றியில் குங்குமப் பொட்டு, ஆகியன இந்த இலட்சியப் பெண்ணின் குறியீட்டுப் படிமங்கள்"[5] என்கிறார் ராதிகா. சொத்தும் செல்வமும், ஒப்பனை அலங்காரமும், நிறையப் பிள்ளைகளும் பெற்றெடுத்த இந்து உயர்சாதிப் பெண்ணை தமிழ் சமூகத்தின் இலட்சியப் பெண்ணாக சித்தரித்துக் காட்டும் ராதிகா குமாரசுவாமி, விடுதலைப் புலிகளின் பெண் போராளிகளை 'தமிழ்ப் பாரம்பரிய இலட்சியப் பெண்ணிற்கு 'எதிர்மறையானவர்களாக', முற்றிலும் மாறுபட்டவர்களாக வர்ணிக்கிறார். ஒப்பனை அலங்காரம் எதுவும் இல்லாமல், நகை நட்டு அணியாமல், பொட்டு இடாமல், பூச் சூடாமல், குறுகக் கத்தரித்த முடியுடன் வரிப் புலி சீருடையோடு காட்சி தரும் பெண் புலிகளிடம் பாராம்பரிய தமிழ்ப் பெண்களுக்குரிய 'பெண்ணியல்புகள்' எதுவுமே இல்லையெனச் சாடுகிறார் ராதிகா. 'இரு பால் தன்மை' என்ற கோட்பாட்டை அறிமுகம் செய்யும் அவர், பெண் புலிகள், ஆண் பாலாரின் இயல்புகளை கொண்டிருப்பதாக கண்டிக்கிறார்.

ஆயுதம் தரித்த விடுதலைப் போராட்டத்தில் பெண்களின் பங்கை கொச்சைப்படுத்துவதுதான் ராதிகா குமாரசுவாமியின் அடிப்படை நோக்கம். இந்த நோக்கத்துடனேயே அவர் மிகவும் தவறாக, மோசமான முறையில் பெண் புலிகளை திரிவுபடுத்திக் காட்ட முனைகிறார்.

முதலாவதாக, ராதிகா குமாரசுவாமி புரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால், விடுதலைப் புலிப் பெண்கள் தமிழரின் தேசிய விடுதலை இராணுவத்தின் பல்வேறு படையணிகளைச் சேர்ந்த சுதந்திரப் போராளிகள் என்பதையே. சிறீலங்கா அரசுடன் நீண்ட காலமாகவே இடைவிடாது தொடர்ச்சியாக போர் நிகழ்ந்து வருவதால், தமிழர் இராணுவத்தில் அங்கம் வகிக்கும் பெண் போராளிகள், போர்ச் சூழலுக்கு ஏற்றவாறு தமது நடை, உடை, பாவனைகளை மாற்றிக் கொள்ள நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள். போர் முனைகளில் அகழிகளிலிருந்து களமாடும் பெண் போராளிகள், பட்டுப் புடவை உடுத்தி, நகைகள் அணிந்து, பூச் சூடி, ஒப்பனை அலங்காரம் செய்து, காற்றில் பறக்கும் நீண்ட முடியுடன் காட்சி தரவேண்டுமென எதிர்பார்ப்பது முட்டாள்தனமானதாகும். உலகின் பல்வேறு தேசிய விடுதலைப் போராட்டங்களில் பங்குபற்றிய பெண் போராளிகள், பெண்புலிகள் போலவே சீருடை அணிந்து, நகை அணியாது, ஒப்பனை அலங்காரம் எதுவுமின்றி, குறுகிய முடியுடன் காணப்படுவதை புத்தகங்களில் வெளியாகியுள்ள படங்களிலாவது ராதிகா நிச்சயமாக கண்டிருக்கலாம். பகட்டை, அலங்காரத்தை, ஒப்பனையை எல்லாம் துறந்து, தமது தேசத்தின் விடுதலைக்காக போராடிய அந்த வீராங்கனைகளை ஆண் இயல்பு கொண்டவர்கள் என ராதிகாவால் ஏளனம் செய்ய முடியுமா? பெண் போராளிகள் ஆணியல்பு கொண்டவர்களாக இருக்க வேண்டுமென்பது விடுதலைப் புலிகளின் கொள்கையல்ல - அத்துடன், பெண் புலிகள் 'ஆயுதம் தரித்த கன்னிகளாக' இருப்பதில் புலிகள் இயக்கம் பெருமை கொள்கிறது என்று அவர் சொல்வதும் தவறு. (பேராசிரியர் பீட்டர் சோல்க்கின் எழுத்துகளிலிருந்தே 'ஆயுதபாணிகளான கன்னிகள்' என்ற பதத்தை தழுவியிருக்கிறார் ராதிகா). "பெண் புலிகள் கன்னிகளாக இருக்க வேண்டும் என்பதையே புலிகள் இயக்கம் விரும்புகிறது. பாலுணர்வு ஒரு தீய சக்தி என்பதும் ஒரு வலுக்கெடுவான சக்தி என்பதும் புலிகளின் கருத்து" என எழுதுகிறார் ராதிகா. இப்படியான மிகவும் அபத்தமான கருத்தை அவர் எங்கிருந்து பெற்றுகொண்டார் என்பது புரியவில்லை. விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள் பற்றியும் அவர்களது வாழ்வனுபவம் பற்றியும் அவருக்குள்ள ஆழமான அறியாமையையே இது புலப்படுத்துகிறது. நீண்ட காலமாகவே விடுதலைப் புலிகளின் தலைமைத்துவம், தனது போராளிகள் மத்தியில் காதலையும், திருமணத்தையும், தாம்பத்திய உறவையும், பிள்ளைப் பேறையும் ஊக்குவித்து வருகிறது. காதல் உறவுகளின் நற்பேறாக அனேகமான புலிப் போராளிகள் திருமணம் செய்திருக்கிறார்கள். இத் திருமண வைபவங்களில் நாம் பங்குபற்றியிருக்கிறோம். போராளிகள் மத்தியில் காதல் உறவை ஊக்குவித்து, திருமணம் செய்து கொள்ள வசதி ஏற்படுத்திக் கொடுக்கும் நோக்குடன் ஒரு திருமண ஆலோசனை சபையையும் புலிகள் இயக்கம் நிறுவியுள்ளது. திருமணம் செய்து கொள்ளும் போராளித் தம்பதிகளுக்கு மாதாந்த கொடுப்பனவும், வீட்டு வசதியும் மற்றும் உதவிகளையும் இயக்கத்தின் நிதிப் பிரிவே வழங்கிவருகிறது. எனவே, விடுதலைப் புலிகள் அமைப்பு காதலையும்

பாலுணர்வையும் பெண்மையையும் நசுக்கிவிட முனைகிறது என்ற ராதிகா குமாரசுவாமியின் குற்றச்சாட்டுக்கு எவ்வித ஆதாரமும் இல்லை.

சில பெண்ணியவாதிகளின் கோட்பாடுகளை மேற்கோள்காட்டி, பெண்மைக்கும் ஆண்மைக்குமுரிய வேறுபாடுகளை விளக்க முயல்கிறார் ராதிகா. தாய்மை, கனிவு, இரக்கம், பொறுமை ஆகிய பண்பியல்புகள் பெண்மைக்கு உரித்தானதென்றும், ஆணவம், அதிகாரவெறி, பகைமை யுணர்வு ஆகியன ஆண்களின் பண்பியல்புகள் என்றும் வாதிக்கும் ராதிகா, விடுதலைப் புலிகளின் சித்தாந்தமானது ஆக்கபூர்வமான பெண்ணின் பண்பியல்புகளுக்கு விரோமானது என்கிறார். உலகப் பெண்ணியத்தின் அதியுன்னத விழுமியம் உயிர்வாழ்வை மேம்படுத்து வது எனக் குறிப்பிடும் ராதிகா, விடுதலைப் புலிகள் இயக்கம் மரணத்தை தியாகமாக பூசிக்கிறது எனக் கண்டிக்கிறார்.

ஆண்களின் இயல்புகளையும் பெண்களின் இயல்புகளையும் வேறுபடுத்தி வகைப்படுத்தும் அறிவியற் கோட்பாடுகளில் எனக்குப் பெரிதும் நம்பிக்கை இல்லை. உலக சமாதானத்தையும் மனித விமோசனத்தையும் நோக்காகக் கொண்டு இத்தகைய தத்துவக் கருத்துக்களை புனையும் பெண்ணியவாதிகள் மீது எனக்கு அனுதாபம் உண்டு. ஆயினும், படைப்பையும், உயிர்வாழ்வின் புனிதத்தையும் மற்றும் பெண்மையின் ஆக்கபூர்வமான பண்புகளையும் விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள் ஊக்குவிப்பதில்லை என்ற ராதிகா குமாரசுவாமியின் குற்றச்சாட்டு கேலிக்கூத்தானது. இதிலிருந்து ஒரு விடயம் தெளிவாகத் தெரிகிறது. அதாவது, ராதிகா குமாரசுவாமி உண்மைக்கு புறம்பாக, சான்றுகள் எதுவுமின்றி, வெறும் கற்பனையில் எழுதுகிறார் என்பதுதான். அரசியல், அறிவியல் மற்றும் இலக்கியத் துறையில், பெண் போராளிகள் தமிழில் எழுதிய படைப்புகள் எதையுமே கொழும்புப் பத்திரிகையாளர் போன்று ராதிகாவும் வாசிக்கவில்லை என்பது தெளிவாகிறது. பெண் போராளிகளின் உடையையும், வெளித் தோற்றத்தையும் மட்டுமே அடிப்படையாகக் கொண்டு, வெறும் கற்பனையில் எழுதியிருக்கிறார் ராதிகா. தமிழ்ப் பெண்கள் ஆயுதப் புரட்சிப் போரில் பங்குகொள்வதும், களமாடி உயிர்நீத்த போராளிகளை மாவீரர்களாக கௌரவிப்பதும், ராதிகாவின் கற்பனை வளத்தில் புலிப் பெண்கள் பற்றி, விபரீதமான சிந்தனைகளை தூண்டிவிட்டிருக்கிறது.

ராதிகா குமாரசுவாமியின் மேலோட்டமான, குறுகிய பார்வையில், விடுதலைப் புலிகள் இயக்கத்தின் ஆயுத போராட்டம் வெறும் வன்முறையின் வெளிப்பாடாகவே கருதப்படுகிறது. இதன் அடிப்படையில், விடுதலைப் போரில் ஈடுபடுபவர்கள் அனைவருமே வன்முறையாளர்களாகவும், மனித உயிர்களை அழித்தொழிப்பவர்களாகவுமே சித்தரிக்கப்படுகிறார்கள். இந்த வரட்டுத்தனமான கண்ணோட்டத்தில், தமிழரின் ஆயுத எதிர்ப்பு இயக்கம் தோற்றம் கொண்ட யதார்த்த புறநிலையும், வரலாற்றுச் சூழலும் முற்றாக இருட்டடிப்புச் செய்யப்படுகிறது. அதே போன்றுதான் போராட்ட இலட்சியமும் புறம் தள்ளப்படுகிறது. இனக் கொலை என்ற பேரழிவிலிருந்து தமிழ் மக்களை பாதுகாக்கும் இலட்சியத்துடனேயே ஆண்களும், பெண்களுமாக, விடுதலைப் புலிப் போராளிகள் போராடுகிறார்கள். இதனை ராதிகா ஏற்க மறுக்கலாம். ஆனால் உண்மையில் உயிர்வாழ்வை, தமிழினத்தின் கூட்டான உயிர்வாழ்வை பாதுகாக்கவே விடுதலைப் புலிகள் போராடுகிறார்கள். இவ்விதமே தமிழ் மக்கள் தங்களது விடுதலைப் போராட்டத்தை நோக்குகின்றார்கள். தமிழ் மக்களைப் பொறுத்தவரை, விடுதலைப் புலிப் போராளிகளே அவர்களது பாதுகாவலர்கள்; தமிழ்ச் சமூகத்தின் உயிர்வாழ்வை பாதுகாப்பதற்காக தமது சொந்த உயிரை அர்ப்பணிக்கத் தயாரான சுதந்திரப் போராளிகள். இங்கு தற்கொடை என்ற ஒரு மகத்தான தியா-கத்தை நாம் கருத்திற்கொள்ள வேண்டும். கூட்டான மனித வாழ்வின் மீட்சிக்காக தனிமனித வாழ்வு அர்ப்பணமாகிறது. இது ஒரு உன்னதமான மனித தியாகம். இந்த உயரிய தியாகத்தின் அடிப்படையில்தான், விடுதலைப் புலிகளின் மாவீரர்கள் பூசிக்கப்படுகிறார்கள். ராதிகா குமாரசுவாமி கண்டிப்பதுபோல புலிகள் இயக்கம் மரணத்தை பூசிக்கவில்லை. மாறாக, ஒட்டுமொத்தமான ஒரு மக்கள் சமூகத்தின் வாழ்வுக்காக தனி மனித வாழ்வு அர்ப்பணமாவதற்கு புலிகள் இயக்கம் மதிப்பையும் மரியாதையையும் கொடுக்கிறது.

விடுதலைப் புலிகளின் பெண் போராளிகளுடன் பல வருடங்களாக நான் கூடி வாழ்ந்திருக்கிறேன். அவர்களுடைய இன்ப துன்பங்களையும் அபிலாசைகளையும் நம்பிக்கைகளையும் பகிர்ந்திருக் கின்றேன். இந்த அனுபவத்தின் அடிப்படையில் நான் ஒன்றைக் கூற முடியும். அதாவது, ராதிகா குமாரசுவாமி கருதுவதுபோல, விடுதலைப் புலிகளின் கொள்கையிலும் சரி, அரசியற் தத்துவங்களிலும் சரி, பெண் போராளிகள், ஆயுதம் தரித்த கன்னிகளாகவே வாழ வேண்டும் என்ற கருத்தோட்டத்தை காணமுடியாது. அத்தோடு, ஆக்கமான பெண்மையின் பண்புகள் மறுக்கப்பட வேண்டுமென்ற சிந்தனைக்கும் இடமில்லை. சீருடையணிந்த ஒவ்வொரு பெண் போராளியின் தோற்றப்பாட்டிற்கும் பின்னே, பெண்மையின் சீரிய பண்புகளைக் கொண்ட கனிவான மென்மையான அன்புணர்வுடைய ஒரு தமிழ் இளம் பெண்ணைத்தான் காணமுடியும். காதலித்து, கல்யாணமாகி, தாம்பத்திய வாழ்வில் இன்பம் கண்டு, பிள்ளைப் பேறு கண்ட எத்தனையோ, எத்தனையோ 'ஆயுதக்

கன்னிகளின்' எண்ணிக்கையை இப்போது என்னால் நினைவில் நிறுத்த முடியவில்லை. எத்தனையோ திருமணமாகிய பெண் போராளிகளிடம் தாய்மையின் மகத்துவப் பண்புகளை நான் நேரில் கண்டிருக்கிறேன். உண்மை நிலை இப்படி இருக்கும் பொழுது, நிறையப் படித்த ராதிகா குமாரசுவாமி, விடுதலைப் புலிகளின் பெண் போராளிகளை 'ஆயுதக் கன்னிகள்' என்றும் 'வன்செயலாளர்கள்' என்றும் பாரம்பரிய தமிழ்ப் பெண்ணின் 'எதிர்மறைகள்' என்றும் கேவலமாக இழிவுபடுத்த முயல்வது எனக்கு கவலையையும் சினத்தையும் தருகிறது.

## பெண்களுக்கு அதிகாரமளித்தல்

விடுதலைப் புலிகளின் பெண் போராளிகளுக்கு உரிமையும் அதிகாரமும் வழங்கப்படுகிறதா என்ற விவாதத்தை நடத்தி, பெண் புலிகளுக்கு அதிகாரம் பறிக்கப்படுகிறது என்ற தீர்மானத்திற்கு வருகிறார் ராதிகா. ஒரு பெரிய இயந்திர சக்கரத்தின் ஒரு சிறிய பல் போன்ற விடுதலைப் புலிகளின் இயக்கக் கட்டமைப்பில் பெண் புலிகள் இயங்குகிறார்கள் என்றும், ஆண்களால் வகுக்கப்படும் கொள்கை களையும் திட்டங்களையும் நடைமுறைப்படுத்துவதே அவர்களது பணி என்றும் வாதிடுகிறார் ராதிகா. இது ஒரு குருட்டுத்தனமான எதிர்மறையான விமர்சனம். பெண்களுக்கு அதிகாரமளித்தல் என்ற பிரச்சினைக்கு அடிப்படையான விடயம் என்னவென்றால், பெண்களுக்கு எதிரான ஒடுக்குமுறை வடிவங்களை முதலில் இனம் கண்டு கொள்வதாகும். ராதிகா குமாரசுவாமி, இந்த அடிப்படையை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். சிங்கள இனவாதமே தமக்கு எதிரான அடிப்படையான ஒடுக்குமுறை வடிவம் என்பதை உணர்ந்துதான் பெண் போராளிகள் புலிகள் இயக்கத்துடன் இணைந்து கொள்கிறார்கள். இந்த ஒடுக்குமுறையிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள பெண்கள் ஆயுதமேந்தி போராட்டத்தில் குதிக்கும்பொழுது அவர்கள் வல்லமை படைத்த சக்தியாக அதிகாரம் பெறுகிறார்கள். ஆயுதப் போராட்டத்தில் பங்களிப்பதே அதிகாரமூட்டப்படும் அனுபவமாகும். பெண் புலிகளை சீண்ட வேண்டும் என்ற அவாவில் ராதிகா குமாரசுவாமி இந்த உண்மையை மறைத்து விட முனைகிறார்.

பெண் போராளிகளின் உரிமைப் பிரச்சினையையும், அதிகாரப் பிரச்சினையையும் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளும் ராதிகா,





அவர்கள் எவ்விதமான புறநிலையில் வாழ்ந்து வருகிறார்கள் என்பதைக் கருத்தில் எடுக்கவில்லை. பெண்களின் சமூக, பொருளாதார வாழ்வை மேம்படுத்த பல்வேறு செயற்திட்டங்களை வகுத்தபோதும், அவற்றை நடைமுறைப்படுத்த அரசாங்கத்திடமிருந்தோ அல்லது சர்வதேச நிறு வனங்களிடமிருந்தோ அவர்களுக்கு எவ்வித உதவிகளும் கிடைப்ப தில்லை. தொடர்ச்சியாக, இடைவிடாது நிகழ்ந்த போர், அதன் விளை வாக தொடர்ச்சியாக இடம்பெயரும் மக்கள், அத்துடன் வளங்களின் பற்றாக்குறை, எல்லாவற்றிற்கும் மேலாக நிதி நெருக்கடி - இப்படியான சூழ்நிலையில், எவ்விதம் பெண் போராளிகள் தமது சமூக மேம்பாட்டு வேலைத் திட்டங்களை நிறைவு செய்வது? அப்படி இருந்தும், இந்த நெருக்குவாரங்களுக்கு மத்தியிலும் தம்மால் இயன்ற அளவிற்கு தமது வேலைத் திட்டங்களை அவர்கள் செயற்படுத்தி வருகிறார்கள்.

பெண்களுக்கு உரிமையும் அதிகாரமும் வழங்கும் பிரச்சினை பற்றிய விவாதத்தில், எதற்காக ராதிகா விடுதலைப் புலிகள் அமைப்பையும் பெண்போராளிகளையும் சர்ச்சைக்கு இழுக்கிறார் என்பது புரியவில்லை. தீர்மானங்கள் எடுபடும் இயக்கத்தின் உயர்மட்டத்தில் பெண்களுக்கு அதிகாரமில்லை எனக் குற்றஞ்சாட்டி பெண் புலிகளை இழிவுபடுத்தும் நோக்காகவும் இருக்கலாம். இந்த விடயம் பற்றி பரிசீலனை செய்வதற்கு முன்னராக, ராதிகாவுக்கு ஒரு விடயத்தை சுட்டிக் காட்ட வேண்டும். அதாவது உலகடங்கிலுமுள்ள அரசுகள் மட்டத்திலும் சரி, நிறுவனங்கள் மட்டத்திலும் சரி, அதிகாரப் பகிர்வு சம்பந்தப்பட்ட விடயத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் மத்தியில் பெரியதொரு இடைவெளி நிலவுகிறது என்பது பெண்ணியவாதிகளின் கருத்து. ராதிகா பணிபுரியும், ஐ.நா நிறுவனத்தில் கூட இப்பிரச்சினை மேலோங்கி நிற்கின்றது. சில சமயங்களில் ஆட்சி பீட உயர்மட்டங்களில் பெண்கள் பெரும் பொறுப்புகளை வகிக்கலாம். ஆனாலும் அதே சமூகத்தில், கீழ்மட்டத்திலுள்ள பெரும்பான்மையான பெண்கள் உரிமை இழந்தவர்களாக, அதிகாரமற்றவர்களாக இருப்பதைக் காண முடிகிறது.

1990ல், நான் யாழ்ப்பாணம் திரும்பியதற்குப் பின்னர் பெண்களுக்கு உரிமையும் அதிகாரம் வழங்குவதும் சம்பந்தமாக நான் நிறைய எழுதியும் இருக்கிறேன்; விவாதித்தும் இருக்கின்றேன். எனது ஆரம்ப எழுத்துக்களையோ அன்றிப் பெண் போராளிகளின் அரசியல், இலக்கிய படைப்புக்களையொ ராதிகா குமாரசுவாமி படிக்கவில்லை என்பது தெரிகிறது. ஆயினும் **விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள்** என்ற தலைப்பில் நான் எழுதிய நூலை மட்டும் வாசித்து, அதனை மட்டும் ஆய்வுப் பொருளாக எடுக்கிறார். இந்த நூல்,

விடுதலைப் புலிகளின் மகளிர் இராணுவக் கட்டமைப்பின் படிநிலை வரலாற்றை மட்டும் விளக்குகிறது. இப் புத்தகத்தில், சமாதானம், அகிம்சை, பெண்களுக்கு அதிகாரமளித்தல், பெண்மைத் தத்துவம், சூழல் பிரச்சினை, இனவிருத்தி, புரட்சி நிகழ்ந்த சமூகங்களின் பெண்கள், பெண்களும் வர்க்கமும், பெண்களும் தேசிய இனமும், போன்ற பெண்ணியப் பிரச்சினைகள் பற்றி நான் விவாதிக்கவில்லை என்பதால் இவ்விடயங்கள் பற்றி எனக்கு ஆழமான அறிவில்லை என்றோ அல்லது, அவற்றில் அக்கறை இருக்கவில்லை என்றோ ராதிகா கருதினால், அது பெரும் தவறு என்றே சொல்வேன். இந்தத் தவறான அடிப்படையில் நின்றுகொண்டுதான், என்னை ஒரு இராணுவவாதி என்றும் ஆயுத வன்முறையை தூண்டிவிடுபவர் என்றும் ராதிகா என்மீது பழி சுமத்துகிறார். பெண்களுக்கு அதிகாரமளிக்கும் பிரச்சினை பற்றி மேலும் தொடர்வதற்கு முன்னராக, பெண் விடுதலை சம்பந்தமான எனது கருத்தை நான் இங்கு சுருக்கமாக விளக்க விரும்புகின்றேன்.

எடுத்துக் கொண்ட ஆய்வுப் பொருளுக்கு அப்பால் செல்லக்கூடாது என்பதற்காகவே, 'விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள்' என்ற எனது நூலில் பெண்ணியப் பிரச்சினைகள் பற்றி நான் விபரித்து எழுதவில்லை. ஒரு குறிப்பிட்ட வரலாற்றுச் சூழலின் தேவைக்கு ஏற்ப அந் நூல் எழுதப்பட்டது. தமிழ் இளம் பெண்கள், தமது சமூகத்தின் பழமைவாத பாரம்பரிய மரபுகளை முறித்துக் கொண்டு, தேசிய சுதந்திரப் போராட்டத்தில் இணைந்து கொண்டதால் பெண்ணினத்திற்கு புதிய வாய்ப்புகளும், சந்தர்ப்பங்களும் திறந்து விடப்படும் சூழ்நிலை பிறந்துள்ளதாக நான் அந்த நூலில் எடுத்து விளக்குகிறேன். அத்துடன், ஆயுதப் புரட்சிப் போராட்டத்தில் பெண்கள் பங்குகொள்வதால் தமிழ் சமூகத்தில் பெண்கள் பற்றிய பழமைவாத, மரபுவாத பார்வைகளுக்கும் படிமங்களுக்கும் சவால் விடப்பட்டுள்ளதாக குறிப்பிட்டிருக்கிறேன். புரட்சிகரமான பாதையில் தாம் காலடி எடுத்து வைத்துள்ளது குறித்து பெண் போராளிகள் பெருமையும் தன்னம்பிக்கையும் கொண்டுள்ளனர் என்றும் சுட்டிக் காட்டி இருக்கிறேன். இக் கருத்தை, ராதிகா போன்ற பெண்ணியவாதிகள் ஏற்றுக் கொள்கிறார்களோ இல்லையோ, அதுதான் அன்றைய தமிழ் சமூகத்தின் யதார்த்த மெய்நிலையை பிரதிபலித்துக் காட்டியது.

பெண்கள் பங்குகொள்ளும் தேசிய விடுதலைப் போராட்டங்கள் பற்றிய தத்துவார்த்த பார்வைகள் முற்போக்கான கோட்பாடுகள் மூலமாகவே நெறிப்படுத்தப்படுகின்றன. நானும் அப்படியானதொரு முற்போக்கான தத்துவார்த்த சிந்தனையையும் வரித்துக் கொண்டேன். சோசலிச பெண்ணிய தத்துவத்தை அடிப்படையாக வரித்து கொண்டு,





தேசிய விடுதலையுடன் சமூக மாற்றத்தையும் வலியுறுத்தினேன். அரச உருவாக்கம் பெற்றுவரும் ஒரு தேசிய இனக்கட்டமைப்பிலுள்ள ஒடுக்குமுறை வடிவங்கள் சமூகப் புரட்சி மூலம் முற்றாக ஒளிக்கப்பட வேண்டும்; அப்படியான ஒரு அரசியல் வேலைத் திட்டத்தையே ஒரு தேசிய விடுதலை இயக்கம் உருவாக்க வேண்டும் என வாதிட்டேன். சமூகத்தில் எந்தெந்த மட்டத்தில் பெண்களுக்கு எதிரான ஒடுக்குமுறை நிகழ்கிறது என்பதை இனம் கண்டு, அவற்றை ஒழித்துக் கட்டும் நடவடிக்கைகள் அடங்கியதாக அவ் வேலைத் திட்டம் அமைய வேண்டும். இந்த சமூக மாற்றத்தை இலக்காகக் கொண்ட புரட்சி அரசியலில் பெண்கள் நேரடியாகப் பங்குகொண்டு,தமது உள்ளாற்றல்களை நிறைவு செய்வதோடு, தாம் விரும்பும் எதிர்கால சமூகத்தை வடிவமைக்கவும் உழைக்க வேண்டும். இவ்விதம் புரட்சி அரசியலில் பெண்கள் பங்கு கொள்வது, அவர்கள் விடுதலை பெறவும், அதிகாரம் பெறவும் வழிகோலும்.

## பெண்களும் புரட்சியும்

காலம் கட்டவிழ்ந்து செல்கிறது. உலக ஒழுங்கை உலுப்பி விடும் மாற்றங்களையும் திருப்பங்களையும் நாம் காணக்கூடியதாக இருக்கிறது. மண்வீடுகள் போல ஆட்சியமைப்புகள் கவிழ்கின்றன. அறிவியற் கோட்பாடுகளும் அரசியற் சித்தாந்தங்களும் அர்த்தமிழந்து செத்துவிடுகின்றன; சில, வரலாற்று குப்பைத் தொட்டிக்குள் வீசப்படுகின்றன. தேசிய விடுதலையும், சமூகப் புரட்சியும் நிகழ்ந்த நாடுகளில், பெண்களின் நிலையில் மாற்றம் ஏற்படவில்லை என விரக்தியும் ஏமாற்றமும் தெரிவித்து பெண்ணியவாதிகளிடமிருந்து கண்டன விமர்சனங்கள் வெளியாகி வருகின்றன.

உலகத்தின் ஆட்சியதிகாரம் ஆண்களின் கையில் இருக்கிறது என்பது மறுக்க முடியாத உண்மை. ஆண் வர்க்கம், தனது ஆணாதிக்க சிந்தனைப் போக்கை கைவிட்டு, அதிகாரத்தை பெண்களுக்கு பகிர்ந்து அளித்துவிடும் எனக் கனவு காணும் கற்பனாவாதி அல்ல நான். பெண் விடுதலை என்பது, நீண்டதும், சிக்கலானதுமான ஒரு செல்நெறி. பெண்கள் விடுதலை பெறும் ஒரு சமூக மாற்றத்தை ஏற்படுத்தி, ஒரு உன்னதமான உலக ஒழுங்கை கட்டியெழுப்புவதாயின், பெண்கள் அரசியல் விழிப்புணர்வோடு, தாம் எதிர்கொள்ளும் பல்வேறு பிரச்சினைகளை மீண்டும் மீண்டும் மீளாய்வு செய்து வர வேண்டும். தேசிய விடுதலைப்

போராட்டத்தில் பங்கு கொள்ளும் பெண்களுக்கு தேசப் பற்றுணர்வோடு பெண்ணியம் பற்றிய விழிப்புணர்வும் இருப்பது அவசியம். இருபது ஆண்டுகளுக்கு முன்பிருந்தே நான் இந்த நிலைப்பாட்டையே கொண்டிருக்கிறேன். 1983 ல் '**பெண்களும் புரட்சியும்**' என்ற தலைப்பில் நான் எழுதிய சிறு நூலில், ஒரு தேசம் சுதந்திரம் அடைவதற்கும், அந்தத் தேசத்தில் சமூக மாற்றம் நிகழ்வதற்கும் பெண்கள் தேசிய விடுதலைப் போராட்டத்தில் நேரடியாகப் பங்குகொள்வதோடு, பெண்ணியம் பற்றிய விழிப்புணர்வுடனும் செயற்பட வேண்டுமென வலியுறுத்தினேன். தேசிய விடுதலைப் போராட்டத்தில் பங்குகொள்ளும் பெண்கள், தமது சமூகத்தில் பெண்களுக்கு எதிரான ஒடுக்குமுறை வடிவங்களை இனம் கண்டு, அவை பற்றி விவாதித்து, அவற்றை அகற்றிவிடப் போராட வேண்டும். அப்படியான போராட்டங்களே தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு பலம் சேர்ப்பதுடன், புரட்சிகரமான சமூக விடுதலைக்கும் வழிகோலும். இக் கருத்துக்களை நான் எனது நூலில் வலியுறுத்தியிருக்கின்றேன்.

தமக்கு விடுதலை கிட்டும் என்ற நம்பிக்கையோடு, பெண்கள் பங்குகொள்ளும் ஒரு தேசிய போராட்டத்துடன் நானும் நெருக்கமாக இணைந்து நிற்பதால், மேற்குறிப்பிட்ட கருத்துக்களை நான் எனது எழுத்துகளிலும் வற்புறுத்தி வந்திருக்கின்றேன். 1991 ல் நான் எழுதிய கட்டுரை ஒன்றில் தேசிய விடுதலைப் போராட்டங்கள் வெற்றி பெற்ற சமூகங்களில் பெண்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் பற்றியும், பெண்களுக்கு அதிகாரமளிக்கும் விடயம் சம்பந்தமாகவும் நான் விவாதித்துள்ளேன். '**ஒரு பெண்ணியப் பார்வை**' என்ற எனது ஆங்கிலக் கட்டுரை, '**சோசலிசமும் பெண்கள் ஒருக்குமுறையும்**' என்ற தலைப்பில், தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு 'சுதந்திரப் பறவைகள்' என்ற பெண் புலிகளின் அதிகாரபூர்வமான ஏட்டில் பிரசுரமாகியது. புரட்சிக்குப் பிந்திய சோசலிச நாடுகளில் பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கலான பிரச்சினைகள் பற்றி எழுதியிருந்தேன். இக் கட்டுரை நீளமான, ஆழமான ஆவணமாக அமையாத போதும், இச் சமூகங்களில் பெண்கள் பல முரண்பாடுகளை சந்தித்து நிற்கிறார்கள் என்பதையும் சிக்கலான சமூக, அரசியற் பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்கிறார்கள் என்பதையும் விளக்கியிருந்தேன். தமிழரின் விடுதலைப் போராட்டத்திலும் இது போன்ற தவறுகள் நிகழாதிருக்க வேண்டும் எனக் கூறி, கட்டுரையின் முகவுரையில் கீழ் கண்டவாறு எழுதியிருந்தேன்.

"ஒரு பலம் வாய்ந்த அரசியல் சக்தியாக பெண்கள் உருவாக்கம் பெறவேண்டும். அவ்விதம் இருந்தால்தான், ஒரு கட்சியினது அல்லது அரசாங்கத்தினது முழுமையான வேலைத்திட்டத்தில் பெண்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் முக்கிய அம்சமாக கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படும். பொருளாதாரத் திட்டமிடல் அதற்கான நிதி ஒதுக்கீடு, போன்ற விடயங்களில் முக்கியமான தீர்மானங்களை எடுக்க ஏதுவாக இருக்கும். ஆண்கள் முக்கியத்துவம் கொடுக்கும் விடயங்களுக்காக பெண்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் பலியாகாது இருக்க வேண்டும். இது சாத்தியம் ஆவதென்றால், அடி மட்டத்திலிருந்து கட்டி யெழுப்பப்பட்ட மகளிர் அமைப்பு அரசியல் அதிகாரமுடையதாக மாற்றியமைக்கப்பட வேண்டும். ஆண்களுடன் சமத்துவம் பெறுவது என்ற கோட்பாடுகளுக்கு அப்பால் பெண் உரிமைப் போராட்டத்தின் இலக்கு அமையப் பெற வேண்டும். ஆணாதிக்கப் பார்வையில்தான் இந்த உலகம் நெறிப்படுத்தப்பட்டிருக்கின்றது. ஆண்களின் சிந்தனை, வாழ்க்கை முறை, செயற்பாடுகள், அதிகார உறவுகள் ஆகியனவை பெண்களின் தலைவிதியை தீர்மானிக்கும் அளவு கோல்கள் ஆகக் கூடாது. ஆணாதிக்கத்தால் வரையறுக்கப்பட்ட இவ்வுலகில், பெண்களின் உரிமைப் போராட்டம் உண்மையான பெண் விடுதலையை இலக்காகக் கொண்டிருக்க வேண்டும். பெண் விடுதலை எனும் பொழுது, அது ஆண் விடுதலையோடும் தொடர்புடையது. ஆண்களும் தமது பழமைவாத உலகப் பார்வையிலிருந்து விடுபட வேண்டும். பெண் விடுதலை என்பது முற்றிலும் புரட்சிகரமான ஒரு அரசியல் இலட்சியத்தை குறித்து நிற்கிறது. பெண்கள் முழுமையான விடுதலை பெற்றுவாழும் ஒரு புதுமையான சமுதாயத்தையும் புதிய உலக தரிசனத்தையும் அது குறிக்கிறது. இப் புதுமையான சமுதாயத்தைக் கட்டியெழுப்புவதாயின், தேசிய அரசியலை நிர்ணயிக்க வல்ல அரசியல் அதிகாரம் பெண்களுக்குத் தேவை. பெண்களின் மேம்பாட்டையும் சமூகத்தின் உயர்ச்சியையும் இலக்காகக் கொண்ட இப் புதிய பார்வையை 'பெண்ணிய நோக்கு' எனக் கூறலாம்."[6]

மேற்குறிப்பிட்ட கருத்துக்கள் சர்வதேச பெண்ணியவாதிகள் எழுப்பும் பிரச்சினைகளுடன் சம்பந்தப்பட்டது. ஆயுதப் போராட்டத்தில் பங்குபற்றுவதால் மட்டும் அவர்களது எதிர்கால விடுதலையை உறுதிப்படுத்த முடியாது. சமூகத்தின் இரும்புப் பிடியை உடைத்தெறிந்து, முழுமையான விடுதலை பெறுவதாயின் பெண் உரிமைப் போராட்டம் தொடர்ச்சியானதாக, வளர்ச்சியுடையதாக அமையவேண்டும். ஆணாதிக்க சிந்தனையால் வனையப்பட்ட உலக ஒழுங்கை ஏற்றுக் கொள்வதாலும் பெண் விடுதலைக்கு அது வழிகோலப் போவதில்லை. ஆண்களின் கருத்துலகிலும் பார்வையிலும் அடிப்படையான மாற்றம் அவசியம். எல்லாவற்றிற்கும் முக்கியமாக, அடி மட்டத்திலிருந்து கட்டியெழுப்பப்பட்ட ஒரு மகளிர் அமைப்பு, தேசிய உயர் மட்ட அரசியலில் பங்கு கொள்வது அவசியம்.

இனி, பெண் புலிகள் பற்றிய ராதிகா குமாரசுவாமியின் கண்டன விமர்சனத்திற்கு வருவோம். விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள் 'அதிகாரமற்றவர்களாக' இருக்கிறார்கள் என்றும் தீர்மானங்கள் மேற்கொள்ளப்படும் இயக்கத்தின் உயர்மட்டத்தில் அவர்களுக்கு இடமளிக்கப்படவில்லை என்றும் ஒரு தவறான வாதத்தை முன் வைக்கிறார் ராதிகா. நீண்ட காலமாகவே ஆயுதப் போராட்டத்தில் பங்கு கொண்டு, விடுதலை இலட்சியத்திற்கு பெண் போராளிகள் ஆற்றிய மகத்தான பங்களிப்பை கௌரவிக்கும் வகையில், இரு பெண் தளபதிகளுக்கு பதவியுயர்வு வழங்கப்பட்டு, இயக்கத்தின் உயர் பீடமான மத்திய குழுவில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் இருவரும், தலைமைப்பீடம் எடுக்கும் முடிவுகளில் பங்குகொள்வதோடு, பொது வாகவே பெண்களின் நலனுக்காக உயர்பீடத்தில் குரல் எழுப்பி வருகிறார்கள். பெண்களின் இராணுவப் பிரிவின் பல்வேறு படையணி களையும் அரசியல், மற்றும் பிரிவுகளையும் சேர்ந்த மூத்த பெண் போராளிகள் கூட்டமாக எடுக்கும் முடிவுகளை கேணல் தரத்திலுள்ள இவ்விரு பெண் தளபதிகளும் இயக்க தலைமைக்கு சமர்ப்பிப்பார்கள். விடுதலைப் புலிகளின் இயக்கக் கட்டமைப்பிலுள்ள பல்வேறு, அலகுகளிலும், பெண் போராளிகள் பொறுப்பு வாய்ந்த பதவிகளை வகித்து வருகிறார்கள். இவாகள், எடுக்கும் முக்கிய தீர்மானங்கள் சமுதாய இயக்கம் மீது தாக்கத்தை விளைவிக்கிறது. உதாரணமாக, விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டுப் பிரதேசத்திலுள்ள நீதி நிர்வாக சேவையில், நீதிபதிகளாகவும், உயர் நீதிமன்ற நீதிபதிகளாகவும் பெண்கள் பணிபுரிகின்றார்கள். இவர்கள் எடுக்கும் முக்கிய தீர்ப்புகளும் தீர்மானங்களும் சமூகத்திலும், சாதாரண மக்களின் வாழ்விலும் தாக்கத்தை ஏற்படுத்தவே செய்கிறது. அத்தோடு பெண் சட்டத்தரணிகள் பெண்கள் சம்பந்தப்பட்ட பல சிக்கலான பிரச்சினைகளுக்கு நீதி வேண்டி வாதாடி வருகிறார்கள். விடுதலைப் புலிகளின் மருத்துவப் பிரிவை எடுத்துக் கொண்டால், அப்பிரிவில் முதலாவது மருத்துவராக இணைந்தவர் ஒரு பெண். இப் பெண் மருத்துவரின் கடும் உழைப்பால் நூற்றுக்கணக்கான மருத்துவத் தாதிகள் உருவாக்கப்பட்டுள்ளனர். விடுதலைப் புலிகளின் நிதியைக் கையாளுவதிலும் பெண்கள் முக்கிய பங்களிக்கிறார்கள். தத்தம் பிரிவுகளது நிர்வாகத்தையும், நிர்வாகச் செலவுகளையும் பெண்களே பொறுப்பேற்று நடத்துகிறார்கள். விடுதலைப் புலிகளின் ஊடகம், கருத்துருவாக்கம், மற்றும் பரப்புரைத் துறைகளில் பெண்களின் பங்கு முக்கியமானது. பெண்கள் கூட்டாகச் சேர்ந்த படங்கள், குறும்படங்கள், விவரணப் படங்கள், செய்தித் தொகுப்புகள் என்ற வகையில் கருத்துருவாக்கப் படைப்புகளை





தயாரித்து வருகிறார்கள். இது ஒரு புறமிருக்க, மகளிர் பிரிவின் அதிகாரபூர்வ ஏடாக ஒரு மாதாந்த இதழை பெண் போராளிகளே எழுதியும் பிரசுரித்து வருகிறார்கள். பெண்கள் அபிவிருத்தி நிறுவனத்தில் பணிபுரியும் பெண் போராளிகள், போரினால் பாதிக்கப்பட்ட பெண்களினதும், இடம்பெயர்ந்த பெண்களினதும் புனர்வாழ்விற்கும், மேம்பாட்டிற்குமாக சமூக-பொருளாதார வேலைத்திட்டங்களை உருவாக்கி செயற்படுத்தியும் வருகிறார்கள். விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டு பிரதேசத்தில் நிலவும் நிர்வாகக் கட்டமைப்பிலும் பெண் போராளிகள் முக்கிய பங்கு வகிக்கிறார்கள். சில பகுதிகளின் அரசியல் நிர்வாகப் பணிகளை பெண்களே பொறுப்பேற்று நடத்துகிறார்கள். இந்த நிர்வாக அமைப்புகளின் பெண் பொறுப்பாளர்களுக்குக் கீழ் ஆண் போராளிகளும் பணி புரிகின்றார்கள். அரசியல் நிர்வாகத் துறைகளில், கௌரவத்துடனும், தன்னம்பிக்கையுடனும், முக்கிய பொறுப்புக்களை தாங்கி பணிபுரிந்து வரும் பெண் புலிகள், இயக்கத்திற்கு உள்ளேயும் வெளியேயும் அதிகாரமுடையவர்களாகவே மாறிவருகிறார்கள். பெண் களுக்கு அதிகாரமளிப்பது என்பது, சமூகத்தின் அடி மட்டத்திலிருந்து படிப்படியாக மேல்நோக்கிய வளர்ச்சியையும் உயிர்ச்சியையும் கொண்டதாக அமைய வேண்டும். எந்தெந்த மட்டத்தில், எந்தெந்த வகையில் பெண் போராளிகள் அதிகாரமுடையவர்களாக செயற் படுகிறார்கள் என்பது ராதிகா குமாரசுவாமிக்கு அறவே தெரியாது. அதே போலவே, ஆயிரமாயிரம் தமிழீழப் பெண்கள், தமது சமூக, பொருளாதாரப் பிரச்சினைகளுக்கு நிவாரணமும், உதவியும் ஆலோசனையும் தேடி பெண் புலிகளின் அரசி யல், நிர்வாகச் செயலகங்களுக்கு படை எடுக்கிறார்கள் என்பதும் ராதிகாவுக்கு தெரியாது.

விடுதலைப் புலிகளின் அதிகாரபீடத்தில், தற்போது பதவியும் பொறுப்பும் வகிக்கும் பெண் போராளிகளின் எண்ணிக்கை குறித்த சில நாற்காலி விமர்சகர்களுக்கு திருப்தியில்லாமல் இருக்கலாம். ஆயினும், புலிகளின் நிர்வாகக் கட்டமைப்பில், முக்கிய தீர்மானங்கள் எடுக்கப்படும் நடுத்தர மட்டத்தில், பெருமளவு பெண் புலிகள் பணியாற்றி வருகிறார்கள் என்பது உண்மை. இவர்கள் எல்லோரும் எதிர்காலத்தில் அதிகாரமும் பொறுப்பும் உள்ள உயர்மட்ட பதவிகளுக்கு உயர்த்தப்படுவார்கள் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. பெண் போராளிகளுக்கு கிட்டும் புதிய வாய்ப்புகள், சந்தர்ப்பங்களின் பரப்பைப் பார்க்கும்போதும், இளம் புலிப் பெண்களின் அபாரமான தன் நம்பிக்கையையும் தன்மதிப்பையும் பார்க்கும்போதும், பெண்களுக்கு படிப்படியாக அதிகாரமளிக்கப்பட்டு வருகிறது என்று திடமாகச் சொல்லலாம். பெண் புலிகள் மட்டுமன்றி,

தமிழீழப் பெண் சமூகமும் உரிமைகளும், அரசியல் அதிகாரமும் பெற்ற சக்தியாக வளர்ச்சி பெற்று வருகிறது எனலாம்.

தேச சுதந்திரப் போராட்டத்தில் பெண்களின் பங்களிப்பு, தமிழீழ அரசியலுக்கு ஆழமும் அர்த்தமும் கொடுத்துவந்த அதே வேளை, விடுதலைப் புலிகள் மக்கள் முன்னணியின் தலைவராக பதவி வகித்த திரு. மாத்தையா, அதிகார வெறியால் செய்த சதிகாரச் செயலால் விடுதலைப் புலிகள் அரசியல் அமைப்பிற்கு பெரும் பின்னடைவு ஏற்பட்டது. இதன் காரணமாக, யாழ்ப்பாணத்தில் மக்கள் முன்னணி அரசியலில் ஒரு பூகம்பமே வெடித்தது.

## மாத்தையாவும் மக்கள் முன்னணியும்

1993 ம் ஆண்டு மார்ச் மாதத்தில், ஒரு நாள். வெப்பமும் புளுக்கமுமான இரவு 10 மணி இருக்கும். விடுதலைப் புலிகளின் பிரதித் தலைவரும் மக்கள் முன்னணித் தலைவருமான திரு. மகேந்திரராசா (மாத்தையா) யாழ்ப்பாணம் கொக்குவில் பகுதியிலுள்ள எமது வீட்டிற்குள் திடீரென்று நுழைந்தார். எமது வீட்டிலிருந்து சாகும் வரை உண்ணாவிரதம் அனுஷ்டிக்கப்போவதாகவும் அதற்கு ஒரு அறையை ஒதுக்கித் தருமாறும் வேண்டினார்.

அங்கலாய்ப்புடனும், பதட்டத்துடனும் அவர் காணப்பட்டார். சாரமும் சேட்டுமாக சாதாரண உடையணிந்திருந்த மாத்தையா, தனக்குத் தேவையான சில பொருட்கள் அடங்கிய சிறு பை ஒன்றையும் காவி வந்தார். எமது வீட்டிற்குள் நுழைந்த கணத்திலிருந்தே தான் உண்ணாவிரதத்தை ஆரம்பித்து விட்டதாகவும் கூறினார். மாத்தையாவின் முகத்தில் ஒரு கடுப்பு தென்பட்டது. அவரது மெய்ப் பாதுகாவலர்கள் ஆயுத பாணிகளாக எமது வீட்டுக்கு முன்பாக குவிந்து நின்றனர். மாத்தையாவின் பஜரோ வாகனம் எமது வீட்டு வெளிவாசலுக்கு அருகே நிறுத்தப்பட்டிருந்தது. இந்த திடீர் திருப்பத்தால் திகைப்படைந்த எனது கணவர், சாகும் வரை உண்ணாவிரதம் இருக்க முடிவெடுத்ததன் காரணம் என்னவென்றும், எமது வீட்டை தேர்ந்தெடுத்ததன் நோக்கம் என்னவென்றும் மாத்தையாவிடம் வினவினார்.

புலிகள் இயக்கத்தின் உப தலைவர் பதவியிலிருந்தும், அரசியற் கட்சியின் தலைவர் பொறுப்பிலிருந்தும் தாம் விலக்கப்பட்டது காரணமாக இயக்கத்தின் தலைமைப் பீடத்திலும், குறிப்பாக திரு. பிரபாகரன் அவர்கள் மீதும் தாம் ஏமாற்றம் அடைந்திருப்பதாக மாத்தையா





விளக்கினார். இயக்கத் தலைமையின் இம் முடிவு நியாயமற்றது என்றும், தன்னால் ஏற்றுக் கொள்ள முடியாது என்றும் கூறிய அவர், தமது எதிர்ப்பைத் தெரிவிக்கவே சாகும்வரை உண்ணாவிரதமிருக்க தாம் முடிவு செய்துள்ளதாகவும் சொன்னார். எமது வீட்டை தெரிவு செய்ததன் காரணத்தை விளக்கிய அவர், இயக்கத்தின் தலைவர்களும் தளபதிகளும் மட்டுமன்றி உள்ளூர் பத்திரிகையாளர்களும் எமது வீட்டுக்கு வந்து செல்வதால், தமது உண்ணாவிரதப் போராட்டம் முழு இயக்கத்திற்கும் பொதுமக்களிற்கும் தெரிய வரும் என்றார்.

மாத்தையாவின் வீழ்ச்சிக்கான காரணங்கள் என்னவென்பதை பாலாவும் நானும் நன்கறிவோம். மக்கள் முன்னணி என்ற இயக்கத்தின் அரசியற் கட்சியை, மாத்தையா ஒழுக்கம் கட்டுப்பாட்டுடன் செம்மையாக வழிநடத்தவில்லை. இதனால் மக்கள் ஆதரவுத் தளத்திற்கு அச்சுறுத்தல் ஏற்பட்டது. கட்சியின் தலைவர் என்ற ரீதியிலும், இயக்கத்தின் உபதலைவர் என்ற ரீதியிலும், மாத்தையா ஒரு சர்வாதிகாரப் போக்கைக் கடைப்பிடித்தது மட்டுமன்றி, கட்சியின் யாப்பை மீறும் வகையில் தனக்கு அடிவருடிகளாக இருந்தவர்களை அரசியல் அமைப்பின் முக்கிய பொறுப்புகளில் அமர்த்தினார். கிராமிய மட்டத்திலிருந்து, பிரதேச மட்டம் வரை தேர்தல் முறை மூலமாக கட்சி உறுப்பினர்களும், நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென யாப்பு விதிக்கிறது. இதனால் மாத்தையாவின் நடவடிக்கை, கட்சியின் நிர்வாக அலகுகளை மக்களே தெரிவு செய்யும் சனநாயக வழிமுறைக்கு முரணாக அமைந்ததுடன், மக்களின் அபிலாசைகளைப் பிரதிபலிக்கும் நிறுவனமாக கட்சி இயங்குவதற்கும் தடையாக இருந்தது. இறுதியில் விடுதலைப் புலிகளின் மக்கள் முன்னணியானது, ஊழல் மிகுந்த நிறுவனமாக மாறி, மாத்தையாவுக்கு விசுவாசமான ஒரு சில நபர்களின் அபிலாசைகளை மட்டுமே பிரதிபலித்தது. பரந்துபட்ட மக்களும் கட்சிமீது ஆத்திரமும் வெறுப்பும் கொண்டனர். இதனால் கட்சியைக் கலைத்துவிடுவதென தலைமைப்பீடம் முடிவெடுத்தது. இதன் விளைவாக கட்சியின் தலைவர் பொறுப்பிலிருந்தும், இயக்கத்தின் உப தலைவர் பொறுப்பிலிருந்தும் மாத்தையா விலக்கப்பட்டார். மாத்தையா மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்ற முடிவு இயக்கத்தின் மத்திய குழுவாலும், பொதுச் சபையாலும் மேற்கொள்ளப்பட்டபோதும், மாத்தையா அந்த முடிவை ஏற்றுக் கொள்ளவில்லை. தனக்கு எதிராக எடுக்கப்பட்ட ஒழுங்கு நடவடிக்கையானது தலைவர் பிரபாகரனின் தனிப்பட்ட விரோதத்தினால் மேற்கொள்ளப்பட்டது எனக் கருதிய அவர், அந்த முடிவுக்கு சவால் விடத் தீர்மானித்தார்.

சாகும் வரையிலான உண்ணாவிரதப் போராட்டத்தைக் கைவிட்டு, இந்தப் பிரச்சினையை விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடத்துடன் பேசித் தீர்த்துக் கொள்ளுமாறு நாம் இரவிரவாக மாத்தையா விடம் மன்றாடிக் கேட்டோம். அடுத்ததாக உண்ணாவிரதப் போராட்டத்தை எமது இல்லத்தில் நடத்துவதற்கு அவர் தீர்மானித்ததும் எமக்கு திருப்தியை அளிக்கவில்லை. சங்கடத்தையே தோற்றுவித்தது. உண்ணாவிரதம் எமது வீட்டில் நடைபெற்றால் இயக்கத்திற்கு எதிராக மாத்தையா நிகழ்த்தும் போராட்டத்திற்கு நாமும் துணை நிற்பதாக எம்மீதும் வீணான சந்தேகம் ஏற்படலாம். இதனை மாத்தையாவுக்கும் தெளிவுபடுத்தினோம். இயக்கத்தின் முடிவுக்கு எதிராக ஆட்சேபனை தெரிவிக்கும் உரிமை அவருக்கு இருந்துபோதும், எமது வீட்டை அதற்காகப் பயன்படுத்தும் உரிமை அவருக்கு இல்லை என்று வாதாடினோம். இந்த நியாயப்பாட்டை மாத்தையா ஏற்றுக் கொண்டார். இறுதியாக அவரது ஆட்சேபனைக் கடிதத்தை தலைவர் பிரபாகரனிடம் கையளிப்பதாக பாலா வாக்குறுதி கொடுத்ததை அடுத்து, மாத்தையா வின் உண்ணாவிரத நாடகம் முடிவுக்கு வந்தது. பாலசிங்கம் தம்பதிகள் வீட்டில் ஓரிரவு உண்ணாவிரதம் அனுஷ்டித்து தனது ஆட்சேபனையைத் தெரிவித்துவிட்ட திருப்தியுடன் மாத்தையா தமது மெய்க்காவலர்களுடன் எமது வீட்டை விட்டுப் புறப்பட்டார். மாத்தையாவின் விவகாரத்தை பொறுத்த வரை, பின்னர் நாம் அறிந்த பூதாகர சம்பவங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, இந்த உண்ணாவிரத நிகழ்வு ஒரு சிறிய விடயமே.

ஒரு மாதத்தின் பின்னர், மாத்தையாவும் அவருது நெருங்கிய தோழர்கள் சிலரும் கைது செய்யப்பட்டனர். பிரபாகரன் அவர்களை கொலை செய்ய முயற்சித்த சதிக் குற்றசாட்டின்பேரில் விடுதலைப் புலிகளின் புலனாய்வுப் பிரிவினர் இவர்களைக் கைது செய்தனர். இயக்கத்தின் மூத்த தளபதிகளின் வழிநடத்தலில் மானிப்பாயிலிருந்த மாத்தையாவின் பாசறை இயக்கப் போராளிகளால் சுற்றி வளைக்கப்பட்டு மாத்தையாவும் அவர்களது தோழர்களும் கைது செய்யப்பட்டனர். இப்படியான திடீர் திருப்பத்தை அறிந்தபோது நாம் மலைத்துத் திகைத்துப் போனோம். அன்று எமது வீட்டுக்கு வருகை தந்த பிரபாகரன் அவர்கள் நடந்ததை விளக்கிறார். தன்னைக் கொலை செய்துவிட்டு, தலைமையைக் கைப்பற்ற மாத்தையா சதி செய்தார் என்றும், இந்திய வெளியுறவுப் புலனாய்வுத் துறையான றோ, இந்த சதித் திட்டத்தை தீட்டியது என்றும் அவர் சொன்னார். இந்தச் சதித்திட்டத்தின் முழுமையான பரிமாணங்களையும் அறிவதற்கு விசாரணைகள் நடைபெறுவதாகவும் அவர் மேலும் தெரிவித்தார்.





இந்த விசாரணைகள் முடிவடைய பல மாதங்கள் பிடித்தன. மாத்தையாவும் அவருக்கு கீழே பணியாற்றிய அவரது நெருங்கிய தோழர்களும் கடுமையான விசாரணைக்கு உட்படுத்தப்பட்டனர். இறுதியாக, சதித்திட்டத்தின் முழுமையான பின்னணி அம்பலமாகியது. இந்த சதித்திட்டத்தில் முக்கிய பங்குவகித்த கதாநாயகர்களிடமிருந்து பெறப்பட்ட வாக்குமூலங்கள் ஒலிநாடாக்களிலும், ஒளிநாடாக்களிலும் (வீடியோ) பதியப்பட்டன. இதே சமயம், விடுதலைப் புலிப் போராளிக ளுக்கு விசேட கூட்டங்கள் ஒழுங்கு செய்யப்பட்டு, இந்த சதித் திட்டத்தின் நோக்கம் பற்றியும் பின்னணி பற்றியும் அவர்களுக்கு விளங்கப் படுத்தப்பட்டது. இந்தக் கூட்டங்களின்போது, மாத்தையா தவிர்ந்து, இச் சதியில் நேரடியாக பங்கு கொண்ட பல மூத்த போராளிகள், தாமாகவே முன்வந்து சதிபற்றிய உண்மை விபரங்களை பகிரங்க வாக்கு மூலங்களாக தெரியப்படுத்தினர். இது ஒரு சிக்கல் நிறைந்த விபரீதக் கதை. மாத்தையாவின் மிகவும் நெருக்கமான போராளிகளுடன், முதலில் இந்திய புலனாய்வுத் துறையினர் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டனர். பின்னர் இவர்கள் வாயிலாக மாத்தையாவுடன் தொடர்பு கொண்டனர். விடுதலைப் புலிகளின் தலைமையை அழிக்க சதி தீட்டப்பட்டது. சதி வெற்றிகரமாக நிறைவேறினால் மாத்தையாவுக்கு இந்தியாவின் ஆதரவு மட்டுமன்றி, பெருந்தொகையான நிதியுதவியும் வழங்கப்படுமென உறுதியளிக்கப்பட்டது. தமிழ் நாட்டில், இந்திய சிறை ஒன்றில் தடுத்த வைக்கப்பட்டிருந்த பிரபாகரனின் மெய்ப்பாதுகாவலர் ஒருவர், சிறையிலிருந்து இரகசியமாக விடுவிக்கப்பட்டு, பிரதான கொலையாளியாக பயிற்றுவிக்கப்பட்டார். சிறைக் காவலிலிருந்து தப்பியோடியதாக ஒரு புனைக் கதையுடன் இவர் யாழ்ப்பாணம் திரும்பி வந்தார். பிரபாகரன் அவர்களது படுக்கை அறையில் நேரக் குண்டு வைப்பதே, மாத்தையாவின் சதியில் அவருக்கு கொடுக்கப்பட்ட முக்கிய பணி. இந்த இளைஞர் தமது சிறையுடைப்புக் கதையுடன் யாழ்ப்பாணம் திரும்பியதும், அவர் மீண்டும் பிரபாகரனின் காவல் அணியில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். இவர் கைது செய்யப்படுவதற்கு சில நாட்களுக்கு முன்னதாக, எமது வீட்டுக்கு வருகை தந்து, தமது சிறையுடைப்பு சாகசம் பற்றி புளுகித் தள்ளினார்.

கொலைச் சதிக்கு பிரதான சூத்திரதாரி மாத்தையாவே என்பது, ஐயுறவுக்கு இடமின்றி, விசாரணை முடிவில் நிரூபணமாகியது. திரு. பிரபாகரனையும் அவருக்கு விசுவாசமான மூத்த தலைவர்களையும் தளபதிகளையும் கொன்றொழித்துவிட்டு, விடுதலைப் புலிகளின் தலைமைப் பதவியை தனதாக்கிக் கொள்வதே மாத்தையாவின்

சூழ்ச்சித் திட்டம். விடுதலைப் புலிகள் இயக்கத்தின் தலைமைத்துவத்தை அழிக்க சதி செய்தனர் என்ற குற்றச்சாட்டின் பேரில், 1994, டிசம்பர் மாதம் 28 ம் திகதி மாத்தையாவுக்கும் அவரோடு சேர்த்து செயற்பட்ட ஒரு சில சதிகாரர்களுக்கும் மரண தண்டனை வழங்கப் பட்டது.

விடுதலைப் புலிகளின் மக்கள் முன்னணி என்ற அரசியற் கட்சி கலைக்கப்பட்டு, கொலைச் சதிக் குற்றச்சாட்டில் மாத்தையா கைது செய்யப்பட்டதைத் தொடர்ந்து, புலிகளின் அரசியற் பிரிவு புனர் நிர்மாணம் செய்யப்பட்டது. யாழ்ப்பாணக் குடாநாட்டின் தளபதியாக பணியாற்றிய திரு. தமிழ்ச்செல்வன் அரசியற் பிரிவிற்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்டார்.

## சீதன முறைமை

திருமணத்தின் போது பெண்களுக்கு சீதனம் வழங்கும் முறையானது, யாழ்ப்பாண சமூகத்தில் ஆழமாக வேராடிய, நிறுவனமயப்பட்ட ஒரு வழக்காகும். யாழ்ப்பாண மக்களின் பாரம்பரிய சொத்துடமைச் சட்டமாகிய தேச வழமைச் சட்டக் கோவையில் சீதன முறைமை ஒரு சமூக ஒழுங்கு முறையாக கொள்ளப்படுகிறது. மிகவும் சுவார்ஸ்யமான இந்தச் சொத்துடமை சட்டத்தில், தாய்வழியாகவும் தந்தைவழியாகவும் பெறப்படும் சொத்துக்களைப் பேணுவது பற்றிய விதிமுறைகள் அடங்கியுள்ளன. தாய்வழிச் சொத்துடமையின் மூலம், முந்நூறு ஆண்டுகால வரலாற்றையுடைய தேச வழமைச் சட்டத்திற்கும் அப்பாலானது. யாழ்ப்பாணத்து சீதன வழக்கு முறையின் வரலாற்று வேரும் ஆழமானது. பத்து நூற்றாண்டுகளுக்கு முன்னர், தென் மேற்கு இந்தியாவிலிருந்து யாழ்ப்பாணத்தில் குடியேறிய திராவிடத் தமிழர் களிடமிருந்தே இவ் வழக்கு முறை தோன்றியிருக்கலாமென நம்பப்படுகிறது. ‘மலபார்’ என காலனித்துவவாதிகளால் வர்ணிக்கப்பட்ட, பண்டைய திராவிட இனத்தைச் சேர்ந்த கேரள மக்கள் மத்தியில் நில விய ‘மருமக்கள் தாயம்’ என்ற சொத்துடமைச் சட்டத்திலிருந்தே சீதன முறைமை தோன்றியிருக்கலாம் என்பது சில ஆய்வாளர்களின் கருத்து. காலனித்துவவாதிகள் இச் சொத்துடமைச் சட்டத்தை திருத்தியபோதும், பெண்களுக்கு சீதனம் வழங்கும் மரபு முறை, சாராம்சத்தில் மாறவில்லை. யாழ்ப்பாண தமிழ் சமூகத்தில் நிலையூன்றி, நீடித்து வரும் சீதன முறைமை இன்றும் தமிழ் மக்களின் வாழ்வை நிர்ணயித்து வரும் சக்தியாக விளங்குகின்றது. குறிப்பாக, பெண்களின் வாழ்வையே





பாரதூரமாக பாதிக்கும் ஒரு பிரச்சினையாக இருந்து வருகின்றது. இந்தப் பிரச்சினையின் அடிப்படையில்தான் ஒரு தமிழ்ப் பெண்ணின் சமூக அந்தஸ்தும், அவளது சமூக பொருளாதார வாழ்வும் நிர்ணயமாகிறது.

நாம் லண்டனில் வாழ்ந்து வந்தபோதே யாழ்ப்பாண தமிழ் மக்களின் இச் சீதன வழக்கு முறை எனது கவனத்தை ஈர்த்தது. லண்டனில் எமக்குத் தெரிந்த இளைஞர்களில் பெரும்பாலானோர், யாழ்ப்பாணத்திலிருந்த தமது சகோதரிகளின் சீதனத்திற்காக உழைத்து பணம் சேர்ப்பதை அறிந்தோம். இரவு பகலாக ஓய்வின்றி உழைத்து, தமது சகோதரிகளுக்கு பெரும் தொகையில் சீதனம் சேர்க்கும் அங்கலாய்ப்பில், சீதன வழக்குமுறை பற்றி அவர்கள் கண்டனமும் அதிருப்தியும் தெரிவிப்பதைக் கேட்டிருக்கிறேன். சீதனச் சந்தையில் பண்டப் பொருட்கள் போல தமது சகோதரிகளுக்கு விலைபேசப்படுவதால் சீதன முறைமைய அவர்கள் சபிப்பதும் உண்டு. இதில் என்னை ஆச்சரியப்பட வைத்தது என்னவென்றால், இதே இளைஞர்கள் தமக்கு திருமணம் பேசப்படும்பொழுது, எடுத்துக்கொண்ட முற்றிலும் மாறான நிலைப்பாடுதான், ஒரு சிலரைத் தவிர, அனேகமானோர் சீதனம் வாங்கியே திருமணம் செய்தனர். அதுமட்டுமன்றி சீதனம் வாங்கியதையும் நியாயப்படுத்த முனைந்தனர். எழுபதுகளின் கடைசியிலும், எண்பது களின் ஆரம்பத்திலும் பெண்ணியச் சிந்தனைகள் என்னிடம் தீவிரம் பெற்றிருந்த காலத்தில், ஒரு பெண் பணமும், சொத்தும் கொடுத்து கணவனை வாங்குகின்ற வாழ்க்கை என்னால் ஜீரணிக்க முடியவில்லை. இந்தக் கீழ்த்தரமான வழக்குமுறைக்கு தமிழ்ப் பெண்கள் மத்தியில் கடுமையான எதிர்ப்பு நிலவும் என்று நான் எண்ணினேன். ஆனால் நான் தெரிந்து கொண்டதை விட சீதன முறைமை மிகவும் சிக்கலானது என்பதை நான் பின்னர் உணர்ந்து கொண்டேன். திருமணத்துக்கு முன்பாக, மண மகனுக்கும், அவரது குடும்பத்திற்கும் இணக்கப்பாடு கண்ட ஒரு தொகைப் பணமும் சொத்தும் வழங்கும் ஒரு எளிய நடைமுறையாக மட்டும் சீதன முறைமையை எடைபோட முடியாது.

சீதன வழக்கு முறையானது யாழ்ப்பாண சமூகத்தின் சமூக பொருளாதார வாழ்விற்கு ஒரு அச்சாணியான பிரச்சினை; குறிப்பாகத் தமிழ்ப் பெண்களின் வாழ்விலும் கௌரவத்திலும் பாரதூரமான பாதிப்பை ஏற்படுத்தக்கூடிய ஒரு பிரச்சினை. தமிழ் சமூகத்துடன் நான் ஆழமாக நெருங்கிப் பழகியபோதுதான் சீதன வழக்கின் முழுமையான பரிமாணங்களையும் புரிந்து கொள்ள முடிந்தது. எழுபதுகளின் இறுதியிலும் எண்பதுகளின் ஆரம்பத்திலும் நான் பிரபாகரன் அவர்களையும் விடுதலைப் புலிப் போராளிகளையும் இந்தியாவில்

சந்தித்த போது அவர்கள் சீதன முறைமையை வன்மையாக எதிர்த்தார்கள். விடுதலைப் புலிகளின் அரசியற் கொள்கைத் திட்டத்தில் சீதன ஒழிப்பு ஒரு முக்கிய அம்சமாக இடம்பெற வேண்டும் என்றும் வற்புறுத்தினார்கள். பெண்களை இழிவுபடுத்தும் இந் நடைமுறை முற்றாக ஒழிக்கப்படவேண்டுமென அக் காலத்திலிருந்தே பெண் போராளிகளும் கடுமையான நிலைப்பாட்டை எடுத்தனர்.

யாழ்ப்பாணத்திலுள்ள சீதன வழங்கு முறைக்கு கடுமையான எதிர்ப்பு நிலவும் என நான் எதிர்பார்த்தேன். ஆனால் நான் யாழ்ப்பாணம் சென்று, தமிழ் மக்களோடு கூடிவாழ்ந்த காலத்தில், சீதன நடைமுறைக்கு கூட்டான பெரும் எதிர்ப்பு நிலவவில்லை எனக் கண்டபோது நான் ஆச்சரியமடைந்தேன். நான் நினைத்ததற்கு மாறாக, சீதன வழக்குப் பற்றி மக்களிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவின. சிலர், சீதன முறைமையை ஆதரிக்கவும் செய்தார்கள். குறிப்பாக படித்த பெண்கள் மட்டத்தில் சீதனத்திற்கு ஆதரவு நிலவியதைக் கண்டு நான் ஆச்சரியம டைந்தேன். சொத்துடைமை படைத்த பெண்களும் சீதன வழக்குக்கு ஆதரவான நிலைப்பாட்டையே எடுத்தனர். குடும்பத்தின் பாரம்பரிய சொத்துடமைகளே பெண்களுக்கு சீதனமாக பராதீனப்படுத்தப்படு கின்றது என்றும், சீதன முறை அகற்றப்பட்டால் இந்தச் சொத்துரிமையை பெண்கள் இழக்க நேரிடும் என்பதும் இவர்களது கருத்து. தங்கள் பெண் பிள்ளைகள் திருமணம் செய்யும் போது, அவர்களுக்கு வீடாக, நிலமாக, நகையாக, பணமாக குடும்பச் சொத்தை பகிர்ந்தளிப்பது அல்லது நன்கொடை வழங்குவது தமது கடமை என்று பெற்றோர்கள் வாதித்தனர். பெற்றோருக்கு உரிய இந்த உரிமையையும், அன்பு வெளிப்பாட்டையும் சட்ட மூலமாக பறித்துவிடக் கூடாது என்பதும் அவர்களது வாதம். சீதனம் கொடுக்காமல் தமது பெண் பிள்ளைகளுக்கு திருமணம் செய்து வைப்பது இயலாத காரியம் என்பது பெரும்பாலானோரது கருத்து. சீதனம் என்பது தமக்கு உரித்தான பரம்பரைச் சொத்தையே குறிப்பது என்பதால், சீதன முறைமையை தடைசெய்து தமது சொத்துரிமையைப் பறிப்பது நியாயமாகாது என்றும் சில பெண்கள் வாதிட்டனர். சீதன வழக்கை கடுமையாக எதிர்ப்பவர்கள் கூட, சமூகத்தில் ஆழவேரூன்றி நிற்கும் இந் நடைமுறையை சட்டமூலமாக மட்டும் அழிப்பது மிகவும் கடினம் என கருத்துத் தெரிவித்தனர். சீதன நடைமுறையை ஒழித்துக் கட்டுவதாயின் சமூகத்தின் மனநிலையில் அடிப்படையான மாற்றம் நிகழவேண்டும் என்றும் இவர்கள் வாதித்தனர். சீதனப் பிரச்சினை பற்றிய விவாதம்





எழுப்பிய பலரகமான சர்ச்சைகளும், கருத்துகளும் எனது மனதில் பதியவே செய்தது.

1993 ம் ஆண்டு காலப் பொழுதில், மணமகன்களிடம் இருந்தும், அவர்களது குடும்பங்களிடம் இருந்தும், பேராசையுடன் மட்டுக்கு மீறிய அளவில், எழுப்பப்பட்ட சீதனக் கோரிக்கைகள், எத்தனையோ குடும்பங்களைப் பாதித்ததுடன், பெண்களின் வாழ்க்கையையும் சீரழியச் செய்தது. இதனால், சீதன முறைமை மிகவும் சூடுபிடித்த, சர்ச்சைக்குரிய சமூகப் பிரச்சினையாக உருவெடுத்தது. சீதனக் கொடுமை அழிக்கப்பட வேண்டும் என்று 1992 ல் சர்வதேச மகளிர் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை உடனடியாக நடைமுறைப்படுத்துமாறு தமிழ்ப் பெண்கள், விடுதலைப் புலிகளின் பெண் போராளிகளிடம் கோரிக்கை விடுத்தனர். இந்தக் கோரிக்கை பிரபாகரன் அவர்களிடம் சமர்ப்பிக்கப்பட்டபோது, உடன் நடவடிக்கை எடுக்க அவர் முடிவு செய்தார்.

சீதன முறைமை பற்றி தமிழ் சமூகத்தில் சர்ச்சைக்குரிய பல்வேறு கருத்துக்கள் உலாவின. அத்தோடு இந்த வழக்குமுறை யாழ்ப்பாணத் தமிழ் சமூகத்தில் ஆழமாக வேரூன்றி நிற்கிறது. இப் பிரச்சினையை செம்மையாக கையாளாது விட்டால், பெரும் சமூக விளைவுகள் ஏற்படலாம். சட்டம் மூலமாக இந்தப் பிரச்சினைக்கு ஒரு முடிவு கட்டலாம் என்பதில் எனக்கும் பாலாவுக்கும் நம்பிக்கையில்லை. என்னைப் பொறுத்தவரை, சீதனப் பிரச்சினை பற்றிக் கூடுதலான, சரியான தகவல்களையும் ஆழமான அறிவையும் பெறவே நான் விரும்பினேன். சமூகத்தில் ஆழமாக வேரூன்றிக் கிடக்கும் இந்த நடைமுறை குறித்து, புலிகள் ஒரு புரட்சிகரமான மாற்றத்தை கொண்டு வருவதால், முதலில் பரந்துபட்ட மக்களின் ஆதரவைப் பெறுவது அவசியமென நாம் கருதினோம். மக்களின் ஆதரவு இல்லாது போனால், சீதன முறைமையை ஒழித்துக் கட்டுவது கடினம் என்றும், சட்டத்தில் ஓட்டைகளை கண்டுபிடித்து நடைமுறை தொடர்வது சாத்தியமென்றும், சட்டம் இறுக்கமாக இருந்தால், அது தலைமறைவாக, இரகசியமாக செயற்படலாமென்றும், நாம் கருதினோம். இறுதியில், சீதனப் பிரச்சினை குறித்து பொதுமக்களின் கருத்துக்களை ஆய்வு செய்வதென்றும், அத்தோடு இப் பிரச்சினை குறித்து பகிரங்க விவாதங்கள் நடத்துவதென்றும் முடிவாயிற்று. இதன் அடிப்படையில், கிராமங்களில், பாடசாலைகள், கல்லூரிகள், பல்கலைக் கழகத்தில், மற்றும் பொது இடங்களில் எல்லாம் விடுதலைப் புலிகளின் அரசியற் போராளிகள்,

ஆண்களும் பெண்களுமாக பொதுக்கூட்டங்களை ஒழுங்கு செய்து அவற்றில் பங்குகொண்டனர். இப் பொதுக்கூட்டங்களில் எமது போராளிகள் சீதன வழக்குமுறைக்கு எதிர்ப்புத் தெரிவித்ததுடன் பரந்துபட்ட பொதுமக்களின் கருத்துக்களையும் ஆலோசனைகளையும் கேட்டறிந்தனர். சீதனம் குறித்து பொதுசன சர்ச்சையை தூண்டிவிடும் நோக்கில், புனைப் பெயரில் பாலா ஒரு கட்டுரையை எழுதினார். ஆனால் அதற்கு பதில் ஒருவரும் எழுதவில்லை. இதனையடுத்து, பல புனைப் பெயர்களில், சீதன வழங்கிற்கு ஆதரவாகவும், எதிராகவும் பல கட்டுரைகளை பாலாவே எழுதி, ஈழநாதம் பத்திரிகையில் பிரசுரித்தார். ஆனால் பத்திரிகை விவாதத்தில், வாசகர்கள் கருத்துத் தெரிவிக்கத் தயங்கியதால், அந்த முயற்சி பிசுபிசுத்துப் போனது.

சீதன நடைமுறையின் சமூகச் சிக்கல்கள் பற்றி சரியான, ஆழமான அறிவைப் பெறும் நோக்கத்தோடு, சமூகவியல் ஆய்வு ஒன்றை நடத்தவும் இயக்கம் முடிவு எடுத்தது. இந்த ஆய்வுக்கான கேள்விக் கோவையும் தயாரிக்கப்பட்டது. இந்தக் கேள்விகளின் அடிப்படையில் தரவுகள் பெறுவதற்காக பெண் போராளிகள் வடமாகாணம் முழுவதற்கும் அனுப்பப்பட்டனர். இந்த ஆய்வுத் தரவுகளின் அடிப்படையில் பிரச்சினையின் பல்வேறு பரிமாணங்களையும் ஆராய்ந்து தீர்வுகளைத் தீர்மானிக்கவும் திட்டமிடப்பட்டது. இதற்கப்புறம் சீதன வழக்கு முறையை தடைசெய்யும் புதிய சட்டங்களை உருவாக்கி, அவற்றை பொது மக்களிடம் விவாதத்திற்கு விடுவதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

இது ஒருபுறம் இருக்க, யாழ்ப்பாண சமூகத்தில் நிலவும் சீதன வழக்கின் மூலவேர் பற்றியும், அதன் இயங்கு முறை பற்றியும் ஆய்வு செய்து அறிய நான் முடிவெடுத்தேன். சீதனம் பற்றி ஆய்வு செய்து, யாழ்ப்பாணக் கல்விமான்களால் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட பழைய, பதிப்புகள் முடிந்துபோன சமூகவியல், ஆய்வு நூல்களையும், சட்டப் புத்தகங்களையும் படிப்பதற்கு எனக்கு அரிய வாய்ப்புக் கிடைத்தது. யாழ்ப்பாண பல்கலைக்கழக நூலகத்தில், நாளாந்தம் பல மணிநேரம் ஆய்வில் ஈடுபட்டேன். யாழ்ப்பாணத் தமிழ் சமூகத்தில் சீதன வழக்குமுறை தோன்றியதன் மூல வரலாற்று வேர்களையும், பாரம்பரிய சட்டங்களையும் ஆய்வு செய்தபோது, எனக்கு ஒரு புறத்தில் ஆர்வமும், மறுபுறத்தில் அங்கலாய்ப்பும் ஏற்பட்டது. எனக்கு ஆர்வம் ஏற்பட்டதற்கு காரணம் என்னவென்றால், இந்த ஆய்வுகளின்போது பெண்களுக்கு கணிசமான அளவு சொத்துரிமை வழங்கும் ஒரு பூர்வீக தாய்வழிச் சொத்துடமை முறைமையின் வரலாற்று பூலத்தை நான் அறிய முடிந்ததுதான். இந்தப் பூர்வீக சொத்துடைமைச் சட்டத்தை படித்தபோது எனக்கு ஒரு அங்கலாய்ப்பும் ஏற்பட்டது. அதாவது, புதிய சீதன ஒழிப்புச் சட்டங்களை இயற்றுவதால் பெண்களின் சொத்துரிமை பலப்படுத்தப்பட வேண்டுமே தவிர பறித்தெடுக்கப்படக் கூடாது என்பதுதான்.





உலகத்தின் ஏனைய சமுதாயங்களில் சொத்துரிமையைப் பெறுவதற்கு பல நூற்றாண்டுகளாக பெண்கள் போராடி வருகிறார்கள். நிலைமை அப்படி இருக்கும்பொழுது யாழ்ப்பாணத் தமிழ்ச் சமூகத்தில் நீண்ட காலமாக நிலைத்து நிற்கும் தாய்வழிச் சொத்து திருமண முறைக்கு பங்கம் ஏற்படுத்துவது புத்திசாலித்தனமல்ல. இந்த மரபுச் சட்டங்களை நன்கு பரிசீலனை செய்த பின்னரே அவற்றில் திருத்தங்கள் கொண்டுவரப்பட வேண்டுமென எனக்குத் தோன்றியது. அத்தோடு இச் சட்டங்களிலுள்ள ஆக்கபூர்வமான நல்லம்சங்களைப் பலப்படுத்த வேண்டுமே தவிர, அவற்றை அகற்றிவிடக்கூடாது. சீதன முறைக்கு எதிராக சட்டம் இயற்றும்பொழுது இப் பிரச்சினை கவனத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என நான் கருதினேன். யாழ்ப்பாணத்தில் நிலவிய தாய்வழிச் சொத்துடைமை முறை, பேச்சுத் திருமணம், மற்றும் பல சமூக-பண்பாட்டு வழக்குகளை ஆழமாக பார்த்தபோது சீதனப் பிரச்சினையானது பெண்களுக்கு எதிரான சமூக ஒடுக்குமுறையின் ஒரு வெளிப்பாடு என்பது தெளிவாகியது. சீதனப் பிரச்சினை சம்பந்தமான எனது கருத்துக்களை எல்லாம் தொகுத்து ஒரு நூலாக வெளியிட முடிவெடுத்தேன். 1994 ல் **உடையாத விலங்கு** என்ற தலைப்பில் எனது நூல் வெளியாகியது.

எனது நூலின் முற்பகுதி, யாழ்ப்பாண மக்களின் மரபுவழிச் சட்டமான தேச வழமைச் சட்டத் தொகுப்பை பரிசீலனை செய்கிறது. இந்த ஆய்வு மூலமாக சீதன வழக்கு முறை தங்கி நிற்கும் சொத்துடைமை விதிகளையும், சொத்துடைமை உறவுகளையும் விளக்கியுள்ளேன். நூலின் இரண்டாவது பகுதி, சீதன வழக்கில் சமகாலத்தில் புகுத்தப்பட்ட நடைமுறைகள் பற்றியும் அவை தமிழ்ப் பெண்களின் சமூக வாழ்வில் எவ்விதமான தாக்கத்தை ஏற்படுத்துகிறது என்பது பற்றியும் ஆராய்கிறது. அத்தோடு அரச ஒடுக்குமுறையும் அதனால் விளைந்த புறநிலைகளும் சீதனப் பிரச்சினையை மேலும் சிக்கலாக்கி, மோசமடையச் செய்துள்ளது என்பதையும் இப் பகுதியில்

விளக்குகின்றேன். பேச்சுத் திருமணத்தையும் நான் கண்டித்து விமர்சிக்கின்றேன். இத் திருமண முறையானது பெண்களின் சமூக வளர்ச்சிக்கும் மேம்பாட்டிற்கும் முட்டுக்கட்டையாக அமைந்துள்ளதுடன், சாதியத்தையும் பேணி வளர்க்கிறது என்பதையும் சுட்டிக் காட்டியிருக்கின்றேன். படித்துப் பட்டம் பெற்று, உயர்தொழில் புரியும் பெண்கள் கூட சீதன முறைக்கும், சமூக பாரம்பரியங்களின் மேலாதிக்கத்திற்கும் அடி பணிய வேண்டியுள்ளதை எடுத்துக் காட்டி, சீதன முறைமையிலுள்ள இறுக்கமான வளைந்து கொடாத பண்பாட்டு ஆதிக்கமானது பெண்களின் வாழ்நிலையை நிர்ணயிக்கும் சக்தி வாய்ந்ததாக விளங்குவதாக சுட்டிக் காட்டுகிறேன். பெண்களின் வீட்டு ஊழியம் பற்றியும், அதற்கும் சீதன முறைக்கும் மத்தியிலான உறவுபற்றியும் ஆராய்கின்றேன். இறுதியாக, பெண்களின் தங்குநிலை பற்றியும், வளர்ச்சிக்கு குந்தகமாக நின்று பெண்களை அது முடக்கி வைத்திருக்கும் தன்மைபற்றியும் விளக்குகின்றேன். ஒரு பாரிய சமூகப் பிரச்சினையாக உருவெடுத்துள்ள சீதனப் பிரச்சினைக்கு ஒரு தீர்வாக பெண்களின் சொத்துரிமைகளை மேலும் பலப்படுத்த சட்ட நட வடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டுமென முடிவுரையில் நான் பரிந்துரைக்கின்றேன்.

எனது நூல் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, பிரபல தமிழீழ இலக்கிய ஏடான, 'வெளிச்சத்தில்' தொடர் கட்டுரையாக பிரசுரிக்கப்பட்டது. யாழ்ப்பாண பண்பாட்டு வாழ்வில் சீதனம் என்ற கோட்பாட்டிற்கு விரிவான விளக்கம் கொடுப்பதே இந் நூலை நான் எழுதியதன் நோக்கமாகும். எனது நோக்கத்தை இந் நூல் நிறைவு செய்யுமாயின் அதுவே எனக்குப் போதும்.

ஈற்றில் பிரபாகரன் அவர்களின் பணிப்பின் பேரில் விடுதலைப் புலிகளின் சட்டவாளர்கள் (நீதி நிர்வாகப் பிரிவினர்) சீதன நடைமுறை சம்பந்தமான புதிய சட்ட விதிகளை இயற்றினர். இப் புதிய சட்டங்கள், பெண்களின் சொத்துரிமையை பேணிப் பாதுகாத்ததுடன், மணமகனின் உறவினருக்கு ரொக்கப் பணமாக அன்பளிப்புக் கொடுக்கும் முறையை தடைசெய்தது. மனைவியின் சொத்து மீது கணவனுக்கு மேலாண்மை வழங்கும் தேச வழமையின் விதியை நீக்கியமையே புதிய சட்டங்களின் ஒரு முக்கிய அம்சமாக அமைந்தது.





## பெண்களுக்கு எதிரான வன்முறை

1990 ல் இந்திய அமைதிப் படைகள் யாழ்ப்பாணக் குடாநாட்டை விட்டு வெளியேறியபோது, பாரிய சமூகப் பிரச்சினைகளையும் விட்டுச் சென்றன. நீண்ட காலமாக பொருளாதாரம் வளர்ச்சி குன்றியமை, சொத்துடைமைகளுக்கு ஏற்பட்ட பாரிய அழிவு, போரினால் மக்களது வாழ்வில் ஏற்பட்ட சீரழிவுகள், ஒரு அந்நிய இராணுவத்தின் ஆக்கிரமிப்பு-இவையெல்லாம் யாழ்ப்பாண சமூகத்திற்கு மிகவும் சிக்கலான சமூகப் பிரச்சினைகளை உருப்பெறச் செய்தன. பாரம்பரிய பண்பாட்டு விழுமியங்களிலும் சீர்குலைவு ஏற்பட்டுள்ளது என்பதையும் யாழ்ப்பாண மக்கள் கவலையோடு உணர்ந்திருந்தனர். சமூக ஒழுக்கத்தில் சீர்குலைவு ஏற்படாமல், மக்களின் வாழ்வில் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டும் மாபெரும் பொறுப்பு விடுதலைப் புலிகள் மீது சுமத்தப்பட்டது. குடாநாட்டின் பல்வேறு பகுதிகளிலுமுள்ள விடுதலைப் புலிகளின் செயலகங்களில், சமூகப் பிரச்சினைகள் பற்றியும், குற்றச் செயல்கள் பற்றியும் பொதுமக்கள் பெருந்தொகையில் முறைப்பாடுகள் செய்தனர். யாழ்ப்பாண சமூகத்தின் தனித்துவமான பாராட்டத்தக்க பாரம்பரிய பண்பாக விளங்கிவந்த சமூக ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் மீண்டும் நிலை நிறுத்துமாறு பொதுமக்கள் விடுதலைப் புலிகளைக் கோரினர். இப்படியான ஒரு சூழலில், சமூகத்தில் நீண்டகாலமாக மாற்றமின்றி நிலைத்து நிற்கும் சில சமூகப் பிரச்சினைகளுக்கு முற்போக்கான தீர்வுகளை முன்வைப்பது சாத்தியமானதே. சில பிரத்தியேக சமூகப் பிரச்சினைகளைப் பொறுத்த வரை, இவை பற்றி ஆழமாக ஆய்வு செய்த பின்னரே, இவை சம்பந்தமான கொள்கைகளும் தீர்வுகளும் வகுக்கப்படவேண்டும் என்பதே எனது கருத்தாகும்.

குறிப்பாக பெண்கள், பாரிய சமூகப் பிரச்சினைகளை எதிர்கொண்டு நின்றார்கள். அவர்கள் எதிர்கொள்ளும் சில பிரச்சினை களை தெரிவு செய்து அவை பற்றி ஆழமான ஆய்வு செய்து, அப்பிரச்சினைகளின் புறத்தோற்றத்திற்கும் பின்னால், உள்ள உண்மைக ளைக் கண்டுபிடித்து, அவற்றின் அடிப்படையிலே முற்போக்கான கொள்கைத் திட்டங்களை வகுக்க வேண்டுமென நான் கருதினேன். உதாரணமாக யாழ்ப்பாணத்தில் அன்று, கசிப்பு, கள்ளச்சாராயம் காய்ச்சுவதென்ற குற்றச்சாட்டில் வறுமைக் கோட்டிலிருந்த தாழ்த்தப்பட்ட சமூகப் பிரிவினரைச் சேர்ந்த ஏராளமான பெண்கள் கைது செய்யப்பட்டனர். இவ்விதமாக இவ் ஏழைப் பெண்களைக் கைது செய்து, கடும் தண்டனைகளை வழங்கினாற் போல இந்தக் குற்றச் செயல்களை

ஒரேயடியாகத் தடுத்துவிட முடியாது. என்னைப் பொறுத்தவரை, இந்தப் பெண்களைக் கைது செய்து, சிறைகளில் தடுத்து வைத்து அல்லது குற்றப் பணம் அறவிடுவதால் இந்தச் சமூகப் பிரச்சினை தீர்வதற்கு மாறாக மேலும் மோசமடைந்து செல்லும் என்பதே எனது கருத்து. இத்தகைய பெண்கள் கைது செய்யப்படும்பொழுது, சமூகத்தில் அவர்களுக்கு குற்றவாளிகள் என்ற முத்திரை குத்தப்படுகின்றது. தாய்மாரிடமிருந்து பிள்ளைகள் பிரிக்கப்பட்டு தாய்மாரின் கவனிப்பையும் கட்டுப்பாட்டையும் பிள்ளைகள் இழந்துவிட நேரிடுகிறது. இந்தச் சமூகச் சிக்கல்கள் நிச்சயமாக கவனத்தில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். பெரும்பாலும் விதவைகள், கணவனால் கைவிடப்பட்ட பெண்கள், ஊனமடைந்து வலது குறைந்த கணவனைக் கொண்ட பெண்கள் - இப்படியான பெண்கள் மீதே குடும்பத்தைக் கொண்டு நடத்தும் பொறுப்பு சுமத்தப்படுகிறது. இப்படியானவர்களே கசிப்பு, கள்ளச் சாராயம் வடிக்கிறார்கள். யாழ்ப்பாணச் சமூகப் பொருளாதார சூழலில், ஏதோ வருமானம் தேடிக் கொள்வதற்கு இந்தத் தொழிலைத் தவிர அவர்களுக்கு வேறு வழியில்லை. இப்படியான பிரச்சினைகளுக்கு முற்போக்கான தீர்வு காணவேண்டுமென்றால் நிச்சயமாக இவை செம்மையான சமூக ஆய்வுக்கு உட்படுத்தப்பட வேண்டும். யாழ்ப்பாண சமூகத்தில் போர் சூழல், எதிர்மறையான பாரிய சமூகப் பிரச்சினைகளைத் தோற்று வித்துள்ளது என்பது உண்மையே. எனினும், ஒரு ஆக்கபூர்வமான சமூக மாற்றத்திற்கும் வழிகோல இவை வாய்ப்பளித்திருந்தன.

நான் யாழ்ப்பாணம் திரும்பியதிலிருந்து, தமிழ்ப் பெண்கள் எதிர்கொள்ளும் சமூகப் பிரச்சினைகளை ஆராய்ந்து அறிய வேண்டுமென்ற அவாவால் உந்தப்பட்டு, முதலில் சீதனப் பிரச்சினை பற்றி ஆய்வு செய்தேன். பின்னர், வீட்டுச் சூழலில் பெண்கள் எதிர்கொள்ளும் வன்முறைபற்றி ஆய்வுசெய்ய ஆவல் கொண்டேன். 1994-95 காலப் பகுதி. அப்பொழுது எத்தனையோ சமூகப் பிரச்சினைகளுக்கு பெண்கள் முகம் கொடுத்து வந்தார்கள். இவ் வேளையில், சில தடவைகளில் பெண் போராளிகளுடன் நிகழ்ந்த கலந்துரையாடல்களின் போது, குடும்பச் சூழலில் பெண்களுக்கு எதிரான வன்முறைப் பிரச்சினை தலை தூக்கியது. இந்தப் பிரச்சினை பற்றி ஆய்வு ஒன்றை நடத்தவேண்டுமென நான் முன்வைத்த யோசனைக்கு பதிலளித்த ஒரு பெண் போராளி "ஆண்கள் மீது வன்முறை புரியும் பெண்களும் உண்டல்லவா?" என்று ஒரு கேள்வியை எழுப்பினார். குடும்பச் சூழலில் நிகழும் வன்முறை ஒரு சிக்கலான பிரச்சினை என்பது எனக்குத் தெரியும் - பின்னராக நான் மேற்கொண்ட ஆய்வுகளின்போது, ஆண்கள் மீது பெண்கள் புரியும் வன்முறைச் சம்பவங்களில் ஒன்று அல்லது இரண்டு பெண்கள்





ஈடுபட்டதை அறிய முடிந்தது. நான் குடும்பச் சூழலில் பெண்களுக்கு எதிரான வன்முறையையே எனது ஆய்வின் இலக்காகக் கொண்டேன்.

பெண்களின் நலன்களைப் பேணுவதில் தமிழீழக் காவல் துறையினர் மிகவும் உறுதியாக நின்றனர். காவல் நிலையங்களில் பெண்கள் செய்யும் முறைப்பாடுகள் உடனடியாகவே விசாரிக்கப்பட்டு, நடவடிக்கை எடுக்கப்படுவது வழக்கம். சமூக நலன்புரி நிறுவனங்கள், திருமண ஆலோசனை சபைகள், உளவள உதவி சேவைகள் இல்லாத காரணத்தினால் வீட்டில் கணவரால் அடித்துத் துன்புறுத்தப்படும் பெண்களும் தமிழீழக் காவற்துறையினரிடம் முறைப்பாடுகள் செய்வ துண்டு. காவற்துறையினரிடம் தமிழ்ப் பெண்கள் கொண்டிருந்த நம்பிக்கையையே இது புலப்படுத்தியது. கணவரின் வன்முறையை தடுத்து நிறுத்தி, குடும்பப் பிரச்சினையை தீர்த்து வைக்கவேண்டும் என்பதே, முறைப்பாடு செய்யும் இப் பெண்களின் கோரிக்கையாக இருந்தது. வன்முறையாளராக இருந்தாலும் தமது கணவன்மார் தண்டிக்கப்படுவதையோ அல்லது சிறையில் அடைக்கப்படுவதையோ பெரும்பான்மையான பெண்கள் விரும்பவில்லை. கணவன் மனைவியின் தாம்பத்திய உறவில் ஏற்படும் தகராறுகள் இயல்பானவை. அவற்றில் எவரும் தலையிடுவது உகந்ததல்ல. ஆயினும் கணவனால் மனைவி மீது கட்டவிழ்த்துவிடப்படும் வன்முறையானது ஒரு பாரதூரமான விடயம். இது பற்றி நாம் கவனமெடுக்காமல் இருக்க முடியாது. ஆகவே, இப்பிரச்சினைக்குள் பிரவேசித்து, பெண்களுக்கு எதிரான இந்த அநீதியை அறிவியல் ஆய்வுக்கு உட்படுத்த விரும்பினேன்.

தமிழீழக் காவற்துறையின் பொறுப்பாளர் நடேசன் அவர்கள் எனது ஆய்வுத் திட்டத்திற்கு ஒத்துழைக்க முன்வந்தார். குடும்ப வன்முறை பற்றி முறைப்பாடு செய்த பெண்களிடமிருந்து அனுமதி பெற்ற பின்னர், தனது பதிவேடுகளைப் பார்வையிட என்னை அனுமதித்தார். முதலில் நான் இந்தப் பதிவேடுகளை கவனமாகப் படித்தேன். அதிலிருந்து இப் பெண்கள் எந்த அளவுக்கு வன்முறையை எதிர்கொண்டார்கள் என்பதை அறிந்து கொண்டேன். அதன் பின்னர் மிகவும் கொடூரமான வன்முறையை அனுபவித்த பெண்களுடன் கலந்துரையாடல்களை நடத்தினேன். குடும்ப இரகசியத்தையும் வெட்கத்தையும் பாராமல், பல மைல் தூரத்திலிருந்து சைக்கிளில் வந்து என்னை சந்தித்து, தமது தாம்பத்திய வாழ்வின் மறைவடக்கமான பல தகவல்களை இப் பெண்கள் ஒளிவுமறைவின்றிக் கூறியது எனக்கு ஆச்சரியத்தையே தந்தது. குடும்ப வன்முறையால் மனக்குழப்பம் அடைந்த ஒரு சில இளம்பெண்களைத் தவிர, பெரும்பான்மையான பெண்கள் தம்து மணவாழ்வின் அந்தரங்கங்களை மனக் கூச்சமின்றி

ஒப்படைத்தார்கள் சிலர், தமது தனிப்பட்ட வாழ்க்கை வரலாற்றை முழுமையாக கூறினர். இனனும் சிலர் தாம் நாளாந்தம் கொடுமையான முறையில் கணவன்மாரால் இம்சிக்கப்படுவதாகவும் சொன்னார்கள்.

உண்மையில் என்னை திகைப்புக்கும் ஆச்சரியத்துக்கும் ஆளாக்கிய விடயம் என்னவென்றால், அனேகமான பெண்கள் தினந்தோறும் மிகவும் கொடூரமான குடும்ப வன்முறைக்கு ஆளானபோதும், அவர்கள் தம்மைக் கொடுமைப் படுத்திவரும் கணவன்மார் மீது கொண்டுள்ள ஆழமான அன்பும் காருண்யமும்தான். வன்முறையாளரான கணவன்மார் மீது பெண்கள் காட்டும் அன்பும் அனுதாபமும் என்பது ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வேண்டிய ஒரு தனிவிடயம். பெண்கள் தமது துணைவர் மீது காட்டும் பரிவும் சகிப்புத் தன்மையும் தமிழ்ப் பண்பாடு நியமங்களில் வேர்விட்ட பண்பு என்றே நான் கருதுகின்றேன். குடும்ப வன்முறை பற்றி யாழ்ப்பாணப் பெண்களுடன் நான் நடத்திய செவ்விகளின்போது இன்னொரு முக்கிய விடயமும் எனது கவனத்திற்கு வந்தது. திருமண உறவில் பெண்களின் விருப்புக்கு மாறாக நிகழும் பாலியல் வன்முறைதான் அது.

பெண்களுக்கு எதிரான குடும்ப வன்முறை பற்றி எனது ஆய்வைத் தொடர்ந்தேன். ஆனாலும் ஆய்வின் பரப்புக்கான பெண்களின் மாதிரிக் கூறுகள் மிகவும் வரையறுக்கப்பட்டதாகவே இருந்தது. காவல்துறை நிலையங்களில் முறைப்பாடு செய்யாமல், கணவரின் வன்முறையை மூடிமறைத்து மௌனம் சாதிக்கும் ஏராளமான பெண்களும் இருக்கிறார்கள். இவர்கள் துணிவுடன் தமது பிரச்சினை களை வெளியிட மறுத்துவந்ததால் எனது ஆய்வு முயற்சியை முழுமை செய்ய முடியவில்லை. குடும்ப வன்முறையில் வர்க்க / சாதிய அம்சங்க ளும் இருக்கத்தான் செய்தன. தாழ்த்தப்பட்ட சமூகப் பிரிவுகளைச் சேர்ந்த பெண்களே, தமது குடும்ப விவகாரங்கள் பற்றி துணிந்து வெளிப்படையாகப் பேசினர். பெரும்பாலும் இவர்களது கணவர்கள் மது அருந்தும் பழக்கம் உடையவர்கள். மதுபோதையில்தான் வன் முறையைப் புரிகிறார்கள். நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த, உயர் சாதிப் பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கலான குடும்ப வன்முறைப் பிரச்சினைகள் அவர்களது வீட்டுச் சுவர்களின் பின்னால் மௌனித்து விடுகின்றன.

சமூக ஆய்வு என்பது எனது தனிப்பட்ட விருப்புக்கு உரிய விடயம். ஆனாலும், போராட்டத்திற்கு வேறு வழிகளிலும் கருத்துரு வாக்கம் தேவைப்பட்டது. தமிழீழ விடுதலைப் போராட்டத்தை உலக அரங்கில் அறிமுகம் செய்வதற்கு ஏற்ற வகையில் ஆங்கிலத்தில் விடுதலைப் புலிகளின் அதிகாரபூர்வமான ஏடுகள் எதுவும் இருக்க வில்லை என வெளிநாடுகளில் வாழ்ந்த புலம்பெயர்ந்த தமிழர்





களிடமிருந்து எமக்கு புகார்கள் கிடைத்தன. இதன் விளைவாக, விடுதலைப் புலிகளின் கொள்கைகளையும் கருத்துக்களையும் வெளிப்படுத்தும் அதிகாரபூர்வமான ஒரு ஆங்கில இதழை வெளியிட நானும் பாலாவும் முடிவு செய்தோம். இன்சயிட் ரிப்போர்ட் (Inside Report) என்ற பெயரில் இம்மாதாந்த ஏட்டில், போர்ச் செய்திகளோடு அரசியல் ஆய்வுகள், மனித உரிமை மீறல்கள், மற்றும் பல விடயங்களும் வெளிவந்தன. அனேகமான எல்லா விடயங்களையும் நானும் பாலாவுமே எழுதினோம். சில சமயங்களில் எமது ஆதரவாளர்களிடமிருந்து பெறப்பட்ட கட்டுரைகளையும் பிரசுரித்தோம். போர்ச் சூழலில், அதுவும் பிரசுர வழிகளும் வளங்களும் அற்ற ஒரு புற நிலையில் ஒரு பத்திரிகை யை ஒழுங்காக நடத்துவது இலகுவான காரியமல்ல. நாம் எழுதுவது மாத்திரமன்றி, எழுதியதை தட்டச்சில் அடிப்பது, தொகுப்பது, அச்சில் பதிந்ததை திருத்துவது, பக்கங்கள் வடிவமைப்பது மட்டுமன்றி அச்சகத்திற்கு சென்று, அச்சுச் சட்டங்களிலிருந்து எழுத்துகள் விழுந்து விடாமல் பார்த்து, பிரசுரம் முடியும் வரை அங்கு காத்து நிற்பது. இப்படியாக இப்பத்திரிகை வெளியீடு எமது நேரத்தை விழுங்கி வந்தது. ஆயினும் யாழ்ப்பாணத்தில் போர் வெடித்ததைத் தொடர்ந்து பத்திரிகை யைப் பிரசுரிக்க முடியவில்லை. எந்த ஒரு உருப்படியான வேலைத் திட்டத்தையும் போர்ச் சூழலில் தொடர முடியாது என்பதை நாம் பின்னர் உணர்ந்து கொண்டோம்.

## யாழ்ப்பாணத்தில் போர் வெடித்தது

1994 / 1995 களில் தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் சந்திரிகா குமாரதுங்கா அரசுக்கும் மத்தியில் சமாதானப் பேச்சுவார்த்தை தொடங்கியபோது ஏற்பட்ட மகிழ்ச்சி ஆரவாரம், 1995 ஏப்ரல் 19 ம் தேதி, போர் மூண்டபோது தணிந்து போனது. பாலா, சமீபத்தில் எழுதி வெளியிட்ட '**நயவஞ்சக அரசியல்**'[7] என்ற நூலில் இப் பேச்சுக்கள் தோல்வியடைந்ததன் காரணங்கள் பற்றி விபரமாக ஆராயப்படுகிறது.

தமிழ் மக்களுக்கு தன்னாட்சி அல்லது பிரதேச சுயாட்சி வழங்கும் ஒரு அரசியல் தீர்வு ஏற்படுவதை சிறீலங்கா இராணுவமோ, அன்றி பௌத்த தேசியவாத சக்திகளை முதுகெலும்பாக கொண்ட சந்திரிகா குமாரதுங்காவின் அரசோ விரும்பவில்லை. மாறாக, இவர்கள் ஒரு இராணுவத் தீர்வையே விரும்பினார்கள். மக்களிடம் சமா தானத்திற்கான மனுக்கோரி, சந்திரிகா ஆட்சி பீடம் ஏறியபோதும்,

சமாதானத்திற்கான போர்' என்ற ஒரு நாசகார திட்டத்தை முன்வைத்து, கடும்போக்குடைய இராணுவவாதிகள் பக்கம் சார்ந்தார். ஒரு நிரந்தரமான சமாதானத்திற்கு யுத்தம் அவசியம் என உலக அரசுகளை நம்ப வைத்த வெளிவிவகார அமைச்சர் திரு. கதிர்காமர், போரை முன்னெடுப்பதற்காக அனைத்துலக நாடுகளிடமிருந்து பெருமளவு கடனுதவிகளையும் பெற்றுக் கொடுத்தார். இக் கடனுதவிகளைக் கொண்டு, பெருமளவு இராணுவ தளவாடங்களை வாங்குவதற்கு திட்டமிடப்பட்டது. முழு அளவிலான ஒரு யுத்தத்தை முன்னெடுக்கும் நோக்கத்தோடு, எந்த விலை கொடுத்தும் எந்த விதமான நவீன ஆயுதங்களையும் வாங்கும்படி முப்படைத் தளபதிகளுக்கும் அனுமதி வழங்கப்பட்டது.

கட்டவிழ்ந்து வரும் இந்த ஆபத்தான சூழ்நிலை என்னையும் பாலாவையும் திகைப்பூட்டச் செய்தது. தமது கட்டுப்பாட்டின் கீழுள்ள யாழ்ப்பாணக் குடாநாட்டை தம்மால் பாதுகாக்க முடியுமென விடுதலைப் புலிகளின் தளபதிகள் சிலர், அதீத தன்னம்பிக்கை தெரிவித்தபோதும் நானும் பாலாவும் அப்படிக் கருதவில்லை. யாழ்ப்பாணம் மீது ஒரு பாரிய படையெடுப்பிற்கு அரசாங்கம் தயாராகி வருகிறது என்பதை உணர்ந்த நாம், விடுதலைப் புலிகளின் படையணிகள் இதற்கு முகம் கொடுக்க முடியாதிருக்கும் என நாம் சரியாகவே நிலைமையை எடைபோட்டோம். பலாலிப் பெருந்தளத்தில் பிரமாண்டமான படை குவிப்பு நடைபெற்றுக் கொண்டிருந்தது. அதே வேளை, குண்டு வீச்சு விமானங்கள், டாங்கிகள், கவச வாகனங்கள், பீரங்கிகள் என்ற ரீதியில் கனரக ஆயுதங்களும் பலாலியில் குவிக்கப்பட்டு வந்தன. இந்தப் பாரிய படை குவிப்பே எமக்கு அச்சத்தை ஏற்படுத்தியது.

இலங்கைத் தீவு முழுவதிலும் தனது இறையாட்சி நடைபெறுவதாக கூறிவந்த சிறீலங்கா அரசுக்கு, யாழ்ப்பாணத்தில் விடுதலைப் புலிகள் ஒரு தனியாட்சி நடத்துவது ஒரு சவாலாகவும் அவமானமாகவும் இருந்தது. சில அரச நிறுவனங்களை செயற்பட அனுமதித்த விடுதலைப் புலிகள், சட்டம் ஒழுங்கையும் நீதி பரிபாலனத்தையும் தமது பொறுப்பில் வைத்திருந்ததுடன், ஊழலையும் சீர்கேட்டையும் தவிர்த்து, மக்களின் நலன் பேணும் நோக்குடன் அரச நிறுவனங்கள் அனைத்தையும் மேற்பார்வை செய்தனர். புலிகளின் ஆட்சியை சர்வாதிகார ஆட்சியென அரசாங்கம் கண்டித்தபோதும், தமிழ் மக்களின் பேராதரவு புலிகள் பக்கமே இருந்தது. இதனால், கொழும்பு அரசு சினம் கொண்டது. அத்தோடு, சுயநிர்ணய உரிமை என்றும், அரசியல் சுதந்திரம் என்றும், தனியரசு என்றும் விடுதலைப் புலிகள் தமது கொள்கைப் பிரகடனங்களை அறிவித்து வந்ததும் சிங்கள அரச தலைமைக்கு அங்கலாய்ப்பைக் கொடுத்தது. விடுதலைப் புலிகளின்





நிர்வாகத் திறனும், இராணுவ பலமும், படிப்படியாக தமிழர் தாயகத்தை மீட்டெடுக்கும் அவர்களது உறுதிப்பாடும், ஈற்றில் தனியரசு என்ற தமிழ் மக்களின் அபிலாசையை மெய்ப்பித்து விடலாமென சிங்களத் தலைமை அஞ்சியது. எனவேதான், யாழ்ப்பாணத்தை இராணுவ ரீதியில் கைப்பற்றுவது சந்திரிகா குமாரதுங்கா அரசின் முக்கிய குறிக்கோளாக அமைந்தது. இந்த இராணுவக் குறிக்கோள் நிறைவேறுமானால், வடக்கில் தமிழரின் மேலாதிக்கத்திற்கு சாவுமணி அடிப்பதோடு, புலிகளின் படை பலத்தையும் முறியடித்து விடலாம் என அரசாங்கம் கருதியது. அத்தோடு யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றிவிட்டால், தமிழரின் இராச்சியத்தை வெற்றி கொண்ட வீராங்கனையாக சிங்கள-பௌத்த பேரினவாத சக்திகள் மத்தியில் தமக்குப் புகழோங்கும் என்றும் சந்திரிகா எண்ணினார். சமாதான தேவதை என சர்வதே உலகிற்கு வேடம் பூண்டு நடித்தபோதும், சந்திரிகா இராணுவப் பாதையைத் தேர்ந்தெடுத்தார். போர் மூலம் தமிழர் தாயகத்தை ஆக்கிரமித்துக் கைப்பற்றிவிட்டால், தமிழரின் சுதந்திர இயக்கத்தை முற்றாக ஒழித்துக் கட்டிவிடுவதுடன், சிங்கள தேசியவாதிகள் மத்தியிலும் ஆதரவை நிலைநாட்டிக் கொள்ளலாமென அவர் உறுதியாக நம்பினார். யாழ்ப்பாணப் படையெடுப்பிற்கு பொறுப்பதிகாரியாக தனது மாமனாரான ஜெனரல் ரத்வத்தையையும், களத் தளபதியாக ஜெனரல் ஜானகப் பெரேரா வையும் சந்திரிகா நியமித்தார். ஜெனரல் ஜானக பெரேரா ஒரு கடும் போக்காளர். கிழக்கு மாகாண தளபதியாக இருந்தபோது கூட்டுக் கொலைகள் புரிந்து பெருந்தொகையான தமிழர்களை அழித்தவர். எண்பதுகளில் ஜே.வி.பி. கிளர்ச்சியை நசுக்க பல்லாயிரக்கணக்கான சிங்கள இளைஞர்களை கொன்றொழித்தவர்.

பேச்சுவார்த்தைகள் தோல்வியடைந்ததை அடுத்து, யாழ்ப்பாணத்தில் மோதல்கள் நிகழலாமென மக்கள் எதிர் பார்த்தார்களேயன்றி, பெரிய எடுப்பில் பாரிய படையெடுப்புக்கு அரசாங்கம் தயாராகிக் கொண்டிருப்பதை அவர்கள் அறியவில்லை. ஆகாய மார்க்கமாகவும், கடல் வழியாலும் பல்லாயிரக்கணக்கான படையினரும், கனரக ஆயுதங்களும் பலாலிப் பெருந்தளத்தில் குவிக்கப்பட்டு வந்தன. கிழக்கு மாகாணத்திலிருந்தும், தென்னிலங்கை யிலிருந்தும், முப்பதினாயிரத்துக்கும் நாற்பதினாயிரத் துக்கும் மத்தியி லான துருப்புகள் அங்கு குவிக்கப்பட்டதாக பின்னர் அறிந்தோம். இடைக்கிடையே, பீரங்கி எறிகணைத் தாக்குதலும் விமானக் குண்டுவீச்சுக்களும் நடைபெற்றதாயினும், யாழ்ப்பாணத்தில் மக்களின் வாழ்க்கை இயல்பாகவே ஓடிக் கொண்டிருந்தது. பிரமாண்டமான அளவில், சிங்கள அரசு போர் ஆயத்தங்களை செய்துவருகிறது என்பதை

மக்கள் அறியவில்லை. அப்படித்தான் சிங்கள இராணுவம் யாழ்ப்பாணம் மீது படையெடுத்தாலும், விடுதலைப் புலிகள் யாழ்ப்பாணத்தைப் பாதுகாப்பார்கள் என்றும் மக்களிடையே நம்பிக்கை நிலவியது. உண்மையைச் சொல்லப் போனால், யாழ்ப்பாணம் மீதான படையெடுப்புக் குறித்து நானும் பாலாவும் அங்கலாய்ப்புடன் இருந்தோம். யாழ்ப்பாணம் மீது பெரும் படையெடுப்பு நிகழ்ந்தால் பெருமளவில் உயிரிழப்பும் பொருளழிவும் ஏற்படுமென நாம் அஞ்சினோம். மிகவும் அடர்த்தியாக தமிழ் மக்கள் வாழ்ந்து வரும் இப் பகுதியில் ஒரு பயங்கரமான மரபுவழி யுத்தம் வெடிக்குமானால், அதனால் ஏற்படக்கூடிய பேரழிவை எண்ணி நாம் திகிலடைந்தோம். தமிழீழ மக்களின் பண்பாட்டுத் தலைநகரான யாழ்ப்பாணம் சிங்கள இராணுவ ஆதிக்கத்தின் கீழ் வீழ்ந்துவிடும் சாத்தியம் குறித்தும் நாம் கவலையடைந்தோம்.

1995 ஜுலை 9 ம் தேதி, யாழ்ப்பாணம் மீதான படையெடுப்பின் முதலாவது கட்டம் ஆரம்பமானது. 'முன்னோக்கிய பாய்ச்சல்' என்ற பெயரில் மேற்கொள்ளப்பட்ட இந்த இராணுவ நடவடிக்கையில் விமானத் தாக்குதல், பீரங்கி எறிகணைத் தாக்குதல், ஆகியவற்றின் உதவியுடன் பல்லாயிரம் படையினர், யாழ்ப்பாண நகரை நோக்கி இரு முனைத் தாக்குதலை மேற்கொண்டனர். ஒரு படைப்பிரிவு, பலாலியிலிருந்து தெல்லிப்பளையூடாக அளவெட்டி, சண்டிலிப்பாய் நோக்கியும், மற்றைய படைப் பிரிவு, மாதகலில் இருந்து பொன்னாலைக் கடலோரமாக வட்டுக் கோட்டை நோக்கியும் நகர்ந்தன. விடுதலைப் புலிகளிடமிருந்து மட்டுப்படுத்தப்பட்ட எதிர்த்தாக்குதல் மேற்கொள்ளப்பட்டதால், சிங்களப் படையணிகள் நான்கு நாட்களுக்குள் வட்டுக்கோட்டையினதும் சண்டிலிப்பாயினதும் எல்லைகளை நெருங்கிவின. சிங்கள இராணுவம் மகத்தான போர்ச் சாதனைகளை புரிந்து வருவதாக கொழும்பு ஊடகங்கள் அரசாங்கத்திற்கு புகழாரம் செலுத்தின. யாழ்ப்பாணப் படையெடுப்பின் முதலாவது கட்டம் வெற்றியீட்டி வருவதைக் கண்ட யாழ்ப்பாண மக்களிடம் பீதியும் பதகளிப்பும் ஏற்பட்டது. சிங்களத்தின் படையெடுப்பை முறியடிப்பதற்காக பெரியதொரு எதிர்த் தாக்குதலை மேற்கொள்ள ஆயத்தங்கள் செய்யப்படுவதாக திரு. பிரபாகரன் தன்னிடம் கூறியதாக பாலா என்னிடம் சொல்லியபோதுதான் எனக்கு மனஆறுதல் ஏற்பட்டது.

1995 ஜுலை 14ந் தேதி 'புலிப் பாய்ச்சல்' என்ற பெயரில் விடுதலைப் புலிகள் இயக்கம் எதிர்த்தாக்குதல் இராணுவ நடவடிக்கையை மேற்கொண்டது. அளவெட்டியிலும் சண்டிலிப்பாயிலும் ஊடுருவி நின்ற சிங்கள இராணுவத்தினர் மீது விடுதலைப் புலிகளின் கொமாண்டோ படையணிகள் தாக்குதல்களை நிகழ்த்தி எதிரிக்கு





பெரும் உயிர்ச்சேதத்தை ஏற்படுத்தின. இரு தினங்களாக கடும் சமர் நடைபெற்றது. இச் சண்டைகளின்போது சிங்கள விமானப் படையின் 'புக்காரா' குண்டுவீச்சு விமானம் ஒன்று ஏவுகணையால் சுட்டு வீழ்த்தப்பட்டது. அதே சமயம் காங்கேசன்துறை துறைமுகத்திற்கு சமீபமாக, 'எடித்தேரா' என்ற போர்க்கப்பலும் கடற் கரும்புலிகளால் தகர்த்து கடலில் மூழ்கடிக்கப்பட்டது. விடுதலைப் புலிகளின் உக்கிரமான எதிர்த் தாக்குதலுக்கு முகம் கொடுக்க முடியாது திணறிய அரச படைகள் இறுதியில், தமது இராணுவ நடவடிக்கையை கைவிட்டு தமது தளத்திற்கு பின்வாங்கின.

'புலிப் பாய்ச்சல்' இராணுவ நடவடிக்கையின் வெற்றியும், சிங்கள விமானப் படை மீதும், கடற்படை மீதும் நடத்தப்பட்ட வெற்றிகரமான தாக்குதல்களும் யாழ்ப்பாண மக்களுக்கு மகிழ்ச்சியையும் நிம்மதியையும் கொடுத்தது. ஆனால், உண்மையில், சிங்கள இராணுவத்தின் 'முன்னோக்கிப் பாய்ச்சல்' படை நடவடிக்கையானது, விடுதலைப் புலிகளின் தற்காப்புப் படை பலத்தை பரீட்சித்துப் பார்க்க மேற்கொள்ளப்பட்ட திசை திருப்பும் தாக்குதல் என்பதை யாழ்ப்பாண மக்கள் அறிந்திருக்கவில்லை. உண்மையான படையெடுப்பு மேற்கொள்ளப்படும் பொழுது, எந்த வழியாக யாழ்ப்பாணம் நோக்கி படை நகர்வு எடுக்கப்படும் என்பதில் புலிகளை குழப்பிவிடுவதும் 'முன்னோக்கிப் பாய்ச்சலின்' இன்னொரு நோக்கமாகும்.

'புலிப்பாய்ச்சல்' இராணுவ வெற்றியைத் தொடர்ந்து யாழ்ப்பாணத்தில் நிலவிய நிம்மதியும் இயல்பு நிலையும் நீண்ட காலத்திற்கு நீடிக்கவில்லை. 1995 ஜுலை மாத இறுதிப் பகுதியிலிருந்து சிறீலங்கா ஆயுதப் படைகள் யாழ்ப்பாணம் மீது பீரங்கி எறிகணை வீச்சையும் விமானக் குண்டுத் தாக்குதலையும் தீவரப்படுத்தின. இத் தாக்குதல்கள், யாழ்ப்பாண நகரையும் அதன் சுற்றுப் புறங்களையும் குறி வைத்து நடத்தப்பட்டன. பொதுமக்களுக்கு உயிர்ச் சேதம் ஏற்படுத்தி, அவர்களைப் பயமுறுத்தி, மனத் தளர்வு உண்டு பண்ணும் நோக்கோடு கண்மூடித்தனமாக இத் தாக்குதல்கள் கட்டவிழ்த்துவிடப்பட்டன. விமானக் குண்டு வீச்சும், பீரங்கி எறிகணை வீச்சும் நாளுக்கு நாள் தீவிரமாகி, இறுதியில் இரவிலும் தாக்குதல்கள் நீடிக்கப்பட்டன. நடுநிசியில், குண்டுவீச்சு விமானங்கள் எமது வீட்டுக்கு மேலாக ஆகாயத்தில் சுற்றும் பயங்கர இரைச்சலைக் கேட்டதும் நாம் பதட்டத்தோடு எழுந்தோடி. பதுங்கு குழிக்குள் தஞ்சம் புகுவோம். இரவுக் குண்டு வீச்சின் தீவிரத்தால், யாழ்ப்பாண நகரமே நடுங்கும். யாழ்ப்பாண மக்களுக்கு, ஒவ்வொரு இரவும் பயங்கர அனுபவமாக இருக்கும். அனேகமானோர் தூக்கமின்றி, அங்கலாய்ப்புடன் பதுங்கு குழிக்குள்

முடங்கிக் கிடப்பர். இன்னும் பலர், பாதுகாப்புத் தேடி யாழ்ப்பாண நகரை விட்டு வேறு பகுதிகளுக்கு இடம்பெயர்ந்து செல்வர்.

எமது வீட்டிற்கு அண்மையில் பீரங்கி எறிகணைகள் விழுந்து வெடிக்கும். அப்பொழுதெல்லாம் எமது வீடு அதிர்வால் நடுங்கும். எமது வீட்டுக்கு மேலாக, எறிகணைகளின் விசை உந்துகள் வெடிக்கும் பொழுது ஏற்படும் பயங்கர ஓசையால் காதைப் பொத்தியபடி தூக்கமின்றிக் கழித்த எத்தனையோ இரவுகள் இன்னும் எனது நினைவில் நிலைத்திருக்கின்றது. எறிகணை வீச்சு, முடிவின்றி இரவிரவாகத் தொடர்ந்தது. நாமும் பதுங்கு குழிக்குள் பாய்ந்தோடிக் களைத்து சலித்துப் போனோம். இனி, நடப்பது நடக்கட்டும் என்ற தீர்மானத்தில், இரவில் எழுவதை நிறுத்திக் கொண்டோம்.

சிறீலங்கா ஆகாயப் படை விமானங்களும் கண்மூடித் தனமாகவே குண்டுவீச்சுக்களை நடத்தின. விடுதலைப் புலிகளின் பாசறைகள் மீதே குண்டுத் தாக்குதல் நடத்துவதாக ஆயகாயப் படையினர் கூறிக்கொண்டபோதும், குடிசன இலக்குகள் மீதே குண்டுகள் வீசப்பட்டன. சிறீலங்கா ஆகாயப் படையனிரின் படுமோசமான குண்டுத் தாக்குதல் சம்பவம், யாழ்ப்பாணத்திற்கு அண்மையிலுள்ள நவாலி இராயப்பர் தேவாலய வளவில் நிகழ்ந்தது. இந்தக் கத்தோலிக்க புனித தலத்தில் தஞ்சமடைந்திருந்த மக்களிடையே குண்டுகள் வீழ்ந்து வெடித்து இரத்தக் களரியை ஏற்படுத்தியது. ஜுலை 9 ம் திகதி நடைபெற்ற இக் கொடூரத்தில், குழந்தைகள் வயோதிபர் உட்பட 120 அப்பாவிப் பொதுமக்கள் கொல்லப்பட்டனர். 150 பேர் வரை படுகாயமடைந்தனர். இம் மிருகத்தனமான படுகொலைகளைப் புரிந்து விட்டு, அதை மூடி மறைப்பதற்காக விடுதலைப் புலிகளின் பாசறை மீதே குண்டு வீசப்பட்டதாக சிறீலங்கா அரசு கதை கட்டியது. இந்தத் தருணத்தில், நல்ல வேளையாக சர்வதேச செஞ்சிலுவைச் சங்கத்தினர் ஒரு அதிகாரபூர்வ அறிக்கை வெளியிட்டு கொல்லப்பட்டு, காயப்பட்டோர் அனைவருமே பொதுமக்கள் என்பதை உறுதிப்படுத்தியதுடன், பழியை விமானப் படை மீது சுமத்தினர். செஞ்சிலுவைச் சங்கத்தினரின் இத் தலையீடு இல்லாது போனால், இப் படுபாதக கொலைச் சம்பவம் பத்திரிகைத் தணிக்கை என்ற போர்வையின் கீழ் இருட்டடிப்புச் செய்யப்பட்டிருக்கும். தமிழ் மக்களுக்கு எதிராக சிறீலங்கா அரசு நடத்தி வந்த காட்டுமிராண்டித்தனமான யுத்தத்தை, செஞ்சிலுவைச் சங்கத்தின் அறிக்கை அனைத்துலகத்திற்கு அம்பலப்படுத்தியது. இதனால், பெரும் சங்கடத்திற்கும் அவமானத்திற்கும் ஆளான சிறீலங்காவின் வெளிவிவகார அமைச்சர் திரு. கதிர்காமர், செஞ்சிலுவைச் சங்க தலைமைப் பிரதிநிதியை தமது செயலகத்திற்கு அழைத்து,





இலங்கையில் உள்நாட்டு விவகாரத்தில் தலையிடவேண்டாம் என எச்சரிக்கை விடுத்தார். யாழ்ப்பாண மக்களை அதிர்ச்சிக்கு உள்ளாக்கிய இன்னுமொரு கோரமான குண்டுவீச்சுச் சம்பவம் நாகர்கோவில் மகாவித்தியாலயத்தில் நிகழ்ந்தது. செப்டெம்பர் 22 ம் திகதி நிகழ்ந்த இக் குண்டு வீச்சுச் சம்பவத்தில் 24 மாணவ, மாணவிகள் கொல்லப் பட்டதுடன் 35 பேர் படுகாயமடைந்தனர்.

## யாழ்ப்பாணம் மீதான படையெடுப்பு

நாம் அங்கலாய்ப்புடன் எதிர்பார்த்திருந்த யாழ்ப்பாணம் மீதான படையெடுப்பு 'இடிமுழக்கம்' என்ற பெயருடன் 1995 ஒக்டோபர் 1ம் திகதி ஆரம்பமாகியது. 'இடிமுழக்கம்' என்ற பெயருக்கு இசைவாக, பலத்த பீரங்கி விமானக் குண்டுவீச்சுகளுடன் படைநகர்வு தொடங்கியது. வலிகாமத்தில், குறிப்பாக, வசாவிளான், பத்தமேனி, அச்சுவேலி, புத்தூர் போன்ற இடங்களில் பாரிய குண்டுவீச்சுகள் இடம்பெற்றன. விடுதலைப் புலிகளின் பாதுகாப்பு நிலைகள் மீது பீரங்கி, விமானக் குண்டுமாரி பொழிந்ததைத் தொடர்ந்து, பல்லாயிரக்கணக்கான சிங்களஆயுதப் படையினர் களத்திலே இறங்கினர். வசாவிளானிலும், பத்தமேனியிலும், நிலைகொண்டிருந்த புலிப் படைவீரர்களுக்கும் சிங்கள இராணுவத்திற்கும் இடையில் கடும் சண்டை மூண்டது. பல நாட்களாகத் தொடர்ந்த கோரமான சமரில் இரு தரப்பினருக்கும் பெரும் உயிர்ச்சேதம் ஏற்பட்டது. பலாலிப் பெருந்தளத்திலிருந்த பீரங்கிகள், இரவு பகலாக இடைவிடாது தொடர்ச்சியாக, வலிகாமம் கிழக்குப் பகுதிகள் மீது குண்டு மழை பொழிந்த வண்ணம் இருந்தன. இதன் கொடூரம் தாங்காமல் பல்லாயிரக்கணக்கான பொதுமக்கள் தங்கள் பாரம்பரிய கிராமங்களை விட்டு அகதிகளாக வெளியேறினர். 'இடிமுழக்கம்' போர் நடவடிக்கை இரு வாரங்கள் வரை தொடர்ந்தது. தனக்கு ஏற்பட்ட பெரும் உயிர் இழப்புகளையும் பொருட்படுத்தாது, சிங்கள இராணுவம், புலிகளின் நிலைகளை அழித்து, அச்சுவேலி, ஆவரங்கால், புத்தூர் போன்ற கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த பட்டினங்களைக் கைப்பற்றியது. இப் பட்டினங்கள் கைப்பற்றப்பட்டபோது எமக்கு ஒரு உண்மை புலனாகியது. அதாவது, வலிகாமம் கிழக்கு கரையோரப் பாதை வழியாகவே யாழ்ப்பாண நகர் நோக்கி முன்னேறி நகர இராணுவம் திட்டமிட்டிருக்கின்றது எனபதுதான். இதனைப் புரிந்து கொண்ட விடுதலைப் புலிகளின் போரணிகள், யாழ்ப்பாணம் - பருத்தித்துறை நெடுஞ்சாலையை

மறித்து, நீர்வேலியிலும் கோப்பாயிலும் பலம்பொருந்திய பாதுகாப்பு அரண்களை கட்டி எழுப்பின.

நீர்வேலியும் கோப்பாயும் கைப்பற்றப்பட்டால், உடனடியாகவே சிங்களப் படையணிகள் செம்மணி வெளியூடாக விரைந்து முன்னேறி நாவற்குழிப் பாலத்தை கைப்பற்றி விடுவார்கள் என நாம் ஊகித்தோம். கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த நாவற்குழிப் பாலம், வலிகாமத்தையும் தென்மராட்சிப் பிரதேசத்தையும் இணைக்கிறது. இப் பாலத்தை இராணுவம் கைப்பற்றுமாயின், யாழ்ப்பாண நகரம் உட்பட வலிகாமத்தில் வசிக்கும் ஐந்து இலட்சம் தமிழ் மக்கள் இராணுவத்தின் பொறிக்குள் சிக்கி விடுவார்கள். சந்திரிகா குமாரதுங்கா அரசாங்கத்தின் இராணுவ தந்திரோபாயமும் இதுவேதான். 'இடிமுழக்கம்' இராணுவ நடவடிக்கை மெல்ல, மெல்ல தணிந்து, புலிகளிடமிருந்து கைப்பற்றிய பகுதிகளை இராணுவம் பலப்படுத்திக் கொண்டிருந்த வேளையில், அடுத்த கட்ட நகர்வு எப்படியாக அமையுமென நாம் அங்கலாய்ப்புடன் காத்திருந்தோம். அடுத்த கட்ட நடவடிக்கை தீர்வானதாக அமையும் என எதிர்பார்த்தோம். எமது போராளிகள் மனவுறுதி தளராது இருந்தார்கள். எப்படியும் யாழ்ப்பாணத்தை பாதுகாப்பதென்ற உரமான உறுதி கொண்டிருந்தார் கள். ஆனாலும், அதே வேளை, அரசாங்கத்திடமும் படை பலம் இருந்தது; ஆயுத சக்தி இருந்தது; பெரும் உயிரிழப்பை சந்தித்தபோதும் தனது இராணுவ இலக்கை அடையவேண்டுமென்ற தீவிர உறுதிப்பாடும் இருந்தது.

தீர்வான நாள் வந்தது. 1995 ஒக்டோபர் 17ந் திகதியன்று 'சூரியக் கதிர்' (ரிவிரச) என்ற போர் நடவடிக்கை முடுக்கிவிடப்பட்டது. யாழ்ப்பாண நகரைக் கைப்பற்றும் இராணுவத் தந்திரோபாய நோக்குடன் படை நகர்வு ஆரம்பித்தது. பலத்த காவலரண்கள் கட்டி, புலிப் படைப் போரணிகள் நிலைகொண்டிருந்த நீர்வேலிப் பிரதேசத்தில் கடும் சமர் மூண்டது. பாதுகாப்பான நிலைகளில் நின்றபடி, புலிவீரர்கள் உக்கிரமான எதிர்த்தாக்குதலை நடத்தினர். சினமடைந்த சிங்களப் படையினர் யாழ்ப்பாண நகர் மீதும் அதன் சுற்றுப் புறங்கள் மீதும் கண்மூடித்தனமான பீரங்கித் தாக்குதல்களை தொடுத்தனர். 'சூப்பர் சோனிக்' குண்டுவீச்சு விமானங்கள் குடிசன பகுதிகள் மீது குருட்டுத்தனமாக தாக்குதல்களை நடத்தியது. கொக்குவில், பகுதியில், எமது வீட்டுக்கு அண்மையில் விமானக் குண்டுவீச்சும், எறிகணைத் தாக்குதல்களும் தீவிரமடைந்தது. இதனால் நானும் பாலாவும் நாள் முழுதாக வீட்டுக்கும் பதுங்கு குழிக்கும் இடையே ஓட்டப் பந்தயத்தில் ஈடுபட்டிருந்தோம். எமது வீடு விமானத் தாக்குதலுக்கு இலக்காகலாம் என்ற அச்சத்தில் எமது மெய்ப் பாதுகாவலர்கள், சதா வானத்தையே நோட்டமிட்டபடி இருப்பார்கள்.





எமது வீட்டுக்கு அண்மையாக, குண்டு விமானங்கள், செங்குத்தாக தாழப்பறக்கும்போதெல்லாம் எம்மை எச்சரிப்பார்கள். சில சமயங்களில் எமது வீட்டுக்கு சமீபமாக குண்டுத் தாக்குதல் நிகழும்போது காற்றின் அதிர்வலைகள் பதுங்கு குழிக்கு உள்ளே நுழைந்து எம்மை உரசிச் செல்லும். ஒரு சமயம், எமது வீட்டுக்கு அருகாமையில் வெடித்த குண்டின் அதிர்வால் முழு வீடுமே நடுங்கி, ஜன்னல் கண்ணாடிகள் உடைந்து சிதறின. காற்றின் அதிர்வலைகள் சுவரோடு என்னைத் தூக்கி வீசியது. நான் தரையில் சரிந்து விழுந்தேன். மேலும் குண்டுகள் வெடிக்கலாம் என்ற அச்சத்தில், பாலாவை தரையில் படுக்குமாறு கத்தினேன். மின் விளக்குகளுடன் ஓடி வந்த எமது மெய்ப் பாதுகாவலர்கள், எம்மை அழைத்துச் சென்று பதுங்கு குழிக்குள் இருத்தினர். பதுங்கு குழிக்குள் காத்திருந்தபோதுதான், எமது வீட்டுக்கு அருகாமையில் நிகழ்ந்த வெடிச் சம்பவத்தில் 10 பேர் உயிரிழந்ததாக எமக்கு தகவல் வந்தது.

நிலையற்ற எதிர்காலமும், பீதியும் யாழ்ப்பாண மக்களை பீடித்தது. வலிகாமம் ஒரு மரண களமாக மாறியது. 'சமாதானத்திற்கான போர்' என்ற போர்வையில் நூற்றுக்கணக்கான பொதுமக்கள் கொல்லப்பட்டனர்; அவர்களது சொத்துக்களும் அழிக்கப்பட்டன. இந்த மனிதப் பேரவலம் குறித்து உலக அரசுகள் கவலையோ அக்கறையோ காட்டவில்லை. உலக ஊடகங்களும் மௌனம் சாதித்தன.

இந்த அவலங்கள் நிறைந்த இந்த ஆபத்தான கால கட்டத்தில், சிங்கள ஆக்கிரமிப்பு இராணுவம் எந்தப் பாதையூடாக யாழ்ப்பாண நகரை நோக்கி முன்னேறப் போகின்றது என்பதை அறிவதற்காக, யாழ்ப்பாண புவியியல் வரை படங்களை நீண்ட நேரமாகப் படிப்பார் பாலா. புவியியல் ரீதியாக இரா்ணுவத்தின் நகர்வுகளை எடைபோடுவதில் பாலாவுக்கு ஒரு தனிப்பட்ட ஆர்வம் இருந்தது. போர்க் களத்தில் நாளுக்கு நாள் நிகழும் சம்பவங்களை அவதானித்து வந்த அவர், வீடுகள் வீதிகள் ஒழுங்கைகளும் பலமான பாதுகாப்பு அரண்களும் நிறைந்த கட்டுமாணப் பகுதியை ஊடுருவி, இராணுவம் நகரப் போவதில்லை என்று எனக்கு கூறினார். மாறாக, வலிகாமம் கரையோரமாக புத்தூரிலிருந்து செம்மணி வரை விரியும், உப்பாறு நீரேரிக்கும் யாழ். பருத்தித்துறை நெடுஞ்சாலைக்கும் இடைப்பட்ட வெளிகள், சதுப்பு நிலங்கள் ஊடாகவே சிங்களப் படை நகர்வு இடம்பெறுமென சரியாகவே பாலா மதிப்பிட்டார். இதே பாதையால்தான் இராணுவம் முன்னேறி வருமென புலிகளின் களத் தளபதிகளும் மதிப்பிட்டனர். ஆனால், துரதிர்ஷ்டவசமாக, இப் பிரதேசத்தில் பலம் பொருந்திய பாதுகாப்பு அரண்களை புலிகளால் நிறுவ முடியவில்லை. அங்கிருந்த புலிகளின் நிலைகளும், எதிரியின்

டாங்கிகளது பலம்வாய்ந்த சுடு சக்திக்கு ஈடுகொடுக்க முடியவில்லை.

ஒக்டோபர் 29ம் திகதி, நீர்வேலியில் அமைந்திருந்த புலிகளின் பாதுகாப்பு அரண்களை உடைத்துக் கொண்டு சிங்கள இராணுவம் முன்னேறியது. 'ரிவிரச' சமரில், இரத்தம் தோய்ந்த கடும் மோதலாக நீர்வேலிச் சண்டை அமைந்தது. நீர்வேலியை கைப்பற்றியதைத் தொடர்ந்து, சிங்கள இராணுவத்தின் கவச வாகன அணிகள், நீரேரியின் கரையோரமாக கோப்பாய் வடக்குப் பகுதியை நோக்கி நகர்ந்தன. இராணுவத்தின் முன்னேற்றத்தை தடுத்து நிறுத்த, தமது படைப் பிரிவுகளை அணிதிரட்டி, இராணுவத்துடன் உக்கிரமாக மோதினார்கள் புலிகள். அப்பகுதியில் பயங்கரச் சண்டை தொடர்ந்தது. நிலைமை மோசமான கட்டத்தை அடைந்திருந்தது. கோப்பாய் வடக்கிலுள்ள புலிகளின் பாதுகாப்பு நிலைகளை சிங்களப் படையணிகள் கைப்பற்றினால், அவை உடனடியாகவே செம்மணி வழியாக நகர்ந்து நாவற்குழிப் பாலத்தை கைப்பற்றலாம். அப்படி நிகழ்ந்தால் வலிகாமத்தில் வசிக்கும் மக்கள் அனைவருமே இராணுவ முற்றுகைக்குள் சிக்கிவிடுவார்கள். இந்த ஆபத்துக் காரணமாக மக்கள் மத்தியில் பீதியும் பதட்டமும் நிலவியது.

அரசியற் பொறுப்பாளர் திரு. தமிழ்ச்செல்வன் எமது வீட்டுக்கு அவசரமாக வந்து, என்னையும் பாலாவையும் எமது மெய்ப்பாது காவலரையும் உடனடியாக கொக்குவில் இருப்பிடத்திலிருந்து இடம் மாறச் சொன்னார். சாவகச்சேரியில் தற்காலிகமாக எமக்கு ஒரு வீடு ஒழுங்கு செய்திருப்பதாகவும் சொன்னார். நாளை காலை, வலிகாமம் மக்களுக்கு இராணுவ நிலவரம் பற்றி அறிவிக்கப்படும் என்றும், நாவற்குழிப் பாலம் சிங்களப் படையினரிடம் வீழ்ச்சி அடைவதற்கு முன்பாக வலிகாமத்திலிருந்து வெளியேறுமாறும் அவர்களுக்கு ஆலோசனை வழங்கப்படும் என்றும் தமிழ்ச்செல்வன் சொன்னார். சாவகச்சேரி பகுதியிலுள்ள மட்டுவில் என்னும் கிராமத்தில் எமக்கு ஒரு வீடு ஒழுங்கு செய்யப்பட்டிருந்தது. அங்கு செல்வதற்காக அவசர அவசரமாக நாம் பெட்டிகளைக் கட்டிக் கொண்டிருந்தபோது, எமது வீட்டுக்கு அண்மித்த பகுதிகளில் பெருவாரியாக எறிகணைகள் வீழ்ந்து வெடித்தன. சிங்களப் படைகள் யாழ்ப்பாண நகரை நெருக்கி வருகின்றன என்பதை இந்த எறிகணைத் தாக்குதல் எடுத்துக் காட்டியது. நாம் சாவகச்சேரி நோக்கி சென்று கொண்டிருந்தபோது, முன்னேறிவரும் சிங்கள ஆக்கிரமிப்பு படைகளிலிருந்து தப்பிவிடும் நோக்குடன், கட்டம் கட்டமாக இடம்பெயர்ந்த குடும்பங்கள் கோப்பாய் - கைதடி வீதி வழியாக ஓட்டமும் நடையுமாக வந்துகொண்டிருந்ததைப் பார்த்தபோது துயரத்தால் எனது நெஞ்சம் கனத்தது.





அடுத்த நாள் காலை, விடுதலைப் புலிகளின் அரசியற் பிரிவைச் சேர்ந்த போராளிகள், நிலைமையை மக்களுக்கு அறிவித்தார்கள். சிங்கள ஆக்கிரமிப்புப் படைகள் யாழ்ப்பாண நகரை அண்மித்து வருவதாக ஒலிபெருக்கிகளில் நகரத்திலும் மற்றும் வலிகாமம் அடங்கிலும் அறிவித்தார்கள். சிங்களப் படைகளிடமிருந்து யாழ்ப்பாணத்தைப் பாதுகாக்க விடுதலைப் புலிகள் உறுதிபூண்டு நிற்பதாக கூறிய அவர்கள், எதிரியின் கண்மூடித்தனமான குண்டுத் தாக்குதல்களில் சிக்குப்படாமல் தப்புவதாயின் வலிகாமத்திலிருந்து இடம்பெயர்ந்து, தென்மராட்சியில் பாதுகாப்பான இடங்களுக்கு செல்லு மாறு மக்களிடம் வேண்டுகோள் விடுத்தார்கள். பீதியும் பதட்டமும் அங்கலாய்ப்புடனும் இருந்த யாழ்ப்பாண மக்களுக்கு புலிகளின் எச்சரிக்கை பேரிடியாக விழுந்தது. அவர்கள் நிலைகுலைந்து போனார்கள். அதன் விளைவாக, மிகவும் அவசரமானதும், மிகவும் அவலமானதும் சீர்குலைந்ததுமான ஒரு மாபெரும் இடம் பெயர்வு தொடங்கியது.

## பேரவலமான இடம்பெயர்வு

தமிழர் வரலாற்றிலேயே என்றும் நிகழாத மனிதப் பேரவலமாக இந்த இடம்பெயர்வு நிகழ்ந்தது. விடுதலைப் புலிகளின் வேண்டு கோளுக்கு இணங்கவும் சிங்கள ஆக்கிரமிப்புப் படைகளால் தமது உயிருக்கு நிகழப்போகும் ஆபத்தை உணர்ந்தும், வலிகாமத்தின் ஒட்டுமொத்த சனத்தொகையும் அதாவது, ஐந்து இலட்சத்திற்கும் அதிகமான மக்களும், தமது கைகளில் அகப்பட்ட பொருட்களை எடுத்துக் கொண்டு, பிள்ளைகளையும், வயோதிபர்களையும், நோய்வாய்ப்பட்டவர்களையும் இழுத்துக் கொண்டு, வீதிகளில் இறங்கினார்கள். நாவற்குழிப் பாலத்தைக் கடந்து தென்மராட்சிப் பகுதியிலுள்ள கைதடிக்குள் கால் வைத்துவிட வேண்டும் என்பதே எல்லோரதும் ஏக்கமாகும். இந்த அவசரமும் அங்கலாய்ப்பும் காரணமாக எல்லோருமே முண்டியடித்துக் கொண்டு வீதிகளில் இறங்கினார்கள். சாவகச்சேரிக்கு செல்லும் வீதிகள் எங்கும் சன சமுத்திரம். பயந்த, பதட்டமடைந்த சனத் திரளால் வீதிகள் நிறைந்தன. மூச்சுத் திணறடிக்கும் நெரிசல். மக்கள் திரள் வீதிகளில் அடர்த்தியாக இறுகியதால், நகர்வு இயக்கம் திடீரென நின்றது. மக்களின் ஒரேயொரு

போக்குவரத்து சாதனமான சைக்கிள்களும் சன நெருக்கடிக்குள் சிக்கி அசைவற்று நின்றன. நெரிசல்பட்ட பெருங்கட்டமாக மனித ஊர்வலங்கள் பல மைல்கள் தூரத்திற்கு நீண்டு சென்றன. ஒரு சில யார்கள் தூரம் செல்வதற்கு பல மணிநேரம் பிடித்தது. இந்தப் பேரவலத்திற்கு மேலும் அவலம் சேர்ப்பது போல திடீரென மழை கொட்டியது. வானம் அழுது வடித்த கண்ணீர், தாகத்தால் தவித்த நாக்குகளை நனைத்தது. அது மட்டுமே அல்லல்பட்ட மக்களுக்கு அன்று கிடைத்த ஒரு துளி ஆறுதல். பசியால் குழந்தைகள் கதறி அழுதன. செய்வதறியாது பெற்றோர் பதைத்தனர். வயோதிபர்கள் வீதியோரம் குந்தியிருந்து மூச்சிழுத்தனர். பசியும் தாகமும் வருத்த, மழையால் தெப்பமாக நனைந்ததால், நோய்வாய்ப்பட்டோர் மேலும் நோயுற்றனர். இந்த அவல நிகழ்வின் உணர்வு அழுத்தத்தால் ஒரு கர்ப்பிணிப் பெண், வீதியோரமாக, திறந்த வெளியில் குழந்தை ஈன்றார். இத்தனை இன்னல்களுக்கும் மத்தியில், மக்களிடையே ஒரு உறுதிப்பாடு மட்டும் மேலோங்கி நின்றது. இனவெறி கொண்ட பகைவனின் கையில் சிக்கிவிடாது, தப்பிவிட வேண்டும் என்பதுதான் அந்த உறுதிப்பாடாகும்.

வலிகாமத்தின் முழுச்சனத் தொகையுமே ஒட்டுமொத்தமாக புலம்பெயருமென சிங்கள அரசும் அதன் ஆயுதப் படைகளும் எதிர்பார்க்கவில்லை. இந்தப் பெரிய பரிமாணத்தில், தென்மராட்சித் திசை நோக்கி, யாழ்ப்பாண சன சமுத்திரம் இடம்பெயர்ந்து செல்வதை அறிந்ததும் சிங்கள ஆட்சியாளர் விரக்தியும் ஏமாற்றமும் அடைந்தனர். பெரும் போர் நடத்தி, இறுதியில் சன சஞ்சாரமற்ற ஒரு சூன்ய பிரதேசத்தையே சிங்கள இராணுவம் கைப்பற்றப் போகிறது என்பதை உணர்ந்ததும் அவர்களுக்கு மனமுறிவு ஏற்பட்டது. முன்னேறி வந்த சிங்களப் படைகளால், யாழ்ப்பாண மக்களின் இடப்பெயர்வை தடுத்து நிறுத்த முடியவில்லை. செய்வதறியாது தடுமாறிய ஆயுதப் படையினர், இடம்பெயர்ந்து செல்லும் மக்கள் மீது விமானத் தாக்குதலை நடத்தி, தமது கையாலாகாத நிலையையும் விரக்தியையும் வெளிப்படுத்தினர். செம்மணி வெளியில், நடந்த இக் குண்டு வீச்சில் இரு பொதுமக்கள் கொல்லப்பட்டனர்; ஐவர் காயமடைந்தனர். இந்தக் கோழைத்தனமான செயல் மக்களின் உறுதிப்பாட்டை உடைக்கவில்லை. நாவற்குழிப் பாலத்தை மக்கள் திரள் கடந்துகொண்டே இருந்தது. மூன்று அல்லது நான்கு நாட்களுக்குள், ஐந்து இலட்சம் மக்கள் வலிகாமத்திலிருந்து இடம்பெயர்ந்து புலிகளின் கீழுள்ள தென்மராட்சிப் பகுதியில் தஞ்சம் புகுந்தனர்.

இடம்பெயர்ந்த சன சமுத்தரத்தால் சாவகச்சேரி நிரம்பி வழிந்தது. சாவகச்சேரி ஒரு வரலாற்றுப் பழமை மிக்க பட்டினம்.





சாவகச்சேரிச் சந்தை மிகவும் பிரபலமானது. அந்த நிலம் தரும் கனிகளும் சுவைமிக்கவை. அந்தப் பட்டினத்திலுள்ள ஒவ்வொரு வீடும், புலம்பெயர்ந்த தமது உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும், வெளியாருக்கும் தஞ்சம் வழங்கியது. ஒரு வீட்டில் மட்டும் 60 பேர் வரை தங்கியிருந்து, தண்ணீர் வசதியின்றி, கழிப்பிட வசதியின்றி தவித்ததை நான் அறிவேன். சாவகச்சேரி முழுவதிலுமாக - பாடசாலைகள், கல்லூரிகள், கோவில்கள், தென்னஞ்சோலைகள், மாந்தோப்புகள் - எங்கு இடைவெளிகள் உண்டோ அங்கெல்லாம், மக்கள் முண்டியடித்துக் கொண்டு தமது குடும்பங்களுக்கு இடம் தேடினர். சாவகச்சேரி சந்தைக்கு மரக்கறி வாங்குவதற்கு நான் சைக்கிளில் சென்றபோது, மனதை உருக்கும் அந்த அவலக் காட்சியை நான் நேரடியாகக் காணமுடிந்தது. இடம்பெயர்ந்த மக்களும், அவர்களது மூட்டை முடிச்சுகளுமாக, சாவகச்சேரி நகரப் பகுதி நிரம்பி வழிந்தது. சில குடும்பங்கள், தமது மூட்டை முடிச்சுக்களை நிலத்தில் வைத்துவிட்டு, எங்கே போவதென்று தெரியாத திகைப்புடன், நின்ற இடத்திலேயே நின்றுகொண்டிருந்தார்கள். இன்னும் சில குடும்பங்கள், சோர்ந்து சலித்துப் போய் வீதியோரமுள்ள மரங்களின் கீழ் இருப்பிடம் தேடிக் கொண்டார்கள். வெற்றுக் காணிகளில் அங்குமிங்குமாக குந்தியிருந்த மக்கள், தமது குடும்பத்தினரின் பசியைப் போக்குவதற்காக அடுப்பு மூட்டி, சமையலுக்கு ஆயத்தம் செய்தார்கள். குழந்தைகள் கண்களைப் பிசைந்தபடி அழுது கொண்டிருந்தார்கள். முதியோரும் நோய்வாய்ப்பட்டோரும் குளிர் நிலத்தில் பாய்களை விரித்துப் படுத்திருந்தார்கள்.

இந்த வரலாற்று அவலத்தை நேரில் பார்த்தபொழுது, ஒரு ஆழமான சோக உணர்வு என்னை ஆட்கொண்டது. இங்கு ஏதிலிகளாக இடம்பெயர்ந்து நிற்கும் மக்களில் அனேகமானோர், பூந்தோட்டங்களும் பழமரங்களும் நிறைந்த காணிகளையும், அவற்றில் கட்டப்பட்ட நேர்த்தியான, அழகான வீடுகளையும் கைவிட்டே வந்தவர்கள். பரம்பரை பரம்பரையாக, கடின உழைப்பால் தேடிய சொத்துக்களை கைவிட்டு வந்த இம்மக்கள், இப்பொழுது திடீரென, ஒரு நாள் பொழுதில், ஏதுமற்ற அகதிகளாக, பாழ்பட்ட இழிநிலைக்கு தள்ளப்பட்டிருக்கிறார்கள். பெருமையும் கௌரவமும் மிக்க யாழ்ப்பாண மக்கள், இப்படியாக வீடு வாசலின்றி இருக்க இடமின்றி, ஏழ்நிலைக்கு தள்ளப்பட்டு ஏதிலிகளாக அலைந்து திரியும் இந்தத் துயரக் காட்சியை கண்டபோது துக்கம் நெஞ்சை அழுத்தியது. காலம் காலமாக, எண்ணற்ற நூற்றாண்டுகளாக தாம் வாழ்ந்து வந்த புனித நகரை, ஈழத் தமிழிரின் கலாச்சார தலை

நகரை, கைவிட்டு வருவதற்கு முழுத் தமிழ் சமூகமுமே நிர்ப்பந்திக்கப பட்டது.

சாவகச்சேரி நகரிலும், அதனைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் யாழ்ப்பாண மக்கள் வாழ்ந்த வாழ்க்கை சகிக்க முடியாததாக இருந்தது. உருப்படியான தங்குமிட வசதியின்றி, எல்லாவற்றிற்கும் மேலாக போதுமான உணவின்றி, இடம்பெயர்ந்த மக்கள் தாங்கொணாத் துன்பங்களை அனுபவித்தனர். யாழ்ப்பாண மக்களின் பேரவலத்திற்கு மேலும் துன்பம் சேர்ப்பதுபோல, சிங்கள இராணுவம் சாவகச்சேரி பிரதேசம் நோக்கி, பீரங்கி எறிகணைகளை ஏவியது. அப்பாவிப் பொதுமக்கள் மீது உயிர்ச் சேதத்தை விளைவித்து, அவர்களைக் கிலி கொள்ளச் செய்வதே இத் தாக்குதலின் நோக்கமாகும். தென்மராட்சி மீதும் எந்த நேரமும் படையெடுப்பு நிகழலாம் என்பதையும் இத் தாக்குதல்கள் அபாய எச்சரிக்கையாக மக்களுக்கு அறிவித்தன. இடம்பெயர்ந்த மக்களின் இப் பேரவலம் குறித்து, சந்திரிகாவின் அரசோ, அன்றி சர்வதேச உலகமோ கவலையும் அக்கறையும் காட்டவில்லை.

யாழ்ப்பாண மக்களுக்கு இழைக்கப்பட்ட இக் கொடுமை பற்றி எதுவுமே தெரியாதது போல கொழும்பு ஊடகங்கள் மௌனம் சாதித்தன. 'பயங்கரவாதிகளான' விடுதலைப் புலிகளிடமிருந்து யாழ்ப்பாண மக்களை 'விடுதலை' செய்வதற்காக, 'வீரம் படைத்த' சிங்கள இராணுவம் நிலைநாட்டிவரும் 'வீர சாதனைகள்' பற்றியே கொழும்புப் பத்திரிகைகள் புகழ் பாடின. யாழ்ப்பாண மக்களின் இடம்பெயர்வு பற்றி, ஆழ்ந்த கவலை தெரிவித்து ஒரு தனி நபர் மட்டும் குரல் எழுப்பினார். சொந்த மண்ணிலிருந்து வேரறுந்து, புலம்பெயர்ந்துள்ள யாழ்ப்பாண மக்களுக்கு உலக அரசுகள் உதவவேண்டுமென முன்னாள் ஐ.நா. பொதுச் செயலர் திரு. பூட்ரோஸ் பூட்ரோஸ் காலி ஒரு பகிரங்க அழைப்பு விடுத்திருந்தார். யாழ்ப்பாணத்தில் நிகழ்ந்த மனித அவலம், சர்வதேசமயமாகிவிடுமோ எனப் பயந்த சிறீலங்காவின் வெளிவிவகார அமைச்சர் திரு. கதிர்காமர், இலங்கையில் எவ்விதமான மனித அவலமும் நிகழவில்லை என மறுத்தார். ஒரு சிறிய இடம்பெயர்வுச் சம்பவத்தை பெரிதுபடுத்தவேண்டாமென ஐ.நா. செயலாளர் நாயகத்தை கண்டித்த 'தமிழரான' இந்த அமைச்சர், ஒரு இறைமையுள்ள நாட்டின் 'உள்விவகாரத்தில்' தலையிடவேண்மாமெனவும் எச்சரித்தார். யாழ்ப்பாணத் தமிழருக்காக கவலை தெரிவித்த ஒரேயொரு குரலையும் திரு. கதிர்காமர் நசுக்கிவிட்டார்.





## வன்னிக்கு இடம்பெயர்வு

முழுக் குடாநாட்டையும்ம கைப்பற்றுவதற்கு உறுதிபூண்டு நின்ற ஒரு பாரிய மரபு வழி இராணுவத்துடன் போராடிக் கொண்டு, இடம்பெயர்ந்துள்ள ஐந்து இலட்சம் மக்களின் தேவைகளை எல்லாம் பூர்த்தி செய்வது விடுதலைப் புலிகள் இயக்கத்தின் வளங்களுக்கு அப்பாற்பட்ட விடயம். விடுதலைப் புலிகள் இயக்கத்தின் ஒரு சில அதிரடிப் படைப் பிரிவுகள் மட்டுமே வலிகாமத்துக்குள் ஊடுருவிச் சென்று ஆக்கிரமிப்பு இராணுவம் மீது தாக்குதலை நடத்தி வந்தது. குடாநாட்டில் நிலைகொண்டிருந்த ஏனைய படையணிகள் அனைத்தையும் வன்னிக்கு இடம் மாற்ற விடுதலைப் புலிகளின் தலைமைப்பீடம் முடிவு செய்தது. சிறீலங்கா ஆயுதப் படைகள், வெகுவிரைவில் தென்மராட்சி மீதும் வடமராட்சி மீதும் படையெடுத்து முழுக் குடாநாட்டையும் கைப்பற்ற முயற்சிக்கும் என்பது புலிகளுக்கு தெரிந்த விடயமே. எனினும் சாவகச்சேரியில் நிலைகொண்டிருந்து, ஒரு தற்காப்புப் போரை நடத்துவதென்பது, தற்கொலைக்கு ஒப்பானது. புலிப் போராளிகளுக்கு மட்டுமன்றி, நெரிசலாக அடர்ந்து நின்ற பொதுசனத்திற்கும் இது பேரழிவை உண்டு பண்ணும். இதனை நன்குணர்ந்துதான், விடுதலைப் புலிகள் தமது படையணிகளை படிப்படியாக வன்னிக்கு அனுப்பி வைத்தனர். தென்மராட்சியில் போர் விரிவாக்கம் பெறலாம் என்ற அச்சத்தில், இடம் பெயர்ந்த மக்களில் ஒரு பகுதியினர் ஏற்கனவே வன்னிக்கு சென்றுவிட்டனர். தென்மராட்சியில் இடம்பெயர்ந்து நின்ற மக்களை வன்னிக்குச் சென்று குடியமருமாறு விடுதலைப் புலிகள் வற்புறுத்தவுமில்லை, ஆலோசனை கூறவும் இல்லை. பெரும் சனத் தொகையை வன்னிக்கு அனுப்பி, அவர்களது புனர்வாழ்வுக்கு வசதி செய்து கொடுப்பதிலுள்ள பாரிய நடைமுறைச் சிக்கல்களை புலிகள் அறிவார்கள். இடம்பெயர்ந்த யாழ்ப்பாண மக்களும் குழம்பிய நிலையில் இருந்தார்கள். நிச்சயமற்ற எதிர்காலத்தை நோக்கி வன்னிக்கு செல்வதா, அன்றி இராணுவ ஆக்கிரமிப்புப் பிரதேசம் ஆகிவிட்ட யாழ்ப் பாணத்திற்கு திரும்பிச் செல்வதா என்று முடிவெடுக்க முடியாத குழம்பிய நிலையில் மக்கள் இருந்தார்கள். எனினும் இராணுவ நிலைமையை பொறுத்திருந்து அவதானிக்க அவர்கள் முடிவெடுத்தார்கள். புலி ஆதரவாளர்கள், அனுதாபிகள் என்று பகிரங்கமாக முத்திரை குத்தப்பட்டவர்களுக்கு வேறு வழி இருக்கவில்லை. இராணுவத்தின்

பழிவாங்கலுக்கு அஞ்சிய இப் பிரிவு மக்கள் புலிகளைத் தொடர்ந்து சென்று வன்னியில் குடியமர்ந்தார்கள். எங்களுக்கும் வன்னிக்கு செல்வதைத் தவிர வேறு வழியிருக்கவில்லை. நாம் திரு. பிரபாகரனின் அறிவுறுத்தலுக்காகக் காத்திருந்தோம். அந்தத் தகவலும் சீக்கிரமே வந்தது.

ஆபத்துக்கு உதவும் எமது நண்பரான கடற்படைத் தளபதி சூசை, எம்மைக் கிளாலிக் கரைக்கு அழைத்துச் சென்றார். கடற்புலிகளின் பீரங்கிப் படகு ஒன்றில் எம்மை வன்னிக்கு அழைத்துச் செல்ல முடிவாகி இருந்தது. கிளாலி நீரேரிக் கரையில் ஆழமற்ற நீர்ப் பரப்பில் நாம் நின்று கொண்டிருந்தோம். தளபதி சூசை 'வாக்கி டோக்கியில்' நாம் நிற்கும் திசையை அறிவிக்க, பெண் கடற்புலிகள் எமது பக்கமாக படகை ஓட்டிவந்தனர். நாம் நின்ற இடத்திலிருந்து நூறு யார் தொலைவில் படகு நிறுத்தப்பட்டது. தொடை அளவு சேற்று நீர்வரை நடந்து சென்று படகிற்குள் ஏறிக் கொண்டோம். சில நிமிடங்களில் படகு புறப்பட்டது. யாழ்ப்பாணக் குடாநாட்டை விட்டகன்று, வன்னியில் ஒரு புதிய வாழ்வுக்கு முகம் கொடுக்க கிளாலி நீரேரியில் பயணத்தை மேற்கொண்டோம்.

நாம் சேர வேண்டிய இடம் விஸ்வமடு. கிளிநொச்சிப் பட்டினத்திலிருந்து இருபது கிலோ மீட்டர் தொலைவில் இந்தக் கிராமம் அமைந்திருக்கிறது. வன்னியில், நல்லூர் கரையில் நாம் தரையிறங்கிய தைத் தொடர்ந்து, எம்மை ஒரு வாகனத்தில் விஸ்வமடு நோக்கி ஓட்டிச் சென்றார் சூசை. வாகனத்தில் நாம் சென்று கொண்டிருந்த பகுதி பொருளாதார வளர்ச்சியற்ற பினதங்கிய பிரதேசமாகவே, அந்த இருட்டில் கூட எனக்குத் தென்பட்டது. விஸ்வமடுவிற்கு நாம் சென்ற வீதியின் இரு மருங்கிலும், பரந்த நெல்வயல்களும், காட்டுப் புதர்களும் அங்காங்கே குக் கிராமங்களும் தென்பட்டன.

விஸ்வமடுவில் சொற்ப காலமே நாம் வசித்தோம். வன்னியில், தொடர்ச்சியாக இடப்பெயர்வுகள் நிகழ்ந்த எமது வாழ்வில், விஸ்வமடு ஆரம்ப கட்டமாக அமைந்தது. கடும் உழைப்பாழிகளான யாழ்ப்பாணக் கமக்காரர்கள் வாழ்ந்த ஒரு விவசாய கிராமமாக விஸ்வமடு விளங்கிற்று. பல ஆண்டுகளுக்கு முன்னர், அரசாங்க குடியேற்றத் திட்டம் ஒன்றின் கீழ் வழங்கப்பட்ட அடர்ந்த காட்டு நிலங்களை, செழிப்பு மிக்க நெல் வயல்களாகவும், தென்னஞ்சோலைகளாகவும் மாற்றியிருந்தார்கள் இவ் விவசாயிகள். விஸ்வமடுவில் பல விவசாயக் குடும்பங்களுடன் நாம்





நட்புறவு கொண்டோம். இக் கிராமத்தில் எமது வாழ்க்கை போர் நெருக்குவாரங்கள் அற்றதாக, அமைதியாக ஓடியது. கிளிநொச்சி ஒரு வர்த்தக மையமாக விளங்கியது. யாழ்ப்பாணத்திலிருந்து இடம்பெயர்ந்து வந்த மக்களில் பெரும்பான்மையானோர் அங்கு வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர்.

விடுதலைப் புலிகளின் அரசியற் தலைமைச் செயலகம் கிளி நொச்சியில் அமைக்கப்பட்டது. நாம் அடிக்கடி அங்கு சென்று வந்தோம். 1996 ஏப்ரல் 18ம் திகதி, நாம் விஸ்வமடுவில் வசித்துக் கொணடிருந்த வேளை 'சூரியக் கதிர் 2' இராணுவ நடவடிக்கை ஆரம்பமாகி, எவ்வித மோதல்களுமின்றி, தென்மராட்சிப் பகுதியை சிங்கள இராணுவம் கைப்பற்றியதாக அறிந்தோம். இப் படையெடுப்பு எதிர்பாராத விதத்தில் திடீரென நடைபெற்றதால், குழப்பமும் திகிலுமடைந்த பல்லாயிரக் கணக்கான மக்கள் கிளாலிக் கரையை நோக்கி ஓடினர். கிளாலி நீரேரியைக் கடந்து, வன்னிக்கு இடம்பெயரும் நோக்கத்தோடு அங்கு வந்த மக்களுக்கு ஏமாற்றமே காத்திருந்தது. கிளாலிக் கரையோரம் குவிந்த பெரும் சனத் திரளை மறுகரைக்கு ஏற்றிச் செல்ல அங்கு போதுமான படகுகள் இருக்கவில்லை. இந்த மனித அவலத்திற்கு மேலும் வேதனை சேர்ப்பதுபோல, சிறீலங்கா குண்டுவீச்சு விமானங்களும், உலங்குவானூர்திகளும் கீழாகப் பறந்து வந்து கிளாலி நோக்கி ஓடிச் சென்ற மக்கள் மீது கண்மூடித்தனமாக தாக்குதல்களைத் தொடுத்தது, வன்னிக்கு மக்கள் இடம்பெயர்வதை தடுக்கவே விமானப் படை முயன்றது. ஒரு சில படகுகளில் சென்ற மக்கள் மீதும் வானூர்திகள் ஏவுகணைத் தாக்குதலை நடத்தி உயிர்ச்சேதத்தை விளைவித்தன. வன்னிக்கு தப்பிச் செல்ல முடியாமல், சிங்கள ஆக்கிரமிப்பு படையின் பொறியில் சிக்கிய மக்களுக்கு, வலிகாமத்திலுள்ள தமது கிராமங்களுக்கும் வீடுகளுக்கும் திரும்பிச் செல்வதைத் தவிர வேறு வழி இருக்கவில்லை. இடம்பெயர்ந்த மக்கள் யாழ்ப்பாணம் திரும்பிச் சென்ற விவகாரத்தை சந்திரிகா அரசுக்கு கிட்டிய மாபெரும் அரசியல் வெற்றியாகவும், யாழ்ப்பாண மக்கள் 'பயங்கரவாதிகளின்' பிடியிலிருந்து 'விடுதலை' செய்யப்பட்டுவிட்டதாகவும் அரச ஊடகங்கள் செய்திகளை திரித்து வெளியிட்டன.

என்னைப் பொறுத்தவரை, இடம் பெயர்ந்த மக்கள் யாழ்ப்பாணம் திரும்பியமை போராட்டத்திற்கு ஏற்பட்ட பின்னடைவாக கருதமுடியாது. மாறாக, இதுவொரு ஆக்கபூர்வமான நடவடிக்கையே. இது மக்களுக்கும்

போராட்டத்துக்கும் நன்மை பயப்பதாகவே அமையும். முதலாவதாக, இடம்பெயர்ந்தவர்களில் அனேகமானோருக்கு யாழ்ப்பாணத்தில் சொந்த மாக ஒரு வீடு இருந்தது; பழக்கப்பட்ட சமூகச் சூழல் இருந்தது. தென்மராட்சியில் அவலமான அகதி வாழ்வைத் தொடர்வதிலும் பார்க்க சொந்த வீடுகளுக்கு திரும்புவதே மேலானது. இடம்பெயர்ந்து ஏதிலிகளாக மனம் முறிந்து வாழ்வதைவிட சுயமரியாதையுடனும் கௌரவத்துடனும் வாழ்வதற்கு வாய்பைத் தேடுவதே உகந்தது என நான் கூறுவேன். இரண்டாவதாக யாழ்ப்பாணத்திலுள்ள தமது சொத்துடைமைகளை மக்கள் மீட்டெடுப்பது முக்கியமானது. அப்பொழுதுதான் தமிழ் மக்கள் தமது தாயக நிலங்களுக்கு உரிமை கொண்டாடலாம். அல்லாது போனால், திருகோணமலை மாவட்டத்தில், நிகழ்ந்ததுபோல தமிழரின் வெற்று நிலங்களிலும், வீடுகளிலுமாக சிங்களக் குடியேற்றம் நிகழ்வது சாத்தியம். மூன்றாவதாக, தமிழ் மக்கள் தமது வரலாற்று ரீதியான வாழ்விடங்களில் பற்றும் பாசமும் கொண்டிருப்பது ஒரு விடுதலைப் போராட்டத்திற்கு அத்தியாவசியமானது. இந்த நிலம் எமது சொந்த நிலம் என்ற மண் பற்றும், இந்த நிலத்தை ஆக்கிரமிக்கும் சிங்களவர் அந்நியர் என உணர்வும் இருப்பது அவசியம். யாழப்பாண மண்ணிலிருந்து யாராவது வெளியேற வேண்டுமாயின் அது சிங்கள இராணுவத்தினராக இருக்க வேண்டுமே தவிர, யாழ்ப்பாண மக்களல்ல.

இடம்பெயர்ந்த மக்களில் பெரும்பாலானோர், வலிகாமத்தி லுள்ள தமது கிராமங்களுக்கும் வீடுகளுக்கும் திரும்பியதையடுத்து, ஜெனரல் ஜானக பெரேராவின் தலைமையிலான சிங்கள ஆக்கிரமிப்பு இராணுவம் யாழ்ப்பாணக் குடாநாட்டை, படிப்படியாக ஒரு திறந்த சிறைச்சாலையாக மாற்றியது. மக்களுக்கு 'விடுதலை' பெற்றுக் கொடுத்தவர்கள், மக்களின் ஒடுக்குமுறையாளராக மாறினார்கள். சுற்றி வளைப்புகள், கைது செய்தல், தடுத்து வைத்தல், சித்திரவதை செய்தல், கொலை செய்தல், ஆகிய நிகழ்வுகள் ஆவணப்படுத்தப்பட்ட உண்மைக ளாகின. ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் காணாமற் போயினர். யாழ்ப்பாணத்தில், செம்மணி போன்ற இடங்களில் கூட்டுப் புதைகுழிகள் தோண்டி எடுக்கப்பட்டன. சிங்கள இராணுவ ஆக்கிரமிப்பின் கீழ், யாழ்ப்பாண மக்கள் கொடுமைகளுக்கு ஆளாவது, வழமையான செய்திகளாக உள்ளூர், வெளியூர் ஊடகங்களில் பிரசுரமாகி வந்தன.





**உசாத்துணை**


1. Adele Ann 'Women Fighters of Liberation Tigers' 1993. Thasan Press, Jaffna 1993. Chapter One 'Historical Background' Page 1
2. Ibid. Page iv
3. Coomaraswamy, Radhika, 'LTTE Women - Is This Liberation' The Sunday Times January 5th 1997.
4. Lemkin, Raphel. Chapter IX 'Genocide' in 'Axis Rule in Occupied Europe: Laws of Occupation'. Washington D.C. Carnegie Endowment for International Peace, 1944. Page 79
5. Coomaraswamy, Radhika, 'LTTE Women – Is This Liberation' The Sunday Times January 5th 1997.
6. 'Suthanthira Paravaikal' May-June 1991.
7. Balasingham, Anton. 'The Politics of Duplicity. Re-Visiting the Jaffna Talks' First Edition 2000, Fairmax Publishing Ltd.

# அத்தியாயம் VIII
# வன்னியில் அனுபவித்த இன்னல்கள்

தமிழீழ விடுதலைப் புலிகளின் வன்னியை நோக்கிய தந்திரோபாயப் பின்நகர்வு, இராணுவ ரீதியில் பார்க்கப்போனால், திரு. பிரபாகரனின் மதிநுட்பமான முடிவாகும். நுழைய முடியாத, அடர்ந்த காடுகளை கவசமாகக் கொண்ட வட இலங்கையின் இதய பூமியில் ஒரு பாரிய படைத் தளத்தை அமைத்துப் பலப்படுத்திய திரு. பிரபாகரன், விடுதலைப் புலிகளின் இராணுவ இயந்திரத்தை மறுசீரமைக்கும் பிரமாண்டமான வேலைத் திட்டத்தை நடைமுறைப்படுத்தினார். போர்த் திறனில் வல்லுனர் என்ற ரீதியில், காடுகள் நிறைந்த வன்னியின் பெருநிலப்பரப்பை பாதுகாக்க வேண்டும் என்பதையும், அங்குதான் எதிர்காலத்துச் சமர்கள் நிகழ்த்தப்படவேண்டும் என்பதையும் அவர் உணர்ந்திருந்தார். சிங்களத் தலைமையின் இராணுவ அபிலாசை களையும் அவர் நன்கறிவார். சிங்கள இராணுவம் பாரிய படை யெடுப்புக்களை மேற்கொள்ளலாமென எதிர்பார்த்த திரு. பிரபாகரன். காட்டுப் புற கெரில்லாப் போரிலும், மரபுவழி யுத்தத்திலும் நன்கு பயின்ற, மிகவும் சக்தி வாய்ந்த ஒரு விடுதலை இராணுவத்தைக் கட்டியெழுப்ப முடிவு செய்தார். விடுதலைப் புலிகளின் படையணிகளை ஆட்பல ரீதியாகவும், போர்த் திறன் ரீதியாகவும் வல்லமை படைத்த சக்தியாக உருவாக்கும் நோக்கில் பெருமளவில் ஆட்சேர்ப்பை நடத்தி, பயிற்சித் திட்டங்களை செயற்படுத்தினார். இப் போர்த் திட்டங்கள் நிறைவு பெற்றதும் வன்னிப் பிராந்தியத்திலுள்ள ஒரு பெரிய சிங்கள இராணுவத் தளம் மீது வலிந்து தாக்குவதற்கு திட்டம் தீட்டினார். 1996ம் ஆண்டு, ஜூலை மாதத்தின் ஆரம்பப் பகுதியில் இப் போர் நடவடிக்கை இடம்பெறவிருந்தது.

ஒரு பெரிய தாக்குதல் நடவடிக்கைக்கான ஆயத்தங்கள் நடைபெறுகின்றன என்பதை நாம் அறிவோம். தாக்குதல் நடவடிக் கையை திட்டமிட்டு நடைமுறைப்படுத்தும் மந்திராலோசனையில் தூக்கமற்ற பல இரவுகளை தமது மூத்த தளபதிகளுடன் திரு. பிரபாகரன் செலவிடுகிறார் என்பதும் எமக்குத் தெரியும். எந்த இராணுவத் தளம் தாக்குதலுக்கு ஆளாகப் போகின்றது என்பதை நாம் இறுதிக்





கட்டத்தில்தான் அறிய முடிந்தது. வன்னியில் சிங்கள இராணுவத்தின் நிலைகளை நன்கு அறிந்திருந்த பாலா, முல்லைத்தீவு இராணுவத் தளம் தாக்கப்படப் போகின்றது என்பதை சரியாகவே எதிர்வு கூறினார். திரு. பிரபாகரனுடன் மிகவும் நெருக்கமாக இருந்தபோதும், இராணுவ தாக்குதல் திட்டங்கள் பற்றி, பாலா அவரிடம் கேட்டறிவதைத் தவிர்த்துக் கொண்டார். ஆயினும் ஒரு போர் நடவடிக்கையோ அன்றி ஒரு தாக்குதல் சம்பவமோ நிகழ்ந்தவுடன், அது பற்றிய முழு விபரங்களையும் சேர்த்துக் கொண்டு, முதன் முதலாக திரு. பிரபாகரன் பாலாவை சந்திக்க வருவார். இந்தத் தகவல்களை ஆதாரமாக வைத்து, உள்நாட்டு, வெளிநாட்டு ஊடகங்களுக்கு பத்திரிகை அறிக்கையை தயாரிப்பார் பாலா.

1996 ஜூலை 18ம் திகதி, 'ஓயாத அலைகள்' என்ற பெயரில், முல்லைத்தீவு இராணுவத் தளம் மீது விடுதலைப் புலிகள் இயக்கம் ஒரு பாரிய இராணுவத் தாக்குதலை நிகழ்த்தியது. முல்லைத்தீவு இராணுவ முகாம் ஒரு பெரும் தளம். பழைய முல்லைத்தீவு பட்டினத்தை உள்ளடக்கியதாக 2900 மீட்டர் நீளமும், 1500 மீட்டர் அகலமும் கொண்ட நிலப்பரப்பில் இத்தளம் அமையப் பெற்றிருந்தது. முல்லைத்தீவு மாவட்டத்தின் நிர்வாக மையமாகவும், இராணுவ கட்டளைப் பீடமாகவும் செயற்பட்டு வந்த இப் பெரும் தளம், முல்லைத்தீவு கடலோரமாக நிலைகொண்டிருந்தது. நன்கு பயிற்சி பெற்ற, நவீன ஆயுதங்கள் தரித்த, விடுதலைப் புலிகளின் படையணிகள், தரை மார்க்கமாகவும், கடல் வழியாகவும் முல்லைத்தீவு இராணுவத் தளம் மீது தாக்குதலைத் தொடுத்தன. பல மணி நேரமாக நிகழ்ந்த கடும் சண்டையை அடுத்து இராணுவத் தளத்தின் முன்னணிப் பாதுகாப்பு வலையம் ஊடறுக்கப பட்டது. அதனைத் தொடர்ந்து பல மினிமுகாம்களையும், பீரங்கி மோட்டார் தளங்களையும், மையக் கட்டளைப் பீடத்தையும் புலிப் படைவீரர்கள் கைப்பற்றினர். 24 மணி நேரத்திற்குள் முல்லைத்தீவு பெருந்தளம் முழுமையாக விடுதலைப் புலிகளிடம் வீழ்ந்தது. இதனையடுத்து, உதவிப் படையணிகளை அவசரமாக இராணுவம் அனுப்பி வைத்தது. இப்படையணிகள் முல்லைத்தீவு தளத்திற்கு ஆறு மைல் தெற்கே, கடல்வழியாக தரையிறங்கி, நிலைகளை அமைத்தனர். இப் படையணிகளை விடுதலைப் புலிகள் சுற்றி வளைத்துத் தாக்கி பெரும் உயிர்ச் சேதத்தை ஏற்படுத்தியதன் விளைவாக அவர்கள் அங்கிருந்து பின்வாங்க நிர்பந்திக்கப்பட்டனர். இதனையடுத்து, முல்லைத் தீவு கடலோரமாக சிங்கள இராணுவத்தினரை தரையிறக்கு வதற்கு மேற்கொள்ளப்பட்ட முயற்சிகளை புலிகளின் படையணிகள் முறியடித்தன. ஜூலை 26ம் திகதி வரை சண்டைகள் தொடர்ந்தன. இறுதியில், உதவிக்கு அனுப்பப்பட்ட சிங்களப் படையணிகள், சிதைந்த

நிலையில், பின்வாங்கின. சிங்கள இராணுவம் என்றுமில்லாதபடி பெரும் தோல்வியைச் சந்தித்தது. இச்சமரில் ஆயிரத்து முந்நூறு படையினர் கொல்லப்பட்டனர். 122 எம். எம் பீரங்கிகள், 120 எம்.எம் கனரக மோட்டர்கள், அவைக்குரிய ஆயிரக்கணக்கான எறிகணைகள், மற்றும் பல மில்லியன் டொலர்கள் பெறுமதியான ஆயுத தளபாடங்களை விடுதலைப் புலிகள் கைப்பற்றினர். விடுதலைப் புலிகளைப் பொறுத்த வரை இதுவொரு மகத்தான இராணுவ வெற்றி. முல்லைத்தீவு சமரில் முந்நூற்று முப்பத்தியிரண்டு போராளிகள் வீரச்சாவைத் தழுவிக் கொண்டனர்.

இறுதி நாள் சமரின்போது (26 ஜூலை) முல்லைத்தீவு பெரும் தளத்திலிருந்து இராணுவத் தளபாடங்களை புலிப் படைவீரர்கள் அகற்றிக்கொண்டிருந்த சமயம், சிங்கள இராணுவம் ஆனையிறவுத் தளத்திலிருந்து ‘சத்ஜெய’ என்ற பெயரில் மின்னல் வேகத் தாக்குதலை நடத்தி, பரந்தனைக் கைப்பற்றியது. முல்லைத்தீவில், என்றுமில்லாத பெரும் தொகையில் உயிர்ச்சேதமடைந்து படுதோல்வியை சந்தித்ததன் காரணத்தால் அதிர்ச்சியுற்று இடிந்துபோன சிங்கள மக்களை திசைதிருப்பும் நோக்குடனேயே பரந்தன் மீதான படையெடுப்பு நிகழ்த்தப்பட்டது. பரந்தனைக் கைப்பற்றியதையடுத்து, 1996ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 4ம் திகதி கிளிநொச்சி பட்டினத்தை கைப்பற்றும் நோக்குடன் ‘சத்ஜெய 2’ என்ற போர் நடவடிக்கையை சிங்கள இராணுவம் முடுக்கிவிட்டது. விடுதலைப் புலிப் போராளிகளின் உக்கிரமான எதிர்த்தாக்குதல் காரணமாக சிங்களப் படையினரால் தமது இராணுவ இலக்கை முழுமையாக அடையமுடியவில்லை. கிளிநொச்சிப் பட்டினத்தின் ஒரு பகுதி மட்டும் இராணுவத்திடம் வீழ்ந்தது. பலநாட்களாக சண்டை தொடர்ந்தது. முல்லைத்தீவில் சந்தித்த பேரிழப்புகளுக்கு பழிவாங்கும் நோக்கத்துடன், சிங்கள ஆயுதப் படைகள் பீரங்கிக் குண்டுகளை சரமாரியாகப் பொழிந்தும், விமானத் தாக்குதல்களை நடத்தியும், கிளிநொச்சிப் பட்டினத்தையும், அதனைச் சூழவுள்ள பகுதிகளையும் தரைமட்டமாக்கினர்.

கிளிநொச்சியில் கடும்சமர் நடந்து கொண்டிருந்த வேளை, நாம் கிளிநொச்சியிலிருந்து 10 கிலோமீட்டர் தொலைவிலுள்ள இராமநாதபுரம் எனப்படும் வன்னியின் பூர்வீகக் கிராமத்தில் வசித்து வந்தோம். எமது வீட்டிலிருந்து சரியாக இரண்டு கிலோ மீற்றர் தூரத்தில் விடுதலைப் புலிகளின் பயிற்சி முகாமொன்று அமைந்திருந்ததால், அப் பகுதி நோக்கி தொடர்ச்சியாக விமானத் தாக்குதலும், பீரங்கிக் குண்டுவீச்சும் இடம்பெறுவதுண்டு. இதனால் மீண்டும் ஆபத்துக்கள் நிறைந்த யுத்த பூமிக்கு வந்துவிட்டது போன்ற உணர்வு, மீண்டும் போரின் முழக்கங்கள் காதுகளை செவிடாக்கின.





இரவு வேளைகளில், நாம் வசித்த பகுதிக்குள் வெடித்துச் சிதறிய பீரங்கிக் குண்டுகளின் அதிர்வால் எமது வீடு நடுங்கும். அவ்வேளைகளில், பாதுகாப்பிற்காக பதுங்கு குழிக்குள் சென்று ஒதுங்கவும் நாம் துணியவில்லை. அந்த நிலவறைக்குள் கொடிய விச ஜந்துகள் குடியிருந்தன. பீரங்கிக் குண்டால் உடல் சிதறிச் சாவது எத்தனை சாத்தியமோ, அதே போன்றே பதுங்கு குழிக்குள் குடியிருந்த விசப் பாம்புகள் தீண்டிச் சாவதும் சாத்தியமாக இருந்தது. எமது பதுங்குகுழி வீட்டுக்கு வெளியே அமைக்கப்பட்டிருந்தது. குழிக்கு மேலாக பனைமரக் குத்திகள். அதற்கு மேலாக மண்சாக்கு மூட்டைகள். எமது மெய்ப்பாதுகாவலர்கள், அடிக்கடி அக் காப்பரணை சோதனை செய்வதுண்டு. ஒரு நாள், எமக்குத் திகைப்பூட்டும் வகையில், ஒரு பெரிய நாக பாம்புத் தோல், பதுங்கு குழிக்குள், பனைமரக் குத்திகளின் அடுக்குகளிற்குள்ளிருந்து தொங்கிக் கொண்டிருப்பதை அவர்கள் கண்டுபிடித்தார்கள். ஒரு நாகபாம்பு குடியிருப்பது ஊர்ஜிதமாகிவிட்டது. பனைமரக் குத்திகளின் இருண்ட இடைவெளிக்குள் பதுங்கியிருந்தது அப் பாம்பு. சில சமயம் குடும்பமாகக் குடிநடத்தலாம். சீற்றம் கொண்ட நாகம் தீண்டி, மெல்ல மெல்லச் சாவதை விட, இரவில் மெய்மறந்த தூக்கத்தில் திடீரென குண்டு வெடித்துச் சாவது பரவாயில்லையென எமக்குத் தோன்றியது. நாம் அப்படியே தீர்மானித்து, அதிஷ்ட தேவதையின் கையில் எமது விதியை ஒப்படைத்தோம்.

எமது வீட்டுக்கு சமீபமாக, எறிகணைகளும், விமானக் குண்டுவீச்சும் நிகழ்ந்தபோதும், இராமநாதபுரத்தில் நாம் வசித்த காலம் மிகவும் மகிழ்ச்சிக்குரியது. ரம்மியமான இயற்கைச் சூழலில் ஒரு அழகான வீடு; அதைச் சுற்றித் தென்னைமரச் சோலை கிழன்று விசாலித்து வளர்ந்து நின்ற வேம்புகள். முற்றத்தில் பல இனத்தைச் சேர்ந்த மாமரங்கள் செழிப்பாக காய்த்து கனியாகக் கொட்டின. மரச் சோலைகள், வன்னியின் வெப்ப சூழலைத் தணித்து, வீட்டைக் குளிர்மையாக்கின. இதனால் அங்கு வசிப்பதற்கு இதமாக இருந்தது. எமது அயலில் வாழ்ந்தவர்கள் மரபுவழிவந்த வன்னி மக்கள். பல்வேறு சாதிப் பிரிவுகளைச் சேர்ந்த இம்மக்கள், ஏதோ ஒரு வழியில், விடுதலைப் போராட்டத்திற்கு பங்களித்து வந்தார்கள். இராமநாதபுரத்தில் எமது வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக அமைந்தபோதும், சில இடையூறுகளும் இருக்கத்தான் செய்தன. ஒதுக்குப் புறமான கிராமம் என்பதால், சனப்பெருக்கம் நிறைந்த பகுதிகளிலிருந்தும், விடுதலைப் புலிகளின் செயலகங்களிலிருந்தும் அது தனிப்படுத்தப்பட்டும் இருந்தது. அப்பொழுது எரிபொருள் தட்டுப்பாடு நிலவியதால், நீண்ட தூரப் பயணத்தை போராளிகள் தவிர்க்க வேண்டியிருந்தது. இதனால் எமது

வீட்டிற்கு அதிகமானோர் வருவதில்லை. இந்த சூழ்நிலையில், கிளிநொச்சி மீதான விடுதலைப் புலிகளின் தாக்குதல் நேரம் நெருங்கியபோது, எம்மை அங்கிருந்து விலகி, போராளிகளின் இருப்பிடங்களுக்கு சமீபமாக குடியிருக்குமாறு பணித்தல் வந்தது. இதன்படி நாம் இராமநாதபுரத்திலிருந்து வெளியேறி, முல்லைத்தீவில் ஒட்டிசுட்டானுக்கு அண்மையிலுள்ள வரலாற்றுப் புகழ் மிக்க கற்சிலைமடுவில் குடிபுகுந்தோம். இங்குதான் வன்னியின் கடைசி மன்னன் பண்டார வன்னியனின் நினைவுச் சின்னம் உள்ளது. பிரித்தானிய காலனித்துவ ஆட்சிக்கு எதிராகப் போராடிய இம்மாவீரன் இறுதியில் ஆங்கிலேயரால் கைது செய்யப்பட்டு தூக்கிலிடப்பட்டான்.

## வன்னியில் எமது வாழ்க்கை

இலங்கையின் வடபாகத்திலுள்ள வன்னிப் பிரதேசம் மழை வீழ்ச்சி குறைந்த ஒரு வரண்ட பூமி. வன்னி இராசதானியை ஆட்சிபுரிந்த பழைய தமிழ் மன்னர்கள் இப்பகுதியில் நூற்றுக்கணக்கான குளங்களை அமைத்து நீரியல் விஞ்ஞானம் தழுவிய விவசாய உற்பத்தி முறையை உருவாக்கினர். முற்காலத்தில், வன்னிப் பிரதேசத்தில் உணவு உற்பத்தி தழைத்தோங்கியதால் தேவைக்கு மிகுதியானவை யாழ்ப்பாணத்திற்கும் தென்னிலங்கைக்கும் அனுப்பிவைக்கப்பட்டன என்று வன்னிக் கமக்காரர்கள் என்னிடம் சொன்னார்கள். சமூகக் கூட்டுறவு முறையிலான உற்பத்திக்கும் விநியோகத்துக்கும், ஊக்கமளித்த நீரியல் நீர்பாசன கமச் செய்கைக்கு அந்நிய காலனித்துவம் முடிவுகட்டியது. இலங்கைத்தீவு சுதந்திரம் அடைந்த பின்னர் ஆட்சிப் பீடம் ஏறிய சிங்கள அரசுகள் வன்னிப் பிரதேசத்தை முற்றாகப் புறக்கணித்தன. எந்த விதமான பொருளாதார திட்டங்களையும் செயற்படுத்தாமல் ஒதுக்கி வைத்தன. இதன் விளைவாக வன்னி மாநிலம் அபிவிருத்தியடையாத பின்தங்கிய பிரதேசமாக இருந்து வந்தது. பல நூற்றாண்டுகளுக்கு முன் நிர்மாணிக்கப்பட்ட பழைய மன்னர்களால் பேணிப் பாதுகாக்கப்பட்டு வந்த குளங்களும், கால்வாய்களும் பாவனையின்றி தூர்ந்து உடைந்து போயின. இடையிடையே ஏற்பட்ட வெள்ளப்பெருக்கினால், அணைகள் அடித்துச் செல்லப்பட்டதால் குளங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயின. நீர்பாசன முறை சிதைவுற்றதன் விளைவாக வன்னியில் வேளாண்மை சமூகத்தின் வாழ்க்கை அவலத்திற்குள்ளானது.





இது ஒருபுறமிருக்க சிங்கள அரசினால் விதிக்கப்பட்ட பொருளாதாரத் தடைகள் காரணமாக நடுத்தர நிலச் சொந்தக்காரர்களுக்கும் வித்தியாசமான புதிய நெருக்கடிகள் தோன்றின.

வன்னியிலுள்ள பெரும்பாலான விவசாயிகள் தமது வீட்டுப் பொருளாதாரத்தில் தங்கியிருப்பவர்கள். வீட்டு வருவாயுடன் வாழ்பவர்கள். தென்னை, வாழை, மாமரங்கள், ஆடு, மாடு, கோழி வளர்ப்பு, இனி நெல் விழைச்சலில் கிடைக்கும் அரிசி, அத்துடன் தோட்டத்தில் உற்பத்தியாகும் காய்கறிகள், ஆகியன வன்னி மக்களின் வீட்டு வருவாயாக இருந்தன. இந்த வருவாயுடன் அவர்களால் தமது வாழ்க்கையை சமாளிக்க முடிந்தது. ஆயினும் உழவு இயந்திரங்கள், நீரிறைக்கும் இயந்திரங்கள், ஆகியனவற்றிற்கு தேவையான எரிபொருளுக்கு பெரும் தட்டுப்பாடு நிலவியது. அத்தோடு உர வகைகளுக்கும் தடைவிதிக்கப்பட்டிருந்தது. அரசினால் விதிக்கப்பட்ட இப் பொருளாதாரத் தடைகளினால், வீட்டு வருவாயில் தங்கியிருந்த விவசாய சமூகம் மட்டுமன்றி வன்னியிலுள்ள ஏனைய சமூகங்களும் வெகுவாக பாதிக்கப்பட்டனர். எரிபொருள் கிடைக்காததால், உழவு இயந்திரங்களைப் பாவிக்க முடியாத விவசாயிகள், பண்டைய முறைப்படி உழவு மாடுகளையும், கலப்பையையும் வயலுக்குக் கொண்டு சென்றனர். உழவு இயந்திரங்களை பாவிக்க முடியாததால், வயல்வேலைக்கான கூலிச் சுமையும் விவசாயிகளுக்கு ஏற்பட்டது. உரவகைகளுக்கு விதிக்கப்பட்ட தடையால் விளைச்சல் வெகுவாகக் குன்றியது. இதனால் உற்பத்திப் பொருட்களை யாழ்ப்பாணத்திலோ கொழும்பிலோ விற்பனை செய்ய முடியவில்லை. அத்தோடு, சேமித்து வைக்கும் வசதியில்லாததால் அவை அழுகிக் கெட்டுப் போவதுமுண்டு. உற்பத்தி செலவு அதிகரிப்பு, உற்பத்திப் பொருட்களை சேமித்து வைப்பதற்கான களஞ்சிய வசதியின்மை, சந்தைப்படுத்தும் வாய்ப்பின்மை ஆகிய காரணங்களால் மேலதிக பயிர்ச் செய்கை மேற்கொள்வதை விவசாயிகள் தவிர்த்தனர். இதனால் உணவுத் தட்டுப்பாடு ஏற்பட்டது. உணவுப் பொருட்களின் விலைகளும் அதிகரித்தன. புகையிலைச் செய்கையிலும் இதே சிக்கல் விவசாயிகளுக்கு ஏற்பட்டது. புகையிலையை தென்னிலங்கைக்கு ஏற்றுமதி செய்ய முடியவில்லை. இதனால் சேமித்து வைத்த புகையிலைகள் அழுகிக் கெட்டுப் போயின. செய்கைபண்ணிய செலவுத் தொகையைக் கூட எடுக்க முடியவில்லை. கடனையும் செலுத்த முடியவில்லை. பண நெருக்கடியால் அன்றாட செலவுக்கே அல்லற்பட நேர்ந்தது. இந்தப் பொருளாதாரப் பிரச்சனைகளுடன் தடுமாறிக் கொண்டிருந்த மக்களுக்கு, வன்னியில் போர் தீவிரமடைந்து பரவியதால்,

இடம்பெயர்வு என்ற இதுவரை காணாத புதிய நெருக்கடி தோன்றியது. கிளிநொச்சி மீதான தாக்குதலைத் தொடர்ந்து, வன்னியூடாகச் செல்லும் நெடுஞ்சாலையைக் கைப்பற்றும் நோக்குடன், 'ஜெயசிக்குறு' என்ற பெயரில் சிங்கள இராணுவம் பெரியதொரு படையெடுப்பை மேற் கொண்டது. இதனால் வன்னியில் பல்லாயிரக்கணக்கான குடும்பங்கள் இடம்பெயர நேர்ந்தது. வன்னி விவசாயிகள் தமது வீடுகள், வயல்கள், கால்நடைகள், வீட்டுப் பொருளாதார வாழ்வு ஆகியவற்றைத் துறந்து பாடசாலைகள், கோவில்கள், அகதி முகாம்களில் தஞ்சமடைந்தனர்.

தொண்ணூறுகளின் நடுப்பகுதியிலிருந்து இறுதிப் பகுதிவரை நாம் வன்னியில் வசித்து வந்தோம். அப்பொழுது, மூன்று வகைப்பட்ட மக்கள் சமூகத்தை நாம் வன்னியில் காணக்கூடியதாக இருந்தது. ஒன்று, உள்ளூர் வாசிகள். இரண்டாவது யாழ்ப்பாணத்திலிருந்து இடம்பெயர்ந்த மக்கள். மூன்றாவது உள்ளூரில் இடம் பெயர்ந்த வன்னி மக்கள். (1999ம் ஆண்டின் இறுதிப் பகுதியில், ஓயாத அலைகள் - 3 இராணுவ நடவடிக்கையின் மூலம் வன்னி மாநிலத்தை விடுதலைப் புலிகள் மீட்டெடுத்ததைத் தொடர்ந்து உள்ளூரில் இடம்பெயர்ந்த வன்னி மக்கள் தமது சொந்த நிலங்களுக்குத் திரும்பிச் சென்று தமது இயல்பான வாழ்க்கையை ஆரம்பித்துள்ளனர் என பின்பு அறிந்தோம்). இதேவேளை, யாழ்ப்பாணத்திலிருந்து இடம்பெயர்ந்து வந்த மக்கள் முற்றாகவே வேறுபட்ட பிரச்சனைகளுக்கு முகம்கொடுக்க வேண்டியிருந்தது. சில மூட்டை முடிச்சுகளுடன் வன்னிக்கு வந்த இவர்களுக்கு இருப்பிடம் இருக்கவில்லை. வேலைவாய்ப்பும் கிடைக்கவில்லை. இவைதான் இவர்களது முக்கிய பிரச்சனையாக இருந்தது. வேறு வார்த்தைகளில் சொல்வதானால் ஏதிலிகளான நிலையிலிருந்தே இவர்கள் மீண்டும் தமது வாழ்க்கையை ஆரம்பிக்க நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். பயிர் செய்யக்கூடிய நிலங்களைத் தெரிவு செய்து, அவற்றைத் துப்புரவு செய்து, புதிய குடியேற்றத் திட்டங்களை அமைத்து, இவர்களை குடியேற்றுவதற்கு புலிகள் அமைப்பின் சமூக பொருளாதாரப் பிரிவுகள் கடும் முயற்சிகளை எடுத்தன. இது ஒருபுறமிருக்க, சுயமரியாதை கொண்டவர்களும், தங்கள் வழியைத் தாங்களே பார்த்துக் கொள்வதாகக் கூறி தனி வழி சென்றனர். வெளிநாடுகளிலுள்ள தமது சொந்த பந்தங்களிடமிருந்து நிதியுதவியைப் பெற்ற இவர்கள், குடிசைகளை அமைத்து ஒருவாறு நிலைமையைச் சமாளித்தபோதும், குடும்ப வாழ்வை ஓட்டக்கூடிய வேலைவாய்ப்பைப் பெறமுடியவில்லை. வெளிநாடுகளிலிருந்து உதவிபெறமுடியாத ஏழ்மையான மக்களே பெரும் பாதிப்பிற்கு ஆளாகினர். இவர்கள் விடுதலைப் புலிகளிடமிருந்தும், அரச



1991ல் எனக்கு முன்பாக, முன்னாள் மகளிர் அமைப்பு அரசியல் துறைப் பொறுப்பாளர் ஜெயாவும், எனக்கு அருகே முன்னாள் மகளிர் இராணுவ அமைப்பின் தலைவி ஜெயந்தியும்.



1992ல் எமது வீட்டு சமையல் அறையில் நான்
தேங்காய் துருவிக்கொண்டிருந்த வேளை



1992ல் யாழ்ப்பாணத்தில், கடற்புலிகளின் விசேட தளபதி கேணல் சூசையுடன்
அவரது குழந்தை சிந்துவை நான் தூக்கி வைத்திருக்கிறேன்.



1993ல் அரசியல் துறைப் பொறுப்பாளர்
திரு. சு. ப. தமிழ்ச்செல்வன் அவர்களுடன் நானும் பாலாவும்



1993ல் விடுதலைப் புலிகளின் மூத்த தலைவர்களில் ஒருவரான
திரு. இளங்குமரன் (பேபி சுப்பிரமணியம்) அவர்களுடனும்
அவரது துணைவியார் வெற்றிச்செல்வி அவர்களுடனும்.



1994ல் யாழ்ப்பாணத்தில், எமது வீட்டில் எமது வளர்ப்பு நாய் ஜிம்மியுடன்.



1998ல் பாலா சுகவீனமுற்றிருந்த வேளை, நானும் பாலாவும் திரு.பிரபாகரன் அவர்களும், அவரது துணைவியார் மதிவதன் அவர்களும்.



2002 மே மாதம் வன்னிக்கு நானும் பாலாவும் சென்ற வேளை, திரு. பிரபாகரன் தம்பதிகளுடன் எடுத்த படம்.
திரு. பிரபாகரன் அவர்களின் மடியில் அமர்ந்திருப்பவர் அவரது கடைசி மகன் பாலச்சந்திரன்.



2002ல் மே மாதம் வன்னி, புதுக்குடியிருப்பில் நானும் பாலாவும்.



சார்பற்ற நிறுவனங்களிடமிருந்தும் சிறிய உதவிகளைப் பெற்று அகதி முகாம்களில் மிகவும் அவலமான வாழ்க்கையை நடத்திவருகின்றனர். பணமின்றி, குடியிருக்க வசதியின்றி, விரக்தியின் விளிம்பிற்கு தள்ளப்பட்ட இம்மக்கள், செஞ்சிலுவைச் சங்கத்தினர் கொடுத்த பிளாஸ்டிக் விரிப்புகளை மரங்களின் கீழ் கட்டி அவற்றிற்குள் குடியிருந்தனர். வீதியோரங்களில் அவர்கள் வசித்த பகுதியால் நாங்கள் பல தடவைகள் சென்றிருக்கிறோம். மழைகொட்டும் வேளைகளில், பிளாஸ்டிக் கூடாரங்கள் அருகே, முற்றாகத் தோய்ந்து நனைந்தபடி குளிரில் அவர்கள் நடுங்கிக் கொண்டிருப்பதையும் மழைநீர் வெள்ளமாகப் பெருகி அவர்கள் வசித்த சூழலை சேறும் சகதியுமாக மாற்றி யிருப்பதையும் நாம் நேரில் கண்டிருக்கின்றோம். 1996, 1997 ம் ஆண்டுகளில், வன்னியில், கொடிய மலேரியா நோய் பரவியபோதும் இடம்பெயர்ந்த மக்கள் பேரவலத்திற்கு ஆளாகினார்கள். பொருளாதாரத் தடையினால் மருந்துகள் பெறமுடியாத சூழலில், வீதிகளோரமும் மூலைமுடுக்குகளிலும் மலேரியா நோயினால் பீடிக்கப்பட்ட மக்கள் நடுநடுங்கியபடி போகுமிடம் தெரியாமல் அவஸ்தைப்பட்டனர். மலேரியா தொற்றி, உடலை எரிக்கும் காய்ச்சலையும் அதனைத் தொடர்ந்து வரும் குளிரையும் சமாளிப்பதற்காக, போசாக்குக் குறைவினால் துவண்டுபோன தமது உடலை, துவாய் அல்லது மெல்லிய போர்வையினால் மூடிக்கொண்டு வீதிகளில் அலைவதையும் நாம் கண்டிருக்கிறோம். தாய்மார்கள் தங்கள் நோயுற்ற குழந்தைகளை சுமந்தவண்ணம் கொட்டும் மழையில் அல்லது சுட்டெரிக்கும் வெய்யிலில் மருத்துவமனைக்கு செல்வதற்காக பஸ்தரிப்பு நிலையங்களில் பலமணிநேரமாக காத்து நிற்பதையும் நாம் பார்த்திருக்கின்றோம். பஸ்சிற்காக காத்து நிற்பதை விட கால்நடையில் செல்வது உகந்தது என எண்ணி வீதியோரமாக தள்ளாடியபடி நடந்து செல்லும் நடைப் பிணங்களையும் நாம் காணக்கூடியதாக இருந்தது.

சொந்த முயற்சியினால் பலர் வேலை தேட முயற்சித்தபோதும் வேலைவாய்ப்பின்மையே பலருக்கு பாரிய பிரச்சனையாக உரு வெடுத்தது. இதனால் ஏற்பட்ட பணநெருக்கடி இடம் பெயர்ந்த யாழ்ப்பாண மக்களின் சுயகௌரவத்தையும் தனித்துவத்தையும் பாதித்ததுடன் அவர்களை துன்பத்தின் எல்லைக்கே துரத்திச் சென்றது. பொருளாதாரத் தடைகளும், வாழ்க்கைச் செலவு உயர்வும், உணவுக்காக பணத்தைச் செலவிடமுடியாத நிலைக்கு பல குடும்பங்களைத் தள்ளியது. பட்டினியால் பல குடும்பங்கள் அவலப்படுவதைக் கேள்வியுற்றதும் விடுதலைப் புலிகளின் புனர்வாழ்வு அமைப்பினர் இந்த அவலப்படும்

குடும்பங்களுக்கு நிவாரணம் அளித்து உதவினர். வன்னி முழுவதிலும் போசாக்கின்மை பரவியிருந்தது. போசாக்கின்மையால், பானை வயிறும், மெலிந்த காலும், சுருங்கிய தோலும் செம்பாட்டுநிற முடியுமாக குழந்தைகள் காட்சியளித்தனர். மலேரியா, நெருப்புக் காய்ச்சல் போன்ற பொதுவான நோய்களுக்கு கொடுக்கப்படும் மருந்துகளுக்கும் சாதாரண காய்ச்சலுக்கு கொடுக்கப்படும் 'பரசித்மோல்' போன்ற மாத்திரை களுக்குக் கூட தட்டுப்பாடு நிலவியது. இந் நிலைமை மக்களின் அவல நிலையை மேலும் மோசமாக்கியது. இதனால் உயிரைப் பறிக்கும் நோய்களுக்கு மக்கள் ஆளாகும் ஆபத்து நிலவியது.

ஆயிரக்கணக்காக இடம்பெயர்ந்த மக்களுக்கு அன்றாட வாழ்க்கையை ஓட்டுவதே பெரும் அல்லலாக இருந்தது. இந்த மக்களில் பலர், அக்கரைப் பச்சையைத் தேடி வவுனியாவுக்குச் சென்றனர். வவுனியா சென்ற மக்களை சிங்கள இராணுவமும் காவல்துறையும் கைது செய்து, அகதி முகாம்களுக்குள் தடுத்து வைத்தது. சுதந்திரமாக நடமாடும் உரிமை பறிக்கப்பட்ட இம் மக்கள் திறந்த வெளிச் சிறைகளில் தொடர்ந்து வாழவேண்டிய அவல நிலை ஏற்பட்டது. இந்தியாவுக்கும் யாழ்ப்பாணத்திற்கும் துணிச்சலான, ஆபத்தான பயணத்தை மேற் கொண்டோருக்கும் அங்கே அகதிமுகாம்களுக்குள் முடங்கவேண்டிய பரிதாப நிலை எழுந்தது. நிதி நெருக்கடியும் வளங்களின் பற்றாக்குறையும் காரணமாக, விடுதலைப் புலிகளின் ஆதரவில் இயங்கிய உள்ளூர் புனர்வாழ்வு நிறுவனங்கள் இடம்பெயர்ந்த மக்களின் வாழ்க்கைப் பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு படாதபாடு பட்டன. சந்திரிகா குமாரதுங்காவின் அரசாங்கம் ஈவிரக்கமற்ற கொள்கையைக் கடைப்பிடித்தது. உணவிற்கும், மருந்திற்கும் பெரும் தட்டுப்பாடு ஏற்படுத்தும் வகையில் பொருளாதாரத் தடையை கடுமையாக இறுக்கிய அரசாங்கம் நிவாரண உதவிகளையும் வெட்டியது. இதனை ஆட்சேபித்து, இடம்பெயர்ந்த மக்கள் அரசுக்கு எதிராக பேரணிகளையும் ஆர்ப்பாட்டங்களையும் நடத்தினார்கள். இந்த எதிர்ப்புகளாலும் பயனெதுவும் ஏற்படவில்லை. இதே சமயம், அரசாங்கம் விதித்த கட்டுப்பாடுகள், வன்னியில் இயங்கிவந்த அரச சார்பற்ற நிறுவனங்க ளையும் முடக்கிவிட்டன. அவதிப்படும் மக்களுக்குத் தேவையான நிவாரண உதவிகளை இந் நிறுவனங்களால் செய்ய முடியவில்லை. இதனால் இந் நிறுவனங்கள் மீது மக்கள் சந்தேகம் கொண்டனர். இவை அரசாங்கத்திற்கு துணைபோவதாக எண்ணினர். வன்னியில் தலைதூக்கிய மாபெரும் மனித அவலத்தை உலகத்தின் கவனத்திற்குக்கொண்டு வராததால், அரச சார்பற்ற நிறுவனங்கள் தங்கள்





கடமையிலிருந்து தவறிவிட்டதாக மக்கள் குற்றம் சுமத்தினார்கள். இடம்பெயர்ந்த மக்கள் அனைவருமே விடுதலைப் புலிகளின் ஆதரவாளர்கள் அன்றி அனுதாபிகள் என்று அரசாங்கம் கருதியது. அதனால் திட்டமிட்டு கூட்டுத் தண்டனையாக இம்மக்கள் மீது அரசாங்கள் பல்வேறு துன்பங்களை வேண்டுமென்றே சுமத்தியது. இடம்பெயர்ந்த வன்னி மக்களின் துயரைத் துடைக்கும் நோக்குடனேயே விடுதலைப் புலிகள் இயக்கம் பொருளாதாரத் தடை நீக்கத்தை பேச்சுவார்த்தைக்கு முன்நிபந்தனையாக விதித்தது. இரண்டாயிரம் ஆண்டின் ஆரம்பத்தில், நோர்வே அரசின் அனுசரணையுடன் சமாதான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட போது, உணவு, மருந்து மற்றும் அத்தியாவசியப் பொருட்களுக்கு விதிக்கப்பட்ட தடை நீக்கப் பட்டால்தான் பேச்சுக்களில் பங்குபற்ற முடியுமென விடுதலைப் புலிகள் அறிவித்தனர். ஆனால், பொருளாதாரத் தடையை நீக்கி, வன்னியில் இயல்பு நிலையை தோற்றுவிப்பதில் குமாரதுங்காவின் அரசு எவ்வித அக்கறையும் காட்டவில்லை.

உள்ளூர் விவசாயிகள், இடம்பெயர்ந்த மக்கள் போன்ற சமூகப் பிரிவினரைத் தவிர முல்லைத்தீவு, மன்னார் கரையோரப் பகுதிகளில் பெருந்தொகையான மீனவ சமூகத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இந்த மீனவ சமூகத்தவரில் ஒரு பகுதியினர், முன்பு திருகோணமலையிலிருந்து அகதிகளாக இடம்பெயர்ந்து, உள்ளூர் மக்களுடன் இணைந்தவர்கள். எரிபொருட்களுக்கு விதிக்கப்பட்ட தடையால் வன்னியில் வாழ்ந்த மீனவ சமூகம் பெரிதாகப் பாதிக்கப் பட்டதுடன், வறுமையின் எல்லைக்குத் தள்ளப்பட்டது. எரிபொருள் இல்லாததால் பெரும் இழுவைப் படகில் சென்று ஆழ்கடலில் மீன்பிடிக்க முடியவில்லை. இதனால் மீன்பிடித் தொழில் முற்றாக முடக்கம் கண்டது. வேலையின்மையாலும், சந்தைக்கு கொண்டு செல்ல எதுவுமில்லை என்பதாலும் வருமானம் அறவே இல்லாத நிலையாலும் மீனவ மக்கள் பெரும் அவலத்திற்கு ஆளாகினர். கரைவலை மீன்பிடியில் ஈடுபட்டு, வாழ்க்கையோடு போராடிக் கொண்டிருந்தார்கள். துணிந்து கடலில் இறங்கிய நூற்றுக்கணக்கான மீனவர்களை சிங்களக் கடற்படை ஈவிரக்கமின்றி கொன்றொழித்தது. அவர்களது துயர வாழ்க்கைக்கு மேலும் துன்பத்தைச் சுமத்துவதுபோன்று, கரையோரப் பகுதிகளில் தொடர்ந்து நிகழ்ந்த விமானக் குண்டு வீச்சுகள் மீனவ மக்களின் குடிசைகளையும் படகுகளையும் நாசமாக்கின.

## 'ஜெயசிக்குறு' படையெடுப்பு

இலங்கை இராணுவத்திற்கு பெரும் இகழைத் தேடிக் கொடுத்த 'ஜெயசிக்குறு' (வெற்றி நிச்சயம்) என்ற போர் நடவடிக்கை 1997 மே மாதம் 13ந் திகதி ஆரம்பமானது. இலங்கை இராணுவ நிறுவனம், முன் என்றும் இல்லாதவாறு பெருமளவில் பேராவலுடன் தொடங்கிய படையெடுப்பு முயற்சி இது. தென் ஆசியாவிலேயே நீண்ட காலத்திற்கு நீடித்த வரலாற்றுச் சமர் இதுவென கருதப்பட்டது. இந்தப் போர் நடவடிக்கையை தயார்படுத்த நான்கு மாதங்கள் சென்றன. ஆயினும் இரண்டு வருடங்கள் வரை இந்தக் கொடும் சமர் இழுபட்டு நீண்டு சென்றது. இலங்கையின் வரலாற்றிலேயே சிங்கள இராணுவத்தினருக்கு ஏற்பட்ட அவமானம் மிக்க படுதோல்வியாக இச் சமர் முடிவடைந்தது. இந்த 'ஜெயசிக்குறு' நடவடிக்கை வன்னியின் இதய பூமியில் இரண்டு போர்முனைகளைத் திறந்து விட்டது. ஒன்று கண்டி - யாழ்ப்பாண நெடுஞ் சாலையிலுள்ள ஓமந்தை நொச்சிமோட்டைப் பகுதியிலும்; இரண்டாவது, நெடுங்கேணிக்கு அண்மையிலுள்ள கென்ட் - டொலர் பண்ணைப் பகுதி யிலும் போர் முனைகள் திறக்கப்பட்டன. வன்னியின் மையப் பகுதியூடாக வவுனியாவிலிருந்து கிளிநொச்சிவரை செல்லும் 80 கிலோ மீட்டர் தூரமான நெடுஞ்சாலையைக் கைப்பற்றுவதே இப் படையெடுப்பு நடவடிக்கையின் தந்திரோபாய நோக்கமாகும். வன்னிப் பெருநிலத்தை இரு பிரதேசங்களாக பிளவுபடுத்தி, விடுதலைப் புலிகளின் இராணுவ தளங்களை அழிப்பதே இப் படையெடுப்பின் அந்தரங்க திட்டமாகும். இலங்கை இராணுவ புலனாய்வுப் பிரிவினரின் தகவலின்படி திரு. பிரபாகரனது தளமும் வன்னியின் மையப் பகுதியில் அமையப் பெற்றிருக்கின்றது என்பது அரசாங்கத்தின் கணிப்பு. எனவே, புலிகளின் தலைவரது பிரதான தளத்தை தேடி அளிப்பதும் இப் படையெடுப்பின் முக்கிய குறிக்கோளாகும். படைநடவடிக்கை ஆரம்பமானதும், பல்லாயி ரக்கணக்கான சிங்கள இராணுவத்தினர், விமானக் குண்டுவீச்சுகளின் உதவியோடு பீரங்கிகள், டாங்கிகள் சகிதம் இரு கேந்திர முக்கியத்துவம்வாய்ந்த முனைகளிலிருந்து முன்னேறினர். மரபுவழி யுத்தத்தில் தேர்ச்சி பெற்றிருந்த விடுதலைப் புலிப் படையணிகளும் ஆக்கிரமிப்பாளரை மூர்க்கமாக எதிர்த்ததால் சண்டை உக்கிர மடைந்தது. ஆக்கிரமிப்பு இராணுவம் நெடுங்கேணியை நோக்கி முன்னேற முயன்றபோது கற்சிலைமடுப் பகுதியிலும் எறிகணைகள் விழுந்து வெடிக்கத் தொடங்கின. இதனால் முல்லைத்தீவிலுள்ள புதுக் குடியிருப்பில், ஒரு வீட்டிற்கு இடம்பெயர்ந்தோம்.





புதுக்குடியிருப்பில் நாம் வசித்தபோது, சிங்கள இராணுவமும், விடுதலைப் புலிகளும் பரஸ்பரம் ஏவிவிடும் பீரங்கி எறிகணைகளின் பேரோசை நாளாந்த நிகழ்வாகிப் போனது. இதே சமயம், விமானப் படையின் போர் விமானங்கள், அகதி முகாம்கள் மீதும், பொதுசனக் குடியிருப்புகள் மீதும் கண்மூடித்தனமாக நடத்திய குண்டுவீச்சுகளில் பெருந்தொகையில் அப்பாவிப் பொதுமக்கள் உயிர் நீற்பது அன்றாட நிகழ்வாகிவிட்டது. எறிகணைகளின் முழக்கங்கள் எமக்கு நன்கு பழக்கமாகிவிட்டன. பீரங்கிகளிலிருந்து ஏவப்படும் எறிகணைகள், மோட்டார் குண்டுகள், டாங்கிகளின் தாக்குதல்கள், ஆகியனவற்றை அவற்றின் ஓசைகளிலிருந்தும் அதிர்வுகளிலிருந்தும் நாம் அனுமானித்துக் கூறமுடிந்தது. இவை எங்கிருந்து எத்தகைய தொலைவிலிருந்து நடைபெறுகின்றன என்பதையும் எம்மால் தீர்மானிக்க முடிந்தது.

'ஜெயசிக்குறு' படையெடுப்பு ஒரு நீண்ட காலச் சமராக நீடிக்கப்போகின்றது என்பதை நாம் கண்டறிந்திருந்தோம். ஏனென்றால், தனது படைபலம் அனைத்தையும் ஒன்று திரட்டி சிங்கள இராணுவத்தின் ஆக்கிரமிப்பை முறியடிக்க வேண்டுமென திரு பிரபாகரன் திடசங்கற்பம் பூண்டிருந்தார். இந்த நோக்கத்துடன் கேணல் கருணாவின் தலைமையி லான மட்டக்களப்பைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான போரனுபவம் பெற்ற புலிப்படை வீரர்களை வன்னிக்கு அழைத்து, அவர்களை வன்னிப் பெரும் சமரில் ஈடுபடுத்தினார். நாட்கள், மாதங்களாக கடும் போர் தொடர்ந்தது. ஆயினும் நாங்களும் புதுக்குடியிருப்பு மக்களும், முடிந்த அளவிற்கு, வாழ்க்கையை இயல்புநிலை போன்று ஓட்டிக்கொண்டிருந்தோம். ஆயினும், எமது வீட்டுக்கு வரும் விருந்தாளிகள், எமது பகுதியில் விமானத் தாக்குதல்கள் நிகழ்ந்த வேளைகளில், எம்மோடு சேர்ந்து, எமது வீட்டுக் காணிக்குள் கட்டப்பட்டிருந்த பதுங்குகுழிக்குள், பதுங்கவும் நேர்ந்தது. விமானத் தாக்குதல் முடிந்ததும் நாங்கள் பதுங்கு குழியிலிருந்து வெளியேறி எமது உரையாடலைத் தொடர்வோம். அத்துடன் விமானத் தாக்குதல் எங்கே நிகழ்ந்தது? உயிர்ச் சேதங்கள் ஏற்பட்டதா? போன்ற செய்திகளை அறியவும் காத்திருப்போம்.

புதுக்குடியிருப்பு ஒரு சிறிய பட்டினம்தான். ஆயினும் முல்லைத்தீவு மாவட்டத்தில் அதிக சனத்தொகை கூடிய இடமும் அதுதான். 'புதிய குடியேற்றம்' என்பதுதான் புதுக்குடியிருப்பு என்பதன் அர்த்தம். நாமும் எம்மைப் போன்று பலரும் இங்கு புதிதாக குடியேறியிருந்தோம். பல்வேறு பாரம்பரிய கிராமங்களால் சூழப்பெற்ற இப்படினத்தில், விவசாயிகள், மீனவர்கள், மற்றும் பல்வேறு சாதிப் பிரிவினர், கத்தோலிக்கர், இந்துக்கள், உள்ளூர்வாசிகள்,

இடம்பெயர்ந்தோர் என பலவகைப்பட்ட மக்கள் வாழ்ந்து வந்தனர். இராணுவத் தாக்குதல்கள், இனவாத வன்முறைகள், அல்லது பலவந்தமான சிங்களக் குடியேற்றம் ஆகிய காரணத்தால் மட்டக்களப்பு, திருகோணமலை, கொக்கிளாய், கொக்குத்தொடுவாய் போன்ற இடங்களிலிருந்து வடக்குக் கரையோரமாக இடம்பெயர்ந்த மக்கள் இறுதியில் புதுக்குடியிருப்பில் குடியேறினர். நாம் புதுக்குடியிருப்பில் வசித்தபோது யாழ்ப்பாணத்திலிருந்து இடம்பெயர்ந்த மக்களையும் அங்கு சந்தித்தோம். நாயாறுக்கு அருகாமையிலிருக்கும் கொக்கிளாயி லிருந்து இடம்பெயர்ந்த ஒரு கூட்டுக் குடும்பம், எமக்கு அயலவர்களாக, தென்னஞ்சோலைக் காணியில் குடியிருந்தனர். சிங்கள இராணுவத்தின் அட்டூழியங்கள் காரணமாக, இக்குடும்பம் தமது சொந்தக் கிராமத்தை யும் வீட்டையும் கைவிட்டுவந்து இங்கு வசித்து வருகின்றார்கள். இப் கூட்டுக் குடும்பத்திலுள்ள ஆண்கள், தங்களது கடின உழைப்பினாலும் விடாமுயற்சியினாலும் இந்தக் காணியில் மூன்று குடிசை வீடுகள் அமைத்து, கஷ்டத்துடன் அன்றாட சீவியத்தை நடத்திக் கொண்டிருந்தார்கள். அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த குழந்தைகள் எப்பொழுதுமே குதூகலமாக இருப்பார்கள். எலும்பும் தோலுமாக மெலிந்து போயிருந்த அந்தக் குழந்தைகளின் கலகலப்பு எனக்கு ஆனந்தத்தைக் கொடுத்தது. உற்சாகமான களிப்பூட்டும் குரல்களால் "அன்ரி, அன்ரி" என்று வேலிக்குள்ளால் என்னை அழைப்பார்கள். "உங்களுக்கு என்ன வேண்டும்" என்று நான் கேட்பேன். "உங்களுடைய கோழிகளின் முட்டைகள் சிலவற்றை தருகிறீர்களா. எங்களுடைய கோழி அடை கிடக்கிறது. நீங்கள் முட்டைகளைத் தந்தால் அவற்றை அடை வைக்கலாம்" என்று குழந்தைகள் சொன்னார்கள். அவர்களுடைய அவசரத்தைப் பார்க்கப்போனால் நான் கொடுக்கப் போகும் முட்டைகளிலேயே அவர்களது வாழ்க்கை தங்கியிருப்பதுபோல தென்பட்டது. என்னிடம், பல்வேறு வித்தியாசமான இனத்தைச் சேர்ந்த கோழிகள் இருந்தன. அவை, அயல்வீட்டுக்கும் சென்று வருவதுண்டு. அந்த அழகான கோழி இனங்கள் குழந்தைகளின் ஆசையைக் கிளறியிருக்க வேண்டும். அவை போன்ற கோழி இனங்களை வளர்க்க அவர்கள் விரும்பியிருக்கலாம். என்னிடமிருந்த புதிய முட்டைகள் எல்லாவற்றையும் நான் அவர்களிடம் கொடுத்தபோது அவர்கள் அளவடைந்த மகிழ்ச்சியுற்றனர். ஒரு மாதம் கழித்து தங்கள் வீட்டில் பொரித்த கோழிக் குஞ்சுகளின் எண்ணிக்கை பற்றிச் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டனர். கோழி வளர்ப்பு அந்தக் குடும்பத்திற்கு சிறு வருமானத்தைக் கொடுத்ததுடன், சத்துணவு உண்ணும் வாய்ப்பையும் ஏற்படுத்தியது.





யாழ்ப்பாணத்திலிருந்து புலம்பெயர்ந்து வந்த மற்றுமொரு குடும்பத்தினர் எங்கள் வீட்டின் பின்பக்கத்திலிருந்த காணியில் வசித்து வந்தனர். தங்கள் குடும்பத்தின் நகைகளையும், பொருட்களையும் ஈடுவைத்து, அந்த தரவை நிலத்தில் சிறிய குடிசையை கட்டி வாழ்ந்து வந்தனர். தங்களது கௌரவத்தை இழந்துபோகாது, மரியாதையுடன் வாழவேண்டும் என்பதற்காக அந்தக் குடும்பத்தின் பெற்றோரும் வயது வந்த பிள்ளைகளும் படாதபாடுபட்டனர். தங்களுடைய ஏழ்மையை தங்களது நெருங்கிய நண்பர்களுக்கு மட்டுமே வெளிப்படுத்தி, அசல் யாழ்ப்பாணத்தவர்களுக்குரிய தற்பெருமையுடன் தனியாக ஒதுங்கி வாழ்ந்தனர். தாயும் மகளும், தங்களது சொற்ப வருவாய்க்கு ஏற்றவாறு விறகு பொறுக்கி, சிக்கனமாக, எளிமையான உணவு சமைத்து அமைதி யாக வாழ்ந்து வந்தனர். தமிழர்களுக்கே உரித்தான தராள மனப்பான்மையுடன் இத் தாயும் மகளும், எனக்கு அடிக்கடி, சர்க்கரைப் பொங்கல், வாழைப்பழம், மற்றும் ருசியான பலகாரங்களை அனுப்பி வைப்பார்கள். இந்தக் குடும்பம் விடுதலைப் புலிகளின் நெருக்கமான ஆதரவாளர்கள். ஒரு மகனும், ஒரு மகளும் ஏற்கனவே விடுதலைப் புலிகள் அமைப்பில் இணைந்து கொண்டார்கள். இன்னொரு மகள், தனது இருபது வயதின் ஆரம்பத்தில் கரும்புலிகள் பிரிவில் ஒரு உறுப்பினராக செயற்படுகிறார். தாயாரின் உருக்கமான வேண்டுகோளில் மனமுருகிய அவரது மகன் புலிகள் அமைப்பிலிருந்து விலகி மீண்டும் குடும்பத்தில் இணைந்துள்ளார். ஆனால் இரு பெண் பிள்ளைகள் புலிகள் அமைப்பில் அங்கத்தவர்களாக செயற்பட்டனர். இறுதியாக வறுமையின் கொடுமை தாங்கமுடியாது, இக் குடும்பம் அக்கரைப் பச்சையைத் தேடி வெளிநாடு செல்ல முடிவெடுத்தது. புதிய வாழ்க்கையைத் தொடங்குவதற்காக அவர்கள் இந்தியா பயணமானபோது அவர்கள் செல்லமாக வளர்த்த அழகான 'பொமனேரியன்' நாய்க் குட்டியை எனது பராமரிப்பில் விட்டுச் சென்றனர்.

எமது மற்றைய அயலவர் புதுக்குடியிருப்பில் காலம் காலமாக வாழ்ந்து வந்த குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். பல்வேறு வகைப்பட்ட சமூகப் பிரிவினர் இருந்தபோதும் புதுக்குடியிருப்பு சமூக அமைப்பில் இரண்டு மூன்று மூத்த குடும்பத்தினரே பூர்வீகக் குடியினராக இருந்தனர். பரந்த கூட்டுக் குடும்பங்களாக வாழ்ந்த இக் கமக்கார சமூகப் பிரிவினர் சொத்துடமை உள்ளவர்கள். சம்பிரதாயம் பேணும் இந்துக்களாக பண்டைய மரபுகளை தழுவி வாழ்ந்த இவர்கள், தமது சொந்த உறவினர்களுக்குள் திருமணம் செய்து கொள்வார்கள். இந்த மக்களின்

அன்றாட வாழ்க்கை, கோவில்களையும் சமயச் சடங்குகளையுமே சுற்றி வருகிறது. இருந்தபோதிலும், இக் குடும்பத்தினர் தங்களுடைய சமூகச் சடங்குகளுக்கு என்னை அடிக்கடி அழைத்து, தமது வாழ்வோட்டத்தில் எனக்கும் ஒரு சிறிய பங்கைத் தந்தனர். அண்மையிலுள்ள இந்து ஆலயத்தில் நிகழும் சமய வைபவங்களுக்காக அந்த வீட்டுக்கார அம்மா அடிக்கடி சமையல் செய்வார். அப்பொழுதெல்லாம் அவருடைய பத்து வயது மகன் தனது தாயார் கொடுத்த பொங்கல் பிரசாதத் தட்டுடன் எனது வீட்டு சமயலறை வாசலில் தரிசனம் கொடுப்பார். கமக்காரரான அந்த அம்மையாரின் கணவர் பாலாவுக்கு நன்கு தெரிந்தவர். விளைச்சல் காலத்தில், சாக்கு மூடைகள் நிறைய கச்சான், கடலைகளை பாலாவுக்கு அனுப்பி வைப்பார். சிவா, சக்தி என்ற பெயரில் இரு மயில்களை நாம் வளர்த்து வந்தோம். பாலாவின் அலுவலகத்தைச் சுற்றி ஏராளமான அணில்கள் மகிழ்ச்சியுடன் விளையாடும். இந்த அணில்களுக்கும், மயில்களுக்கும் தினமும் காலையில் கச்சான் விதைகளை ஊட்டுவதில் பாலாவுக்கு ஒரு இன்பம். 'நாம் 'பரா' என்று அன்புடன் அழைக்கும் திரு பரராஜசிங்கத்திற்கு இந்தக் குடும்பத்தினர் நெருங்கிய உறவினர். எமது நெருங்கிய நண்பரும், தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்பின் நீதித்துறைப் பொறுப்பாளருமான பரா, எமது வீட்டுக் அண்மையில்தான் வசித்து வந்தார்.

தென்னை மரங்களும், மர முந்திரிகையும் சோலையாக வளர்ந்து நிற்கும் நான்கு ஏக்கர் காணியில், ஒரு ரம்மியமான சூழலில், எமது புதுக்குடியிருப்பு வீடு அமைந்திருந்தது. நாம் அன்புடன் வளர்த்த பல்வேறு செல்லப் பிராணிகளும், பறவைகளும், ஊர்வனவும் எங்களைச் சூழ்ந்து வாழ்ந்தன. கொடிய விசப் பாம்புகளைத் தவிர எல்லாவிதமான பிராணிகளுக்கும், பறவைகளுக்கும் எமது வீட்டு வளவில் சுதந்திரமும் பாதுகாப்பும் வழங்கப்பட்டிருந்தது. எமது வீட்டு சூழலில் தமக்கு எவ்வித தீங்கும் ஏற்படாது என்பதை இந்த உயிரினங்களும் உணர்ந்திருக்கலாம். அணில்கள் ஆனந்தமாக கூடி வாழ்ந்து பெருகின. மயில்கள் ஆடிக் கழித்துத் திரிந்தன. பூனைகளும், கட்டாக்காலி நாய்களும் கூட வீட்டுக்கு வந்து சென்றன. சோலையாக நின்ற மரங்களில், பறவைகள் கூடுகள் அமைத்து குஞ்சுகள் பொரித்தன. எமது வீட்டுச் சூழல் உயிரினங்களின் காப்பகமாக விளங்கியது. வீட்டு முற்றத்தில் விசாலித்து நின்ற மாமரத்தின் நிழலில் கீழ், வட்ட வடிவில் அழகான ஒரு கொட்டகை. அதனைச் சூழ தென்னைமரச் சோலை. அதுதான் பாலாவின் செயலகம். இந்த அழகான அமைதியான "ஆசிரமத்தில்" தான் எம்மைத் தேடிவரும் விருந்தினர்களை நாம் வரவேற்று உரையாடுவதுண்டு. பல வகையான சமூக உறவுகளின் மையமாக எமது வீடு அமையப் பெற்றது எனலாம்.





எமது வீட்டின் பாதுகாப்பு ஏற்பாடுகள் மிகவும் தளர்த்தப்பட்டு இருந்ததால், விடுதலைப் புலிகள் அமைப்பின் பல்வேறு பிரிவுகளையும் சேர்ந்த போராளிகளும் பொதுமக்களும் எமது இருப்பிடம் வந்து செல்வார்கள். பல்வேறு அலுவல்களுடனும், பிரச்சினைகளுடனும் அவர்கள் வருவார்கள். தலைவர் பிரபாகரனுக்கும், தமக்கும் மத்தியில், பாலா ஒரு உறவுப் பாலமாக இருக்கிறார் எனப் போராளிகளும் பொதுமக்களும் கருதினார்கள். பல்வேறு பிரச்சனைகள், மனக்குறைகள், கோரிக்கைக ளாக சொல்லப்படுபவைகளை பாலா பொறுமையுடன் செவிமடுப்பார். தம்மால் தீர்வுகாண முடியாத பிரச்சனைகளை திரு. பிரபாகரனிடம் எடுத்து விளக்கி, தலைவர் மூலமாக அவற்றிற்கு தீர்வு காண்பார்.

## எனது பார்வையில் திரு. பிரபாகரன்

எமது வீட்டிற்கு திரு. பிரபாகரன் அடிக்கடி வந்து செல்வார். உத்தியோக ரீதியாகவும், தனிப்பட்ட முறையிலும் அவரது விஜயம் அமையும். அவர் தனியே தனது மெய்ப் பார்தகாவலர்களுடன் வருவார். மற்றும் சமயங்களில், தனது குடும்பத்தினருடன் வருவார். அப்பொழுது 1998ம் ஆண்டின் மத்திய காலம். தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் வரலாற்று நாயகனான திரு. வேலுப்பிள்ளை பிரபாகரனை அறிந்து பழகி, சேர்ந்து வாழ்ந்து இருபது ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டது. இந்த நீண்ட காலகட்டத்தில், தனிப்பட்ட முறையிலும், அரசியல் ரீதியாகவும் கொண்டிருந்த உறவும், அதனால் அவருடன் சேர்ந்து பகிர்ந்த ஆழமான அனுபவங்களும் அவரைப் புரிந்து கொள்ள ஏதுவாக அமைந்தன. அதாவது, இலங்கைத் தீவின் அரசியற் தலைவிதியை நிர்ணயிக்கும் வல்லாற்றலுடைய ஒரு மாமனிதனின் மிகவும் சிக்கலான ஆளுமையை புரியக் கூடியதாக இருந்தது. இந்த இருபது ஆண்டு கால உறவு, தமிழரின் விடுதலைப் போராட்டத்தில் ஒரு சகாப்தம் எனச் சொல்லலாம். இந்த சகாப்தத்தில், அவரது அரசியல் வாழ்விலும், தனிப்பட்ட வாழ்விலும் ஏற்பட்ட இன்ப துன்பங்களிலும், சரிவு நிமிர்வுகளிலும், இடர்களை மீண்ட வெற்றிகளிலும் நாம் ஒன்றாகவே பயணித்தோம். இந்த நீண்ட பயணத்தின்போது, ஒரு இளம் தீவிரவாதியின் விடுதலை இலட்சியங்கள், முன்னேற்றப் பாதையில் படிப்படியாக மெய்வடிவம் பெற்றுவந்துள்ளதை நாம் காணக்கூடியதாக இருந்தது. தனது மக்களின் விடுதலைப் பாதை யில் வெற்றிநடை போட்டுச் செல்லும் அதே வேளை, தேசிய சுதந்திரத்தின் உயிர்ச் சின்னமாகவும் திரு. பிரபாகரன் உருவகம்

பெற்றார். அத்தோடு, ஒடுக்கப்படும் அவரது மக்கள் மத்தியில் போற்றிப் பூசிக்கப்படும் புனிதராகவும் அவர் வளர்ச்சி பெற்றார்.

தனது சொந்த பாதுகாப்பு காரணத்திற்காக திரு. பிரபாகரன் ஒதுங்கி வாழ நிர்ப்பந்திக்கப்பட்டார். இதனைச் சிலர் தப்பாகக் கருதி அவரைத் தனித்து வாழும் துறவியாக சித்தரிக்க முயன்றனர். தொடரும் போர்ச்சூழல் புறநிலையால் ஒதுங்கி வாழ நேர்ந்ததாலும் ஊடகவியலாளர்களை தவிர்த்து வந்ததாலும் அவரை உலகம் புரிந்து கொள்ளவில்லை. அதனால் இன்றைய நவயுகத்தில் அவர் மிகவும் புரியப்படாத மனிதராக, அச்சத்திற்குரிய கெரில்லாத் தலைவராகவும் கருதப்பட்டு வருகின்றார். ஆயினும் அவரது அலாதியான இராணுவ வெற்றிகள் அவருக்கு பெயரையும் புகழையும் பெற்றுக் கொடுத்தன. போர்க் கலையில் பிரபாகரன் காட்டிவரும் திறனாற்றல் உலக இராணுவ நிபுணர்களையே திகைப்பூட்டி வருகிறது. ஒருபுறம் தனது மக்களின் ஆழமான அன்பையும், மறுபுறம் உலகத்தாரின் வசைப் பெயரையும் பெற்றுள்ள இந்த உயரம் குறைந்த, கட்டமைப்பான, தூய்மையான மனிதனுக்கு இவற்றைத் தேடிக் கொடுத்தது என்ன? சொந்த மக்கள் மத்தியில் ஒரு பார்வையும், உலகத்தார் மத்தியில் இன்னொரு பார்வையுமாக இரு முரண்பட்ட கண்ணோட்டங்கள் ஏற்பட்டதன் காரணம் என்ன?

1954ம் ஆண்டு நவம்பர் மாதம் 26ம் திகதி, யாழ் குடாநாட்டின் கரையோரக் கிராமமாகிய வல்வெட்டித்துறையில் பிறந்த திரு. பிரபாகரன் தனது 16 வயதுப் பிராயத்தில் ஆயுதம் ஏந்தி, அரசியற் போராட்டத்தில் குதித்தார். இன்றைய மொழியில் சொல்லப்போனால் அவர் ஒரு ‘குழந்தைப்’ போர்வீரனாகவே களத்தில் இறங்கினார். சிறுபிராயத்திலிருந்தே அவர்சாதாரண வாழ்க்கையை வாழவில்லை. அவரது இலட்சியப்பற்று தீவிரமாகியதை அடுத்து, தம்மோடு ஒத்த கருத்துள்ள தீவிரவாத இளைஞர்களை அணிதிரட்டி ஒரு புரட்சிகர அமைப்பை உருவாக்கினார். இது ஒரு தலைமறைவு கெரில்லா இயக்கமாக உருவகம் பெற்று ஆயுதப் போராட்டத்தை ஆரம்பித்தது. பிரபாகரனது துணிச்சலான ஆயுதப் போராட்ட நடவடிக்கைகள் அரச அதிகாரிகளின் கவனத்தை ஈர்த்தது. இதன் விளைவாக அவர் ஒரு ‘தேடப்படும் நபராக’ மாற்றப்பட்டு யாழ்ப்பாணத்தில் தலைமறைவு வாழ்க்கையைத் தழுவ வேண்டி நேர்ந்தது. பலம்மிக்க சிங்கள அரசுக்கு பிரபாகரன் விடுத்த துணிகரமான சவால் அவரைத் தமிழ் மக்கள் மத்தியில் மரியாதைக்கு உரியவராகப் பிரபல்யப்படுத்தியது. காலப் போக்கில், மக்களிடையே ஒரு மாவீரனாக, சரித்திர நாயகனாக அவர் போற்றப்பட்டார். மிகவும் நுட்பமாக, புத்திகூர்மையுடன் அரசுக்கு சவால்





விடுத்து அவர் ஈட்டிய சாதனைகளை தமது வெற்றிகளாகவே கருதி தமிழ் மக்கள் பெருமைகொண்டனர். தமது அடையாளத்தையும், தேசிய கௌரவத்தையும் மேம்பாடு செய்யும் சாதனைகளாகவும் இதனை மக்கள் கருதினர். அரச அடக்குமுறை அதிகரித்துச் சென்றபோது பிரபா-கரனின் ஆயுதப் போராட்டமும் தொடர்ச்சியான வெற்றிகளையீட்டி முன்னேறியது. இந்த வெற்றிகரமான விடுதலைப் போரின் விளைவாக திரு. பிரபாகரன் தமிழீழ மக்களின் தேசியத் தலைவன் என்ற உன்னத இடத்தை தனதாக்கிக் கொண்டார். தமிழீழ மக்களின் தேசிய சுதந்திரம் அவரது இலட்சிய வேட்கையாக, தணியாத ஆன்மீக தாகமாக உருப்பெற்றது. விடுதலைப் போராட்டமே அவரது வாழ்க்கையாகவும், அவரது வாழ்க்கையே விடுதலைப் போராட்டமாகவும் மாறியது.

ஒரு தத்துவ ஆசிரியராகவோ, அல்லது சித்தாந்தவாதியாகவோ திரு. பிரபாகரன் என்றுமே பாசாங்கு செய்ததில்லை. அவரது அரசியல் இலட்சியத்தினை ஆழமாகப் பார்த்தால் அவரை ஒரு நாட்டுப் பற்றுடைய தேசியவாதியாகவே கருதமுடியும். சில சிங்கள அரசியல் விமர்சகர்கள் வாதிடுவதுபோல பிரபாகரனின் தேசியவாதம் தமிழ் இனவெறியைப் பிரதி பலிக்கவில்லை. தமிழ் மக்களை இனரீதியாக அழித்தொழிக்க வேண்டுமென்ற சிங்கள இனவாத ஒடுக்குமுறையை முறியடிக்க வேண்டுமென்பதில் திரு. பிரபாகரன் திடசங்கற்பம் பூண்டு நிற்கின்றார். இந்த திடசங்கற்பத்திலிருந்து பிறந்ததுதான் பிரபாகரனின் தமிழ்த் தேசியப் பற்று. வேறு வார்த்தைகளில் சொல்வதானால், சிங்கள அரசின் இனவெறிக்கொள்கைதான் பிரபாகரனை ஒரு தீவிர நாட்டுப்பற்றாளனாக மாற்றியது எனலாம். தமிழ் மக்கள் மீது கொண்டுள்ள ஆழமான பாசமும், அவர்களது பண்பாடு மீதும், குறிப்பாக தமிழ் மொழிமீது கொண்டுள்ள தீராத காதலும் பிரபாகரனின் விடுதலை வேட்கைக்கு ஆதாரமாக அமைகின்றது. அரசியற் சித்தாந்தங்கள், கோட்பாடுகள் பற்றி பிரபாகரன் பெரிதும் அலட்டிக் கொள்வதில்லை. அவரைப் பொறுத்தவரை தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் பிரச்சினை சிக்கல்கள் நிறைந்த பூடகமான விடயம் அல்ல. தமிழரின் பிரச்சினையை அவர் மிகவும் தெளி வானதாகவே நோக்குகின்றார். அத்துடன் தமிழரின் போராட்டத்தையும் நியாயமானதாகவே அவர் கருதுகிறார். தமிழீழம் என்கிற தாயக மண்ணில்தான் பிரபாகரனின் ஆழ்மனம் ஆழவேரோடி நிற்கிறது. தமிழ் மக்கள் தமது வரலாற்று ரீதியிலான தாயக மண்ணில் சமாதானமாக, கௌரவமாக, ஒத்திசைவாக வாழ்வதற்கு உரித்தானவர்கள் என்பதில் பிரபாகரனுக்கு அசைக்க முடியாத நம்பிக்கையுண்டு. பிரபாகரனின் தமிழீழக் கொள்கையில் பிரிவினைவாதமோ விரிவாக்க நோக்கமோ இருக்கவில்லை. தமிழீழம் தமிழீழ மக்களுக்கே சொந்தமானது; தமிழீழ

மாநிலம் மீது தமிழீழ மக்களுக்கே இறையாட்சி உரிமையுண்டு என்பது பிரபாகரனின் நிலைப்பாடு. சிங்கள மக்களது பாரம்பரிய பிரதேசங்களை ஆக்கிரமிப்பதோ, அபகரிப்பதோ பிரபாகரனின் நோக்கமல்ல. அவரது சிந்தனையிலும் செயற்பாட்டிலும் இத்தகைய நோக்கத்தைக் காண முடியாது. சில இந்திய அரசியல் விமர்சகர்கள் சொல்வதுபோன்று தமிழீழத்தை அகன்ற ஈழமாக விரிவாக்கம் செய்யும் கனவு கூட அவர் கண்டதில்லை.

தமிழ் மக்களின் ஆயுதப் போராட்டத்தை நெறிப்படுத்துவதில் பிரபாகரன் எப்பொழுதுமே தனித்துவத்தையும், தனிவழியையும் கடைப்பிடித்து வந்திருக்கிறார். உலக விடுதலைப் போராட்டங்களின் வரலாறு பற்றியும், மற்றைய நாடுகளின் சுதந்திர இயக்கங்கள் பற்றியும் நன்கு அறிந்தபோதும் அந்நிய போராட்ட வடிவங்களை கண்மூடித்தனமாகப் பின்பற்ற பிரபாகரன் விரும்பியதில்லை. எந்த விடுதலைப் போராட்டமும் அந்தந்த வரலாற்றுச் சூழலுக்கும், யதார்த்த புறநிலைகளுக்கும் ஏதுவானதாக வளர்ச்சிநிலை காணவேண்டும் என்பதே பிரபாகரனின் நிலைப்பாடு. தனது மக்களின் போராட்ட புறநிலைகளுக்கும் தேவைகளுக்கும் இசைவாகவே அவர் தனது போர் முறைகளை நெறிப்படுத்தினார். அவரது சில போர்த் தந்திரோ பாயங்களும் உத்திகளும் பலத்த கண்டனங்களுக்கு, குறிப்பாக சிங்கள அரசியல் இராணுவ ஆய்வாளர்களின் கண்டனங்களுக்கு ஆளாவதுண்டு. மிகவும் பலம்வாய்ந்த, சக்திமிக்க, ஈவிரக்கமற்ற எதிரியிடமிருந்து மிகவும் பலவீனமான, சிறிய தேசிய இன மக்களைப் பாதுகாப்பதற்கு ஈவிரக்கமற்ற உத்திகளை கையாள வேண்டியது அவசியம் என தனது போர் நடவடிக்கைகளுக்கு நியாயம் கூறுவார் பிரபாகரன்.

பிரபாகரன் ஒரு கரும வீரர். செயலில் நம்பிக்கை உடையவர். மனித செயற்பாடுதான் வரலாற்றை இயக்கும் உந்து சக்தி என்பதில் அவருக்கு அசையாத நம்பிக்கை உண்டு. பூடகமான தத்துவார்த்த கோட்பாடுகள் மூலம் பிரச்சினைகளை அலசிப் பார்க்காமல், ஆக்கமான செயற்பாட்டில் நம்பிக்கை கொண்டிருந்தது காரணமாகவே அவர் தனது விடுதலை இயக்கத்தை முன்னேற்றப் பாதையில் முன் நடத்திச் சென்றார். தமிழ் அரசியல்வாதிகளின் வார்த்தை ஜாலங்களில் ஏமாந்து விரக்தியடைந்த புரட்சிகர இளைஞர் சமுதாயத்தை பிரபாகரனின் செயற்திறன்மிக்க போராட்டப் பாதை வெகுவாகக் கவர்ந்து இழுத்தது. இதன் காரணமாக, எத்தனையோ இடர்களுக்கும் மத்தியில், இளம் சமூகத்தை அணிதிரட்டி, சிங்கள அரச யந்திரத்தை எதிர்த்துப் போராடும் வலுவுடைய ஒரு தேசிய விடுதலை இராணுவத்தை அவரால் கட்டியெழுப்ப முடிந்தது.





தனது போராட்ட இலட்சியத்தை பிரபாரகன் இன்னும் அடைய வில்லை என்பது உண்மைதான். ஆயினும், பிரபாகரனது மதிநுட்பமான போர் திட்டங்களும், அவற்றைத் திறம்பட நிறைவு செய்யும் அபாரமான ஆற்றலும் காரணமாகவே, இருபத்தைந்து ஆண்டு காலத்திற்கு மேலாக அவர் கட்டிவளர்த்த தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்பு இன்று தலை நிமிர்ந்து நிற்கிறது. தமிழீழ மக்களும் ஒரு தேசிய இனக் கட்டமைப்போடு நிலைத்து நிற்கின்றனர். பிரபாகரன் இல்லாது போனால் விடுதலைப் புலிகள் அமைப்பும், தமிழ்த் தேசிய இனமும் பல வருடங்களுக்கு முன்னரே அழிக்கப்பட்டிருக்கும். புலிகளுடனான எனது வாழ்பனுபவத்தி லிருந்தே நான் இதைக் கூறுகின்றேன். தமிழ் மக்களும் நிச்சயமாக இக் கருத்தையே கொண்டுள்ளனர்.

தமிழீழ மக்களின் அரசியல் இலட்சியங்களை அடைவதற்கு ஆயுதப் போராட்டத்தின் தேவையையும் அவசியத்தையும் முதன்மைப்படுத்தி திரு. பிரபாகரன் செயற்பட்டபோது, அந்த ஆயுதப் போராட்டத்தின் அரசியற் பரிமாணத்தை மேலோங்கச் செய்வதற்காக பாலா உழைத்தார். ஒருமுகச் சிந்தனையுடைய இவ்விரு தனிப்பட்ட மனிதர்களது உறவு மிகவும் ஆபூர்வமானது. வரலாற்று இயக்கத்தின் ஒரு முக்கிய கால கட்டத்தில், வெவ்வேறு ஆளுமையுடைய இரு மனிதர்கள் ஒன்றாக இணைந்து முக்கிய பங்குகளை வகித்துச் செயற்படும் அபூர்வமான உறவுகளில் இதுவும் ஒன்று.

திரு பிரபாகரனதும் தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்பினதும் ஆலோசகராகவும் தத்துவாசிரியராகவும் செயற்படுவதே தனது பங்கு என பாலா எப்பொழுதுமே கருதிக் கொள்வார். பாலாவுக்கு அதிகார அபிலா சைகள் எதுவும் கிடையாது. எழுதுவது, கற்பிப்பது, ஆலோசனை வழங்குவது போன்றவற்றுடன் தனது பங்களிப்பை அவர் வரையறுத்துக் கொள்வார். அத்தோடு உறுதி தளராத இலட்சியப் பற்றுள்ளவர். இவை காரணமாகவே திரு. பிரபாகரனின் மிகவும் நம்பிக்கைக்குரிய ஆலோசகராக அவரால் பணிபுரிய முடிந்தது. உண்மை பேசும் நேர்மையான பண்பு பாலாவிடம் உண்டு. இப் பண்பியல்பு காரணமாகவே திரு. பிரபாகரன் பாலாவிடம் அன்பும் மதிப்பும் வைத்திருக்கிறார். விடுதலைப் போராட்டத்தினதும் திரு. பிரபாகரனதும் நலனைக் கருத்திற்கொண்டு, எப்பொழுதுமே எவ்விடயத்திலும் சரியான, உண்மை வழுவாத ஆலோசனை வழங்கவேண்டும் என்பதே பாலாவின் குறிக்கோள். தமது ஆலோசனைகளை பிரபாகரன் ஏற்றுக் கொள்வாரா அல்லது தாம் மனம் திறந்து நேர்மையுடன் கூறுவது அவருக்கு வெறுப்பூட்டுமோ என்பது பற்றியெல்லாம் பாலா கவலைப்படுவதில்லை.

திரு. பிரபாகரனின் ஆலோசகர் என்ற ரீதியில், எவ்வளவு கசப்பாக இருந்தபோதும் உண்மையை எடுத்துச் சொல்வதுதான் தனது கடமை யென பாலா என்னிடம் அடிக்கடி சொல்லியிருக்கிறார்.

திரு. பிரபாகரனின் தனிமனித இயல்புகளைப் பார்க்கும்போது தான் அவரை ஆழமாக புரிந்து கொள்ள முடியும். வெளியுலகம் அவரை சித்தரிப்பதுபோல் அல்லாமல், அவர் ஒரு அன்புள்ளம் படைத்த மனிதர். மற்றவர்களுடன் எளிதில் பழகுவார். கூடிப் பழகி, உரையாடி மகிழ்கின்ற இயல்பு அவரது தனித்துவப் பண்பு. அவர் பல்வேறு விவகாரங்களில் ஆர்வமும் அக்கறையும் உள்ளவர். சில விடயங்களில் தீவிரமான நிலைப்பாடும் உடையவர். ஒரு சில விடயங்களில் எனக்கு அவருடன் கருத்து வேறுபாடு உண்டு. விஞ்ஞான அறிவியற் துறையில் அவருக்கு அலாதியான ஆர்வமுண்டு. விஞ்ஞான, தொழில்நுட்ப அறிவை வளர்த்துக்கொள்ள வேண்டுமென அவர் அடிக்கடி போராளிகளை ஊக்குவிப்பதுண்டு. தமிழ்க் கலாச்சாரத்திலும் அவருக்கு ஆழமான பற்றுண்டு. போராட்ட வாழ்வு காலாச்சார வடிவங்களில் வெளிப்பாடு காணவேண்டும் என விரும்பும் அவர், இயக்கத்திலும் சமூக மட்டத்திலும் அதனை வலியுறுத்துவார். இராணுவ பயிற்சி முகாம்களில் கலை நிகழ்ச்சிகளுக்கு முக்கிய இடம் கொடுப்பார். இந் நிகழ்வுகளில் போராளிகள் நேரடியாகப் பங்களிக்க வேண்டும் என்பது அவரது அவா. விடுதலை விழுமியம் சார்ந்த கலை, இலக்கியப் படைப்புகள் தமிழீழத்தில் வளர்ச்சிகாண வேண்டும் என்பதில் ஆர்வம் உடையவர். இத்தகைய படைப்பு ஆக்கங்களை அவர் ஊக்குவித்தும் வருகிறார்.

சுவையான உணவு வகைகளை உண்பதிலும் அவற்றைத் தயாரிப்பதிலும் அவருக்கு ஒரு தனி விருப்பு. இதனால் அவர் விசேடமான சுவைத்திறனை வளர்த்துக் கொண்டார். சுவைத்து உண்பது வாழ்க்கை யின் அடிப்படை இன்பங்களில் ஒன்று என்பதும், சமைப்பது ஒரு கலை என்பதும் அவரது கருத்து. ஒருசில மரக்கறி வகைகளுடன் மட்டுப் படுத்தப்பட்ட எனது சுவையின்பத்தை அவரால் புரிந்து கொள்ள முடிய வில்லை. எனினும் அவரது இருப்பிடத்திற்கு எம்மை விருந்திற்காக அழைக்கும் பொழுதெல்லாம் மிகவும் சுவையான மரக்கறி உணவு வகை களை எனக்கென்று விசேடமாக ஏற்பாடு செய்வார். அவரது இருப்பிடத்தி லிருந்து அடிக்கடி பாலாவுக்கு சுவையான உணவு வகைகள் தயாரித்து அனுப்பி வைப்பார். அப்பொழுது எனக்கும் மரக்கறி உணவு வரும். இப்படியான அவரது கவனிப்பால் எனது சமையல் சுமை குறைவதுண்டு.

போர்க்கலையில் திரு. பிரபாகரன் அபாரமான ஆற்றல் படைத்தவர் என்பது அனைவருக்கும் தெரிந்த விடயம். ஆயுதப் போராட்ட





வாழ்வில் அவரை ஆழமாக ஈர்ப்பது வெறும் ஆயுதங்களோ, சீருடைகளோ, இராணுவத் தொழில் நுட்பங்களோ அல்ல. சீரான வாழ்க்கையை நெறிப்படுத்தும் சில போர்ப் பண்புகளை அவர் பெரிதும் மதிக்கிறார் என்பதே எனது கருத்து. அவரது சமூக தத்துவார்த்தப் பார்வையிலும், இந்தப் பண்புகள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. இந்தப் போர்ப் பண்புகளில் முக்கியமானது ஒழுக்கம். திரு. பிரபாகரனது பார்வையில், வாழ்க்கை நெறிக்கு மையமான கோட்பாடு ஒழுக்கம்தான். ஒழுக்கம், கட்டுப்பாடு போன்ற பண்புதான் அவரது தனிப்பட்ட வாழ்விலும், சமூகப் பார்வையிலும், இராணுவ - அரசியல் ரீதியான அவரது தலைமைத்துவத்திலும் மேலாண்மை செலுத்தி நிற்கின்றது.

தனது சொந்த வாழ்க்கையின் சகல பரிமாணங்களிலும் பிரபா கரன் ஒழுக்கமும் கட்டுப்பாடும் நிறைந்தவராக வாழ்ந்து வருகிறார். அவரது போராட்ட வாழ்வை ஆரம்பித்ததிலிருந்து இன்றுவரை அவர் மீது ஒழுங்கீனம் பற்றியோ ஏதாவது அவதூறு பற்றியோ சிறிய சிலு சிலுப்புக் கூட ஏற்பட்டது கிடையாது. பிரபாகரன் ஒருபொழுதும் புகைத்தது கிடையாது. மதுபானம் அருந்தியதும் கிடையாது. மற்றவர்களிடமும் இப்பழக்கத்தை அவர் விரும்பவில்லை. விடுதலைப் புலிகள் அமைப்பில் புகைபிடிக்கும் பழக்கம் கொண்ட ஒருவரைப் பிரபாகரன் சகித்துக் கொண்டார் என்றால், அவர் பாலாவாக மட்டுமே இருப்பார். பாலாவின் வயதும் அவர் மீது வைத்துள்ள தனிப்பட்ட மரியாதையுமே இதற்கு காரணமாகும். எமது வீட்டுக்கு வரும்பொழுதெல்லாம் உடல்நலத்தைக் கெடுக்கும் இந்தத் துர்ப்பழக்கத்தை பிரபாகரன் கேலியும் கிண்டலும் செய்வார். பாலாவிடமிருந்து வரும் சிகரெட் நெடி பிரபாகரனுக்குப் பிடிப்பதில்லை. இதனால் பிரபாகரன் முன்னிலையில் சிகரெட் பிடிப்பதை பாலாவும் நிறுத்திக் கொண்டார்.

மனிதர்களிடம் வீரத்தையும் துணிவையும் போற்றுதற்குரிய பண்பாக பிரபாகரன் மதித்தார். தனது போராளிகளிடம் மட்டுமன்றி, பொதுமக்களிடமிருந்தும் வீர உணர்வு வெளிப்பாடுகண்டால் அதனை அவர் போற்றிக் கௌரவிப்பார். வீரம் என்பது அவரது ஆளுமையில் ஆழப் பதிந்திருக்கும் ஒரு பண்பு. போராட்ட வாழ்வில் எந்தப் பெரிய சக்தியாக இருந்தாலும், எதைக் கண்டும் அஞ்சாத, கலங்காத குணாம்சம் பிரபா கரனிடம் ஊறிப்போயிருக்கிறது. எந்த ஒரு விடயத்திலும், எந்தவொரு இலட்சியத்திலும் மனதை ஆழமாகப் பதிய வைத்து, அக்கறையுடன் செயற்பட்டால் எதையும் சாதிக்க முடியும் என்பதில் பிரபாகரனிடம் அசைக்கமுடியாத உறுதி இருக்கிறது. துணிந்தவனுக்கு வெற்றி நிச்சயம் என்பது பிரபாகரன் அடிக்கடி கூறும் தாரக மந்திரம்.

“நீங்கள் பிரபாகரனிடம் கண்டுவியந்த குணாம்சங்களில் முக்கியமானது எது” என்று நான் பாலாவிடம் கேட்டேன். “இன்னல்களும் இடர்களும் எழுந்த நெருக்கடியான காலகட்டங்களில் தளராத தன்நம்பிக்கையுடன் செயலாற்றுவதுதான் பிரபாகரனின் ஆளுமையில் நான் கண்டு வியந்த அபூர்வமான குணாம்சம்” என்று பாலா சொன்னார். தனது விடுதலை இலட்சியத்திற்காக அவர் செயற்படும்போது அவரிடம் காணப்படும் உறுதியான, தீர்க்கமான, தளராத தன்நம்பிக்கையை பல தடவைகள் பாலா அவதானித்திருக்கிறார். தர்மத்தில் நம்பிக்கை கொண்டவர் திரு. பிரபாகரன். தனது மக்களின் போராட்ட இலட்சியம் சரியானது, நீதியானது, நியாயமானது. எனவே போராட்டத்தில் இறுதி வெற்றி நிச்சயம் என்பது பிரபாகரனின் அடிமனதில் ஆழவேரூன்றிய நம்பிக்கை என்பது பாலா தரும் விளக்கம்.

ஒரு அரசியல் தலைவனாகவும், எல்லோருடனும் அன்பாகவும் பண்பாகவும் பழகிவரும் பிரபாகரன் ஒரு தலைசிறந்த குடும்பத் தலைவருமாவார். தனது வாழ்க்கையில் ஒவ்வொரு நாளும், இருபத்திநான்கு மணிநேரமும் கடமையில் ஈடுபட்டிருந்தபோதும், போராட்டத்தின் பெரும்பொறுப்புகளுக்கும், கணவன், தந்தை என்ற நிலையில் தனது குடும்பக் கடப்பாடுகளுக்கும் மத்தியில் ஒரு ஒத்திசைவான சமநிலையைப் பேணி அவர் செயற்பட்டு வருகின்றார். இந்த அபூர்வமான உறவில், பிரபாகரனின் மனைவியான மதிவதனி அதியுயர்ந்த தியாகத்தைச் செய்திருக்கிறார் என்றுதான் சொல்லவேண்டும். தாம்பத்திய வாழ்வில் கணவருடன் எந்த அளவிற்கு ஒன்றித்து வாழ அவர் விரும்பினாரோ அந்த அளவுக்கு வாழ்க்கையை நடத்த நேரமும் வாய்ப்புகளும் அவருக்குக் கிட்டுவதில்லை. பிள்ளைகளைப் பேணிப் பராமரிக்கும் பொறுப்பில் அவர் எப்பொழுதுமே கண்ணும் கருத்துமாக இருப்பதால் அவரது செல்வாக்குத்தான் பிள்ளைகள் மீது படிமானமாக இருக்கிறது. பிரபாகரனது குடும்பத்தின் வாழ்க்கையை சாதாரண வாழ்க்கையாக கருதிவிட முடியாது. பிரபாகரனது மனைவி, பிள்ளைகள் என்பதால் அவர்களுக்கு தனித்துவமான சமூக அந்தஸ்து இருக்கிறது. இந்த சமூக தகைமையிலிருந்துதான் அவர்களது வாழ்க்கை முறையையும் உறவு முறையையும் ஆய்வுசெய்யவேண்டும். பெற்றோர் என்ற முறையில் பிள்ளைகளின் பாதுகாப்பு, அவர்களது எதிர்கால வாழ்க்கை பற்றிய கவலை பிரபாகரனுக்கும், அவரது துணைவியாருக்கும் இருக்கத்தான் செய்கிறது. யாழ்ப்பாண பெற்றோரின் அபிலாசைகளுக்கு ஏதுவான முறையில், பிரபாகரனும் மதியும் தமது பிள்ளைகளை கல்வி கற்கையில் ஊக்கப்படுத்திவருகின்றனர். கல்வியறிவை பிள்ளைகளிடம் விருத்தி





செய்யவேண்டும் என்பதில் மதிக்கு ஆழமான அவா இருப்பதால், தனது பிள்ளைகளுக்கு, வீட்டில், தனியாக பலமணிநேரமாக அவர் பாடம் சொல்லிக் கொடுப்பார்.

பிரபாகரன் குடும்பப் பற்றுள்ளவர். அற வாழ்வும், அவரது வாழ்க்கையின் அடிநாதமாக இருக்கிறது. பிரபாகரனுக்கு ‘கடமை ஓய்வு’ கிடைக்கும் சந்தர்ப்பங்களில் தனது துணைவியாரையும் மூன்று பிள்ளைகளையும் அழைத்துக் கொண்டு எங்கள் வீட்டுக்கு வருவார். 1985ம் ஆண்டு பிறந்த அவரது மூத்த மகனின் பெயர் சார்ள்ஸ். சார்ள்ஸைவிட ஒரு வயது இளமையான மகள் துவாரகா. 1996ம் ஆண்டு எதிர்பாராத அதிசயமாக குடும்பத்திற்கு வந்து சேர்ந்த குழந்தை பாலச்சந்திரன். முதற் குழந்தையின் பிரசவத்தில் மதிக்கு நான் உதவி செய்தபோது, உரிச்சுப் படைச்சு தோற்றத்தில் மட்டுமன்றி குணாம்சத்திலும் தகப்பனைப் போலவே குழந்தை வளர்ந்துவருமென நான் நினைக்கவில்லை. ஒரே பெண்குழந்தையான துவாரகா படிப்பில் ஆழமான அக்கறையும் பொறுப்புணர்வும் உடையவர். பிரபாகரனின் கடைக்குட்டி பாலச்சந்திரன் குடும்பத்தில் எல்லோருக்கும் செல்லக் குட்டி. அச்சு வார்த்ததுபோல பிரபாகரனின் மறுதோற்றம். நான் வன்னியை விட்டு புறப்பட்ட வேளையில் குழந்தை பாலச்சந்திரன் குறிப்பிட்ட வளர்ச்சி பெற்றிருக்கவில்லை. அதனால் அவரது ஆளுமைபற்றி அதிகம் என்னால் சொல்ல முடியாது.

## புலிகளின் திருமண வைபவங்கள்

விடுதலைப் புலிகள் அமைப்பின் திருமண வைபவங்களின்போதும், மற்றும் இந்த அமைப்பின் பல்வேறு பிரிவுகளாலும் நடத்தப்படும் சமூக நிகழ்வுகளின்போதும் திரு. பிரபாகரனையும் அவரது துணைவியான மதியையும் நாம் அடிக்கடி சந்திப்பதுண்டு. இந் நிகழ்வுகளில் பங்குகொள்வதே நாம் கழித்த மகிழ்ச்சிகரமான வேளைகள் எனலாம். ஏனென்றால் இந்நிகழ்வுகளின் போது பல மாதங்களாக காணமுடியாதிருந்த களத் தளபதிகளையும், மூத்த உறுப்பினர்களையும் போராளிகளையும் சந்திப்பதற்கு வாய்ப்பு ஏற்படும். விடுதலைப் புலிகளின் திருமண வைபவங்கள்

முற்போக்கானவை எனச் சொல்லலாம். ஏனென்றால் இத் திருமண வைபவங்களில் தமிழ்ப் பண்பாட்டின் பிற்போக்கான அம்சங்கள் களையப்பட்டு ஆக்கபூர்வமானவை சேர்க்கப்பட்டிருக்கும். உதாரணமாக விடுதலைப் புலிகளின் திருமண வைபவம் மிகவும் எளிமையானதாகவே நடைபெறும். சமயச் சடங்குகள் எதுவும் இராது. புதுமணத் தம்பதிகள் உறுதிமொழியெடுத்து, பதிவேட்டில் கைச்சாத்திட வேண்டும். மணப்பெண் கூறை அல்லது சிவப்புச் சேலையை அணிந்திருப்பார். மணமகன் வெள்ளை வேட்டியும், வெள்ளை சேட்டும் அணிந்திருப்பார். தமிழரின் பண்பாட்டிற்கு அமைய திருமண உறவுச் சின்னமாக மணமகன் மணமகளுக்கு தாலி கட்டுவார். ஆயினும் அதிலும் ஒரு மாற்றம். வழமையான தங்கச் சங்கிலியாகக் கட்டப்படும் தாலிக் கொடிக்குப் பதிலாக மஞ்சள் கயிறு கட்டப்படும். தங்கத்தால் செய்யப்படும் தாலியும் மதச் சின்னங்கள் அற்றதாக, சதுர வடிவில் தமிழ்க் கலாச்சார சின்னங்கள் பொறிக்கப்பட்டதாக இருக்கும். ஆடம்பரமான செலவுடன் தடல்புடலாக நடத்தப்படும் திருமணங்களுக்கு பதிலாக, மிகவும் எளிதான முறையில் நடத்தப்படும் இவ் வைபவம் புதுமையானதுதான்.

புலிகளின் திருமண வைபவத்தின்போது மணமகளின் தோழிகளாக வரும் பெண் போராளிகளுக்கு மூத்த களத் தளபதியான விதுசா தலைமை வகிப்பது வழக்கம். களத்தில் கனல்பறக்கும் தளபதி யாக செயற்பட்டபோதும், சமூக வைபவங்களில் கூச்சமும், நாணமும் காட்டும் விதுசா, பரந்த புன்னகையுடனும் மகிழ்ச்சியுடனும் காணப்படுவார். தனது தலைமையின் கீழுள்ள இளம்பெண் போராளிகள் தாம்பத்திய உறவில் இணைவதைக் காணும்பொழுது அவருக்கு உள்ளூர ஆனந்தம். இவ்வைபவங்களின்போது விதுசாவுடன் மூத்த பெண் போராளிகள் காணப்படுவர். இவர்களில் ஒருவர் தணிகைச் செல்வி. இவர் சிங்கள இராணுவத்தினர் யாழ்ப்பாணக் குடாநாட்டைக் கைப்பற்றிய பின்பு, பெண் போராளிகளுக்கு தலைமைதாங்கி, யாழ்ப்பாணத்தில் தலைமறைவான கெரில்லா நடவடிக்கைகளில் ஈடுபட்டுவந்தார். யாழ்ப்பாணத்திலும் வன்னியிலும் அரசியற் பிரிவில் செயலாற்றியதால், தமிழ்ப் பெண்களின் சமூகப் பிரச்சினைகள் பற்றிய ஆழமான அனுபவம் தணிகைச் செல்விக்கு இருந்தது. இந்திய அமைதிப் படை யாழ்ப்பாணக் குடாநாட்டை ஆக்கிரமித்து நின்ற காலத்தில், தலைமறைவாக நான் அங்கு வாழ்ந்த அனுபவம் எனக்கும் இருந்ததால், யாழ்ப்பாணத்தில் சிங்கள இராணுவ ஆட்சியின் கீழ் தணிகைச் செல்விக்கு ஏற்பட்ட ஆபத்தான அனுபவங்களை என்னால் புரிந்துணர்வுடன் பகிர்ந்துகொள்ள





முடிந்தது. எதிரிப் படைகளால் சூழப்பட்ட நிலையில், யாழ்ப்பாணத்தில், தலைமறைவு வாழ்க்கை நடத்துவது கத்தி முனையில் நடப்பது போன்று ஆபத்தானது என்பது எனக்கு நன்கு தெரியும். ஆயினும், யாழ்ப்பாணத்தில் மிகவும் ஆபத்தான தலைமறைவு வாழ்க்கையின்போது அவருக்கு உயிராபத்து நிகழவில்லை. 2000 ஆண்டு மன்னாரில், பெண் போராளிகளின் படையணிப் பிரிவுக்கு தலைமைதாங்கி நடத்திய சண்டையின்போது தணிகைச் செல்வி வீரச் சாவைத் தழுவிக்கொண்டார்.

விடுதலைப் புலிகளின் திருமண வைபவங்கள், அனேகமாக இயக்கத்தின் செயலகங்கள் ஒன்றில் நிகழ்வது வழக்கம். திருமண வைபவத்தையடுத்து, விருந்தினர்களுக்கு சிற்றுண்டி அல்லது சாப்பாடு பரிமாறப்படும். நண்பர்களும், தோழர்களும் ஒன்றுகூடி, கேலியும் கிண்டலுமாக சிரித்துப் பேசும் மகிழ்ச்சி ஆரவாரக் குரல்கள், விண்மீன்கள் ஒளிர்கின்ற அந்த வானத்தின் கீழ், இரவின் தூய்மையான காற்றை நிரப்பும். இப்படியான வைபங்களில் டாக்டர் பத்மலோஜினி போன்றவர்களும் வருகை தருவதுண்டு. பத்மா என நாம் அன்பாக அழைக்கும் இவர்தான் விடுதலைப் புலிகள் இயக்கத்தில் முதன் முதலாக இணைந்து கொண்ட பெண்மருத்துவ நிபுணர். யாழ்ப்பாணத்திலும் வவுனியாவிலும் நான் வாழ்ந்த காலகட்டத்தில் என்னுடன் மிகவும் நெருங்கிப் பழகிய நண்பி. இந்திய அமைதிப் படைக்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் போர் மூண்ட ஆரம்ப காலத்தில், வல்வெட்டித்துறையிலுள்ள ஊறணி மருத்துவமனையில் அவர் கடமையாற்றிக் கொண்டிருந்த வேளையில் நான் முதன் முதலாக பத்மாவை சந்தித்தேன். விழுப்புண் அடைந்த எமது இயக்கப் போராளிகள் சிலர் இந்த மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்தனர். பத்மா அவர்களைப் பராமரித்து வந்தார். ஒரு தடவை காயமடைந்த போராளிகளை நான் பார்க்கச் சென்றபோது, பத்மா என்னிடம் ஒரு உதவி கேட்டார். இந்திய அமைதிப் படை எந்நேரமும் தன்னைக் கைது செய்யலாம் என்றும், சைனைட் நஞ்சைக்கொண்ட கண்ணாடிச் சிமிழ் ஒன்றை பெற்றுத் தருமாறும் என்னிடம் கேட்டார். ஆபத்துக்களை எதிர்நோக்கியபோதும், பத்மா காயமடைந்த எமது போராளிகளுக்கு இரகசியமான இடங்களில் தொடர்ந்தும் சிகிச்சையளிக்கத் தவறவில்லை. இறுதியில், இந்திய இராணுவத்தினரால் கைது செய்யப்பட்ட அவர், உளவியல் ரீதியான சித்திரவதைகளுக்கு ஆளானார். இந்திய இராணுவம் அவரை தடுத்து வைத்திருந்த படைமுகாமிற்கு முன்பாக பொதுமக்கள் ஆர்ப்பாட்டம் செய்து அவரை

விடுவிக்கக் கோரியதால், பத்மா ஈற்றில் விடுதலை செய்யப்பட்டார். இந்திய இராணுவத்தினரால் அவரது உளவுறுதியை உடைக்கமுடியவில்லை. போர்க் களத்திலும், விடுதலைப் புலிகளின் மருத்துவமனைகளிலும், காயமடைந்த போராளிகளுக்கு பத்மா தொடர்ந்தும் சிகிச்சையளித்து வந்தார். காலப்போக்கில் அவரது பொறுப்புச் சுமை அதிகரித்தது. அடிப்படை மருத்துவ சிகிச்சை முறைபற்றியும், தாதிப் பேணுகை பற்றியும், அவர் மருத்துவப் பிரிவுத் தொண்டர்களுக்கு பயிற்சி நடத்துவதுண்டு. அவருக்கு ஓய்வான நேரங்களில் பொதுமக்களுக்கும் தொண்டாற்றுவார். இறுதியில் அவர், மட்டக்களப்பு - அம்பாறை மாவட்ட அரசியற்துறைப் பொறுப்பாளர் திரு. கரிகாலனை திருமணம் செய்துகொண்டார்.

விடுதலைப் புலிகளின் திருமணங்கள் மற்றும் இயக்கத்தின் விசேட வைபவங்களை ஒழுங்கு செய்யும் பொறுப்பை திரு. பிரபாகரன் எப்பொழுதும் திரு. தமிழ்ச்செல்வனிடமே ஒப்படைப்பார். தமிழ்ச் செல்வன், 1984ம் ஆண்டு ஆரம்பப் பகுதியில் மிகவும் இளம் பிராயத்தில் போராட்டத்தில் இணைந்தவர். இளைஞராக இருந்தபோதும் அவரிடம் காணப்பட்ட இலட்சிய வேட்கையும் உறுதிப்பாடும் பிரபாகரனை வெகுவாகக் கவர்ந்தது. தமிழ்ச் செல்வனுக்கு பயிற்சி முடிந்ததுமே, அவரைத் தனது மெய்ப் பாதுகாவலர்களில் ஒருவராகத் தேர்ந்தெடுத்து தனது உள்வட்டத்துக்குள் இணைத்துக் கொண்டார். பின்னர் தமிழ்ச் செல்வன் தென்மராட்சிப் பிராந்தியத்தின் தளபதியாக பதவி உயர்த்தப்பட்டார். தென்மராட்சித் தளபதியாகப் பொறுப்பேற்றதை அடுத்து, மிகவும் ஆபத்தான சவாலை எதிர்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் தமிழ்ச் செல்வனுக்கு ஏற்பட்டது. தென்மராட்சியை ஆக்கிரமித்து நின்ற இந்திய அமைதிப் படையை எதிர்த்துப் போராட வேண்டிய பொறுப்பு அவருக்கு கொடுக்கப்பட்டது. இந்தப் பணியை வெற்றிகரமாக செய்து முடித்ததால், யாழ்ப்பாணக் குடாநாட்டின் தளபதியாக அவர் பதவியுயர்வு பெற்றார். யாழ்ப்பாணத்தில், பல சமர்களில் பங்குபற்றிய தமிழ்ச் செல்வன் பலதடவைகள் காயமடைந்தார். விழுப்புண் அடைந்த தழும்புகள் இன்னும் அவரது உடலில் இருக்கின்றன. பூநகரிச் சமரின்போது மிகவும் ஆபத்தான முறையில் அவர் படுகாயமடைய நேர்ந்தது. அவருக்கு சமீபமாக விழுந்து வெடித்த விமானக் குண்டுச் சிதறல்கள் அவரது இடது காலை சிதைத்தது. கால் எலும்பு நொருங்கி, தொடைச் சதை சிதறி, மெருமளவு இரத்தம் சிந்தியபடி அவர் யாழ்ப்பாண மருத்துவமனைக்கு அவசர சிகிச்சைக்காக கொண்டுவரப்பட்டார். மரணத்தின் விளிம்பில் ஊசலாடிக்கொண்டிருந்த





தமிழ்ச்செல்வன் அப்பொழுது தப்பிப் பிழைத்தது ஒரு அதிசயம்தான். அவர் முழுமையாக குணமடைய நீண்ட காலம் பிடித்தது. ஊன்று தடியுடன் நடைபயின்று, கடமையில் ஈடுபட்டார். மாத்தையாவின் சதிமுயற்சியை அடுத்து, கிட்டுவும் வங்கக் கடலில் இந்திய கடற்படையின் தலையீட்டால் அகால மரணத்தைத் தழுவிக் கொண்டதற்குப் பின்னர் தமிழ்ச்செல்வன் அரசியற் பிரிவின் பொறுப்பாளராக பதவி உயர்த்தப்பட்டார். இப்பொழுதும் அப்பொறுப்பில் அவர் பணிபுரிந்து வருகிறார்.

பிரபாகரனின் நம்பிக்கைக்கு உரியவர் என்பதால், அரசியல் துறைப் பொறுப்பாளர் என்ற பதவியுடன் வேறு பல பொறுப்புகளும் அவர் மீது சுமத்தப்பட்டிருக்கின்றது. விடுதலைப் புலிகளின் முக்கிய நிகழ்வுகளை ஒழுங்கு செய்வதும் இப் பொறுப்புகளில் ஒன்று. அரசியல் நிர்வாகத் துறைக்கு பொறுப்பாளரான திரு. சுதா (தங்கன்) தமிழ்ச் செல்வனின் உதவியாளர். இவர் மிகவும் திறமைசாலி. அயராது உழைப்பவர். மதிநுட்பமாகச் சிந்தித்து செயற்படுபவர். நாம் யாழ்ப்பாணத்திலும் வன்னியிலும் வசித்தபோது, எம்மைக் கவனித்துப் பராமரிக்கும் பொறுப்பை தமிழ்ச்செல்வன் சுதாவிடம் ஒப்படைத்திருந்தார். தமிழ்ச்செல்வனின் அக்கறையோடு சுதாவின் ஆற்றலும் இருந்த காரணத்தினால் யாழ்ப்பாணத்திலும் வன்னியிலும் எமது வாழ்க்கை வசதியாக அமைந்தது. தமிழ்ச்செல்வன் எம்மீது தாராள மனப்பான்மை காட்டினார். நாம் வசதியோடு வாழவேண்டும் என்பதில் அக்கறை கொண்டிருந்தார். வவுனியா நகரிலிருந்து விசேடமாக பெறப்பெற்ற பழவகைகளையும் மரக்கறிவகைகளையும் அவர் எனக்கு அடிக்கடி அனுப்பி வைப்பார். இயக்கத்தோடு இணைந்த பாலாவின் நீண்ட வரலாற்றிற்கும், அவரது அனுபவத்திற்கும் ஆழ்ந்த அறிவிற்கும் மதிப்பளிக்கும் தமிழ்ச்செல்வன், பல விடயங்களை அவருடன் கலந்தாலோசித்து அவரது ஆலோசனையைப் பெறுவார். அரசியற் செயற்பாடுகளில் தனது மதிநுட்பத்தைப் பாவித்து தமிழ்ச்செல்வனுக்கு பாலா ஆதரவு அளித்து வந்தார். அரசியல் பிரச்சினைகள் பற்றி அலசுவதற்கு மட்டுமன்றி உணவு அருந்துவதற்காகவும் தமிழ்ச்செல்வன் எமது வீட்டுக்கு அடிக்கடி வருவார். மீன் தலையுடன் நான் சமைக்கும் பால்சொதி அவருக்கு மிகவும் பிடிக்கும்.

## விடுதலைப் போரின் நாயகர்கள்

தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் நாயகர்களாக, பொதுமக்களாலும் போராளிகளாலும் போற்றி மதிக்கப்படும் மூத்த களத் தளபதிகளும் எமது வீட்டுக்கு வருகைதருவதுண்டு. இம் மூத்த தளபதிக ளில் ஒருவர் சூசை. கடற்புலிகளின் விசேட தளபதியான சூசை வடமராட்சியிலுள்ள பொலிகண்டி எனும் கடலோரக் கிராமத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவர். எனக்கும் பாலாவுக்கும் நெருக்கமானவர். சூசைக்கும் எமக்கும் மத்தியிலான உறவு மிகவும் நீண்டது. யாழ்ப்பாணக் குடாநாட்டை இந்திய இராணுவம் ஆக்கிமித்திருந்த வேளை, நாம் வடமராட்சியில் தலைமறைவாக வாழ்ந்த காலத்தி லிருந்தே சூசையை எமக்கு நன்கு தெரியும். பிரேமதாசா அரசுடன் பேச்சுக்களை முடித்துக் கொண்டு 1990ல் நாம் யாழ்ப்பாணம் திரும்பியபோது மீண்டும் சூசையுடன் தொடர்பைப் புதுப்பித்தோம். கடற்புலிகளின் விசேட தளபதியாகப் பொறுப்பேற்பதற்கு முன்னராக, அவர் வடமராட்சிப் பிரதேசத்தின் தளபதியாக பணிபுரிந்தவர். அந்தக் காலத்தில்தான் சூசையின் திருமணத்தை பாலா ஒழுங்கு செய்தார்.

விடுதலைப் புலிகளின் கடற்படைப் பிரிவுத் தளபதி என்ற பொறுப்பில் சிறப்புடனும் செல்வாக்குடனும் முன்னேற்றம் அடைந்தார் சூசை. கடற்படைப் பிரிவை கட்டியெழுப்புவதில் அவர் ஈட்டிய வெற்றிகள்தான் அவரது புகழுக்கு காரணம். சூசை திரு. பிரபாகரனுக்கு மிகவும் நம்பிக்கைக்கு உரியவர். ஈழப் போரில் கடலாதிக்கத்தின் கேந்திர முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்திருந்த பிரபாகரன், தமிழரின் கடற்படையை கட்டியெழுப்புவதில் சூசைக்கு சகல விதமான உதவிகளையும் செய்து வந்தார். பிரபாகரனின் பேரார்வமும், ஆக்க சிந்தனையும், சூசையின் கடின உழைப்பும், நிர்வாகத் திறனும் ஒன்றிணைந்ததால், விடுதலைப் புலிகளின் கடற்படைப் பிரிவு, கடற்போரில் ஆற்றல் மிகுந்த சக்தியாக உருவெடுத்து சிறீலங்காவின் கடற்படைக்கு பெரும் சவாலாக அமைந்தது. சூசையின் தலைமையின் கீழ் செயற்பட்ட கடற்புலிகள், எத்தனையோ கடற்சமர்களில் ஈடுபட்டு, சிங்களக் கடற்படைக் கப்பல்களை பெரும் தொகையில் நாசம் செய்துள்ளனர். அதுமட்டுமன்றி, மிகவும் சாதுரியமான, கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த தரையிறக்கங்களைச் செய்து, வெற்றிகரமான பல தரைச் சமர்களுக்கும் உதவி புரிந்திருக்கின்றார்கள்.

கடற் சமர் புரிதல், தரையிறக்கம் செய்தல், போராளிகளின் போக்குவரத்திற்கு உதவுதல் போன்ற முக்கிய பணிகளில் ஈடுபட்டுவரும் கடற் புலிகளிடம் ஒரு சிறிய பிரிவுண்டு. இவர்கள் தினமும் ஆழ்கடலில் மீன்பிடித்து, தமது பிரிவிற்கும், பயிற்சி முகாம்களுக்கும் மீன் விநியோகம்





செய்வர். இந்த மீன் பிடிப் பிரிவினால் பயன் பெறுபவர்களில் ஒருவர் பாலா. பாலாவுக்கு மீன் நன்கு பிடிக்கும். அதுவும், உடன் மீன் என்றால் இன்னும் பிடிக்கும். ஒவ்வொரு நாளும் மதிய போசனத்திற்காக, கரையிலிருந்து சூசை அனுப்பி வைக்கும் விதம் விதமான உடன் மீன்களை ரசித்து உண்பார் எனது கணவர்.

சமூகத்தில், எல்லோருடனும் அன்பாகவும் பண்பாகவும் பழகும் இயல்புள்ளவர் என்பதால், சூசை பொதுசனங்கள் மத்தியில் பிரபல்யமானவர். நேர்மையும், பரிவும், பிரச்சினைகளை யதார்த்தமாக அணுகும் பண்பும் அவருக்குண்டு. அவருடைய அன்புள்ளமும், தாராள மனப்பான்மையுமே அவரது மனைவியான சுதாவைக் கவர்ந்திருக்க வேண்டும். சூசைக்கும் சுதாவுக்கும் இரண்டு குழந்தைகள். மூத்த பெண் குழந்தையின் பெயர் சிந்து. ஆண் குழந்தையின் பெயர் மணியரசன். யாழ்ப்பாணத்திலும் வன்னியிலும் நாம் வசித்தபோது, சூசையும் அவரது குடும்பத்தினரும் எமது வீட்டுக்கு அடிக்கடி வருவார்கள். நாமும் அவர்களது வீட்டுக்கு சென்று வருவோம். அவர்களது வீட்டில் எமக்கு பிரமாதமான விருந்து தருவார்கள். மிகவும் பாசத்துடன் உபசரிப்பார்கள். சுதா, வடமராட்சியிலுள்ள உடுப்பிட்டி என்னுமிடத்தைச் சேர்ந்தவர். விடுதலைப் போராட்ட களத்தில் முதற்பலியான சங்கரின் (சத்தியநாதன்) சகோதரி. சங்கர் உயிர்நீத்த தினமே விடுதலைப் புலிகள் இயக்கத்தின் வருடாந்த மாவீரர் நாளாக கொண்டாடப்படுகின்றது. அன்பும் அமைதி யான பண்பும் கொண்ட சுதாவின் குணவியல்பு சூசையின் குடும்பத்தின் சிறப்பியல்பு. குடும்பத்தில், எப்பொழுதுமே அமைதியான ஒரு ஆனந்தத்தைக் காண முடியும்.

விடுதலைப் போரில் புகழீட்டிய களத் தளபதிகளில் சொர்ணம் முக்கியமானவர். இவரும் எமது வீட்டிற்கு அடிக்கடி வந்து செல்வார். உயர்ந்த உருவம். திடகாத்திரமான உடற்கட்டு. சொர்ணத்தின் போராட்ட வரலாறு எண்பதுகளின் நடுப்பகுதியில் ஆரம்பமாகிறது. அப்பொழுது அவர் பிரபாகரனின் மெய்ப்பாதுகாவலர்களில் ஒருவராகப் பணிபுரிந்தார். பிரபாகரனின் மிகவும் நம்பிக்கைக்குரிய உதவியாளர் என்ற தகைமையுடன், சொர்ணம் சென்னையிலுள்ள எமது வீட்டிற்கு அடிக்கடி வந்து செல்வார். இந்தியப் படை தமிழீழத்தை ஆக்கிரமித்திருந்த காலத்தில்தான் சொர்ணத்தின் அபாரமான துணிவும் போர்த் திறனும், நிர்வாக ஆற்றலும் வெளிப்பாடு கண்டது. இதனால் புலிகளின் இராணுவக் கட்டமைப்பில் அவருக்கு பதவியுயர்வு கிடைத்ததுடன், ஈற்றில் பிரபாகர னின் தனிப்பட்ட பாதுகாப்பிற்கும் பொறுப்பாளராக முக்கிய பணியில் அமர்த்தப்பட்டார். இயக்கப் போராளிகளும் சரி, அவரது பொறுப் பதிகாரத்தின் கீழ் பணிபுரிந்த போராளிகளும் சரி, அவருக்கு அன்பையும்,

மதிப்பையும், மரியாதையையும் சொரிந்தனர். போராளிகள் மத்தியில் அவர் பழகும்பொழுது இது வெளிப்படையாகத் தெரியும். களத்தில் முன்நின்று படைநகர்த்த எப்போதும் தயார் நிலையில் இருக்கும் துணிவு, போரினால் எழும் துன்ப துயரங்களை சுமக்கும் உறுதிப்பாடு, தனது தலைமையின் கீழுள்ள வீரர்களை ஒழுக்கத்துடனும் கட்டுப்பாட்டுடனும் வைத்திருக்கும் ஆற்றல், ஆகிய பண்புகள் காரணமாகவே சொர்ணம் மீது போராளிகள் அன்பும் மதிப்பும் கொண்டிருந்தனர். பல சமர்களில் அவர் மகத்தான வெற்றிகளை ஈட்டியிருக்கிறார். பல தடவைகளில் காயமும் அடைந்திருக்கிறார். பெரிய உருவமும், மென்மையான உள்ளமும் படைத்த இந்த இளம் வீரன், யாழ்ப்பாண சமர் ஒன்றின்போது நெஞ்சில் படுகாயமடைந்து யாழ்ப்பாண மருத்துவமனையில் அவதியுற்றதைக் கண்டபோது எமக்கு மனவருத்தமாக இருந்தது.

நாம் வலிகாமத்தில் வசித்து வந்தபோது, எமது பாதுகாப்பின் பொறுப்பையும் திரு. பிரபாகரன் சொர்ணத்திடம் ஒப்படைத்திருந்தார். பிரபாகரனின் தனிப்பட்ட மெய்ப்பாதுகாவலர் பிரிவிலிருந்து, எமது பாதுகாப்பு தேவைகளுக்காக, போராளிகள் குழுவொன்று தெரிவு செய்யப்பட்டு எமது வீட்டில் பணிக்கு அமர்த்தப்பட்டது. எமது பாதுகாப்பு சூழ்நிலையைக் கண்காணிக்கவும், எமது மெய்ப்பாதுகாவலர்களான போராளிகளின் தேவைகளைக் கவனிக்கவும், சொர்ணம் எமது வீட்டுக்கு அடிக்கடி வருவார். ஆறடி இரண்டு அங்குல உயரமிருக்கும். கட்டமைப் பான உடல். நேர்த்தியாக சீருடையணிந்த கம்பீரமான தோற்றம். பெரிய இராணுவப் பொறுப்புகளைச் சுமந்தபோதும், மென்மையாக, எளிமை யாகப் பழகுவார் சொர்ணம்.

திரு. பிரபாகரனுக்கு மெய்ப்பாதுகாவலராக 24 மணிநேரம் தொண்டு செய்தும், பின்பு போர்க் களங்களில் உயிராபத்திற்கும் மத்தியில் பணிபுரிந்து வந்த சொர்ணம் திருமணம் செய்துகொண்டபோது நாம் மிகவும் மகிழ்ச்சியடைந்தோம். ஜெனி எனப்படும் அழகான இளம்பெண்ணை மணந்துகொண்டார். ஜெனி ஒரு பெண் போராளி. அப்பொழுது, பெண்கள் படைப்பிரிவின் கட்டளைப் பீடத்தில், மூன்றாம் இடத்தில் அவர் பணி புரிந்தார். சிங்கள இராணுவத்தின் யாழ்ப்பாணம் மீதான படையெடுப்பின்போது அவர் வசித்த வீடு மீது குண்டு வீசப்பட்டது. அப்பொழுது கர்ப்பிணியாக இருந்த ஜெனி தெய்வாதீனமாக உயிர் தப்பினார். இச் சம்பவத்தின்போது சொர்ணம் வீட்டிலில்லை. முன்னேறி வந்துகொண்டிருந்த சிங்களப் படையணிகளை எதிர்த்து களத்தில் நின்று போராடிக் கொண்டிருந்தார். வன்னியில் நாம் வசித்தபோது, சொர்ணம் திருகோணமலைத் தளபதியாக நியமிக்கப்பட்டார். இதனால் ஜெனியைப்





பிரிந்து நீண்ட காலமாக திருகோணமலையில் அவர் பணியாற்ற வேண்டியிருந்தது. பிரிவுத் துயரிலிருந்த ஜெனிக்கு சிறு ஆறுதல் கொடுப்பதற்காக நானும் எனது கணவரும், அவரது வீட்டுக்கு அடிக்கடி சென்று வருவோம். நாம் வன்னியிலிருந்து வெளியேறிய பொழுது, இரு சிறிய பெண் குழந்தைகளுடன் அவர்கள் மிகவும் மகிழ்ச்சிகரமான குடும்பமாக வாழ்ந்து வந்தனர்.

மூத்த களத் தளபதிகளில் வீரத்திற்கு இலக்கணமாக திகழ்ந்து, போர்க் கலையில் விற்பன்னராக விளங்கி, பல்வேறு களம் கண்டு பல சாதனைகளைப் படைத்தவர்கள் என்றால் பானுவையும், தீபனையும், பால்ராஜையுமே குறிப்பிட்டுச் சொல்லலாம். போராளிகளிடமும் பொது மக்கள் மத்தியிலும் இம்மூவருக்கும் பெருமதிப்புண்டு.

முன்னாள் யாழ்ப்பாணத் தளபதியாகப் பணிபுரிந்த பானு அபார துணிச்சலுடையவர். போர்க் களத்தில் தனது உயிரை துச்சமென மதித்து படை நடத்துபவர். கிட்டு பீரங்கிப் படைப்பிரிவின் தளபதியாக பணிபுரியும் அவர், தனது படைப் பிரிவினரை மிக உயர்ந்த நிபுணத்துவ தரத்திற்கு வளர்த்தெடுத்தார். விடுதலைப் புலிப் படையணிகள் தலை சிறந்த மரபுவழி இராணுவ சக்தியாக வளர்ச்சி பெற்றமைக்கு இவருக்கும் பங்குண்டு. இவரது தலைமையின் கீழ் இயங்கும் பீரங்கி, மோட்டார் படைப்பிரிவுகள் பல்வேறு முக்கிய சமர்களில் பிரமாதமான வெற்றி களையீட்டி, விடுதலைப் போருக்கு பெரும் பங்காற்றின.

அரசியல் நிலைமைகளை அறிந்து கொள்வதற்காக பானு எமது வீட்டுக்கு வந்து போவார். பானுவிடமிருந்தே வன்னியின் நில வரைபடங் களை பாலா பெறுவதுண்டு. போர்க்கள நிலவரங்களையும் எதிரியின் படை நகர்வுகளையும் விபரமாக அறிந்து கொள்வதற்கு இந் நிலவரைபடங்கள் பாலாவுக்கு உதவியாக இருக்கும். பாலாவின் கிண்டலும் பகிடியும் பானுவுக்கு நன்றாகப் பிடிக்கும். பானு ஒரு நகைச் சுவை ரசிகர். எனவே, இருவரும் சந்தித்து உரையாடும்போது பாலாவின் செயலகக் கொட்டில் சிரிப்பொலியில் அதிர்ந்தபடியிருக்கும்.

மூத்த களத் தளபதிகளில் முக்கியமான இடத்தை வகிப்பவர் தீபன். இவர் வன்னியைப் பிறப்பிடமாகக் கொண்டவர். எத்தனையோ களங்கள் கண்டவர். போர்க் கலையில் தேர்ச்சியும் அனுபவமும் பெற்று முதிர்ந்தவர். மென்மையாகப் பேசுவார். அடக்க ஒடுக்கமானவர். போர்க் கலையில் அவரது அபாரமான திறனாற்றல் காரணமாக இயக்கத்தில் அவருக்கு பெயரும் புகழும் மேலோங்கி நிற்கின்றது. அப்படிப்பட்ட பிரபல்யமான ஒருவர் மிகவும் பணிவாகவும் அடக்கமாகவும் மக்களோடும் போராளிகளோடும் பழகுவதைக் காண ஆச்சரியமாகவே இருக்கும்.

வெளித்தோற்றம் இவரது உள்ளார்ந்த இயல்புகளைப் புலப்படுத்தத் தவறினும், போர்க்கலையில் இவர் ஒரு வித்தகர். உறுதியில் ஒரு இரும்பு மனிதர். இப்படியான இவரது சிறந்த பண்புகளே போராளிகளை களத்தில் அபூர்வ சாதனை புரியத் தூண்டுகின்றன. தீபன் எமது வீட்டுக்கு வருகை தந்து பாலாவுடன் உடையாடும்பொழுதெல்லாம் கள நிலவரங்களை துல்லியமாக எடுத்து விளக்குவார். அத்தோடு பாலாவிடம் உள்நாட்டு, வெளிநாட்டு அரசியல் நிலைமைகள் பற்றியும் ஆவலுடன் கேட்டறிவார்.

விடுதலைப் போரில் மகத்தான சாதனைகளைப் படைத்து, நீண்ட கள அனுபவங்களைக் கொண்டவர் பால்ராஜ். இவர் மிகவும் அரிதாக எமது வீட்டுக்கு வந்தபோதும் எமக்கும் அவருக்கும் மத்தியில் பரஸ்பரம் மதிப்பும் மரியாதையும் உண்டு. நம்பமுடியாத அளவிற்கு இந்த மாவீரன் மிகவும் அடக்கமானவர்; தற்பெருமையற்றவர்; எளிமையானவர். போர்க் களத்தில் அவர் ஈட்டிய சாதனைகள் பிரமிக்கத்தக்கவை. பால்ராஜ் அபாரமான துணிவுடையவர். தனது தலைமையின் கீழுள்ள போராளிகளுடன் பாசத்துடன் நெருங்கிப் பழகுவார். அவர்களது நலனில் கண்ணும் கருத்துமாக இருப்பார். இதனால் போராளிகள் இவர் மீது ஆழமான நேசமும் மதிப்பும் வைத்திருக்கிறார்கள். களத்தில் போராளிகள் செய்யும் அர்ப்பணிப்புகளையும் சாதனைகளையும் கருத்தில்கொண்டு, தனது ஓய்வான நேரத்தின் பெரும் பகுதியை, முகாம்களில் போராளிகளுடன் செலவிடுவார் பால்ராஜ்.

1993ம் ஆண்டு நிகழ்ந்த 'யாழ்தேவி' சமரில் பால்ராஜ் காய மடைந்தார். பீரங்கிக் குண்டு வெடித்து அவரது கால் ஒன்றைச் சிதைத்தது. அவரது காலைத் துண்டிப்பதில்லையென மருத்துவர்கள் முடிவெடுத்தனர். இதனால் சிதைந்துபோன கால் குணமாகும்வரை அவர் அனுபவித்த வேதனையும் வலியும் விபரிக்க முடியாதது. நாம், அடிக்கடி யாழ்ப்பாண மருத்துவமனைக்கு சென்று பால்ராஜை பார்த்து வருவோம். அப்பொழுதெல்லாம் அவர் அனுபவித்த உடல் உபாதை, அவரது முகத்தில் தெரியும். நீரிழிவு வியாதியும் இருந்ததால் அவர் குணமடைவதில் தாமதமேற்பட்டது. பல மாதங்களாக மருத்துமனைப் படுக்கையில் வேதனையுடன் போராடி இறுதியாகக் குணமடைந்தபோதும் அவர் நொண்டித்தான் நடக்க வேண்டியிருக்கிறது. என்றாலும், தனது விழுப்புண் பற்றி அவர் பெரிதாக அலட்டிக் கொள்வதில்லை. தனக்கு நிகழ்ந்ததை அற்ப விடயமாகக் கருதும் அவர், இதனைவிட எத்தனையோ பெரும் துன்பங்களை போராளிகள் அனுபவித்ததுமட்டுமன்றி மகத்தான தியாகங்களையும் புரிந்துள்ளனர் எனச் சொல்வார். இப்பொழுதும் யுத்த





அரங்கில் களத் தளபதியாக பணிபுரிந்து வருகிறார் பால்ராஜ்.

திரு. தமிழேந்தி தனித்துவமானவர். எவருடனும் ஒப்புவமை செய்ய முடியாத வித்தியாசமான மனிதர். பிரபாகரனின் நம்பிக்கைக்கு பாத்திரமானவர். மிகவும் அரிதாக எப்பொழுதாவது எமது வீட்டுக்கு வந்து செல்வார். இவர் ஒரு மூத்த உறுப்பினர். ஆரம்ப காலங்களிலிருந்து பிரபாகரனது வலது கரமாக இயங்கி வருபவர். காலப்போக்கில் இவர்களது உறவு மிகவும் நெருக்கமாக மாறியது. பிரபாகரனின் உள்வட்டத்தில் ஒருவாராக செயற்பட்ட திரு. தமிழேந்தி நீண்ட காலமாகவே விடுதலைப் புலிகளின் நிதிப் பிரிவிற்கு பொறுப்பாளராக இருந்து வருகிறார். பல ஆயிரம் கோடி பணத்தைக் கையாண்ட இம் மனிதர் நேர்மையானவர்; ஒழுக்க சீலர். விடுதலைப் போரின் வெற்றிக்கு ஆயுதம் எத்தகைய முக்கியத்துவம் வாய்ந்ததோ, அது போன்றதுதான் நிதியும் என்பது தமிழேந்தியின் தத்துவம். இந்தக் கொள்கையுடன் நீண்ட காலமாகவே, எத்தனையோ நெருக்கடிகள் மத்தியிலும் இயக்கத்தின் நிதிப் பிரிவைச் சிறப்பாக, பொறுப்பாக கையாண்டு வருகிறார். இயக்கத்தின் பல்வேறு பிரிவுகளின் செலவீனங்களுக்கு நிதியைப் பகிர்ந்து வழங்குவதில் இவர் காட்டும் கண்டிப்பும் இறுக்கமும் சில சமயங்களில் இவருக்கு கண்டன விமர்சனங்களையும் தேடிக் கொடுப்பதுண்டு.

தமிழ் மொழியிலும், பண்டைய தமிழ் இலக்கியத்திலும் இவருக்குள்ள அலாதியான காதல், திருவள்ளுவரின் அறநெறித் தத்துவத்திலுள்ள ஆழமான பற்று, தென்னிந்திய திராவிட இயக்கத்தின் சீரழிவால் அவருக்கு ஏற்பட்ட ஆதங்கம் - இவற்றால் தமிழ்த் தூயவாதி என்ற பட்டப் பெயரையும் இவர் தேடிக்கொண்டார். இப்படியான தனிப் போக்குகளும் பற்றுகளும் இருந்தபோதும் தமிழேந்தி மிகவும் பண்பான மனிதர்; மதிநுட்பமுடையவர். விடுதலைப் போராட்டத்தில் மூன்று சகோதரர்களை களப் பலி கொடுத்தவர் என்பதாலும், போராளிகளும் பொதுமக்களும் செய்த அளப்பரிய ஈகங்களுக்கு பெருமதிப்பு அளிப்பார் என்பதாலும் தமிழ் மக்கள் தமிழீழத் தனியரசுக்கு உரித்தானவர்கள் என்பதில் தமிழேந்திக்கு அசையாத நம்பிக்கை உண்டு.

விதுஷா பெண் தளபதிகளில் மிகவும் பிரபல்யமானவர். எல்லோரினதும் மதிப்பிற்குரியவர். தனித்துவமான சிறப்பியல்புகளைக் கொண்டவர். விதுஷா எமது வீட்டிற்கு அரிதாக, எப்பொழுதாவது வருவார். எனினும் இவரை இளம் வயதிலிருந்தே எமக்குத் தெரியும். வடமராட்சியில் கப்பூது எனும் கிராமத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவர்.

அபூர்வமான செயற்திறனைக் கொண்ட இவ் வீராங்கனை மிகவும் தன்னடக்கமானவர். விடுதலைப் புலிகளுக்கும் பிரேமதாசா அரசுக்கும் மத்தியில் பேச்சுக்கள் நிகழ்ந்த காலத்தில் நான் முல்லைத்தீவிலுள்ள அலம்பில் காட்டிற்கு விஜயம் செய்தபோது, பெண்களுக்கான அதிரடிப் பயிற்சி முகாமில் விதுஷாவைச் சந்தித்தேன். இயக்கத்தில் இணைந்த அந்த ஆரம்ப காலத்தில் அவருக்கு பதவி எதுவும் இருக்கவில்லை. ஆயினும் 1990ம் ஆண்டிலிருந்து போர்க்களத்தில் குதித்த விதுஷா, எத்தனையோ சமர்களில் பங்குபற்றி வீர சாதனைகள் படைத்தார். அவரது அபாரமான துணிவும் தலைமைத்துவப் பண்புகளும் காரணமாக அவர் படிப்படியாக பதவியுயர்வு பெற்று மூத்த கள ஆண் தளபதிகளுக்கு சமநிலையாக கேணல் ரக மேற்பதவிக்கு உயர்த்தப்பட்டார். ஒரு தேசிய விடுதலைப் போராட்டம் என்ற ரீதியிலும், கெரில்லாப் போரிலும் மரபுவழிப் போரிலும் பெண்களின் பங்கு என்ற ரீதியிலும், ஒரு தசாப்பதத்திற்கு மேலான விதுஷாவின் கள அனுபவமும் தலைமைத்துவமும் பிரமாத மானது. உலக இராணுவ வரலாற்றில் போற்றுதற்குரிய பெண் போராளி என்ற உன்னத இடத்தை அவர் பெற்றிருக்கிறார். கடந்த பத்து வருடங்க ளுக்கு மேலாக, பெண் போராளிகளுக்கு தலைமை தாங்கி படை நகர்த்தியதோடு, போர் முனைகளில் அவர்களது அனுபவங்களையும் பகிர்ந்துள்ளார். விடுதலைப் புலிகளின் இராணுவக் கட்டமைப்பிலுள்ள போராளிகளில், ஏராளமான களங்களைக் கண்டு அனுபவ முதிர்ச்சி அடைந்தவர்களில் விதுஷாவும் ஒருவர்.

எமது வீட்டுக்கு வருகை தரும் போராளிகளும் நண்பர்களும் பல்வேறு கருத்துகளைச் சொல்வார்கள். கண்டன விமர்சனங்களையும் முன்வைப்பார்கள். சிலரது உரையாடல்கள் நகைச் சுவை நிறைந்ததாக இருக்கும். இவர்களில் முக்கியமானவர் திரு. புதுவை இரத்தினதுரை. புதுவை எமக்கு நெருங்கிய நண்பர். புகழ்வாய்ந்த கவிஞர். ஈழத்து இலக்கிய வட்டத்தில் மிகவும் பிரபல்யமானவர். விடுதலைப் புலிகள் இயக்கத்தின் ஆஸ்தானப் புலவர். அபாரமான ஆளுமையுடைய மனிதர்.

எல்லாப் பிரச்சினைகளையும் ஆழமாக, அக்கறையுடன் அலசிப் பார்க்கும் இயல்பு புதுவைக்கு உண்டு. சில விடயங்களில் உறுதியான, கடும் போக்கையும் கொண்டிருப்பார். சிற்பக் கலையிலும் அவர் ஒரு விற்பன்னர். இதனால் அவரது உலகப் பார்வை தமிழ்ப் பண்பாட்டை மையமாகக் கொண்டிருக்கும். தமிழ் மொழியில் மட்டுமன்றி, தமிழரின் பண்பாட்டு முறைமைகள் பற்றியும் புதுவையிடம் ஆழமான அறிவுண்டு. இதனால் தமிழரின் வாழ்க்கை முறையில் பொதிந்து கிடக்கும் பல்வேறு





அர்த்த பரிமாணங்கள் பற்றி நான் புதுவையிடம் விளக்கம் பெற்றுக் கொள்ள முடிந்தது. மனதில் உள்ளதை மனம் திறந்து பேசும் உரிமை தனக்குண்டு என்பதை அச்சமின்றி அடித்துக் கூறும் புதுவையின் சீரிய மாண்பு எனக்குப் பிடிக்கும். புதுவையின் வாயிலிருந்தே மிகவும் கூர்மையான, உயிர்த்துடிப்பான விமர்சனங்கள் வெளிவரும். அதுபோலவே அவரது நகைச் சுவையும். மொழியை மிகவும் நுட்பமாகவும் லாவகமாகவும் கையாண்டு கிண்டலாக அவர் சொல்லும் பகிடிகள் வயிறு குலுங்கச் சிரிப்பூட்டும். அவர் அடிக்கடி எமது வீட்டிற்கு வருகை தருவார். நாமும் அவரது வீட்டிற்கு செல்வோம். அப்பொழு தெல்லாம், தனது வெற்றிலைப் பெட்டியைத் திறந்து ஒரு வெற்றிலையை எனக்குத் தந்துவிட்டு, தனது வெற்றிலையின் காம்பை நுள்ளி எறிந்து விட்டு அதன் முதுகில் சுண்ணாம்பைத் தடவி, பாக்குச் சீவல்களை வைத்து மடித்து, பின் அதனை வாய்க்குள் செருகி, உதடுகள் இரத்தமாக சிவக்கும் வரை நன்றாக மென்று அசைபோட்டவாறு நகைச் சுவையோடு உரையாடுவார் புதுவை. இப்படியாக பல குளிர்மையான மாலைப் பொழுதுகளை மகிழ்ச்சிகரமாக அவருடன் கழித்தோம்.

விடுதலைப் புலிகளின் கலை, பண்பாட்டுக் கழகத்தின் பொறுப்பாளராக புதுவை பணியாற்றி வருகிறார். அத்துடன் பிரபல தமிழ் இலக்கிய ஏடான 'வெளிச்சத்தின்' மேற்பார்வை ஆசிரியராகச் செயற்பட்டு, அச் சஞ்சிகையை நீண்ட காலமாகப் பிரசுரித்து வருகிறார். 'வெளிச்சம்' சஞ்சிகைக்கு பாலா பல கட்டுரைகளை எழுதியிருக்கிறார். 'பிரம்மஞானி' என்ற புனைப்பெயரில், தத்துவம், சமூகவியல், அரசியல் போன்ற துறைகளில் தொடர்ச்சியாக பல கட்டுரைகளை எழுதி யிருக்கிறார். புதுவையின் ஊக்குவிப்பும், முயற்சியும் காரணமாகவே **'உடையாத விலங்குகள்'** என்ற தலைப்பில் சீதனப் பிரச்சினை பற்றி நான் எழுதிய ஆங்கில நூல் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு தொடர்ச்சியான கட்டுரைகளாக 'வெளிச்சத்தில்' பிரசுரமாகின.

புதுக் கவிதை இலக்கியத்தில் புகழீட்டியவர் புதுவை. சரியாகச் சொல்லப்போனால் அவர் ஒரு மக்கள் கவிஞர். அவரது கவிதைகள் விடுதலைப் போராட்டத்தையும் அந்தப் போராட்ட சூழலில் வாழும் மக்களின் அவலம் நிறைந்த அன்றாட வாழ்க்கையையும் உணர்வு பூர்வமாக, மெய்யுண்மையாக பிரதிபலித்துக் காட்டும். புதுவை ஒரு விடுதலைக் கவிஞரும் கூட. அவரது விடுதலைக் கவிதைகள் மிகவும் பிரபல்யமானவை. தமிழர் தேசமெங்கும் எல்லா மக்களாலும் உணர் வுடன் பாடப்படும் கவிதைகள்.

எமது வீட்டுக்கு அடிக்கடி விஜயம் செய்யும் நண்பர்களில் ரவியும் (ரவீந்திரன்) ஒருவர். ரவி ஒரு சிரேஷ்ட உறுப்பினர். புலிகள் அமைப்பின் அதிகாரபூர்வ இதழான 'விடுதலைப் புலிகள்' பத்திரிகையின் ஆசிரியர். அடுத்தது திரு. ஜெயராஜ். புலிகள் அமைப்பின் தினசரிப் பத்திரிகையான 'ஈழநாதத்தின்' ஆசிரியர். விடுதலைப் புலிகள் அமைப்பின் கொள்கை நெறி தவறாமல் எழுத வேண்டும் என்பதால் ரவியும், ஜெயராஜும் பாலாவின் வழிகாட்டலில் தங்கியிருந்தனர். அரசியல் நிலையிலும், போர்க்கள நிலவரங்களிலும் ஏற்படும் மாற்றங்கள், திருப்பங்களை அறிந்து கொள்வதற்காக ஜெயராஜ் எமது வீட்டிற்கு தினமும் வருவார். இராணுவ, அரசியல் நிலைமை பற்றிய மாதாந்த ஆய்வுக் கட்டுரைகள் எழுதவேண்டும் என்பதால், ரவி பாலாவை அடிக்கடி சந்தித்து, கலந்தாலோசனைகள் நடத்துவார். விடுதலைப் புலிகளின் இராணுவ தந்திரோபாய நகர்வுகள் பற்றி விபரிக்கும் கட்டுரைகள் திரு. பிரபாகரனுக்கு அனுப்பப்படவேண்டும். அவரது ஒப்புதலைப் பெற்ற பின்னரே அக்கட்டுரைகள் 'விடுதலைப் புலிகள்' பத்திரிகையில் பிரசுரமாகும். புலிகள் அமைப்பின் கொள்கையை விளக்கி 'விடுதலைப் புலிகள்' பத்திரிகைக்கு சில சமயங்களில் பாலாவும் தத்துவார்த்த கட்டுரைகளை எழுதுவார். புலிகள் அமைப்பின் கொள்கையை வகுக்கும் தத்துவாசிரியர் என்ற ரீதியில் மட்டுமல்லாமல், பத்திரிகைத் துறையில் நிறைய அனுபவம் பெற்றவர் என்பதாலும் பாலாவின் ஆலோசனையும் வழிநடத்தலும் ரவிக்கும், ஜெயராஜிற்கும் தேவைப்பட்டது. அத்தோடு திரு. பிரபாகரனுடனும், தமிழ்ச்செல்வனுடனும், மற்றைய மூத்த தளபதிகளுடனும் பாலாவுக்கு தனிப்பட்ட உறவும் தொடர்பும் இருந்ததால் அன்றாட செய்திகளை மட்டுமன்றி, அரசியல் - இராணுவ நிலைமைகளையும் திருப்பங்களையும் எடுத்து விளக்கும் ஆற்றல் பாலா விடம் இருந்தது.

ரவியின் மனைவி சோபனா விடுதலைப் புலிகள் அமைப்பில் பணிபுரிந்தவர். மகளிர் அமைப்பின் மாதாந்த ஏடான 'சுதந்திரப் பறவைகள்' பத்திரிகையில் அவர் பணிபுரிந்த காலத்திலிருந்து சோபனாவை எமக்கு நன்கு தெரியும். ஜெயராஜின் மனைவி கங்கா. இவர் புதுக்குடியிருப்பு மகாவித்தியாலயத்தில் ஆசிரியையாகப் பணிபுரிந்து வருகிறார். இவ்விரு தம்பதிகளும் எமது நெருங்கிய நண்பர்கள் என்பதால் அடிக்கடி எமது இருப்பிடத்திற்கு வந்து செல்வார்கள்.





## தொடரும் போர்

கண்டி - யாழ்ப்பாண நெடுஞ்சாலையைக் கைப்பற்றி, வன்னிப் பெருநிலப்பரப்பை இரு கூறுகளாக துண்டாடும் நோக்கத்தோடு தொடக்கப்பட்ட 'ஜெயசுக்குறு' படைநகர்வு, 18 மாதங்களாக நிகழ்ந்த கொடிய சண்டைகளைத் தொடர்ந்து மாங்குளத்தில் தடுத்து நிறுத்தப்பட்டது. சிங்கள இராணுவத்தின் முன்னேற்றத்தை எப்படியாவது முறியடிக்க வேண்டுமென உறுதிபூண்டு நின்ற புலிப் படைவீரர்கள், மிகவும் மூர்க்கமான எதிர்த் தாக்குதலைத் தொடுத்தனர். சிங்கள இராணுவப் படையணிகளுக்கு பின்புறமாகவும், பக்கவாட்டாகவும் உக்கிரமான தாக்குதலை நடத்தி, அரச துருப்புகளுக்கு பாரிய உயிர்ச் சேதங்களை விளைவித்தனர். புலி வீரர்களின் ஆக்ரோசமான எதிர்த் தாக்குதல்களின் விளைவாக அரச படைகளின் மனவுறுதி உடைக்கப் பட்டது. 'ஜெயசுக்குறு' சமரில் 3000 இராணுவத்தினர் கொல்லப் பட்டதுடன் 7000 பேர் வரை காயமடைந்தனர்.

வன்னிக் காடுகள் விடுதலைப் புலிகளுக்கு மிகவும் பரீட்சியமான பிரதேசம். இந்த மண்ணில்தான் புலிவீரர்கள் உலகத்தின் நான்காவது பெரிய இராணுவமாகிய இந்தியப் படையுடன் போராடி சாதனைகளைப் படைத்தனர். காட்டு கெரில்லாப் போரில் ஆழமான அனுபவத்தைக் கொண்டிருந்ததாலும், தமக்கு பழக்கப்பட்ட, இராணுவ ரீதியாக அனுகூலமான நிலத்தில் நின்று போராடியதாலும், புலிப் படைவீரர்கள் சிங்கள அரச படைகளுக்கு பெரும் சவாலாக விளங்கினர். முல்லைத்தீவு பெரும் தளத்திலிருந்து கைப்பற்றப்பட்ட தளபாடங்களை ஆதாரமாகக் கொண்டு பீரங்கி, மோட்டார், டாங்கி எதிர்ப்புப் படைப் பிரிவுகளை உருவாக்கிய் பிரபாகரன், அவற்றை 'ஜெயசுக்குறு' படையணிக்கு எதிராக ஏவிவிட்டார். தமிழீழத்தின் முழுப் படை பலத்தையும் அணிதிரட்டி வன்னிப் பிரதேசத்தை பாதுகாக்க அவர் உறுதி பூண்டிருந்தார். இதன் அடிப்படையில் மட்டக்களப்பு - அம்பாறை மாவட்டத்தின் மூத்த தளபதி யான கேணல் கருணாவின் தலைமையில் இயங்கிய ஜெயந்தன் படையணியை வன்னிக்கு வரவழைத்தார். ஜெயந்தன் படையணி போர் அனுபவத்தில் முதிர்ந்த, போர்க் கலையில் பல சாதனைகளைப் புரிந்த ஒரு சிறப்புப் படைப்பிரிவு. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த வன்னிப் பெருஞ்சமரில் ஜெயந்தன் படையணி யின் பங்களிப்பு மகத்தானது. அது வன்னிச் சமரில் பெரும் திருப்பத்தை ஏற்படுத்தியது. ஜெயந்தன் படையணி, சாள்ஸ் அன்ரனி படையணி, இம்ரான் - பாண்டியன் படையணி, மாலதி படையணி, சுகன்யா படையணி, சோதியா படையணி, மற்றும் வேவுப் பரிவு, டாங்கி எதிர்ப்பு விசேட அணி, கரும்புலி அணி, விமான

எதிர்ப்பு அணி போன்ற சகல படைப் பிரிவுகளும் ஒன்றிணைக்கப்பட்ட ஒரே கட்டளைப் பீடத்தின் கீழ் எதிரிப் படைகள் மீது தாக்குதல்கள் நிகழ்ந்தன. இந்தப் பாரிய எதிர்த் தாக்குதலுக்கு கேணல் கருணா, கேணல் தீபன், கேணல் பால்ராஜ், கேணல் பானு, கேணல் விதுஷா ஆகிய மூத்த களத் தளபதிகள் தலைமை தாங்கி படை நடத்தினர்.

'ஜெயசுக்குறு' படையெடுப்பில் அமெரிக்காவில் பயிற்சி பெற்ற 53, 54 படைப் பிரிவுகள் உட்பட, 30,000 சிங்கள இராணுவத்தினர் ஈடுபடுத்தப்பட்டனர். சண்டைகள் மிகவும் மூர்க்கமானதாக நீண்ட காலத்திற்கு இழுபட்டன. விமானக் குண்டுவீச்சு உட்பட பாரிய சுடு சக்தியை பிரயோகித்த போதும், சிங்கள ஆயுதப் படையினரால் தமது தந்திரோபாய இலக்கினை அடைய முடியவில்லை. ஊடுருவ முடியாத பாதுகாப்பு அரண்களை நிறுவி புலிப் படை வீரர்கள் கடுமையான எதிர்த் தாக்குதலை நிகழ்த்தியதன் விளைவாக புளியங்குளம், கனகராயன் குளம் போன்ற கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த பட்டினங்களில் சிங்களத் துருப்புகள் முன்னேற முடியாமல் பல மாதங்களாக முடங்கிக் கிடந்தன. இந்தப் பட்டினங்களில் நிகழ்ந்த பயங்கரமான சண்டைகளில் சிங்கள இராணுவம் பெருமளவில் உயிர்ச் சேதத்தை சந்தித்தது. இச் சண்டைகளின்போதுதான் சிங்கள இராணுவத்தின் சிறப்புப் படையணிகள் சிதைக்கப்பட்டன. நூற்றுக்கணக்கில் இப் படையணிகளைச் சேர்ந்த அதிரடிப் படை வீரர்கள் கொல்லப்பட்டனர். 18 மாதங்களாக தொடர்ந்த கடும் சமரின் இறுதிக் கட்டத்தில் சிங்கள இராணுவம் மாங்குளத்தை அண்மித்தது. அப்படியிருந்தும் மாங்குளத்தில் விடுதலைப் புலிகளின் அரண்களை சிங்கள இராணுவத்தால் உடைக்க முடியவில்லை. 1998ம் ஆண்டு செப்டெம்பர் 27ம் திகதி 'ஓயாத அலைகள் 2' என்ற வலிந்து தாக்கும் நடவடிக்கையை மேற்கொண்ட விடுதலைப் புலிகள் கிளி நொச்சிப் பட்டினத்தையும் அதன் சுற்றாடலையும் கைப்பற்றினர். தமது சிறப்புப் படையணிகளை ஈடுபடுத்தி, கிளிநொச்சி சமரில் புலிகள் கவனம் செலுத்திக் கொண்டிருந்த வேளையில்தான் சிங்கள இராணுவம் மாங்குளத்தைக் கைப்பற்றியது. எனினும் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த கிளிநொச்சி புலிகள் வசம் வீழ்ந்தமை சிங்கள இராணுவத்திற்கு பெரும் பின்னடைவாக அமைந்தது. யாழ்ப்பாணம் வரை பாதை திறக்க வேண்டுமென்ற அரசாங்கத்தின் திட்டத்திற்கு இதுவொரு பேரிடியாக விழுந்தது. கண்டி - யாழ்ப்பாண நெடுஞ்சாலை வழியாக மெல்ல மெல்ல வதைபட்டு முன்னேறிய சிங்களப் படைகளின் பயணம் மாங்குளத்துடன் நிரந்தரமாக நிறுத்தப்பட்டது.

'ஜெயசுக்குறு' சமர் மிகவும் உக்கிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்த வேளையில், முல்லைத்தீவிலுள்ள புதுக்குடியிருப்பில்





எமது வாழ்க்கை இயல்பான முறையில் ஓடிக்கொண்டிருந்தது. நாளாந்தம் கேட்கும் பீரங்கிகளின் முழக்கம் எமது வாழ்க்கையின் ஓர் அம்சமாகிவிட்டது. இடைக்கிடையே முல்லைத்தீவு கரையோரமாக நடைபெறும் விமானக் குண்டுவீச்சுகளும் கடற்படை பீரங்கி தாக்குதல் களும் இயல்பான நிகழ்வாகிவிட்டன. நாளாந்த போர் நிலவரங்களை பிரபாகரனின் செயலகத்திலிருந்து அறிந்து கொள்வோம். அந்தச் செய்திகளை, பாலா உள்ளூர் ஊடகங்களுக்குத் தெரிவிப்பார். திரு. பிரபாகரன் அல்லது மூத்த களத் தளபதிகள் யாராவது எமது வீட்டிற்கு வரும்பொழுது, கள நிலவரங்கள் பற்றிய விபரங்களை அவர்களிடமிருந்து அறிந்து கொள்வோம். ஈழநாதம் பத்திரிகையின் நிர்வாகப் பொறுப்பாள ரான திரு. தினேஷ் எமது வீட்டிற்கு அடிக்கடி வருவார். இவர் ஒரு சிரேஷ்ட உறுப்பினர். அத்துடன் எமது நண்பரும் கூட. 'ஜெயசுக்குறு' சமர் உக்கிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்த வேளையில், ஆபத்தையும் பொருட்படுத்தாது, இவர் துணிவுடன் போர்க் களத்திற்கு அடிக்கடி சென்று போர் நிலவரங்களை எமக்கு வந்து விளக்குவார்.

வன்னிப் பெருஞ்சமரில் பங்குபற்றி 'ஜெயசுக்குறு' படை யெடுப்பை முறியடித்ததில் கேணல் கருணாவின் தலைமையி லான ஜெயந்தன் படையணி மகத்தான பங்காற்றியது. இதனால் கேணல் கருணா, புலிப் படை வீரர்கள் மத்தியில் புகழையும் பெரும் மதிப்பையும் பெற்றார். வன்னி மக்களும் நன்றி கலந்த அன்புடன் அவரைப் பாராட்டினர். கேணல் கருணா போர்க்கலையில் வித்தகர். பல களங்களைக் கண்ட வீரர். தனது அறிவை வளர்க்க வேண்டும் என்பதில் அவருக்கு ஒரு அலாதியான ஆசை உண்டு. தனது சொந்த முயற்சியினால் ஆங்கில மொழியைக் கற்றறிந்து தேறினார். ஆங்கில மொழியில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்ததால் அவரால் பல விடயங்களை வாசித்து அறிந்து கொள்ள முடிகிறது. இராணுவ விஞ்ஞான நூல்களையும், அரசியல் ஆய்வு களையும் அவர் விரும்பிப் படிப்பார். எனவேதான் கருணா எமது வீட்டுக்கு வரும்பொழுதெல்லாம் உள்நாட்டு வெளிநாட்டு அரசியல் நிலவரங்கள் பற்றி கேள்விக் கணைகளுடன் வருவார். பாலாவும் இந்தச் சந்தர்ப் பங்களைப் பயன்படுத்தி, வன்னிக் கள நிலைமைகள் பற்றி துருவி ஆராய்ந்து விபரமான விளக்கத்தைப் பெறுவார். மட்டக்களப்பு போராளிகள் அன்புடன் மனம் திறந்து உறவாடும் இயல்புடையவர்கள். போரிலும் திறமைசாலிகள்; வீரம் படைத்தவர்கள். தென் தமிழீழத்தில் அரச ஒடுக்குமுறை ஈவிரக்கமற்றதாக, கொடுமையானதாக இருந்ததால்,

இந்தச் சூழலில் பிறந்து வளர்ந்து புலிகள் இயக்கத்தில் இணைந்த இளம் பரம்பரை, அரச ஒடுக்குமுறையின் கருவியாக இயங்கும் ஆயுதப் படைகளுடன் போரிடுவதில் அபாரமான மனவுறுதியும் துணிவும் படைத்ததாக விளங்கியது. தென் தமிழீழ புலி வீரர்களுக்கு மரபு வழி போர்க் கலையில் கடும் பயிற்சிகளைப் பெறுவதற்கு திரு. பிரபாகரன் வாய்ப்பளித்தார். இப் பயிற்சிகளால் தேர்ந்த ஜெயந்தன் படையணி எதிரி இராணுவத்திற்கு மரண அடிகளைக் கொடுத்தது.

## பாலா கடுமையாக நோயுற்றார்

1998 ஆகஸ்ட் மாதம் 27ம் திகதி, மாலை வேளை. ஒரு பெண் போராளியின் திருமண வைபவத்தில் கலந்து கொள்வதற்காக வெள்ளை வேட்டியும் சேட்டும் அணிந்து துப்புரவாக புதுப்பொலிவுடன் காணப் பட்டபோதும் பாலாவின் முகத்தில் ஏதோ பிசகு இருப்பது போல் எனக்குப் பட்டது. சிறிது உற்றுப் பார்த்தபோது அவரது கண்கள் சிறிதாக வீங்கியிருப்பதை நான் அவதானித்தபோதும், பிற்பகல் தூக்கத்தால் ஏற்பட்டிருக்கலாமென எண்ணி நான் அதனைப் பொருட்படுத்தவில்லை. திருமண வைபவத்தில் புலிகள் அமைப்பின் மருத்துவரான டாக்டர் சூரியை சந்தித்தபோது பாலாவின் முகம் அதைத்திருப்பதை அவரிடம் குறிப்பிட்டுச் சொன்னேன். கடந்த இரு வாரங்களாக பாலாவுக்கு வயிற்றுக் கோளாறு இருப்பதையும், கண்களும் குதிக்காலும் வீங்கியிருப்பதையும் சுட்டிக்காட்டி, சில சமயம் இவை சிறுநீரக வியாதியின் தோற்றப்பாடாக இருக்குமோ என நான் வேடிக்கையாக சொன்னபோது டாக்டர் சூரி சிறிது வியப்படைந்து கலவரத்துடன் காணப்பட்டார். அடுத்த நாள் காலை, பாலா சிறுநீர் கழிக்கவில்லை என அறிந்ததும், அவர் கடுமையாக நோயுற்றிருக்கிறார் என்பதை உணர்ந்து கொண்டேன். இந்த சம்பவத்துடன் எமது தனிப்பட்ட வாழ்க்கை வரலாற்றில் ஒரு புதிய திருப்பம் கட்டவிழத் தொடங்கியது. வன்னியில் பாலா சுகவீனமடைந்து சாவின் விளிம்பை அடைந்தபோது எமது வாழ்க்கை நிச்சயமற்றதாக மாறியது.

பாலாவின் நோய்க் குறிகளை அறிந்ததும் புலிகள் அமைப்பைச் சேர்ந்த மருத்துவர்கள் அவரை வந்து பரிசோதனை செய்து பார்த்தார்கள். நோயை இனம்கண்டு காட்டக்கூடிய மருத்துவக் கருவிகளோ அன்றி பரிசோதனை ஆய்வு வசதிகளோ புதுக்குடியிருப்பில் இருக்கவில்லை. வெளிப்பாடாக தென்பட்ட நோய் குறிகளை அடிப்படையாக் கொண்டு,





புலிகளின் மருத்துவர்களும் உள்ளூர் மருத்துவமனையில் பணியாற்றும் மருத்துவரும் கலந்தாலோசித்து, சிறுநீரகத்தில் தொற்றுநோய் என தற்காலிகமாக முடிவெடுத்தனர். பரீட்சார்த்த குளாயில், சிறுநீரை நெருப்பில் சூடு காட்டியபோது அதில் தென்படும் புரதப் பொருளின் அளவைக் கொண்டே சிறுநீரகத்தில் கோளாறு உள்ளதாக மருத்து வர்களால் கணிப்பிடமுடிந்தது. வழமையான தொற்றுநோய் தடுப்பு மருந்துகளால் பாலாவுக்கு சிகிச்சை அளிக்கப்பட்டது. எனினும் அவருக்கு குணம் ஏற்படவில்லை. படிப்படியாக அவரது நோய் கடுமையாகிறது.

பாலாவுக்கு சிகிச்சை அளிக்கும் பொறுப்பு, புலிகள் அமைப்பின் மூத்த மருத்துவரான டாக்டர் சூரியிடம் ஒப்படைக்கப்பட்டது. சூரி, ஆற்றலும் அனுபவமும், அன்பும் பண்பும் நிறைந்த ஒரு இளம் மருத்துவர். 1996ம் ஆண்டு, வன்னிக்கு இடம்பெயர்வதற்கு முன்பாக, யாழ்ப்பாண பொது வைத்தியசாலையின் அறுவைச் சிகிச்சைப் பிரிவில் பணிபுரிந்து நிறைய அனுபவம் பெற்றவர் சூரி. அதன் பின்பு வன்னிச் சமர்களில் காயம டைந்த ஏராளமான போராளிகளுக்கு சிகிச்சை அளித்தவர். பாலாவுக்கு ஏற்பட்டுள்ள சிறுநீரக நோய்க்கு உகந்த சிகிச்சையளிக்கும் ஆற்றலும் அனுபவமும் தமக்கு இல்லையென அவர் வருத்தப்படுவார். தமது கண்காணிப்பிலுள்ள நோயாளர் மீது, கடமையுணர்வுடனும் பெரும் பொறுப்புணர்வுடனும் நடந்து கொள்ளும் சூரி, பாலாவின் பராமரிப்பை பொறுத்தவரை, தனது சொந்தக் கணிப்பிற்கு மாறாக எந்த முடிவும் எடுக்க மறுத்தார். அவரது சக மருத்துவரும் எனது நண்பியுமான டாக்டர் பத்மலோஜினியுடனே சூரி கலந்தாலோசிப்பார். அத்துடன் சிறுநீரக வியாதிகள் பற்றி ஏராளமான மருத்துவ நூல்களையும் அவர் படித்தார். பாலாவுக்கு பயனுள்ள சிகிச்சை அளிப்பதாயின், முதலில் செம்மையான பரிசோதனைகள் நடத்தி அவருக்குள்ள நோய் என்னவென்பதை கண்டுபிடிக்கவேண்டும் என்பது சூரியின் கருத்து. பாலாவின் பராமரிப்பில் பழமையான முறைமையைத் தான் சூரி கடைப்பிடித்தார். சரியான முறையில் ஆய்வுகளும் பரிசோதனைகளும் செய்யாமல் நோயின் தன்மையைக் கண்டுபிடிப்பது முடியாத காரியம் என்பது அவருக்குத் தெரியும். அப்படியான சூழலில் கண்மூடித்தனமாக சிகிச்சை அளிப்பது காலக்கெதியில் ஆபத்தானதாக முடியும் என்பது அவரது கணிப்பு. எனவே, தனது அறிவிற்கும் தனக்குள்ள வசதி வரம்பிற்குள்ளும் பாலாவுக்கு சிகிச்சை அளித்துவந்த சூரி, உயிர்ரசாயனவியல் ஆய்வுகளின் அடிப்படையில், விஞ்ஞான ரீதியில், நோயின் தன்மையை இனம் கண்டுகொள்ள கடும் முயற்சி எடுத்தார். உள்ளூர் மருத்துவமனையில் பணிபுரிந்த சக மருத்துவர் ஒருவரின் உதவியுடன்,

நோயாளியின் உண்மையான பெயரை தெரியப்படுத்தாமல், பாலாவின் இரத்த, சிறுநீர் மாதிரிக் கூறுகளை ஆய்வு செய்வதற்காக, அவற்றை கொழும்புக்கு அனுப்பும் வழிமுறையை கண்டுபிடித்தார். இதனையடுத்து பாலாவின் இரத்த, சிறுநீரக மாதிரிக் கூறுகள் ஆய்வுக்காக வெவ்வேறு பெயர்களில் கொழும்புக்கு அனுப்பப்பட்டு வந்தன.

மாதிரிக் கூறுகள் கொழும்புக்கு அனுப்பப்பட்டு ஒரு வாரத்திற்குப் பின்னர், ஆய்வு முடிவுகளுடன் டாக்டர் சூரியும், சக மருத்துவர் ஒருவரும் எமது வீட்டுக்கு வருகை தந்தபொழுது, ஏதோ பாதகமான செய்தியுடன் தான் வருகிறார்கள் என்பதை நான் உணர்ந்து கொண்டேன். பாதகமான அல்லது சோகமான செய்திகளை வெளியிடத் தயங்கும் சூரி, அந் நேரங்களில் தனக்குத் துணையாக இன்னொருவரை அழைத்துவருவது நடைமுறை என்பதை அனுபவம் மூலம் நாம் அறிந்து வைத்திருந்தோம். நீண்ட கால நீரழிவு காரணமாக பாலாவின் சிறுநீரகங்களின் செயற்பாடு பாரதூரமான முறையில் பாதிக்கப்பட்டிருப்பதாக ஆய்வுகளிலிருந்து தெரிய வந்தது. பாலாவின் இடது சிறுநீரகம் முற்றாக முடக்கம் கண்டிருந்தது என்பதை அப்பொழுது நாம் ஒருவரும் அறிந்திருக்க வில்லை. மோசமான சிறுநீரக வியாதி என்பது ஒரு புறமிருக்க, பாலாவின் இரத்தத்தில் சாம்பரம் (Potassium), மூத்திரை (Urea) ஆகியவற்றின் அளவுகள் ஆபத்தான நிலையை எட்டியிருந்தன. இதற்கு வன்னியில் எந்த விதமான சிகிச்சை வசதிகளும் இருக்கவில்லை. பாலாவின் உடல் நிலை படிப்படியாக மோசமடையத் தொடங்கியது. திரு. பிரபாகரன், எமது வீட்டிற்கு அடிக்கடி வருகை தந்து, பாலாவின் உடல் நிலை பற்றி விசாரித்துச் செல்வார். அவருக்கு பாலாவைப் பீடித்திருக்கும் ஆபத்தான வியாதி பற்றி விளக்கிக் கூறப்பட்டது.

கடந்த 15 ஆண்டு காலமாக, உணவுக்கும் மருந்துக்கும் விதிக்கப்பட்ட தடை காரணமாக வட மாநிலத்தின் சுகாதார பராமரிப்பு வசதிகள் சிதைந்து போனதுடன் வெகுசனத்தின் ஆரோக்கியமும் வெகுவாக பாதிக்கப்பட்டது. 'பனடோல்' போன்ற அடிப்படையான மருந்துகளுக்கே பெரும் தட்டுப்பாடு நிலவியதால் பொதுமக்கள் பெரும் அவலங்களுக்கு ஆளானதுடன், சில சமயங்களில் அநியாயமான சாவுகளும் நிகழ்ந்தன. இது மாத்திரமன்றி, நோய்களை அறுதியிட்டுக் கூறும் வைத்திய உபகரணங்களும் இல்லாததால் நோயாளிகளின் உயிருக்கே பெரும் ஆபத்து ஏற்படும் நிலையும் எழுந்தது. புதுக்குடியிருப்பு மருத்துவமனையில் 'எக்ஸ்ரே' படமெடுக்கும் கருவிகள் இருக்கவில்லை. நீண்ட காலமாகவே இவ் வசதிகள் அங்கு இல்லாததால், மல்லாவி போன்ற தொலைவிலுள்ள இடங்களுக்கு நோயாளிகள் பயணம் செய்ய நேரிடும். மல்லாவியிலும் சில சமயங்களில்





'எக்ஸ்ரே' கருவிகள் இயங்குவதில்லை. மருத்துவ மனைகளின் அடிப்படையான தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு சிறீலங்காவின் பாதுகாப்பு அமைச்சு முட்டுக்கட்டையாக இருந்து வந்தது. மருத்துவ ஆய்வு கூட கருவிகளை வழங்குவதற்கும் பாதுகாப்பு அமைச்சு மறுத்துவந்தது. நோயாளிகளின் மாதிரிக் கூறுகளை ஆய்வு செய்து, நோய்களை அறுதியிட்டுக் கூறுவதற்கு ஏதுவான ஆய்வுகூட பரிசோதனைக் கருவிகளும் இருக்கவில்லை. இப்படியான சூழ்நிலையில் தான் பாலா கடுமையாக நோய்வாய்ப்பட்டார்.

சிறுநீரக வியாதிக்கான மருத்துவ வசதிகள் இல்லாத ஒரு சூழலில் பாலா குணமடைவது சாத்தியமாக இருக்கவில்லை. ஏனைய நோயாளிகள் போல் அவரால் கொழும்பு செல்ல முடியாது. எனவே வரையறுக்கப்பட்ட வசதிகளையும், மருந்துகளையும் பாவித்து, நோய்க் குறிகளுக்கு சிகிச்சை அளித்து சமாளிப்பதைத் தவிர அங்குள்ள மருத்துவர்களுக்கு வேறு வழியிருக்கவில்லை. பல தடவைகள் சிங்கள இராணுவம் எல்லைக் காவல் நிலைகளை மூடிவிடுவதுண்டு. இது எனக்கு ஆழமான மனக்கலக்கத்தை ஏற்படுத்துவதுண்டு. ஏனென்றால் எல்லைகள் மூடப்பட்டு போக்குவரத்துக்கு தடை ஏற்படும்போது பாலா வின் இரத்த மாதிரிக் கூறுகளை கொழும்பிற்கு அனுப்ப முடியாது போய்விடும். அவ்வேளைகளில், பாலாவின் நோய் எந்த அளவிற்கு மோசமாகியுள்ளது என்பதை இரத்தப் பரிசோதனைகள் இல்லாமல் கண்டுகொள்ள முடியாது. இந்த சூழ்நிலையில் டாக்டர் சூரி மிகவும் விரக்தியடைந்து காணப்படுவார். தனது பராமரிப்பிலுள்ள நோயாளியின் உடல்நிலை மாற்றங்களை அறியமுடியாத வசதிகளற்ற ஒரு சூழ்நிலையில் இருந்து கொண்டு, அந்த நோயாளி படிப்படியாக மோசமடைந்து வருவதைக் காண அவருக்கு வேதனையும் விரக்தியுமாக இருக்கும். இரத்த அழுத்தம் காரணமாக பாலாவுக்கு அடிக்கடி தாங்கமுடியாத தலைவலி ஏற்படுவதுண்டு. அப்பொழுது அங்கு கிடைக்கக்கூடிய பழைய வகையான இரத்த அழுத்த தடுப்பு மருந்துகளைப் பாவித்து நிலைமையை சமாளிக்க முடிந்தது. சில சமயங்களில் அசாதாரணமாக இதயத் துடிப்பு ஏற்படும். இரத்தத்தில் சாம்பர (Potassium) நிலை மோசமாவதை அது குறிக்கும். அவரது நீரிழிவு நோய்க்கு அவசியமான இன்சுலின் ஊசி மருந்து கிடைக்காமல் போனதும் நிலைமையை மோசமாக்கியது. பாலா பாவிக்கும் இன்சுலின் மருந்து இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் கிடைக்கும். இந்த மருந்தை ஒழுங்கான முறையில் வெளிநாடுகளிலிருந்து பெற்றுக் கொடுப்பார் திரு. பிரபாகரன். துரதிர்ஷ்ட வசமாக இம்முறை நாம் சேமித்து வைத்திருந்த இன்சுலின் மருந்து பழுதடைந்துவிட்டது. வேறுவழியின்றி காலாவதியான

பழுதடைந்த மருந்தையே பாவிக்க நிர்ப்பந்திக்கப்பட்டோம். எனினும் இரண்டு வாரங்களின் பின்பு, பனிக் கட்டிகளுக்குள் அடைக்கப்பட்ட புதிய இன்சுலின் மருந்துகளை எமக்குக் கையளித்தார் திரு. பிரபாகரன்.

பாலாவின் உடல்நிலை படிப்படியாக மோசமடைந்தது. படுக்கையால் எழுந்திருக்க முடியாத நிலை. சிறுநீரக நோய்க்கு அவசர சிகிச்சை பெற வேண்டிய கட்டம் வந்துவிட்டது. இந்த நோய்க்கு சிகிச்சை அளிப்பதற்கு வன்னியில் எவ்வித வசதியுமில்லை என்பதால் மருத்துவர்களால் எதுவுமே செய்யமுடியவில்லை. மனம் கலவர மடைந்த இத்துயர வேளைகளில், பாலாவின் செயலகத்தில் பத்திரிகைகள் படித்தவாறு நீண்ட நேரமாக அமைதியாக காத்திருப்பார் கபில் அம்மான். இவர் ஒரு மூத்த உறுப்பினர். எமக்கு நெருங்கிய நண்பர். 1984ம் ஆண்டிலிருந்தே இவரோடு நாம் உறவாடி வருகிறோம். அப்பொழுது பாலா நடத்திய அரசியற் பயிற்சி வகுப்புகளில் பங்குபற்றிய இளம் போராளிகளில் கபில் அம்மானும் ஒருவர். திருகோணமலையைப் பிறப்பிடமாகக் கொண்ட இவர் நிறைய கள அனுபவம் பெற்றவர். கபில் அம்மான் மிகவும் மென்மையான உள்ளம் படைத்தவர். மனிதம் பற்றியும் மனித உரிமைகள் பற்றியும் இவர் ஆழமாக சிந்திப்பார். இவ்விடயங்கள் குறித்து பாலாவுடன் கலந்துரையாடுவார். பாலாவின் கடும் சுகவீனம் குறித்து கபில் அம்மானுக்கு ஆழமான கவலை. அவர் அடிக்கடி வீட்டுக்கு வந்து செல்வார். ஆனால் எனக்கோ பாலாவுக்கோ எவ்வித தொல்லையும் கொடுப்பதில்லை. பாலாவின் உடல்நிலைபற்றி மட்டும் விசாரித்துக் கொள்வார். தான் எத்தகைய உதவியும் செய்யத் தயாராக இருக்கின்றேன் என்பது போல அவர் அமைதியாக, நீண்ட நேரம் பாலா வின் ஆசிரம குடிசையில் அமர்ந்திருப்பார்.

பாலா கடுமையாக சுகவீனமுற்றிருக்கிறார்; அச் சுகவீனத்தி லிருந்து மீளமாட்டார் என்ற செய்தி காட்டுத்தீ போல அமைப்பு அடங்கிலும் பரவியது. இத் தகவலை திரு. பிரபாகரன் தனது தளபதிகளுக்கும் அறிவித்திருந்தார். இதனையடுத்து தளபதிகளும் மூத்த உறுப்பினர்களும் ஒருவர் ஒருவராக எமது வீட்டிற்கு வந்து சென்றார்கள். சிலர், கடைசி சந்திப்பாகவும் நினைத்து வந்தார்கள். பாலாவைப் பார்க்க வந்த மூத்த தளபதிகளில் ஒருவர் பொட்டு அம்மான். எமது பழைய நண்பரும் மூத்த தலைவர்களில் ஒருவருமான பேபி சுப்பிரமணியம் (இளங்குமரன்) தனது மனைவி வெற்றிச்செல்வியுடன் மல்லாவியிலிருந்து வந்திருந்தார். பாலாவின் கடும் சுகவீனம் அவரை கவலையடையச் செய்திருந்தது. இந்த நெருக்கடியான சூழ்நிலையில், எமக்கு எல்லோரிடமிருந்தும் ஆறுதலும் அனுதாபமும் வந்து குவிந்தது.

பாலா சுகவீனமடைந்த ஆரம்ப கட்டத்தில் எனக்கு முதன்





முறையாக கைகொடுத்து உதவி புரிந்தவர் இந்திராணி. முன்னாள் ஈரோஸ் தலைவரும், விடுதலைப் புலிகளின் முக்கிய பிரமுகருமான திரு. பாலகுமாரின் மனைவியான இந்திராணி ஒரு பயிற்சி பெற்ற தாதியாவார். மருத்துவ அறிவு உள்ளவர் என்பதால், மற்றவர்களைவிட இலகுவாகத் தான் பாலாவின் ஆபத்தான நோய்பற்றி புரிந்து கொள்ள முடிந்தது. அந்த அறிவு காரணமாகவே, சில சமயங்களில், எமது வீட்டுக்கு வரும்பொழுது அவரது கண்கள் கலங்கும். மோசமாகிவந்த பாலாவின் உடல்நிலை குறித்து இந்திராணி கவலையடைந்த போதும் தன்னால் முடிந்த அளவிற்கு உடலுதவிகளைச் செய்து வந்தார். பசி குறைந்த நிலையிருந்த பாலாவுக்கு, அவரது உடலுக்கு எவ்வகையிலும் மாறு விளைவிக்காத வகையில், பசியைத் தூண்டும் சுவையான உணவு வகைகளை சமைத்து வருவார். பாலாவின் நோய்பற்றியும், அவரைப் பராமரிக்கும் முறைகள் பற்றியும் நான் இந்திராணியிடம் கேட்டறிந்து கொள்வேன். தாதிப் பராமரிப்பு பற்றிய பல விடயங்களை நான் மறந்து போயிருந்தேன். எனவே, அவருடன் உரையாடும்போது பல விடயங்கள் நினைவுக்கு வரும். பாலாவின் உடல் உபாதையை குறைப்பதற்கு சில ஆலோசனைகள் சொல்லுவார். ஒட்டுமொத்தத்தில், இந்திராணியின் உறவும் உரையாடல்களும் எனக்குப் பெரும் ஆறுதலாகவும் உதவியாகவும் இருந்தது.

வனீதா எனது பழைய நண்பி. தமிழீழ காவல் துறையின் பொறுப்பாளர் திரு. நடேசனின் மனைவி. இவர்கள் எமது வீட்டுக்கு அண்மையில் வசித்து வந்தனர். பாலா சுகவீனமுற்ற பொழுது வனீதா எமது வீட்டுக்கு அடிக்கடி வந்து செல்வார். சில சமயங்களில் கணவனுடன் குடும்பமாக வருவார். எமது வீட்டுக்கு வரும்பொழுது தன்னால் முடிந்த உதவிகளைச் செய்வார். சிறுநீரக நோய் என்பதால், மருத்துவர்கள் பாலாவின் சாப்பாட்டில் கடுமையான கட்டுப்பாடுகளை விதித்திருந்தனர். எனவே நான் வழமையாக சமைத்து வந்த உணவு வகைகளை சமைக்க முடியவில்லை. இதனால் எனது சமையலும் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. அதே வேளை, பாலாவுக்கு சத்துணவும் கொடுக்க வேண்டும். வித்தியாசமான உணவு வகைகளை சமைப்பதற்கு நான் வனீதாவிடம் ஆலோசனை கேட்பேன். அவர் யோசனைகள் கூறுவது மட்டுமன்றி, வித்தியாசமான உணவுகளை சமைப்பதில் எனக்குப் பயிற்சியும் தருவார். ஒரு வெள்ளைக்காரப் பெண்ணுக்கு, ஒரு சிங்களப் பெண்மணி தமிழ் உணவு வகைகளை சமைப்பது பற்றி பயிற்சி அளிப்பதென்பது ஒரு விநோதமான விடயம்தான். அதுவும் தமிழ் மொழியில் நாம் கதைத்துப் பேசி தமிழ் உணவுகளை சமைக்கும் வேடிக்கையைப் பார்த்தவர்கள் சிரிக்கத்தான் செய்தார்கள். திரு. நடேசனும் வனீதாவும் எமது குடும்ப நண்பர்கள். நடேசன் எமது வீட்டுக்கு

அடிக்கடி வந்து செல்வார். அப்பொழுதெல்லாம் தமிழீழ காவல் துறையின் நிர்வாகம் பற்றி அவர் பாலாவுடன் கலந்தாலோசனைகள் நடத்துவார். பாலாவின் கருத்துகளை அவர் அக்கறையுடன் செவிமடுப்பார். தமிழீழ காவல்துறையில் புதிதாக சேர்க்கப்பட்ட உறுப்பினர்களுக்கு தொடர்ச்சியாக பல வகுப்புகளை நிகழ்த்தி யிருக்கிறார் பாலா. போரினால் பொதுமக்களுக்கு பாரிய சமூக பொருளாதார பிரச்சனைகள் தோன்றியுள்ளன என்பதைச் சுட்டிக்காட்டி, குற்றத்தை தடுத்து சட்டம் ஒழுங்கை நிலைநாட்டும் கடமைகளில் மனிதாபிமான அணுகுமுறையைக் கடைப்பிடிக்குமாறு பாலா தமது வகுப்புகளில் வலியுறுத்துவார். குற்றங்களுக்கு பின்னணியிலுள்ள சமூக, பொருளாதார சிக்கல்களை கருத்தில் எடுத்து, பொதுமக்களை அன்புடனும் கருணையுடனும் அணுகுவதன் அவசியத்தையும் எடுத்து விளக்குவார்.

சட்டம் ஒழுங்கை நிலைநிறுத்தும் விடயத்தில், சில சமயங்களில் காவல்துறை அதிகாரிகள் கடுமையான நடவடிக்கை எடுக்கும் பொழுது பொதுமக்களிடமிருந்து பாலாவுக்கு முறையீடுகள் வருவதுண்டு. அப்பொழுதெல்லாம் மக்களின் மனச்சாட்சியாக நின்று, இம் முறையீடுகள் பற்றி நடேசனுடன் கலந்துரையாடுவார் பாலா. நடேசன் ஒரு மூத்த உறுப்பினர். முற்போக்கு சிந்தனையுடைய அரசியற் பின்னணியை உடையவர். ஆகவே, நாம் கூறும் கருத்துகளுக்கு அவர் மதிப்பளிப்பார். நாம் முன்வைக்கும் விமர்சனங்களையும் ஆக்கபூர்வமாக எடுத்து கொள்வார்.

புதுவையின் மனைவியான ரஞ்சினியும் எனக்கு உதவியாக இருந்தார். பாலா விரும்பி உண்ணும் சுவையான உணவுகளை தயாரித்து அனுப்பி வைப்பார். சில சமயங்களில் சூசையின் மனைவி சுதாவும் எமது வீட்டுக்கு வருகை தந்து உணவு தயாரிப்பதில் எனக்கு உதவி செய்வார்.

மோசமடைந்திருந்த பாலாவின் உடல்நிலை குறித்து, டாக்டர் சூரி, திரு. பிரபாகரனுக்கு அடிக்கடி அறிக்கைகளை அனுப்பி வைப்பார். ஏனைய மருத்துவர்களும் பாலாவின் நோய்பற்றி தமது அபிப்பிராயங்களை பிரபாகரனுக்கு தெரியப்படுத்தினர். சிறுநீரக முடக்கத்திற்கு சிகிச்சை வசதிகளுள்ள ஒரு நவீன மருத்துவமனையில் பாலாவை அனுமதிக்க வேண்டுமென்றும், அதற்கு அவரை காலம் தாழ்த்தாது உடனடியாக வெளிநாடு ஒன்றிற்கு அனுப்பி வைக்க வேண்டுமென்றும் மருத்துவர்கள் கூட்டாகக் கருத்துத் தெரிவித்தனர். இதனைத் தொடர்ந்து, அவரச சிகிச்சைக்காக தமிழ் நாட்டிற்கு பாலாவை அனுப்பிவைப்பது பற்றி ஆராய்ந்தோம். இந்த யோசனைக்கு தமிழ்நாட்டு அரசியல்வாதிகள் சிலர் ஆதரவும் அனுதாபமும் தெரிவித்தபோதும் எமது இயக்கம் மீது இந்திய அரசு தடைவிதித்திருந்த காரணத்தால் இந்தியா





செல்வது ஆபத்தான காரியம் என்பதை உணர்ந்தோம். நோர்வே அரசின் உதவியை நாடுமாறு எமது சர்வதேச செயலகத்திற்கு திரு. பிரபாகரன் பணித்திருந்ததைத் தொடர்ந்து இந்த வெளிநாட்டின் உதவியை நம்பி நாம் ஆவலுடன் காத்திருந்தோம்.

## சந்திரிகாவின் நிபந்தனைகள்

இலங்கையின் முன்னாள் வெளிவிவகார அமைச்சர் திரு. ஏ.சி.எஸ். ஹமீது நோர்வே அரசுடன் நெருங்கிய தொடர்புடையவர். கொழும்பிலுள்ள நோர்வேயின் தூதுவர் திரு. ஜோன் வெஸ்போக்கின் நண்பர். எதிர்காலத்தில் சிறீலங்கா அரசிற்கும் விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் சமாதானப் பேச்சுவார்த்தைகள் நடைபெறும் பட்சத்தில் பாலா முக்கிய பங்கு வகிப்பார் என்றும் அவரது உடல்நலம் தேறுவதற்கு நோர்வே அரசு உதவவேண்டுமென்றும் திரு. ஹமீது நோர்வேயின் தூதுவருக்கு வேண்டுகோள் விடுத்திருந்தார். இதனையடுத்து பாலாவுக்கு உதவ நோர்வே அரசு முன்வந்தது. முதலில் அவரது நோயும், உடல்நிலைபற்றியும் அறிந்து கொள்ளும் பொருட்டு நோர்வே அரசு சர்வதேச செஞ்சிலுவைச் சங்கத்தின் உதவியை நாடியது. இதனைத் தொடர்ந்து, கொழும்பிலுள்ள செஞ்சிலுவைச் சங்க பிரதிநிதி திரு. மக்ஸ் ஹட்ரன் ஒரு மருத்துவ நிபுணருடன் புதுக்குடியிருப்பிலுள்ள எமது வீட்டிற்கு வருகை வந்து பாலாவின் உடல்நிலையை பரிசோதனை செய்தார். "பாலாவை உடனடியாக வெளிநாட்டிற்கு அனுப்பி வைக்க வேண்டும்" என வற்புறுத்திய செஞ்சிலுவைச் சங்க மருத்துவர், பாலா வின் இரத்த, சிறுநீர், மாதிரிக் கூறுகளை மேலதிக பரிசோதனைக்காக கொழும்புக்கு எடுத்துச் சென்றார்.

மனிதாபிமான அடிப்படையில், பாலாவை வெளிநாட்டிற்கு அனுப்பிவைக்கும் திட்டத்துடன் நோர்வே அரசும் சர்வதேச செஞ்சிலுவைச் சங்கமும் ஜனாதிபதி சந்திரிகா குமாரதுங்காவை அணுகின. சிறுநீரக செயலின்மையால் பாலா கடுமையாக நோயுற்றிருக்கிறார் என்ற செய்தியை சந்திரிகாவுக்கு அறிவித்த அவர்கள், வெளிநாட்டுக்கு அவர் எடுத்துச் செல்லப்பட வேண்டும் என்றும் அதற்கு நோர்வே அரசு உதவத் தயாராக இருப்பதாகவும் தெரிவித்தார்கள். எதிர்காலத்தில், சிறீலங்கா அரசுக்கும், தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் சமாதான பேச்சுவார்த்தை நிகழும் பட்சத்தில் பாலாவின் பங்கு முக்கியமானதாக அமையும் என்பதால் அவரது உடல் நிலை தேற உதவுவது அவசியமெனவும் நோர்வே தூதுவர் சந்திரிகா அம்மையாருக்கு எடுத்து விளக்கினார். இப் பிரச்சினை சம்பந்தமாக கொழும்பில் நீண்ட மந்திராலோசனைகள் நிகழ்ந்தன. இந்த

இரகசிய கலந்துரையாடல்களில் வெளிவிவகார மந்திரியும் சந்திரிகாவின் ஆலோசகருமான திரு. கதிர்காமரும் கலந்து கொண்டார். ஆக்கபூர்வமான முறையில் பேச்சுகள் நடைபெறுவதாகவும், பாலாவை வெளிநாட்டிற்கு அனுப்பும் நடைமுறைகள் பற்றியும் கலந்தாலோசிக்கப் படுவதாகவும் நோர்வே அரசு ஒஸ்லோ நகரிலுள்ள எமது இயக்கப் பிரதிநிதிகள் வாயிலாக எமக்குத் தெரியப்படுத்தியது. இந்தச் செய்திகள் எமக்கும், திரு. பிரபாகரனுக்கும் நிம்மதியைக் கொடுத்தன. இந்தச் செய்திகளால் ஊக்கமடைந்த திரு. பிரபாகரன், மனிதாபிமான நல்லெண்ண நடவடிக்கையாக விடுதலைப் புலிகளால் தடுத்து வைக்கப்பட்டிருந்த ஒன்பது போர்க் கைதிகளை விடுதலை செய்தார். இதனைத் தொடர்ந்து சந்திரிகா குமாரதுங்கா அரசிடமிருந்து ஒரு நல்ல செய்தியை நாம் எதிர்பார்த்துக் காத்திருந்தோம். நாட்கள் பல கழிந்தன. அரசாங்கத்திடமிருந்து பதில் எதுவும் கிடைக்கவில்லை. பாலாவின் உடல்நிலையும் மோசமாகி வந்தது. விரக்தியடைந்த நாம், சர்வதேச செஞ்சிலுவைச் சங்கத்தைத் தொடர்பு கொண்டோம். தமது அமைப்பு மீது கதிர்காமர் சந்தேகமும் நம்பிக்கையீனமும் கொண்டுள்ளதால், பாலாவின் பிரச்சனை சம்பந்தப்பட்ட விவகாரத்தில், செஞ்சிலுவைச் சங்கத்தை ஓரங்கட்டி வைத்திருப்பதாக அந்நிறுவனத்தின் பிரதிநிதி எமக்குத் தெரிவித்தார். இது எமக்கு ஆழ்ந்த ஏமாற்றத்தைக் கொடுத்தது. ஏக்கத்துடன் எதிர்பார்த்திருந்து இரண்டு மாதங்கள் கழிந்த பின்னர் இறுதியில் நோர்வே அரசிடமிருந்து பதில் வந்தது. பாலாவை வெளிநாட்டுக்கு அனுப்ப உதவி செய்வதானால், "மனிதாபிமான" முயற்சிகளாக சில நிபந்தனைகளை (உறுதிப்பாடுகளை) விடுதலைப் புலிகள் இயக்கம் நிறைவு செய்ய வேண்டுமென சந்திரிகாவும், கதிர்காமரும் இணைந்து ஒரு பட்டியல் தயாரித்திருப்பதாக நோர்வே அரசு எமக்குத் தெரிவித்தது.

முதலாவதாக, வடகிழக்கில் அரசாங்க நிர்வாகத்தை சீர்குலைக்கும் நடவடிக்கைகளில் ஈடுபடக்கூடாது என்றும், அரச சொத்துடமைகளை தாக்கி அழிக்கக் கூடாதென்றும், விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடம் உறுதியளிக்க வேண்டும். இரண்டாவதாக, ஆகாய கடல் மார்க்கமாக வடகிழக்கு பிரதேசத்திற்கு செய்யப்படும் விநியோகத்திற்கு எவ்வித குந்தகமும் இழைக்கப்படக்கூடாது. மூன்றாவதாக, நாடு அடங்கிலுமுள்ள அரச சொத்துடமைகள் எதனையும் தாக்கியளிக்கக்கூடாது. நான்காவதாக, தடுத்து வைக்கப்படிருக்கும் எல்லாப் போர்க் கைதிகளையும், (செஞ்சிலுவைச் சங்கத்திற்கு தெரிந்தவர்களையும் தெரியாதவர்களையும்) உடனடியாக விடுதலை செய்ய வேண்டும். செஞ்சிலுவைச் சங்கத்திற்குத் தெரியாமல், புலிகள் இயக்கம் 250 போர்க் கைதிகளை சிறை வைத்திருப்பதாக அரசாங்கம் எண்ணியிருந்தது. ஐந்தாவதாக, புலிப் படையில் இணைக்கப்பட்ட 18 வயதுக்கு உட்பட்ட போராளிகள் அனைவரையும் இயக்கத்திலிருந்து நீக்கி, உற்றார் உறவினரிடம் கையளிக்க வேண்டும்.





விடுதலைப் புலிகளின் சங்கடமான நிலையை சந்திரிகா தனக்கு சாதகமாகப் பயன்படுத்த முனைகிறார் என்பதை அவர் முன்வைத்த நிபந்தனைகளிலிருந்து நாம் ஊகிக்க முடிந்தது. இந்த நிபந்தனைகள் எல்லாம் இராணுவ ரீதியானவை. கடுமையான சிறுநீரக நோயினால் உயிருடன் போராடிக் கொண்டிருக்கும் ஒரு மனிதரை வெளிநாட்டிற்கு செல்ல அனுமதிக்குமாறு விடுத்த மனிதாபிமானக் கோரிக்கைக்கும் இந்த நிபந்தனைகளுக்கும் எவ்விதமான சம்பந்தமும் இல்லை. இது சந்திரிகாவின் ஈவிரக்கமற்ற, வஞ்சகமான மனநிலையையே எடுத்துக் காட்டியது. நானும் பாலாவும் உடனடியாகவே இந்த நிபந்தனைகளை நிராகரித்து விட்டோம். இயக்கத்தை அவமதிக்கும் இந்த நிபந்தனைகளை ஏற்றுக் கொள்வதைவிட தன்மானத்துடன் சாவதே மேலானது என பாலா தீர்மானித்தார். இப்படியான ஏற்றுக் கொள்ள முடியாத நிபந்தனைகளை திணிக்க முனைந்த சந்திரிகா மீதும் கதிர்காமர் மீதும் பிரபாகரன் கடும் கோபம் கொண்டார். அரசின் மனிதாபிமானமற்ற நிலைப்பாடானது புலிகளின் தலைமைப் பீடத்திற்கு சந்திரிகா மீது ஒரு ஆழமான கசப்புணர்வை ஏற்படுத்தியது. எதிர்காலத்தில் சமாதானத்திற்கான வாய்ப்பை ஏற்படுத்தும் ஒரு மனிதாபிமான கோரிக்கைக்கு சிறிதளவு காருணியம் காட்ட மறுக்கு இவர், மிகவும் கடினமான, சிக்கல் நிறைந்த இனப் பிரச்சினையை எப்படித் தீர்த்து வைப்பார்? அந்த நேரத்தில், விடுதலைப் புலிகளின் தலைமைப் பீடத்தில் இப்படியானதொரு கேள்விதான் மேலோங்கி நின்றது.

இந்த சூழ்நிலையில், ஒரு அதிசயம் நிகழ்ந்தது போன்று, மோசமடைந்து வந்த பாலாவின் நோயில் சிறிது தணிவு ஏற்பட்டது. இரத்த மாதிரிக் கூறுகளின் பரிசோதனையிலிருந்து இது புலனாகியது. எனினும் மருத்துவ சிகிச்சைக்காக பாலாவை வெளிநாட்டுக்கு அனுப்பவேண்டிய அவசியம் இருக்கத்தான் செய்தது. மருத்துவ வசதியற்ற வன்னி சூழ்நிலையில், சிகிச்சை எதுவுமின்றி பாலாவை வைத்திருப்பது ஆபத்தானதென மருத்துவர்கள் கருதினார்கள். ஒவ்வொரு நாளும் பாலாவைப் பராமரிப்பது எனக்குப் பெரிய பாடாகப் பட்டது. உணவுக் கட்டுப்பாடு மிகவும் இறுக்கமாக இருந்ததால் பாலா மிகவும் மெலிந்து வாடிப் போயிருந்தார். அப்பொழுது மாரி காலம் அணமித்துக் கொண்டிருந்தது. மாரி காலம் தொடங்கினால், பேய் மழையும் பெரும் காற்றுமாக சில மாதங்களுக்கு கடல் கொந்தளிப்பாக இருக்கும். அக் காலத்தில், கடற் பயணம் சாத்தியமாக இருக்காது. எனவே, மாரி காலத்திற்கு முன்பாக, கடற் பயணம் செய்யும் உடல் நிலையில் இருக்கும் வேளையில் பாலாவை வன்னியிலிருந்து அப்புறப்படுத்த வேண்டுமென்பது எனது அவா. திரு. பிரபாகரனும் மதிவதனியும் எமது வீட்டுக்கு வந்தபொழுது எனது மனதிலிருந்த ஏக்கம் உணர்வு பூர்வமாக வெளிப்பாடு கண்டது. பாலாவின் கொடிய நோய் பற்றியும், அதற்கு உடன் சிகிச்சை அளிக்க வேண்டிய அவசியம் பற்றியும், இதில் தாமதம் ஏற்பட்டால் பாலாவின் உயிருக்கு

ஆபத்து ஏற்படலாம் என்பது பற்றியும் உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியாது திணறியபடி நான் அவர்களுக்கு எடுத்துச் சொன்னேன். எனது மனக் கலக்கத்தைக் கண்டதும் திரு. பிரபாகரனுக்கு நிலைமை புரிந்து விட்டது. பாலா மீது அவருக்கு அன்பும் மதிப்பும் உண்டு. அத்தோடு எனது கணவரின் உடல் நலத்திலும் ஆழமான அக்கறையும் உண்டு. தனக்குள்ள சக்தியையும் வளங்களையும் பிரயோகித்து 'பாலா அண்ணாவை' வெளிநாட்டுக்கு அனுப்பி சிகிச்சை பெற வழிசெய்வதாக எனக்கு வாக்களித்து ஆறுதல் கூறினார் பிரபாகரன். சொல்லியபடியே உடன் செயற்பட்டார். பாலாவை வெளியேற்றுவதற்காக ஒரு கப்பலை ஒழுங்கு செய்யுமாறு இயக்கத்தின் சர்வதேச செயலகத்திற்கு பணித்தார். ஒரு சில வாரங்களில், முல்லைத்தீவுக்கு சமீபமாக ஆழ் கடலில் ஒரு கப்பல் எமக்காக நங்கூரமிட்டு காத்திருப்பதாக அறிந்தோம்.

நாம் தமிழீழத்தை விட்டு பயணிக்கப் போகிறோம் என்ற தகவல் பரவியதும் இயக்கத்தின் தலைவர்களும் போராளிகளும் நண்பர்களுமாக எமது வசிப்பிடத்திற்கு படையெடுத்தனர். நாம் புறப்படும் தினமான 1999ம் ஆண்டு ஜனவரி மாதம் 23ம் திகதி நெருங்கி வந்த நாட்களில் கவலை காரணமாக எனக்குப் பசியே தோன்றவில்லை. பாலா புறப்பட்டுச் செல்வது அவசியம்தான். ஆனால் போராட்டத்தையும் மக்களையும் விட்டுச் செல்வதை என்னால் ஜீரணிக்க முடியவில்லை. நாம் புறப்படும் நாளன்று பிற்பகல் தமிழேந்தி எமது வீட்டுக்கு வந்தபொழுது நேரம் நெருங்கி விட்டது என்பதை உணர்ந்தேன். எம்மை ஏற்றிச் செல்லும் 'பஜரோ' வாகனத்துடன் தமிழ்ச்செல்வன் வந்தபோது புறப்படும் வேளை மிகவும் அண்மித்துவிட்டது என்பதை உணர்ந்தேன். முல்லைத்தீவு கரையோரமுள்ள கடற்புலிகளின் தளத்திற்கு எம்மைக் கூட்டிச் செல்வதற்காக சூசையின் வாகனம் எமது வீட்டுக் காணிக்குள் நுழைந்தபோது நாம் சீக்கிரமே புறப்பட்டுச் செல்லப் போகிறோம் என்பதை உணர்ந்தேன். இறுதியாக திரு. பிரபாகரனுக்காக காத்திருந்தோம். அவர் வந்ததும் பாலாவுடனும் என்னுடனும் சிறிது நேரம் உரையாடிவிட்டு எமக்கு பிரியாவிடை தந்தார். எல்லோரும் தமது சோகத்தை மறைப்பதற்காக கிண்டலும் கேலியுமாக பேசிக் கொண்டிருந்தனர். பதினைந்து வருடங்களுக்கு மேலாக, மிகவும் பாசத்துடன் வளர்த்த தனது விசுவாசமான நாய் ஜிம்மியின் சோகமான முகத்தை உற்றுநோக்க முடியாது திணறிய எனது கணவர், தனது உணர்ச்சியை அடக்கியவாறு தமிழ்ச்செல்வனின் வாகனத்தில் ஏறி அமர்ந்து கொண்டார். நான் ஜிம்மியின் தலையைத் தடவி விட்டேன். பின்பு அங்கு குழுமி நின்ற எல்லோரையும் ஒரு தடவை நோட்டம் விட்டு இறுதியாக பிரபாகரனைப் பார்த்தேன். அதுதான் இறுதிக் கட்டம். எமது வாகனம் வீட்டிலிருந்து விரைவாகப் புறப்பட்டுச் சென்றது.





# பின்னுரை

காலம்: 1999 ம் ஆண்டு, பெப்ரவரி மாதம், முதலாவது வாரம். இடம் தென்கிழக்கு ஆசிய நாடு ஒன்றின், சுறுசுறுப்பும் வளர்ச்சியும் கண்ட தலைநகரம். மிகவும் நவீனமான, சுத்தமான மருத்துவ மனை ஒன்றின் வரவேற்பு மண்டபத்திற்குள் சுகவீனமுற்றிருந்த எனது கணவரை அழைத்துச் செல்கிறேன். அவரை உயிருடன் வைத்திருக்க வேண்டும் என்ற உழைச்சலில் இனி நான் தனித்து நிற்கப்போவதில்லை என்ற உணர்வு எனக்குப் பெரும் நிம்மதியைக் கொடுத்தது. அவசர மருத்துவ பரிசோதனைக்காக பாலா அங்கு அனுமதிக்கப்பட்டார். பாலாவின் சிறுநீரக நோய்க்கு வைத்தியம் அளிக்கவல்ல நிபுணத்துவமும் அனுபவமும் வாய்ந்த மருத்துவர்கள் அங்கு பணிபுரிந்து வந்தனர்.

மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டு 36 மணி நேரத்திற்குள் பாலாவின் நோய் நிலைமை அறிவதற்கான சகல பரிசோதனைகளும் முடிவடைந்து தீர்வுகளும் தீர்மானிக்கப்பட்டன. பாலாவின் நோய் பற்றியும், அதற்கான சிகிச்சை முறைகள்பற்றியும், எமக்கு விளக்கம் அளிக்கப்பட்டது. நீண்டகால நீரழிவு நோயினால், பாலாவின் சிறுநீரகங்கள் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருப்பதாகவும், குருதியடைப்புக் காரணமாக இடதுபுற சிறுநீரகம் பெரிதாக வீங்கி வெடிக்கும் நிலையில் இருப்பதாகவும், அறுவைச் சிகிச்சை மூலம் அதனை அகற்றிவிட வேண்டும் என்றும் மருத்துவ நிபுணர்கள் எமக்கு விளக்கம் அளித்தார்கள்.

பாலாவுக்கு அறுவைச் சிகிச்சை நடந்தது. இடதுபுற சிறுநீரகம் வெட்டி அகற்றப்பட்டது. நோய்ப்பட்டு, பெரிதாக வீங்கியிருந்த அந்த சிறுநீரகத்தை மருத்துவ நிபுணர்கள் என்னிடம் காண்பித்தார்கள். வீங்கிப் புடைத்த இச்சிறுநீரகத்தை அகற்றுவதில் தாமதம் ஏற்பட்டிருந்தால் பாலாவுக்கு உயிராபத்து ஏற்பட்டிருக்கும் என்றும் சொன்னார்கள். அந்த மருத்துவ மனையில் வழங்கப்பட்ட கருசனையும், கண்காணிப்பும் காரணமாக, பாலா சீக்கிரமே குணமடைந்து உடல் தேறினார். ஒரு ஆபத்தான கட்டத்தைக் கடந்துவிட்டோம். எனினும் வேறு சிக்கல்கள் இருக்கவே செய்தன. சட்டவிரோதமாக அந்த நாட்டில் நாம் குடிபுகுந்து இருப்பதால் நாம் எப்பொழுதும் கைது செய்யப்படும் ஆபத்தும் இருந்தது. பாலா மேலும் நோயுறுவதற்கு முன்னராக அந்நாட்டிலிருந்து நாம் வெளியேறிவிடுவது அவசியமாக இருந்தது. சிறிதுகாலம், அந்நாட்டின் தலைநகரில் நாம் தலைமறைவாகவே வாழ்ந்தோம். எமது நடமாட்டங்களைக் கட்டுப்படுத்தி, அதிகாரிகளின் கண்களில் சிக்குப்படாமல் ஒதுங்கிவாழ நிர்ப்பந்திக்கப்பட்டோம். எமது கடவுச்சீட்டுகள் காலாவதியாகிவிட்டதால் நாம் லண்டனுக்குச் செல்லமுடியவில்லை சட்டரீதியான பத்திரங்கள் எதுவுமில்லாமல் விமான நிலையங்கள் வழியாக பயணங்களை நாம் மேற்கொள்ள முடியாத நிலை. எனவே சட்டரீதியான கடவைச்சீட்டை பெற்றுக் கொள்வதே முக்கியபணியாகக் கருதினோம். லண்டனில் எமது

பழைய நண்பர்களைத் தொடர்பு கொண்டோம். அவர்கள் எமது இக்கட்டான நிலையை, பிரித்தானிய வெளிவிவகார அமைச்சுக்குத் தெரிவித்து உதவி கேட்டார்கள். இறுதியில், பிரித்தானியாவுக்கு வெளியே, தென்கிழக்கு ஆசியாவிலுள்ள ஒரு நாட்டின் தூதரகத்தில், பாலாவுக்கு புதிய கடவுச்சீட்டை வழங்க பிரித்தானிய அரசு இணங்கியது. எனக்கும் புதிய கடவுச்சீட்டை வழங்க லண்டனிலுள்ள அவுஸ்திரேலியத் தூதரகம் இணங்கியது. நாம் தலைமறைவாக வாழ்ந்துவந்த நாட்டிலும் உயர்பீடத்தில் சில நண்பர்கள் எமக்கு இருந்தார்கள். இவர்களின் உதவியோடு, அந்நாட்டின் பிரதான விமான நிலையம் ஊடாக, நாம் பாதுகாப்பாக லண்டன் புறப்பட்டோம்.

நாம் லண்டன் திரும்பியதையடுத்து, எனது வாழ்வில், சவால்கள் நிறைந்த புதிய அத்தியாயம் ஒன்று, திறந்துகொண்டது. பாலாவின் நோய் நிலவரமும் மருத்துவ தேவைகளும் காரணமாக, எமது வாழ்க்கை முறையிலும் அடிப்படையான மாற்றங்களைச் செய்யவேண்டியிருந்தது. பாலாவுக்கு மறுவாழ்வு கொடுக்கும் வகையில், அவருக்கு சிறு நீரக மாற்றுச் சிகிச்சை அளிப்பதற்கு லண்டன் மருத்துவ நிபுணர்கள் இணக்கம் தெரிவிக்கவில்லை. அதேவேளை, சிறுநீரக நோயினால் பாலாவின் உடல் நிலையும் மோசமாகி வந்தது. இப்படியான சோதனை மிகுந்த காலத்தில் தான், எமது வாழ்க்கையில் நோர்வே இராஜதந்திரிகளின் தொடர்பும் நட்புறவும் ஏற்பட்டது. சமாதானத் தூதுவர்களாக அவர்கள் எம்மை லண்டனில் சந்தித்தார்கள். திரு. எரிக் சுல்ஹைம், முன்னாள் நோர்வேயின் உதவி வெளிவிவகார மந்திரி திரு. வேகர் ஸ்ரோமன், கொழும்பிலுள்ள நோர்வே தூதுவர் திரு. ஜோன் வெஸ்ட்போர்க், நோர்வே வெளிவிவகார அமைச்சின் நிர்வாக அதிகாரி செல்வி. ஜேஸ்டி ரொம்ஸ்டால் ஆகியோர், தென்மேற்கு லண்டனிலுள்ள எமது வீட்டுக்கு அடிக்கடி வருகைதந்து, விடுதலைப் புலிகளுக்கும் சிறீ லங்கா அரசுக்கும் மத்தியில் சமாதான முயற்சிகளை மேற்கொள்வது சம்பந்தமாக எம்முடன் கலந்துரையாடினர். வன்னியிலுள்ள புலிகளின் தலைமைப் பீடத்துடன் கலந்தாலோசித்த பின்னர், சமாதான முயற்சியில் நோர்வேயின் அனுசரணையை நாம் ஏற்றுக்கொண்டோம்.

பாலாவின் உடல்நிலை மோசமாகி வந்ததால், மனிதாபி மான அடிப்படையில் அவருக்கு வசதிகளை அளிப்பதற்கு நோர்வே அரசாங்கம் முன்வந்தது. நோர்வேயின் மருத்துவக் கண்ணோட்டத்தின் படி, பாலாவுக்கு சிறுநீரக மாற்றுச் சிகிச்கை அளிப்பதே சிறந்த வழியெனக் கருதப்பட்டது. இறுதியாக, நோர்வேயின் தலைநகரான ஒஸ்லோவுக்கு அழைத்துச் செல்லப்பட்ட பாலா, அங்குள்ள பிரதான அரச மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார். சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சையை மேற்கொள்ள, பாலாவின் உடல்நிலை தாக்குப்பிடிக்குமா என்பதைக் கண்டறியும் நோக்கத்துடன் பல்வேறு வகையான உடற்பரிசோதனைகள் அவருக்கு நடத்தப் பட்டது. பரிசோதனைகள் சாதகமாக அமைந்ததால், நாம் அறுவைச் சிகிச்சைக்கு இணங்கினோம். இரண்டாயிரம் ஆண்டு ஆரம்ப





காலத்தில் பாலாவுக்கு சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சை நிகழ்ந்தது. சீக்கரமே அவர் குணமடைந்து தேறினார். உடல் ஆரோக்கியத்துடன், புதிய மனிதராக ஒஸ்லோ மருத்துவ மனையிலிருந்து அவர் வெளியேறினார்.

மருத்துவமனையிலிருந்து வெளியேறிய பாலா, ஒஸ்லோவிலுள்ள விடுதியொன்றில் ஓய்வெடுத்து குணமடைந்து வந்தார். அவ்வேளையில் சிறீ லங்காவின் அரச அதிபரான சந்திரிகா குமாரதுங்கா, FAR EASTERN ECONOMIC REVIEW என்ற ஆங்கில ஏட்டிற்கு ஒரு கேலிக்கூத்தான செவ்வியை வழங்கியிருந்தார். அதாவது பாலாவுக்கு சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சை செய்யுமாறு நோர்வே அரசாங்கத்தை தாமே பணித்ததாக சந்திரிகா உரிமை கோரியிருந்தார். இது முற்றிலும் பொய்யானது மட்டுமன்றி , பொறுப்பற்றதுமான கூற்றாகும். நாம் உடனடி யாக, நோர்வே வெளிவிவகார அமைச்சை தொடர்புகொண்டு எமது ஆட்சேபத்தை தெரிவித்தோம். சந்திரிகாவின் கூற்று நோர்வே அரசாங் கத்திற்கும் எரிச்சலூட்டியது. ஏனென்றால் பாலாவுக்கு மருத்துவ உதவி வழங்க சந்திரிகாவின் அனுமதியை அவர்கள் கோரவில்லை. மனிதாபிமான அடிப்படையில் அவர்கள் தாமாக எடுத்த முடிவு அது. ஒஸ்லோ மருத்துவமனையில், சிறுநீரக மாற்று சிகிச்சை வெற்றிகரமாக முடிந்த பின்னரே, கொழும்பிலிருந்த நோர்வே தூதுவர் சந்திரிகாவுக்கு தகவல் தெரிவித்திருந்தார். எனவே சந்திரிகாவின் கூற்றை மறுத்து உண்மை நிலையைத் தெளிவுபடுத்துமாறு நாம் நோர்வே அரசை வேண்டிக் கொண்டோம். நாம் வேண்டிக் கொண்டதற்கு இணங்க, நோர்வே வெளிவிவகார அமைச்சைச் சேர்ந்த உயர் அதிகாரி ஒருவர் சந்திரிகாவின் கூற்றை மறுதலித்ததுடன், நோர்வே அரசு தன்னிச்சையாக முடிவெடுத்து, மனிதாபிமான அடிப்படையில் பாலாவுக்கு மருத்துவ உதவி வழங்கியதாக ஊடக உலகிற்கு அதிகாரபூர்வமாக அறிவித்தார். அதேவேளை தமிழ் கார்டியன் (25 மார்ச் 2000) பத்திரிகைக்கு வழங்கிய ஒரு விபரமான செவ்வியில், பாலாவும் நிலைமையைத் தெளிவுபடுத்தினார். கடும் சுகவீனமுற்றிருந்த பாலாவை வன்னிக் காட்டிலிருந்து வெளி உலகத்திற்கு அழைத்துச் செல்ல நோர்வே அரசும் சர்வதேச செஞ்சிலுவைச் சங்கமும் அனுமதி கேட்டபோது, சந்திரிகா அம்மையாரும் திரு. கதிர்காமருமாகச் சேர்ந்து, விடுதலைப்புலிகளால் ஏற்றுக்கொள்ள முடியாத கடும் நிபந்தனை களை விதித்து, பாலாவின் பயணத்திற்கு முட்டுக்கட்டை போட்டார்கள் என்பதையும் இந்த செவ்வியில் பாலா விளக்கினார்.

சிறுநீரக மாற்று சிகிச்சை வெற்றிகரமாக முடிந்து, பாலா குணமடைந்து உடல் தேறியதும், நாம் தொடர்ந்து தமிழீழ மக்களின் விடுதலைப் போராட்டத்தை முன்னெடுக்கும் அரசியல் இராஜதந்திரப் பணிக ளில் ஈடுபட்டு வருகிறோம்.



திருமதி. அடேல் பாலசிங்கம் ஒரு எழுத்தாளர்; சமூகவியலாளர்; அரசியற் செயற்பாட்டாளர். தமிழீழ மக்களின் தேச சுதந்திர இயக்கமான தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்பில் இணைந்து இருபது ஆண்டுகளுக்கு மேலாக பணியாற்றி வருகின்றார். தமிழ்நாட்டிலும், தமிழீழத்திலும் வாழ்ந்து, தமிழ் சமூகக் கட்டமைப்புப் பற்றி நன்கறிந்தவர். விடுதலைப் புலிகளின் பெண் போராளிகள் பற்றியும், யாழ்ப்பாண சமூகத்தில் நிலவும் சீதன முறைமை பற்றியும் நூல்கள் எழுதி வெளியிடட்டவர்.

திருமதி. அடேல் பாலசிங்கம் எழுதிய **"சுதந்திர வேட்கை"** என்ற இந்தப் புதுமையான நூல், விடுதலைப் புலிகளின் போராட்ட வாழ்வை, உள்ளிருந்த பார்வையாக, ஆழமாகத் தரிசிக்கிறது. சுயசரித விவரண மாகவும், வரலாற்று நோக்குடனும் எழுதப்பட்ட இந் நூலில், விடுதலைப் புலிகள் பற்றி இதுவரை வெளிவராத பல்வேறு சுவையான தகவல்கள் தரப்பட்டிருக்கின்றன. கடந்த இருபது ஆண்டுகாலமான தமிழீழ சுதந்திரப் போராட்டத்தின் படிநிலை வளர்ச்சியில் நிகழ்ந்த முக்கிய வரலாற்று நிகழ்வுகளையும், திருப்பங்களையும் இந்நூல் துல்லியமாக எடுத்துக் கூறுகிறது. விடுதலைப் புலிகளின் தலைமைத்துவம் பற்றியும் முற்றிலும் புதிய சுவாரஸ்யமான தகவல்களும் இதில் உண்டு. மிகவும் கொந்தளிப் பான கால கட்டங்களையும், அக் காலங்களில் கட்டவிழ்ந்த அவலமான நிகழ்வுகளையும், சுதந்திரம் வேண்டிநிற்கும் போராளிகளதும், பொது மக்களதும் ஆழமான உணர்வலைகளையும், உறுதிப்பாட்டையும் இந்நூல் எடுத்தியம்புகிறது. தமிழீழ சுதந்திரப் போராட்டத்தில் ஆர்வமும் அக்கறையும் கொண்ட அனைவரும் படிக்கவேண்டிய அபூர்வமான நூல் இது.


ISBN 1-903679-02-8


£12.00



FAIRMAX PUBLISHING LTD